ஸ்ரீ விஷ்ணுமயம்.

# ஸ்ரீமஹா பாகவத புராணப் படல அட்டவணை.

ஸ்ரீ கிருஷ்ணாயநம்

இப்புராண பரிசோதகராகிய-பூனேமேடு

வெ. முத்துநாயுடு அவர்களாலியற்றிய

# ஸ்ரீமஹா பாகவத புராணப் படலப் பா.

---

திருமாங்கலைமிசாரணியமாகுதிகழ்நாமிசகர்நாச்சியார்க்கேசுக்ரன்
பெரியவராகக்கபிலநாரசிங்கம்பின்னே துருவன்மச்சவடிமமண்டம்
அரியபிருவிடபன்வாமனமசாமினன்னுருக்குமாங்கதமன்னம்பரீடன்
பரசிராமனுமாமிராகவன்சீர்ப்படலமிருபானிரண்டாய்ப்பகுத்ததாமே.

தேவகிசேர்கல்யாணவதாரம்பூதகிறப்பசகடன்காலியன்குக்குடனைமாய்த்த
லாவினவசீதமேதநிபாண்டன்னேடருச்சனமூம்பெயகணகன்வற்சாபகாரங்
கோவிதேனுகன்காளியன்பெலம்பன்கூறைநிகொள்சிக்ஷைதயக்நியுங்கோவர்த்தனத்
தான், மாவருணன்குழலூதப்பிகைகபின்னேமறவரிட்டன்கேசிவியோமனனுமா
மே.

அக்குரூரன்குருகன்சுதாமாவரியதிரிவக்கிரியுஞ்சிலையிறுத்தல்
தக்ககஞ்சன்முயற்சிகுவலையாபீடஞ்சாணூரன்முட்டிகன்கஞ்சனைவதைத்தல்
உக்கிரசேனன்குருதட்சிணைபுரேரிஷத்தவன்பாண்டவஞ்சராசந்தனோடல்
துக்கசிரகாலன்காலயவன்விறல்தூயவிடோ இரணைரப்பானிரண்டே.

படங்காணல்விதர்ப்பராசன்றன்மந்திரம்பகர்ஜுந்தலைவங்கக்சேதிபராசன்னோர்
வடம்பூணுநாச்சியார்தேரினேறல்வருசேனைகுழ்தப்பவுண்டாணும்போரின்
மடங்காதசாலுவனுந்தந்தவக்ரன்மகதன்சிசுபாலனுருக்குமன்றுமேடல்
இடஞ்சேர்துவாரகையின்படலத்தோடுசெப்பினர்மூவேழ்படலஞ்சிறக்கத்தானே

உருக்குமணி சாம்பவதிசத்யபாமைக்குபர்ந்ததிருமணஞ்சதந்தன்னுவாலவக்கே
ல், முருக்கிதழாள்காளிந்தியித்ரவிந்தைநிமாய்குழல்நாக்கினசித்துபத்திரைப்பெ
ன், திருக்கிலிலக்கணையவர்கள்வதுவைபோரிற் பியவகன்வதையும்பாரிசாத
மருக்கொள்குழற்சுபத்திரையின்மன்றலூய வசுதேவர்வேள்விகண்டார் கருணை
மோட்சம்.

கயிலையாத்திரைபவுண்டரன்சுதக்கணன்றுவிந்தன்வதையுமதன்சனனங்காலு
அயில்சம்பரன்வதையுமநிருத்தன்றிருமணமும்சடிபிகன்வதைருக்குமிகல்ய
இயனிருகன்மோட்சமத்திகவைப்பேர்த்தவிகல்வாணன்றோணித்தன்மதத
ன், சயமதிலாச்சிசுபாலன்சாலுவன்றந்தவக்கிரன்வதையுஞ்சாய்ந்துபாம்

பாண்டவர்கள்குருமரபுக்கன்வேள்விமுற்றனுமனாக்கிசிந்துபதிகம்பங்கம்
பாண்டவர்களக்யாமுநிவேயாகம்பாரதமும்பலராமன்யாத்திரைபோரின்
மாண்டசுயோதனன்பரிச்சித்துசெல்வம்மமிதிபிகுருசேலன்மிதுலையும்வைதிகம்
வேண்டுபதேசம்வைகுண்டம்மார்க்கண்டன் விருகசுரன்பிருகுபரிச் சித்துமோட்
சம்.

செனமேசெயன்கற்கிப்படல்மூவேழ்சேரிரண்டுசகபதியின்படலமொன்று
மனமாகுபாகவதப்பிரிவாறுக்கும்வருபடலநூற்றுமுப்பத்திரண்டாகக்
கனமாகுதமிழின்பானுயிரத்தின்கவியுரைத்தான்செல்வியருணாகரக்
முனமீரொன்பானுயிரங்கிரந்தம்மொழிந்தசுகமுனியடியைமுடிமேற்கொள்வாம்.

---






ஸ்ரீ விஷ்ணுமயம்.

# ஸ்ரீமஹா பாகவத புராணம்.




## கடவுள் வாழ்த்து.

### பரம். வடபத்திர சயனம்.

பொன்னிறமா மெனப் புவனம் படைத்துக் காத்துப்
புயனிறமாத் தழனிறமாத் துடைத்துப் போந்து
முன்னிறமாத் திளைத்துயர்ந்து முழங்கு நார
முடுகிடவே நீண்ட வடவிலைமேன் முந்தித்
தொன்னிறமா மண்டரண்ட மெண்ணில் கோடி
துலங்கிடவே வயிற்றமைத்துத் தூயதாய
தன்னிறமாங் குழவியெனப் பொலிந்து தோன்றுந்
தலைவனிரு தாண்மலர் நந்தலைமேல் வைப்பாம். (க)

### அந்திரியாமி.

வானாசுகன் பாவகனீர்நில மற்றுமாகி
யூனாருட லாயுயி ராயுயிர் தோறுமேவுங்
கோனாகி மூவர் செயலாயக் குணங்கள் யாவுந்
தானாகிய வோர்தலைவன் றிருத்தா டுதிப்பாம். (உ)

### வியூகம்.

கரமதனாற் கடற் கடைந்து மமுதளித்துங் கனகனுர
முரவுகிரால் வகிர்ந்தளைந்து முலகிடந்துண் டுமிழ்ந்தளந்துஞ்
சரமதற்ற சமுகனொருபதுக மறத்தடிந்தும்
பரமபதத் தொளிகொளரி பதுமமல ரடி. பணிவாம். (ங)

### விபவம்.

சுசரத சரபங்கற் கின்னருள் செய்து சுரர்கோனீந்த
வசரத மிசையினேறி யிராவணன் மாளவேவிக்
கசரத வாளியேவிக் கமலனோ டிமையோர் போற்றத்
தசரத னடியில் வீழ்ந்த செம்மருள் சென்னிவைப்பாம். (ச)

## திருவரங்கம் பெரியகோவில்.

தரங்கவேலை யடைத்துத் தனுவினாற்
றரங்கந் தேர்கரி துன்னிலங் காதிபன்
சிரங்கள் வீழ வடுந் தெய்வ வாளியான்
அரங்கராச னடியிணை வாழியே. (ரு)

## ஸ்ரீரங்க நாயகியார்.

வெந்திற லவுணன் சேயை வெகுண்டெழுந் தடர்த்த தூணில்
வந்தறை கனகன் மார்பைப் பிளந்தவன் மடங்கன் மூர்த்தி
சிந்தையிற் கதங்களோவித் திருவருள் புரியச் சேர்ந்த
நந்தொளிர் கரச்சீரங்க நாயகி மலர்த்தாள் வாழி. (சு)

## திருமலை.

தீங்கடர் பிறப்புத்தீரத் திரள்பசி மூப்பு நோய்க
ணீங்கிட ஞானமெல்லா நிறைந்துமா முத்திநேரப்
பூங்கொடி திகழுமார்பிற் கவுத்துவம் பொலங்கொண் டோங்க
வேங்கட விலங்கனின்ற வித்தகன் கழல்கள் வாழி. (எ)

## அலர்மேன்மங்கைத்தாயார்.

சலமே லெங்குந் தாவிய வாலி
னிலமே லெய்தி யெளி லஞ்சணிமா
மலைமே னின்றான் மார்பின் வயங்கும்
அலர்மேன் மங்கை யடியிணை வாழி. (அ)

## திருக்கச்சி.

திங்கடங்கு சடையன்மேவு கச்சிவீதி திகழநற்
பங்கயத்தி னயன்வலாரி முனிவர் தேவர் பணியவே
கங்கைகொண்ட மண்டபத்தினிற் சிறந்த கலுழன்மேன்
மங்குலா மெனக் குலாவு வரதராசர் வாழியே. (கூ

## பெருந்தேவித்தாயார்.

வருந்தார கைப்பதி கைத்தலவோடு மாற்றிக்
குருந்தேறி நின்றாச்சியர் கூறைகள் கொள்ளை கொண்டே
விருந்தாவனத் தெய்திய கிரிவாய் மாயன் மேவு
பெருந்தேவி யெனுந் திருப்பீதகத் தாள்கள் வாழி. (க0

## நம்மாழ்வார்.

ஆறங்கமு நால்வேதமு மறையும் பொரு ளெல்லா
நூறும்மிரு நூறும்மெழு நூறும்பெற நுவல்வோன்
வீறுந்திரு நதிசூழ்ந்திடு குருகூர்நகர் மேவு
மாறன்சட கோபன்திரு வடித்தாமரை வாழி. (க

## உடையவர்.

அராமீ தமர்வாய் கரியுய்ந்தி வாழியினைக்
கராமீ துறவே விடுவாய் கருணாகரரா
மராமா வென நான்மறை மல்கிடவே துதிசெய்
இராமாநுச மாமுனிதாளிணை யென்றும் வாழி. (௧௨)

## வேதாந்ததேசிகர்.

வாசிகரி தேரணிக மண்புக ராவணனுடல் வீழ்ந்
தேசிகரி யெனவுருளச் சரமேற்றித் திருவரங்க
மாசிகரி தனின்மேவு மாலிருக்குவேதாந்த
தேசிகரின் குளிர் நறும்பூஞ் சேவடிகள் வாழியவே. (௧௩)

காதார்ந்த விழிச்சவுரி கடித்தகனி வாயுகந்து
போதாந்தன் பதமளித்துப் புரந்தவனே யத்துவித
மீதாந்தற்பர விசிட்டனெனத் தெளிந்த மெஞ்ஞான
வேதாந்த தேசிகரின் விரைமலர்த்தா ளிணைவாழி. (௧௪)

**ஸ்ரீமந் நாராயணமூர்த்தி ஆதிலக்ஷ்மித்தாயார் ஆழ்வார் ஆசாரியர்கள்**

திருவடிகளே சரணம்.







    

ஸ்ரீ விஷ்ணுமயம்.

## ௭௯-வது உருக்குமணி நாச்சியார்

# திருக்கலியாணப்படலம்.



செருவடர்த் துயர் மீனற விடையிறவே மணிகவர்ந் தளித்து முன்சேர்ந்தெண்
ணரியநற்றவங்கண் *டசுரனைவதைத்துப் †பொறி ‡விந்தையிலக்கணை §சித்தாந்
தெரிவை சாம்புவதி சத்தியபாமை பத்திரை காளிந்தி சேர் நூற்
றரிவையர் பதினாறு யிரத்தவரோ டணைந்த மாலடி யெமக் கரணே. (௧)

வேறு.

மலையினை யேந்திய வாசுதேவ னார்
சிலையெனு நுதலியைச் சேர்வ தின்றென
வலையுறு கடலெனப் பேரி யார்த்திட
நல்லுற வெழுந்தனர் நக ருளாரரோ. (௨)

கருமுகி லனையநற் கண்ணன் றோளினின்
மருவமர் குழலினாண் மாலை சூட்டிடுந்
திருமண மின்றெனத் தேவ ரார்த்தனர்
தருமலர் சொரிந்தனர் தரணி யெங்குமே. (௩)

எதுகுல விறைவனுக் கெழிலி னாலுயர்
மதிமுக மடமயில் வதுவை யாகவே
கதுமென வலரிநீள் கங்குல் பாறவே
யுததியின் விளங்கினன் மறைக ளோதவே. (௪)

அருக்கனார் குணதிசை யிலக வாடக
முருக்கிய தாமெனக் கிரண மோங்கவே
மருக்கொள்பூங் குழலினாள் வதுவை யின்றெனத்
தருக்கினர் நெருக்கினர் தரணி மாந்தரே. (௫)

அறந்தரு முனிவர்க ளந்தணாளர்கள்
சிறந்தெழு மரசர்க டேர்கண் மாகரி
நிறைந் தெழுங் கடலென நீளுமாநக
ருறைந்தன ருலப்பில ருவகை யோங்கவே. (௬)

---

* நரகாசுரன். † இலக்குமி. ‡ மித்திரவிந்தை. § நாக்கினசித்து.

மாரனே போன்றொளிர் வடிவு மிக்குயர்
வீரமே பொலிந்துளார் விரியு நன்மணித்
தேரின்மே லெழுந்துளார் குமரர் சீரியர்
சூரர்வா ளிலங்கிட நிறைந்து சூழ்ந்தனர். (எ)

கரியின்மேல் வருமவர் கால வேல்கொடு
பரியினில் வருமவர் படைஞர் சூழ்ந்திட
வரியநல் விரதமே லமர்ந்து தோன்றுவார்
விரிகட லொலியென முழக்கம் விஞ்சவே. (அ)

குந்திய நடையினர் குடையர் குண்டிகை
முந்திய கையர் முப்புரியி னூலுளா
ரந்தணர் பொதுளின ரமுத மீதமர்
செந்திரு வுறுமணங் காணுஞ் சிந்தையார். (கூ)

மயிலென வுழையென வருமி னுமெனக்
குயிலென விரணியக் கொம்பு மாமென
வயில்விழி வயங்கிட வன்னம் போலவே
செயலுறு நடையினர் கூலஞ் சேர்ந்தனர். (க0)

காலணி ஞெகிழிகள் புலம்பக் கைவளை
யோலமின் னிசையுற வொளிகொள் மாமணி
நீலமுந் தரளமு நிறைந்த கொங்கையார்
வேலெனும் விழியினார் வீதி துன்னினார். (கக)

காரண வுற்றநற் கமுகு நாட்டினர்
தோரண நிறைத்தனர் கதலி சூழ்ந்திடத்
தேரணி யுற்றிடத் திகழும் வீதிகள்
பூரண பொற்குடம் பொலிய வைத்தனர். (கஉ)

வால்வளை தழங்கிட வயங்கு மாளிகை
நீலமுந் தரளமு நிறைந்த ஞெள்ளல் வாய்
நாலிரு திசையினு நகைகொ ணன்மணி
மாலைக ணிறைத்தனர் பரிதி மானவே. (கங)

சாபமே புருவமாய்த் தழைத்த விந்திர
கோபமே யதரமாங் குமுத வாயினார்
தூபம்வான் முகிலொடுந் தொடர்ந்த தூயதாந்
தீபமாளிகை தொறுந் திகழ வைத்தனர். (கச)

நீலவா ரிதியெழுந் தவள நித்திலங்
கோலமா மணிகளுங் கோவை யானநீண்
மாலையே யலைந்திட வயங்கு மாவண
மேலெலாந் தமனிய விதான மோங்கிய. (கரு)

அடிபடு பேரிகை முரசம் யாவையு
மிடிபட முழங்கின திசைக ளெங்கணும்
வடிவுடை மலர்மக ளுறையுமா நகர்
கொடிகுடை துதைந்தன குழாங்க ளாகியே. (கசு)

மின்னிய குருமணி விளங்கு கோபுரம்
பொன்னுறு தரள வேதிகை பொருந்தியே
துன்னிய துவரை யம்பதி துலங்கிடக்
கின்னர ரின்னிசை கிளர்ந்த தெங்குமே. (கஎ)

குங்குமங் கருப்புரங் குளிர்ந்த சந்தனம்
பங்கய விதழ்பனி நீர் பரந்திட
வெங்கணு நிறைத்தன ரிடைக டள்ளுற
மங்குலை நிகர்த்தெழு மளக மங்கைமார். (கஅ)

பூணணி முலையினார் பொழிந்த வாசநீர்
சேணிரை மழையெனச் சென்று தேவர்கள்
காணவாண் டெழுந்துழி கலை நனைக்கவே
நாணின ருருப்பசியுடனே ணங்கைமார். (ககூ)

கோபம் விஞ்சிடங் கர்மா மடியவே கொடும்
பாபமிலிப முயப் பண்ணும் பங்கய
நாபிய னளினநற் றிருவை நண்ணிடச்
சோபன மொழிந்தனர் வீதிதோறுமே. (உ0)

களித்தனர் புரவலர் கனக மாரியா
யளித்தனர் வறியவ ரரச ராகவே
துளித்தெழு மழையெனத் தூய மாதரார்
தெளித்தனர் கமழ்பனி நீர் சிறக்கவே (உக)

இந்திரை முகுந்தனுக் கெய்து மாமணம்
வந்தது வென வுளமகிழு மாதரார்
நந்தணி முன்கையார் நத்தினோர்பெறச்
சிந்தினர் தரளமு மணியுஞ் செம்பொனும். (உஉ)

ஆடினர் விசும்புறை யரம்பை நாணவே
பாடின ரமுதுகும் பண்ணின் வீணையாழ்
சூடினர் நறுமலர் துலங்கு பொற்கல
னுடிமெய் யணிந்தனர் நகரின் மங்கைமார். (உங)

மலையெனு முலையணி மணிகண் மின்னநற்
கலையணி மருங்கினார் காரு றுங்குழ
லலைவுற வெழிலுறு மன்ன மாமென
நிலமிசை நடந்தனர் நெருங்கி யெங்கணும். (உச)

கன்னலுங் கதலியுங் கமுகுங் காருறு
மின்னிய நவமணி விளங்கு கோபுரந்
துன்னிய கொடியுடைத் துவரைமாபதி
பொன்னக ரழகினும் பொலிந்து தோன்றிய. (உரு)

புளகமெய் யுறமலர் பொருந்தும் வாசநீர்
மிளிருமொண் விழியினு ரடர்ந்து வீசவே
துளிகொளு மழையெனத் துலங்கு மாபுரி
யளகையம் பதியினு மதிசயித்ததே. (உசு)

சதமக னகரினு மளகை தன்னினும்
விதமுறு நவமணி விளங்குமாநக
ருததியி னுரகமே லொளிரு முத்தமன்
பதமென வயங்கிய பரவை சூழவே. (உஎ)

ஈசனன் றுலகெலா மிரந்த வெண்டலை
காசினி தனின்விழக் கருணைசெய்தருள்
கேசவ னுறுநகர் கிளர்ந்த மண்டபம்
வாசவன் மகிழ்வொடுங் கொணர்ந்து வைத்தனன். (உஅ)

வித்துரு மத்துலா மரக தம் மிளி
ருத்திரம் வயிரவொண் பலகை போதிகை
நித்தில மருங்குக ணீலமா மணிப்
பத்திசெய் தூணிறை பசும்பொன் மண்டபம். (உகூ)

அலையுலா மார்கலி யமரு மச்சுதற்
குலகெலா மகிழ வாசவனுற் றீந்தவோ
ரிலகுமா மணியெலா மிரவி யேலவே
பொலியுமா மண்டபம் புகலவர்வதோ. (௩௰)

தெண்டிரை யுததியிற் சிறந்த மாநக
ரண்டர்க டுதிசெயு மமல னச்சுதன்
முண்டகன் றனையருண் முதல்வன் மேவிடு
மண்டபம் வயங்கிய வாயின் முன்னரோ. (௩௧)

காசறு தமனியக் கால்க ணட்டியே
மாசற வயங்கிய மணிக் குடங்கள்சே
ரூசலி னிலங்கு சங்கிலியி னொடொளி
வீசிய மரகதப் பலகை மின்னவே. (௩௨)

துவரையம் பதிதனிற் சுரர்க ணுயக
னவனியி னிழிந்துவைத் தமர்ந்த மண்டப
நவமணி யினங்கள் சூழ்ச னண்ணிய
புவிமக ளணிந்தபொற் கலனும் போன்றன. (௩௩)

இனையன பொலிதரு மெழில்கொண் மண்டப
மினையவுமரிய பொன்னூச னின்றன
வனையவு மறைந்தனந் திருவொ டாழியான்
வனைதல்செய் வதுவையின் வண்மைகூறுவாம். (௩௪)

மலருறை யயனுநா மகளும் வந்தன
ரிலகிய பசுபதி யுமையொ டெய்தினு
னல்லுறு புலோமிசை வலாரி நண்ணவின்
னலையுறு கடலென வமரர் துன்னினர். (௩௫)

கின்னரர் கெருடர் காந்தருவர் தங்கிளை
துன்னின தும்புரு மகிழ்ந்து சூழ்ந்திட
மன்னின ரியக்கர் கிம்புருடர் வான்மிசை
யுன்னுமுன் னடைந்தன ருவகை யோங்கவே. (௩௬)

உருப்பசி யரம்பை மேனகையொ டும்பர்கள்
விருப்புறு திலோத்தமை விண்ணின் மாதரார்
பொருப்பெனு முலையர் பாசிழை பொருந்திடக்
கருப்புர மலர்மணங் கமழவந்தனர். (௩௭)

புலத்திய னகத்தியன் பொலன்கொ ணாரத
னலத்துறு வசிட்ட னல்வியாச னன்றிசேர்
பலத்துறு மத்திரி பராசரன் சுக
னிலத்துறு தவரெலா நிறையத் தோன்றினார். (௩௮)

தருமனீள் கதையினன் றனஞ்செயன் னய
மருவிய நகுலன் சாதேவன் மாதவத்
தருணிறை குந்தியோ டமர்ந்து தோன்றினா
ரிருளகன் மணியுறு மிரதமீதரோ. (௩௯)

மத்திரன் றுருபத மன்னன் மற்றுள
மித்திர ரிரதமாக் கரிகள் வேலுயர
வத்திர முதலிய படைஞ ரார்த்தெழச்
சித்திர மொளிர்கொள் வண்டுவரை சேர்ந்தனர். (௪௦)

நந்தகோபன் றிகழசோதை நங்கைதன்
மைந்தனுங் கண்ணன் மாமலரின் மங்கையை
யந்தமாய் வதுவைசெய் யழகுகாணவே
முந்தினார் தமரொடு முடுகு தேரின்மேல். (௪௧)

முல்லையி னரும்பென முளைத்த பல்லின
ரெல்லையி லுவகைய ரெங்கள் கண்ணனா
ரல்விமாமலர் மினோடமரு மாமண
மல்லல் காண்டிட வழினென்று வந்தனர். (௪௨)

நறுநெய்பா றயிருட னயந்த வெண்ணெயோ
டுறுமவை யெலவுங் கொடண்ட ரூருளோர்
நிறையும் வாரிதியென நெருங்கி வந்தன
ரிறைவன் வாழ்துவரை மாபதியி னெய்தவே. (௪௩)

வே று.

கண்ணிநீள் கழிகோல் கரமிவர வேயூதி
யெண்ணிலாத வாவுடனிளங் கன்றுகளெய்த
வெண்ணெய் வாரியே விழுங்கிய வீரனைக்காண
நண்ணினார் துவராபதி யாகியநகரின். (௪௪)

வேயினின் னிசை விரும்பியும் வித்துருமத்தின்
வாயினல்லமு தருந்தியு மார்புற வணைத்துந்
தூயகண்ணனை நினைந்துள மயலினாற் றுவக்குண்
டாயர்மங்கைய ரனைவருந் துவரையி னடைந்தார். (௪௫)

அந்தணாளர்கண் முனிவர்க ளரசர்களாயர்
நந்துசேருமுன் கையொளிர் நாரியர் பலவா
வந்துளார்தமக் கருக்கிய மாதனம் வழங்கிச்
சிந்தையார்வ மெய்திட விலங்கினன் வசுதேவன் (௪௬)

மகிழ்வினு லுபசாரங்கொள் பலவுரை வழங்கிப்
புகழினு லுயரரசர் மாதவருடன் பொருந்தித்
திகழும் யாதவர்க் கிறைவனுந் தேவகிதானு
மிகழ்விலாத விந்திராவயி னெய்தின ரியல்பால். (உஎ)

அன்னமென் னடையமுது கும்பவள் வாயழகார்
மின்னெனும் மிடைமின்ிருழை விழியினள் விதர்ப்பன்
கன்னிதன்னை நன்மணம்புனை கோலமே காண்பா
ருன்னுமுன்னம் வந்தரிவையர் திரள்களு ளுவந்தார். (உஅ)

குங்குமங் கருப்பூரமுங் குளிர்பனி நீரும்
பொங்குகங்கையின் புனலொடு சந்தனம் பொருந்தச்
சங்குசெங்கையி னேந்தினன் றன்னையே விரும்பு
மங்கை பங்கயமடந்தை நீராடினண் மகிழ்ந்தே. (உகூ)

ஏடவிழுமது மலர்மிசை யிருந்தமின் பனிநீ
ராடிமேதக வாடகக்காழக மணிந்தார்
சூடினார் கடிமலர் குழறுலங்கிடச் சுரும்பு
பாடியாடின ஞிமிறுகள் பரிமள முவந்தே. (ஙo)

தண்டை நூபுரம் பரியகந்தாமரை மலரின்
வண்டு கானங்கள் பாடுமாறென விசைவழங்க
வண்டர் நாயகன் மனைவியா மமுதுறு மணங்கின்
புண்டரீகமென் பதங்களி னிலங்கின பொலிந்தே. (ஙக)

மின்னுநாணுற மெலிந்திடு மிடையினில் விளங்கும்
பொன்னினுலவிர் பரந்தபூந் துகிலணி பொருந்தத்
துன்னுமாமணி யினங்கள் செங்கதி ரொனத் துலங்க
மன்னுமாழையி னழகுறு காஞ்சியும் வயங்க. (ஙஉ)

விலையிலாவிட வியாளமின் மணிகளும் விளங்க
வலையுலாவிய வாழியி னமருநித் திலமுஞ்
சிலையுலாவிய புருவநற் கயல்விழித் திருவின்
முலையுலாவிய முருகவிழ் மாலையோ டிலங்க. (ஙங)

அளகமேகமே யெனவிருண் டழகுறு மணங்கு
துளவமாலையான் றேள்புணர்தவ மெய்திற் றென்று
புளகமாகிய விருதன மிசையினிற் பொருந்தக்
களபமோடு குங்குமமிழைத் தணிந்தனர் களிப்பால். (ஙச)

வாரைவிஞ்சு மும்மதகரி மருப்பென வளர்ந்து
நீரினார் கமலத்தினுண் முகையென நெருங்குஞ்
சீருலாவிய முலையணி தரளமுஞ் சிவந்த
பூரியோர் பெரியோர்தமைச் சேர்வுறும் பொலன்போல். (ஙரு)

நீலமாமணி யினங்களுந் தரளமு நிறைந்து
கோலமாகிய பசும்பொனின் கல்ன்களுங் குழுமி
யேலுமாண் புற விலங்கிய பூகமுநாண
வேலையோவிய கோடெனக் கந்தரம் விளங்க. (ஙசு)

பணிபணு மருடங்கொடு வளைந்த பண்பெனவே
மணிகண்மின்னிய கங்கண மிருகையின் வயங்கப்
பிணையு நாணநீள் பெருந்தட விலோசனி தோளி
னிணையிலாத பொற் றொடியும் வானிரவிபோ லிலங்க. (௫எ)

கழைகொடோளிணு ஞளிகமடர்ந்த காதிணையின்
குழையிஞர் மணிக்குழுவொடு கன்னப்பூக்குலவ
உழையின்றுது ராகம்மென வயங்கு சிந்தூர
மிழைகண் மின்னிய விளமுலை வாணுதலிலங்க. (௫அ)

அண்டர் நாயகன் றிருவுரு வணங்குள நிறைந்து
மிண்டியே சிரமிசையி னீள்பொலிவென விசும்பிற்
கொண்டல் காளக நிறைந்தெனக் குழுமுசில் லோதி
வண்டறு மலர்ச் சிகழிகை முடித்தனர் மடவார். (௫௯)

ஆயனுலிலை யமர்ந்தவ னச்சுத னனந்தன்
மாயன் மாதவன் வாமனன் வடிவினன் மனத்தி
னேயமாகிய மடந்தைதன் னெற்றியி னணிந்தார்
தூயநாமமூன் றும்பிறை யசமெனத் துலங்க. (௬0)

அயிலைவென் றிரு குழையினை யடர்ந்து நீண்டகன்று
கயல் விரும்புற மிளிர்ந்து செவ்வரிகளுங் கலந்தே
மயர்வுறுங் களவின்னெடு வஞ்சக மொருவிச்
செயிரகன்ற கண்ணிணையினி லஞ்சனந் திகழ. (௬க)

மைப்பிறைக்கயல் விற்குமிழாம்பன் மாமதியொண்
வெற்பு நந்துமின் னரம்பைநல் வேயிவை கொண்டோர்
கற்பகக் கொம்பு கதிர்மல ரலர்ந்தெனக் கன்னி
நிற்கு மற்புதங் கண்ட நாரியர்க ளெஞ்சுவந்தார். (௬உ)

அந்தமாகிய மறையவ ராசிகள் கூறக்
கந்தமல்கிய கருப்பூர தீபமுங் காட்டிச்
சிந்தையாரவே திகழ்வுறச் சோபனம் பாடி
வந்தமாதரார் மலர்மழை தூவினர் வணங்கி. (௬௩)

வேறு.

நித்திலப் பெண்ணிறை மலர்க் காந்தளங்
கைத்தலப் பெண் ணருந்ததி கற்புப் பெண்
வித்தகப்பெண் விதர்ப்பனருட் பெணல்
லுத்தமப்பெண் ணுருக்குமணிப் பெணே. (௬௪)

மாதவப்பெண் மதிமுகப்பெண் மலர்
மீதினுற்றபெண் வித்துருமப் பெணே
யேதமற்றபெண் ணிந்திரையாகும் பெண்
ணேதிமப்பெ ணுருக்குமணிப் பெணே. (௬௫)

கன்னறேனமுதா மொழிக் கன்னிகை
மின்னுமாபர ணங்கள் விளங்கவே
பொன்னி நூபுரம் பாதம் புலம்பிட
வன்னநாண வசைந்து நடந்தனள், (௬௬)

பாரிசாதநற் கொம்பு படிமிசை
சேரிதாய் நடை கற்றுறுஞ் செய்கைபோ
லாரமாமணி நீல மலேர்ந்திட
வாரிமீதெழு மாதடி பேர்த்தனள். (சுஎ)

நீலமாமணி யம்பொ னிறைந்தெழுங்
கோலமான விமானங் குறுகியே
சீலமான செழுங்கொடித் தேமலர்
மேலின் மாதென வீற்றிருந் தாளரோ. (சுஅ)

கொடிநிறைந்த குடைகண் மிடைந்தன
விடிமுழங்கிய போலெழு பேரியோ
டடிபடும் முரசான் றன மாதரார்
படிநிறைந்து பல்லாண்டிசை பாடினார். (சுகூ)

கவரிவீசின ராலவட்டங் கையாற்
றுவரின் வாயினர் பற்றினர் சூழவே
யவனிதா னிறை யந்தணரும் முனி
தவரும் வீதி நெருங்கினர் தள்ளியே. (எ0)

கோவினங்க ளுயக் குன்ற மேந்தினோ
னாவியன்னவள் வந்தன ளம்பொனி
னோவியம் முயிர்பெற்ற தொத்தே யொளிர்
தேவிவந்தன ளென்றபொற் சின்னமே. (எக)

சங்கொலித்தன தாரை முழங்கின
மங்கைநற்றிரு வந்தன ளாமெனப்
பங்கயத்திறை தேவர் சசிபதி
யெங்கு மொய்த்தன ரந்தரத் தெய்தியே. (எஉ)

இந்திராணி யெழிலுறு நாமகள்
வந்துவானிறை மங்கையர் தம்மொடுங்
கந்தநாண்மலர்க் கன்னியைக் கண்டனர்
சிந்தையார மகிழ்ந்திவை செப்புவார். (எங)

மலரின் மேலுறை மாமயிலோ வறை
யலேகொ ளாழி யமுதத் தெழுமினோ
தலேகள் வீழத் தசக்கிரீபன் றனைச்
சிலேயினு லழித்தான் திருத்தேவியோ. (எச)

மன்னவன் விதர்ப்பன் மகளோ மங்கு
லென்ன மல்கு மிருளளகப் பெண்ணோ
கன்னியோ கரும்போ கமலாசனத்
தன்னமோ வணங்கோ வமுதோ வென்றார். (எரு)

பாழி யந்தடந் தோள்கள் பரப்பியே
யாழி யன்று கடைந் தமு தாசனர்
பீழை தள்ளும் பரன் பெருந் தேவியோ
வாழி யென்று மலர்மழை தூவினார். (எசு)

மின்னு மாமணி துன்னும் விமானமேன்
மன்னு மாதவர் மாதர்கள் சூழவே
யன்ன மாமென வஞ்சுக மாமெனப்
பொன்னி னூசலி னேறினள் பூந்திரு. (எஎ)

ஆரமாட வணிகல னாடப்பூந்
தாருமாட விண்ணூருஞ் சதமகப்
பேரினனும் பிதாமக னும்மிமை
யோருமாடப் பொன்னூசலி னாடினள். (எஅ)

காசினம் பிறழக்கலன் வில்விட
வேசிலார வடங்களு மெல்லிட
தூசுமின்னிடை தன்னிற் றுயில் வுற
வூசலிந்திரையாட வுரை செய்வார். (எகூ)

வேறு—ஊசல்.

கைவளைகள் கலகலென வாடிரூசல் காலிலணி சிலம்பார்ப்ப வாடிரூசல்
மொய்யளி யைம்பாலி னெழ வாடிரூசல் மூவுலகில் நிகரில் மின்னே யாடிரூசல்
மெய்யுரை செய் நாவுடையீ ராடிரூசல் விதர்ப்பனருள் மெல்லியலீ ராடிரூசல்
பையரவி னடித்திடுவான் றேவியான பங்கயமேற் பசுங்கிளியே யாடிரூசல். (அ0)

காதினிரு குழை யசைய வாடிரூசல் கருங்குழலிற் றாரசைய வாடிரூசல்
பாதமணி சிலம் பொலிப்ப வாடிரூசல் பரியகங்கள் பண்மிழற்ற வாடிரூசல்
மாதவஞ்செய் மிதிலைநகர்ச் சனகராசன் மனமகிழ மகளெனவே மண்ணின்மீதிற்
சீதையென வந்தமின்னே யாடிரூசல் தேமலரிற் றெள்ளமுதே யாடிரூசல் (அக)

வேலனைய விழியிணையீ ராடிரூசல் வீழியுறு கனிவாயீ ராடிரூசல்
பாலின்மொழி நளினமின்னே யாடிரூசல் பரமபதத் தொளிர் திருவேயாடிரூசல்
ஆலினிலை துனில்வளரு மாதியென்றே யறிந்துமன முருகியுயர் அமலர்க்காங்கே
யோலையுடன் புரோகிதனைத் தூதாயேவு முருக்குமணி யெனுந்திருவேயாடிரூசல்.

மின்னுமணித் தரளமெழில் நீலமெல்லாம் விளங்குகலனணி முலையீராடி ரூசல்
முன்னவன்று னமரினுயர் முடியா வண்ணம் முராரிதனால் விலக்கிடுவீ ராடிரூசல்
அன்னமெனு நடையுடையீ ராடிரூச லானிரை காத்தவன்றேவி யாடிரூசல்
மன்னவனொண் விதர்ப்பனருந் தவத்தின்வந்தமலர்மகளாடீரூசல் வாழியென்றே.

வேறு.

வாணி யிந்திராணி வானவர்கண் மங்கைமார்
சேணுறு மரம்பை மேனகை திலோத்தமை
பூணுறு முலையினர் புகழ்ந்து பொன்னவிர்
நாண்மலர் பொழிந்தனர் நளின மின்னின் மேல். (அச)

எல்லுறு கொடி குடை கவரியேந்தியே
வல்லியர் மருங்குற மணிகண் மல்கிட
வில்லுரு மம்பொனி னூசன் மேவியே
யல்லியங் கமல மின்னும்பிம் வேலையின். (அரு)

மெய்த்தவப் புலத்தியன் வியாதனூலறி
யத்திரிப் பெயரினான் வசிட்ட னாதியாக்
*கைத்தலக் கனியெனக் காட்டு நூலினார்
மொய்த்தனர் சுகனு நாரதனு முந்தவே. (அசு)

உண்மைசே ருக்கிர சேன னுத்தவன்
வண்மைசேர் குருகுல மகிபர் மத்திரன்
திண்மைசேர் புயவசுதேவன் சேயுடன்
வெண்மைசேர் வலம்புரி வீரன்பாற் சென்றார். (அஎ)

வேலைபோ லரசர்கள் பலர் மிடைந்தன
ராலினீளிலையின்மே லண்ட நுங்கிய
மாலினார் திருவுடன் மகிழு நன் மணக்
கோலமே காண்குவான் குறுகி னாரரோ. (அஅ)

கங்கை காவேரி நீள் யமுனை கண்டகை
துங்கை கோதாவிரி வேணி தூயதாப்
பொங்குநீ ரிமசலம் புதிய தண்மலர்
தங்கியவாச குங்குமங்கள் சாரவே. (அகூ)

மாதவர் மறையவர் மகிழ்வினா லறை
வேதமு முழங்கிடப் பேரி விஞ்சிய
வோதை யெண்டிசையுற வுலக நுங்கிய
வாதியாம் பரமன் மஞ்சனமு மாடினான். (கூ0)

நீலமாகிரி யிளவெயி னிறைந்தென
மாலினார்மருங் கெழி லழகு வாய்த்திட
வேலையார் தரளமு மிடைந்து சுற்றுறக்
கோலமாகிய பொனின் கூறை சாத்தினார். (கூக)

வரையினை யெடுத்து மாமழையைக் காத்துவெங்
கரியினின் மருப்பொசித் தருளுங் கண்ணனா
ரரவினி னடித்த காலழகு மல்கவே
விரிகதிரொளி மணி ஞெகிழி விஞ்சவே. (கூஉ)

காரிணைவனைந்த செம்மலரின் காட்சிபோ
லாரியன் மருங்கொளி ரம்பொற் கச்சிடை
மேருவை வலம்வரு மேலவன் னெனச்
சீருற வயங்குடை வாளுஞ் சேர்த்தினார். (கூங)

ததியுட னெய்கவர் சதுரவென் றயன்
றுதிசெய வயங்கிய சோதியுந்தி மேற்
கதிருறு மணிநிரை கனக மல்கிய
வுதர பந்தனக் கவினிலங்கி யோங்கவே. (கூச)

---

* கைத்தலக்கனி யென்றது=உள்ளங்கை நெல்லிக்கனி. உள்ளிருக்கும் வினை, ரசம், நரம்பு யாவும் பிரத்தியக்கமாய் வெளியே கண்ணாடிபோற் காட்டு மற்புத மானவோர் வெண்கனி.

பவுந்தர்தம் பரனென்னப் பணிந்தன் றீசனை
யவத்தனென் றிகழ்ந்திடு மவுணர் வாழ்வெலாந்
தவிர்த்திரு ளகற்றிய சதுரன் மார்பிடைக்
கவுத்துவந் தயங்கின கதிரின் காட்சிபோல். (கூ௫)

தற்பரமான மும்மூர்த்தி தானுள
வப்புறை மாதவ னுகத்தான் முனஞ்
செப்பிய வாரணப் பொருடெரிந்தென
முப்புரி நூலது முராரி மார்புற. (கூ௬)

கயிலையா னிடர்களைந் தனென்றன் கந்தர
மயனவ மணியுமிழ் வனச மார்ந்திடும்
புயலினை யுடுவினம் வளைந்த பொற்பென
மயர்வறு தரள மாவடம் வயங்கிய. (கூ௭)

மற்பொரு தரவினி னடித்த மாதவன்
வெற்பினை யெடுத்தொளிர் கரங்கண் மீதினின்
சற்பகன் மணிகளுந் தயங்கத்தா னெய்திக்
கற்பகம் வளர்ந்தெனக் கடக மின்னவே. (கூ௮)

நந்துறு கடலினைக் கடைய நாட்டிய
மந்தர வரையை வாசுகி வளைந்தெனச்
சுந்தர முறுமணி வலயந் தோன்றின
விந்திரை கொழுந னெண்புய மிலங்கவே. (கூ௯)

வேலைவாயுறு கதி ரிரண்ட தாகிமின்
னீலமால் வரையினி னிவர்ந்த மாட்சிபோ
லாலினீ ளிலையம ரமலன் காதினிற்
கோலமா யலர்ந்தன குண்டலங்களே. (க00)

பொருப்பினைக் கொடு பொழி புயலைக் காத்து நீள்
மருப்பிறக் கரியினை வதைத்த மாதவன்
விருப்புறக் கவுத்துவம் விளங்கு மார்பினிற்
கருப்புரக் கலவையுங் கமழச் சாத்தினர். (க0க)

அல்லென வளர்ந்த நீணிரயத் தாழ்த்துறுந்
தொல்வினை யவியமா தவங்கள் சூழ்ந்திடு
நல்வினை நல்கிடுந் தவள நாமமும்
வில்லென நுதன்மிசை விளங்கிக் காட்டவே. (க0உ)

விழுமிய கருவரைக் குடுமி மீதினிற்
கெழுமிய கதிரவன் கிளர்ந்த மாட்சிபோற்
குழுமு செங் கேழ்மணி குலவு மாழையி
னெழிலுறு மகுடமுஞ் சிரமிலங்கவே. (க0௩)

மாவின்வாய் பிளந்து புட்கிழித்து வன்மை சேர்
கோவிமார் துகிலெலாங் கொள்ளை கொண்டரு
டேவனுர் முடிமிசை திகழ்ந்த தேனமர்
காவினந் தாமலர் கமழும் வாசிகை. (க0௪)

தேடுறு மலரயற் கரியசேவடி
நாடுறு மடியவர்க் கருளு காரணன்
சூடுறு பொன்னிழை துலங்கி நின்றனன்
கோடிகந் தர்ப்பர்தம் வடிவு கொண்டென. (க0டு)

தேவகியு ரோகணி யசோதை சீரிய
காவியின் விழியினர் கமலக்கண்ணனை
யாவலின் மைந்தனென் றமைய நோக்கியே
தீவிகை யெடுத்து மங்கலங்கள் செப்பினர். (க0சு)

நீதகல் சுகமுனி சிறந்த நாரதன்
மாதவர் திரள் வசுதேவுற் சூழ்ந்தனர்
ஆதரவுடனிமை யோர்க ளந்தரம்
போது மிந்திர னயனுடனும் போற்றுவார். (க0எ)

ஆதிநற் பொருளதா யவனி யண்டமாய்
மாதவர்க் கெளியனு யருள்செய் மாதவப்
பூதலத்தரச னீயாகிப் போந்தனை
யேதெனக் கருதவு மெளிதன் றெங்களால். (க0அ)

உலகினை யுதவியுண் டுமிழ்ந்து காத்தநீ
யலகையி னுயிர்தெறுத் தரசர் தங்குலத்
திலக னென்றுரை செயச் செக தலத்தினி
னிலகி முன்னின்றனை யென்று மீறிலாய். (க0கூ)

அருவமா யுருவமா யனந்தன் மீதினிற்
றிருவொடும் பயோததி சேர்ந்து வாழு நீ
தரணிமீ துருப்பிணி தன்னை நன்மண
மருவவே முயன்றிடு மாய மென்கொலோ. (கக0)

நின்னு ளெவ்வுலகமும் படைத்து நீயவை
தன்னுள் வந்திழிந்து விற்றுங்கிப் பாரையாள்
மன்னவ னென்றெமை மயக்கு மாய்கைக
ளுன்னவு மறிகிலோ முலப்பிலையனே. (ககக)

அண்டமுங் கடந்துமேல் விரசையப்புறத்
தெண்டவ ருறைபதத் தெழில்கொண் மாமணி
மண்டப மிசையமர் நின்னை மண்மிசைக்
கண்டனம் வினைகளே யென்றுங் காண்கிலோம். (ககஉ)

வேறு.

அிராவணை துறந்தே யரசரிற் பிறந்தா யானைமுன் வருநாதா
மராமர மெய்தாய் மருதிறத் தவழ்ந்தாய் வானுற நிமிர்பாதா
விராவண காலா வெருதிற வடர்த்தா யேனமு நீயானாய்
பராபரமானாய் பருதியை மறைத்தாய் பாணிற வனைகொண்டாய். (ககங)

வேறு.

வேரிமா மலரயன் முதலோரிவை விளம்ப
வாரவாரஞ்செய் துந்துமி முழக்கினு ரமரர்
நாரதாதியர் கையெடுத் தாடினர் நலஞ்சேர்
பாரினன்மறை யந்தண ராரணம் பகர்ந்தார். (கககூ)

மின்னு செங்கதி ரவிரெனக் கருப்புரவிளக்கைப்
பொன்னி னன்மணிக் கலத்திடை யெடுத்திசை பொருந்த
வன்ன மன்னவ ரனைவருஞ் சோபன மறைந்தார்
துன்னு நன்மலர் சொரிந்தனர் தேவர்கள் சூழ்ந்தே. (ககரு)

சுனகன் மாநதி தலங்கிடச் செந்நெல்சூழ் விபுலை
நனிக வானிறை நற்றுகி நாகுமி ழாரங்
கனக மாமணி கன்னிகா தானமோர் கோடி
யனகன் நான்மறை யந்தணர்க் கருளின னன்பால். (ககசு)

மண்டலாதிபர் துதித்திட வதுவைசெய் விரத
மண்டர் கோன் மகிழ்வுறுஞ் சமாவர்த்தன மறிவா
லெண்டபோதன ரந்தணர் யாவையு முடித்தார்
புண்டரீகனு கண்டலன் புலவர்கள் புகழ. (ககஎ)

பொன்னின்மா நகரொப்பன புட்பக விமான
மென்னவோங்கிய வெழிலுற விளங்கு மாமணிக
டுன்னுபேரொளி தருமிர தத்தினிற் றுலங்க
மின்னுநேமியன் மகிழ்வுடன் வீற்றிருந் தனனால். (ககஅ)

வேறு—பவனி.

சாத்தகி தாளவெண் கவிகை தாங்கநற்
பார்த்தனு நகுலனுங் கவரி பற்றப் பா
ரோத்து சா தேவனு மிரத மூர்ந்திடத்
தீர்த்தன் வானவரெலா மார்ப்பச் சென்றனன். (ககக)

பேரியங் கறைந்தன பிரளயத் தெழும்
வாரியி னமலைபோன் முழங்க வானுறு
சீரிய வலம்புரி தழங்கத் தேவர்கள்
வேரிகொ டருமலர் வீசி யாடினர். (கஉ0)

இடிபடு முரச மம்புவி யிரட்டெழ
வடிபடு கரடிகை முழவ மான்றெழத்
துடியொடு படலிகை துவனி மல்கிடக்
கொடியொளிர் பிச்சமுங் கோடி துன்னின. (கஉக)

தாளமுங் கண்டையுந் தாரை சின்னமுங்
காளமுங் கிடுமியுங் கலந்த வெங்கணும்
வாளொளிர் குந்தம் வேல் மழுக்கண் முற்காங்
கோளரியென வெழுங் குமரர் கொண்டனர். (கஉஉ)

வேழமாவிரதமேல் விளங்கும் வீரர்கள்
ஆழிபோனிறைந்தன ரனீகமார்த்திட
யாழொடுகின்னர மிசைக்கு மாதர்கள்
சூழவே துலங்கினர் சுரர்களெங்கணும். (கஉங)

ஆர்த்தனவனிகினியமரர்பொன்மலர்
தூர்த்தனரரம்பையர் துள்ளியாடினார்
ஏத்தினர் முனிவர்கள் யாதவக்குலத்
தீர்த்தனுமிரதமேற் சிறந்துதோன்றவே. (கஉச)

மாதவன் வந்தனன் மாயன் வந்தனன்
யாதவன் வந்தன னிறைவன் வந்தனன்
போதயனொடு மெழுபொழில் படைத்திடுஞ்
சீதரன் வந்தனனென்ற சின்னமே. (கஉரு)

வாரிமீதிலங்கிய மாயன் வந்தனன்
சூரனுமுருக்குமனமர் தொலைந்துநீள்
பாரின்மேலோடிடப் பகழிதூவிய
சீரியோன் வந்தனனென்ற சின்னமே. (கஉசா)

யாதவன் வந்தன னெழில்கொ ளாச்சியர்
கோதையர் விருப்புறுங் கொண்டல் வந்தனன்
மாதவன் வந்தனன் வந்தனன்னென
வூதின சின்னமு முலப்பிலாதன. (கஉஎ)

சின்னமுஞ் சங்கமுஞ் சிறந்த காளமுந்
துன்னிடு முழவமுந் துலங்குபேரியு
மின்னிசை கெழுமிய யாழ்களெண்ணிலாக்
கின்னரவொலியொடுங் கிளர்ந்த வெங்குமே. (கஉஅ)

மாதவர் விசும்புறை மடந்தைமார்களும்
போதினி லுறைபவன் புரந்தராதிப
ராதரவுடன்மலர் சொரியவாரியன்
வீதியினிரதமேல் விளங்கித் தோன்றினான். (கஉகா)

வேறு-காதன்மாண்பு.

ஆயனாரணிமணித் தேரின்மே லழகுறத்
தாயமா வீதியிற்றோன்றவே துடியெனத்
தேயுநூலிடையினார் திருவனாரன நடைச்
சாயல்போல் வருமினார் தரணிமேன் மிடையவே. (கங0)

அயிலெனும் விழியின ரனமெனும் நடையினார்
குயிலெனும் மொழியினார் குங்குமக் கொங்கையார்
புயலெனுங் குழலினார் தாளமே புனைகுவார்
மயலுறுஞ் சிந்தையார் விரைவினில் வந்தனர். (கஙக)

குங்குமக் கலவைநற் கொங்கையிற் கெழுமவே
பங்கயத்தடியினிற் பரிபுரம் பரியகஞ்
செங்கையிற் கங்கணம் மிலகிடத் தெரிவைமார்
மங்குலைக் கடிகுழற்குலையவே வந்தனர். (கஙஉ)

அரவினிற் றுயில்பிரிந் தருளிவந்தச்சுதன்
விரிகடற்றுவரையின் வீதிமேவினனெனுத்
தரணியிற் கலைவிழக் குழல்களுஞ் சரியவே
யரியெழுக் கிளிகள்போ லனைவரும்மணுகினுர். (கருரு)

மானினம்வருவபோன் மயிலினம்மெழுவபோற்
றேனினம்முரன்மலர்க் குழலினுர் திருவனுர்
மீனினம் வெருவுசல் விழியினுர்தொறுநிரைக்
கானினின்றுலவிய கண்ணனைக் கண்டனர். (கருசு)

ஆடுவார்வானமீ தரிவைமார் நாணவே
பாடுவார் சுரர்களும் முனிவரும் பரிவுறக்
கோடினுேடாழிகை கொண்டமால் கூடிவினுல்
வாடினுர் மாரவேளெய்யவே மடநலார். (கருரு)

தாளமா மணிகொ டாவடமெலாந் தனமிசைப்
புரளமைக்குழன்மலர் பொலியவே யரிவைமார்
திரளுளோர் மயலெழக் கலைவிழச்சேருவா
ருருளுமாவிரதமீ துலகுணேமியன் வர. (கருசு)

பூவினிற் றிருவெனப் பொலிமினுர் வேனில்வே
ளேவவே வருகணைக் கிடையுமெம் முடலிடத்
தாவிவிட் டகலுமுன் னணைகிலீரோ விருந்
தாவனத் தெய்திடுஞ் சதுரவென் றுரைசெய்வார் (கருஎ)

தழலெழச் சிலைமதன் விடவெழுஞ் சரமதா
லுழலுகிற் றிடுமெமைமெ யுறவணைத்தருளி நன்
குழலிசைப் பவளவா யமுதினைக் கொடுவிடத்
தழலுமிழ்ந் தெழுமரா மிசைநடித் தருளுவாய். (கருஅ)

வேறு.

மல்லர்மாள வமர்செய்திடு மாயா
யொல்லைமேவி யெமையுற் றணைத்தாளா
வல்லுநீள்பகலு மன்மதனடரா
வெல்லும் வாளியை விலக்குதி யென்றுர். (கருக)

ஓதி மாதர்கட மொக்கலை யுற்றே
பேதை யாருமொரு பெண் ணமிர் தன்னுள்
காதலு னறியாள் கடலமர்வோன்
போதவே புயலிதாகுமென் றெண்ணி. (கசo)

இதுமுதற் பெண்பருவம் - எ - ம்-கூறப்படும்.

அமலன் கண்ணிணைகள் வாய்மல ரங்கை
கமலமென் றுளத்திற் கருதிக்கண்
ணுமிழுநித்திலஞ் சிந்திட வோடித்
தமரையிந்தமலர் தந்திடுமென்றுள். (கசக)

ரு - முதல் - எ - வயதுவரை பேதை.

பேதையிந்த வுரைபேசிட மாயோன்
மாதவன் விபுலை நாயகன் மற்றை

வீதிவந்திடலும் விண்ணவரார்ப்ப
மோது துந்துமி முழங்கியதன்றே. (கசஉ)

அ-முதல்-கக-வயது வரை பேதும்பை.

சதங்கை கொஞ்சிடத் தண்டைக ளார்ப்பப்
பதங்கொ ணூபுரம் பண்கண் மிழற்றப்
பெதும்பை யாகுமோர் பெண் ணமுதன்னாள்
விதங்கொ டாடிய கழங்குடன் மேவி. (கசங)

சீதரன் வடிவு செய்கை கணுற்றே
மாதுகண்ணோணிமையான் மயலற்றும்
போதனுணுபு புகல்கில ணின்றாள்
யாதவன்னைகையொ டேகினன்வீதி. (கசச)

கஉ-முதல்-கரு- வயதுவரையில் மங்கை

சுரும்புதுன்னிய மலர்க்குழ றய்யா
ளரும்பு நேருமுலை மங்கை ஒருத்தி
கரும்பினன் சுவை கைவித்திடு சொல்லாள்
விரும்பு கந்துகமண் மோதிடும் வேலை. (கசரு)

மன்னன் மாயனிவண் வந்தன னென்று
சின்ன மூதியிடவே திருவன்னா
ளுன்னு போதின்முன் னுற்றது கண்டாண்
மின்னுநேமிதரி வீரனை விழியால். (கசசு)

கன்னல் வில்விகணை காய்ந்துடன்மேவி
மின்னும் வெள்கு வளையுந் தரைவீழப்
பொன்னு மன்னுபூங் கொம்பது போல்வா
ளன்னமன்னவனுநொந்தறைகின்றாள். (கசஎ)

நந்தகோபன் மகனாகிய நல்லீ
சிந்துசிந்து பகையாக்கினி ரேனோ
வந்தமேமலியு மாயர்கண் மாதர்
வந்துளார் தமையு மார்பிலணைத்தீர். (கசஅ)

மங்கை யிந்த வுரைகூறி மயங்க
வெங்கு மங்கு லெனவே பலியங்கள்
பொங்க வெங்கரிக டேர்புடைசூழச்
சங்கை யங்கையி றரித்தவன் சென்றான். (கசகூ)

கசு-முதல்-ககூ-வயது வரை மடந்தை

கடந்தரும் களிகொ ளானையின் கோட்டை
யடர்ந்து விம்மு முலை யாளன நாண
நடந்த பஞ்சினடி யாணறுங் கொம்பர்
மடந்தை யிந்துவினை நேர் வதனத்தாள். (கரு0)

நீலமா மணியொ டார நிறைந்து
கோலமாகி வளர்கொங்கையின் மின்னச்
சேலுநாணும் விழியாடெளி தேனும்
பாலுமேல விசை பாடிடும் வேலை. (கருக)

சூழுமா மணிக டின்னிடு சின்ன
மூழியா னவணின் வந்ததை யோத
யாழினேடு வரு மேனகை யென்ன
வாழிபோல மய லெய்தவுடைந்தாள். (கருஉ)

கற்பகத்தின் வளர்கொம் பிம்பரிலே
பொற்பெழப் படியி னேடுவேபோல
வெற் பிணைத்த கொங்கையள் விமலன்றன்
அற்பு தத்தெழிலே யுற்றறைகின்றாள். (கருங)

கஞ்சன்மாள வமர்செய்தருள் கண்ணு
பஞ்சபாண மெய்பரந்தன பாரா
யஞ்சலென் றிவணி னுருதி யென்றே
துஞ்சினு ளுமெனவேயுடல் சோர்ந்தாள். (கருச)

மயலெழுந்தவ ணின்மாது மயங்கச்
செயலெழுந்த பலதாமரை சேரும்
புயலெழுந்த வெழில்போலரி சென்றான்
அயலெழுந்திடு மணிகிணி யார்ப்ப. (கருரு)

உ0-முதல்-உரு - வயது வரை அரிவை.

கரியின் கோட்டை முனிந்து கதித்த
வரையு நாணியிட விம்மி வளர்ந்து
தரளமா மணிகள் சேருதனத்தா
ளரிவை பாரினுறு மென்னடை யன்னம். (கருசு)

சிலைநுதற் கயல்கொள் வேல்விழி செவ்வாய்
யிலவிதழ்ப் பவளநா ணெழில்காட்ட
நலவரிப் பெயரின் வீணைகொணங்கை
பலரு நத்தியிடு பண்ணிசை வேலை. (கருஎ)

நாதனவ் வழியி னண்ண வொர்சின்ன
மூதமைய லுறவே யெழுந்தோடி
வீதிசென்று வன வெற்பெடுத் தான்றன்
பாதமீதுடல் பணிந்திவை சொல்வாள். (கருஅ)

பக்கமேவி வரு பாவையர் முன்னே
கொக்கின்வாச மலர் வாளிகொடெய்வா
னிக்குநாணி யறவேயெனை யாளீர்
குக்குடாசுரனை வென்றருள் கோவே. (கருகூ)

வானினத்தின் வருமங்கையர் முன்னே
யானினைத்து வரு காரியமெய்த
கூனிமிர்க்க வருவாட் கொண்டிரேன்
மேனியைத் தழுவிக்கொளுவீரே. (கசு0)

என்றுரைத் தவளுமேமுறு போழ்தின்
குன்றெடுத் தருள்செய் கோவல னுந்தான்
வென்றியுற்ற சினமெங்கணும் விஞ்சச்
சென்றனன் விபுதர் தேமலர் சிந்த. (கசுக)

உரு - முதல்-ஙக வயது வரை தெரிவை.

அரவநற் கடலினு ரமுதன்னாள்
வரையெனத் திகழவே வளர்கொங்கைத்
தெரிவை மெய்த்தவர்கள் சிந்தை மயங்கி
யுருகிடப் பணிநல் யாழிசை யோத. (கஙஉ)

மாயனுய னுயர் தேவகிமாதின்
சேயன் வந்தசெய லோதிய சின்னை
மாயசொல் லமுதமா யெழவன்ன
மேயெனும் முனரி னெய்தினள் வீதி. (கஙங)

கோலமா மலரினுன் மலி கொண்டல்
போலவே யுருவமும் பொலிவெய்து
நீல மேனியைக் கண்டவ ணின்று
மாலெழுந்து மெய்மயங்கினள் சொல்வாள். (கஙச)

அண்டர் மாதர் துகிலன் றவண் வாரிக்
கொண்ட வாதியெனுணர்ந்தனை கொல்லோ
வெண்டபோ தனர்க ளேத்தரி நின்னைக்
கண்டபோதி னென் கலையுமவிழ்ந்த. (கஙரு)

துணையு நாணுமிலை சூழ்ந்து வில்வேளெய்
கணையு மேவு கனலா யெழுங் கண்ட
ரிணையி லாதநீ யெய்திமு னென்னை
யணையு மார்பிலினியென் றயர்வாண்மின். (கஙசு)

தெரிவை சோர்ந்திடச் சீதர மூர்த்தி
கரியமாமுகி விற்கம லங்கள்
விரியவே கவின்விளங்கிய போலத்
தரணி யெய்தினன் றன்னுருடேரின். (கஙஎ)

ஙஉ முதல் - சW - வயது வரை பேரிளம் பெண்.

வாரணிந்திட வணங்கிய கொங்கைப்
பேரிளம்பெ ணுதலம் பிறைபோல்வாள்
பாரளந்த பரமன்றிரு நற்பேர்ச்
சீரணிந்து தித்தித்திடு சொல்லாள். (கஙஅ)

கண்ணன் மாயனெழில் கருமுகி லென்றும்
வெண்ணெ யுண்டருளும் வித்தக னென்று
மெண்ணி யின்பமுறு யாழ்பலகீதம்
பண்ணி நல்லிசையிலே பகர் வேலை. (கஙகூ)

மாதவன் பரமன் மாலரி மாயோன்
யாதவன் னென வியம்பின சின்னங்
கோதை நெஞ்சுருகியே கொடிபோலே
வீதி வில்லிட விரைந்தனள் சென்றாள். (கஎ0)

கண்டனள் வளைகொள் கார்முகி றன்னைக்
கெண்டைநாணும் விழியாள் கிளிபோல்வாள்
வண்டுதுன்னிய மலர்க்குழன் மாது
கொண்டமை யறனிறு லிவை கூறும். (சஎக)

கோடி மன்மத ருருத்திகழ் கொண்டீர்
சூடுவீர் நறுந்துள வையராவி
னூடுவீ ரணையீ ரிவணளியோ
டேடருமலர் மார்பினி னென்றாள். (சஎஉ)

பாரன் வாளியை விலக்கிலிர் வந்தென்
னாரமா முலையின்மே லணைகில்லீர்
பாரினோர்க ளுமையே பகைதீர்க்குஞ்
சூரனுமெனச் சொல்லுவ தென்னோ. (சஎ௩)

குண்டிறு புரக் கோதையை விழியாற்
கண்டு வீதிதனி லெங்களை நோக்கு
அண்டர் நாதரிவ ரெண்ணில ராமா
முண்டகங் கொள்வார் தொட்டியை முட்டார். (சஎ௪)

ஆழியா னிவனெ னெஞ்சி னமர்ந்தா
னாழியானை யினியேகவு மொட்டேன்
றோழிமீர்கள் புலனை நெறிதுற்றே
யேழையேனு மணைவேன் புயமென்றாள். (சஎ௫)

பேரிளம் பெணெனு மின்னிவை பேசி
நாருளம்புக மெய்நைந்தவ ளோய்ந்தாள்
பாரு ளும்பர்திரள் பன்மலர் தூவத்
தேருளெம் பரமன் வீதியிற் சென்றான். (சஎ௬)

பேதைமாதர் முதற்பே ரிளம் பெண்ணார்
வீதிதோறு முளுடைந்தனர் வேளுஞ்
சூதவாச மலர்வாளி துரந்தான்
நீதிலாத வரிதேர் மிசைசென்றான். (சஎஎ)

வேறு.

அரம்பை மேனகை யுருப்பசி யரிவையர் பலரு
நிரம்பினார் நிலமகளிரொ டெங்கணு நிறைந்தே
விரும்பினாரரி யுருவிறு லயர்ந்தெங்கும் வீழச்
சுரும்பு நாணுற வேனிலான் மலர்க்கணை சொரிந்தான். (சஎ௮)

உலகளந்தருள் பாதமுங் கண்களு முரனு
மலகையின்னுயிர் பாவினோ டருந்து வாயழகு
மிலகு கைகளுங் கண்டவர் யார்கொலோ வுருகார்
திலக நன்னுத லரிவையர் மயல்செப்ப லெளிதோ. (சஎ௯)

கமலமாகிய விழியிணைவாய் முகங்கரங்க
ளமலனார் திருவுருவினி னென்றான் றேயமைய
விமைகிலார்கள் கண்ணுறுத்தின ரேழையர் பலர்தஞ்
சமையமோ விடாதிருந்துறுந் தவர்களும்போல. (ச௮0)

சூடகங்களும் வளைகளுங் *கடையமுந் துலங்கப்
பாடகங்களும் பரிபுரமொடு பதம்பற்ற
வாடகங்கொளு மணியணி முலையினரடங்க
மாடகங்களி னுய்த்திடுவோன் றனைவளைத்தார். (௧௬௧)

கலையினுற்றிகழ் நிதம்பமாந் தேரினைக் கடாவி
முலைகளா மதக்கரியினை முடுக்கிநற் புருவச்
சிலையினால் விழிக்கணை தொடுத் தெய்தனர் சிறந்த
மலையை யேந்தரி தன்னையே மாதரார் நெருங்கி (௧௬௨)

மூடிஞரரி முராரியை மாதரார் மூடுகி
யேடவிழ்மலர் வாளிகளெங்கணும் பொழிந்தே
நாடிநாணூறும் போதுதான் காண்கிலார் நகைத்துச்
சாடினன்மதன் சராசனத் †திழைகளுஞ் சிதற. (௧௬௩)

வளைகள் சூடகம் வாலொளி ரார மேவிடநற்
றொளைகொணீலமுந் தலைவிழத் தோகையர் மயலா
லளையும் வீதியி னரக்கர்கோன் றலைபத்து முன்னாட்
களையு மாதவன் றேர்மிசை யேகினன் கடந்தே. (௧௬௪)

அந்தரத்தினி னெழுந்தன ரமரர்கள் பலருங்
கந்தரத்தரு மகிழ்வுறக் கடிமலர் பொழிந்தார்
சுந்தரத்திரு நாரணன் றுலங்குதேர் தன்னின்
வந்தெதிர்த் தெழும்வீதிக ளெங்கணும் வயங்க. (௧௬௫)

கோடிநீடிய கொடிகுடை தொங்கலுங் குலாவ
வேடவிழ்மலர்க் குழலளி யின்னிசை யெழுப்பப்
பாடும்யாழொலி பாய்ந்திடப் பங்கயத்தமுத
மாடமூசல் சேராவண மடைந்தன னழகன். (௧௬௬)

அண்டரும் விழைவுறு மணியினங்களு மசைந்தே
மண்டலங்களுங் கதிரவனவிரொளி வயங்க
விண்டலங்களு மொழியுற வீசுமூசலின் மேற்
கண்டனன் கமலாசனத் தமுதினைக் கண்ணன். (௧௬௭)

கண்ணி னுயர் மாதவன் கண்டனன் கமலப்
பெண்ணி னுடனே யுவகைநீள் கடலெனப்பெருக
விண்ணின் மீதுறும் பதத்தினிற் பிரிந்தவர் மீள
மண்ணின் மீது தாங்கூடிடி னுளைக்குமா றுளதோ. (௧௬௮)

விதர்ப்பனற் றிருமகடனைக் கண்டருள் விமல
னதிர்த்து மும்மதம் பொழியுறு மருவிக ணிறையக்
கதித்த செம்முகக் கோடுடைக் கரியின்முன் கயத்திற்
றுதித்த வும்பன்முன் றோன்றின னெனத் துலங்கி. (௧௬௯)

---

* கடைய மென்றது கடகம்; இது திசைச்சொல்.

† மன்மதனுக்கு வண்டேயன்றி வேறுநாணிகளு முளவாகையான் இழைகளுஞ் சிதறவென்றார். இதனை "பட்டுநூல் பவளம் வண்டுவெண்டரளம், விட்டுவேளெய்யும் வின்னுணியைந்தே" என்பதானுணர்க.

அன்று குஞ்சர மூலமென் றழைத்திடக் காத்தே
கன்றி நின்றிடுங் கஞ்சனு னையின் வரு களிற்றைக்
கொன்ற கையினான் கனகமால் வரையெனக் குறுகி
நின்றவேழ மேலேறின னிலமகள் கொழுநன். (கக௦)

நீலமாகிரி நிறைகமலங்கள் கொண்டெழுந்த
கோலமார் வடகரையின்மேற் றோன்றிய கொள்கை
யேலவேபல வாபரணங்களு மிலங்க
மாலினான்மத கரியின்மேல் வயங்கினான் மாதோ. (ககக)

சாமரைத்திர ளருச்சுனன் நகுலன் சாத்தகியெண்
வீமர்பற்றியே வீசினர் மேருவி னிலங்கும்
சோமநூற் றெனத் தரளவெண் குடையது துலங்கக்
காமனைப் பயந்தா னிருந்தான் கரியதன்மேல். (ககஉ)

வெண்களிற்றினும் விளங்கிய மதகரிமீதின்
பண்களிற் குழலூதுநற் பரமனும் விளங்கக்
கண்களிற் றவமுனிவருங் கண்டனர் களித்தார்
விண்களிற் றருமல ரிமையோர்களும் விடுத்தார் (ககங)

தேர்நெருங்கின நெருங்கின மதகரித்திரளும்
பார்நெருங்கின பரிகளும் வீரரும் பலரும்
வார்நெருங்கிய முலையினர் நெருங்கினர் வானோ
ரூர்நெருங்கின ருமைசசி யுருப்பசியுடனே. (ககச)

பேரியார்த்தன சங்கமு மார்த்தன பிறங்கும்
வாரியார்த்தென வரசர்க ளார்த்தனர் வயங்குந்
தாரையார்த்தன சின்னமு மார்த்ததண் ணுமையுங்
காரினார்ப்பென வெங்கணுங் கம்பலைபரந்த. (ககரு)

மாவின்வாய் பிளந்தேயருள் மாதவன் வந்தான்
கோவிமார் துகில் கொள்ளை கொண்டருளு மால்வந்தான்
காவிநேர்விழி யுருப்பிணியாகிய கமலத்
தேவிநாயகன் வந்தனனென்ற பொற்சின்னம். (ககசு)

சின்னமூதிடத் தேவர்க டுதித்திடச் சிறந்த
மின்னுமா முகிலென மதப் பூட்கையின் விளங்கும்
மன்னன் மாதவன் வரவெதிர் கண்டனள் வயங்கு
மன்னமாகிய நடையுடை யுருப்பிணி யமுதம். (ககஎ)

புண்டரீகங்கள் பூத்ததோர் புயலெனும் வடிவைக்
கண்ணேனீள் விழிகளிப்புறக் கடலிடை யமுத
முண்டதாமென வுரோமமெய் புளகமு முறவா
னண்டர் சூழ்ந்திட வூசலினுடின ளணங்கே. (ககஅ)

மூவராகியே முளைத்தெழு முராரிமாலரித
ளுவியாகிய வருந்ததிக் கற்புடை யணங்கு
காவிநேர் விழிவயங்கிய கமலநாயகியாந்
தேவியூசலி னுடவே கண்டனன் சிறந்தே. (ககசு)

சிந்துரத்தினற் கொம்பொசித் தருளிவேதிகழுஞ்
சுந்தரத்திரு நாரணன் றேட்டியாற் கரியை
யுந்திமெய்த் திருவாடிய வூசல்கண்டு வகை
முந்தமைக்கிரி யேலவேவந்து முன்னின்றான். (உ00)

குஞ்சர வெரிநழகுறக் கொடிகுடை நிறைய
வஞ்சனந்திகழ் கிரியென வச்சுதனணுகப்
பஞ்சின்மெல்லடி யுருப்பிணிபரமர்திண்டோளின்
விஞ்சுசெண்பக வலங்கலைச் சூட்டினள் விரைந்தே. (உ0க)

காசுலாவிய நகிலினுள் விதர்ப்பர்கோன் கன்னி
*மாசிலங்கத மணியொளி ரங்கதப்புயத்திற்
பூசல்கேசரம் பொருந்திய வலங்கலைச் சூட்ட
வாசுதேவனு முகுந்தனுந் திருவுளமகிழ்ந்தான். (உ0உ)

பூவினுங் கடலமுதினும் வயங்குபொற் கொடிதன்
றுவியன்னவ ளையுறு மெய்யிடை யணங்காந்
தேவிதன்றிருச் சிரதரந் தோளிணை சிவப்பக்
காவி நன்மல ரலங்கலைச் சூட்டினன் கண்ணன். (உ0௩)

மாயவன் றுவராபதி வயங்கியவாயர்
நாயகன்றிருக்கரங்களாற் சூட்டுநற் றெரியல்
வேயிருந் தடந்தோளினு மார்பினும் விளங்கத்
தூயசெந்திரு மகிழ்ந்தனடுனி யெலாமகல. (உ0௪)

வேழமூலமென் றழைத்திட விரைவினின் வந்தோன்
† வேழமன்னர்மா மரபற வீட்டினேன் ‡பூழை
§ வேழமூதினேன் விதர்ப்பராசன் றிருமகடன்
|| வேழமாகுந் தோள்விரும்பியே மேவினனூசல். (உ0ரு)

சிலையினன் மழையகன்றிடத் தடுத்தருடேவு
மலைகொளாழியினமுதிடை யெழுந்தருளணங்கும்
விலையிலாமணி யொலியெழு மம்பொ னூசலின்மே
விலகவேதரு மலர்மழை யிமையவர் பொழிந்தார். (உ0௬)

பஞ்சின் மெல்லடிப் பரிபுரமிலங்கு பைந்தொடியுங்
குஞ்சரத் தினுக்குயர் பதமளித்த கோவலனு
மஞ்சனந் திகழ் கொழுந்தைவித் துருமக் கொம்படைந்து
விஞ்சுநல் லெழில்போலவே யூசல்மேவினரால். (உ0எ)

வண்டுமேல்கிய மலர்க்குழன் மவுலியோ டொளிரக்
குண்டலந்திருக் காதமர் தோடுடன் குலவத்

---

* மாசு+இல்+அம்+கதம்+மணி ஒளிர் அங்கதபுயத்தில் குற்றமற்ற அழகுடைய நாகமாணிக்கங்கள், ஒளிரும் தோளணி பூண்ட புயத்தில்.

* கசேந்திரனென்னும் யானை.

† யானையூருமரசர்

‡ § பல துவாரங்களையுடைய புள்ளாங்குழல்.

|| மூங்கில்.

தண்டை நூபுரஞ் சதங்கை வீரக் கழறரித்தே
புண்டரீகமே யனையநற் பதங்களும் பொலிய. (உ.0அ)

சதங்கை கொஞ்சிடத் தமனியத் தண்டைக ளொளிரப்
பதம்பொருந்திய பரிபுரம் பண்ணிசை பரப்ப
மதங்கொள் கீதஞ்சில்லோதிமீக் கீதங்கள் வழங்க
விதங்கொளும் மணியூசல்மேல் விளங்கின டிருவே. (உ0க)

மார்பினுர் மலர்த்தாமமு மாடவேவலீசே
நாரமா மணியாடநற் றுசுமங்காட
வாரியே ரமுதணங்கொடுமரகதவடி வோன்
சீருலாவு பொன்னூசலி னுடினன் சிறந்தே. (உக0)

துண்டவெண்பிறைச் சடையனும் வலாரியுந் துலங்கும்
விண்டலந்தனில் விரிஞ்சனு மகிழவூசலின்மேன்
முண்டகர்தரு திருவுடன் முராரியுமாடக்
கண்டநங்கைய ரனைவருங் களிப்புடன் சொல்வார். (உகக)

வேறு-ஊசல்.

நீலமணியுட னரவின் மணியுமாட நித்திலமு மலைந்தாட நிறைந்த பூவின்
மாலைகளு மசைந்தாட வண்டுமாட மருங்கமர்மே கலையாடக் கலையு மாட
வேல்களெனும் விழிகுழையோ டாடக் காதின் விளங்குதிருக் குண்டலமுந்
தோடுமாட,வாலினமர் பரம்பொருளேயாடீரூசலழகுமலியுருக்குமணியாடீரூசல்.

திசைதோறுமுறுங்கரிக்கோடிறவேவானோர்திரளோடச்சதமகனுரோடவேதோ
டசையாத பிங்கலன்மா வருணனோடை வந்தகனு மிடைந்தோட வரனுர்வெற்பும்
விசையான கரமதனுலெடுத்த வீரன்விறலழிய வுடலுருளச் சரங்கள்விட்ட
வசுதேவன் றிருக்குமரா வாடீரூசல் வாசமுறும்வனசமினேயாடீரூசல் (உகஉ)

ஈவதுநன் றலவெனவங் குசன னெய்தி யியம்பியிடு முறையதனை யிகழ்ந்து நி
ன்று, மாவலியன் றுவந்தருள் மூவடியின் வானோர் மகிழ்ந்தெழவே யுயர்ந்தளந்
த மலர்ப்பாதத்தின், பூவிலயன் விளக்கியநீர் கங்கைநீராய்ப் பொலிவுறநீள் பூதல
முமளந்தபொற்பாந், தேவகிதன் றிருக்குமரா வாடீரூசல் செழுங்கமலந் திகழ்
திருவே யாடீரூசல். (உகச)

அந்தமுறுங் கனகன் முனராதிமூர்த்தி யமர்ந்துலக மனைத்துமுள னரியென்
றேதும், மைந்தனெனு மறிஞன் மொழி யிகழ்ந்து தூணின் வன்கைகொ டேய
றைந்துளனேவென்னும் வாய்மை, பிந்தமுந்தி முடங்குளையாயவன்றன் மார்பை
ப்பிளந் தனைந்து குடரணியும் பெருமானுகும், நந்தன்மகிழ் நற்குமரா வாடீரூசல்
நளினமலர்நாயகியேயாடீரூசல். (உகரு)

விசாலமுறு தரணிதனை வெண்கோடேற்றி விளங்கிவருஞ் சூகரமாய் விறலின்
மிக்க,பிசாசனெனுந் தனுநயனன் மடிந்துவீழப் பெரும்பரவைத்துகில் மகளும்ப
ரிவாலேத்த, நிசாசரர் வேரறுத்தருளுமுகுந்தமாய நெடியவ பேராயிரமாய் நி
றைந்துதோன்றி, யசோதைமகனெனவரு வீராடீரூசலருந்ததிக்குங் கற்பளிப்பீ
ராடீரூசல். (உகசா)

கருமுகிலின் வடிவுடையீ ராடீரூசல் கமலமலர்க் கன்னிகையேயாடீரூசல்
அரவினடித்தருள்கழலீ ராடீரூச லமுதினெழு மனநடையீராடீரூசல்

பரவையினிற்றுயில்கொளுவீராடீரூசல் பரமபதத் தொளிருமினே யாடீரூசல்
ஒருமுதலா யுலகுடையீ ராடீரூசலுருக்குமணிநாயகியே யாடீரூசல். (உகஎ)

ஆனிரைமேய்த் துவந்தருள்வீ ராடீரூச லணிகலனுக் கழகளிப்பீ ராடீரூசல்
தேனுகனை முனிந்தருள்வீ ராடீ ரூசல் செங்கமல நாயகியேயாடீரூசல்
கூனிதனைத் தழுவிடுவீ ராடீரூசல் குண்டினமாநகர்க்கொடியேயாடீரூசல்
மீனுருவாய் விளங்கிடுவீ ராடீரூசல்விதர்ப்பனருள்மெல்லியலீராடீரூசல். (உகஅ)

சந்தனங்குங்குமம் பனிநீர்கமழவேதண்டரு மலரின்வெறிவீசச்சதங்கைகொஞ்ச
வந்தமுறுஞ் சிலம்பரற்றத்தண்டையார்ப்பவணிவீரக்கழலினவி ரருக்கன்மான
நந்துறுவெண் டரளமொடு மணிகள்மின்னநலமுறவேகத்தூரிநாமந்தோன்ற
விந்திரைமெய்புளகமுற வாடீரூசல் யாதவர்தங் குலக்கொழுந்தேயாடீரென்றார்.

வேறு.

பூமழை சிந்தினர் பொன்னுல குள்ளோர், நாமக டன்னொடுநாரிய ரெல்லாம்
பூமக ளாகிய பொற் கொடி யோடே, வாமனவாழுதிவாழுதியென்றார். (உஉ0)

கீதமிசைத்தனர் கின்னர மின்னார், வேதமிசைத்தனர் வேள்வியிழைப்போர்
போதினலத்துயர் பொற்கொடியாளோ, டாதியுமுற்றெளிரூசலினூடே. (உஉக)

அண்டர்கள்பாட வரம்பையராட, வெண்டவர் தாமுமிசைத்தனராகி
முண்டக மாதுடன் மூவுலகும்வா, யுண்டவ னம்பொனி னூசலினூடே. (உஉஉ)

காருதி மின்னிடையாள் கமலத்தேன் ,வாருதிவைகிய மாதவனோடுஞ்
சீருதியூசல் சிறந்தினிதாட, நாரதன் வீணைகொடாடினனன்பால். (உஉங)

ஒப்பில வீரறுநாம முயர்ந்தே, மெய்ப்பொலிவார் வனமாலை விளங்க
முப்புரி நூலணி மார்பினர் முக்கோல், கைப்புக வாடினர் சிந்தை களித்தே. ()

வடிவுடைமாதவன் மாமலர்வைகுந், துடியிடையாளொடு தோன்றுவகண்டே
குடையொடு தண்டிகைகொண்டவர் குந்து, நடையவ ராடினர் வேதநவின்றே.

சந்தன மோடுறு தண்பனி நீருஞ், சிந்திய மாதர்க ளாடினர் சேர
விந்திரை மாதவர் தம்முட னெய்தி, யந்தமொ டூசலமர்ந் தினிதாட. (உஉரு)

ஆரணமீதி னமர்ந்துறை யையன், வாரணமா முலையாளொடு மன்னித்
தாரணிமீ துறவேதவ ரெல்லாம், பூரணமாய் மறையாகி புகன்றார். (உஉஎ)

மாசகல் குண்டின மாபுரிமாது, மேசகனுந் துவரைக் கிறையும்மோ
ரூசலிலங்கிட வும்பர்கள் பொற்பூ, வீசிமகிழ்ந்து துதித்திடும் வேலை. (உஉஅ)

கைத்தல வாமலகக் கனிபோலத், தத்துவமே யுணருந்தவர் மாலாம்
வித்தகன் மாமண மண்டபமீதி, னித்திருவோடினி தெய்துகவென்றார். (உஉக)

மாதவர் சொல்லின் மகிழ்ந்தருள் மாயோன், போதினு யர்ந்தருள் பொற்கொடி
தன்னோ, டேதமி லம்பொனிலங்கும்விமான, மீதினுயர்ந்தனன்விண்ணவராட.

தித்தி யென்றொத்திய தாளமுடன்சேர், மத்தளி சச்சரிபேரி மலாரி
வித்தக மிக்குயர்சங்குகள் வேலை, யொத்த விரட்டல்களெண்டிசையுற்ற(உஙக)

மாதவன் வந்தனன் வாமனன் வந்தான், யாதவன் வந்தனனிந்திரை யென்னுங்
கோதையொடேதிகழ் கோமகன்வந்தான்,சீதரன்வந்தனனென்றனசின்னம்.

சின்ன முழங்கிட வேதிர டேவர், பொன்னவிர் நன்மலர் வீசிடவேபோய்
மின்னிய நன்மணி மண்டப மீதி, னன்னமொ டெய்தின ளுழியமர்ந்தான். ()

சோதியுறுந் தாளங்க டிலங்க, வேதமிலொண் மணியம்பொனி ழைத்தே
மீதுயர்நல் வயிரங்கள் விளங்கு, மாதன மெய்தினனன்னமொ டையன் (உ௬௪)

வித்துருமங் கனமேவிய காம, ரொத்த தெனத்திகழ் நீலமொடோங்கி
மொத்துறு நன்மணி போலமுகுந்தன், சித்தசனைத்தரு திருவோ டிருந்தான்.()

வேதமு ஞானமு மினிருவபோல, வேதமில் பூமக ளோடுமிலங்கி
மாதவ னுதனம் வைகிட வானோ, ரரதர வோடு மடைந்தன ரெங்கும். (உ௬௬)

கயிலைய னுமையொளிர் கலைமகள்கமல, னயில் விழியினள் சசியமரர்மனனைய
மயில் குயிலனமென வருமெழின் மடவா, ரியல்புற வரசர்களிருநில மிடைய.()

தூப நிறைந்தன தூநறு நெய்யின்
றீப நிறைந்தன சிந்தை மகிழ்ந்தே
சோபன மெங்கு முரைத்தனர் தோலாச்
சாப மெனும்புரு வத்தினர் தாமே. (உ௬அ)

கருப்புரதீப மெடுத்தொளி காண
நிரப்பினர் மாமணி நீலமிலங்கும்
பருப்பதமான பயோதர மின்னா
ருருப்பசி போன் மணமண்டப முற்றே. (உ௬௯)

சிந்தையின் மாநெறி சேர்வசு வேதன்
குந்தியு ரோகணி தேவகி கோதி
னந்தன சோதை யலாயுத னன்பால்
வந்தனர் மாமண மண்டப மீதின். (உ௭௦)

உக்கிரசேன னுதிட்டிர னீதி
மிக்குயர்வீமனொடே விசையன்முன்
புக்கிடமத்திரை புத்திரரெய்தச்
சக்கரர் பின்வரு சாத்தகி வந்தான். (உ௭௧)

அசட்டுறு மைம்புலன் வென்றருளில்லாக்
கசட்டுறு முக்குணமுங் கடிவோரின்
விசிட்ட வியாதனுடன் சுகன்மேவ
வசிட்டனும் யாழ்முனி தன்னொடும் வந்தான். (உ௭௨)

சித்திரநாணுமுருக்கு மணித்தேன்
தத்தையனா ளுயர்தேவகி தந்த
வித்தக னொரொடு நன்மண மேவ
வுத்தம மாமறை யோர்களு முற்றார். (உ௭௩)

சித்திரைமாதமொண் மான்றலைசேர்நா
ளுத்தம வாகிய வேறுத யத்தின்
மெய்த்திருமாலுட னன்மணமேவ
னெய்த்தரு வேள்வி நிறைத்தருள் கற்கன். (உ௭௪)

கோலமணிந்தொளிர் கும்பம் விளங்கி
மேலுய ரத்துய மண்டபம் விஞ்சச்
சாலவளர்ந்த தருப்பை சிறப்ப
நாலுதிசைக்கண் விரித்தனனன்பால். (உசரு)

மூப்ப னெனப்பல வாயர்கண் மொய்ப்ப
வாப்பல மேய்த்தரு ளச்சுதனுக்குங்
கோப் புயருங் கமலக்குயி லுக் குங்
காப்பு மணிந்தனர் கைத்தல மீதே. (உசசு)

நீலனன்மாமணியம்பொனிறைந்த
பாலிகைமீதுயர் வித்தொடு பாலே
நூலினர் தாம்விட நுண்ணிடை கொண்டே
சேலெனும் நீள்விழி மாதர் தெளித்தார். (உசஎ)

சாகர முற்றர விற்றுயில் சார்வோன்
கோகனகத் திருவின்னொடு கூட
வோகை மிகுத்தொளிர் கற்கனுவந்தே
யாகுதி மங்கலவங்கியி னுய்த்தான். (உசஅ)

சங்கமொ டேயுயர்தாரை யினோசை
யெங்கணு மல்கிட யாதவர் கோமான்
பங்கய மேலமர் பாவைகழுத்தின்
மங்கல நாணு மகிழ்ந்து தரித்தான். (உசகூ)

கங்கை தரித்தருள் கண்ணுத லாவோன்
செங்கையி னுற்றுயர் மண்டை சிதைத்தோன்
திங்கள் முகத் திருவின்னொடு சேர்ந்தே
மங்கல வங்கி முனோக்கி மகிழ்ந்தான். (உரு0)

மைம்முகி லொத்து மதத்தெதிர் வந்த
கைம்மலை யைக்கடி வானிருகைதன்
செம்மல ரொத்தொளிர் சேவடிபற்ற
வம்மி மிதித்தன ளம்புயமாதே. (உருக)

மற்பொரு தோளிடை மாதுலனை
வற்பனையே முனியாயர்கள் கோமான்
பொற்பெழ வில்லிடு பூந்திரு வோடே
நெற்பொரி யோம நிறைத்து மகிழ்ந்தான். (உருஉ)

நலனுறு மரகதமலையினை நத்துங்
குலனுறு நற்பவளக் கொடி போலக்
கலனுறு திருவரி கைவிரல் பற்ற
வலனுற வந்தனர் மங்கல வங்கி. (உருங)

மற்றுநெ யாகுதி யாவும் வழங்கி
விற்றிறல் மாதுவரைப் பதிவீர
னற்றிரு வோடு வயங்கிட நண்பார்
சொற்றன ராசிகயே மறையோரே. (உருச)

முழங்கின சங்கொலி வேதமுழங்க
முழங்கினபேரி முநீரொலி மான
முழங்கின வந்தர துந்துபி முந்த
முழங்கின மாதர் மொழிந்த பலாண்டே. (உ௫௫)

நீறணி கடவுளு நிறை கமலத்தே
வீறின தவமுனி சசிபதி விண்ணோ
ரூறின வுவகைய ரும்பரின் வாச
நாறிய தருமலர் சிந்தினர் நண்பால். (உ௫௬)

கயிலையி னுறைபவள் கலைமகள் சசியா
மயிலொடு முருவசி யிமையவர் மடவார்
குயிலெனு மொழியினர் கூறினர் பல்லாண்
டியல்புற வரிதிரு மணமுட னிலக. (உ௫௭)

சங்க மொலித்தன தாரைகள் சின்ன
மெங்கு மொலித்தன பேரி யிரட்டல்
பொங்கின குரைகட லோசை பொருந்த
வெங்கய முற்றெழுவிர் வீரர்க ளார்த்தார். (உ௫௮)

விண்ணவ ரார்த்தனர் மெய்ந்நெறி யார்த்த
மண்ணவ ரார்த்தனர் மாமறை யோதும்
புண்ணிய ரார்த்தனர் போர்மக ளாரும்
பெண்ணின ரார்த்தனர் பேரற மார்த்த. (உ௫௯)

தரள மெறிந்தன சாகரமேகத்
திரள்கள் பொழிந்தன செம்பொனின் மாரி
யுருள வுதைத்துரலோடு தவழ்ந்தே
யருளரி மாமல ரன்னமொ டெய்த. (உ௬௦)

நாரதனற்சுகனுன்மறை செய்தோன்
வாருதி பருகினன் பிறகு வசிட்டன்
பாருதி திருவொடு பரமன் வணங்கச்
சீருதி மறைமொழி செப்பினர் மகிழ்வால். (உ௬௧)

அன்ன மெனுந்திரு வோடரி தானு
மன்னவனல் வசுதேவன் மலர்த்தாள்
சொன்ன மலர்த் தனைதூவி வணங்கத்
தன்னிரு கைகொடு தழுவினன் மகனை. (உ௬௨)

சக்கர மோடியர் சங்கமு மேந்தி
நக்கர் கரப்பலி வீழ்த்திடு நல்லோன்
இக்கிரதச்சொலி னுளொடி றைஞ்ச
வுக்கிரசேன னுரைத்தன னுசி. (உ௬௩)

இந்திரை சுந்தரி யேழுலகீன்ற
கந்த மலர்க்கம லாசனி யோடு
மைந்த னெனுந்திரு மாலும் வணங்க
நந்தன னைத்தன னன்மக னென்றே (உ௬௪)

கலார மணிந் தருளிக் கமலத்தே
யுலாவிய மாமயிலோ டுழை யெய்த
விலானும் வணங்கிட மிகமகிழ் வெய்தி
யலாயுதன் பின்னவ னுகமணைத்தான். (௨௬௫)

கோவியர் கூறைகொள் கோவலனுந்தன்
றேவித னோடெதிர் சென்று வணங்க
வாவலின் மார்பினணைத்தன ளன்பாற்
றேவகி யாகிய வன்னை சிறந்தே. (௨௬௬)

கராவை முனிந்து கரிக்கருள் செய்தே
யராவணை வைகிய வச்சுதர் தாமுஞ்
சரோருக மின்னொடு தாளினி றைஞ்ச
வுரோகணி மார்பினணைத்தன ளுற்றே. (௨௬௭)

முராரியு முண்டக மின்னுட னேதா
னிரேவதி தாளினி றைஞ்சிட வின்புற்
றராவணை யார்க்குய ராசி பகர்ந்தே
குராவலர் குழல்பிறழ் கொம்பை யணைத்தாள். (௨௬௮)

விசால முடைக்கம லத்தெழு மின்னு
நிசாசரர் மாளவெய் நேமியர் தாமு
மசோதை தனடியினி றைஞ்ச வணைத்தாள்
பிசாசுயி ருண்டரு ளும்பெரி யோனை. (௨௬௯)

நந்தர் குலத்துள் வளர்ந்தருள் நல்லோ
னிந்திரை தன்னொடு மெய்தி வணங்கச்
சிந்தை மகிழ்ந்து திருக்கைக ளாரக்
குந்தி யணைத்தன ளாசிகள் கூறி. (௨௭௦)

மருவமர் குழலிதன் மணமது மேவி
யருகுறு மரிதனை யன்புட னுரத்
தருமன ணைக்கவி றைஞ்சினர் தாளிற்
பெருநல னெய்திய பின்னவர் தாமே. (௨௭௧)

அந்தண ராசி பகர்ந்திட வாயர்
வந்தனர் மாதர் களோடு மகிழ்ந்தே
யிந்திரை தன்னுட னேமண மெய்துஞ்
சுந்தர னைத்தொழு தேதுதி செய்தார். (௨௭௨)

அனமென மலர்மிசை யமர்பவ ளரியா
மனனொடு திகழ்வுறு மணமதின் மகிழ்வோ
ரினமலி யரசர்கள் பெரிதினி துறவே
தினமென வருபகல் செலவுறு நாளின். (௨௭௩)

திருந்த வளர்த்தனர் சேடமெ னேமங்
கருந்தட நேர்விழி யார்கலை கொண்டே
குருந்துறு வோன்கம லத்துயர் கொம்போ
டருந்ததி கண்டும கிழ்ந்தன னன்பால். (௨௭௪)

மற்று நெய்யாகுதி மால்வரு செய்கை
முற்ற முடித்தருள் கற்கனை முந்தி
விற்றெழுழின் மாதவன் மெல்லிய றண்டேே
யுற்று வணங்க வுரைத்தன ளுசி. (உஎரு)

ஆடின னாரத னந்தணர் நூலே
பாடினர் வானுறை வோர்கள் பரிந்தே
ஏடவிழ் மாமல ரெண்டிசை தோறு
மூடினர் துந்துபி பேரி முழங்க. (உஎசு)

வெண்ணெயுண் வித்தக னீதிரு மேவி
மண்மகள் பார மகற்றுதி வாழென்
றெண்ணய னன்விபு தர்க்கிறை மாலாம்
புண்ணிய னைத்துதி செய்தனர் போனார். (உஎஎ)

நிகரிலை யெனவுயர் சசியொளிர் நிலவை
யிகழ்நகை யொளிர்திரு மருமக ளெனவு
முகமொரு கணமெனவுரகணை துயில்வோன்
மகனென மகிழ்வுறு மனன்வசு தேவன். (உஎஅ)

அண்டர்க டிதிசெய வேயொளி ரம்பொற்
குண்டிகை தண்டமர் குடையொடு கோதி
லெண்டவர் மகிழ்வுற வுதவின னியல்பான்
மண்டல மெனவரு வோன்வசு தேவன். (உஎகூ)

நிறைகல னணிதுகில் செநெல்விளை வயலான்
கறவைகள் கரிபரி கனகமொ டவையும்
பொறையுட னறநெறி யறிபவர் புகலு
மறையின ரினிதுற வருளினன் மகிழ்வால். (உஅ0)

கரிபரி ரதமொடு கவிகைகள் சிவிகை
விரிகதி ரொளிநவ மணிகலன் விதமு
மரசர்கள் மகிழ்வுற வருளின னறிவாம்
வரிசையி னுயர்பவ னெதுகுல மகிபன். (உஅக)

திருமறு டெழிலுறு சமிரணன் மகனு
மருளொழி விசையனு மிருவரு மகிழ
வுருளொழி விரதமொ டுயர்கரி பரியு
மருளின னிருளகல் கலனொடு மறிவால். (உஅஉ)

வேறு.

சுந்தரத் தொளிர் கலன்களுங் கதிர்மணிக் குழுவுஞ்
சந்திரற் கொளி யுதவுறு தரளமாமணியு
நந்தகோபனும் விருப்புற வளித்தன னலத்தாற்
சிந்தையே மகிழ்ந்தருளிய தேவகி கணவன். (உஅ௩)

மற்றுமாயர்க டனக்குமம் மடந்தைமார் திரட்குஞ்
சுற்றுநற்றுகிர் சுடர்மணிக் கலன்களுந் துலங்க
நத்தினார்களுக் கன்னதே யளித்தன னலத்தாற்
கொற்றவன் வசுதேவனு மருணிறை குணத்தோன். (உஅச)

திரளமாமணிக் கலன்களுந் துகில்களுந் தவத்தோர்
திரள்கடேவியர் தமக்குமெய் வசிட்டர் தேவியர்க்கு
மரசர் மாதரா ரனைவர்க்கு மசோதைக்கு மளித்தாள்
குரவை கோத்தருள் புனிதனைப் பெற்றநற் கொடியே. (உ௮௫)

இறைதவிர்ந்திட வேழிரண்டாண்டு பாரெனவார்
பறையறைந்தன நவமணித்திர ளொளிர் பசும்பொ
னறைதிறந்திர வலர்களுக் களித்தனன் றிருவே
நிறையு முக்கிர சேனனுந் தரணியா ணிருபன். (உ௮௬)

அவனிமீதரி திருவொடு மணம்புணர்ந் தமருந்
தவமுமெய்தின மெனத்தரளத் தொடுமணிபொன்
னுவரிசூழ் நிலத்துளவிரவலர் தமக்குதவுந்
துவரைமா பதியோர் களிப்பினைச் சொலவெளிதோ. (உ௮௭)

பங்கயத் தமரனமொடும் பரம்பொருளவனி
தங்கியுத்தம மணம்புணர்ந் துயர்ந்தெழுசதிரா
லெங்குமுற்ற வேழுலக வருவகையு மெய்தத்
தங்கடங்கள் சேய்க்குறு நலனுமெனத் தழைத்தார். (உ௮௮)

இன்னதோர் நலனுலகமோ ரேழினுமெய்தத்
துன்னுநற் கமலத்தினிற் றோன்றியே துலங்கும்
பொன்னினொளொடும் புணரியி னமர்ந்தருள் புனிதன்
மன்ன னல்வசு தேவனற்குமரனு மகிழ்ந்தே. (உ௮௯)

பொன்னினன் கலத்தறு சுவையமுதமும் பொருந்து
மன்னமன்னமோ டருந்தியே யமரர்கள் பெருமான்
றுன்னுநன்மணங் கமழ்பனி நீரினுற் றுலங்கு
மின்னெனும் மருங்குடைத் திருவொடு கரம்விளக்கி. (உ௯0)

குங்குமம் பனிநீரினுற் கருப்புரங் குழைத்தே
யெங்குநன்மணச் சந்தனமணிந்து தண்மலரும்
பங்கயத்தவள் கருங்குழற் சூட்டினன் பரமன்
எங்கணுயக னயனொடெவ்வுலகமு மீன்றோன். (உ௯௧)

வாயுநன்பொனின் மஞ்சன மரகத வயிரந்
தூயநன்மணி வயங்கிடத் தீவிகை துலங்க
வாயுநன்மலர் கருப்புர வெறிகமழ்ந் தழகார்
பாயலெய்தினன் கமலநற் றிருவுடன் பரமன். (உ௯உ)

உருக்குமற் கிளையாளுலகளந் தவனுடனே
செருக்கு நன்னலன் காண்குவா னிருளறச் சிறந்தே
யருக்கனற் குணக்கடலிடை வயங்கிடவறையு
மிருக்கொடர்க்கிய மளித்தன னியாதவர் பெருமான். (உ௯௩)

துன்னுமாமணித் திரள்களுந் தரளமுந் துலங்கும்
பொன்னினு தனத்தலையுறும் பாற்கடல் பொருந்தும்
பன்னகாதிப வணையின்மேற் றிகழ்ந்தபோற் பரமன்
மின்னினொளொடும் வீற்றிருந்தனன் றிசைவிளங்க. (உ௯௪)

நீல்மாகிரி பவளநற் கொடியொடு நிறைந்த
கோலமாமெனக் கமலமா மகளுடன் கூடி
யாலின்மே லமர்ந்துலகெலா நுங்குமச் சுதனூர்
சீலமாமணி யாசனந் திகழ்வுற விருந்தான். (௨௯௫)

விடவரா மணித்திரள்களும் வயிரமும் விளங்கி
யடைய மேதகத் தமனியத் தமைந்தொளி ரழகே
தொடர வெண்டரளத் திரளொளிகளுந் துலங்குங்
குடைபொலிந்த வெண்மதிகலை கூடியதொப்ப. (௨௯௬)

சோமனைச் சடைசுமந்தவன் றுயரமதகற்றித்
தாமரைக்குணற் றிருவொடு முரகன்மேற் சார்ந்து
காமனைத் தருமுகுந்தன்மேற் கயல்விழி மடவார்
சாமரைத்திரள் பரப்பினர் நிலவொளி தழைப்ப. (௨௯௭)

சூலம்விட் டெதிரிராவணன் சிரங்களைத் துணித்தே
யோலமிட்டநற் கரியினுக் குதவுவோ னுவப்பக்
காலன்விட்ட வேலெனும் விலோசன மினார்களித்தே
யாலவட்டங்கள் கரம்பிடித் தசைத்தன ரறிவால். (௨௯௮)

கோபருக்கெளி தானவனுமையொரு கூறன்
சாபமிற்றுக முறித்தவன் றிருவொடு தழைப்பத்
தீபநற் கதிரொளியென வெடுத்தசேல் விழியார்
சோபனத்துரை யமுதினிற் சுவையெனச் சுரப்ப. (௨௯௯)

முழவு தண்ணுமை சச்சரிதாளங்கண் முழங்க
விழைகொள் கொங்கையி னிலங்கிட விளநகை வயங்கக்
குழையசைந்திடச் சிலம்புகள் சிலம்பிடக் கொடிகொ
ளுழையினேக்கிய ருருப்பசி யொதுங்கவே நடிப்ப. (௩௦௦)

வில்லைநேர் புருவத்தினை நெறிக்கிலார் விஞ்சு
மெல்லுலாவிய துகிலைநே ரிலவிதட் டடியார்
வெல்லும் வேல்விழி யிமைக்கிலார் கந்தரம் விம்மார்
வல்லிநே ரிடைமாதரார் மதுரயாழ் பகர. (௩0௧)

கோசிகத்தவன் வசிட்ட னாரதன் குறுமுனியோ
டாசகற் பதினெண் புராணங்களு மறைய
மாசறக்குண மறையவ ராசிகள் வழங்கு
மோசை திக்குற வுக்கிர சேனனு முவப்ப. (௩0௨)

ஆழிமே லரவிற் றிருவுடன் றுயிலமல
வேழமுன்வரு வித்தக விதர்ப்பர்கோ னருளும்
ஏழையா மலர்க்கமலமா மகளுட னென்றும்
வாழிவாழியென் றுரைமறை மங்கல மலிய. (௩0௩)

சமனிலாதவிற் புருவமுந் தாமரைக் கண்ணு
மமலனூர் திருமுகமும்புன் முறுவலி னழகு
மிமைசெயா மலர்க்கண்களா லெழிலுற நோக்குங்
கமலநாயகி யுரோமமெய் பொடித்துளங் களிப்ப. (௩0௪)

வேயிருந்தடந் தோள்களும் விளங்குபூணகிலுந்
தூயசுந்தர வதனமுந் துலங்குவா ணகையும்
பாயுநல்லுழை விழிகளும் வயங்கு பங்கயத்தின்
சேயமங்கையை நோக்கி மாறிருவுளமகிழ. (௩௦௫)

சீரினேர் கமலாசன னிமையவர் சேணி
னுருமா மழைபொழிந் தெனவலர் மழை சொரிய
வாரிசூழ் துவராபதிக் கிறைவன்மா முகுந்தன்
வேரிமாமலர்ப் பாவையோ டினிதுவீற் றிருந்தான். (௩௦௬)

காசுலாமுலை யுருக்குமணிச் செழுங்கனியை
வாசுதேவனார் மணம்புணர்ந் தருளுமாக் கதையை
யாசையோ டினிதுரைப்பவர் கேட்பவ ருளே
வீசஞானமோ டெய்வர் பேரின்ப வெள்ளத்தே. (௩௦௭)

## ஸ்ரீ உருக்குமணி நாச்சியார் திருக்கலியாணப்படலம்.

முற்றிற்று.



ஆ. திருவிருத்தம் ௩௱௭.



ஸ்ரீருக்மணீ சமேதாய நமோநம:



ஸ்ரீ

விஷ்ணுமயம்.

௮௰-வது சாம்புவதியார்

# உ. திருக்கலியாணப்படலம்.



சுத்தனும் பிரசேனன் றனைவதைத்த மடங்கலைத் தொலைத்த சாம்புவனை
யொத்தியே மற்போர் பொருதுவென் றிழைமெய் யொளிகொள் சாம்பவதி தன்
னுடனே, யத்திசூழ் துவரையணுகி நல்லவிர்சால் *சிமந்தக மணியினை யன்பாற்
சத்திராசித்துக் களித்தவன் மகளை மணஞ் செய்த தலைவனைத் துதிப்பாம். (௧)

வேறு.

வீரிய விதர்ப்பனல்கு மெல்லியறனைத் தேரேற்றிச்
சூரனு யெதிர்ந்துவந்த வுருக்குமன் றலையமோதி
யாரியனமரின் வென்றே யமரர்வான் மலர்கடூவ
வாரிசூழ் துவரையெய்தி மணம்புணர்ந் திருந்தநாளில். (௨)

* சிமந்தகம் சமந்தகமெனவுமாம்.

குந்திதன் மைந்தரோடுங் குருடன்மா பதியையெய்தத்
தந்திமா வுடன்றேர் வந்த நிருபர்தம் பதியிற்சார
நந்தனு மசோதைதானு நலனுறு பாடி சேர
விந்திரை யுடனேமாய னிலங்கியே யிருக்கும் வேலை. (௩)

தண்கடிமலர்க் கானேகிச் சத்திராசித்து மன்னன்
பண்புடை யலரியோனைப் பற்றியே தவஞ் செய்காலை
விண்கவி னுறவே தோன்றும் வெய்யவ னருளினோக்கி
யெண்கல மாழையீனுஞ் சிமந்தக மணியையீந்தான். (௪)

தீதறத் தவந்தான் செய்யச் சிமந்தக மணியையன்பாற்
சோதிசெய் தபனனீயத் துலங்கிட வுரத்திற்பூண்டே
யேதமிறுவரைதன்னிற் சத்திராசித் தாண்டெய்த
வாதவ னிலத்தின்வந்தா னென்றரிக் கறைந்தார்மாதோ. (௫)

அக்கணஞ் சத்திராசித் தரியின்பா லெய்தலோடுஞ்
சக்கரக் கையானிந்தச் சிமந்தக மணியைத்தக்கோ
யுக்கிரசேனற் கியென் றுரைத்திட மறுத்து வேந்தன்
புக்கனன் றமர்களோடும் பொன்னவிர் கோயிறன்னில். (௬)

மானவன் சிறிது நாட்டான் கழித்தபின் வையமீதிற்
கானிடை மிருகவேட்டை காண்குவான் களிப்புட்கொண்டே
சேனைகள்சூழப் பேரி முழங்கிடச் சின்ன மார்ப்ப
வூனுகர்கிராத ரெல்லாமுற்றிட வேகுங் காலை. (௭)

தீவந்தினகரன் பாற்செய்த சத்திராசித்து மன்ன
னுவந்துநற் பிரசேனப்பே ரனுசனையுற்று நோக்கி
நிவந்தொளிர் மணியையீந்து நீயெழிற் பரியினேறித்
இவந்தனின் மிருகவேட்டை சேறியே மீடியென்றான். (௮)

அன்னவ னுரைத்த லோடு மன்பினாற் பிரசேனன்றான்
மன்னவன் வசுதேவன்றன் மைந்தனை வணங்கித்தூய
மின்னிய வயிற்கை யோங்க விரைவினிற் பரியினேறித்
துன்னிய வதரிபாண்டிற் றுலங்கிய கானிற்சென்றான். (௯)

அரிநெடுந் தேரின்மீதி னமர்ந்துற நோக்கலோடு
மிரலைக ளசங்கள்கட்க மிபங்களை யெல்லாம்பற்றி
யுரனுற மகிட மெண்கோ டுழுவை பஞ் சானனங்க
டரையிடை மடியமோதித் தானைகள் பரவுங்காலை. (௧௦)

அயமிசை யேறியாண்டு மடர்ந்திடும் பிரசேனன்றான்
பயமிலா தெதிருங்கேழல் கரியரி பரந்தவெல்லாங்
கயினுறு மயிலினாலே கண்டதுண் டங்களாக்கி
யுயர்குழைச் சாலமோங்கும் பழுவத்தி னுற்றகாலை. (௧௧)

முழையினின் றெழுந்துவந்த முடங்குளை சீறிக்கண்க
ளழலுற விழித்துநோக்கி யயத்துட னரசன்றன்னைப்
பழுவமீ துடல் போய் வீழப் பாய்ந்தவ னுரத்தின்மீதி
னெழிலுறு மணியைக்கவ்வி யிருநிலத் தேகிற்றம்மா. (௧௨)

விண்கதி ரவனைப் பற்றிப் பாறும் வெவ் வரிவுபோலக்
கண்கன லுறத்தான்மின் னுஞ் சிமந்தகம் வாயாற்கவ்வி
மண்குழை வுறவேயோடு மடங்கலை வதைத்துத்தூய
வெண்கினுக் கிறைவனந்த மணியைக்கொண் டேகினானால். (௧௩)

வனங்களிற் பரவுவேடர் வலைகளைப் பரப்பி யெங்கும்
புனங்களிற் றிரியுங் கோலம் புண்டரீகங்க ணவ்வி
யினங்களைத் தடுக்கவேலா லெறிந்தெய்தும் பொதுவர் மாதர்
தனங்களை விரும்புமாய னுவந்திடத் தந்தார் வீரர். (௧௪)

குடதிசைக் கடலின்வெய்யோன் குளித்தலு மாயரில்லிற்
கடமுறு வெண்ணெய் நெய்பாற் களவுசெய் தருந்துங் கண்ணன்
மிடலுடை வீரரோடு மிருங்க டம்மை வீழ்த்துத்
துடிகைகா ளங்களார்ப்பத் துவரையி னடைந்தான்மாதோ. (௧௫)

அனைவரு மெய்தவேதன் னனுசனைக் காணாகித்
துனியுறு மனத்தனை சத்திராசித்துச் சோர்ந்தே
தனமுமிழ் சிமந்தகத்தைச் சக்கரன் கேட்டபோதின்
வினையினேன் கொடாதேயெம்பி மாண்டனன் விதியாலென்றான். (௧௬)

கிளைஞரோ டழுதுசோர்ந்தே கேசியை வதைத்தானாலே
யிளைஞன்விண் சேர்ந்தானென்று சத்திராசித் தங்கேங்க
வளவில்வெந் துயரமெய்தி யரிவைய ரறைந்த வெல்லாங்
களைகணா யுலகங்காக்குங் கரியவன் கேட்டான் மன்றோ. (௧௭)

தினகர னுதயமாகத் தேவகி குமரனான
வனகனக் குரூரனோடு மாதவ னருளா லீந்த
கனகமின் மணியைப்பெற்ற காவலன் கிளைஞரோடுஞ்
சினமுறு மடங்கலெண்கு சேர்ந்தமா வனத்திற் சென்றான். (௧௮)

பரிகுரச் சுவட்டின்பின்னே பார்மிசைக் கடிதினேகித்
தரையினி னயத்தினோடு மடிந்தவன் றன்னைச்செற்ற
வரிசெலு மடியைநோக்கி யவனியின் விரைவி னெய்திக்
கிரியரு காகமாண்டு கிடந்தகேசரியைக் கண்டான். (௧௯)

மீளியைக் கொன்றுவீழ்த்து விரைவினி னேகு மெண்கின்
றாளினிற் குறியைநோக்கிச் சார்ந்திடப் பிலத்தினுள்ளே
கோளரி தன்னைச்செற்ற கொடிய *வல்லூகநாடி
வேளினைத் தருவோனெய்தும் வேந்தரை யிருத்திப்போனான். (௨0)

வரையினிற் பிலத்தினுள்ளே மாயவன் விரைவினெய்தி
யரிமலர்ச் சோலையின்க ணம்பொனி னூசல்மீதே
தெரிவையர் சூழவாடெண் களித்தமின் சிறந்தமார்பி
னிரவியி னவிர்போற்றோன்று மெழிலுறு மணியைக் கண்டான். (௨௧)

கண்டனன் மணியைமாயன் கவருமுன் சாம்பனெய்தி
யெண்டிசை நடுங்கவார்த்தே யெண்முன ரெதிருமாற்ற
லுண்டுகொல் மடியாதிங்ங னேடுதி மணிதாவென்ன
வண்டமுண் டருளுமாய னகையுட னெதிர்த்தா னன்றே. (௨௨)

---

*கரடி.

## வேறு.

மூட்டினர் கையை முறுக்கி நிலத்தே
கிட்டினர் நெஞ்சழ லக்கிரி போலே
யொட்டினர் வாயை மடித்துற மெய்யைக்
கட்டினர் குத்தினர் கட்கனல் பொங்க. (உ௩)

உரத்தி னடித்தன ரோங்கி யெழுந்தே
கரத்தொடு கையுற வேகனல் சிந்தச்
சிரித்தனர் வெம்புகை தீயுற வெண்கின்
விருத்தனு நேரில மாலும் வெகுண்டே. (உ௪)

அதிர்த்தனர் சாரிகை மாறி யடர்ந்தே
குதித்தனர் வெம்புகை கொண்டெழு கண்ணர்
மிதித்தனர் மாமரம் வேர்பறி யத்தா
மெதிர்த்தன ராலிரு பத்தினொ டெண்ணாள். (உ௫)

எண்கினின் வேந்த னெதிர்த்திங்ஙன் மோதக்
கண்கன லூற்றிட வேயொரு காலான்
மண்கொளு மாயவன் வண்கை முறுக்கிப்
புண்கொள வன்சிர மீதுபுடைத்தான். (உ௬)

நறுந்துள வன்னகை யோடு புடைப்ப
மறிந்தன னெண்கினின் மன்னவன் மண்மே
லிறந்திலன் மீளவெழுந் திவன்மாலென்
றறிந்திரு கைதொழு தாடி யுரைப்பான். (உ௭)

## வேறு.

மழைமுகில் வண்ணவுன்னை மாலென வறியாதிங்ங
னிழிகுலத் தாயவெண்கா யுழலுவே னெதிர்த்துச் செய்த
பிழைபொறுத் தருடிநாயேன் பெருந்தவஞ் செய்தேனுகி
முழையினுள் ளிருந்தேன் முன்னர் முதல்வநீ தோன்றினையால். (உ௮)

விலங்கலால் வேலைகட்டி விறலுடை யிராமனுகி
யிலங்கையி னிருதர் கோனை வதைத்தபி னயோத்தி யெய்தி
நலங்கிளர் சோதி தன்னி லேகுநீ நாயினேனைக்
கலங்கலை யுன்மு னெய்திக் கதியினை யருள்வே னென்றாய். (உ௯)

ஆதவி னடியேனுக்குன் பதத்தினை யருள்வாயென்று
பூதலத் திறைஞ்சிப் போற்றிப் பொன்மனை புகுந்து தானே
மாதவ மதனுற் பெற்ற மங்கை சாம்பவதி தன்னே
டேதமின் மணியுங்கோடி யென்றெண்கின் வேந்தனீந்தான். (௩0)

கடலினைக் கலக்கிமுன்னுட் டிருவுடன் கவுத்துவத்தை
மிடலுடன் பற்றிக்கொண்டான் மீளவுமெண்கின் வேந்த
னுடலினைக் கலக்கித்தூய சிமந்தக மணிதனேடு
மடமக ளனையுங்கூட வாங்கியே மகிழ்ந்தான்மாதோ. (௩௧)

ஆம்பல்வாய் தசனமார மளகமே கந்தோடுய்ய
காம்புக ணிலங்குநல்வேற் காதுநாளிகங்கை காந்தள்
கூம்பிய குமிழொண்மூக்கு கொடியிடை யிவைசேர் கொம்பாஞ்
சாம்பவன் மகளைக்கண்ட மாலுமா லானுன்றனே. (௩௨)

சாம்பவன் றன்னை நீதான் பரகதி சார்தியென்றே
பாம்பின்மே னடித்தகோமான் பகர்ந்தவன் பயந்தகொம்போ
டேம்பலோ டெய்தும்வேலை யிரும்பில வாயினின்றோ
ராம்பரிசுணரார் கண்ணன் மீள்கில னந்தோ வென்றார். (௩௩)

என்றிடருழந்து மாயோன் மீள்குவதில்லை யென்றே
நின்றிலா ரொருவினுர்போய் நெடுங்கடற் றுவரையெய்தி
மன்றலர் துளவினுனீள் வளையினுட் பிலத்தினேகி
யின்றளவுந் தான்மீளா னினிவரத் தில்லையென்றார். (௩௪)

மாயவன் வாரானென்று வந்தவ ரியம்பலோடுந்
தாயருந் தந்தைதானுந் தாலகே தனனுமிக்க
நேயமாம் விதர்ப்பன்பெற்ற நேரிழையாளும் வீழ்ந்தே
மாயவா வென்னும்வேலை மாதவன் வந்தான் மன்னோ. (௩௫)

எழிலுறு மணியையெண்கின் வேந்தன்றா னீய்ந்ததெல்லா
மழுதழு திரங்குகின்ற சத்திராசித்துக் கன்பாற்
குழகனுண் மைத்துக்கையிற் சிமந்தகங் கொடுத்துப் பின்ன
ருழைமருள் விழியினுளோ டொண்மனை புகுந்தா னன்றே. (௩௬)

தந்தையைத் தாயர்தம்மை வணங்கினன் சக்கரத்தோன்
சிந்தையிற் றுயரமாறித் திருமகளடியில் வீழ்ந்தா
ளிந்துநேர் வதனத்தெண்கின் பாவைசென் றிறைஞ்சலோடுஞ்
சந்திர வண்ணனன்னை தேவகி தழுவினுரால். (௩௭)

பல்லிய முழங்கத் தேவர் பன்மலர் தூவி யேத்த
மெல்லியர் பல்லாண் டோத விளங்குதீ பங்கள் சூழ
நல்லியற் கற்கனெய்த நவையறு சாம்ப னல்கும்
வல்லியோ டொருபீடத்தின் வயங்கினன் மாயன் மாதோ. (௩௮)

ஓமநான் மறைகளோதி யொளிருமந் தணர்கள் செய்ய
வாமனன் சாம்பனல்கும் மங்கைதன் கந்தரத்தின்
காமர்மங்கல நாண்சாத்திக் கனல்வல மாகவந்து
மாமலர் குழலியம்மி மிதித்திட வடமீன் கண்டார். (௩௯)

இருக்கறைந் திலங்குகின்ற கற்கனை யிறைஞ்சி யேகித்
தருக்குறு மெண்கின் வேந்தன் றனையள்சாம் பவதிமின்னு
ளுருக்குமற் கினையாடாளின் வணங்கியே யுவகை யோங்கத்
திருக்கற வெழில்கொள்வாசு தேவனோ டிருந்தா ளன்றே. (௪0)

சாம்பவதியார் திருக்கலியாணப் படலம்

முற்றிற்று.

ஆ படலம் ௨ - க்குக் கூடிய திருவிருத்தம் ௩௪௭.

ஸ்ரீ

விஷ்ணுமயம்.

அ௧-வது சத்தியபாமையார்

# திருக்கலியாணப்படலம்.



ஆதியா யுண்டமுற்று மயின்றுமிழ்ந் திடந்தளந்த
சோதியாய்ச் சுருதியாலுஞ் சாங்கியந் தனினுந்தோன்று
நாதனாய் நளினமாதி னாயகனாகி மெய்யாய்
நீதியாய் நெறியாய்நின்ற நிமலனை வாழ்த்துநெஞ்சே. (௧)

ஏடவிழ் மலர்மின்னனை விந்திரை சாம்பனல்கும்
பீடுடை யரிவைசூழப் பெருநல னுற்றுவென்றித்
கோடுடைக் கரன்வீரனுங் கொடியுடை வரதன்மேவு
வாடுறு வலங்கன்மார்பன் வல்லுற விருந்தநாளின். (௨)

மருவிலா வெம்பிதன்னை மடங்கறுன் வதைத்தாண் டேகக்
குறைவிலா முராரிசெற்றுச் சியமந்தக மணிகொண்டா னென்
றறிவிலா துரைத்தேனென்று சத்திரா சித்தாமன்ன
னிறைவனு மாயன்றன்பா லெய்தியீ தியம்பு வானால். (௩)

சித்தசன் றந்தையான சீதரன்றன்னை நோக்கிச்
சுத்தநற் றவத்தனாய சத்திராசித்துச் சொல்வான்
வித்தக யான்றுன்பெற்ற மெல்லியல் விந்தை போல்வாள்
சத்திய வாமைதன்னைத் தருகுவனுனக்கென்றானால். (௪)

அந்தநல் வசனங்கேட்டே யச்சுதன் விருப்பமெய்தச்
சிந்தையின் மகிழ்வினோடுந் தேவகி கணவ னென்றன்
மைந்தனு மாயனுக்குன் மகளெழில் வடிவுமிக்க
சுந்தரி தன்னையீத னன்றெனச் சொல்லினானால். (௫)

மன்னவன் வசுதேவன்று னுரைத்தலு மகிழ்ந்துவேந்த
னன்மணஞ் செய்யநன்னு ணவிலுமென் றுரைத்தலோடு
மன்னமென் னடையினாள்கை யச்சுதன் பற்றிவாழ
வின்னலின் முகூர்த்த மின்றென் றந்தண ரியம்பி னாரால். (௬)

வேதியர் கூறக்கேட்டுச் சத்திரா சித்தாம்வேந்த
னோதைநல் லுவரிதன்னி லெழுமமு துண்டா ரொத்துத்
தீதகல் கோயிற்புக்கான் சிறந்திடும் பூகங் கன்னல்
வீதிக ணிறையவெங்கும் விளங்கிட நிறைத்தார் மாதோ. (௭)

மகரதோ ரணங்க ளோடும் வயங்குகம் பலம் வானோங்க
நிகரில்பொற் குடங்களெங்கு நிறையச்செந் தீபந்துன்னச்
சிகரநன் மணிவில்வீசச் சிறந்தலர் மாலைநாலப்
புகரில மிவுளிபொற்றேர் பொலிந்தன வீதியெல்லாம். (௮)

நித்தில நகையாள்பச்சை நிறத்திஞ ணீண்டகண்ணி
தத்தைபோன் மொழியாள்காந்தட் டடக்கையாள் வேய்கொ டோளாள்
சித்திரம் பழித்தமெய்யாள் சிலையெனு நுதலாள் சீராஞ்
சத்திய வாமைவண்மைச் சந்திரா சித்தன்பாவை. (க)

இன்னல னெய்தவோங்கு மிமையவர் பதியினெய்து
மின்னிடை மடவார்நாண விளங்கிய வமுதம்போல்வா
டன்னிகரற்ற வேற்கட் சத்தியவாமை யென்னுங்
கன்னியை வனைதல்செய்வான் கவினுறு மடவார் சூழ்ந்தார். (கo)

எண்ணரும் விண்ணின்மீதி னிழிந்திடு நதியினீர
மொண்மலர் வாசம்வீசுங் கருப்புர மாரமுற்ற
தண்பனி நீரின்வண்மைச் சத்தியவாமை யோங்கு
மண்மகளாயமங்கை மஞ்சன மாடினளால். (கக)

*இரணியம் வயங்குநீவித் துகிலுட னிலங்கத் தாளிற்
பரிபுரம் பாதசாலம் பரியகம் வயங்க மாழை
விரசிய கலாபவஞ்சி நுசுப்பிடை விளங்கச் சாம
வருணமா ரளகந்தன்னின் மருமலர் சூட்டினரால். (கஉ)

சிந்துரத் திலகந்தீட்டிச் சிவந்தநன் மணிகளான்ற
சுந்தரத் தோடுங்கொப்புந் துலங்கிய காதிற்றேன்ற
கந்தரத் திலங்குகின்ற கலன்கணற் கவினைக்காட்ட
நந்தொளிர் வயிரமின்னுங் கடையநற் கரத்தினிட்டார். (கங)

நளினமென் முகைபொற்செப்பு நாணவே யரும்புங் கொங்கை
வளமுறத் தரளநீல மணிகொடா வடங்க ளோங்க
மிளிரும்வே னயனந்தன்னி லஞ்சனம் விளங்கிக் காட்டத்
தளிரடி மடந்தைநின்று டாமரை யாளுநாண. (கச)

பொற்புற வயங்குகின்ற பூங்கொம்பு பொலிவபோல
விற்புரு வத்தினங்கை விளங்கிய செயலைக் கண்டே
கற்புடை மடந்தமார்கள் கருப்புர தீபங்காட்டிச்
சொற்பகர் கிளியனுண்முன் சோபனம்பாடி னரால். (கரு)

பொன்னவிர் கால்களோங்கப் புதுமணியினங்க டுன்ன
மின்னுபொற் குடங்களெங்கும் விளங்கிய வூசன்மீதிற்
சின்னநன் மலர்கள்பூத்துத் திகழ்திருக் கொம்பாமென்ன
வன்னமுநாண வெய்தியமர்ந்தன ளவனிமின்னே. (கசு)

வாசநாண் மலர்களெங்கும் வானவர்பொழிந்து வாழ்த்த
வீசுசாமரைகண் மல்கவிளங்கு துந்துமிக ளார்ப்பக்
காசினியோர்க ளேத்தக்காலினின் ஞெகிழிபம்ப
வூசலினுடினுண்மின் ஞெண்மணி வடங்களாட. (கஎ)

இந்நலனெய்தி நங்கையினியபொன் னூசலாடத்
துன்னியகரிதேர்வீரர் துரகமண் ணிறைந்துசூழப்
பொன்னவிர் கவிகையோங்கப் புகரிபவெரிநின் மீது
மின்னியமுகிலே போலவிளங்கிய விமலன்வந்தான். (கஅ)

*இரணியம் வயங்குநீவித்துகில்=பொற்சரிகை விளங்கும்கொய்சக முற்றதுகில்.

திடிகைமா முரசந்தக்கை துந்துமி கறங்கவேறற்
கொடிகுடை கவரிமல்கக் கொம்புகா ளங்களார்ப்ப
வடவரை யுச்சிமீதின்வயங்கிய மேகம்போற்றன்
னிடர்களை வான்முனெய்த மகிழ்ந்தனளெழில்கொ ணங்கை. (கக)

மும்மத விபத்தின்மீது முன்னின்ற முராரிதோளிற்
செம்மைசேர் வனசமாலை சிறந்திட வெறிந்தாளன்னங்
கைம்மலைதன்னைக் காத்தோன்களித்துயர் கழுநீர்த்தொங்கல்
விம்மிய முலையினுடன் விளங்குகந்தரத்திற் சேர்த்தான். (உ0)

அந்நலங்கண்ட வானோரரம்பையர் முதலோராடப்
பொன்னவிருசன்மீதிற் புயலென வெய்தியேதான்
மின்னிடை யணங்கினோடும் விளங்கிட வூடச்சூழு
மன்னவர் மடந்தைமார்கண் மகிழ்வுட னேக்கினூரால். (உக)

பரிவுட னுண்டுகொன்று பதத்தளந்திடந்து காட்டி
யிருசிர மதனாலேந்தி யிலங்கியதுடையின் வைத்தும்
புருடவுத்தமன் மாறீராணகியே புவிமான்மீண்டு
மாசரில் லடைந்தாளோடு மூதன் மீதாடினூனல். (உஉ)

அன்னவளோடு மாயனந்தண ராசிகூறத்
துன்னு தூணயுதஞ்சூழ்ந்து துலங்குமா மண்டபத்தின்
மின்னுமொண் மணியினங்கள் விளங்குமா தனத்தின்மீது
பொன்னெடுங் கவரிவீசப் புயலென விருந்தான் மாதோ. (உரு)

சுத்தனுங் கற்கனோமந் துடங்கியாகுதிதான் செய்யச்
சத்தியவாமையென்னுந்தத்தைதன் கந்தரத்தின்
சித்தசன்றன்னைத் தந்தோன் சிறந்தமங்கலநாண்சாத்த
வுத்தமிபாதத்தம்மி மிதித்தன ளுவகையோங்க. (உச)

மாயவனவனியாய சத்தியவாமை யோடுந்
தேயுறவை வலமாய்வந்து சிறந்தருந்ததியை நோக்கித்
தூயமா மறையோராசி சுரந்திடவிமையோர் வாழ்த்தத்
தாயரையிறைஞ்சித்தந்தை தாளிணைவணங்கினூனல். (உரு)

மாமிமார் தாளில்வீழ்ந்து சத்தியவாமை வண்மைக்
காமனைத் தருவாள்காலினிறைஞ்சியே கருணைமல்குஞ்
சோமனை நிகர்க்கும்வண்ணன்றேவியை வணங்கித்தூய
பூமனைத் தந்தானோடும் பொற்புற விருந்தான்மாதோ. (உசா)

அருணன்றனனுச னூர்தியாகவே மகிழுமாயோ
னிரணியக்கலத்தினன்னமருந்தியே யின்பமெய்தி
வருணமார்மணிபொற் கட்டிலெய்தி மன்மதனுநாணத்
தாணிமின்னுடனல் லின்பந்தழைத்தினி திருந்தானன்றே. (உஎ)

## சத்தியபாமையார் திருக்கலியாணப்படலம்.

முற்றிற்று.

ஆ படலம் கூ-க்குக்கூடிய திருவிருத்தம் கூஎச.

ஸ்ரீ

விஷ்ணுமயம்.

அ௨ - வது சததன்னுவா

# வதைப்படலம்



நவையகல்சிந்தையோடுநற்கனியெல்லாம்வைத்துச்
சுவையுறநுகர்தியென்னாத்தொழுதின்பமெய்தினின்ற
சவரிக்கன்றுயர்வீடீந்ததசரதராமன்றாளிற்
பவமொடுபிறப்பிறப்புப்பற்றறப்பணிவோம்யாமே. (௧)

ஆறனுறுமக்குரூரனலாயுதனுத்தவன்றா
னெறியுறுவசுதேவன்னோடளப்பிலாநிருபர்சூழ
மறுவிலாமணிப்பொற்றூண்கள்வயங்கியமண்டபத்திற்
கறையடிதன்னைக்காத்தோன்கவினுறவிருக்குங்காலை. (௨)

படவரவுயர்த்தோன்றாதைபணியினால்வந்ததூதர்
கடமுறுகரியைச்செற்றகண்ணனையிறைஞ்சியேத்திக்
கொடிநிறைவாரணாசிதனிலைவர்குந்தியோடு
மடரனலுறவரக்குமனைதனிலவிந்தாரென்றார். (௩)

இறந்தனர்குந்தியோடுமைவர்களென்றபோது
மறைந்தவருய்ந்துபோனாரென்பதுமாயவன்றா
னறிந்திருந்தறியான்போலவருள்செறிதாதைதன்னை
யுறுந்துயரதனால்வாடியுற்றணைத்தழுதானம்மா. (௪)

மைத்துனமார்களன்னைதன்னோடு மடிந்தாரென்றே
வித்தகனிரங்கியேங்கிவிடவரவுயர்த்தவேந்தன்
சித்தமார்துயரநீக்கிச்சிந்தைநோய்தீர்வேனென்னா
வத்தினாபுரத்திற்றேர்மேலச்சுதன்சென்றானம்மா. (௫)

அரியிரதத்தினேறியத்தினாபுரத்திற்செல்ல
வுரகமீதுயர்த்தகோமானுற்றவனெதிரேசென்று
பருவரலெய்துவான்போற்பரமனைத்தழுவலோடு
மிருவருஞ்சிந்தையுள்ளின்களிப்புறவிளங்கினாரால். (௬)

கருமுகில்வண்ணன்மாயன்கட்செவியுயர்த்தகோவை
யருவினையாவராலுமகற்றொணாததனாலைவ
ரெரியினிற்குந்தியோடுமிறந்தனரென்றிங்கெய்துந்
தெருமரலொழிதியென்றேசெப்பியாண்டிருந்தான்மன்னோ (௭)

வீடுமன்விதுரன்கன்னன்விமலன்றாளிறைஞ்சிநிற்பச்
சேடுடைத்துரோணன்சேயோடெய்தியேயாசிசெப்பக்
கோடுகையேந்தினானைக்கண்ணிலான்குறுகித்தீயின்
வீடினர்புதல்வரென்றுவிழ்மியேயழுதான்மாதோ. (௮)

துனியுறுவோரையெல்லாஞ்சுந்தரனோக்கியேதான்
வினைவலியதனாலய்யாவெரிதனில்வீடினார்க்கிண்
டனைவருமிரங்கியென்னேபயனினியவர்களெல்லா
மினிமையாங்கதியையெய்தவெள்ளுநீரிறையுமென்றான். (௯)

அலாயுதன்பின்னோன்சொல்லவரவுயர்த்தோன்றன்பின்னோ
ரெலாரும்வந்திரங்கியேதானெரியினிலிறந்தோர்க்கெல்லாந்
திலோதகமளித்துப்பிண்டந்திரட்டியேகளித்தாண்டிட்ட
புலாலர்தஞ்செயலைநோக்கிப்புயல்வண்ணனிருக்கும்வேலை. (௰)

பாந்தண்மீயுயர்த்தோன்வைகும்பதிதனிற்பரமன்றேர்மேற்
சார்ந்திடவக்குரூரன்சததன்னுவாவைநோக்கி
வேந்தநீகேட்டிநேரிற்சத்திராசித்துவிந்தை
காந்தனுக்களித்தானன்றேதான்பெற்றகன்னிதன்னை. (௧௧)

கிருதவன்மாவுநீயுமிருக்கக்கேசியைத்தான்செற்ற
வரிதனக்கரிவைதன்னையளித்தவனாவிசோரப்
பரிதனோடிறந்தானோடுகூட்டியொண்மணியைப்பற்றித்
தருதியேனன்றென்றோதச்சததனுவாவுஞ்சொல்வான். (௧௨)

உன்னையுமென்னைத்தானுமுயர்குலக்கிருதவன்மாத்
தன்னையுமிகழ்ந்துவெண்ணெய்ததிநுகர்ந்தவனுக்காங்கே
மின்னினையளித்தானாவிவிண்ணுறவதைத்திப்போதி
னன்மணிகவர்ந்துமீள்வனென்றிடநலனீதென்றான். (௧௩)

நிசிதனிற்கன்னமிட்டேநிலவனாய்தனுளெய்திச்
சசிநிகர்படிகமாடந்தனிற்றுயில்கின்றோன்றன்னை
சுசியுறுங்கண்ணன்வாளாற்றுணித்துநன்மணியைவவ்வி
வசையுறமனையின்வந்தான்சததன்னுவாவாமன்னன். (௧௪)

தந்தைதான்மடிந்ததன்மைசத்தியவாமைகேட்டு
வந்துமண்ணிடையின்வீழ்ந்துவயிற்றிடையெற்றியந்தோ
யெந்தைநீயிறந்தாயிங்ஙனென்செய்கேனென்றுநைந்து
சிந்தையிற்கலங்கிப்பின்னர்சினமுறச்செப்பலுற்றாள். (௧௫)

எந்தையைவதைத்தானாவியென்னுயிர்க்கொழுநனாலே
யந்தகபுரத்தினேற்றியரும்பகைமுடிப்பேனென்னாச்
சுந்தரியம்பிவாளாற்றுணிந்திடுந்தாதைதன்னைச்
சிந்தையினிடருற்றேதான்றிலதயிலத்திணிட்டாள். (௧௬)

மரகதநிறத்துமங்கைவாயுவின்முந்தியேகுங்
குரகதமிசையினேறிக்கொடியவாள்வீக்கிநெஞ்சி
னெரிகதமுறவேகங்குலேகுமுனிமைப்பினெய்திப்
பொருகதைகரத்தினேந்தியத்திமாநகரிற்புக்காள். (௧௭)

அத்தினபுரத்திற்சென்றேயரிதிருவடியிற்றாழ்ந்து
சத்தியவாமைதந்தையிறந்தமைசாற்றலோடும்
வித்தகன்றேவிதன்னைத்தழுவியேவிம்மிக்கண்ணீ
ருத்தரீகந்தான்றூங்காதோடவேயிரங்கினானால். (௧௮)

இரங்கியேயிறைவன்றேவி தன்னுடனிமைப்பின்முன்னே
துரங்கமீதிருவருந்தானேறிவான்சுரர்கள்போற்றக்
கருங்கடலகழாய்ச்சூழக்கவினுறுந்துவரையெய்திக்
குரங்கலோசனிதன்றாதைகோயிலினடைந்தானம்மா. (௧௯)

சக்கரந்தரித்தோனெய்தச்சததன்னுவாமாயன்றா
னுக்கிரமாகிவந்தான்செய்யுமாறுரைத்தியென்ன
வக்குரூரன்றான்கேட்டேயரியுடன்பகைத்தோரெல்லா
முட்கினரல்லால்யாவருய்ந்தனரொன்றுசொல்வான். (௨௦)

சத்தியவாமைதந்தைதனைவதையென்றார்சொன்னார்
சித்தசன்றன்னைத்தந்தான்செருத்திறமறிந்திலாயோ
குத்திரமாகக்கங்குறன்னிலீட்டுக்கொன்றநீதா
னித்தலத்திருந்துசாகாதேகுதிவிரைவிலென்றான். (௨௧)

கூறியவக்குரூரன்கரத்தினிற்கோடியென்று
வீறியசிமந்தகத்தைக்கொடுத்தவன்விரைவிற்செல்லு
மாறிலாவிவுளிமீதின்வடதிசைநோக்கியேதா
னூறுகாவதங்கழிந்துநொடியினிற்சென்றானன்றே. (௨௨)

வேறு.

தூயசத்திராசித்துவைவாளினாற்றுணித்துத்
தீயனாகியசததன்னுவாசென்றதன்மை
மாயவன்னறிந்தலாயுதமன்னவனுடனே
பாயுமாவிரதத்தின்மேற்பார்மிசைச்சென்றான். (௨௩)

வாயுவின்விசைபின்னுறமணிநெடுந்தேர்மே
லேயெனும்முனர்நூறுகாவதநெறியேகித்
தீயவன்றனையடர்தலுமிதுலையிற்சிறந்த
தாயகாவினிற்சததனுவாவயம்வீழ்ந்த. (௨௪)

சோலைதன்னிடைத்தூயதாந்துரகம்வீழ்ந்திடலுங்
காலிற்காலெனச்சததன்னுவாக்கழிந்திடவே
சீலமாயவன்றேரினின்றிழிந்துதானோடிக்
கோலநேமியாற்கொடியவன்சிரத்தினைக்கொய்தான். (௨௫)

தரையின்வீழ்ந்திடுஞ்சததன்னுவாவினைமாயன்
றெரியநோக்கிநற்சிமந்தகமணியினைக்காணான்
விரைவின்மீண்டுதன்முன்னவனுடனிவைவிளம்ப
*வரவுருத்தவிர்வோனச்சொலையமாயறைவான். (௨௬)

இரவிசத்திராசித்துவுக்கீந்தநன்மணிக்கிங்
குரியனீயலாலெனக்கதனாற்பயனுண்டோ
†கரவன்கையினிற்காண்கிலேன்மணியெனலெனினே
விரைவினின்னகர்க்கேகெனமிதுலையிற்போனான். (௨௭)

---

* அரவுருத்தவிர்வோன் = ஆதிசேட ரூபமாகிய பலராமன்.
† கரவன் = திருடனாகிய சததன்னுவா.

முன்னவன்னவைவிளம்பலுமுராரிவெண்ணகைசெய்
தின்னலின்மணிகண்டபினென்மொழிமெய்யென்
றுன்னிமன்னவவொண்ணகரடைதியென்றுரைத்துக்
கன்னலொன்றினிற்கடிபொழிற்றுவரையினடைந்தான். (௨௮)

கரவினால்வதைசெய்தவனுயிர்களைந்ததனை
யுரைசெய்தேபினர்சத்திராசித்துவையுயரு
மெரியிற்சேர்த்தியேயிரும்புனற்கிரியையுஞ்செய்வித்
தரிதன்றேவிதனருந்துயரகற்றியங்கிருந்தான். (௨௯)

வாசிமீதிற்போய்மாண்டவன்றீவரையினீந்த
வேசிலெண்கலத்தனமுமிழ்மணியினோடேகிக்
காசியின்னிடைக்காந்தினிசுதனினிதிருந்து
மாசில்வேள்விகள்செய்துமாதானமுமீந்தான். (௩௦)

ஆயவாறெலாஞ்செய்தவக்குரூரனையறிந்தே
மாயனீவெருவாதிவண்வருதியென்றுரைத்து
நேயமாகியவிருபரைவிடுத்தலுநெறிசேர்
தூயகாந்தினிசுதன்றுவராபதியடைந்தான். (௩௧)

ஆழியானடிக்கமலத்தினிறைஞ்சியக்குரூரன்
ஏழையேன்பிழைபொறுத்தியாற்கயவனன்றீந்த
மாழையின்மணியிஃதெனமன்னர்முன்கொடுப்ப
வேழம்வீழ்த்தவன்மீளவுமவன்கையிற்கொடுத்தான். (௩௨)

மதியைநேர்வணன்மாயனையொருவியேயெய்தி
மிதிலையின்வெகுலாசுவமன்னன்வேதியரோ
டெதிர்கொடர்க்கியமளித்திடவின்னமுதருந்திப்
புதியநன்மலர்குஞ்சியிற்புனைந்தினிதிருந்தான். (௩௩)

மிதிலையின்னிருந்தேவெகுலாசுவனுடனற்
சதுமறைப்பொருடெரிந்திடச்சர்ப்பகேதனனப்
பதியினெய்தியேயலாயுதன்றருளினிற்பணிந்து
கதையினாயுதமியல்பினாற்கற்றனன்மாதோ. (௩௪)

வேறு.

வீரியவலாயுதன்றான்பெற்றிடவிளங்குமின்னாள்
பாரின்மேற்சிறந்தபானுமதியினைப்பரிவினாலே
வாரிபோலொலிப்பப்பேரிமறையவரோமஞ்செய்ய
நேரிலாவியாளமோங்குகிருபனுக்களித்தானம்மா. (௩௫)

வேறு.

ஆயகாலையினக்குரூரன்மணிகொண்டே
தூயகாசியினிருந்துபின்றுவரையினெய்தி
மாயவன்றனைவணங்கியவாறெலாமறிந்து
நேயமாயெய்துமந்தணர்நிகழ்த்தினரன்றே. (௩௬)

இந்தநல்லுரைகேட்டலுமிந்துவண்ணன்ற
னந்துகையுறுநாரணனுரைபழுதென்றே
சிந்தையின்னினைந்தேணந்தோவென்றுரைசெய்து
வந்துநற்றுவராபதியடைந்தனன்மாதோ. (௧௭)

சீலமாகியவலாயுதன்றிருவடிதன்னின்
மாலிறைஞ்சிடத்தழுவியேமகிழ்ந்தினிதிருப்பக்
கோலநன்மணிகாந்தினிசுதனெய்திக்கொடுப்பத்
தாலகேதனன்சத்தியவாமைக்குத்தந்தான். (௧௮)

வினையெலாமறவேதியராசிகள்விளம்பத்
தினகரன்றனக்கன்பனுஞ்சத்திராசித்தன்
றனையளாகியசத்தியவாமைதன்மனத்திற்
றுனியகன்றிடச்சுந்தரனிருந்தனன்மன்னோ. (௧௯)

சததன்னுவா வதைப் படலம்

முற்றிற்று.



ஆக படலம் ௪ - க்குக் கூடிய திருவிருத்தம் ௪௧௯.



ஸ்ரீ கண்ணபிரான் திருவடித்தாமரைகளே சரணம்.



ஸ்ரீ

விஷ்ணுமயம்.

அ௫-வது காளிந்தியார்

# 4. திருக்கலியாணப்படலம்.



வேளுந்துதிசெய்யவிசையனொடுகானேகி
நாளுந்திரைக்கடலினண்ணுதவன்பயந்த
காளிந்திநற்றவங்கண்டேமணந்தகண்ணன்மலர்த்
தாளுந்துநும்வினைகள்சாற்றுமவன்பெயரே. (௧)

வித்துருமமொத்தவிதர்ப்பனுவந்தருள்மின்
சத்தியவாமைநலச்சாம்பவதிதற்சூழ
நித்திலம்பொன்னீலநிறைந்தமணிமண்டபத்தி
னத்தொளிர்செங்கையினரிவீற்றிருந்தநாட்டனிலே (௨)

வேறு.

அரவுயர்வேந்தன்செய்தவரக்குமாளிகையினிட்ட
வெரியிடையுய்ந்துவேந்தர்குந்தியோடேகியேதான்
வரையினிற்றுயிலவந்தவிடும்பனைவதைத்துவீமன்
சரியிலாக்கமலவல்லிதனையணந்திருந்தநாளின். (ரு)

அன்னவள்வயிற்றிற்றோன்றுங்கடோற்கசனுடனேயந்த
மின்னவணிருக்கவைந்துவீரருமன்னையோடு
மின்னலின்மறையோர்வாழுமேகசக்கரத்தினெய்தி
வன்னிபோற்கனன்றுவந்தீபகனைவாள்விமன்செற்றான். (சு)

மறையவரிடரைநீக்கிவல்லையினேகிச்சேல்லு
நெறியிசிநிறையவாற்றினீர்விளையாட்டினின்ப
முறுமுயர் * விஞ்சையன்மேல்விசையனேர்கொள்ளிவிட்டே
யெறிதலுந்தோற்றவன்றானிறைஞ்சிடவவனையோவி. (ரு)

பரிகரியிரதமிக்கதுருபதன்பதியையெய்தி
யரசர்கள்வளைக்கமாட்டாத்வனியிற்கிடந்தவில்லை
விரைவினிறுணையேற்றிமீனெய்தவிசையன்மார்பி
னரியுறுமலங்கறன்னைத்துரோபதையணிந்தபின்னர். (சு)

வரிசிலைவளைக்கமாட்டாமன்னவர்திரண்டுதேர்மேற்
பொருதவர்வெந்நிட்டோடப்புகையுறும்வாளியெய்து
தருமனுடைவரொய்தித்தையலைவதுவைசெய்தே
யிரதமீதேறிப்பாண்டுமுன்னவன்பாலினேக. (எ)

அந்தணுமரசன்பின்னோனருளியவைவர்கட்கு
மிந்திரப்பிரத்தமீயவிரதமீதேறிப்பாரி
னூந்தமாநகரியேகியடைந்திடுமியல்புக்கெல்லா
மிந்திராகொழுநன்றன்பாற்றருமன்றூதேவினுனல். (அ)

வந்திடுதூதரெய்திமாதவனடியிற்றாழ்ந்து
குந்திதன்சுதர்கள்செய்கைகூறிடக்கேட்டுமாயோன்
சிந்தையின்மகிழ்ந்துதந்தைக்கினைஞனுஞ்சினிதான்பெற்ற
மைந்தன்சாத்தகிதன்னோடுமெணிநெடுந்தேரிற்போனான். (கூ)

இந்திரப்பிரத்தத்தேகியைவர்களெதிர்வந்தெய்த
வந்தமாலறன்சேய்தன்னைவீமனையிறைஞ்சியாங்கே
யிந்திரன்றனயன்றன்னைத்தழுவமத்திரைதானீன்ற
மைந்தர்தனடியின்வீழக்குந்தியைவணங்கினுனல். (௧0)

மாயனைப்பாஞ்சாலன்றன்மகளெய்திவணங்கநோக்கி
நேயமோடாசிகூறிப்பின்னர்மஞ்சனநீராடித்
தூயவின்னமுதருந்திப்பாண்டுவின்சுதர்களோடும்
வீயுறுமலங்கல்குடிவித்தகனிருந்தான்மாதோ. (௧௧)

* சித்திராங்கதன்.

இந்திரப்பிரத்தந்தன்னினிருமூன்றதாயதிங்கள்
சிந்தையின்மகிழ்ந்துமாயோன்சிறந்தினிதிருந்தபின்னா
ரிந்திரன்சிறுவனோடுமெழில்வனத்திடையினெய்தி
மந்திபாயுய்யானத்தின்வனப்புறவிருந்தவேலை. (௧௨)

பாவகன்மறையோனாகிப்பசிமிகவுடையேனென்னத்
தேவர்கோன்சிறுவனேதாற்றீருமுன்பசிதானென்னக்
காவினிலுயர்ந்தகாண்டாவனந்தனைக்காட்டியேதான்
தாவிதுண்பேனென்று * தழலுருவாகினின்றான். (௧௩)

தனஞ்செயனதனைக்கேட்டுத்தனஞ்சயன்றன்னைநோக்கி
யனஞ்செறிந்துயர்ந்தகாண்டாவனந்தனையரித்தேனென்ன
மனஞ்செறிமகிழ்வினோடேவனந்தனையனலோனுண்ணக்
கனஞ்செறிவானமெல்லாங்கரும்புகையாயிற்றன்றே. (௧௪)

ஆயிரங்கண்ணனோக்கியனைவரும்பொன்றவூழித்
தீயதோவெழுந்ததென்றுசெப்பிடத்தேவதூதர்
தூயகாண்டாவனத்தைச்சுட்டிடுமனலீதென்ன
தீயுயர்கரியினேறிவெகுண்டனன்விண்ணோர்கோமான். (௧௫)

அழலினைக்கடுகியேசூழ்ந்தவிமினீரென்றுகூற
வெழிலிகளெழுந்துதூண்போற்றாரையாய்ப்பொழியயாண்டுங்
குழலினையூதுவோன்றன்மைத்துனன்குனிவில்லாலே
மழைதடுத்தனலைக்காத்தான்வாளியாற்கூடமாக்கி. (௧௬)

அன்னதுகண்டதேவராயிரங்கண்ணனோடுந்
துன்னினார்திசைகளெங்குஞ்சுடுகணைபொழிந்தங்கார்த்தார்
மன்னவன்விசையன்சீறிவலாரிதன்னுடனேவானோர்
வெந்திடவிசிகமாரிவில்லினாற்பொழிந்தான்மன்னோ. (௧௭)

நயனமாயிரத்தோன்றானுநாகர்கண்முடுகிப்பெய்யும்
புயலொடுமிரிந்துபாறப்பொங்குதீயடர்பூங்கானி
லயனெழிற்பிதாவையுன்னுமவர்வினைக்கப்படார்போன்
மயனொடுமுனிவரெல்லாம்வருந்திடாதுய்ந்துபோனார். (௧௮)

தூயகாண்டாவனத்தைமுதலறச்சுட்டுத்தோன்றுந்
தேயுவாள்விசயனுக்குச்சிறந்திடுநற்காண்டீபம்
பாயுமாவிரதந்தன்னோ † டரிக்கொடிபரிவாலீந்து
மாயனைமறைகொடேத்திமலரடிவணங்கிப்போனான். (௧௯)

சந்திரனனவுகாண்டாவனத்தினைத்தழலுக்கீந்து
சுந்தரன்விசயனோடுந்துலங்கியவிரதமீதி
லிந்திரப்பிரத்தத்தெய்தியிருந்திடவெரிதனாலே
வெந்திடாதுய்ந்துபோனமயனவண்விரைவிற்சென்றான். (௨௦)

நீரெனப்படிகந்தோன்றப்பளிங்கெனநீருந்தோன்றச்
சீருறவயங்கியோங்குமண்டபமிரண்டுஞ்செய்து
பாருறுமைவர்நோக்கிப்பரிந்திடுமயனுந்தச்ச
னாரியன்றாளில்வீழ்ந்தேயமரர்தம்முலகுபுக்கான். (௨௧)

* அக்கினி. † அனுமக்கொடி.

மயன்விடைகொண்டுபோனபின்னர்மால்விசயனொடு
மயமுறுதேரினேறியனிகினிவெள்ளஞ்சூழப்
புயலடர்கிரிசாலங்குரவகம்பொருந்தவோங்குங்
கயமுறுகானின்வேட்டைவிரும்பியேகடிதிற்சென்றான். (௨௨)

வேறு.

கொம்புகுறித்தனர்பகழியெடுத்தனர்குனிவில்லாம்
பம்பையடித்தனர்கடிதினினுற்றனர்படிமீதிற்
கம்புமுழக்கினர்கணைகள்விடுத்தனர்கதமல்கு
மும்பலினைத்திடவெயினர்வளைத்தனருரவோடே. (௨௩)

கரிவிரைபற்றினர்முயல்களடித்தனர்கடிதோடி
வரையினிலுற்றனர்பகழிவிடுத்தனர்வளைவில்லோ
டெரிசினமுற்றிடுமரியையவதைத்தனரிடியஞ்சு
முனையினர்சுற்றினர்முடுவலைவிட்டனருயர்வேடர். (௨௪)

ஊக்கமிகுத்தவர்கணைகள்விடுத்தனருயரோங்க
லாக்கையர்கச்சையின்மீதுடைவாளினரஞ்சாதார்
நோக்கழலுற்றவரிடிகளுமஞ்சிடநொடிவாயர்
* சீக்கைவிளைத்தனர்வலைகள்விரித்தனர்சினம்விஞ்ச. (௨௫)

† கறடிபிடித்தனர்மகிடமடித்தனர்கணையேவி
நெறிகளடைத்தனர்ஞமலியைவிட்டனர்நிரையாக
வுறுகதமுற்றிடுமுழுவைகள்செற்றனருருமேபோற்
பறைகளடித்தனர்கரியைவதைத்தனர்படிமீதே. (௨௬)

கலைகளடித்தனர்சசவுயிர்செற்றனர்கடிதோடி
வலைகள்வளைத்தனருழைகள்வதைத்தனர்மகிடத்தின்
றலைகளறுத்தனர்கிரியைவதைத்தனர்தரைமீதிற்
புலிகளடர்த்திடவவையுமெதிர்த்தனர்பொரும்வேடர். (௨௭)

மாவினிலுற்றவர்வாளையெடுத்தனர்வயவீர
ராவிதமிற்றிடவேகதைவிட்டனரழல்வாளி
தூவியடர்த்தனரிருணிவதைத்தனர்சுடர்வேலா
லாவிசெகுத்தன § ரோவியகாயத்தினையம்மா. (௨௮)

கட்கமெடுத்துயர்கட்கம்வதைத்தனர்கடிதேகி
யுட்கதமுற்றிடுபன்றியையட்டனருடைவாளான்
முட்கொடியாயடர்காலின்முடங்குளையுயிர்செற்றார்
புட்கொடிவீரன்விரும்பிடவேயொருபுலிகொன்றார். (௨௯)

---

* வேட்டைக்காரர் முதலியோர் நாயையேனும் தோழர் முதலியோரையேனும் அழைத்தற்காக அல்லது வேறு ஏதுப்பட வாயாற்செய்யு மோரொலி. சீழ்க்கை என்பது பதம். எதுகைபற்றி ழகரவொற்றுக் கெட்டது.

† கறடி=பிரதிகள்தோறும் பாடம். இப்படியே ஆகலின் போலி.

§ ஓவியகாயம்=சித்திரகாயம் அஃது புலி. இந்திரகோபத்தை வலாரி கோபமென்றும், திரிசடையை முச்சடை என்றும், அசுவத்தாமனைப் பரித்தாமனென்றுஞ் சொல்லியுளார்.

பார்த்தன்வில்லால்வெம்பகழிவிடுத்தேயரிகொன்றான்
சாத்தகிசார்த்தூலங்கரிகிரிவெங்குழல்வாளி
கோத்துயிர்செற்றான்கொம்புகுறித்துச்சினவேட
ரார்த்துழையாளிகளாவிதமெல்லாம்வதைசெய்தார். (௧௦)

கந்தமெடுத்துக்கந்தனின்வைத்தேகலையேயும்
பந்தரினின்றேபசந்தமுயர்த்திப்பலராலி
சிந்தவிசிந்தக்குழிசியினச்சாறுஞ்சேர்த்தே
நந்தர்தநந்தன்றன்முனருப்பத்தாரலம்வைடட. (௧௧)

சித்தசனத்தன்மைத்துனனேறுடியர்ந்தேரேறி
யத்திரம்விட்டியரெண்குகரித்திரளாருவாங்கயர்
சித்திரகாயமரித்திரளும்வதைசெய்தேவா
னத்தொடுகெயலுகள்யமுனைமினண்ணினன்வெயில்விஞ்ச. (௧௨)

வேறு.

வெயிலவன்வெம்மையாலேமெலியுற்றுவினைவினெய்தி
யயமுடன்கரிகண்மன்னரனீகினியெல்லாருஞ்சூழ்ந்து
கயலொடுவாளைதாவுங்கமலங்கண்மலர்ந்துதோன்றும்
பயமுறும்யமுனைதன்னுட்படிசநீராடினாரால். (௧௩)

சீதரனதிநீராடிச்சிறந்தவுய்யானத்தெய்த
வேதமில்விசயனுங்கேயமுனைபிற்படிந்துமூழ்கித்
தாதவிழ்மலர்பூங்காவிற்றவமுறுமேவடந்தாங்கு
மாதினைக்கண்டுமீண்டுமாயன்பாலெய்திச்சொல்வான். (௧௪)

இந்திரைதானோவன்றிப்பிரதியோவரம்பைதானோ
சுந்தரியொருத்திநாயமோகத்திற்றுலங்கிநின்று
டக்தியைக்காத்தடாதசாருகடிசமன்று
வந்துநீகாண்டியென்னமாதவன்கிழிந்துசென்றான். (௧௫)

முளரியின்முனையின்முத்தினவிளைமூரலெய்த
முளரியின்முகைபோலாரமுலையுறவையிற்சித்த
முளரியைவைத்துடன்னினுறுத்திடுமுனைகூர்பாய
முளரிமின்யோகஞ்செய்யுமுயற்சியைமுராரிகண்டான். (௧௬)

வாளுந்துநயனத்தாள்வான்மதியுந்துவதனத்தாள்சீர்
நீளுந்தண்மலரினேறுதிகித்திலம்பழித்தபல்லாள்
வேளுந்துதவேடத்தாள்விந்தைநாண்வடிவின்மிக்காள்
காளிந்திதன்னைக்கண்டான்காளிந்திநதியிற்கண்ணன். (௧௭)

நீதிலாமாதைநோக்கிச்செய்கின்றவரியயோக
மேதினைநத்திச்செய்வாயாருடைதனையளென்ன
வாதவன்மகளாவேனீகணவனுயனுகச்செய்பு
மாதவமுற்றவந்தாயென்றடிவணங்கினாளால். (௧௮)

பாதமேற்பணியுமாதைப்பரிவினிற்கரத்தைப்பற்றி
மாதவன்றேரிலேற்றிவானவர்மலர்கடூவத்
தீதிலாவிசையன்வண்மைச்சாத்தகிசேனைசூழ
வேதியர்விறையுமிந்திரப்பிரத்தத்தின்மேவினானல். (௧௯)

இந்திரப்பிரத்தந்தன்னிலெய்தியேயரிவையோடுங்
குந்தியைவணங்கிவீதிகொடிவிதானங்களோங்கக்
கந்தநன்மாலைகும்பங்கன்னலொண்கமுகுதோன்றத்
துந்துபிமுரசஞ்சங்கந்துடிகைகள்பலமுழங்க. (௪௦)

நித்திலம்வயிரநீலமரகதநிறைந்ததூண்கள்
பத்திசெய்மண்டபத்தின்பைம்பொனாசனத்தின்மீதின்
சித்தசனிரதிநாணச்சிறந்தகாளிந்திதன்னோ
டத்தியைக்காத்தவீரனழகுறவிருந்தானன்றே. (௪௧)

ஆரணமறையோர்சூழவருந்தவக்கற்கனெய்திப்
பூரணாகுதிசெய்தென்றின்புதல்விகந்தரத்திற்சீராய்
வாரணங்காத்தோன்கையான்மங்கலநாணைச்சேர்த்திச்
சீரணங்கெழிலாலம்மிமிதிக்கத்தீவலம்வந்தாரால். (௪௨)

கருந்தடங்கண்ணியானகாளிந்தியுடனுமாய
னருந்ததிவானினோக்கியறுசுவையடிசிலின்பம்
பொருந்திடவமுதுசெய்துபூந்தொடைபுனைந்துபொன்னாற்
றிருந்தியகட்டின்மீதுசிறந்தின்பத்தமர்ந்தாரன்றே. (௪௩)

தினகரன்புதல்வியோடுஞ்செல்வியந்தேரினேறி
யனகன்பாண்டவர்கடன்னைநிறுவியேயனீகஞ்சூழக்
கனககோபுரங்கள்சூழுங்கடிபொழிற்றுவரைதன்னிற்
சினிகவின்புதல்வனானசாத்தகியுடனுஞ்சென்றான். (௪௪)

அன்னையர்தமையிறைஞ்சியலாயுதனடியிற்றாழ்ந்து
மன்னவன்வசுதேவன்றன்மலரடிவணங்கியோங்கும்
பொன்னின்மண்டபத்திற்சேக்கைபொருந்திடவிதர்ப்பன்பெற்ற
வன்னம்வந்தச்சுதன்றனடிதொழுதருகிருந்தாள். (௪௫)

சத்தியவாமையெண்குதந்தசாம்பவதியன்பி
னுத்தமனடியிற்றாழ்ந்தேயுளமகிழ்ந்திடக்காளிந்தி
தத்தைதேவகிதன்றாளினிறைஞ்சிநற்றனுவிக்கியான
சித்தசனன்னையாதம்வணங்கினள்சிறக்கமாதோ. (௪௬)

தூயதேவியர்கள்சூழத்துலங்குமாமண்டபத்தின்
வீயமர்குழலினார்கள்வீணையாழிசைக்கும்வேலை
காயுமான்விழியினார்மெய்கலனுறநடிக்கக்கண்டு
மாயவனிருந்தான்றூயமாமறையோர்கள்வாழ்த்த. (௪௭)

## காளிந்தியார் திருக்கலியாணப் படலம்

முற்றிற்று.



ஆக படலம் ௫ - க்குக் கூடிய திருவிருத்தம் ௪௬௦.



ஸ்ரீ ருக்மணி சத்தியபாமா காளிந்தி சமேதாய நமோநம:



ஸ்ரீ

விஷ்ணுமயம்.

௮௪-வது மித்திர விந்தையார்

# திருக்கலியாணப்படலம்.



உத்தமவவந்தியாளரசனென்னுநகர்
மொய்த்தெதிரரசர்வெந்திடமுடுக்கியே
மித்திரவிந்தையார்திருவைவேட்டரு
ணத்தொளிர்செங்கைநாரணனையேத்துவாம். (௧)

சாமரைபுரளநற்றருமமோங்கிட
மாமணிக்கலன்கண்மார்பினின்வயங்கவே
காமனையளிப்பவளுடன்களிப்புறப்
பூமனையளித்தவன்பொருந்துநாட்டனில். (௨)

வேறு.

தவந்தனைப்பகழியாக்கித்தருமமாந்தனுவைக்கோட்டிப்
பவந்தனைத்துணித்துவீழ்த்துப்பாரினிற்செங்கோலோச்சி
யுவந்திடுமறையோர்போற்றவொருதனிக்குடைக்கீழ்வைகு
மவந்தியாளரசன்பெற்றவரிவைவானரம்பைபோல்வாள். (௩)

சூரசேனன்றான்பெற்றதூயராசாதிதேவி
சீருறுவசுதேவன்றன்சோதரிதிறலான்மிக்க
வீரர்கண்மதிப்பப்பாராள்விறலவந்தியர்கோக்கன்பாம்
பாரிகற்புடையாள்பெற்றபைந்தொடிபவளம்போல்வாள். (௪)

அத்திரம்போன்றகண்ணாளரவிந்தவதனத்தாளொண்
முத்தெனுநகையாள்கோங்கின்முகையெனுமுலையாள்வண்மை
நத்தெனுங்கிரிவத்தாளோதிமமெனுநடையாளாய
மித்திரவிந்தைமேகக்குழலிமின்னிடையாங்கொம்பு. (௫)

அன்னவளெழிலைநோக்கியவந்திமாவரசுசெய்யு
மன்னவன்மகளுக்காங்கேவதுவைசெய்பருவம்வாய்த்த
லுன்னியிச்சுயம்வரத்துக்கெய்துவீரொல்லையென்றே
யிந்நிலத்தரசர்க்கெல்லாந்தூதரையேவினானால். (௬)

தூதுவர்விரைவினெய்திச்சொல்லலுநிருபரெல்லா
மாதரவுடனேதேரினனீகங்கள்சூழவேகப்
போதகமிரதம்பாய்மாப்புடைவரவையமீதின்
மாதவனவந்திமன்னன்வளநகர்க்கெய்தினாரால். (௭)

நீலமொண்வயிரம்பச்சைநித்திலம்பவளம்பொற்
கோலநன்மணிகளெல்லாங்குழுமியமண்டபத்தின்
மாலைகண்மாழையாடவயங்கியவிதானமான்று
மேலவனவிரேபோன்றுவிளங்கியதீபஞ்சூழ. (௮)

துன்னியமணித்தூணெல்லாந்துலங்கியமண்டபத்தின்
மன்னவருலப்பிலாதோர்வயங்கியேநிற்கும்வேலை
மின்னிடைக்கலாபந்தோன்றமித்திரவிந்தைமேவு
மன்னமுநாணக்கையினலங்கலோடெய்தினாள். (௯)

செல்லுயர்பிறைவில்வாளிசெங்கிடைவள்ளையாரம்
வில்லுறுகுமிழ்வேய்கோடுவிளங்கியகலசங்காந்தள்
வல்லிநற்கதலிநள்ளிவராலொளிர்தராசுநேரி
லல்லியங்கமலமான்றவாடகக்கொம்புபோல்வாள். (௧௦)

இத்தகையெழிலான்மிக்கவாழியைப்பழிக்குஞ்சொல்லாண்
மித்திரவிந்தைதன்னைநோக்கும்வேல்வேந்தரெல்லாஞ்
சித்திரம்போலநிற்கச்சிறந்தபின்னலங்கறன்னைக்
கைத்தலந்தன்னில்வாங்கிக்கண்ணன்றன்மார்பினிட்டாள். (௧௧)

தெரியலைமங்கைவாங்கிச்சிதரனூற்றிற்போட
வரசர்களெல்லாநெஞ்சமழன்றனற்கண்ணராகிக்
கரிபரியிரதம்வீரர்கணக்கிறந்தவர்களெல்லா
பரிபிணைவளைத்ததோலினிரையெனவார்த்தாரன்றே. (௧௨)

நிருபர்கள்வளைக்கமாயனெடுஞ்சிலைவளைத்துவாளி
கருமுகில்பொழிந்தாற்போலச்சொரிதலுங்கரிமாவீரர்
தரணியின்மடிந்துவீழத்தசையுறுகுருதிவெள்ளம்
பெருகிடக்கவந்தமாடப்பேய்களுங்களித்தமாதோ. (௧௩)

நீறணிகடவுள்கண்ணினெருப்பினுற்புரங்கள்வெந்த
வாறெனவனீகமெல்லாமவனியின்மடிந்துவீழ
நாறுபூங்குழலினுண்மேனவிமயலெழுந்தவேந்தர்
மாறினராசைதோறும்பரிபவந்தொடரவம்மா. (௧௪)

பீதிகொண்டரசரெல்லாம்பிறகிடமாயோன்றேர்மேல்
வீதியினெய்தமாதர்விழைவுறக்கண்ணினோக்கி
மாதவன்வடிவினலேயிமைக்கிலார்மயங்கிநிற்ப
வேதமிலவந்திமன்னனெதிர்கொளக்கோயில்போந்தான். (௧௫)

நவமணியினங்கள்சூழநற்பொனுவிழைத்திலங்கு
முவமையிறூண்களெல்லாமுறவுயர்மண்டபத்தின்
றவர்களெண்சிலமிக்கமித்திரவிந்தைதானுந்
துவரையின்வீரன்றானுந்துலங்குமாதனத்திலுற்றார். (௧௬)

நெய்யினுகுதிகள்கற்களிறைத்திடநெடியமாயன்
மெய்யொளிர்பவளம்போன்றமித்திரவிந்தையென்னுந்
தையல்கந்தரத்திற்செங்கைதன்னின்மங்கலநாண்சாத்திக்
கையினற்பொரியும்வீசக்களித்தம்மிமிதித்தாண்மங்கை. (௧௭)

வானுயர்வடமீனேக்கிமாயவன்றேவிதன்னோ
டானெய்பாலன்னமாழைக்கலத்தினின்னமுதுசெய்தே
தேனுறுமலங்கல்சூடிச்சிறந்திடக்கலவைபூசி
மீனுயர்கொடியோனாணவிழுமியவின்பந்துய்த்தான். (௧௮)

நிவந்ததோலயுதமம்பொனிறையுமாதெரிநீட்டி
சிவந்தவாய்மடவார்நாணூறிவுளியோர்கோடிசேரா
மவந்திராசன்றனீயவச்சுதன்றேவிதன்னோ
டுவந்திரதந்தினேறித்துவரையினுற்றான்மாதோ. (௧௯)

மின்னிடைப்பவளக்கொம்பாமித்திரவிந்தைதன்னோ
டன்னையர்தாளிற்றாழ்ந்தேயருள்செறிவசுதேவன்றன்
பொன்னடியிறைஞ்சமாயோன்பொலன்கழற்பணிந்துநின்ற
டன்னிகரிலாதசிலவிதர்ப்பர்கோன்றந்தமங்கை. (௨௦)

சேடுறுநளினமங்கைசிறந்தகமின்காளிந்தி
யாடகக்கொம்பாஞ்சாம்பவதியின்பாரவந்திராச
னீடியதவத்தாற்பெற்றமின்னுமேவர்களின்பங்
கூடவேவசுதேவன்றன்குமரன்வீற்றிருந்தானம்மா. (௨௧)

## மித்திரவிந்தையார் திருக்கலியாணப் படலம் முற்றிற்று.

—⟨ooo⟩—

ஆக படலம் ௯-க்குக் கூடிய திருவிருத்தம் ௨௪௯.

ஸ்ரீ

விஷ்ணுமயம்.

## அ௫ - வது * நாக்கினசித்து

# திருக்கலியாணப்படலம்.



மாமகமெல்லாநாறிமறையவர்வருந்தத்தூய
நாயகன்கொழுநன்ஞானநாவிருநயனனாய
பூமகன்மெலியவேதம்பரித்தகல்புணரிபுக்க
சோமுகன்றன்னைச்சேலாய்த்துணித்தவன்புகழைச்சொல்வாம். (௧)

அவியினால்வேள்விசெய்யுமருந்தவர்மகிழநீரும்
புவியினிற்செங்கோலோச்சிப்புரந்தரன்போலவாண்டு
குவிமுலையார்பல்லாண்டுகூறிடமதியைநேராங்
கவிகையினிழலில்வாழ்வோன்கவுசலராசராசன். (௨)

அளிமிகவவனியாளுமரசர்கோன்பயந்தபாவை
தளவுறுநகையாளாரத்தனந்தாள்பவளவாயாள்
கிளியெனுமொழியாள்சாபநுதலினாள்கெண்டையொண்கண்
ணளினமின்னெழிலையொப்பாள்நாக்கினசித்தாமாது. (௩)

---

* கோசலராசன் நக்கினசித்தென்பான் புத்திரி நாக்கினசித்து இது தத்திதம். இந்நாக்கினசித்துக்குச் சத்தியையென்றும் பெயர். இதனைக்
"குளிருவெண்டரங்கக்குரவைவான்பசும்பொற்குடுமிமால்வரையினுன்மறுகி
அளறெழக்கடையவிளையமுதன்னவலர்முலைச்சத்தியைதன்னைக்
களிறுமேய்செந்நெற்கழனிசூழ்கிடந்தகோசலநாடுகாத்தளிக்கு
மொளிருவேற்றடக்கைநக்கினசித்தென்றுலகம்பெறுமன்னவனுயிர்த்தான்"
என்பர் [illegible].

ஆயவளெழிலைநோக்கியரசர்கோனன்புமிக்க
தூயமந்திரிகடம்மோடியம்புவன்றூவியன்னஞ்
சாயவேநடக்கும்வல்லிதாமரைதுறந்ததைய
லாயமென்மகளுக்கொத்தமகிணனாரறைமினென்றான். (௪)

வேந்தர்கோன்மொழியக்கேட்டுவேதநூற்பொருள்களெல்லா
மாய்ந்திடுமமைச்சர்நோக்கியையவுன்மகளுக்கொத்த
காந்தனைக்காண்கிலோம்யாங்கதமுறுவிடைகளேழுஞ்
சாய்ந்திடப்பொருதுவெல்வோன்றனையைதன்கொழுநனென்றார். (௫)

உரைசெயக்கேட்டவேந்தனீயர்விடையேழும்வென்ற
வரசனுக்கீவன்யான்றனளித்திடுமின்னையென்றே
முரசறைகென்றலோடும்வள்ளுவர்முந்தியெய்தித்
தரணியாணிருபர்வாழுநகர்தொறுஞ்சாற்றினாரால். (௬)

முரசறைந்திடலுமின்மேலாசையேமுந்தவெய்து
மரசர்களிரதமேறியடற்கரியனீகஞ்சூழக்
கரைசெயற்கரியவன்பிற்கடிதினிற்சென்றுபாரின்
வரிசையார்கவுசலன்றன்மாநகரடைந்தார்மன்னோ. (௭)

ஆயவையெல்லாங்கேட்டவச்சுதன்றேரினேறி
நேயமார்விசயனோடுநெடுங்கரியிரதம்வீரர்
பாயுமாவனிகமெல்லாம்பரந்திடவிரைவினெய்தித்
தீய்மையிற்கவுசலன்றனகர்தனிற்சேர்ந்தாரன்றே. (௮)

முரணுறுமரசர்மன்னன்முன்றிலிற்பரவலோடும்
வருணமார்கலன்கண்மெய்யின்வயங்கவானரம்பைநாண
விரணியக்கொம்புபோலவிளங்குமீமாடமீதின்
றரணியாள்கவுசலன்றன்றனையடானெய்திநின்றாள். (௯)

அரிவையர்குழாங்கள்சூழவாலவட்டங்கடோன்றத்
தெரிவையர்கவரிவீசத்திருவெனநின்றாடன்னை
விரைவினினரசர்நோக்கிவிழியிமைக்கிலர்கள்பாரின்
வரையுமோவியம்போனின்றார்மயல்பெரிதாகவன்றே. (௧௦)

குளநிறைகொட்டியாம்பன்மலர்நிறைகுறுகிநோக்கா
தளியலரரவிந்தத்தினமூர்ந்திடவிவர்ந்தபோன்று
நளினமின்னனையநங்கைநாக்கினசித்தினாட்டம்
வளனுறுவாசுதேவன்வதனத்தின்மடுத்தமாதோ. (௧௧)

கண்டனணையுமெய்தக்களித்திடுமனத்தளாகி
யண்டர்கடுதிக்குமையனடர்விடையேழுஞ்செற்றென்
முண்டகமுகைகையினேராமுலையிணையணையானாகில்
விண்டலமதினென்னாவியுறுமெனவெதும்பிச்சோர்ந்தாள். (௧௨)

மயலுறுமாதின்மீதின்வாசநீர்நிறையவிட்டே
யயில்விலோசனியர்தேற்றியரிவிடையேழுஞ்செற்றான்
னியல்புறுங்கொங்கைமீதினணைகுவனென்றலோடுங்
கயனிகர்கண்ணிதேறிக்கண்ணனைநோக்கிநின்றாள். (௧௩)

ஆயதோர்காலைதன்னிலரசனேழ்விடையைவிட்டான்
றீயெழவிழித்துச்செல்லும்வரையெனச்சினந்துநோக்கி
யேயெனுமுன்னமெய்தியிடியெனவதிர்த்துக்கோட்டாற்
பாயவேவெருவிமன்னர்பார்மிசைப்பாறினரால். (கச)

கடுவிடமெனவேயெய்தக்காவலரோடப்பாய்ந்த
விடையினமெழுந்துதன்மேல்வெற்பெனவருதலோடு
நெடியவனுருவேழாகநின்றொருகணத்தின்முன்னர்
கொடியவேழேற்றின்வாலைப்பற்றியேசுழற்றிக்கொன்றான். (கரு)

ஏழுருவாகிநின்றேழ்விடையினையெதிர்த்துச்செற்ற
பாழியம் புயத்தோனுக்குத்தேவியர்பலரென்றாலுந்
தோழிமீர்கவுசலன்றன்றனியறப்பெற்றுவந்த
வேழைதோளொருவானென்றுமிவனெனவறைந்தார்மாதர். (கசு)

அந்தரத்தமரர்போற்றியாடகமலர்கவே
நந்துதுந்துபிகளார்ப்பநான்மறையோர்கள்வாழ்த்தச்
சுந்தரன்மார்பின்மீதிற்றுலங்கிடவானிற்றோன்று
மிந்துநேர்வதனிகையாலலங்கலையெறிந்தாளம்மா. (கஎ)

அரியுறுமலங்கறன்னையரிவைசீரரிதன்மார்பிற்
* சரியுறுகரத்தாள்வாங்கியெறிந்திடுசதுரைநோக்கி
வரிநெடுங்கண்ணார்சிந்தைமகிழ்ந்தனர்மாயோன்றானுந்
திருவுளமகிழ்ந்துநின்றான்தேவதுந்துமிகளார்ப்ப. (கஅ)

அற்றனுறுகவுசலக்கோனன்பெனுங்கடலினாழ்ந்து
மறையவர்சூழவேகிமாயனைத்தழீஇக்கொண்டேகிக்
குறைவிலாமரகதத்தூண்கோலமார்மண்டபத்தி
னெறியுறுமுனிவர்சூழநேமியோனுடனுஞ்சென்றான். (ககூ)

ஆரமாமணியொண்ணீலமணியுறுமாலையெண்ணில்
வேரிமாமலர்கொண்மாலைவிளங்கிடச்சூழநால
நேரிலாவரிகளேந்துமாதனமீதுநீளும்
வாரிமேலிலங்குவானுமங்கையுமிருந்தார்மன்னோ. (உ0)

பங்கயன்போன்றகற்கன்பரிவினாகுதிகள்செய்யக்
கங்கைசேர்மலர்ப்பாதத்தன்கவுசலவரசன்பெற்ற
மங்கைதன்கந்தரத்தின் மங்கல நாணைச்சாத்த
யங்கியைவலம்வந்தன்னந்தாள்பிடித்தம்மிவைத்தான். (உக)

அரிவைதன்னுடனேமாயனருந்ததிகண்டபின்னர்
நிரைமணியாசனத்தினிறையுமோதனம்பாற்றேக்கித்
தெரிமலர்சூடிநானங்கமழ்ந்திடச்செம்பொற்சேக்கை
யிருவருமெய்தியின்பக்கடலிடையிருந்தாரன்றே. (உஉ)

ஆனிரையயுதமின்னேரிடையினாராயிரம்பேர்
மானவகோடிவீரர்மற்றதின்பதின்மடங்கோ
டனமிலிரதமெண்ணூறாயிரமீந்தானென்னா
ரூனுறுவேல்கொள்கையான்கவுசலனுகந்துமன்னோ. (உங)

---

* ஓர் முன்கையாபரணம்.

ஊக்கமார்கவுசலக்கோனீந்திடவுவந்தமாய
நாக்கினசித்தினோடுநலமுறுமிரதமேறிக்
கோக்குலவீரர்சூழவருங்குந்திசுதனோடன்பு
நீக்கமினெஞ்சனாகிநெறியிடையேகுமெல்லை. (உ௪)

விடைகளின்வெருவியோடுமன்னர்கண்மீண்டேயன்ன
நடையினண்மீதினாசைநண்ணிடநெறியிலாதார்
கொடியுறுமிரதங்கைம்மாக்குரகதம்வீரர்கூடக்
கடகளிறட்டான்றன்னைவளைந்துவெங்கணைபெய்தார்த்தார். (உ௫)

அன்னதுகண்டபார்த்தனழகியகாண்டீபத்தைத்
தன்னெழிற்கரத்தின்வாங்கிவளைத்துயர்சாயகங்க
டுன்னியகரிதேர்வீரர்துரகதமடியமாரி
மின்னியேபொழிந்தாற்போலச்சொரிந்தனன்விண்டிக்கெல்லாம். (உ௬)

தேரறக்கொடியுமற்றசிரமறமுடியுமற்ற
மார்பறத்தாருமற்றவளையறமுழக்கமற்ற
வேரறக்கலன்களற்றகுரமறவிவுளியற்ற
வாரறப்பேரியற்றமதமறவற்றகைம்மா. (உ௭)

எழுந்தனதலைகள்வானினிடைவிடாதியாக்கைமண்மேல்
விழுந்தனவரைகள்போலவிஞ்சியகுருதிவெள்ளத்
தழுந்தியவிரதமெல்லாமயங்கரியுடல்களற்றே
கழுந்துமளெறிவபோன்றகவந்தங்கணடிக்கும்பாரின். (உ௮)

இந்திரன்சிறுவன்வாளிதொடுக்கவொன்றேவப்பத்தா
யந்திரமிசையினூறுயிரமெணிலனந்தமாகித்
தந்தியையறுத்துமாவினுடல்களைத்தறித்துவீரர்
கந்தாந்துணித்துப்பாருட்செல்லுங்கட்செவியையேல. (உ௯)

விசயனெய்விசிகந்தன்னால்வீந்தவெம்பரிகடோலின்
றசையுறுகுருதியாசாய்த்தரணியினோடநீளும்
வசையுறமன்னரெல்லாமணிநெடுந்தேரைவிட்டுத்
திசைதொறும்பாரினார்கடேவர்கடுதிப்பமன்னோ. (௩௦)

வரிசிலைவிசயன்வாங்கிவாளிகள்பொழியமன்னர்
வெருவியாண்டோடநோக்கிவிமலன்வெண்முறுவல்செய்தே
தருமலர்பொழியவானோர்சங்குபேரிகைகளார்ப்ப
விரைவினிற்றுவரையின்கண்மின்னுடனேகினானால். (௩௧)

சூரசேனன்சேய்தாளிற்றூயநாக்கினசித்தோடு
மாரியன்வணங்கித்தாயரடியிணையிறைஞ்சலோடு
மாரனையருளுமாதுமங்கையருடன்றாள்வீழ
வேருறவவர்களோடுமின்பமுற்றிருந்தானன்றே. (௩௨)

## நாக்கினசித்து திருக்கலியாணப் படலம்.

முற்றிற்று.



ஆ படலம் எ-க்குக் கூடிய திருவிருத்தம் ருகக.

ஸ்ரீகண்ணபிரான் திருவடித்தாமரைகடுணை.

ஸ்ரீ

விஷ்ணுமயம்.

௮௬ - வது பத்திரையார்

# 7. திருக்கலியாணப்படலம்.



மத்திரவரசர்கோன்பயந்தமாதவப்
பத்திரையுள்குமுன்பசும்பொற்றேரின்மேற்
சித்தசன்சமிழ்க்கமுன்றோன்றிச்சேர்ந்தருள்
வித்தகனடிநினைவினைகள்பாறவே. (௧)

சுத்தமார்மறைகள்சாங்கியத்தின்றொல்பொருள்
கைத்தலக்கனியெனக்காணுங்காட்சிசா
னத்துறுவயல்செறிநாட்டையாள்கின்ற
மத்திரன்குலத்தினுட்சுரதகீர்த்திமன். (௨)

அன்னவன்பயந்தவளன்னமென்னடை
மின்னிடைக்கழைகொடோளயில்விலோசனங்
கன்னறேன்மொழிகவின்பூகங்கந்தர
மென்னவேயிலங்கியவெழில்கொள்பத்திரை. (௩)

கீதவேழிசையெலாங்கிளத்துமஞ்சுகந்
தீதிலாதுயர்புராணங்கள்சேரவே
யோதியங்குணர்ந்ததிற்பொருளையுன்னியே
மாதவனாதியென்றுணருமாமயில். (௪)

தூயமாமதுரையிற்றோன்றிக்கங்குலி
னாயர்நாயகன்மனையணுகியெய்தியே
பேயொடுசகடமாசுகன்பெகன்கன்று
தீயவேவதைத்தமால்செயலையுன்னுவாள். (௫)

தனுவினைமுறித்ததுங்கரியைச்சாய்த்ததுஞ்
சினமலிமல்லரைத்தரையிற்றேய்த்ததும்
வினையுறுகஞ்சனைவென்றவீரமு
மினியநல்வீணையினிசையப்பாடுவாள். (௬)

செருவினைவென்றுருப்பிணியைச்சேர்ந்தது
மிரவிநேர்மணியொடுமெண்கன்றீந்திடு
மரிவையோடமர்ந்ததுமலரிக்கன்பனா
நிருபர்கோனளித்தநேரிழையையுற்றதும். (௭)

என்றருள்காளிந்தியியற்றுமாதவ
நன்றெனமொழிந்தவணகிலைச்சேர்ந்தது
மன்றமர்செய்துவென்றவந்திமன்றரு
மன்றலர்குழலிதோளணைந்தவண்மையும். (௮)

* பெகன்=பகன்.

விலங்கல்போலெதிர்ந்துமேலடர்ந்தவேற்றினங்
கலங்கவால்பிடித்திழுத்தறைந்தகாலையி
னலங்கருன்றோளின்மீதெறிந்தவாயிழை
யிலங்கவேயணைத்ததுமெண்ணிச்சோர்குவாள். (௯)

முடிபிறைநுதலலர்முளரிச்செங்கண்க
ளடியிடைதோள்கரமதரமார்புயர்
வடிவெலாங்கவினுறவரைந்துமாட்சியாம்
படமுறநோக்கியேபகருவாளரோ. (௧௦)

கருமுகிலனையநின்னுருவங்கண்டியா
னுருகிடுமையலறவுற்றணைத்தெனை
மருவவிவ்வோவியவடிவமாகவே
யரியெனையணைத்தியென்றயருமெல்லையின். (௧௧)

கோடுயராழிகைதிகழக்கொண்டல்போ
லாடகவாடையுமணிந்துபங்கயக்
காடெனக்கண்கள்வாயுந்திதாள்கர
மோடுறத்தோன்றினன்மூராரிமாதுமுன். (௧௨)

கண்டனளிருகணீர்கலுழவாரமு
துண்டவளெனவுடறடிப்பவேயுவந்
தண்டமுண்டருளியவையன்றாளினின்
முண்டகவதனமின்பணிந்துமுன்னின்றாள். (௧௩)

நயனநீருறமயிர்பொடிப்பநாரமுற்
றியல்புறவிறைஞ்சியாண்டெழுந்தமங்கைதன்
மயலறவரிதிருமார்பினுற்றணைத்
தயமுறுதேரின்மீதமர்ந்துதோன்றினான். (௧௪)

பத்திமைதன்னுடன்பயோததிக்குளி
ணித்திரைதுறந்தமானெறியினேகியே
சுத்தநன்மலர்மழைசுரர்கடூவநீ
ளத்திருத்துவரையையணுகினானரோ. (௧௫)

முத்தினமரகதம்வயிரமொய்யமர்
வித்துருமங்களால்விளங்குதூணணி
வைத்துயர்விதானமீவயங்கவேதிகழ்
சித்திரநிறைந்தமண்டபத்திற்சீருற. (௧௬)

தாமமோடாடியதரளமாலையின்
காமரோங்கிடநிறைகமலம்பூத்தபோல்
வாமமேகலையர்வண்டீபமேந்திட
வேமமார்மடங்கல்களிலங்கும்பீடமேல். (௧௭)

யாதவன்பத்திரையுடனிலங்கிட
மாதவக்கற்கன்வந்தெய்திமாமறை
யோதிநெய்யனல்விளைத்தோமஞ்செய்யநற்
கோதையர்மகிழ்ந்துபல்லாண்டுகூறினார். (௧௮)

பாவையர்மகிழ்ந்திடப்பணிலமூதவே
மாவின்வாய்பிளந்துபுட்கிழித்தமாதவச்
சேவகன்மங்கலநாணைச்செங்கையாற்
காவிநேர்நயனிகந்தரத்தணிந்தனன். (கக)

பாவகன்றனைவலம்வந்துபாரினின்
மேவியவம்மிமின்மிதிக்கவிண்மிசைத்
தாவியவருந்ததிநோக்கத்தண்மலர்
தூவினரமரர்துந்துபிமுழங்கவே. (உ௦)

சிந்தையின்மகிழ்ந்தரிதேவிதன்னுடன்
றந்தையைவணங்கிநற்றாயர்தாடொழு
திந்துவின்வண்ணனையிறைஞ்சினன்றன்முன்
வந்தடிபணிந்தனள்விதர்ப்பன்மாமகள். (உக)

சித்தசன்றனைத்தருதேவிபாதத்திற்
பத்திரைவணங்கியபின்னர்ப்பாற்கட
லத்தனோடோதனமருந்திச்சேக்கையூா
மெத்தையினெய்தியேவிளங்கினரோ. (உஉ)

நானமொண்ணிமசலநல்லகுங்கும
மேனியிற்கமழவேளிராதிவெள்கிடத்
தேனெனுமொல்செறிந்தென்னச்சீதரன்
மானகுநயனிதன்னொடுமகிழ்ந்தனன். (உங)

குண்டினபுரத்துறுங்கோதைதன்னுட
னொண்டொடியார்மிகவுவந்துசூழ்ந்திடக்
கொண்டன்மின்குழாமொடுகூடச்சேர்ந்தபோன்
மண்டபத்திருந்தனன்மாயன்றானரோ. (உச)

பத்திரையார் திருக்கலியாணப் படலம்

முற்றிற்று.

---

ஆ படலம் அ - க்குக் கூடிய திருவிருத்தம் ருகஎ.

ஸ்ரீருக்மணி, சாம்பவதி, சத்தியபாமா, காளிந்தி, மித்திரவிந்தா, நாக்கினசித்து, பத்திரா சமேதாய நமோநமः



ஸ்ரீ

விஷ்ணுமயம்.

## அஎ - வது இலக்கணையார்

# திருக்கலியாணப்படலம்.



ஞாலமெண்பத்திராசகரமெய்தியே
வேலொளிர்விசயனெய்விசிகந்தப்பிய
சேலறவெய்திலக்கணையைச்சேர்ந்தருள்
மாலடிதொழுவிர்நும்பிறவிமாயவே. (௧)

வேறு.

சீருறுநெறிநால்வேதந்திங்கண்மும்மாரியெல்லாம்
பாரினிறையவாழும்பத்திரவரசன்மைந்தன்
பேரியல்புடையவீரனாகியபிரகற்சேன
னேருறப்பயந்தநங்கையிலக்கணையென்பாண்மன்னோ. (௨)

கழையிணைநிகராந்தோளாள்காந்தளைநிகராங்கையாள்
உழையிணைவிழியாடேவியோதிமநடையினாள்சீ
ரிழைநிகரிடையாள்செம்மையிலவைநேரதரத்தாள்வான்
மழைமுகினிகராமோதிவளைவினேர்புருவமங்கை. (௩)

பங்கயமுகையைப்போன்றபயோதரிபாரின்மேவுங்
கங்கையின்சுழியைமானக்கவிகொளுமுந்தியாள்பொற்
சங்கமாபூகநாணத்தரளமார்கந்தரத்தாண்
மங்கையர்திலகநந்தாவிளக்கெனவயங்குமாது. (௪)

இயல்புறுபுராணமாறுசாத்திரமிவைகளெல்லாங்
குயின்மொழியணங்குணடாளோதியேகொண்டல்வண்ணன்
கயலுறுகடலையோவிக்காசினியெய்திவெண்ணெ
யயிலுவோன்செயலையுன்னிமயலெழவணையிற்சோர்ந்தாள். (௫)

அலக்கணுற்றயர்ந்துபஞ்சவணையின்மீதயர்ந்துவீழ்ந்த
விலக்கணைதன்னைமாதரிருகையாலெடுத்தணைத்துக்
கலக்கமுற்றிமசலத்தைவிடவிழித்தெழுந்தாள்கண்ணி
துலக்கநல்லோவியந்தானுயிர்பெற்றதூய்மைபோல. (௬)

அரியுறுமிழுதுபோன்மெய்யுருகிடவனங்கன்சாபத்
தரியுருநாணைவாங்கிவிடுத்தவாசுகங்களுள்ள
மரியவேநொந்துமாலாமளக்கரினழுந்தித்தூய
வரிசெயல்தன்னையுள்கியிலக்கணையறைகின்றாளால். (௭)

தீதிலாச்சுகந்தங்கொண்டுசெறிந்திடுங்கூனிதன்னை
யேதமிலரம்பைநாணுமியல்புடையுருவமாக்கி
மாதவப்பத்தினைத்தேன்வளையுமோவியத்திற்றோன்றுஞ்
சீதரவடியாடன்னைச்சேர்ந்திடர்தீர்த்தியென்றாள். (௮)

நந்தொளிர்திகிரிசார்ங்கநலந்திகழ்கதைவாளோங்க
வுந்திகால்கைகண்செவ்வாயொளிர்நளினங்கள்பூத்த
கந்தரம்போன்றுநோக்குமிடந்தொறுங்காணநின்றே
யிந்திரசாலஞ்செய்தானிவனெனவியம்பிச்சோர்ந்தாள். (௯)

பத்திரவரசன்பெற்றபண்மொழிசோரக்கண்டே
கைத்தலநெறித்துமாதர்கண்கணீர்கலுழவந்து
சுத்தவொண்பனிநீர்மெய்யிற்சொரிந்தெடுத்தணைக்கத்தேறு
முத்தமிதன்னைநோக்கித்துணைவியருரைக்கலுற்றார். (௧௦)

கருங்கலையரிவையாக்கிக்கடிபொழிலிலங்கைக்கெய்தக்
குரங்கலையுவரிகட்டிநிருதனைமுன்னட்கொன்றான்
வருங்கலைநிறைந்தவிந்துவதனத்தாய்வாடியுள்ள
மிரங்கலையென்றுகூறத்தேறிமின்னிருக்குங்காலை. (௧௧)

மனுவெனச்செங்கோலோச்சிவாழ்கின்றபத்திரக்கோன்
றுனியறுதவத்திற்பெற்றவிலக்கணைதன்னைத்தூய
தனுவளைத்திலங்குகின்றசலசரமெய்தார்க்கீவ
னெனமுரசறைமினென்றானியல்புடன்களித்துமாதோ. (௧௨)

அரசனீதறையக்கேட்டவள்ளுவரவனியெங்கு
முரசறைந்துரைத்தலோடுமுடியொளிர்வேந்தரெல்லாம்
புரசைமாக்கரிதேர்வீரர்புடைபுரவிக்களெல்லாம்
பிரசமேநாடிச்செல்லும்பெற்றிபோனகரிற்சேர்ந்தார். (௧௩)

பத்திரவரசர்கோமான்பயந்திடவிலங்குகின்ற
வித்துருமத்தின்கொம்புபோன்றமின்னிடையினுடன்
கைத்தலம்பற்றிவேட்கக்கருதியேயிரதமீதி
னுத்தவனுடனுமாயோனுவந்துமாநகரிற்சேர்ந்தான். (௧௪)

நவமணித்தூண்கள்சேரநலனுறுமண்டபத்தி
னவனியினரசரெல்லாமாடையாபரணந்தோன்றக்
கவிகைகள்மதிபோலோங்கக்கவினுறவிருப்பவேவான்
புவியையீரடியாற்கொண்டான்புகுந்துவீற்றிருந்தான்மன்னோ. (௧௫)

துன்னியநவமணித்தூண்டுலங்கியமண்டபத்திற்
பொன்னெடுவரையைப்போன்றவில்லினைப்புவியின்வைத்து
மின்மணித்தாழிதன்னுட்டோன்றுமம்மீனைச்சுட்டி
நன்னிலவரசர்க்காங்கேபத்திரனவிலலுற்றான். (௧௬)

இருநிலத்துயர்ந்தவில்லையெடுத்தெழினாணையேற்றி
யொருகணைதொடுத்துநீருளுலாவியகயலையெய்தா
னருவினையொருவயான்றனளித்திடுமழகான்மிக்க
தெரிவைதன்மகிணனென்றுசெப்பினன்பிரகற்சேனன். (௧௭)

அன்னதோர்காலைதன்னினடையினாலன்னநாணக்
கன்னல்கோங்கரும்புபூகங்கந்தரம்வள்ளைக்காந்தண்
மின்னயிலாரமாம்பல்குமிழ்பிறைவில்லிதெல்லாந்
துன்னுமாடகக்கொம்பேபோலலங்கல்கைதோன்றவந்தாள். (௧௮)

மொழியினாற்கிளிகணாணமுகத்தினாலிந்துநாண
விழியினாலுழைகணாணவிடையினான்மின்னுநாணக்
குழையினால்வள்ளைநாணக்கொங்கையாற்கரும்பைநாண
வழகினாலரம்பைநாணவரசர்கண்மயங்கவந்தாள். (௧௯)

பரிபுரமரற்றப்பாதசாலமும்வயங்கிக்காட்டத்
தெரிமணிக்கலாபமின்னச்சிறந்தபொற்கலிங்கந்தோன்ற
விருகரவளையிலங்கவெழின்முலையாரமாடச்
சுரிகுழலளிகள்பாடத்தோடுகாதாடவந்தாள். (௨0)

அரிமலரலங்கல்கையினழகுறவெய்தத்தோன்றுந்
தெரிவையைநோக்கிமன்னர்சித்திரம்போலநின்றார்
கருமுகில்வண்ணமாலைக்கண்டிலக்கணையாங்கோதை
யிருகணோடாவிசிந்தையவன்வயினெய்தநின்றாள். (௨௧)

மாரன்விற்காற்றாராகிமகதர்கோவநந்தன்மைந்தன்
வீரரொண்விசயனங்கன்சேதிபன்முதலாம்வீரர்
பாரின்வில்லெடுத்துநாரியேற்றியேபகழிதன்னா
னாரமுண்டயிலையெய்தும்பழுதுறநாணமுற்றார். (௨௨)

வீரியர்கயலெய்வாளிபழுதுறவெள்கிநிற்ப
வாரியன்சிலைநாணேற்றியாசுகந்தொடுத்துத்தாழி
நீரினுணோக்கிவானினெய்திடநெடுமீனற்றுப்
பாரினில்வீழத்தேவர்பன்மலர்தூவியார்த்தார். (௨௩)

சங்குமாபணவம்பேரிசச்சரிதழங்கப்பாரி
னெங்குநான்மறையோரோத்தவிலங்குமாதவன்றன்றோளிற்
பங்கயத்திருநேரானவிலக்கணைபரிவினாலே
யங்கையாலலங்கறன்னையணிந்தனளமரர்வாழ்த்த. (௨௪)

சேலறவெய்துநின்றதிருமகள்கணவனான
மாலுடன்மறையோர்சூழப்பத்திரமன்னன்மாசி
னீலமாம்வயிரம்பச்சைமரகதநித்திலஞ்சேர்க்
கோலமார்மணியார்தூண்கள்கொண்டமண்டபத்திற்புக்கான். (௨௫)

சாதிபுண்டரீகம்வெட்சிதளவுகல்லாரமௌவல்
சோதிசெய்மாலைநாலநவமணிக்கோவைதோன்றக்
கோதையர்தீபமேந்திக்குலவுமண்டபத்தின்மீதின்
வேதியர்முனிவர்வேந்தரரிவையர்மிடைந்தார்மாதோ. (௨௬)

அலரியின்சுடரைக்காட்டுமெவிர்மணியாதனத்தி
னிலகியநீலந்தன்னோடெழின்மணியமைந்ததென்ன
வுலகயின்மாயவன்றானிலக்கணையுடனீள்பாரி
னலனுறவீற்றிருந்தானகர்கடுதிப்பமன்றோ. (௨௭)

கரதலாமலகம்போலவேதநூற்காட்டுஞ்சொல்லின்
சரதநான்மறையோர்சூழத்தவமுயர்கற்கனெய்திச்
சுருதியான்மொழிந்துதூயகும்பமுந்துலங்கவைத்தே
யரிதிருக்கையின்மங்கைகையினிலணிந்தான்காப்பு. (௨௮)

மந்திரநவின்றுநெய்யினுகுதிவழங்கவன்பிற்
குந்திதன்முன்னோன்மைந்தன்மங்கலநாண்கைக்கொண்டே
யிந்துநேர்வதனியானவிலக்கணையென்னுமாதின்
கந்தரந்திகழச்சாத்தக்கம்பினங்கறங்கிற்றம்மா. (௨௯)

வன்னியைவலம்வந்தெய்தமாதம்மிமிதித்தலோடுந்
தன்னிகரில்லாமாயோன்றேவியுந்தானுமாக
மின்னியவடமீன்றன்னைவியந்துறநோக்கிநிற்பத்
துன்னுநான்மறையோராசிசொல்லியேதுதித்தாரம்மா. (௩0)

அம்பொனின்கலத்தினெய்பாலன்னமோடருந்தியேதா
னும்பலின்கோட்டின்சேக்கையுற்றரிதிருவுமெய்தி
வம்பவிழ்மாலைசூடிமணங்கமழ்கலவைகோட்டி
யிம்பரிற்சுரதநூலினின்பமுற்றிருந்தாரன்றே. (௩௧)

வேறு.

கரியினற்றொகையெழுபதினாயிரங்கலினப்
பரிகண்மற்றதின்சதமடங்கவற்றினிற்பாதி
யிரதம்வாளயில்வீரர்களேழிருகோடி,
யரிவைமார்களோராயிரம்பத்திரனளித்தான். (௩௨)

பத்திரன்னிவையளித்தலும்பரமனுமுவந்தே
சித்திரம்முயிர்பெற்றதொத்தனையதேன்மொழியோ
டுத்தவன்னுடன்றுருகன்கொணர்ந்ததேருற்று
மைத்துனன்னெனும்விசயனோடேகினன்மகிழ்ந்தே. (௩௩)

சூகரங்கரிசூழ்ந்திடுபழுவத்தைக்கடந்து
சீகரஞ்செறிதிரையின்மேற்றிமிங்கலம்பாயுஞ்
சாகரம்மகழாகியதுவரையைச்சார்ந்தான்
சேகரம்மிசைக்கிரீடமாமணிதிகழ்ந்திடவே. (௩௪)

மாயன்றேவியோடெய்திநற்றந்தையைவணங்கித்
தாயர்தங்களையிறைஞ்சிமுன்னோனடிதாழ
நேயநீடியவுருப்பிணிநெடியவன்றளிற்
றூயதண்மலர்தூவியேபணிந்தனடுலங்க. (௩௫)

மாதவன்றனைத்தொழுதெழுவுருப்பிணிமங்கை
பாதமீதினிலிலக்கணைபரிவுடன்பணிய
வாதரத்துடனணைத்துளமகிழ்ந்தனள்விதர்ப்பன்
கோதையாகியகுண்டினபுரத்தெழிற்கொம்பு. (௩௬)

சித்தசன்றனைத்தருமவள்சிறந்தசாம்பவதி
சத்திராசித்தன்றனையள்காளிந்தியாந்தையன்
மத்திரன்கொடிநாக்கினசித்துமாவிந்தை
பத்திரன்மகள்சூழ்ந்திடப்பரமன்வீற்றிருந்தான். (௩௭)

## இலக்கணையார் திருக்கலியாணப் படலம்
## முற்றிற்று.

ஆ. படலம் ௯-க்குக் கூடிய திருவிருத்தம் ௫௭௪.

ஸ்ரீ

விஷ்ணுமயம்.

## ௮௮-வது நரகாசுரன்

# வதைப்படலம்.



எரிமலைவாரிமாருதங்காணுயுதமயமெழுவகைமதிலு
முரனொடுமெடியநரகனைவதைத்தேயவன்சுதன்முடிபெறவருளி
யரசர்தஞ்சிறைவிட்டவர்கடாம்பயந்தவமுதகீதத்தியாழறிந்த
தெரிவையர்பதினாறாயிரம்பெயரைமணஞ்செய்ததேவனைத்துதிப்பாம். (௧)

முரனுடனீரேழுலகமுமஞ்சமுடுகியெண்டிசைகளைவென்ற
விரணியநயனன்றனைவதைத்துயர்ந்தவெண்கணன்வலாரியோடேத்தத்
தரணியையெயிற்றாலிடந்தருள்வராகமூர்த்திதன்வேர்வினிற்சனித்தே
வருணயனில்லாநரகனெண்பிராக்குச்சோதிடபுரத்தினையமர்ந்தான். (௨)

நீலமொண்டரளமணிமரகதங்கணிறைந்திடுமாடகோபுரங்கண்
மேலவன்பதத்திலுயர்ந்திடவயங்கும்வீதிகோபுரத்தணிவிளங்கக்
காலயந்தேயுகான்வரைநாரங்கணையுடனெழுவகையெயிலுங்
கோலமுற்றிடவேவளைந்திடக்கரிமாவீரர்தேர்குரகதநிறைய. (௩)

வரனுறுமுரன்றனமைச்சனுய்வயங்கமற்றவன்சுதரொழுவோர்கள்
கரிபரியிரதந்துவாதசாக்குரோணிசேனைக்குங்காவலராக
வருணனேடியமன்குபேரனைவென்றுமறனுறுநரகன்வானவர்கோன்
வெருவவெண்கவிகைமணிவரையதிதிகுண்டலம்விரைவினிற்பறித்தான். (௪)

அரசர்கள்பதினாறாயிரத்தவரையருஞ்சிறையிருத்தியேயவர்தா
மிருணிலம்வயங்கப்பயந்தகன்னியர்களெண்ணிரண்டாயிரத்தவரைச்
சுரருலகியங்குமரம்பையர்முதலோர்தும்புருநாரதர்நாணச்
சரியிலாக்கீதம்பயிற்றுவித்தனனாற்சதமகன்கவிகையைப்பறித்தான். (௫)

அடுஞ்சினநரகாசுரனிடுஞ்சிறையினழுந்தியவரசர்களொருங்கா
யொடுங்கிமெய்யுலர்ந்தேயுழல்பவொம்மைச்சிறைவிடுத்துதவுதியென்னக்
கடஞ்செறிகரியைக்காத்தருளரிபாற்கடுகியதூதனையேவத்
தடஞ்செறிதுவரையடைந்தரிமுனரினிருபர்சொற்சாற்றினரன்றே. (௬)

மன்னவர்விடுத்ததூதுவருரையைவாசுதேவப்பிரான்கேட்டே
யின்னல்செய்நரகாசுரன்றனைவதைக்கவெண்ணிவானிமையவர்போற்றப்
பன்னகப்பகைஞன்றோண்மிசையதனிற்பண்மொழிசத்தியவாமை
தன்னுடன்விரைவிற்சென்றனன்கவிகைதயங்கிடச்சாமரைபுரள. (௭)

துலங்கியபிராக்குச்சோதிடபுரத்தைச்சூழ்ந்திடும்புரிசையாம்வரையை
யிலங்கியகவுமோதகக்கதையதனாலிமைப்பொழுதினிற்றுகளாக்கிச்
சலங்கனலயங்காலெயில்களைத்திகிரிதன்னினாலறுத்துயர்வாளால்
விலங்கல்சால்பழுவமழித்தொருகணையால்விசிகமாமதிலினைச்சிதைத்தான். (௮)

ஏழிலிமீதுயர்ந்தவெழுவகைமதிலுமிமைப்பின்முன்னழித்துயரண்டங்
கிழிபடுங்காலமடைந்ததென்[illegible]யோரயிர்த்திடக்கிரிகளுமசைய
விழிதழலுறவேபுவியினைத்தாங்குஞ்சேடனுமிடியெனவெருவக்
குழலிசைவாயாற்பாஞ்சசன்னியங்கைகொண்டவண்[illegible]னன்கோமான். (௯)

வேறு.

அரிகளுழன்மிசையனநடையாளொடுமணுகியவ்வெயிலேழு
மொருநொடியிடுமுனமழிவுசெய்துயர்வளையூதியவொலிகேளா
விருநிலனயனிறைநதியினுளமர்முரனிறுதியினுறுமேற்றி
னரனெனவைம்முகமிலகவயங்கியவயில்கொடெதிர்ந்தனனால். (௰)

அவனியதிர்ந்திடவமரர்களஞ்சிடவார்த்தெதிர்சூலத்தா
லுவணன்மெய்குருதிகளொழுகிடவுரன்மிசையுரனொடு[illegible]லுமே
சிவணிடர்களையரியிருகணைகொடுவருதினகரனவிரோபோற்
பவமுறுமுரனிருகயினமரயிறுகள்படவுதறினன்மாதோ. (௧௧)

அயிறுகடரமுரனடுசினமொடுவிடுமெள்வியகதைதானு
மியல்புடையரிகவுமோதகமோதிடவெண்ணில்பல்கூறுகக்
கயிலையினரனுதல்விழியுறுகனலிவர்கதமொடுதேரேறிப்
புயல்பொழிமழையெனவரிவிலொடுயர்கணைபுனிதன்மெயினிலெய்தான். (௧௨)

வேறு.

முரன்விடுத்தகணையிறுதிகாலமழையேயவெங்கணுமுடுக்கியே
திரிபுரத்தினையெரித்ததேவனும்வெருக்கொளத்திசைகள்மூடவான்
சுரர்திகைத்தலறியோடவாரியனல்சூழும்வெம்மையதுகண்டுயர்
வரைகவித்துவருடந்தடுத்தவிறைவரிவில்வாளிகொடுமாற்றினான். (௧௩)

நீசனுமுரன்முனிந்துதாசனனெடும்படைக்கலம்விடுத்திட
வாசைவாரியுயரண்டமுற்றவழல்விஞ்சவேகதிர்களஞ்சியே
நாசமாமுலகமென்றுநைந்துமெய்நடுங்கவேவருதல்கண்டெழில்
வாசுதேவன்வரிவில்லினுவிரவிவாளிவிட்டவையறுத்தனன். (௧௪)

நகாயுதம்மெனமுனிந்துவாளவுணனஞ்சுவிஞ்சவுமிழ்கஞ்சுகி
மகாயுதந்தனைவிடுக்கவானவர்களஞ்சவந்தடரவுவணனுங்
ககாயுதந்தனையுலோகபாரணனிமைப்பின்முன்கடவவிசையில்பஞ்
சுகாயுதாசனனைபொத்தறைந்திடவெரிந்தமாசுடிகையரவமே. (௧௫)

கறைமிடற்றரன்வெருக்கொளக்கடியகார்முகம்வளையவேமுரன்
மறலிதன்படைவிடுப்பமாதவர்களிரியவெண்டிசையின்வைகிடுங்
கறையடிக்குலநடுங்கவான்வருதல்கண்டுமாயன்விபுதர்க்கெலா
மிறைவன்வெங்கணைகடாவியேயதையறுத்தனன்முனிவரேத்தவே. (௧௬)

வேறு.

வானேறெனவதிர்த்தேமுரன்வரிவிற்கொடுகொன்றைப்
பூநாறியசடையோன்படைகடவப்புகையெரியா
மீனூறியகடல்வற்றிடவரவாவினம்விளங்கக்
கானூறிடைதிரிவோனரன்கணையாலவைகளைந்தான். (௧௭)

முரன்விட்டிடுபடைமுற்றவுமுரியச்சினமுதிரா
வரிவிற்கடிதிரண்டாம்பிறைமானக்கையின்வளையா
வரிசத்தியவாமைக்கொடியருணற்கிளையவனீ
டரணிக்கணிற்றெரியாவகைசரமாரிகள்பொழிந்தான். (௧௮)

வேறு.

கடியவன்விடுசரமழையறவுயரரிகணைசிலைகொடுவிட்டே
மிடலொடுபரிதியைநிகரொனவொளிவிடுதிகிரியைவிடலோடும்
முடியொளிர்ந்துகமறமுரன்மடிதலுமுனிவர்கடுதிசெய்தே
நடமிடவமரர்கள்கடிமலருதவினரவனியினலனெய்த. (௧௯)

முரனருள்புதல்வர்விபாவசுவசுசிரவணன்முகினிறமாய
வருணனுடன்போதாமிரனந்தரிகணனறநெறியில்லா
வெரிகணனபனச்சுவன்முதலாகியவெழுவர்களுயர்சேனைக்
குரியவனாகியபீடனொடணிகமுறக்கணைபெய்தார்த்தார். (௨௦)

துந்துமிமுரசமுழங்கினசங்குகறங்கினதுவசங்க
ளந்தரமுறவிரதங்களடைந்தனவயனிறைபடிமிடையத்
தந்திகள்கடலெனநிறையவில்வீரர்கள்சாயகம்விட்டெதிரோ
வந்துயர்வேலயில்வாள்மழுகுந்தமெறிந்துவளைத்தனரால். (௨௧)

கரிபரியிரதமொடணிகநிறைந்தெழுகடலெனவடர்தலுமே
யரிகணைபெய்திடவிபவணியற்றனவயநிறையிற்றனவா
லுரனுடையவயவர்மடிந்தனர்செம்புனலோடியவாறெனநீ
டரையினிலலகைகள்சுற்றிநடித்தனதாயகவந்தமரோ. (௨௨)

கொடிகுடையற்றனகவரிகளற்றனகுரகதமற்றனவாற்
கடகரியற்றனவரிசிலையற்றனகரமுரமற்றிடவே
வடவரையிற்றெனவவுணர்படிக்கணின்மறியவுடற்குருதி
கடலிடையுற்றனவலகைநடித்தனகழுதுகள்சுற்றிடவே. (௨௩)

மறவியெனக்கரிபரியிரதத்திடைமலையவுணத்திரளோர்
பறைகளடித்திடவிடுபகழித்திரள்படியினிடைத்துகளாய்
நிறையமுடித்தலையுருளவிபத்திரனெடியகரத்துடனே
மறியவடிக்கணைதிசைதொறும்விட்டனன்மலர்மகளுக்கினியான். (௨௪)

இவுளிகளிற்றிடவலவனுமற்றனனிரதமுமிற்றிடவே
துவசமுமற்றனவரிசிலையற்றனதொடுகணையிற்றிடவே
யவுணர்களிற்றனர்மதகரியற்றனவலகைநடித்திடநீ
ளுவரியினுற்றனநிறைகுருதிப்புனலுலகயில்வோன்கணையால். (௨௫)

வீடியவிபநிறையிவுளிகளெண்ணிலவிடமெனவடரவுணர்
நீடியவரையெனவுடல்விழவெயிறுகள்பிறையெனநிலனுறவே
கேடகமறவிருகரமறமுடிமணிகிளரொளிவானமெலா
மூடிடவோடினகுருதிகண்மாயவன்முடுகியநீள்கணையால். (௨௬)

மலர்மகணாயகன்வரிசிலையால்விடும்வாளிமிடைந்திடலுங்
கலனொடுமுகமொருகரமனைகோடலைகால்கடுணிந்திடவே
மலையெனவிழமதவிபநிறையிவுளிகண்மாளமலைந்திடுவோ
ருலவையறைந்திடவுவரிகிழிந்தெனவோடினர்வாடியரோ. (௨௭)

அரிசிலைகொடுவிடுகணையினிலவுணர்களமரின்மடிந்திடலும்
வெருவியுடைந்திடுமசுரரையஞ்சன்மினென்றுவிளம்பியுயர்
முரனருள்சிறுவன்விபாவசுவெஞ்சினமுடுகிடவையமிசை
சுரர்பயமெய்திடவேநெடுவாளிசொரிந்தனன்வில்லினரோ. (உஅ)

ஈரமிலாமுரன்மகன்விடுகணையறயாதவர்தம்பெருமான்
கோரநெடுஞ்சரமெய்தழல்வாளிகுறித்தவன்மேல்விடலும்
வாரிகலங்கிடமதிகனலுற்றிடவடவையுமஞ்சிடமா
வீரவிபாவசுசென்னியறுத்தனன்விபுதர்நடித்திடவே. (உக)

அசுரர்நடுங்கவிபாவசுமாண்டமைகண்டழல்நெஞ்சினனாய்
வசுவெனுமாற்றொர்தேர்மிசையேவடவெற்பெனவந்திறுதிச்
சுசியெனவாசுகமாரிசொரிந்துயர்சுரர்கணடுங்கிடவே
சசிதரனஞ்சவருக்குனமாகியசங்கமுழக்கினனால். (௩௦)

தெசதிசைநிறையமுரன்சுதனேவுசிலீமுகமாரியெலா
நிசிதநெருளியினிலவறுசெயலாமெனநேமிதரித்தபிரான்
விசிகம்விடுத்தவைநூறியிராக்கதவெம்புடையுந்தியுயர்
வசுசிரம்வானுறவேதுணிசெய்தனன்வானவரோத்திடவே. (௩க)

அரவெனமுனிவசுசிரனெடுவானுறவசுரர்களோடுதலுஞ்
சிரவணனஞ்சன்மினென்றுயர்தேர்மிசைநின்றெளிர்சிலைவளையா
மருவமர்துளவனும்வசுதையுமுவணனுமறைவுறவிமையவர்க
டருவமர்நகரிறையுடன்வெருவப்பலசாயகமெய்தனனால். (௩உ)

முரனருண்மைந்தன்விடுங்கணையெண்டிசைமூடலுமாயன்விலாற்
சரமழைபெய்தவைமாற்றிமுரண்டருசமனுயர்படைவிடவே
யிரவியுமஞ்சிடவுததிகலங்கிடவெங்கணும்வெங்கனலாய்ச்
சிரவணன்வன்றலையைத்தரையிட்டனர்தேவர்களார்த்திடவே. (௩௩)

முரனுறுசிரவணன்மடியமுனிந்துமுடங்குளைபோலவெதி
ரருணனுயர்ந்திடுதேர்மிசையெய்தியடற்சிலைநாணெறியக்
கருணைமலிந்திடுகண்ணனைநீயிவைகாக்குதியோவெனவே
வருணனெடும்படைவிட்டனன்வானவர்மறுகியுளந்தளர. (௩௪)

கருணையிலாமுரனருள்சுதனேவியகடலரசன்கணையை
முரணுறுசித்திரபானுவின்வெம்படைவிட்டவைமாற்றிமுகில்
வருணனியாதவன்வாசவன்வெம்படைவரிசிலையால்விடலு
மருணனெடுந்தலையைத்துணிசெய்தனவமரர்களார்த்திடவே. (௩௫)

வேறு.

தீதாய்வருமருணன்சிரமறவெஞ்சினமுறவே
போதாமிரன்கடுங்கூற்றெனப்புகையாச்சிலையுறுநாண்
காதோடுறக்கணைகாசினியிடக்கக்கதமிகுத்த
பூதாரவுருக்கொண்டவன்மேலேபொழிந்தார்த்தான். (௩௬)

சூதாயெதிர்முரனார்சுதன்றூவுங்கணையறவே
காதார்விழித்திருநாயகன்கணைமாரிகள்சொரிந்து
வேதாதியர்வியந்தேயிடவிடையோன்படைவிடவப்
போதாமிரன்சிரமற்றனன்புத்தேளிர்களார்ப்ப. (௩௭)

## வேறு.

வந்தெதிர்ந்தபோதாமிரன்மாளவே
யந்தரீக்கனம்பொன்சில்வித்தேர்மிசை
முந்திவெஞ்சினமூளவழற்கணை
சிந்தினனிமையோர்கடிகைக்கவே. (௩௮)

வந்தெய்தியவன்வாளியைமாற்றிநற்
சுந்தரன்றொருதோமரமுந்தவே
யந்தரீக்கன்சிரகரமற்றிடச்
சிந்தினர்மலர்தேவர்களாடியே. (௩௯)

## வேறு.

அவனிக்கணின்மடிந்தேயந்தரீக்கன்விழவறனில்
பவனச்சியமுரகாசுரன்பயந்தேவளர்குமரன்
நவனச்சுவன்முனிந்தேசிலைநாண்காதுறவாங்காத்
தவரச்சமுற்றிடமாயவன்றன்மேற்சரஞ்சொரிந்தான். (௪0)

விபுதற்கியமனையொத்தவன்விடுவாளிகளெல்லாந்
தபனச்சுடரொளிபோல்விடுசரத்தாற்பொடிபடுத்தி
யிபனச்சிடவருமச்சுதனிகளிப்படைவிடுப்ப
நபனச்சுவன்சிரமற்றதுநாகாதிபர்துதிப்ப. (௪௧)

மூடுங்கனல்போலேமுனிமுரன்சேயெழுவரையுங்
கோடொன்றியகரவச்சுதன்கோலால்வதைசெயலும்
பீடன்னடுசினத்தோடுயர்பிறைபோற்சிலைவளையா
நீடுங்கணைபொழிந்தார்த்தனனிறையப்பொழிமழைபோல். (௪௨)

சேடன்னெனமுனிவெய்தியசேனாபதிவிடவே
மூடுங்கணைதுகளாயிடமுகுந்தன்சரம்பொழியா
நீடும்விலினங்காரகனிரைமாப்படைவிடுப்பப்
பீடன்சிரமறவோடினர்பிறைவாளெயிற்றவுணர். (௪௩)

முரகாசுரனருண்மைந்தர்கள்பீடன்றொடுமுடியத்
தரைமீதுறமடிந்தாரெனக்கேட்டேதழற்கண்ணன்
கரிகோடுறுதேரின்றொடுகலினப்பரிசூழ
நரகாசுரனெதிர்ந்தானுலகேழெண்டிசைநடுங்க. (௪௪)

இருகாலையிலரனுமெனநரகாசுரனெதிர்ப்பப்
பறைபேரிகும்பிகைசச்சரிபணிலங்களுமுழங்கத்
திறல்வீ.ரர்கள்மதமாநிறைவளையச்சிலைவளையா
நிறைவாளிகள்பொழிந்தார்த்தனர்நெடியோன்றனைமறைத்தே. (௪௫)

மழுநேமிகணகம்வேலயில்வளர்குந்தமுசுண்டி
யெழுமாகதையிவையெண்ணிலவெறிந்தும்வரிசிலையால்
அழலாசுகஞ்சொரிந்தேகரியயந்தேர்படையொடுவெய்ங்
குழலூதியவிறையோன்றனைவளைத்தார்த்தனர்கொடியோர். (௪௬)

### வேறு.

வளையையொப்பவர்பிறையெயிற்றினர்வடவையுற்றெனவிருகணுற்
புருவநெற்றியினுறவிழிப்பவர்புகையுயிர்ப்பவரறனிலா
ருருமுமுட்கிடவெடிபடச்சொலுமுளையர்கட்செவியுமிழவே
வருவிடத்தினைநிகர்சினத்தினர்மறவருற்றனரிரதமேல். (சஎ)

படிபிளப்புறவடிபெயர்த்திடுபவர்களொப்பவர்சிலையினைப்
பிடிகரத்தினர்பிறையெயிற்றினர்பிரதியற்றுயர்முடியினு
ரிடிவெடித்திடவுறநகைப்பவரொழிவியைப்பிழியிருகையார்
கடமதித்திடுகரியினுற்றவர்கவசமுற்றெருவிர்வயவரே. (சஅ)

அடியினிற்பெருவரைபொடிப்படவிடறியத்தியினயமறக்
கடிதிறைப்பவரொடுகரத்துயர்ககனமுற்றிடநிமிர்மெயார்
வடவையற்றிடவிடுமுயிர்ப்பினர்மறமிகுத்தவருரகன்வாய்
விடமெனக்கதமுறுமனத்தினர்விரைவினுற்றவர்பரியின்மேல். (சகூ)

திசையினுற்றவர்வெருவவவிற்கொடுசிலிமுகப்பெருமழைபெய்தே
சசியினற்பதியிமையவர்த்திரடவர்கள்முற்றவுமிரியவே
யசுரர்கைத்தலவளைமுழக்கினர் அழலுகுத்திடுநயனமாக்
கசரதக்குழுகுரகதத்தினமுறவளைத்தனர்கதமொடே. (ரு௦)

### வேறு.

மகராலயமெனவேவருமதமாமணிவளையச்
செகமாதரியுரகாரிமெய்தெரியாவகைசிலையா
லுகமாமழையெனவாசிகடொறுமாசுகமுறவே
யிகமாவுறுமிரதாதிபரசுரேசர்களெதிர்ந்தார். (ருக)

அயில்வேலெழுமழுவாள்கதையடர்நேமிகளெறியாப்
புயல்போலெழுசரமாரிகள்புவியாசைகணிறைய
மயில்வாகனனயிராவதவிறைவானவர்வெருவ
வெயிலோனவிர்மறையும்படியசுரேசர்கண்மிடைந்தார். (ருஉ)

கல்லோலநிறைந்தேவருகடலாமெனவசுர
ரெல்லோர்களும்பல்லாயுதமெறிந்தெய்துவந்தடர்ப்பச்
செல்லாமெனத்திகழ்மேனியன்றிசைவானுமண்மறைய
வில்லாலிறுதியிற்பெய்மழைபோல்வாளிகள்விடுத்தான். (ருங)

### வேறு.

கரியமேகம்விழுதன்மைபோலவடர்கரிகளெங்கணுமடிந்துமா
வரைகள்வீழ்வதெனவேயுருண்டவுயர்வானிலங்கிடும்விமானநீ
டரையினிற்றதெனவிற்றதேர்நிரைசலங்கொளாற்றினைநிகர்த்தலை
பரவுசெங்குருதியோடவாடியகவந்தனீளலைகைபாடவே. (ருச)

நாரியற்றதனுவற்றவங்குலிகளற்றவற்றநகமிற்றபொற்
றேரினுற்றவசுரேசர்மெய்சிமயமற்றதொத்தவர்கள்சென்னிகள்
பாரினுற்றவிடதரமெனக்கரணிலத்தினற்றுவிள்வேபல
வாரியிற்றதெனவெங்கும்வெங்குலிகநீர்பரந்தவரிவாளியால். (ருரு)

கவரியற்றகொடியற்றவெண்கவிகையற்றசூதனுயர்கந்தர
மிவுளியற்றுருளையற்றவற்றவிரதங்களாணியறவெதிரிலா
மவுலியற்றவடநாகமொத்தசுரர்மண்ணினின்வீழவுதிரப்புன
லுவரியுற்றனவுலோகநாதன்விடுகணைகளெண்டிசையுமுறவரோ. (ருசு)

கோடிமாகரியிமைப்பின்முன்னமிருகோடுகையுடல்குறைந்திட
நீடுநாகனிலன்வீழ்வதொத்துருளநிகரிலாவவுணர்முடிகள்வான்
மூடியெண்டிசையுறச்செறிந்தபினர்முகிலின்மீதடரவயிரியர்
ஆடல்போலெழுகவந்தமெங்கணுநடித்தமால்பகழியறையவே. (ருஎ)

சுடிகைநீடரவின்மேனடித்தவிறைதூவுமாசுகமடர்க்கவோர்
கடிகைநேருமுனெணக்குரோணிபடையவீயவேயசுரர்கணமெலா
முடிகள்வான்மிடையவுடல்கள்பார்நிறையமூடுகுசெங்குருதியோடநல்
வடகம்வீசிமலர்தூவியாடினர்கள்வானுளோர்தவர்மகிழ்ந்தரோ. (ருஅ)

வேறு.

குரமற்றிருதுடையற்றிடக்குதிரைத்திரளுருண்ட
கரமற்றுயர்தாளற்றிடவேவீழ்ந்தனகரிகள்
சிரமற்றிடவயவீரர்கள்மடிந்தார்கொடித்தேரின்
நிரையற்றிடவிழுந்தோடினரசுராதிபர்நிலத்தே. (ருகூ)

இடைந்தோடலுநரகாசுரன்மொழியாலிபவீரர்
சுடுந்தீயினைநிகராகியகணைமாரிகள்சொரிந்தங்
கடர்ந்தேயிடப்பனசாசனன்சிறகாலடித்தமிர்தக்
கடந்தானெடுத்துயர்கைக்கொடுவதைத்தான்கதமூள. (சுo)

நஞ்சாசனனுலானனனுகர்க்கிறைதுதிப்பப்
பஞ்சானனமஞ்சும்படிபணிலங்கண்முழக்கி
யஞ்சாதடரவுணத்திரளயமாகரிதேர்கள்
பஞ்சாமெனப்பறக்கச்சிரகடித்தான்ககபதியே. (சுக)

கூர்வாணிகருகிராற்கரிபரிதேரிவைகோத்துப்
பார்வான்கிரிதிசையெங்கணும்மடித்தான்பலகரத்தா
னேரார்தமைமூக்காலுடற்பிளவாநெருப்புமிழ்ந்தே
யாராவிருசிறகேவிரித்தடித்தேவதைத்தனனால். (சுஉ)

அதிர்ந்தேயடர்கலுழன்கையிலவுணத்திரண்மாளக்
கொதித்தேவருநரகாசுரன்கொடுவாளிகள்பொழிந்தே
எதிர்த்தார்த்தெரிசுடர்வேற்ககபதியாக்கையினேவப்
பதைத்தானதுகண்டாரியன்பகழித்திரள்பொழிந்தான். (சுங)

திருநாயகன்சிலையால்விடச்செறியாசுகமழையை
நரகாசுரனொருவாளியினறுத்தேசுரர்நடுங்க
வரிமேனியினிரதப்புனலாறுய்சிலநோட
விருநாலுதிக்குறழ்வாளிகள்விடுத்தார்த்தனனிடிபோல். (சுச)

கருமாமுகிலுந்துப்பெனக்கமலன் றனையளித்தோன்
திருமேனியிற்குலிகப்புனல்விழவெண்ணகைதெரிய
நரகாசுரன்கொடித்தேரினைநாலம்பினிற்சிதைத்தே
யொருவாளியினவனீள்சிலையறுத்தானுலகளந்தான். (௬௫)

வரிவில்லொடுமணித்தேரறமறவன்மிகமுனியா
விரைவின்னுயரிரதத்திடைமேவித்தனுவளையாப்
பரவைக்கணினெழுமாவிடமெனவும்பலபகழி
சொரியக்கருடன்றோள்சிவப்புறவேதுளைத்தனவால். (௬௬)

நரகாசுரனிவனொப்பிலனாராயணனிவனென்
றரன்வாசவன்கமலாசனனறியாவகைதிரியாத்
தரைவாரிகடிசைவானகந்தெரியாவகைசரங்கள்
சொரியாவுயர்வளையூதினர்சுரர்மாதவர்துளங்க. (௬௭)

இருவோர்களுஞ்சொரியாசுகமெரியாயுறத்திசைகட்
குரியோர்மிகநடுங்கக்கடமூறுமெண்கரியிரியச்
சுரர்மாதவர்வெருவக்கடல்சுவறப்படிசுமக்கு
மரவாகநொந்தழல்கண்டிடவயனோடன்றிகைத்தான். (௬௮)

விடமாமெனமுனிந்தேயடர்நரகாசுரன்விடுப்பப்
படிவானமெண்டிசைபோர்த்திடுபகழித்திரளறவே
நெடியோன்கணைவிடுத்தேயருணிறைவானவர்துதிப்பச்
சுடர்வாளிகள்வன்றேரொடுந்தோன்றுவகைசொரிந்தான். (௬௯)

வேறு.

ஆரியனெய்திடும்வாளிகடன்னையொரம்பாலே
வீரியனாநரகாசுரன்வீழ்த்துயர்விற்கொண்டே
மாரிவளைந்துபொழிந்ததுபோனெடுவானெங்கும்
பாருமறைந்திடவேபகழித்திரளெய்தார்த்தான். (௭௦)

வெம்பியடர்ந்திடுநரகன்விடுத்திடுவிசிகம்வா
னம்பிறையிற்றிகழ்வாளொளிர்மீனெனவரிநெற்றி
செம்புனலூற்றிடநிற்றலுமாலொருசெயலற்றே
யும்பர்நடுங்கிடவுவணனுளைந்திடவயர்வுற்றான். (௭௧)

சித்தசனைத்தருமாயனயர்ந்திடுசெயல்கண்டே
சத்தியவாமைமுனிந்துயர்சார்ங்கம்வளைத்தேதான்
நித்திலமாலையசைந்திடவேர்வுமெய்நிறையக்கூ
ரத்திரமாரியடர்ந்துசொரிந்தனளமுதொப்பாள். (௭௨)

காலணிநூபுரமோலமிடக்கரவளையார்ப்ப
மாலைகருங்குழன்மீதினசைந்திடவடிகாதின்
கோலநிறைந்திடுதோடுமலைந்திடவிற்கொண்டே
நீலனன்மேனிவயங்கிடவாளிநிறைத்தாளால். (௭௩)

தன்னெழிலிற்புருவம்மெனவேதனுவளைசெய்தாண்
மின்னிடையானனம்விண்பரிவேடவொண்மதியேயக்
கன்னன்மொழிக்குயிறன்விழிபோலொளிர்கணைமாரி
யுன்னுமுனெண்டிசையுவரிமறைந்திடவெய்தாளால். (௭௪)

க௦

சத்தியவாமையெனுங்கொடியெய்திசெரமெல்லாஞ்
சித்திரபானுவெனத்திசையுற்றிடவசுரேச
ரத்திமடிந்திடவிரதமிரிந்திடவயம்வீழக்
கைத்தலமுரமிருகாலறவீழ்ந்தனர்படிமீதின். (எரு)

வேறு.

சங்கம்முரசந்துந்துமிதழங்கச்சினமுழங்க
வெங்கும்மணித்தேர்மாநிறையிபமெண்ணிலவளையச்
சிங்கம்மெனவெதிர்த்தாசுசுஞ்சிதறும்மசுரேச
ரங்கஞ்சிரமறவெங்கணைசொரிந்தாளரிமனையாள். (எசு)

மகரந்தமணக்குங்குழன்மான்வாளிகள்பொழிய
நிகரந்தகனெனமுந்தியநெறிநீத்தவருடலாஞ்
சிகரந்தரைதனில்வீழ்ந்திடச்சிரம்வானுறவேயையம்
முகனந்தணனிரும்பூதெய்தமுனிவோர்திரணடித்த. (எஎ)

அடியற்றனர்தொடையற்றனரரையற்றனருதரக்
குடரற்றனருரமற்றனர்குவவுப்புயமறவே
முடியற்றனவவுணத்திரண்முரகாலனெண்மனையா
ளடியைப்பழியிடைமேகலைதுலங்கக்கணைபொழிய. (எஅ)

காலிற்சிலம்பிலகக்கரவளையின்னிசைகறங்கக்
கோலச்சுடர்மணித்தோடுகளசையக்குனிவில்லான்
ஞாலத்தறைமழைபோற்கணைசொரியப்பரிநால்வாய்த்
தோலுற்றவர்கரமார்பிருதோளற்றிடமடிந்தார். (எகூ)

ஏறேழடர்த்தவன்றேவியெய்கணையெங்கணுநிறைய
நூறாயிரங்கரிமாவினர்நொடிப்போதிடைமடிந்தே
யாறாயெழுங்குருதிக்கணினலகைக்கணமுழுகப்
பாறாடிடக்கவந்தம்பலபடிமீதினினடித்த. (அ௦)

இருவிற்கணையிரண்டோடெழிலிலகத்திகழ்மதியைச்
சரியொத்திடுவதனக்கொடிசரந்தூவிடவயவ
ரொரியுற்றிடுசருகாமெனவிரையாசுகநிறைய
விவைவிற்கடல்கிழிந்தாலெனவெருண்டோடினரசுரர் (அக)

அரிமாமனையாளெய்திடுமழல்வாளிகளறையக்
கரிமாவிறவெதிர்வீரர்கள்கணக்கில்லவர்மடியச்
சுரர்மாமலர்பொழிந்தேதடமிடுவோர்துதிசெயவே
நரகாசுரனொருமாதிவள்சமர்நன்றெனநவின்றான். (அஉ)

வடவாவனலெனவேமுனிந்துயர்தேர்மிசைவருமக்
கொடியோன்மிசையிறுகாலையிற்கொண்மூப்பொழித்தாற்போ
னெடியோனுயர்மனையாள்சிலைவளைத்தேநிறைபகழி
விடமாமெனச்சொரிந்தாளுயர்விண்ணோர்வியப்புறவே. (அங)

### வேறு.

விரைகுழன்மாதெயவெண்டிசைபோர்த்திடும்விசிகத்தை
நரகன்முனிந்தொருகணையினறுத்திட நகைசெய்தே
தரளமலைந்திடவேதழல்வெம்படைதனைவிட்டாள்
வருணசரங்கொடுமாற்றினன்வாளவுணன்மாதோ. (அ௪)

வாயுநெடும்படைவாளவுண[illegible]விடவடிவேற்கட்
டேயவளப்படைகொண்டுதுணித்திடவதுகண்டே
தீயவனிந்திரன்வாளிவிடுத்திடவேசீரார்
மாயன்மனைக்கொடிமாற்றினள்வாசவனம்பாலே. (அ௫)

அந்தகன்வாளியையசுரன்விடுத்திடவதுகண்டே
யிந்துமுகத்தவளப்படைகொண்டதையறவெய்தாள்
சிந்தையழன்றுநரகன்படைதீயவன்விடலோடும்
பைந்தொடிகசபதிபடைகொடறுத்தனள்படிமீதின். (அ௬)

பற்றலருமசுரன்கமலன்படைவிடவேபார்
முற்றவுமெரியுறமுடுகியசெயலவைகண்டேமின்
சிற்றிடைமேகலைதிகழ்கொடிதிசைமுகனம்பாலே
நற்றவர்மகிழுவிலக்கினளுகர்கடுதிசெய்ய. (அஎ)

சீறியவசுரனரன்படைவிடவதுசெகமல்லா
நீறுசெயிறுதியினெரியெனவருதனுநிகரில்லா
வீறுடைநாயகிவிடையினினுறுபவர்படைகொண்டே
நூறினளமரர்கண்மறைகொடுதுதியினைநுவலத்தான். (அ[illegible])

வீரியனுநரகாசுரன்மால்படைவிடவேவா
ணீரரிகானிலன்வெருவிடவருதனுநிகரில்லா
வேருறுமிடையினளப்படைகொண்டவையறவெய்யச்
சீருறுமமரர்கண்மலர்மழைபொசிதறினர்மகிழ்வெய்தி. (அ௯)

கடவுளர்படையிறநரகன்விழித்துணைகனறுாவ
விடமெனவடுகணைபுவிதிசைமறைதரவிடலோடுந்
துடியிடையாளவையறவெய்துபகழிகள்பலதூவக்
கொடியவன்வரிசிலையாவமொடற்றனகொடிவீழ. (௯0)

### வேறு.

வரிசிலையிற்றிடவேநரகாசுரன்வாண்மழுகுந்தமயி
லிரவியினவிருறுய்வேலெழுமாக்கதையிவைகளெடுத்தெறிய
முருகவிழ்குழலினளவைகளறுத்தெதிர்முரணுறுகணைகள்விட
விரதமுமற்றனவிவுளிகள்பட்டனவலவனுமிற்றனனால். (௯௧)

வாளொடுசீறியெதிர்ந்துமுன்வருநரகாசுரன்மார்பினிடை
தோளிருகைநுதலுதரமருங்குயர்தொடைகள்குடைந்துறவே
தாளிணைமுற்றவுமற்றிடவேயெதிர்சத்தியவாமைமினு
ணீளியபகழிநிறைத்தனண்மற்றவனிலனிலயிர்ந்தனனால். (௯௨)

நரகனயர்ந்திடவாளிவிடுத்திடுநோயகிதன்விறலைச்
சுரர்கடுதித்தனர்மலர்கள்பொழிந்தனர் துந்துமிநந்துசின
மிரைகடலொத்துமுழங்கினமாதவரிந்திரனெண்கணனோ
டரனிவராசிபகர்ந்தனரப்பொழுதமலன்விழித்தனனால். (கூங)

வேறு.

வீரமால்விழித்துப்பார்த்தான்விறலுடைப்பவுமவெய்யோன்
பாரிடையயர்ந்துவீழப்பசுங்கொம்புமலர்கள்பூத்த
சீருறுசார்ங்கங்கொண்டுபொருததன்றேவிதன்னை
மாற்பிற்சேர்வுறவேபுல்லிமகிழ்ந்தனன்வானோர்போற்ற. (கூச)

தழுவியகொழுநன் றூயதாளினிணிறைஞ்சிநின்ற
வுழைவிழியணங்கினோடுமுவணமீதுவந்தமாயோ
னெழிலினைநோக்கிப்பூவின்மாரிபெய்திமையோரார்த்தார்
தெழிகுரனரகன்றேறிவேறொருதேரிற்சென்றான். (கூரு)

வேறொருசிலையும்வாங்கிப்புட்டிலும்புறத்துவீக்கிச்
சீறியபௌமன்கோடிவாளியாற்றிசையைப்போர்ப்ப
நாறுபூந்துழாயோன்கண்டுநகைசெய்தப்பகழியெல்லா
நூறினான்சார்ங்கம்வாங்கிநூறுசாயகத்தின்மாதோ. (கூசு)

வெஞ்சினப்பவுமன்பின்னும்விசிகமாமழைபெய்தார்ப்ப
வஞ்சனவண்ணத்தையன்விடுத்திடுமாழிவானின்
விஞ்சியவிரவிதானுமின்மினியாகச்சென்றே
வஞ்சகன்சிரத்தைத்தள்ளிமீண்டதுவானோர்வாழ்த்த. (கூஎ)

அந்தரத்தமரர்பாரினம்பொன்மாமலர்கடுவத்
துந்துமிபணவந்தக்கைதுடிகளுமுழங்கவார்த்தா
ரிந்திரன்கமலனேற்றினிறையவன்முனிவர்வாழ்த்தச்
சுந்தரியுடனுமாயோனுவணன்மேற்றுலங்கினின்றான். (கூஅ)

அன்னதோர்காலைதன்னினவனிமாதென்னுமன்ன
மின்னிடையதிதிகாதிற்குண்டலம்விபுதர்க்கெல்லா
மன்னன்வெண்கவிகையோங்குமணிவரையேந்திமாயோன்
பொன்னடிவணங்கினின்றாணரகன்றன்புதல்வனோடும். (கூகூ)

தரணிமின்னிருகைகூப்பிச்சாற்றுவாள்பூவைப்பூவின்
வருணமுற்றிலங்குமாயாமாயைக்குமாயைசெய்தே
முரணுறுமசுரர்தங்கள்குலத்தைவேரறுத்தமூவாக்
கருணையங்கடலாய்தேவர்க்கருள்செயுங்கமலக்கண்ணா. (க00)

கோலமாயெயிற்றினென்னையேந்துநாட்கொடியவேர்வின்
சீலமில்குணத்தனுகிச்செனித்திடுநரகன்றன்னை
யாலின்மேலமர்வாய்செற்றாயவன்றருபகதத்தன்னிப்
பாலனிங்கிவனைக்காத்தியென்றடிபணிந்தாண்மன்னோ. (க0க)

கடலுடையாடையாளாங்காசினிமாதுகூறப்
படியினையளந்தோனன்பானரகன்றான்பயந்தசேய்க்கு
முடியினைக்கவித்துவானின்முண்டகன்போற்றப்பாராங்
கொடியினைப்போதியென்றுகூறிடப்பணிந்துபோனாள். (க0உ)

இருநிலமடந்தைசிந்தையுவந்துதானேகவேரோடு
நரகனுற்சிறைபின்வீழ்ந்தநவையிலாவரசரெய்தி
யரியிணைவணங்கிச்சூழவவர்கடாம்பயந்தமாத
ரிரவிகாணரவிந்தம்போன்முகமலர்ந்திறைஞ்சினுரால். (௧0௫)

காசிபன்மனைவிகாதிற்கனககுண்டலங்கடயே
வாசவன்கவிகையோங்குமணிவரையெருங்குகொண்டே
காசினியரசர்பெற்றகன்னியர்மகிழ்ந்துசூழ
வீசனெண்கலுழன்மீதிற்றேவியோடேகினுன். (௧0௬)

உவணமீதிலங்குமையனும்பர்மாமலர்கடுவேத்
துவரையினெய்தித்தாதையடியினின்வணங்கித்தூய
தவமிகுமன்னைபாதம்பணியச்சக்கரத்தான்ருளி
னவையகல்விதர்ப்பன்பெற்றநங்கைவந்திறைஞ்சினுளால். (௧0௭)

பணவமாபேரிபம்பைசச்சரிபணிலமார்ப்ப
விணையிலாக்கமுகுகன்னல்கதலிகளிலங்கும்வீதி
மணமலிமாலைநாலவயங்குதீபங்களுன்னக்
கணிகைர்விழியினூர்கள்சோபனங்கழறினுரால். (௧0௮)

நண்ணிமாமறையோரோமநடத்தநன்மண்டபங்க
ளெண்ணிரண்டாயிரத்தினேகமாமுகூர்த்தந்தன்னிற்
பண்ணின்யாழ்பயின்றமாதர்பதினுறுயிரவர்தம்மைக்
கண்ணன்ருனெருவர்க்கோரோர்காந்தனுக்கலந்துவேட்டான். (௧0௯)

பின்னருநிலனுள்வேந்தர்பெற்றிடவயங்குகின்ற
மின்னிடைக்கலாபமன்னும்வேற்கண்ணுர்நூறுபேரை
மன்னவன்வசுதேவன்றன்மைந்தன்மாமுகூர்த்தந்தன்னிற்
றுன்னியமறையோரோமந்தொடங்கிடவேட்டான்மன்னே. (௧0அ)

சித்தசனன்னையெண்கின்பாவைநாக்கினசித்தாமின்
சத்தியவாமைவிந்தையிலக்கணைதவக்காளிந்தி
மத்திரன்மகளெண்ணீராயிரத்தொருநூறுமாதர்
அத்தனைபேருஞ்சூழவவனியினிருந்தானம்மா. (௧0௯)

நப்பின்னைகமலைநீலையிராதைபாழியைநன்னீதி
தப்பில்சந்திரிகைமந்தாரகைபிந்துவல்விதத்தை
யொப்பிலாயிரவொண்மாதர்கூனிமிர்ந்துருவம்பெற்று
ளப்பினிலுறைவான்றன்னேடமர்ந்தினிதிருந்தார்மன்னே. (௧௧0)

நரகாசுரன் வதைப் படலம்

முற்றிற்று.



ஆ படலம் ௯-க்குக் கூடிய திருவிருத்தம் ௯அ௯.



ஸ்ரீகண்ணபிரான் றிருவடித்தாமரைக டுணை.



ஸ்ரீ

விஷ்ணுமயம்.

௮௬ - வது

# பாரிசாதப்படலம்.

சீலமினரகன்றிறலினாற்கவர்ந்ததேவர்கோன்கவிகையுமதிதி
கோலநன்மணியார்குண்டலத்திணையுங்கொடுத்தமராபதிமேவிச்
சாலநொந்தமரர்மோகிப்பப்பணிலமூதிவான்றருவினைக்கொணர்ந்தே
வேலிணைநயனச்சத்தியவாமைக்களித்தருள்விமலனைத்தொழுவாம். (௧)

கந்தநன்மாலைநிறைந்திடத்தென்றலுலாவிடக்கனகமண்டபத்தி
னிந்துவின்கிரணம்வயங்குசாளரத்திற்றயங்கிடத்தீபங்களிலங்கக்
கந்தரமிசையிற்கவினுறக்கலன்கொளஞ்சனக்கனமுகிலேலலச்
சுந்தரன்கவரியசைப்பவாதனத்திற்றுலங்கியேயிருந்திடும்வேலை. (௨)

சிந்துரவளிகம்வயங்கிடக்காதிற்றோடுகெடிகழ்ந்திடவிழைகள்
கந்தரநிறையைக்கங்கணந்தோளிற்கவினுறக்கரவளையிலக
மந்தரநிகராந்தனமிசைத்தரளவடமசைந்திடமணிச்சிலம்பு
சுந்தரவடியிற்சிலம்பிடவிதர்ப்பன்மகளெய்திமாலடிதொழுதாள். (௩)

வந்தடிதொழுதவிதர்ப்பன்மாமகடன்மகிணன்மெய்யழகினைநோக்கிச்
சிந்தையின்மகிழ்வாற்சிலதிகைக்கவரிவாங்கிநற்சிலம்படியிலங்கக்
கந்தமாமலர்களளகமீதொளிரக்கனகவொண்வளைகையினாற்ற
நந்துமிழ்தரளவடநகிலசையநகையுறவீசியேநின்றாள். (௪)

கவரிகைகொண்டுவீசியவிதர்ப்பனருடிருக்கவினெலாநோக்கி
யவனியுண்டுமிழ்ந்தவரிநகையுடனேயணங்கினைப்பார்த்திவையறைவான்
புவியினிலரசர்திலகனாயுயர்ந்தபொறையுடைவிதர்ப்பன்றன்புதல்வி
நவையுறவுலகர்நகைசெயவெனைநீநத்தியதென்கொலென்றுரைப்பான். (௫)

ஏதுகுலத்துதித்தவிழிவினன்மகுடஞ்சூடியாளரசெனக்கில்லை
யதுவலாலாயர்பதியினில்வளர்ந்தேயளைவெண்ணெய்களவினிலருந்திச்
சதுமறைநெறியைத்தப்பியேவிடனாய்ச்சராசந்தன்றனக்கிடைந்தோடி
மதுரையையிழந்துமகோததியிடையின்மறைந்தனன்வடிவொன்றுமில்லேன். (௬)

ஈதெலாமுணர்ந்துன்முன்னவனெனக்கேயுன்னையீகிலனென்றுசபத
மோதியேதமகோடன்சுதன்றனக்குக்கொடுப்பனென்றுரைத்திடநீயோர்
வேதியன்றனைத்தூதென்முனம்விடுத்துவிரகமுற்றென்றனையணைந்தா
யேதமில்புராணம்பெரிதுணர்ந்தாலும்பெண்மதியிழுக்கெனவுரைப்பார். (௭)

நாரதனுன்னைமயக்கிடுமுறையால்நலனிலாவென்னைநீநத்தி
வாரிதியறியார்நதியினைக்கண்டுமருண்டவாபோலெனையணைந்தா
யாரிதுநன்றென்றறைபவரென்னையறிபவர்யாவருமில்லை
சீரிதென்றிகழாச்சின்மதிதன்னாலென்றுபின்சீதரனுரைப்பான். (௮)

மாலைசேர்குழலாயுன்றன்மேன்மாலாய்வடிவுடைச்சேதிபனிருப்பச்
சாலுவன்மகதன்றந்தவக்கிரனொண்டராதலவரசர்களிருப்பச்
சீலமிலெனைநீயணைந்திழிகுலத்தின்செயலிலாவடிவினைக்கண்ட
வாவிலையிற்றுபுனதெழிற்கொத்தவரசனையடைகுதியென்றான். (௯)

இனையனமொழியக்கேட்டிருசெவியிற்காய்ந்திடுசலாகையேறியபோற்
றுனியுறக்கண்ணீர்தனமிசைபுரண்டுதுகினனைந்தவனியிற்பாறத்
தனைமறந்தெழிலார்தடக்கையிற்கவரிசாய்ந்திடவிதர்ப்பகோன்றனையள்
புனமயில்வீழ்ந்தாற்போலவேசோரப்புனிதமாலெடுத்துரத்தணைத்தான். (௧௦)

நாறுபூங்குழலாடனையெடுத்தணைத்துநறப்பனிநீரினைவிடுப்ப
வீறுடைவிதர்ப்பன்றிருமகடேறிவிழித்திடவரிசொல்வானுன்றன்
றேறியவதனக்கவினையான்காணுமாசையாற்சீரிலாவசனங்
கூறினேனதற்குக்கதங்கொளேலுனக்குநிகர்ந்திடுங்கோதையரிலையால். (௧௧)

எனுமொழிபகர்ந்தேயிருகையாற்றழுவியென்னுயிர்த்துணைவிநீயுன்னைக்
கனவிலுமொருவேனென்றரிகூறக்கமலமின்கைதொழுதுரைப்பா
ளனகவுன்றிருத்தாளன்றிவேறறியாவேழையேனாவியைநுகருந்
துணியினையுரைத்தாயென்றுமாவிதர்ப்பனருட்டிருப்பின்னருஞ்சொல்வாள். (௧௨)

உருவிலனென்றாய்வானநீயானவாய்மையாலுண்மையேயுயர்ந்த
வருமறைநெறியைத்தப்பினனென்றாயறையும்வேதத்தினுக்கெட்டாப்
பரமனீயென்றுபங்கயன்முதலோர்பகர்தலாலஃதுமெய்யான
தரணியிற்றாழ்ந்தகுலனென்றாய்நீயவ்வனந்தனாந்தன்மையுற்றிடவே. (௧௩)

என்னையாரறிவாரொன்றனையெண்கணிறையவர்முதலினோர்செய்கை
தன்னைநீயறிவையுன்செயலவர்களறிகிலாரொன்றுதான்வேதஞ்
சொன்னவாய்மையினாலஃதுமெய்யென்றேதொழுதிடும்விதர்ப்பகோன்பயந்த
மின்னினைத்தன்மார்பழுந்துறத்தழுவிவிமலனின்பத்துடனிருந்தான். (௧௪)

அரிதிருவுடனேமகிழ்ந்தினிதிருக்குமெல்லையினந்தரமிசையி
னிரவிவந்துதயமாகவேயிறைவனெழுந்திமசலத்தினீராடி
யருமறையுதகத்தருக்கியமளித்தேயரவிந்தப்பாவையுந்தானுந்
தெரிவையர்கவரியசைப்பவாதனத்திற்றிகழ்வுறவிருந்திடும்வேலை. (௧௫)

வேறு.

அருமறைவடிவுகொண்டடைந்ததென்னவே
சுரர்முனிவீணைகைதுலங்கவெய்திநற்
றிருவுடன்மாயவனிருந்தசீர்மைகண்
டுருகியவன்பினோடாசியோதினான். (௧௬)

மாதவர்துதிக்கநாரதன்வந்தெய்தலுஞ்
சீதரன்றிருவுடன்வணங்கிச்சீர்மையா
லாதனமருக்கியமளிக்கவன்பினா
லேதமிலாதநற்றவனிருந்தனன். (௧௭)

வாரிசூழ்துவரையின்மாயன்கைமிசைப்
பாரிசாதத்தவிர்மலரைப்பண்பினாற்
சீரியநாரதன்கொடுக்கச்சீதர
னேருறுவிதர்ப்பகோன்மகளுக்கீந்தனன். (௧௮)

திருமருமலரினைவாங்கிச்சிந்தையின்
வருமகிழ்வுடன்முகமலர்ந்துவண்மைசே
ரிருளளகந்தனிவிலங்கச்சூடிய
தெரிவையைநோக்கிமாமுனிவன்செப்புவான். (கக)

நரர்திரள்விரும்புமித்துயநன்மலர்
தெரிவைநின்குழலினிற்சேரமாதவம்
புரியுமீதுண்மையாலமுதிற்போந்தரு
ளரிவையேயுனக்கிவையரியவோவென்றான். (உ0)

சுத்தநாரதமுனிதுலங்குமிந்திரை
சித்தமின்புறவிவைசெப்பச்சீதர
வித்தகனருளினல்விடைகொண்டேகியே
சத்தியவாமைதன்கோயிற்சார்ந்தனன். (உக)

நாரதன்மனையில்வந்தெய்தநற்றவச்
சீருறுசத்தியவாமைசிந்தையி
னூர்வமுற்றருக்கியமளித்திறைஞ்சவே
யேருறுமுனிவனுதனத்திருந்தனன். (உஉ)

ஆதனத்திருந்தமாமுனிவனுசிக
ளோதிடச்சத்தியவாமையுண்மகிழ்ந்
தேதமற்றறனுறவென்முனெய்தினை
போதனெண்டவவெனுப்புகலுவாளரோ. (உங)

என்னிவணெய்தியகருமம்யாவையு
நன்முனிவரமொழியென்னநாரதன்
அன்னமென்னடைமொழியமுதம்வேய்கொடோண்
மின்னிடையணங்கினுக்கிவைவிளம்புவான். (உச)

அனகன்றன்றேவியரனைவர்தம்மினு
முனையலால்வேறொருத்தியையுமுன்னலே
னெனுமொழிதவிர்ந்துருக்குமணிக்கின்பமாய்
மனமுயிரவள்வசத்துறமகிழ்ந்தனன். (உரு)

காந்தமுமூசியுங்கலந்ததென்னவே
சாந்தணியவளருந்தனங்களோவலான்
வேந்தறொண்பாரிசாதத்தின்மென்மல
ரீந்துருப்பிணிதனோடின்புற்றானென்றான். (உசா)

என்றிவையுரைத்துமாமுனிவனேகலுங்
கன்றியசிந்தையள்கணவன்றன்செய
னன்றெனநகைத்திருநயனநீர்தனக்
குன்றினிற்குதிகொளக்கொதித்துச்சீறினள். (உஎ)

எல்கிளர்தருமணிமுதலியாவையு
நல்கியவுவரியைநிகர்த்துநாயகி
யொல்கியதன்னகிலொளிருமாரங்கள்
பல்கலன்மேகலைபறித்துவீசினள். (உஅ)

அலர்மலருதிர்ந்திடவலரிவெம்மையாற்
புலர்தருகொம்பெனப்பொருமிக்கண்ணினீர்
நிலனுறவணையின்மேற்சோர்ந்துநெஞ்சினிற்
சலமுறவவனிமின்றளருமெல்லையின். (உகூ)

திருமலர்திருவினுக்களித்துச்சக்கரக்
கரனிரதத்தின்மேலேறிக்காவலர்
பரிகரிபுடைவரப்பணிலஞ்சின்னமா
முரசுதுந்துமியெலாமுழங்கவெய்தினான். (கூ0)

நித்திலமலைந்திடநீலமேகம்போற்
சித்திரமண்டபம்வயங்கச்சேக்கையின்
சத்தியவாமையின்றளர்ந்ததன்மையை
வித்தகன்கண்டணைமிசையின்மேயினான். (கூக)

ஓவியச்சுவைகெடுத்துயர்ந்தவுத்தமத்
தேவியை யிருகையாற்றழுவச்சீறியே
காவியங்கண்கனல்கதுவநோக்கிநற்
றூவியோதிமநடைப்பாவைசொல்லுவாள். (கூஉ)

பொய்யினைமெய்யெனப்புகன்றன்றண்டர்
டையலார்தனங்களைத்தழுவுஞ்சக்கரக்
கையவுன்மாயமாங்கலவிநச்சிலேன்
நெய்கவர்சோரநீங்குவாயென்றாள். (கூகூ)

வேறு.

ஆனனங்கடுத்துச்செவ்வாய்துடித்திடவலகம்பஞ்சப்
பானலைப்பழித்தகண்கள்சிவப்புறப்பரமன்றன்னைத்
தானெள்கலுறவேயோதிச்சத்தியவாமையென்னுந்
தேன்மொழிபோதியென்னச்சீதரனகைத்துச்சொல்வான். (கூச)

நாரதமுனிவனெய்திநவின்றிடுகலகச்சொல்லா
னேரிழைமுனியேல்வானோருலகினினிலங்கிநிற்கும்
பாரிசாதத்தையுன்றன்முன்றிலிற்பதிப்பேனென்ன
வாரியனுரைத்துமார்பினணைந்தனன்றேவிதன்னை. (கூரு)

சுரிகுழன்மிசையிற்றொங்கல்சூட்டியேதிலகந்தீட்டி
வரிநெடுங்கண்ணினீலவஞ்சனம்வரைந்துகாதிற்
பருமணித்தோடுசேர்த்துப்பயோதரத்தாரம்பூட்டி
யரியுறுநெகிழிதாளினணிந்தனனுயர்கோமான். (கூசா)

இரவியான்குடபாலேகவிந்துவானிலங்கித்தோன்ற
வரியுயர்தேவிதன்னோடாரமுதருந்தியன்பாற்
பருமணிக்கட்டிலேறிப்பரிமளக்கலவைபூசித்
தருமலர்சூடியின்பந்தழைத்திடவமர்ந்தான்மாதோ. (கூஎ)

அலரியோன்குணபாற்றோன்றவரியெழிற்றேவிதன்னோ
டிலகுமஞ்சனநீராடியிரணியவாடைசாத்திப்
பலகலனணிந்துமெய்யிற்பணிலமினாரம்பூண்டு
நலனுறுமறையோராசிநவின்றிடவயங்கிநின்றான். (கூஅ)

ஆயதோர்காலந்தன்னிலஞ்சிறைப்புள்ளின்வேந்தன்
மீயுயர்மகுடந்தோன்றவியாளமெய்க்கிறையப்பூண்டு
மாயிருஞாலமெல்லாஞ்சிறகினான்மறைத்தேமாயன்
றூயநற்கமலத்தாளிற்பணிந்துகைதொழுதுநின்றான். (௩௯)

ககபதிதன்பொற்றோளிற்கருணையங்கடலாமாயோன்
செகபதிவிருதையானதேவியுந்தானுமேறி
நகபதிகுலையநாகமெலிந்திடநாகர்போற்ற
மகபதியுலகிற்சென்றான்மறைகளாற்கீதம்பாட. (௪௦)

கனகநற்கவிகையோங்கக்கவரிகள்மடவார்வீசத்
தினகரனவிரோபோன்றசெழுமணிக்கலன்கண்மின்ன
வினையறவுவணப்புள்ளாம்வீரியன்றோளின்மீதி
னனகன்மாதேவிதன்னோடமரர்தம்முலகம்புக்கான். (௪௧)

மாயவன்றேவிதன்னோடுவணன்மேல்வருதல்கண்ட
வாயிரநயனப்பாகசாதனைராணியோடு
மீயுயர்கவிகையோங்கவிளங்கயிராவதத்தின்
றூயபொற்கிரீடமின்னச்சுரரொலாஞ்சூழவந்தான். (௪௨)

வேறு.

கின்னரர்தூயகிம்புருடர்சித்தர்க
ளின்னலில்வித்தியாதரியக்கர்க
டுன்னியகருடர்காந்தருவர்தும்புரு
மன்னியநாரதர்மகிழ்வினெய்தினார். (௪௩)

இரவியர்துவாதசர்வசுக்களெண்மர்வல்
லாரனுறுபதினொருவிடையினுற்றவர்
மருதர்கள்சாரணர்வருணன்வண்மைசே
ரரனெழிற்சகாவுடனன்பினெய்தினார். (௪௪)

இத்தனைதிரள்களோடெய்தியிந்திரன்
சித்தசன்றனைத்தருஞ்சீதரன்றனைப்
பத்திசெய்தடியிணைபணிந்துபோற்றியே
வித்தகமாதுடன்வீதிமேயினான். (௪௫)

வீதியினரம்பைமேனகைவிளங்கிய
மாதுருப்பசிதிலோத்தமைமின்மாதர்கள்
சீதரன்மேனியைக்கண்டுசிந்தையி
னாதரவுடன்மயற்கடலுளாழ்ந்தனர். (௪௬)

கலையுடன்மேகலைகழலக்கைவளை
தலமிசைவதிந்துறத்தரளமாமணி
முலைமிசைத்தழலெழமுராரியாசையா
லுலையினின்மெழுகெனவுருகிநின்றனர். (௪௭)

## வேறு.

சுத்தநான்மறையுச்சியிற்றுலங்கியசோதி
நித்தனாரணனின்மலன்மாதவனெடுமா
லத்திகழ்துவராபதியச்சுதனெழிலுங்
கொத்தநாயகிசத்தியவாமையென்றுரைத்தார். (௪௮)

இன்னவாறெலாமியம்பியவரிவையொருங்கு
மன்னுமாவினுன்மாவின்மேல்வைத்தகண்வாங்கார்
துன்னியோவியம்பொருவநின்றார்சுரர்துதிப்பப்
பன்னகாசனன்மேன்மினோடெய்தினன்பரமன். (௪௯)

ஓய்விலாதுமாமுரசுதுந்துபியெலாமொலிப்பத்
தூயதும்புருநாரதர்சுருதிகள்பாட
வேய்கொடோளியர்கருப்புரவிளக்கங்கையேந்த
மாயன்வாசவன்கோயிலிலெய்தினன்மகிழ்ந்தே. (௫௦)

உததியிற்றுயிலுத்தமனென்றுணரோன்பெண்
மதிதனிற்சுதனெனநினைந்தேனினிமாயாப்
பதிதனைத்தருவாயென்றுபகர்வனென்றுள்கு
மதிதிபங்கயவடிமிசைப்பணிந்தனனமலன். (௫௧)

மாயன்வந்தடிபணிதலுமாயையின்மறந்து
நேயம்விஞ்சியவதிதிதன்சுதனெனநினைந்தே
யாயர்தம்பெருமான்றனையன்பினாற்றழுவித்
தூயசத்தியவாமைமின்றொழுதிடவணைத்தாள். (௫௨)

கடியனாநரகாசுரன்கவர்ந்தகுண்டலமுங்
குடையுமாமணிச்சயிலமுங்கொடுத்திடுமாய
னடியினிற்பணிந்தாயிரவிலோசனன்போற்ற
நெடியமாதவனிருந்தனனிறைதவர்சூழ. (௫௩)

அன்னமென்னடைச்சத்தியவாமையையன்பான்
மின்னிடைச்சசியெழுந்துறத்தழுவியேவிளங்கும்
பொன்னினன்மணிப்பொற்புடையாதனத்திருக்க
மன்னிவெண்கவரித்திரண்மாதர்வீசினரால். (௫௪)

கீதவீணைகள்கிளிமொழிமடந்தையரிசைப்ப
மாதரார்கள்பல்லாண்டுரைவழங்கவிந்திராணி
சூதின்மேல்விருப்புற்றனளாகியேதுலங்கும்
பூதநாயகன்றேவிதன்னோடிவைபுகல்வாள். (௫௫)

சூதிவண்ணிருவோர்களும்பொருவம்யான்றோற்கி
லேதமில்லவென்பாரிசாதம்மலரீவ
னீதுநிச்சயமென்னவேசத்தியவாமை
யாதவன்னருள்மணிபணயம்மெனவறைந்தாள். (௫௬)

இருவரும்மணிப்பலகையிற்கவற்றினையெறிந்தே
வருணமுற்றிடுவொரிகைபற்றித்தம்மதியின்
விரகினாடியிந்திராணிமின்றோற்றிடவென்றாள்
சரியிலாதவொண்சத்திராசித்துவின்றனையள். (௫௭)

வாரிசூழ்துவராபதியை வன்மனையா
ளோருலாவியவிந்திரன்றேவியைவெல்லச்
சீருலாவியநிலமிசைத்தேன்மொழியார்கள்
பாரிசாதமாமலரிணைப்பறித்திடச்சென்றார். (ருஅ)

அரியுறுங்குழலரிவையரடைந்திடுமெல்லை
தருவினுண்மலர்காத்திடுமடந்தையர்சலத்தா
விருகணுலழலுறவிருநிலத்தினிற்பிறந்த
தெரிவைமீர்கடிதேகுமினென்றுசெப்பினரால். (ருகூ)

சூரர்கணயகன்றேவிதன்குறவினிற்சூடுந்
தருவினுண்மலர்சத்திராசித்துமன்றந்த
தெரிவைநத்திடின்வாய்க்குமோசீரின்மாணிடவ
ரரிவைமீர்கடிதேகுமென்றடர்ந்திடமீண்டார். (சுo)

மீண்டமாதர்கள்விபுதர்மங்கையர்சொலைவிளம்ப
மூண்டவெஞ்சினமுடுகியசத்தியவாமை
யீண்டுநீவிரொன்கொழுநனைக்கொணர்திரொன்றியம்பப்
பூண்டவன்பினோடரிவையர்விரைவினிற்போனார். (சுக)

தாவியன்றுலகளந்தவன்றளினிற்பணிந்துன்
றேவியுன்றனைவருகெனச்செப்பினளென்றே
காவிநேர்விழிக்காரிகையார்கள்கட்டுரைப்பத்
தேவர்மன்னனையொரீஇயரிமனைவிபாற்சென்றான். (சுஉ)

வந்தமாயனைச்சத்தியவாமைதான்வணங்கி
யிந்திராணிசூதாடியேதோற்கத்தன்மடவார்
கந்தநாண்மலர்பறிக்குமுன்காவன்மங்கையர்க
ணிந்தைகூறியவாறெலாநிகழ்த்தினன்முனிந்தே. (சுங)

பாரிசேறியேபகர்ந்திடப்பாரிசாதத்தை
வேரொடுங்கொணர்ந்துவணன்மேல்வைத்துயர்விமல
னூரமார்புறவரிவையர்கவரிகள்வீச
வேர்கொடேவியொடேகினன்றனிக்குடையிலங்க. (சுச)

வயினதேவன்மேற்பாரிசாதத்தினைவைத்துப்
புயலின்மேனியன்பெயர்ந்திடக்கண்டபுத்தேளிர்
அயில்கள்வேல்மழுவங்குசமெறிந்தடர்த்தார்த்தே
யெயிலெரித்தவன்வெருவிடவெங்கணும்வளைத்தார். (சுரு)

வேறு.

வாசவன்வெள்ளையிராவதமேறிவளைத்திடவானவர்க
ளாசுகமாரிபொழிந்தயில்வாள்கதையங்குசம்விட்டெறிய
மாசகலுந்தருவைக்கொடுயாதவபோகலையென்றுவசை
பேசியடர்த்தனர்கும்பிகைசங்குயர்பேரிமுழங்கிடவே. (சுசு)

விடையரியக்கர்கள்சாரணர்சித்தர்கள்விபுதர்மருத்துவர்கள்
கொடியுறுதேரினர்புகரிபமீதினர்குரகதமேல்வருவோர்
வடிவுடைவாளினர்வரிசிலையால்விடுபகழிகள்வாரியுறுங்
கடுவிடமாமெனமுடுகிநிறைத்தனர்ககனமொடாசையெலாம். (சுஎ)

கடமுறுவெண்கரியிறையுடனமரர்கள்கணைகள்பொழிந்திடமால்
படியுயர்மால்வரைதிவளவயங்கியபணிலமுழக்கிடவே
கடலரவந்திசையுறுகரியஞ்சினகமலனடுங்கினன்வான்
வெடிபடுகாலமிதாமெனவிபுதர்கள்வெருவிவிழுந்தனரால். (சுஅ)

மகபதியுடனிமையோர்கள்கலங்கிமயங்கிவிழுந்திடவே
ககபதிமீதுதருக்கொடுதுவரையினிற்கடிதெய்திடவே
நகபதிநல்கியகாரிதனாயகனிடர்கடிநாயகனைச்
செகபதியாகியுயர்ந்திடுமுக்கிரசேனனணைத்தனனால். (சுகூ)

மாயவனெய்தியதந்தையையன்பினில்வணங்கியெழுந்துமகிழ்
தாயர்கள்பாதமிறைஞ்சிமுனோனடிதாழ்ந்துபினாயகியா
மாயிழைசத்தியவாமையினாண்மனைமுன்றிலினழகுறவே
மீயுயர்தருவினைவைத்தவளோடும்விளங்கியிருந்தனனால். (எo)

## பாரிசாதப்படலம்

முற்றிற்று.



ஆ படலம் கக - க்குக் கூடிய திருவிருத்தம். எருச.



ஸ்ரீகண்ணபிரான் றிருவடித்தாமரைகடுணை.



ஸ்ரீ

விஷ்ணுமயம்.

கூ0 - வது சுபத்திரையார்

# திருக்கலியாணப்படலம்.



சூலியையருச்சித்தெட்டுத்திசையினுந்தாவித்தூய
வேலையைக்கடைந்துவாலிற்றசமுகன்றனைவீக்கி
யாலம்போலடர்ந்துதாக்குந்துந்துபியாவியுண்ட
வாலியைவதைத்தமாயோன்மலரடிமனத்துள்வைப்பாம். (க)

சீலமார்வசுதேவன்பொற்புடையுரோகணிசேயான
தாலகேதனன்கார்வண்ணன்சவையகத்திருக்கத்தந்தை
பாவினேர்மொழியாளானசுபத்திரைப்பாவைக்கொத்த
கோலமார்மகிணனொன்றுரைத்திடவிராமன்கூறும். (உ)

துடியிடையரம்பைநாணுஞ்சுபத்திரையானமாதைப்
படவரவுயர்த்தகோவுக்கீவமென்றுரைப்பப்பாம்பி
னடமிடுபரமனீதேநலனென்றுகோயிற்புக்கு
வடிவுடைவிதுர்ப்பனல்குமங்கையோடிருக்குநாளில். (ந)

சந்திரன்போலக்கொற்றத்தனிக்குடைவயங்கத்தன்ம
னிந்திரப்பிரத்தந்தன்னிலிருந்தரசாளுநாளி
னந்தணர்பசுவைவேடர்கவர்ந்திடவமரர்கோமான்
மைந்தன்வெஞ்சினத்தினோடுமேறனருள்மகன்பாற்சென்றான். (௪)

இருமறையோர்களாவையெயினர்கள்கவர்ந்தாரென்றே
யுரைசெயவிசயன்சென்றோராசனமிசையினாங்கு
தருமனோடிலங்குகின்றதுரோபதிதன்னைக்கண்டு
பெருகியநதிகளாடவிடைபெற்றுப்பெயர்ந்தானன்றே. (௫)

சரயுகாளிந்திமந்தாகினிசரஸ்வதிகோதா
விரியுயர்வேணிபம்பைவிளங்குகாவேரியெல்லாஞ்
சுரர்கடங்கோமான்மைந்தனடியேதூயசேது
வருவினைதீர்க்கும்வாரியயத்தினிற்படிந்தான்மாதோ. (௬)

உரகலோகத்தினெய்தியுலூகியைவேட்டுத்தூய
பரிகரியிரதஞ்சூழ்ந்தபாண்டியவரசன்பாவை
விரைகமழ்குழலினாள்சித்திராங்கதையென்னுமின்னை
வரிகழல்விசயனன்பால்மதுரையின்வதுவைசெய்தான். (௭)

தூயதென்மதுரையோவித்துவரையினேகித்தேவர்
நாயகன்மைந்தன்முக்கோல்கொண்டுநான்மறையோனாகிச்
சாய்விலாதுயர்ந்தநாமம்பன்னிரண்டொளிரச்சாத்தி
யாயிரநாமமோதுமறிஞன்போலாயினானால். (௮)

சங்குசக்கரந்தோண்மீதிற்பொறியுறநாமஞ்சாத்திச்
செங்கையின்வயங்குமுக்கோற்றிருத்துழாய்மணிவடஞ்சேர்
பங்கயமணிகொண்மாலைபவித்திரமாலையெல்லா
மங்கமீதிலகக்காவியாடையுந்திகழவந்தான். (௯)

சீ ~ மாரொதிகணுதன்சேர்தலுமகிழ்ந்தசிந்தைத்
தாலகேதனனுஞ்சங்குசக்கரந்தரித்தகோவுங்
காலினினிறைஞ்சித்தூயவருக்கியக்கடன்கள்செய்து
கோலமாராதனத்தினிருத்தியேகூறலுற்றார். (௧௦)

சீதரன்படிவம்போலச்சிறந்தபாகவதவுன்றன்
பாதமார்தூளியாலேபவுத்திரரானோம்யாமென்
றோதியுன்பதியேதென்றங்குரைத்திடவுருவமாறு
மாதவனவருக்காசிமொழிந்திவைபகர்வன்மாதோ. (௧௧)

எதிகளுக்கச்சுதன்றனிருப்பிடம்பதியாம்யான்வா
னதியினீராடிச்சேதுபொருநையிற்படிந்துநன்கோ
மதியினீராடிவந்தேனென்றலுமதியார்வண்ணன்
சதுமறைமுனிவன்றன்னைநோக்கியேசாற்றலுற்றான். (௧௨)

இன்னலின்முனியாஞ்செய்ததவத்தினாலெய்தினாய்நீ
யன்னமென்னடையளெங்கைசுபத்திரையமுதமன்ன
கன்னிநன்மனையினெய்திக்கடிதினிற்சுயம்பாகஞ்செய்
தன்னநீயருந்தாயென்னாவறைந்தனனலாயுதத்தோன். (௧௩)

அறைந்திடுமிராமநம்பிக்காசிகண்மொழிந்துவேத
நிறைந்தநன்முனிவனைநிருபன்பொற்கலன்களெல்லாஞ்
செறிந்தகந்தரத்தாளாயசுபத்திரைசெம்பொற்கோயி
லுறைந்ததோராசனத்தினுவந்தவளிருக்கும்வேலை. (கச)

கந்தரம்பிறைவில்வாளிகவினுறுமெட்பூவள்ளை
யிந்துவின்வட்டமாம்பலிலங்குநித்திலத்தின்பத்தி
நந்துவேய்காந்தளோங்குநளினவொண்முகைமின்னேந்தி
வந்தபொற்கொம்புபோலச்சுபத்திரைவணங்கினாளால். (கரு)

வணங்கியேயெழுந்துநின்றமாயவன்றங்கையான
வணங்கினைக்கண்டகண்கள்சிமிட்டிலானனங்கன்வில்லான்
மணங்கமழ்விசிகமெய்யவருவதுபோவதாகிப்
பிணங்கியவாவியோடுமொசிகள்பேசினானால். (கசு)

எதியெனவிருந்தான்றன்னையிருகணாலமையநோக்கி
மதியெனும்வதனமங்கைமாதவநீதான்வைகும்
பதியெதிவ்வூரின்வந்தகருமமீபகர்தியென்றே
சுதையெனமொழிதலோடும்விபுதர்கோன்சுதனுஞ்சொல்வான். (கள)

இந்திரப்பிரத்தமென்னூரியானந்தப்பதியையோவி
*யந்தரநதியைநாடியழகியகுமரிகன்னி
சிந்தையின்மகிழ்வினோடுபடிந்திந்தத்திருநகர்க்கே
வந்தனன்றீர்த்தமாடும்பலனிவண்வாய்க்கவென்றான். (கஅ)

நெறியுறப்பகர்ந்தான்றன்னைநோக்கிநேரிழையணங்கு
கறைமிடற்றரனால்வெந்தகாமனல்லுருவும்பெற்று
மறையவனாயினானேமறைந்திவண்வந்தான்செய்கை
யறிவனென்றுளத்தினுள்ளியன்பினான்மொழியலுற்றாள். (ககூ)

இந்திரப்பிரத்தந்தன்னிலிருந்தனையாகிற்பாண்டு
மைந்தரிற்றருமன்வீமன்மாவலோன்சகாதேவன்றான்
குந்திதன்னுடனெல்லோருங்குறைவிலாதிருந்ததன்மை
கந்தநன்மலரோனொக்குமுனிவகட்டுரைத்தியென்றாள் (உ0)

நந்தணிகரத்தின்மங்கைநவின்றிடவிசயனன்பாற்
குந்திதன்புதல்வர்நால்வர்தங்களைக்குறித்துக்கேட்டாய்
இந்திரன்சிறுவன்றன்னையியம்பிடாதிருந்ததன்மை
சுந்தரிமொழிதியென்னச்சுபத்திரைமொழியலுற்றாள். (உக)

தரையினினதியிற்கங்கைதாரகைதன்னிற் † பண்டி
விரைமலர்தன்னிற்சாதிவிழுமியவானாற்போல
வரசரினருச்சுனன்றானற்புதமாதலாலவ்
வொருவனைத்தனித்துக்கேட்கவுன்னினனென்றுசொன்னாள். (உஉ)

---

* அந்தரநதி=கங்கை. † பண்டி=உரோகிணி.

மாதிவைமொழிதலோடுமகிழ்வுடன்வலாரிமைந்தன்
நீதிசேர்விசயனந்தப்பதியினைநீங்கியேகி
மாதவனாகிமந்தாகினிமுதனவதீர்த்தங்க
ளேதறவாடித்தூயசேதுவிற்படிந்தபின்னர். (௨௩)

மின்னிடையுலூகியென்னும்வியாளராசன்றான்பெற்ற
கன்னியையவதுவைசெய்துகடிபொழின்மதுரைதன்னிற்
றென்னவன்குமரியானசித்திராங்கதையாமாதை
யன்னவன்வேட்டபின்னர்வந்துமுன்னடைந்தானென்றான். (௨௪)

என்றவனுரைப்பக்கேட்டேயிருகையிற்சிலையினாரி
யொன்றியதழும்பினாலுமுருவத்தினதிகத்தாலும்
வென்றிகொள்விசயனாமென்றுன்னியேவிரகத்தோடு
மன்றலர்குழலியெய்துநாணத்தான்மறைந்துநின்றாள். (௨௫)

ஆயதோர்காலைதன்னிலயமுறும்பிரபாசப்பேர்த்
தூயமாநதியின்மேகஞ்சொரிதலும்புனனீராட
மாயவனலாயுதக்கோன்றந்தைதாயினர்கண்மன்னர்
நேயமோடெய்தியாற்றின்கூலத்தினிறைந்துசேர்ந்தார். (௨௬)

நதியிடைமன்னரோசஞாயிறுமறைதலோடு
மதியுயர்வானினெய்தமகபதியருளுமைந்தன்
சதுமறைமுனிவனாகிச்சார்ந்திடவசுதேவன்றன்
புதல்விகண்டுலப்பிலாதகாமத்தீப்பொருக்கிலாதாள். (௨௭)

கையினில்வளைகள்சோரக்கலிங்கம்பார்மிசையின்வீழ
மெய்யெலாம்பசலைபாயவிளாகமழலங்கதீய
துய்யநித்திலத்தின்மாலைகருகிடத்துவளுமங்கை
யுப்வகையிலள்போலொன்றுமுணர்விலாளாகிச்சோர்ந்தாள். (௨௮)

பஞ்சணைமிசையிற்சோர்ந்தபாவையைக்கண்டமாத
ரஞ்சினரொடுத்துக்கையாலணைத்திமசலத்தையப்ப
வஞ்சிநுண்ணிடையாடேறிமன்மதபாணமென்மேல்
விஞ்சிடமதியாற்கொங்கைவெதும்பிடவிளம்பலுற்றாள். (௨௯)

நிசியுறுசசிகொள்வெண்மைநெருப்பினையிறைப்பவாவி
பசையறவுலப்பிலாதபருவரலெய்துமென்மேற்
சுசியுறுகணைகண்மாரன்சொரிந்தனனந்தோதூய
விசயனின்றணைந்திடானேல்வீடுவனென்னும்வேலை. (௩0)

மன்னரொண்வலாரிபெற்றபற்குனன்வசுதேவன்றன்
கன்னிதனெழிலைநோக்கிக்காமவேள்சரந்தன்னாக்கை
துன்னவெண்மதித்தீயெங்குஞ்சொரிந்திடவருந்தும்வேலை
மின்னுசக்கரத்தானெய்திவிசயனைத்தழுவிக்கொண்டான். (௩௧)

நள்ளிருடன்னினெய்துநாரணன்விசயன்றன்னைத்
தெள்ளியமறையையோதித்திருந்துபாகவதர்போலக்
கள்ளநீயெய்தினாலுங்கவினுறுங்கன்னிதன்னை
வெள்ளநீர்வண்ணனீயாளென்றுரைவிளம்பிநக்கான். (௩௨)

மைத்துனன்றன்னைநோக்கிநகைத்திந்தவசனங்கூறி
வித்தகனெங்கைதன்னைத்தருவனென்றுரைக்கும்வேலை
சித்தர்கந்தருவர்தேவர்திலோத்தமைமுதலோர்சூழச்
சுத்தவெண்கரியின்மீதிற்றோன்றினனமரர்கோமான். (௩௩)

தேவர்களெல்லோருஞ்சூழத்தவமியமுனிவனெய்த
நவமணித்தூண்கடுன்னுமண்டபநாப்பண்மீதே
கவரிகடிகழத்தீபநிரைகள்காரிகையாரேந்த
வுவமையில்விசயன்சிங்காதனத்தின்மீதொளிரும்வேலை. (௩௪)

ஏடவிழலங்கலம்பாவிலங்கிடத்திலகமின்னத்
தோடிருகுழையினாடத்துலங்கியகொங்கைமீதி
னாடகக்கலன்கடோன்றவம்பொன்மேகலைவயங்கப்
பாடகஞ்சதங்கைதண்டைபரிபுரமார்க்கவந்தாள். (௩௫)

கங்கணமிலங்கநொய்யமருங்கினிற்கலிங்கஞ்சூழச்
செங்கையின்வளைகண்மின்னச்செழுமலர்க்கொம்புபோல
மங்கையர்திலகமானசுபத்திரைவடிவுமிக்க
பங்கயமடந்தைநாணப்பார்த்தனோடிருந்தாண்மாதோ. (௩௬)

இந்திரன்முனிவர்சித்தரியக்கர்சாரணர்கடேவர்
சுந்தரமிகுத்தவானினரம்பையர்முதலோர்சூழ
நந்துதுந்துமிகளார்ப்பத்தவமியனலங்கொளோம
மந்தணர்சூழச்செய்யவாசிகள்வழங்கினாரால். (௩௭)

சங்குதுந்துமிகளார்ப்பத்தனஞ்சயன்றனக்கன்பாலே
யெங்கையையளித்தேனென்றேயாதவனுதகம்பண்ணச்
செங்கையாலேற்றுப்பார்த்தன்சிறந்தமங்கலநாண்கையான்
மங்கைதன்*சிரதரத்திற்சேர்த்தனன்வானோர்வாழ்த்த. (௩௮)

அருமறையவர்கணெய்யினாகுதிநிறைத்ததீயை
வரிகழல்விசயன்றேவிதன்னொடும்வலமாய்வந்து
பொரியிறைத்திருபாதத்தைப்புரந்தரன்புதல்வன்பற்றத்
தெரிவையர்திலகமம்மிமிதித்தனடேவரேத்த. (௩௯)

அருந்ததிதன்னைத்தேவிதன்னொடுமமையநோக்கிக்
கருந்தடங்கண்ணியோடுங்கண்ணனைவணங்கிப்பின்னர்ப்
புரந்தரன்றனையிறைஞ்சமற்றவன்புகழ்ந்துவாழ்த்திப்
பெருந்தவரோடுமால்பால்விடைபெற்றுப்பெயர்ந்தான்மாதோ. (௪0)

மைத்துனன்றனக்குந்தங்கைதனக்குமாமணிகள்வாரி
நித்திலக்கலன்களீந்துநீயெழிற்றேவியோடுஞ்
சித்திரவிரதமேறியிந்திரப்பிரத்தஞ்செல்லென்
றுத்தமனருளிப்போனானுயர்நதிக்கரையினம்மா. (௪௧)

மாயவன்போனபின்னர்விசயன்மாதேவியோடுந்
தூயபொற்கலத்தினன்னமருந்திநற்சுகந்தங்கோட்டிப்
பாயலினெய்திப்பஞ்சபாணமெய்மதனன்வெள்கிச்
சாயவேசுரதநூலிற்றவறிலாப்போகஞ்செய்தான். (௪௨)

---

*சிரதரம்=கழுத்து.

இருவருமொருவர்போலவிணைமுலையிறுகப்புல்லிப்
பரிபுரமரற்றக்கையின்பணிலங்கொலிப்பத்தாரி
னரியினமுரலப்போகந்தணிந்தபின்னன்பினோடு
விரிமணித்தேரின்மின்னோடேகினன்விசயன்மன்னோ. (௪௩)

அலரியோன்குணபாலெய்துமுன்னரினயம்பூண்டேரின்
வலவனாய்மங்கையூரமகபதியருளுமைந்தன்
கலனெலாமிலங்கப்பாரினேகிடக்கண்டவீரர்
பலர்விலாற்பகழியெய்துபணிலங்கண்முழக்கியார்த்தார். (௪௪)

வேறு.

கங்குலினோரிரதந்தனிலேயுயர்கடல்வண்ணன்
றங்கைதனைத்திருடிக்கொடுதரைமிசைசெல்கள்வா
வெங்கடவேகுதியென்றயில்வேல்களெறிந்தார்த்தே
மங்குல்கள்போலெழுமாகரிதேர்கள்வளைத்தாரால். (௪௫)

பேரியறைந்தனர்பணிலமுழக்கினர்பிறைவாளி
நேருறவெய்தனர்நிலமிசைநிருபர்கள்கதம்விஞ்ச
நாரியர்திலகமின்விடுமிரதஞ்செலுநெறிநண்ண
வீரியவிசயன்முனிந்துயர்பகழிகள்விட்டானால். (௪௬)

தேரினமற்றனவற்றனதுவசநெடுந்தேர்கள்
வாலிருதுடைகுரமற்றிடமாண்டனவுயர்வாசி
காலரையுரமொடுகேவசமுமற்றனர்வயவீரர்
நாலிருதிசையினுமுற்றுநடித்தகவந்தங்கள். (௪௭)

ஆடினவல்கைகடசையுறுகுருதிகளாறேபோ
லோடினவாடவர்வாசிகளும்பலினிரையெல்லாம்
வீடினமின்விடுதேரினில்விசயனெய்விறலெல்லா
மோடியதூதரியம்பினர்பால்வணவிறையோடே. (௪௮)

மாதுறுதேரினன்விசயனடர்த்திடுவலியெல்லாந்
தூதருரைக்கவிராமன்முனிந்துதொடர்ந்தோட
யாதவன்முன்னவனைத்தொழுதிச்சமர்தவிர்கென்றே
யோதவலாயுதன்மீண்டனனெழுசினமொருவத்தான். (௪௯)

மாயவன்மொழியினலாயுதன்மீளமணித்தேரின்
சீயமெனப்பொருதரசர்கள்பாறிடவேசென்றே
யாயிழையாளுடனன்பொடுபற்குனனெறியெய்தி
யேயெனுமுன்பலயோசனைசென்றனனெழிலோடே. (௫0)

வேறு.

நந்தணிகரத்தளாயசுபத்திரைநங்கையோடுஞ்
சிந்தையின்மகிழ்ந்துபார்த்தனிந்திரப்பிரத்தஞ்சென்றே
யந்தமாரறன்சேய்பாதத்திறைஞ்சியேயன்னையான
குந்தியைவணங்கிவீமன்குரைகழற்சென்னிவைத்தான். (௫௧)

மாயவன்றங்கையானசுபத்திரைமகிழ்வினோடுந்
தூயநற்குந்திதாளிற்பணிந்தெழிற்றுலங்கநின்ற
வாயிழையவர்களெண்ணுந்துரோபதியடியின்வீழ
வேயெனுந்தோளிநங்கைமெய்யினைத்தழுவிக்கொண்டாள். (௫௨)

முரசுயர்வேந்தன்செங்கோல்முறைமையினடத்திப்பாரி
னரசெய்திமகிழப்பார்த்தனச்சுதன்றங்கையோடும்
விரைகமழலங்கற்சூடிமெய்யினிற்கலவைபூசி
யிரவுநண்பகலுநீங்காதின்பமோடிருந்தானிப்பால். (௫௧)

ஈபத்திரையார் திருக்கலியாணப் படலம் முற்றிற்று.

---

ஆ படலம் - ௬௰ - க்குக் கூடிய திருவிருத்தம் - ௮௦௭.

---

ஸ்ரீகண்ணபிரான் றிருவடித் தாமரைகடுணை.

---

ஸ்ரீ

விஷ்ணுமயம்.

## ௬௧ - வது வசுதேவர்

# வேள்விப் படலம்.

---

பவந்தனுற்றிரண்டமெய்யன்பாருறுசெந்துவெல்லா
நிவந்திடுங்கையான்வாங்கியகட்டினைநிறையத்தூர்க்குங்
கவந்தனைக்கரத்தின்வாளாற்றறித்தகாகுத்தன்பாத
முவந்தியாந்தொழுவந்தொண்டருறுவினையொருவிவாழ. (௧)

எங்கையைக்களவிற்கொண்டேயேகினன்விசயனென்று
வெங்கனல்பொழியுங்கண்ணினலாயுதன்வெகுண்டுசெல்ல
வங்கவன்முனிவைமாயனகற்றியந்நதியையோவி
வங்கமாருவரிசூழும்பதியின்வந்திருந்தநாளில். (௨)

சூரியன்கிரணந்தோன்றத்துவரையையொருவிமாய
னோருறுந்தந்தைதாயருருப்பிணிமுதலோரெல்லாம்
பாரினினிலங்குகின்றசமந்தபஞ்சகநீராடத்
தேரின்முன்னவன்றன்னோடும்பல்வியங்கறங்கச்சென்றான். (௩)

பரசுராமன்கையேந்துங்கணிச்சியாற்படியையாளு
மரசர்களெழுமூன்றாயதலைமுறையடங்கநூறத்
திரையுறுகுருதிசேர்ந்தசமந்தபஞ்சகத்திற்சென்றே
யரியுடன்மகிழ்ந்தெல்லோருந்தடாகநீராடினரால். (௪)

தலவுபவாசம்பண்ணித்தானங்கள்பலவுஞ்செய்து
நலனுறவனைவரோடுநாரணனிருக்கும்வேலை
நிலனுறுநிருபரோடுசமந்தபஞ்சகநீராடக்
கலனுரமிலங்கச்சென்றான்கட்செவியுயர்த்தகோமான். (௫)

அரவுயர்வேந்தன்றன்னையரியுரந்தழுவியன்போ
டருநிலத்திருக்கமந்தாகினிசுதன்விதுரனெய்தப்
பரிவுடன்வணங்கத்தூயதுரோணனும்பகர்ந்தானுசி
நிருபர்களெல்லாமெய்தித்தொழுதனர்நேமியோனை. (௬)

இந்திரப்பிரத்தந்தன்னிலிலங்கியதருமன்வீமன்
சுந்தரவிசயன்றூயமத்திரைசுதர்தம்மோடுங்
குந்தியாண்டெய்தக்கண்டமாயவன்பணிந்துகோதி
லந்தமாரறன்சேய்தன்னையன்பினோடிறைஞ்சினானல். (எ)

வாயுவின்மகனையன்பால்வணங்கிவில்விசயன்றன்னை
நேயமோடெரத்தினூரத்தழுவியேநின்றமாலைத்
தூயமாநகுலன்பின்னோனுடனடிதொழுதலோடு
மாயவனவரையன்பினணைத்துளமகிழ்ந்தான்மன்னோ. (அ)

மன்னரெண்பாஞ்சாலன்றன்மகடுரோபதையாமங்கை
பன்னகமடந்தைதூயசுபத்திரைபாரின்றூய
தென்னவன்வரத்தாற்பெற்றசித்திராங்கதைதன்னோடு
மின்னுநேமியன்றன்பாதத்திறைஞ்சினண்மகிழ்வுமிஞ்ச. (கூ)

நந்தனோடசோதைநங்கைநலனுறுமாதரோடும்
வந்திடக்கண்டமாயன்றந்தையைவணங்கித்தூய
சிந்தையளாயவன்னைசேவடியிறைஞ்சலோடு
மைந்தனைத்தழுவியன்பின்மடிமிசைவைத்துக்கொண்டாள். (க0)

பரிவினோடுச்சிமோந்தவசோதையைத்தழுவிப்பாம்பின்
சிரமிசைநடித்தவையன்மகிழ்ந்திடச்சீர்கொளாய
ரிவையர்குழாங்களெய்தியரியினையிறைஞ்சிநின்றே
யெரியுறுதுப்பாமென்னவுருகியேயின்பமுற்றார். (கக)

சிந்தையின்மகிழ்வினோடுதிறல்வசுதேவன்றன்னைக்
குந்திவந்திறைஞ்சியுன்றன்மருகர்கள்குறைவுதீர
வந்திலையென்றுகண்ணீர்நிலனுறவருந்துவாளைச்
சுந்தரவரிதன்றாதையணைத்திவைசொல்லலுற்றான். (கஉ)

கஞ்சன்வெஞ்சினத்தினெம்மைக்கடுஞ்சிறையிருத்தியென்றன்
மஞ்சனைவதைக்கவெண்ணிலசுரரைவிடுத்துவஞ்சம்
விஞ்சியகயவன்செய்தவினையினால்வந்திலேனீ
பஞ்சவருடனென்னாற்பருவரலுற்றாயென்றான். (கங)

தேவகிகுந்திதன்னையன்பொடுதழுவச்சீரா
மாவடுவகிரின்கண்ணியுருப்பிணிமுதலாமாத
ராவலினவரன்னையடிமிசைவணங்கவாசி
நாவினினவின்றுபின்னர்நலனுறவணைத்துக்கொண்டாள். (கச)

குந்தியையலத்தோனன்னைதழுவித்தேவகிக்கொம்போடு
சிந்தையின்மகிழ்வோடெய்துமசோதையையணைக்கச்சீரா
மிந்துநேர்வதனத்தன்னருருப்பிணிமுதலெல்லோரு
நந்தனன்மனையாடாளினலனுறவிறைஞ்சினாரால். (கரு)

விரைசெறிகுழற்பாஞ்சாலிமீனகேதனன்றன்பாவை
யுரகமன்பயந்தனூகிசுபத்திரையுடனெல்லோரு
மரசவொண்விதர்ப்பன்பாவைமுதலரிவையரையெல்லாம்
பரிவுடன்றழுவிமாலினன்னையைப்பணிந்தாரன்றே. (கசு)

தூயபாஞ்சாலன்பெற்றதுரோபதையன்பினாலே
வேயுறுதோளரானவிளங்கிழையாளைநோக்கி
மாயவன்றனக்குநீயிர்வதுவையாயினவாறெல்லா
நேயமோடுரைத்தியென்னவுருப்பிணிநினைவுகூர்ந்தே. (கஎ)

மாதவன்றனக்குயானோர்தூதனைவிடுப்பவந்த
சீதரனெனைத்தேரேற்றிச்செருநரையமரின்வென்றே
யோதமாருவரிசூழ்ந்ததுவரையினெய்தியூங்கார்
வேதியர்வளர்க்குமோமம்விளங்கிடமணந்தானென்றாள். (கஅ)

பரியொடுபிரசேனன்றான்மடிந்திடப்பாய்ந்துசெற்ற
சரியிலாமடங்கறன்னைவதைத்தவென்றந்தைதன்னோ
டிருபதோடெட்டுநாட்போர்செய்யரிக்கென்னோடென்னீய்
பருமணிதனையுமீந்தானென்றனளொண்கின்பாவை. (ககூ)

அனுசனைச்செற்றசீயந்தன்னையாண்டடர்ந்துசெற்ற
சினமலியெண்கைவென்றுசியமந்தகமணியையீய
மனமகிழெந்தையென்னைமாயனுக்கீய்ந்தானென்று
தனமிருகலசம்போன்றசத்தியவாமைசொன்னாள். (உ௦)

ஆதவன்பயந்தநங்கையாயினேன்மாலைநத்தித்
தீதகல்யமுனையாற்றிற்சிறந்திடுங்கூலந்தன்னின்
மாதவம்புரிந்தேன்றன்னைநோக்கியேமகிழ்வினாற்சேர்
யாதவன்மணந்தானென்றுகாளிந்தியியம்பினாளால். (உக)

இலங்கியவவந்திமன்னன்புதல்வியானவையுளெய்தி
யலங்கலையரிதன்றோளினிடவெதிரரசரெல்லாங்
கலங்கியேயோடக்கண்டுமாலெனைக்கவர்ந்தானென்று
துலங்கியகலன்கள்பூணுமித்திரவிந்தைசொன்னாள். (உஉ)

நிகரில்செங்கோலையோச்சுங்கவுசலநிருபன்பெற்ற
மகளியானரசரோடுமலைந்தவேழ்விடைகளைத்தான்
செகதலமிசையிற்செற்றுமாலெனைச்சேர்ந்தானென்று
நகிலொளிரிளநீர்போன்றநாக்கினசித்துச்சொன்னாள். (உங)

மாவணியிரதஞ்சூழ்ந்தமத்திரன்மகள்யான்மாயன்
மூவுலகளந்தகீர்த்திமொழிந்தவன்படிவமுற்று
மாவலின்வரைந்துபார்க்குமோவியமத்தனுட்டோன்றி
மேவிமான்மணந்தானென்றுபத்திரைவிளம்பினாளால். (உச)

கோலமார்பத்திரன்றானல்கிடுங்கோதையென்னைச்
சேலறவெய்தானுக்கேயீவனென்றெந்தைசெப்ப
வேலொளிர்விசயனெய்யத்தப்பியகயலைவீழ்த்து
மாலெனைமணந்தானென்றேயிலக்கணையுரைத்தாண்மன்னோ. (உரு)

வரிசிலைநரகன்றன்னைவதைத்தவன்சிறையில்வைத்த
வரசர்களிடரைநீக்கியவர்கடாம்பயந்தகோதி
றெரிவையரியாங்களெண்ணீராயிரம்பேரைச்சீரா
மொருமுகூர்த்தத்தின்மாயோனுற்றெமைமணந்தானென்றார். (உசு)

சயிலக்குன்றேந்திமாரிதடுத்தவனெழிலினாலே
மயலுறுவேணைப்பெற்றமன்னர்கவேணையெய்தி
யியல்புடனியாயங்களிணைம்பதின்மணையீந்தாரொன்றே
யயில்விழியணங்கினார்களன்பினோடுறைந்தாரன்றே. (உஎ)

எண்ணிரண்டாயிரத்துநூற்றெட்டாமெதிரின்மாதர்
கண்ணணவிரும்பித்தாங்கள்கலந்தனகழறலோடும்
புண்ணியம்புரிந்தமங்கைதுரோபதையுளூகிபொற்பார்
மண்ணிணையாளுந்தென்னன்மகளிவர்மகிழ்ந்தாரன்றே. (உஅ)

மாதவமுலப்பில்செய்துமண்மிசைப்பிறந்துநீயிர்
சீதரன்மார்பிற்சேர்ந்துதிருவினுமதிகராணீ
ரேதுமக்கரியதென்றேயிறைஞ்சினளவர்தோள்சேர்
கோதைகோதிலாதஞானம்படர்ந்திடுகொழுகொம்பானாள். (உகூ)

வணங்குபாஞ்சாலிதன்னைவண்மைசேர்விதர்ப்பன்பெற்ற
வணங்கிருகையினாரத்தழுவியாதனத்தினுய்த்து
மணங்கமழ்குழலினார்கள்மருங்குற்கவரிவீசக்
குணங்களிற்குறைவிலாதகொம்பினிதிருந்தாளன்றே. (கூ0)

வேறு.

புலத்தியனகத்தியன்புலகன்மார்க்கண்டன்
நலத்துறுமியாக்கியவற்கன்நாரதன்
சலத்திணைவென்றவங்கிராதனத்திரி
பெலத்தொளிர்பிருகுமாமுனிபிரகற்பதி. (கூக)

வாமதேவன்னுயர்வசிட்டமாமுனி
நாமறைமணத்திடுவியாசனற்றவன்
பூமியிற்பராசரனோடும்போதவே
காமணைப்பயந்தருள்கண்ணன்கண்டனன். (கூஉ)

கண்டெழுந்துலப்பிலாக்களிப்பினெய்தியே
யெண்டவரடிமிசையிறைஞ்சியீனமில்
புண்டரீகன்னிகர்முனிவர்போந்ததென்
பண்டைநல்விணையெனப்பகர்ந்துமாயவன். (கூகூ)

அருந்தவர்க்கருக்கியமளிக்கவன்புளம்
பொருந்திடவாசிகள்புகன்றெல்லோர்களு
மிருந்திடநீரிவணெய்தியான்செய்த
பெருந்தவப்பயனெனமாயன்பேசுவான். (கூச)

படிமிசையெய்துமும்பதுமம்போன்றொளி
ரடிகளிற்பணிந்துயானளப்பிலாதவெங்
கொடுவிணையொருவினேனென்றுகூறிடு
நெடியவன்றனக்கவர்நிகழ்த்துவாரரோ. (கூரு)

மேனிமிர்ந்தளந்தவுன்றொளின்மேவிய
வானதியெங்கண்மாப்பாவமாற்றுமா
லானிரைமேய்த்திடுமமலவெம்மைநீ
மாணிடர்போலவேதுதிக்குமாயமென். (கூசா)

மழைமுகில்வண்ணன்மயக்குமாயையா
விழையுறுமணியெனத்திரியுமெங்கடங்
கழலினிற்பணிந்தெமைத்துதித்தல்களாமே
மொழிமறைக்ககப்படாமுதல்வவென்றனர். (கஎ)

இவைமொழிந்தமலனுல்விடைபெற்றேகிடுந்
தவர்களைப்பணிந்தரிதந்தைகூறுவான்
பவமறுத்தியானுயர்பதத்தினெய்தவே
நவையறுமுனிவரீர்நவிலுமென்றனன். (கஅ)

சூரசேனன்சுதன்சொல்லக்கேட்டநா
ரதன்முனிவரைநோக்கியேநகைத்
தேருறுமாலைத்தன்மகனென்றெண்ணினான்
சீருறுமன்னிவைசெப்பினுனென்றான். (கக)

சூரர்முனிமொழியினைக்கேட்டுத்தூய்மைசேர்
விரைபுரைகமலனைப்பொருவுமெய்த்தவ
ரரியினைப்பயந்திடுமரசன்றன்னுடன்
பரிவுடனிவ்வுரைபகர்கின்றாரரோ. (௨0)

தரணியின்வேள்விசெய்துயர்ந்ததானங்கள்
பரிவுடன்பண்ணவேபவமிலாதுற
மிரணியந்தேடுவார்சுதர்களெய்தவே
யரிவையைவேட்பர்களறிஞராயினும். (௨க)

வேறு.

இருநிலமிசைச்செய்கடன்மூன்றிதினியற்சுருதிநூலின்வழியே
பிரமசரியஞ்செய்துமுனிக்கடனகற்றுவர்கள்பெற்றசுதரா
லுரியபிதிரின்கடனொழித்துயரும்வேள்விசெய்துதேவர்கடனைப்
பெரியவர்கழித்திடுவரொன்றுவசுதேவனெடுபேசிமொழிவார். (௨௨)

தரணிமிசையிவ்வகையின்மூன்றுகடனீக்கினர்கள்சார்வர்கதியி
னிருகடனொழித்தனையினிச்செய்கடன்வேள்விமனவென்றுமுனிவோ
ருரைசெயமகிழ்ந்தடிபணிந்தரசன்மாமகநடத்தவுள்கியே
யரியதவர்தங்களைவரித்தெழில்கொள்சாலையையடைந்தனனரோ. (௨௩)

மெய்யின்வெணெய்பூசியெழில்வெள்ளிநிகர்புள்ளிமுகமேவுசிரமேற்
கையுறவெடுத்தகலுகொம்பினுடனுக்கையைமறைத்தகதமா
வுய்யமடுவின்கண்வருவோனனைமுதற்பதினெண்மாதருறவே
நெய்யினிறையாகுதிமறைப்படியின்வேள்வியினிறைத்தனனரோ. (௨௪)

ஓகையுடனுருதிகள்செய்தொளிகொடேவதைகளுண்மகிழவிப்
பாகமதுநல்கியுயர்தக்கணைகளன்பினெடுபண்ணியரசன்
மாகனகதானநனிசெய்யமலர்வானவர்நிறைந்துபொழியக்
காகளமொடேவனைகள்பேரிபடகம்பணைகறங்கியவரோ. (௨ரு)

வேறு.

நவமணிக்கவிகைநற்கவரியோங்கவே
துவரிதழ்வாயினர்பலருஞ்சூழவே
யுவமையிறேவகியுடனெண்மன்னவ
னவபிருதங்குடைந்தாடினனரோ. (௨கா)

விருத்திராசுரன்றனைவீட்டியிந்திர
னருத்தியால்வேள்விசெய்யழகுபோலவே
வரத்தினார்முனிவர்கடுதிப்பமாமகங்
கருத்தினன்மகிழ்வொடுசெய்தன்காவலன். (௪௭)

நிருபர்கடமக்குநேரிலாதநற்கலன்
கரிபரியிரதமுங்களிப்பினாலளித்
தரசனும்மகிழ்ந்திடவரிமுன்னோனுட
னிருநிலத்திறைஞ்சிடவெடுத்துப்புல்லினான். (௪௮)

தனையனைப்பெற்றதாழ்விலாத்தேவகி
மனமகிழ்ந்திடவசுதேவன்மைந்தரோ
டினிதுடனிருக்கவேயெழில்கொள்மாயனை
முனிவர்களாசிகண்மொழிந்துபோயினார். (௪௯)

அரவுயர்த்தோனொடுமரசர்போயினர்
முரசுயர்த்தோனெழிலினார்முரித்தேர்த்
திரளொடுங்குந்திபாஞ்சாலிதென்னன்மா
னுரகமின்சுபத்திரையுடனும்போயினார். (௫௦)

நந்தனுமசோதையுநந்துகையுறு
மைந்தனையொருவலாமனத்தராகியே
நொந்தழுதணைத்தனரவரைநோக்கிநின்
றிந்திரைநாயகனிரங்கியேயரோ. (௫௧)

அன்னையாமசோதையைநோக்கியன்பினா
லுன்னையானொருவலனென்றுரைத்துமால்
பின்னருந்திங்கள்மூன்றிருக்கப்பேரருண்
மன்னவேயவர்களுமகிழ்ச்சியெய்தினார். (௫௨)

கோவியர்மனமகிழ்ந்திருக்கக்கோவல
னோவியவடிவினையுற்றுநோக்கியே
யாவலினொருவலாரன்புகூர்ந்திடத்
தேவனுண்டவரொடுஞ்சிறந்துதோன்றினான். (௫௩)

காவலனெண்வசுதேவன்கற்புடைத்
தேவகிமகிழ்ந்திடமணிகள்சேர்கல
னுவலினசோதைக்குமாயர்கோனுக்குங்
கோவியர்தமக்குமேகொடுத்தனன்னரோ. (௫௪)

பாவமிலசோதையும்பழிப்பினந்தனு
மோவியவடிவினையணைத்துள்வாடியே
யாவியில்லுடலெனவுறவந்நந்தனுங்
கோவியருங்கரங்கூப்பிப்போயினார். (௫௫)

மாயன்முன்றோனெழிற்றங்கைவண்மைசேர்
தாயர்களுருப்பிணிமுதலொண்டொடையலார்
நேயமோடிரதமேனெறியிற்சேரவே
தூயநற்றுவரையிற்றுலங்கவெய்தினான். (௫௬)

நிருபனுத்தவன்வசுதேவன்கீர்த்திசே
ருரனுறுமுக்கிரசேனனுற்றிட
வரனுறுமுனிவர்கண்மருங்குசூழ்ந்திட
வரிசபாமண்டபத்தமரும்வேலையின். (௫௭)

சூரர்முனியாழொடுந்துலங்கவெய்தியே
யரியினையற்புதவதிகீயெனத்
திருமகள்கணவன் * றெக்கணையினோடியான்
பெரியவனாமெனப்பேசினானரோ (௫௮)

முனிவனற்புதனெனமுராரியாமெனு
மினியசொற்கேட்டமாதவிரீதேதெனா
நினைகினுமுணர்கிலாநேமியாயெமக்
கினையசொற்பொருளினையியம்புவாயென்றார். (௫௯)

மாதவருரைத்திடநகைத்துமாயவ
னேதமினாரதவியம்புநீயெனப்
போதனைத்தருமிறைபுகலக்கேட்டெழு
மாதரத்துடன்முனியறைகுவானரோ. (௬௦)

ஆசினற்கங்கையினயத்துட்டோய்ந்துயான்
யோசனைநீளத்தினாருமாமைகண்
டேசிலாச்சிவனாட்பெரியைநீயென்றே
பேசிடவுரைத்ததுபிறங்குகச்சபம். (௬௧)

என்னினுமதிகமாஞ்சிவனெண்ணிலா
மன்னுமந்தாகினிபெரியதென்னவா
னன்னதிதன்னைநீபெரியளென்றுநான்
சொன்னதுகேட்டவள்சொல்லலுற்றனள். (௬௨)

நீர்புரைநதியெலாநிறையத்தாங்கிய
வாருதிபெரியதென்றோதவாரியை
நாரமாரதிகநீயென்னநானலேன்
பார்பெரிதென்றுபௌவம்பகர்ந்தது. (௬௩)

---

* தானாய்த் தக்கணையோடும் மேற்கவிகளிற் கூறும் எட்டினிற் பெரிய னென்பதை.

“ஆமையாய்க்கங்கையாயாழ்கடலாயவனியாயருவரைகளாய்
நான்முகனாய்நான்மறையாய்வேள்வியாய்த்தக்கணையாய்த்தானுமானான்
சேமமுடைநாரதனார்சென்றுசென்றுதுதித்திறைஞ்சக்கிடந்தான்கோயில்
பூமருவிப்புள்ளினங்கள்புள்ளரையன்புகழ்குழறும்புனலரங்கமே.”

என்னும் “நாலாயிரப் பிரபந்தத்து முதலாயிரம் ௯-வது மரவடியை” என்னும் முதற்கவி முதனிணைப்புத் திருவரங்கப் பதிகத்தானுமோர்க.

இருநிலமதனைநீபெரியையென்றதுந்
தனைமிறுடோன்றியாண்டென்னைத்தாங்கிடும்
வரைகளொட்டுமேயதிகமென்னமா
கிரிகளுமுருவமாய்க்கிளர்ந்துகூறுமால். (௬௪)

உலகெலாமுயிர்களொடுதெவுந்தூயமா
மலருளோன்பெரியனென்றுரைப்பமற்றியான்
நலமெலாமுற்றநான்முகனைநண்ணியே
சலமிலாய்பெரியைநீயென்றுசாற்றினேன். (௬௫)

நறைமலர்நாயகன்கேட்டுநானலேன்
மறைகடாம்பெரியவென்றுரைப்பமாசிலா
நெறியுறுவேதமேயதிகநீயென
வறையவப்புருடன்யானலவென்றேசொலும். (௬௬)

நாகர்மாமுனிவர்கடுதிப்பநன்மைசேர்
யாகமேபெரியதென்றோதயானெய்தி
னுகுதிநிறைமகம்பெரியதாமென
யோகையார்வேள்வியோருருவமாய்ச்சொலும். (௬௭)

யான்பெரியேனலேனெனக்குநாயகன்
வான்புவியளந்தவன்பெரியனென்னமால்
ஆம்பரமேட்டிநீயதிகமாமென
நான்பகர்ந்தேனெனநவிலுநாரதன். (௬௮)

அற்புதநீயுயரதிகனென்றதாற்
சொற்றந்ததெனவரிதாயதெக்கணை
நற்பலவேள்வியினதிகனானெனச்
சற்பமேனடித்தவன்சாற்றினனென்றான். (௬௯)

இவையெலாமுரைத்தியாழ்முனிவனேகலுந்
தவர்களுன்மறையவர்தரணியாண்மனர்
துவரையினிலங்குஞ்சுந்தரனைப்போற்றியே
நவையறுமுதலிவனெனநவின்றனர். (௭0)

நிலஞ்செறிமுனிவர்வேதியர்க்குநேரிலா
நலஞ்செறியரிவிடையருளிநன்மணிக்
கலஞ்செறிமார்பினன்வளைகறங்கிடப்
பொலஞ்செறியுருப்பிணிகோயிற்புக்கனன். (௭௧)

சுரர்முனியிவையெலாமுரைப்பச்சோதியாம்
பரமனிப்பாரினின்பாரநீக்கவே
விருநிலத்தென்சுதனாயினனென
வரிசையார்மன்வசுதேவனெண்ணியே. (௭௨)

தேவகியுடன்வசுதேவன்சென்றொளி
ரோவியவடிவின்மாலுறையுங்கோயிலின்
மேவிடமாயவன்விதர்ப்பன்பெற்றருள்
பாவையோடவிருபதத்திறைஞ்சினான். (௭௩

இறைஞ்சியமுராரியையெடுத்துத்தானேனைத்
தறஞ்செயுநல்வசுதேவனன்புள
நிறைந்திடநோக்கியேநீயென்மைந்தனென்
றுறைந்தனைபாரினினுலகுணேமியாய். (௭௪)

மதுரைப்பிறந்தநான்மருடாறகர
மெதிரில்பீதாம்பரமிலங்குமார்பினன்
மதிநிகர்வலம்புரிவயங்கத்தோன்றிய
சதுரவென்றவத்திருற்றனையனென்றாய். (௭௫)

நீயெழிலவனியின்சுமடுநீக்கவே
சேயெனவெய்வயிற்செனித்தசெய்வகீன்
றூயுடன்விளம்புமுன்றனையனீசெயு
மாயையின்மறந்தநான்மகனென்றெண்ணினேம். (௭௬)

பூதலந்தனினைந்துபுலன்களாலெய்தும்
வேதனைக்ககப்படாதருளியெய்மைசே
ராதியுன்பதமெமக்களித்தியென்றுமுன்
னோதியதந்தையோடுறைக்கலுற்றனன். (௭௭)

தூயநான்மறைநெறிசொல்லினுயென்றன்
றூயுடன்பின்னரொன்பதத்திற்சாரொன்றே
மாயவன்மாயையான்மறைப்பமன்னன்றன்
சேயெனவுணைத்திடவன்னைசெப்பினாள். (௭௮)

ஏயெனுமுன்மகோததியினெய்தியே
ஆயசாந்திபன்றன்சுதனைத்தந்தா
நீயவன்வதைத்தயென்சேயர்தங்களா
மாயவகொணர்தியென்றுரைவழங்கினாள். (௭௯)

அன்னைதன்சேயினராறுபேரையு
மென்னிடர்கெடக்கொணர்வாயென்றோதிடப்
பன்னகப்பகைஞன்மேற்பரமன்மேவியே
யின்னலிற்சுதலலோகத்திலெய்தினான். (௮0)

சுதலலோகத்தினிற்றுலங்குமாவலி
முதலையான்மெலிகயமூலமென்னவின்
னுதலிமார்பிலகவேநொடிப்பினெய்திய
மிதுலைமான்பதிவரவியந்துநோக்கினான். (௮௧)

கோடொளிராழிகைக்கொண்டமாயவ
வீடினவினையெனவிளம்பிக்கைதொழு
தாடினனிறைஞ்சினனன்பினாரணம்
பாடினனிருகணீர்பரந்தங்கோடவே. (௮௨)

நீதியாலருக்கியமளித்துநேமியோன்
பாதநீர்சிரத்தின்மேற்றெளித்துப்பாம்பின்மே
லோதமாருவரியினுறையுமுத்தம
வாதிநீயெய்தவாழ்ந்தனனென்றுடினான். (௮௩)



கடங்கொண்மாகரியினைக்காத்துமுவல
கடங்கவீரடியினாலளந்தவாதியை
மடங்கலாசனத்தின்மீதிருத்திமாவலி
திடங்கொண்ஞானத்தொடுஞ்செப்புவானரோ. (அச)

ஆவலினைம்புலன்வழியினாழ்ந்திடும்
பாவமுற்றிடமனைவாழ்க்கைப்பாழதாங்
கூவலினழுந்தியகொடியனேனையுன்
சேவடிமிசையினிற்சேர்த்தியென்றனன். (அரு)

என்றிவைமொழிந்தடியிறைஞ்சிமாவலி
யன்றுலகளந்தருளாயவென்பதிக்
கொன்றியகருமநீயுரைத்தியென்றனு
மன்றலர்துளவணிமாயன்கூறுவான். (அசு)

மாதவமரீசிதன்மனைவிதன்வயி
னேதமில்சுதரறுவோர்களெய்தியே
போதினின்வருமிறைபுகன்றசாபத்தாற்
றீதுறுமிரணியன்சிறுவராயினார். (அஎ)

அவுணராய்ப்பிறந்திடுமறுவர்பாரினிற்
பவமிலாத்தேவகிபயந்தபோதினி
னவையுறுகஞ்சனான்மடிந்துநண்ணினா
ரிவர்களென்றரிபினரியம்புவானரோ. (அஅ)

பூவினினயன்மொழிசாபம்போகவே
தேவகிதன்முனிற்சுட்டிச்சீரிலாப்
பாவமில்மரீசிதன்பாலிற்சோப்பனென்
றாவினைமேய்த்தருளமலன்கூறினான். (அகூ)

கோவலனிவையெலாங்கூறக்கேட்டிடு
மாவலியடிபணிந்தேத்தமாதவ
னாவலின்வருமறுவோரொடெய்தியே
தேவகிதன்முனிற்சுட்டிச்செப்புவான். (கூ0)

கஞ்சனான்மடிந்தவரிவர்கள்காணென
நெஞ்சினாற்றுணியறநிறைந்தவன்பினென்
மஞ்சராமிவரெனமகிழ்ந்துதேவகி
யெஞ்சிலாவிருதனப்பாலையீந்தனள். (கூக)

சிந்தையின்மகிழ்ந்துதேவகியினீந்திடுஞ்
சுந்தரமுலையினிற்சுரந்தபாலினை
மைந்தர்களருந்தமாசாபமோவியே
யிந்திரைகணவன்றனடியிறைஞ்சினார். (கூஉ)

மாயனைவணங்கியேமகிழ்வுவிஞ்சிய
தாயெனுந்தேவகிதாளின்வீழ்ந்தவ
ரேயெனுமுன்விமானத்தினெய்தியே
தூயநன்மரீசியைத்தொழுதுசேர்ந்தனர். (கூங)

நந்துறுகரத்தினணகிலினூறுபாற்
சிந்தையின்மகிழ்வொடேருந்தித்தேவரா
யந்தரவிமானமேலடையவீதென்றன்
மைந்தனற்செயலெனமகிழ்ந்துகூறுவாள். (௯௪)

ஆதிநீவிமலநீயமலனீயுயர்
சோதிநீபரமனீசுருதிநாதனீ
போதனீயெனக்கெழிற்புதல்வனாகிய
யாதவனின்பதமளித்தியென்றனள். (௯௫)

அன்னையிவ்வாறறிந்தறையவச்சுதன்
பின்னரென்பதந்தனைப்பெறுதியென்றவன்
மன்னியமாயையான்மறைப்பமைந்தனென்
றுன்னியேமாயனையணைத்துவந்தனள். (௯௬)

## வாசுதேவர் வேள்விப் படலம்

முற்றிற்று.



ஆக படலம் ௯௧-க்குக் கூடிய திருவிருத்தம் ௯௦௯.



கண்ணபிரான் றிருவடித்தாமரை கடுணை.



ஸ்ரீ

விஷ்ணுமயம்.

## ௯௨-வது கண்டாகன்னன்

# மோட்சப்படலம்.



அந்தணிவன்மாமகஞ்செய்துமுயர்ந்தவறிஞன்றன்புதுப்பிணவாக்கை
தந்தனனமுதுசெய்தருளெனக்குந்தம்பிக்கும்வீடுதாவென்று
வந்துநின்றடித்துதிசெயுங்கண்டாகருணனோடிளவலுமகிழச்
சிந்தையினுவந்துதன்பதமளித்ததிருவினையகனடிதொழுவாம். (௧)

நவமணியினங்கள்வயங்குதூணணிகணலனுறுமண்டபநாப்பண்
கவினுறுகவரியசைந்திடக்காயாமலரெனக்கருமுகிலெனவே
யுவமையிற்படிவமொளிரவீற்றிருந்தவொருதனிமுதல்வனையுற்றுத்
துவரிதழ்வாயாளுருப்பிணிமுதலாந்தேவியர்தொழுதிவையுரைப்பார். (௨)

துனியறவிருளையொருவுமென்றினைப்போற்சுருதிநூனெறியினையெய்துந்
தனையரையெமக்கின்றருளுதியென்னநகைத்துயர்சக்கரந்தரித்தோ
னனமெனுநடையீரருந்தவம்புரிந்தேயரனிடைவரத்தினைப்பெற்று
மனமகிழ்ந்திரேற்புதல்வரைத்தருவமென்றுமண்டபமிசைவந்தான். (௩)

தாலகேதனமன்சினியருள்புதல்வன்சாத்தகிசாரணன்சடனற்
சீலமார்குணத்தினிவர்களைநோக்கித்திறலுடைநேமியோனுரைப்பான்
காலனேயனையபவுண்டரீகன்றனடர்ந்திடாவகையிவண்காமி
ஞாலமேநுகருமரணிடைவரங்கள்பெற்றியான்மீள்வனென்றறைந்தான். (௪)

திருமகள்கொழுநன்மொழிந்திடக்கேட்டசினியருள்சாத்தகிதிறல்சேர்
அரனுடனிமையோர்மகபதிமுடுகியடுசினத்துடனமர்பொரினும்
வரிசிலைவலத்தாற்றடைசெய்தீண்டெதிருமொன்னலர்தங்களைவதைப்பன்
கருமுகில்வடிவாபோதியென்றுரைப்பமகிழ்ந்தரிகருடன்மேற்சென்றான். (௫)

மாயவன்கலுழன்மிசையினிற்சென்றுவதரிகாச்சிரமத்தினுறவே
தூயநன்முனிவரனைவருமாசிசொல்லவாண்டவர்களைத்தொழுது
மீயுயரலரிகுடகடலிடையின்மறைந்திடவிழுமியயமுனை
யாயமாநதிமந்தாகினியுடனேயமர்ந்திடுங் *கூலத்தினடைந்தான். (௬)

தூயநாதனைத்தன்னெஞ்சினினினைத்துத்துலங்கியயோகத்தினுயர்ந்த
மாயவனதியின்கோட்டுவாலுகத்தின்வயங்கிடவிருந்திடும்போழ்தின்
நேயமொடரனைநினைந்துபல்லாண்டுநெடுந்தவம்புரிந்திடுபூதன்
சீயமானுழையையடர்ந்திடும்வனத்தின்சேர்ந்தவண்வருஞ்செயல்மொழிவாம். (௭)

அரிதிருப்பெயரைக்கேட்கலாகாதென்றறைந்திடுகண்டைசேர்செவியன்
பரிவுடனரனைநினைந்துபல்லாண்டுபழுவத்தினருந்தவஞ்செய்ய
வெருவினினிலங்குமிறைவனங்கெய்தவிருகையாற்றொழுதவனெனக்குப்
பரமனீயழியாப்பதத்தினையருளென்றுரைத்திடவுமாபதிபகர்வான். (௮)

இருநிலமமராபதிதனபதிதன்னகரிவையேதுவேண்டிடினுந்
தருகுவனெனலுமிசைகிலானலரிவெயிலினூற்றபித்தவன்றனக்குப்
பருகுநீர்கொடாதிங்கெண்ணெயையளித்தாற்பயனிலைபரமநீயெனக்கே
யருளழிவிலாதகதியருளெனவேயரியருளுவனெனவகன்றான். (௯)

அரியுயர்கதியையளிப்பனென்றுயர்ந்தவரனிவைமொழிந்திடக்கேட்டே
யிருசெவியதனினிலங்குகண்டைகளையிமைப்பின்முனிருகையால்வாங்கித்
தரையினினெறிந்துசகாயனுய்வயங்குந்தனபதிக்கிவையெலாஞ்சாற்றப்
பரிவுடனவனுமுராரியேயழியாப்பதந்தருவானெனப்பகர்ந்தான். (௧௦)

தூயவெட்டெழுத்துந்துவாதசாக்கரமுஞ்செவியிடைச்சொல்லியேதுலங்கு
மாயவன்றுவராபதியின்மன்னவனுய்வயங்கியவாறெலாமறைய
வாயவைகேட்டுமகிழ்ந்திடுங்கண்டாகருணன்மால்பெயரெலாமறைந்து
பேயினஞ்சூழப்பெருவரைபோலப்பிறங்கியபழுவத்திற்சேர்ந்தான். (௧௧)

வேறு.

பேயினர்சுற்றினர்பறைகளடித்தனர்பிரியாத
நாய்கள்குலைத்திடவெங்கணுமோடினர்நலனில்லா
மீயுயர்வானம்வெடிப்பெழவார்த்தனர்விறலோடுஞ்
சீயமொடேகரியுழைவைவதைத்தனர்சினம்விஞ்ச. (௧௨)

---

* மந்தாகினியுடன் யமுனைசேரிடம் பிரயாகை.

தீபநிறைத்தனர்நாரைவதைத்தனர்செயிர்விஞ்சுங்
கோபமனத்தினர்வளைகள்முழக்கினர்கொடிதாய
பாபமிகுத்தவர்மயிடம்வதைத்தனர்படிமீதிற்
சாபம்வளைத்தனர்கிருடிமடித்தனர்தழலப்பால். (௧௩)

கருவரைபோலநடந்திடுகண்டாகருணன்று
ணிருநிலமிசையினிலங்கியவேள்விசெயியல்பாரும்
மருமறையோனைவதைத்தொருசூலத்தவனுக்கை
யுருவமெடுத்தனனலகைகள்சுற்றிடவிடமொப்பான். (௧௪)

மரைகரியரியையவிழுத்தலகைக்குலம்வரவாயாற்
பருகினனிருகையினுதிரநிறைத்துயர்படிமீதி
னெரிநயனத்தொடுகுடர்தசைதின்றெயிறிலகச்சீ
ரரிகரிபரமமுராரியெனுஞ்சொலறைந்தானால். (௧௫)

ஆனைவதைத்தொருகொம்புகைபற்றினனரைமீதி
னூனிறையுங்குடர்சுற்றினனீரல்களுண்வாயன்
கானிடையுற்றெருளிர்கன்றுகண்மேய்த்துயர்துவரைக்கோ
மானெனவாகியவாமனனேநமவென்பானால். (௧௬)

கொலைபலசெய்தவனேமிகுபாவியெனக்கூறு
நலனுறுமறையெனவோதுவர்நான்வதைசெய்வேன்மா
நிலமிசையிருவினைநீக்குதிநேமியவென்றேமான்
றலைநரர்குடறசைதின்றுதருக்கிநடந்தானால். (௧௭)

மாதவனேநமவென்றுயராவைவதைத்தேநற்
சீதரனேநமவென்றரியின்பிசிதந்தின்றெம்
மாதியசஞ்சலவற்புதவச்சுதவெனவோதிச்
சோதிவயங்கியதூநதியின்னிடைசூழ்ந்தானால். (௧௮)

சுற்றியநாய்களையோட்டுமினென்றுரைசொல்லாமுன்
னத்தியமாலையினைந்துநதிக்கரையிடையெய்திப்
பற்றியமாகரிகோடுகள்பலசவமெல்லாமுக்
குற்றமிலந்தணனற்பிணமோடுயர்குவைசெய்தான். (௧௯)

அரையின்விசித்திடுகுடர்நிலன்வைத்தனனன்போடே
விரைவினினீருகிராற்றுணிசெய்குவைசயின்மீதின்
றரையினிருந்தரிதாளைநினைர்துயர்முகில்வண்ணு
பரமவிராமமுராரிபராபரநமவென்றான். (௨0)

இலகியதீவிகைநிணனெயினெண்டிசைதொறுமேற்றி
யலகைகளேந்திடவேயரிதன்னையருச்சித்து
நிலமிசையிற்குவைசெய்தசவங்களினெடிதாய
பலகரிமயிடமுடங்குளையெண்குபடைத்தானால். (௨௧)

தூயவெழுத்திருநாலுதுவாதசலிபிநெஞ்சி
னேயமொடேயிருகைசிரம்வைத்துநினைந்தேதா
னையமுராரியசஞ்சலவற்புதவுயர்சோதி
மாயவவாரணவென்றுசெபித்துமகிழ்ந்தானால். (௨௨)

## வேறு.

உம்பலின்குடரினையோகபட்டமா
யம்பரந்திகழ்கின்றவரையின்வீக்கியே
வம்பவிழ்துளவணிமார்பின்மாயனை
நம்பித்தன்னயனநீருகச்செபித்தனன். (௨௩)

அருவினையகன்மணிக்கருணனன்புட
னிருநயனத்தினைமுகிழ்த்தியேயிறைக்
குரியவெட்டெழுத்தினையுள்கத்தோன்றினன்
பிரமனையுந்தியிற்பெற்றவெம்பிரான். (௨௪)

தண்டுயர்சார்ங்கம்வாள்சங்குசக்கரங்
கொண்டொளிர்முராரிகோலத்தைநெஞ்சினுட்
கண்டுகண்விழித்தலுங்காண்கிலாமையா
லெண்டிசைமுற்றவுமெழுந்துநோக்கினன். (௨௫)

நவமணியணிமெய்யினலன்கொண்டோங்கிட
வுவமையினதிக்கரைமிசையினுற்றமர்
துவரையின்மன்னனைக்கண்டுதூயனு
மவனிவனுமெனவாடிப்பாடினன். (௨௬)

இருகணீரிருநிலனிறையவெய்தியே
யரிதிருவடியிணைவணங்கியார்வமோ
டுருகிவெஞ்சூலத்தாலுருவக்குத்திய
சரியிலாமறையவன்றன்னைமுன்வைத்தான். (௨௭)

தவர்களெண்மறையவன்றானஞ்செய்துநல்
லவியுறுமகங்கள்செய்தறிஞனாகிய
விவனவப்பிணந்தனையமுதுசெய்கென
வுவமையின்மாதவனுற்றுநோக்கினன். (௨௮)

கொலைபலசெய்திடுங்கொடியனாயினும்
பொலனுறுமென்பெயர்புகன்றசெம்மையா
லலரிகாணிமமெனவினையகன்றிவ
னலனுறுமெனவரிநவிலலுற்றனன். (௨௯)

உனக்கியான்றரும்வரமுரைத்தியென்றலு
மெனக்கழியாப்பதமீகுவாயென
மனக்கடுவினையகல்பவனுரைக்கமா
முனிக்கணம்வியந்திடமொழிகுவானரோ. (௩௦)

கந்தநாண்மலரினேன்காணொணப்பதந்
தந்தனனெனக்கண்டாகருணன்சாற்றுவா
னிந்திராகொழுநவுன்பதியையென்பினேன்
றெந்தகன்றனக்கருளென்றுசெப்பினன். (௩௧)

என்றவனுரைத்திட விறைவன்கூறுவா
னுன்றனையேலவேயும்பியென்றன்மே
லொன்றியவன்பறேவுரைத்தியென்றலும்
புன்ருழிலொருவினேன்புகல்வதாயினன். (௬௨)

செந்தகருகியவெம்பிசிரிவாப்
புந்தியினுன்றன்மேலன்பிலன்பொருந்
தந்திமையதைத்தருடலைவென்றனு
நந்தகோபன்சுதன்நவில்வதாயினன். (௬௩)

ஏன்னலனறிகிலானெனின்முன்னோனெனு
முன்னுடனன்பறேவுரைத்தியென்னவே
பன்னகப்பாயலாய்பரிவிலானென்மேற்
பின்னவனெனக்கண்டாகருணன்பேசினன். (௬௪)

என்னையுமுன்னையுமிகழும்பின்னவ
னின்னலிற்கதியுறலெக்குணத்தினன்
மன்னுவிப்பேனெனமாயன்கூறலுந்
துன்னியதுனிதுணித்தவன்சொல்வானரோ. (௬௫)

அனுசன்மேலன்பறுழியாயென
மனமகிழ்ந்தெழின்மலிமாலென்பத்தர்க
ளினிமையாயருள்வைத்தால் யாவராயினுந்
துனியகன்றுயர்குவரொன்றுசொல்குவான். (௬௬)

நியுமுன்னனுசனுங்கரிலாதொளி
ராயிரங்கண்ணினனகரினன்புடன்
போயமுதருந்தியேபோகந்துய்த்தபின்
றூயவென்பதியெய்தித்துலங்குவீரென்றான். (௬௭)

சுந்தரன்மொழிந்திடத்தொழுதகையனே
யிந்திரவிமானத்தினேற்றித்தம்பியோ
டந்தரதுந்துமிமுழங்கவாய்மலர்
சிந்தியேதேவராகரத்திற்சேர்த்தனர். (௬௮)

கடிவினைசெயுங்கண்டாகருணன்றம்பியோ
டிடர்கெடத்தேவர்தம்முருவமெய்தியே
யுடலொடுமமரர்தம்முலகமுற்றிட
வடதிசைகனுழன்மேன்மாயனேகினன். (௬௯)

## கண்டாகன்னன் மோட்சப் படலம் முற்றிற்று.

---

ஆ_ படலம், க௪ க்குக் கூடிய திருவிருத்தம் ௬௪௨.

---

ஸ்ரீ கண்ணபிரான் றிருவடித் தாமரைத் துணை.

ஸ்ரீ

விஷ்ணுமயம்.

௰௩ - வது - கைலாச

# யாத்திரைப்படலம்.

---

பூதலந்தனிற்பிறந்தைம்புலன்கள்செய்
வேதனையுவரியின்விழுந்தெழுந்திரா
வேதமார்மனத்தரேயிடரொரீஇயுய
மாதவனடியிணைதொழுவம்வம்மினோ. (௧)

உயர்விசும்பமரர்களுவந்துபோற்றவே
யியல்புறுதிகிரிகோடிருகையேந்திவான்
புயல்வண்ணன்ககபதிபுயத்தின்மீதெய்திக்
கயிலையினருகிலங்கோடைகண்டனன். (௨)

ஏனமான்வல்லியமெண்குகேசரி
யானையீதிவையெலாம்வயிரமற்றருங்
கானநூறோசனைநீளமாங்கவின்
மானசவோடைமாவனசமான்றது. (௩)

விரைபுரையலர்மலர்விண்ணினோங்கவே
கரையினிற்கவின்கொள்காவினங்கள்சூழ்ந்தது
பிரமனோர்சிரசினைப்பிஞ்ஞகன்கிளச்
சுரர்தொழுதிருந்திடத்துனிகளற்றது. (௪)

இமவரையானருந்தவத்திற்பெற்றிடு
முமையெனுமணங்கினையுருத்திரப்பிரா
னமரர்கடுதித்திடவதுவைசெய்தவன்
சமனின்மாமுனிவரோடிலங்கிச்சார்ந்தது. (௫)

மாடுறும்வேத்திரம்வளர்ந்தமாண்பது
நீடியதவஞ்செய்துங்கரில்நக்கனை
காடியங்கிருடிகள்கயிலைநண்ணிய
வோடையினுவணன்மேன்மாயனுற்றனன். (௬)

மரவுரியுடுத்துவன்சடைகள்கட்டியே
யரனெழின்மந்திரமமைந்தநெஞ்சினோ
டிரவுநண்பகலுமாண்டிடைவிடாமலே
தரணியையிடந்தவன்றவஞ்செய்தானரோ. (௭)

ஓமவிந்தனந்தினமுவணனீந்திட
மாமலர்பறித்துவண்டிகிரிநல்கிடக்
காமரொண்குசைப்புலைக்கட்கமீயவான்
பூமியெண்டிசையெலாங்காத்தபொற்சங்கு. (௮)

ஸ்ரீதிலாக்கதைபரிசாரகஞ்செயத்
தாதரூழியத்தினைச்சார்ங்கம்பண்ணவே
சீதரன்றுவாதசவருடஞ்செல்லவே
மாதவஞ்செய்தனன்மண்ணின்மீதரோ. (௯)

மாயவனருந்தவஞ்செய்யவானவர்
நாயகனளகைமன்னம*னநாதனோ
டேயெனுமுன்னமாண்டமரரெய்தவே
தூயமாமுனிவர்கள்பலருந்துன்னினார். (௧௦)

நேயமோடருந்தவஞ்செய்துநீடிய
தூயமாயோகிகடமக்குந்தோன்றலா
மாயநீதவஞ்செயுமாயனோடெனு
நோயகன்முனிவர்களுவலும்வேலையின். (௧௧)

வேறு

வானதிபிறைவெண்கூவிளங்கடுக்கைகரந்தையோடெருக்கலர்மத்தம்
பூநிறைசடைகளசைந்திடநுதலினழல்விழிபொருந்திடப்பஞ்ச
வானனந்திகழவுழைமழுக்கபாலமழல்கரத்துறமலையாளையன்
மாணிடத்திலகக்கொடிகுடைவயங்கவரனுயர்விடையின்மேல்வந்தான். (௧௨)

உரககங்கணங்கையிலகிடச்சூலமொளிவிடவுமாபதிவிடைமேற்
சரியிலாப்பவளக்கிரியெனவரவேசங்கொடுதமருகமுழங்க
மரவுரியுடுத்தசதமுகன்குண்டோதரன்றிரிவாகுமானனுவோ
டரிமுகன்பஞ்சவாகுவெண்ணீற்றையணிந்தவரன்புடனடைந்தார். (௧௩)

தீர்க்கரோமனனுன்னங்கிசன்சிதானன்சதக்கிரீவன்சினமிகுத்த
தீர்க்கலோசனன்மித்துவன்விருப்பாக்கன்றிறன்மலிவாகுகன்சிறந்த
தீர்க்கவாகுகன்கடுவத்திரன்பாவவத்திரன்றூலநாவலன்சீர்
தீர்க்கமான்சிலைகயோன்சித்திரகாயன்வத்திரனிவர்களுஞ்சென்றார். (௧௪)

கூதமிகுகண்டாகருணரோடெண்ணில்கணங்கணக்கினத்தினராகி
முதுகினிற்சவத்தைச்சுமந்துசெங்குருதிபருகிவெம்மூளைகளுகர்ந்
புதியதாம்பிணத்தையயிலினுற்குத்தியெடுத்தநற்பொரிமலிநயன
மதிவளர்சடையோனிருமருங்கடர்ந்துவானவர்வெருவுறவந்தார். (௧௫)

சுடர்மலிகாலைகபாலமார்மாலையசைந்திடவயிரவர்கொடிதா
மிடியெனவதிர்த்துத்தமருகமுழக்கியிருமருங்கினுமிடைந்தெய்தக்
கொடிகுடைகவரிவயங்கிடவிபுதர்குழாந்துதிசெய்திடத்தவள
விடையினினிலங்கியுமாபதிவரலும்வியந்தரிதொழுதிவைதுதிப்பான். (௧௬)

விரையிணைத்தனுவாய்வளைத்தருண்முதல்வாநமவுனைமதிக்கிலாவசுரர்
திரிபுரமெரித்தசிவநமவிந்துதிகழ்கின்றவேணியாய்நமவே
கரியுரிதனைப்போர்த்தருளுவாய்நமவேகறைமிடற்றிறைவனேநமவே
யரகரநமவேபசுபதிநமவேயந்தகாந்தகநமவென்றான். (௧௭)

சிதரன்பரிவோடிவ்வகைதுதிப்பச்சிறந்திடுமிந்துசேகரன்றான்
பூதலமிசையிற்சருகுகால்புனறான்பொசித்தயந்தழலிடைப்பொருந்தி
மாதவம்புரிந்தோர்க்ககப்படாதுயர்ந்தமாயனீதவஞ்செய்மாயையினை
யோதுதியெனவேமகிழ்வுடன்மொழிந்தவுமாபதிபின்னருமுரைப்பான். (௧௮)

* அம்+நாதன்=வருணன்.

நரையினினரசர்குலத்துதித்தவன்போற்றனையர்கள்பெறத்தவஞ்செய்தாய்
பிரமனுன்மதலையவனுலகடங்கப்பெற்றிடும்பிதாமகனன்றோ
திருமகள்கணவவுணரொணாமாயைசெய்குவைநீயெனச்சிரித்தே
யரனுளமகிழவிருகணானோக்கியரியுடனிம்மொழியறைவான். (௧௯)

நேயமோடியோகமுலப்பிலாவருடனிறையயான்நிற்கும்வேலையிலே
ஆயிரநயனனமரர்கண்மொழியாலடர்ந்தெனைச்சேருமன்மதனைத்
தீயுறுவிழியான்முனிந்தியானெரிப்பத்தேவர்கள்வேண்டிடவுவந்தே
தூயவவுனக்குச்சுதனெனநிலத்திற்றோன்றுவனவனெனச்சொன்னேன். (௨௦)

முன்னநானறைந்தமொழியினையறியாதவனெனவருந்தவமுயன்றாய்
பொன்னெடுவரையோடுலப்பிலாவுலகமுதரத்திலடக்கியபுனிதா
வுன்னைநீகரந்துமனிதர்போற்சுதரையுவந்துநீபெறத்தவஞ்செய்தா
யின்னல்களொருவவுயர்பதங்கண்டாகருணனுக்கீந்தநீயென்றான். (௨௧)

ஆழிசென்னெறியைத்தரவருகெனமாவருந்தவம்புரிகுவார்போன்றங்
கேழுநாட்டருப்பைமிசையமர்ந்தயமன்னெய்திலானெனமுனிந்தெழுந்து
சூழும்வாரிதிநீர்சுவறிடக்கணைகள்சொரிந்தவன்வெருவியுன்பதத்தில்
வீழவேவரம்வேண்டுவதுபோலெனையும்விரும்பினையெனநகைத்துரைப்பான். ()

செயலுறப்படைக்கத்திசைமுகனாகிச்சிறந்திடவளர்க்கநீயாகி
யியல்புறத்துடைக்கயானுமாய்த்தோன்றியெம்மையுநின்னிடைக்கரந்து
கயவர்கட்கியாங்களளித்திடும்வரத்தாலவரெமைக்கடிந்திடும்போதத்
தூயரறவவரைவதைத்தவர்தமக்குன்றுலங்கியகதியினையருள்வாய். (௨௩)

சென்னியோகநிறக்குஞ்சிசீமூதந்தினகரனிந்துகண்ணெண்டிக்
கின்னவில்செவிவிண்ணுபியொண்சிந்துவயிறதுரோமமேயாகுந்
துன்னுபாதவங்கணயனமேமுகிழ்த்தலிராப்பகல்விழித்தலாய்த்தோன்றுந்
தன்னைநேர்பிறிதிலிறைவநீதவஞ்செய்மயக்கினைச்சாற்றுதியென்றான். (௨௪)

உன்னிடத்தயனோடெனையுதவுகையாலோதுவர்கேசவனெனவே
துன்னியவினைகளறுத்தரிக்கையினாலரியெனத்துலங்கினையயத்துண்
மன்னியசெயலின்பொருளினாராயணனெனவயங்கினையுயிர்க
டன்னினியுறையுந்தன்மையால்வாசுதேவனும்பெயரினைத்தரித்தாய். (௨௫)

மறைகளுன்னாவின்மலிந்திடுசெயலால்வண்மைசேர்கோவிந்தனாய்
நிறையுமெஞ்ஞானேந்திரியங்கட்குநீயிறையாகியபொருளா
லறைகுவரிருடிகேசனென்றுன்னையளப்பின்மூவுலகுறவளர்ந்த
திறலினாற்றிரிவிக்கிரமனென்றுனையேசெப்புவர்சிறந்திடுமுனிவர். (௨௬)

ஏசில்குக்குமநீயாதலினுன்னையியம்புவர்வாமனனென்றே
யாசினுள்ளமிழ்த்தியடருமைம்புலன்கடம்மைநீயகற்றிடுஞ்செயலான்
மாசிலாமதுசூதனனெனவுரைப்பரெலார்க்குநீயுயர்ந்தவண்மையினா
லீசனென்றுனைத்தானறைகுவர்மறையோடிலங்குபநிடதமேயுணர்வோர். (௨௭)

சகலமந்திரத்தினதிகமாயிலங்கும்பிரணவநீசதுமறைக்கு
ணிகரில்சந்தசுக்குள்வயங்கியகாயத்திரியுநீநிறைந்தவக்கரத்து
ளகரநீயுயர்ந்தவுருத்திரர்தனக்குளரனெனுமியானுநீயார்க்கும்
பகவனீதிசைக்குளமர்ந்திடும்வசுக்களெண்மரிற்பாவகனீயே. (௨௮)

பாதவந்தன்னுட்பிப்பிலநீயேபன்னகந்தன்னில்வாகுந்
யேதமின்முனிவர்தன்னிருரதனியெண்டிசைப்பாலரினளை
நாதனீயயத்துள்ளருணனிநதியுட்கங்கைநீலனுறுவரையின்
மீதுறுகனகவிலங்கனியொளியுள்விசும்புறுகதிரவனீயே. (௨௯)

தெசநலப்பிரமர்தமக்குளின்வயங்குந்திசைமுகனீவிபுதர்க்குள்
வசையிலாப்புகழ்சேர்வலாரிநீமருந்துளமுதுநீகுளிர்ப்பினுண்மதிநீ
யசுரர்கடமக்குட்பிரகலாதனுநீயதிகதேவதைகளின்மிகுத்த
சுசியினினுயர்ந்தபதியினின்வயங்குஞ்சோதிநீயாதியுநீயே. (௩௦)

அண்டமெண்ணநந்தங்கோடியுன்னகட்டிறந்தோற்றியேமீளவுமடக்கு
முண்டகமடந்தைகொழுநனேயென்றுமொழிந்தரன்முனிவனைநோக்கி
யெண்டவரறிமினிவனலாலிறைவேறில்லையீதுண்மையாலிவன்றன்
மண்டனிற்பிறந்துமயக்குமாயையினின்மருண்டிடாதுய்மினென்றுரைத்தான். ()

கறைமிடற்றரன்றன்மொழிந்திடக்கேட்டுக்களித்திடுமருந்தவரெல்லா
மறையையுமயக்கிக்கரந்துறைகின்றமலர்மகணாயகன்றன்னை
யிறைவனென்றியாங்களறிந்துய்யும்வண்ணமிதவுபதேசநீசெய்தாய்
பிறையணிசடிலவெனத்தொழுதிடவேபிஞ்ஞகன்முராரியைத்துதிப்பான். (௩௨)

கேசவநமவேநாரணநமவேகிளரொளிமாதவாநமவே
மாசறுசுடர்க்கோவிந்தனேநமவேவண்மைசேர்விண்டுவேநமவே
யேசறவுயர்ந்தவெழிலுறுமதுசூதனநமவிடர்களையகற்றுந்
தேசுறுதிரிவிக்கிரமனேநமவேசிறந்திடும்வாமனநமவே. (௩௩)

சீதரநமவேசிறந்திடுமிருடிகேசனாந்தேவனேநமவே
யேதமில்பதுமநாபனேநமவேயெழில்கொடாமோதரநமவே
போதனைப்படைத்தபுனிதனேநமவேபொலன்கொள்பீதாம்பரநமவே
யாதியாம்பரமநமவெனத்துதித்தேயரனுயர்கயிலையையடைந்தான். (௩௪)

அரனிவைதுதித்துக்கயிலையையடையவலாரியோடருந்தவரெல்லாம்
பரிவுடன்முராரிதனைத்தொழுதேத்திப்பன்மலர்பொழிந்தவரோக
வரிமகிழ்வுடனுங்கலுழன்மீதேறியாழியோடைம்படையேந்தி
மருமலர்மலியும்வதரிகாச்சிரமத்தெய்தினன்முனிவர்கண்மகிழ. (௩௫)

வதரிகாச்சிரமத்தொருதினமிருந்துமறைநாண்மலர்மகள்கொழுந
னெதிரிலாமுனிவர்குழாங்களையிருத்தியிலங்கியககபதிபுயமேற்
புதுமலரமரர்பொழியவந்தரத்திற்றுந்துமிமுழங்கிடப்பொலனு
ருதகிருழகழாயொளிகொளுந்துவராபதியினினடைந்தனனுவந்தே. (௩௬)

மாயவன்றுவரையடைந்தெழிற்றந்தைமலரடிவணங்கிமுன்றோனைத்
தாயரைப்பணிந்துமகிழ்ந்திடவுயர்ந்தசாத்தகிவிரைந்துதாளிறைஞ்சத்
தீயுறுமெழுகுநிகரெனவுருகுந்தேவியருருப்பிணிமுதலாந்
தூயமங்கையர்களிருகணீர்நிலத்திற்றுளிகொளவடிமிசைத்தொழுதார். (௩௭)

தவாவலிமலியுங்கழலுன்மீதுயர்ந்தசங்குசக்கரந்தரித்தவனைத்
துவாதசவருடம்பிரிந்தடர்விரகத்துனிக்கடலழுந்துதேவியர்க
ளவாவெலாந்தணியவரிபதினாறுயிரத்துநூற்றெட்டுருவாகித்
திவாவுடனிரவுமொருவலனுக்கிச்சிறந்தினிதிருந்தனன்மாதோ. (௩௮)

கைலாச யாத்திரைப் படலம் முற்றிற்று.

ஆக படலம் ௧௫-க்குக் கூடிய திருவிருத்தம் ௩௮௦.

ஸ்ரீ

விஷ்ணுமயம்.

௯௪ - வது பவுண்டரன்

# வதைப்படலம்.

கறைமிடற்றரனைநாடோறுங்கமலமாயிரங்கைகொடுபூசியாக்
குறைபடத்தனதுவிழியிரண்டுபெறியாவருச்சனைகொடுக்கவே
றிறைவன்முந்திவரநாரணன்வடிவுபெற்றுநற்றுவாரையெய்தியே
பறையறைந்திடுபவுண்டரன்றனுடறுணிசெய்மாலினடிபணிமினோ. (௧)

தூயபுண்டரிகநாடன்வானினமர்சுரர்களும்வெருவும்விறலினான்
பாயுமும்பல்பதினாயிரத்துறுபலத்தினானுயர்பவுண்டரன்
நேயம்விஞ்சியமனத்தினோடுபசுபதியைநித்தலுநினைந்துதா
னாயிரங்கமலமலர்பறித்தவனருச்சியாமகிழுநாடனின். (௨)

ஒருதினந்தனிலிரண்டுகெஞ்சமலர்குறையவேயுயர்பவுண்டரன்
பரிவுடன்றனிருவிழிபறித்துமகபூசைபண்ணவரனெய்தியாண்
டிருநிலத்துமிசைநீபகர்ந்தவரமீவனென்றுரையியம்பிட
வரியுருத்தருதியென்றுகூறியிடுமென்பனுக்கிவையறைந்தனன். (௩)

கோலமாயன்வடிவங்கொடென்னபயனென்றுகூறுமுமைகொழுநனைச்
சீலமில்லவனிறைஞ்சியவ்வுருவமீதியென்றுதுதிசெய்திட
நீலகண்டனுநகைத்துமால்வடிவுபெறுதியென்றுரைநிகழ்த்தியே
சூலமங்கையிலிலங்கவெண்கயிலையெய்தினான்சுரர்கள்சூழவே. (௪)

நீலகண்டன்வரமீயமால்வடிவுபெற்றுநீதியில்பவுண்டரன்
கோலமுற்றிடுகவுத்துவங்கனகவாடைகுற்றமில்கிரீடமின்
னாலுசெங்கரமிலங்கவாழிவளைநாந்தகங்கதைவினண்ணிடச்
சீலமுற்றகலுழன்றன்மீதெழில்சிறப்பவேதிரியுநாட்டனில். (௫)

முரசுபேரிகைமுழங்கவேதியர்களாசியெங்கணுமொழிந்திடப்
பிரசமென்மொழிமடந்தைமார்கவரிவீசவேபெருமையுற்றிடு
மரசர்சூழவரியாசனத்தினிடையரியினுடைதிகழரியெனும்
வரிசையோடுயர்பவுண்டரன்னினிதிருக்கயாழ்முனியும்வந்தனன். (௬)

வந்தயாழ்முனிவனுசிகூறியிடமாயவன்வடிவுபெற்றவன்
சிந்தையின்மகிழ்வினோடுமாதவவிருத்தியென்றுரைகள்செப்பியே
வந்தரந்திசைகளெங்கணுந்திரியுமறிஞநீபகர்தியென்னையே
நந்துசெந்திகிரிதிகழுமாலெனவுரைப்பரோவெனநவின்றனன். (௭)

மாயன்யானெனவுரைப்பொண்டிசையினோடுமண்ணினுறுமவரொலா
மாயனாயவிழிகுலனுமாயனெனவவனிமீதுதிரிகின்றனை
னேயெனும்முனர்வலாரிவாழ்நகரினெண்கனானுலகினெய்தியே
நீயுமென்னையுயர்வாசுதேவனெனவோதுவாயெனநிகழ்த்தினான். (௮)

அறிவிலாமன்மொழியும்பவுண்டரனைநோக்கியாழ்முனிவனறைகுவான்
குறைவிலாதவனைமின்னுமின்மினிநிகர்க்கில்விநதைமகிழ்கொழுநனு
மிறைவனுக்குநிகராவைநீயெனவியம்பிடத்தழல்கொணயனையுய்
நெறியறுத்துமறன்மலியவேயமருநீசனிங்கிவைநிகழ்த்துவான். (௯)

பாவமின்முனிவனுயிலுட்பரிபவங்கள்செய்துனையடர்ப்பன்யான்
சாபநீயிடுவையென்றுவிட்டனனெழுந்துபோதியெனவுந்தவன்
கோபம்விஞ்சியபவுண்டரன்னருகிறைவியேகுறைவின்ஞானமெய்த்
தீபமாதவர்களுறையுமாதுவரைவீரனேடிவைகள்செப்பினான். (௧0)

மாதவன்றெருவுமுன்னர்நீதிவழுவும்மறத்தனுபவுண்டரன்
றூதுவன்றனையழைத்துயாதவன்முன்னெய்தியேயிவைகள்சொல்லுவாய்
பீதவம்பரமொடாழிவாள்கதைவில்வளையுயர்ந்தபெயர்விட்டுநம்
பாதமீதுசரணுயடைந்துய்குதியென்றுநீபகர்தியென்றனன். (௧௧)

என்றுகூறியபவுண்டரன்னடியிறைஞ்சியெய்தியிடுதூதுவன்
மன்றல்சோலைமலிதுவரைமாநகரின்மண்டபத்தின்மிசையெய்தியே
கொன்றைசூடியருள்பெற்றுயர்ந்தவரியானகோவின்மொழியெல்லவுங்
கன்றிநல்விளவெறிந்தநீதொழுதுகேளெனக்கழறுவானரோ. (௧௨)

வேறு.

கோடுவிடுவில்லைவிடுவாளைவிடுகோதி
னீடுகதைதன்னைவிடுநேமிவிடுபொன்னி
னுடைவிடுபேரைவிடுநீசரணடைந்தே
யீடுறுபவுண்டரனையேதொழுதியென்றான். (௧௩)

மீதெலவுநீவிடுவிடாயெனிலமர்க்கே
போதுதியெனக்கைகள்புடைத்தரசர்நக்கார்
யாதவனகைத்திவையெலாம்விடுவனேகித்
தூதுவபவுண்டரன்வரும்படிசொலென்றான். (௧௪)

கோலமுறுமாயனிவைகூறவருதூதன்
காலெனவிமைப்பின்முனரிற்கடிதினேகிச்
சீலமில்பவுண்டரன்முனெய்தியிவைசெப்ப
வாலமெனவேகமிகவேயவனுரைப்பான். (௧௫)

ஆயரில்வளர்ந்தறிவிலாதுதிரிவானைச்
சாயகம்விடுத்தமரின்வென்றுவருதற்கே
தூயகரிதேர்நிரைகடுன்னுபடைவீரர்
பாயிவுளியோடெழுமினென்றுரைபகர்ந்தான். (௧௬)

அன்னவன்மொழிந்திடவரைந்தமுரசங்க
டுன்னியவக்குரோணிபனிரண்டுபுடைசூழ
நன்னிலநடுங்கிடநடந்தகரிவெள்ளம்
மின்னுமுகில்போலயுதகோடிகண்மிடைந்த. (௧௭)

காசிமன்னுடேகலவியன்கடிதுசெல்ல
வீசனருளாலரியுருக்கொளறிவில்லா
நீசன்வளைவாள்கதைவின்னேமியுடனேந்தி
யாசுறவருங்கருடன்மீதினினமர்ந்தான். (௧௮)

வாசவனொடேமுனிவர்வானவர்நடுங்க
வாசையொடுமாநிலமதிர்ந்திடவெழுந்து
வீசுதிரைமோதியிடுவேலையகழாக
மாசறவயங்குதுவராபதியின்வந்தான். (௧௯)

நீதியில்பவுண்டரனொடேநெறிகளில்லா
வேதமலியேகலவியன்னெதிரிலாத
தீதினுறுகாசிபதிசெல்லவதுகண்டே
மாதவனெழுந்திரதமீதின்முனர்வந்தான். (௨௦)

அடற்கதைவில்வாள்பணிலமாழிகையினேந்திச்
சுடர்க்கனகவாடையொடுதூயகலுழன்மேற்
படிக்கண்வினைபோலுறுபவுண்டரீனிலத்தின்
னடிக்குமவர்போலவரவேயரிநகைத்தான். (௨௧)

வேறு.

மைக்கனமிக்குச்சுற்றுமிடிக்கப்படர்வான்மின்
றிக்கவிரப்புக்கென்னவுமம்பற்றிரள்சேர
வக்கிரமத்தோரச்சுதனைக்கண்டழற்கண்ணு
ரிக்கணமெற்றெற்றெற்றுதிரொன்றேயெதிருற்றார். (௨௨)

இருள்வரைமருவும்மருவியெனத்தான்மதமெய்தத்
தரையடிபுதையத்தாலநிகர்க்கைக்கதைபற்றித்
திரைதருகடல்போலும்பல்கள்பம்பத்திசைதோறும்
விரைபுரைதுளவத்தரியைவளைத்தார்விதியஞ்ச. (௨௩)

அழலுறுநயனத்தானைமுனிந்தேதன்மெய்யி
னிழலினைமோதுபுநீண்டகரத்தாலுயர்வானின்
மழைமுகில்நீரைவவ்வியுரிஞ்சியரிசேனைக்
குழுமுழுகிடவேவீசியஞாலங்குலைவெய்த. (௨௪)

உவர்தருகடல்போலும்பல்கள்பம்பியுயர்கையாற்
கவடுடைநெடிதாமரனிறமோதிக்காலாலே
குவடுகடுகளாயெழவிடறித்தம்மிருகொம்பாற்
சுவடுறநிலனிற்குத்தியவதுநீர்த்துறையாக. (௨௫)

வேலினர்கோலினர்வில்லினர்குந்தம்மிளிர்கையார்
காலனுமஞ்சக்கனலுறுகண்ணர்கடிதாய
தோலின்வெரிந்மேற்சூரரசோதைக்கினிதான
பாலனையுற்றுச்சுற்றினர்பகழியென்மழைபெய்தே. (௨௬)

காலையடர்க்குங்காலரிமைப்பிற்கனமேயாஞ்
சாலமகற்றித்தாவிடுமிவுளித்திரள்வீரர்
நீலமுகிற்போனின்றருணெடுமான்முனரெய்தி
வேலயில்குந்தம்வீசினர்விண்ணோர்மிகநோவ. (௨௭)

கரிவெரிநுறுவோரிரதமீதுறுவோர்கடிதாய
பரிவெரிநமர்வோர்படியொடுககனமறைவெய்தச்
சொரிசரமழைபோற்சூழவலாரிசுரரோடுந்
தெருமரலெய்தவார்த்துவளைத்தார்திருமாலை. (௨௮)

பேரிகைதிமிலைசச்சரிபடகம்பிறிதில்லாத்
தாரைகண்முரசந்தக்கையிடக்கைகவளைடம்பை
வாருறுதுடிகைகரடிகையிவையின்றொலிவாறோ
ரூருறவயவர்வளைத்தனருலகுண்டுமிழ்வானை. (௨௯)

அதிரதரென்னுமாரதர்சூழ்வலையாரு
முததிகள்போலவும்பல்கள்பம்பவுயர்சேணி
னதிர்தருமிடிபோற்கம்பினமார்ப்பவுறிதாவித்
ததியனைநெய்யானுகரிறைஞமுனரிற்சமர்செய்தார். (௩௦)

அத்திதரித்தோனருளினிலரிபோழ்திரிமன்ன
னத்திகளேகமாகிடுகாலத்தொலிபோல
வத்திகளெல்லாம்பம்பிடவாணன்புயமட்ட
வத்திகிரிக்கோன்முன்னர்நடந்தானறிவில்லான். (௩௧)

வேறு.

அரனருளமால்வடிவுபெற்றவறிவில்லான்
கரியிரதமாவினர்களோடுகெடிதெய்தத்
திருவின்மகிணன்முறுவல்செய்துசிலைகோலி
வருடமெனவெங்கணும்வடிக்கணைசொரிந்தான். (௩௨)

கரமறுவகோடிறுவகாலறுவநேரிற்
சிரமறுவவாலறுவசெல்லெனவெழுந்து
புரள்வனகரித்திரடம்வெங்கினுறுபொருநர்
வரையெனவிழுந்துருள்வர்மால்விடுசரத்தால். (௩௩)

தேருருளநூறிவலவன்சிரமறுத்து
வீரர்சிலையோடுகைவிழத்தலைதடிந்தே
காருலவுநற்கொடிகளைந்துகளைகண்ணு
ஞரியன்விடும்பகழியண்டமுகடுற்ற. (௩௪)

திருமகிணன்விற்கொடுசிலீமுகம்விடுப்பக்
கரிவெரிநினுற்றவர்கள்கால்கைகடுணிந்து
குருதியுகவும்பன்மிசைமற்றவர்குரம்பை
வரைமரநெரிந்ததெனமன்னியனமன்றோ. (௩௫)

வெரிநின்வருவீரரைமுராரிசரம்வீழ்த்த
வரைநிகரெனத்திரியுமும்பன்முனமற்றோர்
கரிபடநிலத்தின்விழுகாளையரைமுனிவாய்ச்
சிரமெய்தெரியாதவகைதேய்த்தனபதத்தால். (௩௬)

தேரின்வருவீரருயர்சீதரனெயம்பா
ஞரியறவேகொடையினன்கறிவிலாத
பூரியர்படைத்தபொருள்போலவெரிநாவத்
தாருமொளிராசுகம்விடுக்கிலர்தவிர்ந்தார். (௩௭)

பரனெய்கணையாற்பரியின்மீதினுறுவீர
ரிருகரமொடேபரடுவீழவிணையில்லா
வரியைநினையாதவர்களைம்புலனெனத்தம்
முரைவழிநிலாதிவுளியோடவுழைவுற்றார். (௩௮)

சிலையொடுகரங்கள்றவேகொடிகொடேரார்
மலையெனவிழுந்துருள்வர்வாசிகரியெல்லாந்
தலையறுவசெங்குருதிதாரணியினேடு
மலகையுயிர் செற்றவரு ளாளன்விடு மம்பால். (கூகூ)

நாணியறவில்லறநலங்கொளிரதத்தி
ஞணியறமாவலவனற்றுவிழவம்பார்
தூணியறவீரர்கடுணிந்துவிழமாயோன்
பாண மழையெண் டிசைபரந்தவனல்பொங்க. (௬௦)

சேடனணையாகவமர்தேவனெய்சரத்தால்
வீடினர்களானைபரியோடுவெயவீர
ரோடினர்செழுங்குருதிகூளிகளுவப்ப
வாடினகவந்தமெணிலாதவணடர்ந்தே. (௬௧)

வேறு

அந்தகன்வெருவவேயயில்மழுத்தோமரமடுசரங்க
ளுந்தியேதந்தியெண்ணிலபரித்திரளின்மேலுருவதேர்மேற்
சிந்துவிஞெலிகெடத்திசைசெவிடுறவடற்றீரர்கண்கள்
மந்தரவரையெனக்குவையுறச்சுடுசரமால்விடுத்தான். (௬௨)

கஞ்சனைக்காய்ந்தருள்கண்ணனூர்கார்முகத்தேவுமம்பாற்
குஞ்சரங்கோடகங்கொடிகடேர்கோடியொர்நிமிடமுன்னர்
பஞ்சரியுறவிருந்தன்மைபோற்படிமிசைத்துகளதாக
வெஞ்சினக்கயவர்கம்விண்மிசைத்தாவினவெண்ணிலாதே. (௬௩)

தேரறக்கொடியறச்சிலையறப்பாகர்வன்சிரமுமற்றே
காருறக்கரியறக்காலறக்கரமறக்கவசமற்ற
வீரர்தம்முரமறநித்திலத்தாவடஞ்சிதறிவிண்மேற்
றூரகையவிர்தமக்கொப்பலவென்பபோற்றுவுமன்றே. (௬௪)

நெடியவன்கணையினற்கரிபரிதேரறநிலையில்வீரர்
முடியறக்காதறக்குண்டலமெண்ணிலமுடுகிவிண்மேற்
கடிதினிற்சென்றுகீழ்வீழ்வனகவினுறும்பதமழிந்தே
யுடுவினமெரியுறத்தரையின்வீழ்செய்கையையொத்தவம்மா. (௬௫)

அடல்செய்வோராக்கைமண்வீழவேநாவுமார்கலியினெய்த
வடவையினிருகணுமுற்றிடநாசிவாயுவினின்மேவக்
கடிதினிற்செவிகளைக்ககனமேவிடுதலாற்கண்ணன்வாளி
யடைவினிற்பிதிருமேத்தனூற்கிரிகையைச்செய்ததம்மா. (௬௬)

பகடுமாவீரர்தந்தசைநுகர்ந்துதிரநீர்பருகியெண்ணி
லிகலனுங்கூளியுஞ்ஞாளியுங்கங்கமுமெருவைதானு
மிகவுறும்பசிகெடும்படியெதிர்சேனையைவீட்டிமாயோன்
ஙிகியுறுஞ்செஞ்சரஞ்சென்றதாற்பரவுபகாரரொத்த. *(௬௭)

---

* இப்பவுண்டரன் வதைப் படலம் ௬௮-வது செய்யுள் முதல், ௯-செய்யுளுக்குஓவ்வொரு ஏட்டுப்பிரகதிடோறும் இலக்கமிட்டு,இடம் விட்டிருக்கிறதால் பல பிரதியை நோக்கியும் அச்செய்யுள் கிட்டாததால், விடுபட்டபடியே, அச்சிட்டேம். அச்செய்யுள், வைத்திருப்போர் அனுப்புவராயின், வந்தனத்துட னேற்று மறு பதிப்பில் பிரசுரஞ் செய்யப்படும்.

வேறு

அத்தியில்வாழ்வோன்
அத்திரமேவ
அத்திகளெல்லாம்
அத்திகளாய. (சஅ)

கோலவரிக்கோன்
கோலினைமேவத்
தோலினமெல்லாந்
தோலினமாய. (சகு)

அரிவிடும்வாளி
அரியினுழுடுகக்
கரியினமெல்லாங்
கரியினமாய. (ருo)

பத்தினைகேள்வன்
பத்திரமேவ
அத்திரியெல்லாம்
அத்திரியாய. (ருக)

கரிதனைவென்றோன்
கரதலவம்பால்
இரதமுமிளிரீபூ
விரதமுமாய. (ருஉ)

சிந்துமகட்கோன்
சிந்துசரத்தால்
வெந்திறல்வீரர்
வெந்திறலானூர். (ருங)

வேறு

அத்தியேயத்தியாகவயமூராவயமேயாகச்
சத்திசத்தியாகத்தலைவர்நொந்தலைவாராக
வித்தகவிரதமாவம்வித்தகம்விரதமாக
வத்திரர்க்கணுகாவையனத்திரம்பரந்தவம்மா. (ருச)

சக்கரத்தண்ணலேவுஞ்சாயகந்துணிக்கவாங்கே
கொக்கினம்புரண்டுவீழக்குஞ்சரங்*குக்குண்மேவ
மிக்கிடும்பறவைமேண்மேல்விரிசிறைவயிற்றினெற்றிப்
புக்கழுந்தினவவ்வாக்கைபுரைவருபுனலின்மூழ்கி. (ருரு)

கதமுறுங்கயமாவையங்கணக்கில்லாவயவரெல்லாம்
விதமுறுவிசிகந்தன்னுலிமைப்பின்முன்விபுலையின்கண்
சுதைசுரர்க்களித்தகோமான்றுலங்கியநாமமேத்தா
திதரதேவதையைச்சேர்வார்தவமெனவிற்றதன்றே. (ருசு)

வேறு.

மாயவன்வலத்தின்வடிவாளிமழைதூவப்
பாயிவுளிதேர்மிகுபருப்பதநிகர்த்த
தூயகரிவீரர்கணிேந்துநிலன்வீழ
நாயலகைசூழ்ந்திடநடித்தனகவந்தம். (ருஎ)

அம்பரமனம்புமழைதூவிடவடர்ந்த
வும்பறரையின்னயுதகோடிகளுருண்ட
வெம்புபரிவீரரிரதத்தொடும்விழுந்தார்
செம்புனல்களோடியதுதேவர்களுதித்தார். (ருஅ)

அரிசிலையினால்விடுமழற்கணையினாலே
கரியிரதம்வீரர்பரிமாளவதுகண்டே
எரிநயனனாகியபவுண்டரனெதிர்ந்து
வரவவனைநோக்கியுயர்மாயவனுரைப்பான். (ருகூ)

நீயெனைவிடச்சொனநெடும்படைகடம்மிற்
றீயவவுன்மேல்விடுவெனித்திகிரிதன்னை
மீயுயர்விசும்பினுயிர்போகுமுன்விலக்கென்
றுயனைகைசெய்துசுடராழியினைவிட்டான். (சுo)

* குக்குள் = பூமிக்குள்.

மாயன்விடுமாழிகதிரஞ்சிடவளர்ந்தே
தூய்மையில்பவுண்டரன்முடித்தலைதுணித்து
மீயுயர்விசும்பினுறைவோர்மலர்விடுப்ப
வாயநெறிர்செங்கையினமர்ந்ததுபினன்றே. (௬க)

வேறு.

சினமுறுபவுண்டரன்றுணிறந்திடத்திகிரிசங்கு
குனிவில்வாள்கதைபொன்னுடைகோலமாங்கலுழன்றூய
தனிமணியிவைகளெல்லாஞ்சடக்கெனமறைந்துபோய
கனவினிற்கண்டதெல்லாங்கண்விழித்திடக்காணுபோல். (௬உ)

திறன்மிகுபவுண்டரன்றன்றிகிரியான்மடியச்சீற்ற
முறவிரதத்தின்மீதினுற்றுயர்காசிரர்சன்
கறைமிடற்றரனையேலக்கதமுறத்திசைகளெல்லா
மறையவேவாளிதூவிவலம்புரிமுழக்கியார்த்தான். (௬௩)

தரணியெண்டிசைகளெங்குமறைத்தசாயகங்கடம்மை
யரியொருகணையினாலேயறுத்தழல்வாளிவிட்டுக்
கரிபரிவீரர்மாளவதைத்துயர்காசிராசன்
சிரமறுத்தெழில்கொள்காசித்தெருவிடையிட்டான்மன்னோ. (௬௪)

பவுண்டரனுடனுங்காசிப்பதியிறைமடியக்கண்டு
சிவந்தெரிநயனனேகலவ்வியன்றேரினெய்தித்
தவந்தணியுயர்ந்தோரஞ்சத்தாலகேதனன்றன்மீது
நிவந்திடுசிலையால்வாளிநிறைந்திடத்தூவியார்த்தான். (௬௫)

நிலனுயர்வானமெல்லாநிறைந்திடும்வாளிதன்னை
யலமொருகையினாற்சுற்றியகற்றியவிராமநம்பி
சலமுறவெதிருமேகலவ்வியன்றடந்தேர்தன்னை
வலவனோடிவுளிமாளவடித்தனன்வானோரேத்த. (௬௬)

அலத்தினால்விரதமாவோடழியவேகலவியன்று
ணிலத்திடைக்குதித்துமேருநிகரெனக்கதைகைக்கொண்டு
சலத்தொடுமெதிர்ப்பத்தாலகேதனன்கலப்பையாலே
வலத்துடனடித்தலோடுமுரிந்ததுவயிரத்தண்டு. (௬எ)

கதையிருகூறாய்வீழக்கலங்குமேகலவியன்று
னெதிருறவஞ்சியோடியேழுயோசனையினீள
வுததியினமுவந்தன்னுள்மூழ்கியாண்டொளித்துப்போனான்
மதியொளிர்வண்ணநம்பிமாயவன்றன்னைச்சேர்ந்தான். (௬அ)

வாசவன்வெருவவெய்தும்பவுண்டரன்வலியான்மிக்க
காசிபனுடனேமாளக்கண்டமாதவர்களெல்லா
மாசிகண்மொழியவானோ*ராவலங்கொட்டியார்ப்பக்
கேசவன்றுவரையெய்திருந்தனன்கிளைஞர்வாழ்த்த. (௬௯)

## பவுண்டரன்வதைப்படலம் முற்றிற்று.

ஆ படலம் க௬-க்குக்கூடிய திருவிருத்தம் க0௪௯.

ஸ்ரீகண்ணபிரான் றிருவடித்தாமரைகடுணை.

---

* ஆவலங்கொட்டல்=வாயால் ஆர்த்துக் கூத்தாடுதல்.

ஸ்ரீ

விஷ்ணுமயம்.

### ௯௰-வது - சுதக்கணன்

# வதைப்படலம்.

தேசில்காசிபதிசிறுவனாகியசுதக்கணன்றவஞ்செய்திட
வீசன்மற்றவனுரைத்தசொற்படியினியவெய்தியகிருத்தியுங்
காசிமாநகரொடெரியநேமியடரக்கவின்கொள்விரலுகிர்தெரித்
தேசிறேவியுடனின்றுகுதுபொருமியாதவன்றனையிறைஞ்சுவாம். (௧)

காசிதன்னினெழில்வீதியிற்கடியகாசிமன்றலையுருண்டிட
வாசினுள்ளமிழ்சுதக்கணன்கடிதுநோக்கியேயழுதகண்ணினான்
வாசுதேவனிவைசெய்தனன்னெனமனத்தினின்மறநினைத்துய
ரீசனைத்தொழுதுகனல்வளர்த்திடையிருந்தருந்தவமியற்றினான். (௨)

வருத்தமோடுயர்சுதக்கணன்கனல்வளர்த்துமாதவமியற்றிய
வருத்திகண்டரன்முனெய்தியான்றருவதேதுநீயறைதியென்றலும்
பெருத்தவெந்தையையவதைத்தனன்னவிர்கொள்பின்னைநாயகனைவெல்லவோர்
கிருத்தியைத்தருதியென்னநஞ்சுதிகழ்கிரீவனிம்மொழிகிளத்துவான். (௩)

அழலினாகுதிபெய்தாபிசாரநிறையச்செய்தாலதனுளனலுறும்
விழியளாமொருகிருத்தியெய்துவளெனாவரன்கயிலைமேவினான்
கழைகொடோளியுமைபாகன்வாய்மொழியினெஞ்சின்வஞ்சமுறுகாவலன்
றழலினாவினெய்சொரிந்துகங்கையுறுசடையன்மந்திரநவின்றனன். (௪)

வேறு.

அரனுரைக்கவேவளர்த்தவாபிசாரவனலுளே
யெரிமிகுத்தகண்கள்வச்சிரத்தெயிற்றுமுச்சிரங்
கரமொராறினயில்முசுண்டிகட்கம்வாள்வில்கதையுற
விரைவினிற்கிருத்தியெய்திவிபுதரஞ்சநின்றனள். (௫)

அழலுளெய்தியமர்கிருத்திதன்னைநோக்கியரசர்கோன்
குழல்கொடூதுவோனையின்றுகொன்றுமீடியென்னவே
சுழலுகண்ணள்பிறையெயிற்றள்சூலமேந்துகையினள்
றழலுகுத்தநகையணீடுதரணியஞ்சவேகினள். (௬)

திக்கசங்கள்வெருவநீடுதிசைகளெங்குமெரியவே
யுக்கிரத்ததிர்த்துரப்பியூழிகாலவிறுதியி
னக்கனுற்றவடிவுபோலநாகரஞ்சவிடியெனக்
கொக்கரித்தடர்த்துவந்துகோலகாலமாகினள். (௭)

பன்னிரண்டுயோசனைப்பரப்புநீளமாகியே
யுன்னுமுன்னம்வானொடாசையெரியவோதையுவரியின்
வன்னியென்னமுடுகிமாயன்வைகிவாழுநகருளோ
ரின்னலெய்திவெருவும்வண்ணமேகினள்கிருத்தியே. (௮)

தவர்களெண்ணில்விபுதரோடுசதமகன்னடுங்கவே
யவனியின்கண்வடவைபோலமுடுகிவாரியலைகள்சூழ்
துவரைதன்னினடர்கிருத்திகுலமேந்திவருதலும்
பவமிலாதவரசர்சேனைபாறினார்களலறியே. (௯)

இறுதிகாலமுறவெதிர்ந்தவீசனெற்றிவிழியனை
னுறுதியாகவந்தையகோவெனாவரற்றியே
நறுநெயுண்டநாதகாவெனாநவின்றுநகருளோர்
முறையிடாநடுங்கிமாயன்முன்னரோடினாரரோ. (௧௦)

வேறு.

வித்துருமத்தூணெண்ணில்விளங்குமாமண்டபத்திற்
சத்தியவாமையென்னுந்தத்தைநேர்மொழியாளோடு
*நெத்தமங்காடுகின்றநேமியானடிவணங்கிக்
கைத்தலங்குலைத்துநெஞ்சாகுலம்வரக்கழறலுற்றார் (௧௧)

வாரியைப்பருகியோங்கும்வடவையோகடுவோவன்றி
நீறணிவேணியான்றன்னெற்றியின்விழியின்றீயோ
பாரொடுந்திசையைச்சுட்டுப்பரந்தகல்விசும்பைமுட்டி
யேருறுந்துவரைதன்னினெய்தியதிறைவவென்றார். (௧௨

எரியுறவளர்ந்தெண்டிக்கைச்சுட்டதென்றிளைத்துவந்தோ
ருரைசெயக்கேட்டமாயோனுமாபதிவரத்தாற்காசி
யரசர்கோன்விடவேவந்தகிருத்தியென்றறிந்துதன்கை
விரலுகிர்தெரித்துச்சூதுவிரும்பியங்காடினானால். (௧௩)

தாதுராகஞ்சேர்கூந்தற்சத்தியவாமையோடுஞ்
சீதரன்சூதங்காடிவிரலுகிர்தெரிக்கக்கோடி
யாதவரொளிபோற்றோன்றியாழியெண்டிசையுமண்ணும்
மீதலத்துயர்ந்தவானும்விளங்கிடவெழுந்ததன்றே. (௧௪)

அரிவிரலுகிரைத்தானேதெரித்திடவாழியாகி
யெரியுறவடர்ந்துவந்தகிருத்தியையெரித்துக்காசி
யரசனைவதைத்தவ்வூரையழலினுக்கிரையதாக்கிச்
சுரர்துதிசெய்யமீண்டுசோதியையடைந்ததன்றே. (௧௫)

சுதக்கணன் வதைப்படலம் முற்றிற்று.

ஆக படலம் ௧௭-க்குக்கூடிய திருவிருத்தம் ௧௦௫௬.

ஸ்ரீகண்ணபிரான் றிருவடித்தாமரைகளே துணை.

* ஓர் சூதாட்டம்.

ஸ்ரீ

விஷ்ணுமயம்.

௩௬-வது துவிந்தன்

# வதைப்படலம்.

---

அந்தரத்துயர்ந்த * வென்றின்சுதனடிபணிந்துவாழ்த்த
விந்திரனுலகைத்தாண்டியிலங்குமேழ்சாலமெய்தே
துந்துமிதனைத்தாளால்வானுந்திய† சோதிநாமஞ்
சிந்தைசின்மகிழ்ந்துகூறுஞ்சீரியோரடியிற்சேர்வாம். (௧)

சுந்தரஞ்செறிந்ததூண்கடிலங்குமாமண்டபத்தி
னந்தணர்குழாங்கள்சூழவிருந்தவச்சுதனைநோக்கி
யிந்துவின்வண்ணனன்பாலசோதையோடிலங்குகின்ற
நந்தனைக்கண்டுமீள்வனென்றுரைநவின்றுபோனான். (௨)

தூயமாமணித்தேர்மீதிற்றுலங்கியவிராமநம்பி
யாயர்தம்பதியினெய்தியசோதையைவணங்கியண்டர்
நாயகனாகியோங்குநந்தனைப்பணிதலோடு
நேயமோடணைத்துக்கண்ணீர்நிலனுறவிளம்புகின்றார். (௩)

இந்திரைகொழுநனின்பத்துடனிருந்தனனோவெம்மைத்
தந்தைதாயெனவேயெண்ணிநினைப்பனோசாற்றுகென்று
நந்தனோடசோதைகண்ணீர்நிலனுறநவிலலோடுஞ்
சுந்தரவிராமநம்பிபரிவுடன்சொல்லலுற்றான். (௪)

மாயவனாகிவந்தபவுண்டரன்றனைவதைத்துத்
தீயவெங்காசிமன்னைத்துணித்தவன்சேயைச்செற்று
நோயெனமுடுகிவந்தகிருத்தியைநொறுக்கிக்கண்ண
னாயுமாமறையோர்சூழத்துவாரையிலமர்ந்தானென்றான் (௫)

அன்னையாநின்னைத்தந்தையாகியநந்தன்றன்னைத்
துன்னியவன்பினித்தநினைந்தும்மைத்தொழவிவ்வூரின்
மன்னுவன்சிறிதுநாளின்மாயனீர்வருந்தலென்றே
யின்னலிவிராமநம்பியியம்பிடத்தேறினாரால் (௬)

தாலகேதனனையன்பாற்றழுவிப்பொற்கலத்திற்றூய
பாலன்னம்வருக்கமெல்லாம்பரிவுடனளித்துப்பின்னர்
மாலையோடாரமெல்லாமகிழ்வுடன்கொடுத்துநித்தஞ்
சீலமார்குணத்தசோதைசிறந்தினிதிருக்குநாளின். (௭)

---

* என்றின்சுதன்=சூரிய புத்திரனாகிய சுக்கிரீவன்.

† துந்துபியைத் தாளாலுந்தியது இளையபெருமாளே எனினும் அவர் ஆதி சேடனாகையாலும் அவ்வாதிசேடனா நிற்றல், எம்பெருமானே யாகையாலும் இங்கே ஸ்ரீ இராமமூர்த்தி யுந்தியெற்றினதாகக் குறிக்கப்பட்டது.

வசந்தகாலந்தானெய்தவனப்புடையிராமநம்பி
யொசிந்தநுண்ணிடையராயவாச்சியரோடுமுற்றே
யசைந்திடுந்தென்றல்வீசவலர்மலர்ப்பொழிலைநண்ண
விசைந்திடுமதுரகீதத்தியாழிசையிசைத்தார்மாதோ. (அ)

மதுரயாழிசைத்தமாதர்வாருணமதுவந்தெய்தச்
சுதைநுகரமரமின்னார்தம்மினுந்துலங்கிச்சூழ்ந்து
கதுமெனக்கரத்தின்றூயகனகவள்ளத்தினேற்றே
யதிமிகுகளிப்பாண்டெய்தவனைவருமருந்தினால். (௯)

கடத்தினின்மதுவையுண்டோர்காரிகையறிவையோவி
யுடற்றடிப்புறவேவேரியுரோமத்தினெறியிற்பொங்கிப்
பொடித்ததென்றிணைமென்கொங்கைபுனைவடமாரங்கையி
னொடிப்பினினமைத்துத்தோழிநுகர்தியின்னறவையென்றாள். (க0)

நறவினல்விரதமோராநாரணன்வெண்ணெயுண்டு
கறைநடுவதனிற்கட்டுண்டனன்கடுவிடத்தைநுங்கிப்
பிறையணிச்சடையன்பித்தனாயினன்பிறிதிவ்வேரி
யுறுசுவையறிவாரொன்போலிலையென்றங்கொருத்தியுண்டாள். (கக)

நலனுறுமதுவையுண்டோர்களிக்குமாநகைக்கவிந்து
நிலவெனப்பரந்தகைப்பொன்வள்ளத்தைநேரநோக்கிப்
பலனுறுமதுவைத்தோழீபருகுதியெனலும்பாங்கி
யிலவிதழதரம்வைத்தாண்டிலாதுநாணுற்றாளன்றே. (கஉ)

மதிநிகர்வள்ளத்திற்றன்வார்குழன்மீதினாடும்
மதுகரவுருவைநோக்கியொருத்திமாயவன்வானோர்க்கு
மதுகரத்தேந்தியீந்தவண்மையேபோலநீரிம்
மதுவினையயிலாதியான்றான்பருகிடவழங்குமென்றாள். (கங)

வேறு.

பீதகவள்ளத்தினொருத்திபேரின்பம்
போதவேமதுவுண்பாள்பூமரத்தின்வீ
ழேதமினறவுகண்டெம்மைப்போற்கள்ளுண்
மாதவம்பாதவம்வகித்ததில்லென்றாள். (கச)

இவ்வழியனைவருங்களிப்பங்கெய்தவே
செவ்விதழதரம்வாய்வெளுப்பத்தீதிலா
நவ்வியைப்பழித்திடுநயனஞ்செம்மையை
வவ்வவள்ளங்கொடுமதுவுண்டாரரோ. (கரு)

வேறு.

வாருணமதுவந்தெய்தமகிழ்ந்தெழின்மயில்கள்போலு
நாரியருடனுமன்பாற்பருகிநன்மலர்கள்சூடி
யாரமெய்க்கணிந்துநானங்கமழ்ந்திடயமுனையாற்றி
னீரினைவருதியென்றேயலாயுதனிகழ்த்தினனால். (கசு)

நலத்துடனிராமநம்பிநவின்றிடயமுனையாறு
நிலத்திடையெய்தாதாகநெஞ்சுறுமுனிவினோடு
மலத்தினாலிழுத்தலோடுமடியினில்வந்துவீழ்ந்தாள்
சலத்தொடுநதியிற்றூயகாளிந்திதவளமாகி. (கஎ)

ஆயர்கண்டுமகிழமுன்னா ளரித்துயர்யமுனையாருந்
தூயவள்பயத்தினோடேர்துலங்கிடவிராமநம்பி
நேயமோடலருங்காசநிறைமலர்பறித்துவீசி
வேய்கொடோளியர்களோமெய்விருப்பினாடினானால். (௧௮)

அயலினையாட்டுமுந்நியஞ்சனவாடைசுற்றிக்
கயல்விழிமடவரோடுங்கலனைவாட்டணிந்துகொண்டே
யியல்புடையிரேவதத்தினெய்தியாழிசைகள்பாடி
மயிலனுருகாணர்தன்னின்வனப்புடனிருக்கும்வேலை. (௧௯)

அரிகளினதிகருணமயிந்தனுக்கனுசனேர்ந்த
நரகனோடொப்பிலாதநட்புடைத்துவிந்தனுயர்
புரிகளையழலாற்சுட்டும்பொதுவனைக்கரத்தாற்பற்றி
வரையுறுபிலனுளிட்டுமறம்பலசெய்தான்பன்னோ. (௨௦)

நியுதவானையின்பலத்துத்துவிந்தன்வாணீண்டமெய்யன்
கயிலையைநிகர்த்ததாலகேதனன்களிப்பினோடு
மயிணிகரணங்கிறோரோடிரேவதவரையிற்சார்ந்தே
யியல்புறவிருக்குங்காவினிமைப்பின்முன்னெய்தினனால். (௨௧)

மாதவர்மகிழத்தாலகேதனன்மதுரமிக்க
கீதம்யாழிசைக்கும்வேலைகிட்டித்தன்சகனங்காட்டிப்
பாதவமிதினெய்திப்பாசடைபறித்துவீசி
மோதினன்கோடுவாங்கிமுனிந்துயர்துவிந்தனம்மா. (௨௨)

மலையெனவுயர்ந்துதோன்றும்வானரன்மரத்தினேறி
யிலையொடுசெருகைவாங்கியெறிந்திடமாதரெல்லாங்
குலைகுலைந்தலறியோடக்குபிதனுமிராமநம்பி
யலமெடுத்தவன்றன்மீதினெறிந்தனனமரர்வாழ்த்த. (௨௩)

அடுசினந்திருகவீரனெறிந்திடுமலாயுதத்தின்
கடுமையிற்றப்பிச்சேர்ந்துமதுவுறுங்கலசமெல்லாம்
பொடிபடவுடைத்துத்தூயபொன்னவிர்தூசைப்பீறி
மிடலுடையிராமநம்பிமேல்விழுந்தடித்தான்மாதோ. (௨௪)

சிரமிசையடித்துமார்பிற்புடைத்திடுந்தியோன்றன்னை
முரணுறுமிராமனம்பிமுசலங்கொண்டடித்தலோடும்
வரைவிழுவதுபோல்வாயிற்குருதிநீர்மண்ணினோடத்
தரைமிசைமயங்கிப்பின்னர்த்தெளிந்தனன்மயிந்தன்றம்பி. (௨௫)

தேறியதுவிந்தனெஞ்சிற்சினத்தொடுசாலம்வாங்கி
யேருறுமறனுமஞ்சவெறிதலுமிராமநம்பி
நூறொருகூறாத்தண்டாலொறுக்கியம்மரத்தைவீழ்த்த
மாறிலோர்பிறங்கலேந்தியெறிந்தனன்மயிந்தன்பின்னோன். (௨௬)

வடவரைபொருவவெய்துமலையினையலத்தினாலே
படியிடைத்துகளாய்வீழப்பால்வெண்ணனடித்தலோடுங்
கடுமையினெண்ணிலோங்கற்கவடுடைமரங்களெல்லா
மிடலுடைத்துவிந்தன்விட்டேயார்த்தனன்விண்ணோரஞ்ச. (௨௭)

இடிகளும்வெருவவார்த்தேயெண்ணில்பாதவங்களோங்கல்
கடியவன்விசையின்மேன்மேலெறிந்திடக்கண்டுகோல
வடிவுடையிராமநம்பிவருவனமரங்களெல்லாம்
பொடிபடவலத்தானூறப்பூமழைபொழிந்தார்விண்ணோர். (௨௮)

விட்டிடுமரங்களெண்ணில்விலங்கல்கள்பொடியதாக
மட்டவிழலங்கற்சூடுமதிவண்ணனலத்தான்மோதக்
கிட்டியதுவிந்தனார்த்துக்கிரியிடையிடிவீழ்ந்தென்னச்
சிட்டொண்ணிராமனம்பிசிரமிசைப்புடைத்தான்மன்றோ. (௨௯)

சிரமிசைப்புடைத்தலோடுஞ்சீறியேயிராமநம்பி
யரிகுலவீரன்மார்பினசனிவீழ்ந்தென்னவாங்கே
யொருகரமுறுக்கிக்குத்தவுதிரம்வாயொழுகியோட
வரையுருள்வதுபோற்பாரின்மடிந்தனன்றுவிந்தன்மாதோ. (௩0)

தீயனாந்துவிந்தன்மாளச்சிறந்திடுஞ்சுரர்களெல்லாந்
தூயமாமலர்கடூவித்துதித்தனரிராமன்றன்னை
நேயமோடாயர்மாதர்நிறைந்திருமருங்குஞ்சூழ
மாயவன்முன்னோனெய்தியசோதையைவணங்கினானால். (௩௧)

தாயெனுமசோதைதன்னைப்பணிந்தசக்கரத்தோன்முன்னோ
னுயிரிற்பெரியோன்றன்னையடிதொழுதெழுதலோடுந்
தீயனாந்துவிந்தன்றன்னைச்செற்றவன்றன்னைநந்தன்
றூயமாதேவியோடுமிணைத்தருள்சுரந்தானன்றே. (௩௨)

விலங்கதாமவன்வான்றோயும்விலங்கலின்முழையுட்போடக்
கலங்கியவாயர்தம்மைவிடுத்துயர்கண்ணன்முன்னோ
னலங்கிளரசோதைநங்கைநந்தனோடிரங்கிநிற்பப்
பொலஞ்செறியிரதமீதிற்றுவரையிற்புகுந்தான்மன்றோ. (௩௩)

அன்னையர்தமைவணங்கியருள்செறிவசுதேவன்றன்
பொன்னடிபணிந்துநின்றபொற்புறுமலத்தோன்றன்னைப்
பின்னவனிறைஞ்சமார்பிற்றழுவப்பேரின்பமெய்து
மன்னவர்குழாங்கள்சூழமகிழ்ந்தினிதிருந்தான்மாதோ. (௩௪)

## துவிந்தன் வதைப்படலம் முற்றிற்று.

---

ஆகபடலம் - ௧௮ - க்குக் கூடிய திருவிருத்தம் - ௧0௯௮.

---

ஸ்ரீகண்ணபிரான்றிருவடித் தாமரைகடுணை.






ஸ்ரீ

விஷ்ணுமயம்.

௧௭-வது மதன்

# செனனப்படலம்.

சோமனைச்சடையிற்றாங்குமரன்படுந்துயர்நீக்கிப்
பூமனைத்தந்தீரேழுபொழில்களும்படைத்துக்கஞ்ச
மாமனைவதைத்துப்பின்னர்மாதவர்குழாங்கள்போற்றக்
காமனையளிக்குமாயோன்கழலிணைக்கருதுவோம்யாம். (௧)

ஆழிசங்கிலங்குபாசமங்குசமளிநாணுகும்
வேழவில்வெறிகள்வீசும்விசிகம்வேயமர்ந்தவெண்கை
மாழையின்கடகந்தோன்றத்தனகோபாலனாகி
யாழினைப்பழிக்குமின்சொலுருப்பிணிக்கின்பமீந்தான் (௨)

கத்தூரித்திலகநெற்றிகவினுறக்கழுத்தின்மார்பின்
முத்தாரமிலங்கநேரில்கவுத்துவமுகிலின்மின்போல்
வித்தாரத்திலங்கநாமம்வெரியுறவரம்பைவாம
மொத்துருவயங்குமாதாமுருப்பிணிக்கின்பமீந்தான். (௩)

தாடொழுநளினத்தேவிதன்னுடன்றேனும்பாலுங்
கூடியதொப்பச்சிந்தைகுளிர்ந்திடவணையின்மீதே
நீடியவின்பமெய்திநேமியோன்மகிழுநாளின்
பீடுடைமதனனெய்துமியல்பினைப்பேசலுற்றாம். (௪)

நக்கன்மாதவர்கட்கெல்லாநாயகனானசோதி
திக்கெலாம்விளங்கவேவைதிகத்தினரிறைஞ்சச்சீரா
ரிக்குநேர்மொழியளாயவுமையுமாண்*டெய்தாதாலே
தெக்கணமூர்த்தியாகிச்சிறந்துயோகஞ்செய்நாளின். (௫)

தீயவெஞ்சூரன்றன்னைச்செயித்திடச்சிவன்றான்செய்யுந்
தூயமாயோகமாற்றிச்சுதன்றனையளிக்கும்வண்ண
மாயிரநயனன்றன்னோடமரர்கண்மதனைநோக்கி
நீயரன்றவத்தைமாற்றியெமதிடர்நீக்கென்றார். (௬)

சுரரிவைமொழியமாரன்றூயகன்னலின்வில்லேந்தி
யரியுநாணதாகவைமலர்வாளிபூட்டி
விரைவினிலரன்மேலெய்யவெகுண்டவனுதலிற்கண்ணை
யெரியுறவிழிக்கக்காமனெரிந்தனனிமைப்பின்முன்னர். (௭)

அரனுதல்விழியினாலேயழகியமதனீறாக
விரதிதன்வயற்றினெற்றியிருகணீர்நகிலின்வீழப்
பருவரற்பரவைதன்னுட்பதைக்கின்றுடனனைநோக்கிச்
சுரரொழில்வலாரியோடுந்துலங்கியவரன்பாற்சென்றார். (௮)

---

*எய்தாதாலே, என்பது, சிதைந்தது வந்தது. இலக்கணப் போலி.

அரனெழிற்பாதந்தன்னிவிறைஞ்சியான்வலாரியண்ட
ருரைசெய்வாருமைதன்கேள்வாவுன்னுதல்விழியிற்றோன்று
மெரியினினிறந்தான்றேவியிரதியிங்கெய்துகின்ற
பருவரலொழித்தியென்னப்பகர்ந்தடிபணிந்தார்மன்னோ. (௯)

சுரரொடும்வலாரியெய்தித் துதிசெய்துமொழியக்கேட்ட
வரனருள்புரிந்தெல்லோர்க்குமனங்களுய்த்திரிந்துமார
னிரதிதன்விழிக்குத்தூயவுருவனுயியங்குவானென
றுரைசெயமதனன்றேவியுவகையோடிறைஞ்சலுற்றுள். (க௦)

என்னிருவிழிக்குத்தூயவுருவனுய்வசந்தனென்னை
மன்னுவதெப்போதென்னமண்மிசைப்பாரங்கீக்க
நன்னிலமதனிற்றோன்றுநாரணன்சுதனுய்ப்பாரி
னுன்னுடனணைவனென்றேயுமைகணவன்பின்சொல்வான். (கக)

தரணியிற்பாரநீக்கித்தன்னுடைச்சோதிதன்னி
லரியுவந்தெய்தும்போதினைவர்க்குமனங்களுகி
யுருவுடைக்கொழுநனுகவுன்னுடன்சேர்வனென்றே
எருதினிலுறுவோன்கூறவிரதியுமேகினுளால். (கஉ)

அன்றிரதிக்குத்தூயவரன்வரமளிக்கமாரன்
வென்றிகொள்விதர்ப்பன்பெற்றமெல்லியல்வயற்றிற்றோன்றக்
குன்றெடுத்தருளுமாயன்றேவியைக்குறித்துநோக்க
மன்றலர்குழலினுடேவகிமனமகிழ்ந்தாண்மாதோ. (க௩)

கருப்பமோராறுதிங்கணிறைந்திடக்கவின்கொணங்கை
யுருப்பணிமாலுமோராதனத்திருந்துவகையெய்தத்
தருப்பையைவிரித்துக்கற்கன்றழலினுகுதிசெய்தோமம்
விருப்பமுற்றுயர்வேதத்தின்விதிவழிநிறைத்தான்மன்னோ. (க௪)

மறையவர்தனக்குப்பூமிதானமாதானஞ்செய்து
நறுநெய்பாற்பருகுமாயனலனுறத்தசமாந்திங்க
ணிறையவேவிதர்ப்பன்பெற்றநிகரிலாவனசமங்கை
மறுவிலாமதனன்றன்னைப்பயந்தனள்வானோர்வாழ்த்த. (க௫)

அறந்தவிராதமாயோன்றனக்கழகானமைந்தன்
பிறந்தனனென்றுமாதர்பேசிடவுவகைநெஞ்சிற்
செறிந்திடவிறைநீராடித்திமிலைசின்னங்கள்பேரி
யறைந்திடக்கோயிற்புக்கானந்தணர்குழாங்கள்சூழ. (க௬)

நந்தொடுதிகிரியேந்துநாரணன்கோயின்மேவி
மைந்தனையெடுத்துத்தூயமதிமுகநோக்கலோடுஞ்
சிந்தையின்மகிழ்ந்துகற்கன்சாதகவோமஞ்செய்ய
வந்தணர்குழாங்களாசியறைந்தனர்பேரியார்ப்ப. (க௭)

வேறு.

தேவகிரோகணிசிறந்தரோவதி
பாவையர்பலருடன்பரிந்துநோக்கியே
யோவியஞ்சுவைகெடுமுருவினுன்றனை
யாவலினணைத்திவன்மதனனுமென்றார். (க௮)

நாலகேதனன்வசுதேவன்சாத்தகி
சீலமாருக்கிரசேனன்றேவகன்
கோலமார்மாயவன்குமரனாகிய
பாலனைநோக்கியாசிகள்பகர்ந்தனர். (௧௯)

தாளமாமணிகள்சாமீகரத்துட
னிரவலர்மிடிகெடவீந்துமாதவன்
சரியிலாதுயர்ந்தகோக்கோடிதானங்க
ளருமறை பயிபவர்க்கருளினனரோ. (௨௰)

வீழியின்கனியெனவிளங்கும்வாயினு
ட ழ்விலாதுருப்பிணிதனையன்றன்னுட
னேழ்தினமகிழ்வுடனிருக்குமவ்வழி
யூழ்வினைச்செயலினையுரைக்கின்றாமரோ. (௨௧)

மதன்செனனப்படலம் முற்றிற்று.

---

ஆ படலம் ௪௭ - க்குக்கூடிய திருவிருத்தம் ௧௧௧௪.

---

ஸ்ரீ கண்ணபிரான் திருவடித்தாமரைகடுணை.

---

ஸ்ரீ

விஷ்ணுமயம்.

௪௮ - வது சம்பரன்

# வதைப்படலம்.

---

வச்சிரப்படைநுனேடண்டர்வாழ்த்திட
நச்சுறுமரவின்மேனடித்துவேதத்தி
னுச்சியினசைவிலாவொருவனாகிய
வச்சுதன்பெயரினையறைந்துய்வாமரோ. (௧)

நம்பர்தன்னுதலுறுநயனத்தீயினு
லம்பரத்தெரிந்துபின்னனங்கனானவன்
வெம்பகையாயசம்பரன்வெகுண்டெழுந்
திம்பரினிரதியைப்பற்றியேகினன். (௨)

நீரணிசடையினனெற்றிக்கண்ணினன்
மாரவேளெரிந்திடமயங்குசிந்தையாள்
பாரினிற்சம்பரன்பற்றியேகவே
ஆருயிர்விடுவெனென்றயரும்வேலையின். (௩)

இந்துமன்சடையனாலிறந்தமன்மதன்
சுந்தரவரிசுதனாகித்தோன்றியே
வந்துநின்னிடர்கெடமணப்பனாமென
வந்தரத்துயர்ந்தசரீரிசாற்றிய. (௪)

துனியறவுயரசரீரிசொல்லவே
வினையுறுசம்பரன்மேவும்போதெலாம்
தனையவன்கரந்துதன்மாயைதன்னினா
லினியதோரரிவையைப்படைத்தங்கேவுவாள். (௫)

ஆசுறுசம்பரனணுகும்போதெலா
மாசின்மாயாவதியானமங்கையைத்
தேசுறவேவியாண்டிரதிசீருற
வேசறுமருந்ததியென்னவைகினாள். (௬)

பவமறுநாரதன்பழிப்பின்மன்மத
னவனியிற்செனித்தமையறையச்சம்பரன்
றுவரையிலெய்திமால்சுதனைப்பற்றியே
உவரியினெறிந்துதன்னூரிற்சென்றனன். (௭)

கடியுடைக்கமலமின்கண்களித்துத்தன்
மடிமிசைக்கிடைத்தலுநகைத்தமைந்தனைக்
கடுமையிற்சம்பரன்கைக்கொண்டேகவே
விடருறவிருநிலத்திரங்கிச்சேர்ந்தனள். (௮)

தினமொரேழ்மகிழ்வுடன்சிறந்திருந்திடும்
வனிதைதன்மடிமிசைமகனைக்காண்கிலா
ணினைவழிந்தலறியேநிலத்திற்சோர்ந்திட
வனைவருமெய்தியாண்டரற்றினாரரோ. (௯)

மாமியாந்தேவகிமலர்க்கணீருகப்
பூமிசைமடந்தையையெடுத்துப்புல்லியே
காமனைநிகர்த்தவென்கண்ணன்பாலகன்
போம்வகையேதெனப்புலம்பினாளரோ. (௧௦)

சேயினையிழந்தனையிரங்குஞ்செய்கையை
மாயவனறிந்துயர்மனையினெய்திநற்
றாயுடன்றந்தையுந்தழுவச்சக்கர
னோய்விலாதிருகணீருகவரற்றினான். (௧௧)

மதுமலருறையுமின்னெழுந்துமாயவன்
பதமிசைவீழ்தலுமணைத்துப்பார்மிசை
எதிருறுகாலமுற்றறிவரேனுமேல்
விதியினைவிலக்கரிதென்றுவிம்மியே. (௧௨)

மாயைமானுடத்தினிற்பிறந்துமன்னுயிர்
வீயுமேதக்களும்வினையின்சேடத்தா
னாயவையெல்லவுமறியக்கூறினான்
சேயினையிழந்தவடேறும்வண்ணமே. (௧௩)

ஏதுகுலத்தரசர்களிடரின்வீழ்ந்திடப
பதகனுஞ்சம்பரன்மதனைப்பற்றியே
உததியினெறிந்திடவொளிகொள்வேலினைக்
கதுமெனவிழுங்கிற்றொர்மகரங்கண்டரோ. (கச)

பரதர்கள்பரவையிற்பரந்தமின்கொலக்
கருதியேவலைகளைக்கடிதுவீசிட
விரதிதன்கொழுநனைவிழுங்கியேகிய
விருதுறுமகரமீன்பிடித்தமீண்டனர். (கரு)

சகரநீர்கிழியவேதாவியோடிநீ
மகரமீன்றனைக்கொடுதிமிலர்வன்மைசேர்
சிகரமாடங்கள்சூழ்நகரிற்சென்றுதா
னிகரில்சம்பரன்றனக்கீந்துநின்றனர். (கசு)

கடியவச்சம்பரன்கண்ணினோக்கியே
நெடியவிம்மீனினைச்சமையுநீரென
மடையர்கண்மகரமீன்வயிற்றைப்பீறிநற்
சுடரொளிமதலைதான்றோன்றக்கண்டனர். (கஎ)

தூயமீன்வயிற்றினிற்றோன்றுமைந்தனை
நேயவாலுவர்கடாம்வாங்கிநீதியிற்
றீயசம்பரன்முனர்க்காட்டத்தேவியா
மாயமாயாவதிமகிழவீந்தனன். (கஅ)

ஆயதோர்காலையினனுகிநாரதன்
றூயமாவிரதிமுன்சொல்லுவானரன்
காயவேயெரிந்திடுங்காமன்மண்மிசை
மாயனுந்துவரைமன்மைந்தனாயினான். (ககூ)

சிருறுமுருப்பிணிபயந்தசேயினைப்
பூரியசம்பரனெடுத்துப்போந்துயர்
வாரியினெறிந்திடமகரநுங்குமிவ்
வீரியன்வேளெனவிளம்பினனரோ. (உ0)

நீயிவன்றன்னையேவளர்த்துநேரிலா
மாயையாயிரங்களும்வருவித்திரெட்டுத்
தூயநல்வருடங்களொருவவுன்றுணி
மாயவிவ்வசந்தனுக்குரையிவ்வாறெலாம். (உக)

சோடசவருடங்களொருவித்தூமதன்
சேடனும்வெருவுறத்திரியுஞ்சம்பர
னோடமர்பொருதிவனுடறுணிப்பனாற்
பீடையிரதியேயென்றுபேசினான். (உஉ)

ஈதெலாமொழிந்தியாழ்முனிவனேகலுந்
தீதெலாமகற்றியவிரதிசிந்தையின்
காதலாற்கணவனையணைத்துத்தன்கர
மீதினில்வளர்த்தனண்மகிழ்வுவிஞ்சவே. (உங)

### வேறு.

இருந்துபின்றவழ்ந்துமெல்லநடந்தைந்துபருவமெய்தி
யருந்தவர்மகிழவேதமறைந்துயர்சாத்திரங்க
டிருந்திடப்பயிற்றியோங்குஞ்சிலையினூல்விதங்கள்கற்பித்
தருந்தியனையதேவிவளர்க்கவேளழகனானான். (௨௪)

காயுமாகரிநடத்திக்கதையினாற்கற்றுப்பாரிற்
பாயுமாவிரதமூர்ந்துபதினாறுவருடஞ்செல்லத்
தூய்மையாங்கொழுநன்றன்னைநோக்கியேதுயரமேவி
மாயையாயிரமுமோதுவித்தனளிரதிமாதே. (௨௫)

கன்னல்வில்லோனாங்காமன்கவினுறுமிரதிதன்னை
யன்னையென்றினிதினோக்கவவளெழிற்காந்தனென்று
தன்னிருவிழியாற்காதற்றழைத்திடநோக்கலோடு
மென்னிவையென்னவுன்னிமதனனாண்டியம்பலுற்றான். (௨௬)

அன்னைநீயன்றோவென்னையளப்பறுமாசைதன்ன
வுன்னிருவிழியாற்காதலுற்றிடநோக்குகின்றா
யென்னிவையுரைத்தியென்னவெழின்மதனியம்பலோடு
மின்னிடையிரதிகாந்தன்றனக்கிவைவிளம்பலுற்றாள். (௨௭)

நீயென்றன்மகனாயவேனிலானெற்றிக்கண்ணான்
காயவேயெரிந்துமீண்டுகவினுறுதுவரைமன்னு
மாயன்றன்சுதனாய்வந்தநின்னைவாரியினிலிட்டான்
றீயனுன்பகைஞனாசம்பரன்றேர்ந்துமன்றே. (௨௮)

வாரியுண்மகரநின்னைவிழுங்கிடவலையொய்தி
நீருளம்மீனைத்தாங்கள்பற்றியேநெறியின்மீண்டு
சீரில்சம்பரன்றன்முன்னர்க்காட்டக்கூவியர்கள்சேர்ந்து
பாரினிற்பிளக்கநீயாங்குழவியைப்பரிவிற்கண்டார். (௨௯)

மடையர்களின்னையுன்றன்மருவலன்முன்னர்வைப்பக்
கடியவனுடனேகூடிக்கலந்தனுபவந்தான்செய்ய
வடிவுடைமங்கைமாயாவதிதனைப்படைத்தேனந்தக்
கொடியிடைமடவாள்கையிற்கொடுத்தனனின்னையென்றாள். (௩0)

இவையெல்லாமென்முனெய்திநாரதனியம்பினானென்
றுவமையிலிரதிகூறத்தேவியையனைத்தொண்டேரி
னவையறுகுணத்தினாரியிவுளியைநடத்தியேகப்
பவமுறுசம்பரன்றான்பயமுறவார்த்தானன்றே. (௩௧)

மாரவேளிரதியோடுமணிநெடுவிரதமேறி
வீரமார்தனுவினாணையெறிந்தண்டம்வெடிப்பவார்ப்பச்
சூரராமசுரரோடுந்துன்மதிச்சம்பரன்றான்
றேரின்மீதேறிமூரிச்சிலையெடுத்தெதிர்ந்தானன்றே. (௩௨)

சம்பரனெதிர்த்தலோடுந்தழங்கியசங்குபேரி
தும்பிகளெண்ணிலாததுரகமோடெதிரும்வீரர்
வெம்பியேவளைந்துசூழவீரவேள்விசிகமாரி
யம்பரந்திசைபாரெங்குமறையவிட்டார்த்தானம்மா. (௩௩)

கரியொருகரமுமற்றுக்கால்களுமறவேவீழ்ந்த
பரியிருகுரமுமற்றுப்பருப்பதம்போன்றுசாய்ந்த
வரிசிலைதுணியவீரர்முடிந்தலையுருளமாண்டார்
குருதிபேராறாயோடக்கொடிகுடைமிதந்தமாதோ. (௩௪)

வசந்தனேவையமாகவயங்கிடுவசந்தன்வாளி
கசந்தனைத்துணிக்கச்சந்தங்காண்கிலர்தேபல்கூறாய்
அசந்தசைக்குவைபோல்வீழவசைந்ததின்சுவலோர்வீழ்ந்தார்
புசந்தலையுரங்கள்காலென்புசந்தறப்புரண்டுபோனார். (௩௫)

பீடுடைவசந்தன்வில்லாற்பிறைமுகவாளிபெய்யக்
கோடுடைக்கரிகளெண்ணில்குரகதநிரைகண்மாள
வாடினகவந்தங்கோடியளக்கிற்குருதிபாய
வீடினரசுரரெல்லாம்வெகுண்டுசம்பரன்றான்வந்தான். (௩௬)

சம்பரன்றனுவைவாங்கிச்சாயகமாரிபெய்தே
யும்பர்கணடுங்கவானமறைத்துறுத்தார்த்தலோடும்
வம்பவிழ்மாலைமார்பன்மதனழல்வாளியாலே
இம்பரினறுத்துவீழ்த்தானெதிருமாசுகங்கடம்மை. (௩௭)

எரியுறுநயனனஞ்சச்சம்பரனெதிரிலாத
வரவுறுபடையைவிட்டானமரர்களஞ்சியோட
விரதிதன்கொழுநன்வெய்யவிராக்கதப்படையைவாங்கிச்
சுரர்துதிசெய்யவெய்யத்துணிந்தமாசுணங்களெல்லாம். (௩௮)

கடியசம்பரன்றானெஞ்சிற்கனன்றுகாந்தர்ப்பவாளி
படியெலாநடுங்கவிட்டான்பார்த்துயர்மதனராசன்
கொடியவெங்கூளிவாளிகுனிவில்லாற்றொடுத்துவிட்டு
நொடியின்முன்னறுத்தலோடுநுவன்றனராசிவிண்ணோர். (௩௯)

தீயசம்பரன்றானெஞ்சிற்சினமுறச்சிலையினாலே
வாயிரவிதங்களானமாயவாசுகங்கள்விட்டான்
மாயவன்மதலைபத்துநூறதாய்மாயவாளி
யேயெனுமுன்னமெய்தேயறுத்தனனிமையோரேத்த. (௪௦)

கதமுறுசம்பரன்றான்கதையெடுத்தெறியவானின்
பதியினர்நடுக்கமெய்தக்கண்டரிபயந்தமைந்த
னுததியைக்கடைந்தமத்தையொத்ததோர்தண்டாலும்பர்
துதிசெயப்படியின்மீதிற்றுகளுறவடித்துவீழ்த்தான். (௪௧)

இரதியாவிரதமூரவெங்கணுந்தானுமாரன்
சரதவாசுகங்களேவிச்சம்பரன்மேனியெல்லாங்
குருதியாறாக்கீறுங்கொடிசிலைதுணியத்தேரிற்
பரிதரணியின்கண்மாளப்பகழியும்விடுத்தானன்றே. (௪௨)

சூலியெண்ணசுரன்றேர்மாத்துவசம்விற்குந்தம்போக்கி
ஞாலமுற்றொருவேல்கொண்டுநமனஞ்சவெதிர்த்தலோடு
மாலிரும்புதல்வன்வெய்யவாளியைச்சுழற்றிவிட்டுச்
சீலமில்சம்பரன்றன்சிரத்தினைத்துணித்தானம்மா. (௪௩)

சம்பரன்மடிந்துவீழச்சதுமறைமுனிவரோடு
மம்பரத்தும்பரொய்தியாவலங்கொட்டியார்த்து
வம்பவிழ்மலர்களைவீசிமகிழ்ந்தனர்மதனராச
னிம்பரினிரதமீதினிரதியோடிலங்கினானால். (௪௪)

## சம்பரன் வதைப்படலம் முற்றிற்று.

ஆ படலம் ௨௦ - க்குக் கூடிய திருவிருத்தம் ௧௧௫.

ஸ்ரீகண்ணபிரான் றிருவடித் தாமரைகளே துணை.

ஸ்ரீ

விஷ்ணுமயம்.

௯௯ - வது

# அநிருத்தப் படலம்.

திகிரியையெடுத்துத்திகிரியைத்தரித்துத்திகிரியையூதிவெஞ்சினத்த
புகரிபமடர்த்துப்புள்ளின்வாய்கிழித்துப்புனிதன்மாதுலன்றனைவதைத்துப்
பகரதிமுடித்தவேணியங்கடவுள்பலிதவிர்த்துலகெலாம்வளர்க்கு
முகினிறக்கரியவச்சுதாநந்தமுகுந்தமாதவனடிபணிவாம். (௧)

வேறு.

உவரியேயகழியாகவுயர்ந்தகோபுரங்கள்சூழத்
துவரையினிலங்குகின்றதூயபொற்கோயிலின்க
ணவமணித்தூண்கண்மேவிநலன்கொண்மாமண்டபத்திற்
றவமுறுவிதர்ப்பராசன்றந்தமின்னிருந்தாளன்றே. (௨)

எண்ணிரண்டாயிரத்தோடைம்பதேழுமாதர்
நண்ணியேமருங்குசூழநற்பொன்னாசனத்தின்மீதின்
பெண்ணினுக்கரசியாகிப்பிறங்குசாமரைகள்வீச
விண்ணவர்மலர்களைவீற்றிருந்தருளும்வேலை. (௩)

பரிதடந்தேர்கள்சூழப்பவமுறுசம்பரன்றன்
பொருதுடல்படியின்வீழ்ந்துபொன்றவெஞ்சமரின்வென்று
சுருதியையறையும்வானோர்துதிசெயவானமீதி
னிரதமீதிரதிதன்னோடெய்தினானெழில்கொள்காமன். (௪)

வருகின்றமதனைநோக்கிமாதவனெய்தினானென்
றிருகயலிவர்கண்மாதரொழுந்திருந்தொதுங்கிநிற்பத்
திருமகனிவனொன்றுசிந்தையினினைந்துணைந்து
முருகவிழ்கமலமங்கைமுலையிற்பால்சோரநின்றாள். (௫)

# அநிருத்தப் படலம்.

வாடிபதிருத்தான்பெற்றமகனையானிழந்தநாட்கள்
சோடசவருடமாயசுதனுய்ந்துவளர்ந்தானாகி
லாடவர்திலகனாகிவருமிவனழகையொப்பா
னேடவிழலங்கல்சூடியெய்துவானேரோவென்றாள். (௬)

என்றவளுரைக்கும்வேலையெழில்கொடேவகிதன்னோடுங்
குன்றெடுத்தருளுமாயோன்குறுகியேநோக்குங்காலை
நன்றிகொள்மறைநரையோதுநாரதனெய்தினான
மொன்றியவிதர்ப்பனல்குமுருப்பிணிக்குரைப்பதானான். (௭)

நீயன்றீன்றுதவுமைந்தன்மதனிவன்றன்னைநீறு
மாயஞ்செய்சம்பரன்றான்வாரியினெறிதலோடுந்
தூயதாமகரமீனிச்சுதன்றனைவிழுங்கித்துள்ளிப்
பாயுமாதரங்கமோங்கும்பரவையுட்டிரியுநாளின். (௮)

வலையரம்மகரந்தன்னைப்பற்றிச்சம்பரன்முன்வைப்பக்
கொலைசெய்சூகாரர்கள்வாங்கிக்கோதின்மீனகட்டைப்பீற
நலனுறுகுமரன்றன்னைக்கண்டவர்மகிழ்ந்துநன்கிற்
புலையனாமசுரன்முன்னர்பொலனுறச்சுட்டினாரால். (௯)

அரனுதல்விழியின்றீயினெரிந்திடுமனங்கனில்லா
ளிரதியைப்பற்றிச்சம்பரனேகவர்ந்தத்
தெரிவைதன்மாயைதன்னாலவனுக்கோர்தேவியாக
மருவமர்குழலிமாயாவதியினைப்படைத்தான்மாதோ. (௧0)

தூயமாதிரதிமாயைதன்னினாற்றுலங்குகின்ற
வேயுறுதோளிமாயாவதிகரத்தன்புமிக்க
தியவன்கொடுத்தலோடுஞ்சிறந்திடுமதனைத்தேவி
மாயிருநிலத்துநேயமலிந்திடவளர்த்தாளன்றே. (௧௧)

தூயவிண்வடமீன்போன்றசுந்தரவிரதிவேளுக்
காயிரமாயமெல்லாமருளவேயீரெட்டாண்டு
போயபின்னுற்றதெல்லாம்புகன்றிடமதனன்பொங்கித்
தீயசம்பரனைச்செற்றுத்துவரையிற்சேர்ந்தானென்றான். (௧௨)

முனிவனீதுரைக்குமுன்னர்முண்டகமடந்தைதாளின்
வினையகல்மதனனெய்தியிறைஞ்சிடவிதர்ப்பன்பாவை
தனையனையணைத்துமோந்துதன்முலைப்பாலையீய
வனையிருநகிலின்றூயவமுதைவேளருந்தினானால். (௧௩)

தாயிருநகிலிற்பாலையருந்தியேதந்தையான
மாயவன்றிருப்பாதத்தின்வணங்கியமதனைநோக்கி
நேயமோடெத்திற்புல்லிநேமியோன்மகிழ்தலோடுந்
தூயதேவகிதன்றாளிற்பணிந்தனன்றுலங்குவில்வேள். (௧௪)

அன்னையாளப்பிலோரைவணங்கியேயலாயுதத்து
மன்னனையவன்றாய்தன்னைமற்றவன்றாதைதன்னைத்
துன்னியவன்பினாலேயிறைஞ்சினன்றூயதாய
கன்னல்வில்லாகப்பூவின்கணையினைத்தொடுக்குங்காமன். (௧௫)

சுரிகுழலிரதியாய்தூயவளிரங்குகின்ற
வரிகவினுறும்பாதத்தினிறைஞ்சியைங்கணைகொண்டெய்யு
மொருமகன்றன்னைப்பெற்றவுருப்பிணிதாளின்வீழ
மருகியையிருகையாரவணைத்துளமகிழ்ந்தாண்மன்னோ. (௧௬)

நவையறுகுணத்தனாயநான்மறைக்கற்கனெய்தி
யவனியன்றிடந்ததூயோனருடிருமகனுக்கன்பா
லுவமையிலோமம்பண்ணியுயர்தவருவப்பநாமஞ்
சவுளமோடுயர்ந்தமுந்நூற்றரித்துபநயனஞ்செய்தான். (௧௭)

அரிதிருமகன்றன்றேவியுடன்றவிசெய்தவாங்கே
சரதமாமறையோரோமத்தழலினாஹுதிகள்பெய்ய
விரதிகந்தரத்திற்காமணிலங்குமங்கலநாண்சாத்திக்
கரதலவிரலைப்பற்றிக்கனல்வலம்வந்தானன்றே. (௧௮)

தூயவளிரதியம்மிமிதித்திடச்சுரர்கள்போற்ற
மாயவன்மதலைநாரிதன்னுடன்வடமீனோக்கித்
தாயினைவணங்கித்தந்தையடியினிற்றாழ்ந்துபின்னர்
தீயவையகலத்தேவியுடன்சிறந்திருந்தானன்றே. (௧௯)

வேறு.

சீருறுமதனன்சுதக்கணன்சுசாருதிறன்மிகுபத்திரசாரு
சாருகந்திரன்சாருதக்கினன்விசாருசாருயர்சாருகேதனனோ
டேருறுசாருகுத்தனோடிவர்கள்பதின்மரையீன்றனனெறிசேர்
பாருறுவிதர்ப்பன்றவத்தினாற்பயந்தபங்கயத்திருவுருப்பிணியே. (௨௦)

பானுவன்சுபானுபானுமான்சுவதபானுசீர்சந்திரபானு
தேனுறுமலங்கலணிபிரபானுசிரந்தசீபானுநற்பாரி
னூனமில்பிரகற்பானுசற்குணத்தாலுயரயிபானுசொற்கீர்த்தி
யீனமில்பிரிதிபானுவோடிவரையீன்றனள்சத்தியபாமை. (௨௧)

துலங்கியசாம்பன்சுமத்திரன்வசுமான்றூயவன்புரிசிரன்சிரத்துப்
பொலன்கொளுஞ்சதசித்திரவணன்விசயன்பொறையுடைச்சித்திரகேது
சலங்களைந்துயர்ந்தசகுனிவாசகனோடீரைந்துதனையரையீன்றா
ளிரங்கியவடமீனனையகற்புடையாளெழிலுறவயங்குசாம்பவதி. (௨௨)

வேறு.

மாகவாணிகராம்பானுசந்திரன்வயங்குகுந்தி
யாகவச்சித்திராகுசங்கனச்சுவசேனன்றான்
வேகவான்விருடநாமன்விளங்கியவாமன்றன்னோ
டோகையார்கவுசலன்றானுதவநாக்கினசித்தீன்றாள். (௨௩)

வீரியச்சுரதன்றீரன்விருடனேகலன்சுவாகு
பூரணன்மாதன்சாந்திபொறையுறுபத்திரன்றான்
சூரொண்கவியன்சோமன்னிகரிலாவிவர்கடம்மைப்
பாரினிற்றவஞ்செய்தோங்குங்காளிந்திபயந்தாளன்றே. (௨௪)

**வேறு.**

திரவொண்ணியபிற்கோடன்காத்திரவான்சிங்கனூர்த்துவசன்மாசத்தி
மாரனைநிகர்க்கும்பலன்சகஞேசன்வயங்கியபராசிதமன்னன்
சிருநத்துலங்கும்பிரபலனுடனேசிறந்திடும்பதின்மரையீன்றாள்
பாரினினிலங்குமத்திரவரசன்பயந்திடும்பத்திரைத்திருவே. (உரு)

விருகுயர்பவனன்விவேதனன்வன்னிவிழுமியகிருத்திரனனில
னருள்செறியுதகன்மகாத்துமனகுதியரிஞுயுயர்ந்தமன்னுத
னுருவுடையிவர்கள்பதின்மரையீன்றாளுலகெலாமொருதனிக்கோலாற்
றிரமுறவரசாளவந்திகன்பயந்ததிருநிகர்மித்திரவிந்தை. (உசு)

துலங்குசங்கிராமன்சுபத்திரன்சூரபிரகரன்றூயமாவாயு
வலங்கொளுங்கீர்த்திமான்செயன்பிரகற்சேனன்பத்திரச்சுவன்வண்மை
யிலங்குசத்தியகனெழில்கொடாமிரபத்திரனிவரீரைந்துபேரை
யலங்கல்சேரளகவிலக்கணைபயந்தாளருணெறியறனெலாந்தழைப்ப. (உஎ)

பாரினிலரசர்தவத்தினுற்பயந்தபங்கயத்திருவெனத்திகழ்வா
ரீரொருயிரத்தோர்நூற்றுவர்முறையேயீரைந்துசுதர்களையீன்றார்
வாருறுமுலைநப்பின்னைதன்னுடனேவயங்கியவாயர்கள்மடவார்
தாரணிமகிழப்பயந்தனரொண்ணிறனையனையறனெலாந்தழைப்ப. (உஅ)

அரசர்கள்பயந்தமங்கையர்பதினாறாயிரத்தொருசதத்தெண்மர்
விரைசெயுங்குழலாச்சியருடனிவரோரொருவர்பூமெல்லியல்சிவண
வரிசையாலோரோர்பெண்மகப்பெற்றுமகிழவேதேவகிமைந்தன்
கரைசெயற்கரியகளிப்புடனிருந்தான்ககனமார்புலவர்கடுதிப்ப. (உகூ)

கூடனிமிர்ந்தெழிலாம்வடிவுடனுயர்ந்தகோதையாள்பயந்திடுகுமர
னூனமிலுருவமுறும்பசுலோபனுகியவுத்தமனுயர்ந்தே
யீனமில்புராணஞ்சுரர்முனியியம்பவறிந்திருவினைகளையகற்றி
வானவர்மகிழவரிதிருப்பெயரைமறப்பிலாமனத்துடனிருந்தான். (கூ0)

நன்பொனூர்மதிலினுஞ்சில்சூழ்துவரைநாயகன்கோயிலினுயர்ந்த
வொன்பதினாறாயிரத்தினுப்பரிகையொளிகொளவுவமையின்மணிக
ளைம்பதாயிரத்தோடிந்திரநீலமயுதமாடத்திழைத்திலங்கத்
தன்பெருந்தேவியுருப்பிணிமுதலாந்தையலருடனினிதிருந்தான். (கூக)

தேவியர்பதினாறாயிரத்தொருநூற்றெண்மர்க்குந்தனித்தனிசிறப்ப
வோவியவுருவைப்பழித்தசேடியராயிரத்தினருழியஞ்செய்யக்
காவினுங்கமலவாவியினிடத்துங்கனகமண்டபத்தினுங்களித்தே
யாவியுமுடலுமெனவரியவர்கட்களப்பிலாக்களிப்பளித்தமர்ந்தான். (கூஉ)

மாயவன்பதினாறாயிரத்தொருநூற்றெண்மராமனைவியருடனு
நேயமோடிருக்குமெழிலினையறிவாணிகரினாரதமுனிநினைந்து
தூயயாழ்கரத்தினேந்திநற்குடைகுண்டிகைகையிற்றுலங்கவேதோன்றி
யாயுநான்மறையோரமர்ந்திடுந்துவராபதியினையடைந்தனனன்பால். (கூகூ)

வேடனையனியாற்பயந்திடுகளினமின்னுடன்விரும்பியேகெத்த
மாடியுண்மகிழ்ந்தேயிருந்துனிநிகரிலருள்செறிநாரதனணுக
வீடியவினையென்றுவந்தெதிர்கொண்டுவிழுமியமுனிவனையிறைஞ்சி
யாடகமணியாசனத்திடையிருத்தியருக்கியமன்புடனளித்தான். (கூச)

தீதகன்முனிவன்பாதநீர்கரத்தாற்சிரத்தின்மேற்றெளித்தொளிதிகழ
மாதவன்மனைவியுடனவணிருந்துமாசறுமனையின்வாட்கையினி
னூதரவுறத்தீவினைபலசெய்யென்சனனத்தையகற்றுதியென்றே
யோதலுமுனிவனகைத்துயராசியுரைத்துளமகிழ்ந்துபோயினனால். (௩௫)

சத்தியவாமைமனையினினிலங்குமக்கினிகோத்திரந்தயங்கச்
சித்தசன்றனையுதவியமுகுந்தன்சிறப்பொடும்வளர்த்திடுமெல்லைச்
சுத்தவொண்முனிவன்வருதலுமிறைஞ்சித்தூயவாய்மைகள்பலபேச
நத்தொடுதிகிரிசெறியரிக்காசிபகர்ந்துநாரதமுனிசென்றான், (௩௬)

சாம்பவன்மகளில்லவளுடனிலங்குந்தரளவெண்டவிசிடையிருந்து
பாம்பினினடித்தபரனெழிற்கிதம்பகர்ந்திடக்கேட்டருள்வேலை
யேம்பலுற்றடைந்தமுனிவனையிறைஞ்சியிப்பிறப்பறுத்தியானுய்ய
லாம்பரிசுரைத்தியெனத்தவனகைத்தேயாசிகளறைந்துபோயினனால். (௩௭)

தினகரன்மகளோடிலங்குமாமனையிற்சிறுவர்கள்சென்மநாளுறவே
யனகன்மாமறையோர்க்குயர்ந்தமாதானமளப்பிலாதருள்கின்றவேலைத்
துனிகடிந்துயர்ந்தசுரர்முனிவரலுமிறைஞ்சியென்சுதர்களிக்கிரக
வினைகடிந்துயநீயருளெனநகைத்துவிழுமியநாரதன்போனான். (௩௮)

மித்திரவிந்தைமனையினிலிருந்துவிளங்குமாயவனவள்பயந்த
புத்திரருடனுமினியசீராட்டுப்பொருந்தியேமகிழ்ந்திடும்வேலைச்
சுத்தமாதவத்தோன்வருதலுமெழுந்துதொழுதநீயெய்தவென்மரபோ
ரொத்தவஞ்செய்தாரெனநகைத்தாசியியம்பியாண்டெழின்முனிபோனான். (௩௯)

நாக்கினசித்தின்மனைதனிலவளோடிருந்துமாநவ்வியைப்பழித்த
நோக்கியர்கவரியசைத்திடச்சுதர்க்குநூல்வினைவருவிக்குமெல்லை
வாக்கினிலரியைநவின்முனிவரலுமிறைஞ்சிநீயெய்தநானென்ன
பாக்கியஞ்செய்தேனெனநகைத்தாசிபகர்ந்துநாரதமுனிபோனான். (௪0)

பத்திரையுடனேராசனத்திருந்துபரமன்றன்சுதர்களைவில்வா
ளத்திரத்தொழிலையியற்றுவித்திடுங்காலருந்தவநாரதனெய்தப்
புத்திரருடனுமுவந்துவந்திறைஞ்சிப்புனிதவெம்புண்ணியமன்றோ
வித்தலத்திவணீயெய்தியதெனவேநகைத்தெழில்முனிவனேகினனால். (௪௧)

மருவமர்குழலியிலக்கணைமனையின்மற்றவளுடனினிதிருந்தே
யரியுயர்புராணமினிதுடன்கேட்குமளவினாரதமுனியடைய
விரைவினிலெழுந்துவணங்கியைம்புலனுன்மெலிந்திடாவகையருளெனலு
மிருவினையகற்றுமுனிநகைத்தாசியியம்பியேகினன்மகிழ்வுடனே. (௪௨)

சுரர்முனியிறையோர்மனையினினிலங்குந்தூயநீராடக்கண்டேகி
யரியொருமனையிற்சுதர்களுக்கழகாஞ்சவுளஞ்செயன்பினைக்கண்டான்
கரிபரிநடத்திமனைவியோடெழில்சேர்காவினிற்களித்திடக்கண்டான்
பெரியவருடனேயிருந்தொருமனையிற்பேசியேயின்புறக்கண்டான். (௪௩)

கந்தநன்மலரிற்கடவுளெண்முனிவன்கடல்வண்ணவரியொருமனையி
லந்தணர்க்குவந்தோதனமிடக்கண்டானதன்பினர்முகுந்தனோரகத்திற்
சந்திசெய்கிரமச்சதுரினைக்கண்டான்சங்குசக்கரத்தனோரில்விற்
சிந்தையிற்செபஞ்செய்திருந்திடக்கண்டேசெபமுகித்தெதிர்வரக்கண்டான். ௪௪

மருளொழிமுனிவன்மற்றுமோரகத்தின்மாயவன்றேவிதன்னுடனு
யிருநிலத்திலம்பாடிறவிருந்தன்னஞ்சிறுவரீடேறிவாழ்ந்திடவே
தரணியிற்றனமார்ச்சிப்பமென்றுரைத்துத்தனையரைத்தழுவிடக்கண்டான்
கரியினைவதைத்தோன்வேறொருமனையிற்கண்டுயின்றிடுங்கவின்கண்டான். சடு

அருந்தவமுனிவன்முராரியோரகத்தினலாயுதமன்னவனுடனே
யிருந்தொருகருமமளாவிடக்கண்டானியாதவன்வேறொருமனையிற்
றிருந்தியகதைவாள்கேடகச்சிரமஞ்செய்திடக்கண்டொருமனையிற்
கருந்தடங்கண்வேசியருடன்விநோதங்கழறிடமுராரியைக்கண்டான். (சசு)

இயல்புடைமுனிவன்வேறொருமனையிலியாதவர்கிளையெலாஞ்சூழ
வுயர்தவருவப்பமுராரிதன்சுதர்க்கேயுபநயனஞ்செயக்கண்டான்
புயல்வணமெனவேபொலிவுறமுகுந்தன்புதியதோரகந்தனின்மேவிக்
குயின்மொழிமனையாளுடனிருந்தகன்றகூவறொட்டிடுங்கவின்கண்டான். (சஎ)

நேரிலாமுனிவன்வேறொருமனையினேமியோன்றேவிதன்னுடனே
யேருறவிருந்துவயிரியர்நடிப்பவிருகணுநோக்கிடக்கண்டான்
வாருறுமுலையார்மகிழுகாமனன்றான்மனைவிதன்னுடன்களிப்பெய்திச்
சீருறவேறோரகந்தனில்வயங்குஞ்செலக்கிரீடையைச்செயக்கண்டான். (சஅ)

நீடியதவன்மால்வேறொருமனையினிகரிறேரூர்ந்திடக்கண்டா
னுடவர்திலகவரியொருமனையினுருயிர்த்தேவிதன்னுடனே
யூடலுமவளுக்கினியதாழ்ச்சியினையுரைத்துமெய்தழுவிடக்கண்டா
னேடவிழலங்கன்மனைவியோடிறையோரில்லினிலணிந்திடக்கண்டான். (சகூ)

அண்டரெண்முனியோர்மனையினின்முராரியாருயிர்த்தேவியோடிருந்து
தண்டுலந்திலத்தின்றயிலநெய்*கோதிசர்க்கரை†மாடநன்‡முற்க
மெண்டவர்வியக்குமவைமுதலாகவாண்டினுக்கீட்டிடக்கண்டான்
மண்டனில்வேறோர்மனையிற்பூமரங்கள்வைத்திடுமாயனைக்கண்டான். (ருo)

திதவிமுனியோரகந்தனிற்சிறந்தசீதரன்றேவிதன்னுடனே
கோதில்கோதானஞ்செய்திடக்கண்டான்குறையிலாவரியொருமனையில்
வாதுசெய்தடைந்தோருரையதுகேட்டுவழக்கினையறுத்திடக்கண்டான்
யாதவன்மிருகயாத்திரைசெய்தோர்மனையினினெய்திடக்கண்டான். (ருக)

மாதவன்பதினாறாயிரத்தொருநூற்றெட்டுமாமனைதனின்வயங்கித்
தீதிலாமடவாருடனிருந்தனேகஞ்செயலினைக்காட்டநாரதனும்
வேதியனிரவிமுழுவதன்முன்னம்விரைவினினிறைஞ்சிநின்னடியே
னுதலினைநீமயக்குமாயைகளினகப்படாதிருந்தனனென்றான். (ருஉ)

நீயயன்முதலோருலகெலாநின்னுணிருமித்திவ்வவனியிற்றோன்றி
மாயையின்மயக்குஞ்செயலினையடியேனறிந்தனன்மாதவாவென்றே
தூயனுமுனிவன்றுதித்திடமகிழ்ந்துசுருதிநாயகனருள்சுரப்ப
நேயம்விஞ்சிடமாலடியிணைவணங்கிநெறியுறுநாரதன்போனான். (ருங)

நாரதன்மகிழ்ந்துதுதிசெய்துநாகருலகினிலெய்தநாரணன்றான்
மாரதரனையசிறுவர்களுடனேமகிழ்ச்சியோடமர்ந்திடுநாளின்
வாரிதிபுடைசூழ்துவரையினிலங்குமதனெழிலிரதியாமொப்பில்
பாரிதன்னுடனேகலவிசெய்தின்பப்பயிரினைவிளைத்தினிதிருந்தான். (ருச)

---

*கோதி=கோதுமை. †மாடம்=உழுந்து. ‡முற்கம்=பயறுவகை.

வேறு.

எழில்கொண்மதன்றனக்கேயவனுயிராகியவிரதி
யழகின்மலியநிருத்தனையளித்தேயிடவன்பான்
மழையின்முகில்வனைத்தாளுடும்விதர்ப்பன்றிருமகளா
முழையின்விழியாடன்சுதன்மகன்மேனிகண்டுவந்தாள். (ருரு)

மாரன்னதிரோடியொண்மகன்வாண்முகனோக்கிப்
பாரின்மறையோரின்புறப்பலதானமுஞ்செய்தே
யேர்விஞ்சிடவுயர்சாதகசவுளம்மிவைமுடித்து
காரம்முறுகடன்மீதமர்நாதன்னுடுமெகிழ்ந்தான். (ருசா)

ஐயமன்றழைத்திடவந்தருள்கரியோன்மகன்சுதனுக்
குயரும்முபநயனஞ்செய்துமறையோதினர்க்கெல்லா
மியல்பின்னுறுபலதானமுமளித்தேயெழின்மலிந்த
வயிலொண்விழிகளினத்திருவுடனேமகிழ்ந்தமர்ந்தான். (ருஎ)

அநிருத்தப்படலம் முற்றிற்று.

ஆ படலம் உக-க்குக்கூடிய திருவிருத்தம் கஉஉ०

ஸ்ரீகண்ணபிரான் றிருவடிந்தாமரைக டுணை.

ஸ்ரீ

விஷ்ணுமயம்.

க00 - வது அங்கிசமன் டிபிகன்

# வதைப்படலம்.

கராவினைச்செற்றுக்கைம்மாக்களித்திடக்கதியையீந்து
மராமரமேழுமெய்துவாலியையவதைத்தபின்ன
ரராவினினடித்துவெண்ணெய்க்காடியேகுரவைகோத்த
பராபரமானசோதிபாதமேபற்றுநெஞ்சே. (க)

சாலுவதேசந்தன்னைத்தனிக்குடைநிழலினோம்பும்
வேலொளிர்கரத்தான்மிக்கவிறலுடைப்பிரமதத்த
னீலகண்டனைத்தாளுக்கிநெடுந்தவஞ்செய்துபெற்ற
ளுலமேநிகர்வாரங்கிசமனிடிபிகராவோரை. (உ)

மித்திரசகனுநாமவேதனோர்புரோகிதன்ற
னத்தியிற்றுயில்வோன்றன்னைநோக்கியேயளவிலாண்டு
சுத்தநற்றவந்தான்செய்யத்தோன்றிமாலீயப்பெற்ற
புத்திரன்செனுர்த்தனன்றன்புகழுடையொருவனுனன். (ங)

அங்கிரோரங்கிசன்பின்னோனருந்தவஞ்செய்காலைத்
திங்கள்வேணியன்றானெய்தித்திவ்வியாத்திரங்களீந்து
பிங்கிருடிகப்பேர்கும்போதரனெனும்பேரதாய
பொங்குவெஞ்சினப்போர்செய்யும்பூதங்களிரண்டுமீந்தான். (௪)

உருத்திரன்வரந்தானீயவுருத்திராக்கம்வெண்ணீறு
திருத்தமாயணியுமெய்யர்செனார்த்தனமறையோன்றன்னோ
டருத்தியாய்மிருகவேட்டையங்கிசடிபிகரெய்திப்
பெருத்தவெங்கரிகளோடேயரிகளைப்பிடித்துமீண்டார். (௫)

மிருகவேட்டையினையாடிமீண்டவர்வெயிலால்வாடிப்
பொருமுநீரிலங்குகின்றபுட்கரச்சரசினெய்திப்
பரவுநீர்படிந்துதூயபரிதிவானுச்சிக்கேக
விருகையாலொருக்கால்வேதத்தருக்கியமீந்தபின்னர். (௬)

சீருறுகாசிபன்றான்றீர்க்கசத்திரயாகஞ்செ
யேரினைநோக்கியேகுமங்கிசன்டிபிகனென்போர்
பாரினெண்டுருவாசன்செய்தவத்தினைப்பார்த்துநக்குக்
கோரவெஞ்சொல்லரானோரிவையிவைகூறலுற்றார். (௭)

சிகையொடுமுந்நூலில்லாய்செய்தவமேதுபாரி
னிகழ்வலாற்கதியீவாராரியம்புநீகெடுவதன்றிச்
சகலலோகத்தின்வாழ்ந்தவரையுங்கெடுத்தாயென்று
புகறலும்புரோகிதன்சேய்பொறுக்கலாதுரைக்கலுற்றான். (௮)

ஏதியரையிகழுநீசர்குலங்களோடிறுவரென்று
சதுமறையறையுமென்றுசாற்றுவர்சான்றோரென்றே
மதியுடைச்செனார்த்தனன்றானுரைத்திடமதியாராகி
விதிவெருவிடவேயந்தமுனிவனைவெகுண்டுவைதார். (௯)

வைதுநற்றுருவாசன்றன்மருங்குறுமுனிவர்தங்கள்
கையினிற்கமண்டலங்களுடைந்திடக்கன்மேன்மோதித்
துய்யகோவணங்களெல்லாந்துணியுறப்பறித்துப்பீறி
வெய்யவரிரதமீதின்மேவினார்நகரிதன்னின். (௧௦)

மறுவறுதுருவாசன்றான்டிபிகனங்கிசமன்னர்க்குக்
கறைமிடற்றரன்றானீந்தவரமெலாங்கருத்தினுள்கி
யுறியுறுகலசமெல்லாமுடைத்திழுதுண்டான்முன்ன
ரறைவனென்றெழுந்துபோனானருந்தவரெல்லாஞ்சூழ. (௧௧)

ஏதிகளையாயிரம்பேரிருமருங்கிடையினெய்தக்
கதுமெனநடந்துகாடுவரையெலாங்கழிந்துபின்ன
ருதகிருழகழதாகவோங்குமாதுவரையென்னும்
பதியினினெய்தினாற்பருவரற்றுருவாசன்றான். (௧௨)

துன்னியமணிகள்கோடிதுலங்குமாமண்டபத்தின்
பொன்னவிர்பீடமீதிற்புயலெனவிளங்குமாயோன்
மன்னவர்மறையோர்சூழவிருத்தலும்வாயில்காப்போ
ரின்னலிற்றுருவாசன்றானெய்தியதியம்பினாரால். (௧௩)

இதகல்வாயில்காப்போருரைத்திடச்சீதரன்றான்
மாதவர்திரளையெல்லாம்வரவிடுவீரென்றோதப்
போதனெண்முனிவரெல்லாமிருமருங்குறவேபோந்த
வேதமிறுருவாசன்றனிணையடியிறைஞ்சினானால். (கச)

வாசுதேவன்றானெய்தியிறைஞ்சலுமறைகளாலே
யாசிகள்பகர்ந்ததூயவருந்தவர்தங்கட்கெல்லா
நேசமோடருக்கியங்களளித்தம்பொன்னிறையவிஞ்சு
மாசனமீதலோடுமனைவருமமர்ந்தாரன்றே. (கரு)

ஏறிறவடர்த்தகோமானெழின்முனிதன்னைநோக்கி
மாறிலெண்டவர்களோடும்வந்திடுஞ்செயலேதென்னச்
சீறியமனத்தன்வேர்வுசெறிந்திடுமெய்யன்றீயு
மூறியநயனனாயமாதவனுரைக்கலுற்றான். (கசு)

வேறறிந்தவர்க்குவேறோரிலையெனவெருட்டிக்காட்டும்
பேரெனவறியாதார்போற்பேசினாய்பரவையோவிப்
பாரினிற்பாரநீக்கப்பிறந்துபன்மாயஞ்செய்யு
மாரியவுன்றன்செய்கையறிவனான்மயக்கலென்றான். (கஎ)

கொடுவினைகளைந்தமாறின்முனியிவைகூறலோடும்
படமுடையரவின்மீதுநடித்தவனகைப்பப்பாரி
னுடைபடுங்கமண்டலத்தினோடுகோவணங்களெல்லாம்
படியின்மேற்பரமன்முன்னர்வைத்தெலாம்பகர்ந்தாரன்றே. (கஅ)

அருமறையவரைநோக்கியங்கிசன்டிபிகன்றன்னை
யெரிமுகக்கணையினாலேயிமைப்பின்முன்வதைத்தேயுங்கள்
பருவரலொளிப்பனென்னாப்பரனிவைமொழியக்கேட்டாண்
டருவினைதுடைத்தோராசியியம்பியேயாடினாரால். (ககூ)

ஏருறுவெண்பட்டாடைகிழித்துக்கௌபீனம்யார்க்குஞ்
சீருறவளித்துச்செம்பொன்கமண்டலஞ்சிறப்பவீந்து
நீரிவணிருமினென்றுநிகழ்த்திநெய்பாலோடன்ன
மாரியனவரையெல்லாமருந்துவித்தமருநாளின். (உ0)

அருமறையவரையெல்லாம்வைதவர்கௌபீனங்கள்
கரமுறப்பறித்துப்பீறிக்கமண்டலங்கண்மேன்மோதி
விரைவினினகரியெய்திவிறலுடையங்கிசன்றான்
றெரிவுறமறையையோதுஞ்செனார்த்தனனோடுஞ்சொல்வான். (உக)

மன்னவர்தம்மிலென்பாற்றிறைகொண்டுவாராதாரைச்
சின்னபின்னங்களாகச்செருக்களத்தவியநூறி
யென்னுடைத்தந்தைக்கிங்ஙனிராயசூயந்தான்செய்ய
வுன்னினேனென்றலோடுஞ்செனார்த்தனனுரைக்கலுற்றான். (உஉ)

வீடுமன்விதுரன்கன்னன்விறலுறுசேதிராச
னேடவிழ்தொடைசேர்தந்தவக்கிரன்மகதனென்போர்
வாடவேசமர்செய்வாசுதேவன்சாத்தகிபால்வண்ண
னோடைமால்யானையூருமுதிட்டிரன்றன்னோடைவர். (உங)

மத்திரன்சோழன்றென்னன்வலிமிகுகீசகன்றா
னித்தனைபேரும்வீரவதிரதக்குழாங்களாக
வித்தலத்திருப்பநீதானிராசசூயத்தையெங்ஙன்
வித்தகவுன்றந்தைக்குச்செயுந்திறல்விளம்புகென்றான். (௨௪)

என்றிவையுரைப்பக்கண்களொளிரியுறச்சீற்றமெய்திக்
கொன்றையையணியுமீசன்கொடுத்தவத்திரத்தொன்றனை
வென்றெனையளித்ததந்தைக்கிராசசூயத்தின்வேள்வி
குன்றுதலிலாமற்செய்வித்திடுவென்யானென்றுகூறும். (௨௫)

நீயிதற்கெதிர்மாற்றங்கணிகழ்த்தினையாகிலுன்றன்
வாயினைக்கிழிப்பனீபோய்வாசுதேவன்பாலெய்தி
மீயுயர்வரைகள்போலவிழுமியலவணங்கொண்டே
யேயெனும்முன்னம்வாவென்றியம்புகென்றேவினானால். (௨௬)

சீரிலான்மொழிந்தமாற்றஞ்செவியினாராசம்போன்று
நேரிலாமறையோனின்றுநீங்கியேநெறியிலாதா
னாரியன்பகழியாலேயிறப்பனென்றகத்துட்கொண்டே
யேருறுசிவிகையின்மேலேகினான்மறையோர்சூழ. (௨௭)

துன்மதியவர்களோடுபேசுதலிருத்தலொட்ட
னன்மதியவர்கட்காகாநாணந்தநவைகளூர
மன்மதன்றந்தையானவெந்தையின்வடிவுகாணப்
பொன்மதிட்டுவரைதன்னிற்போவதேபுந்தியென்றான். (௨௮)

தீயவன்விடுத்ததூதனென்றெனையிகழ்ச்சிசெய்யான்
மாயவனுயிர்கட்டோறும்வைகியசெயலினாலே
தூயதன்னடியார்க்கென்றுமடியர்கடொண்டனென்று
சீயமாயவுணன்றன்னைச்செற்றவன்காப்பானென்றான். (௨௯)

இவையெலாமறைந்துமாயோன்செயனினைந்திருகணீர்
ளவனியினனுகவன்பின்செனார்த்தனனளக்கர்சூழுந்
துவரையினெய்திவீதிதுலங்குமண்டபங்களோங்கு
முவமையில்சிகரநோக்கியுவந்தரிகோயிற்புக்கான். (௩௦)

வித்துருமங்கணீலம்விழுமியமணிகளெல்லாம்
பத்திசெய்தூண்களெங்கும்பரந்தமண்டபத்திலேதான்
றத்தைநேர்மொழியார்வீசுசாமரையியங்கவுங்கா
ருத்தவனுடனேமன்னருகந்திடவிருந்தான்மாயோன். (௩௧)

தூயனாந்துருவாசனோடருந்தவர்தொலைவிலாதார்
நேயமோடெய்தியெங்குநிறைந்தருகிருக்கும்வேலை
வாயிலோரங்கிசன்றன்மறையவன்வந்தானென்ன
வோயுமாகரியைக்காத்தானழைப்பிரென்றுரைத்தான்மன்னோ. (௩௨)

தந்தியைக்களைந்தவேந்தன்சாற்றலும்வாயிலாள
ரந்தணவருதியென்றேயுரைத்திடவவனண்டெய்திச்
சுந்தரவடிவினானையிருகணானோக்கித்தூய
சிந்துவினமுதையுண்டோன்செயலெனக்களித்தானன்றே. (௩௩)

என்புடனுருகியாசிரியம்பியெதிர்வந்துற்ற
வன்பனையிருத்தியென்னவச்சுதனறையவாங்கே
வன்பகன்மறையோன்றானுமிருந்தபின்மாயனோக்கி
யென்புகுந்ததுநீயிங்ஙனியம்புகென்றிசைத்தானன்றே. (கச)

பூரனுடனுணித்தகோமான்மொழிந்திடமறையோன்சொல்வான்
றரணியின்விஞ்சுகின்றசாலுவதேசமாள்வோன்
பிரமதத்தன்றன்சேயர்பிஞ்ஞகன்வரங்களீய
வரிகளும்வெருவும்வெய்யவங்கிசனவன்பின்னோனும். (கரு)

வெந்திறலதனுன்மிக்கவிராயசூயத்தின்வேள்வி
தந்தைக்குச்செய்விப்பாராய்ச்சதுமுகன்றன்னைத்தூய
வுந்தியிற்படைத்தசோதியுப்புயர்வரைபோலுன்னைத்
தந்துமுன்வைக்கவென்றேசாற்றிடச்சொன்னாரென்றான். (கசு)

வெங்கணங்கிசன்றான்மிக்கவிராசசூயத்தின்வேள்வி
சங்கரன்வரத்தினாலேதந்தைக்குச்செய்விப்பானாய்ச்
சிங்கவிலரியையிற்றகிறையிடச்சொல்கைநன்றென்
றங்கையோடங்கைதாக்கியரசர்கணகைத்தாரன்றே. (கஎ)

யாதவர்நகைவந்தெய்தவிராயசூயத்தின்வேள்வி
தாதைக்குச்செய்விப்பானாய்த்தருக்குமங்கிசமன்றன்னைப்
போதனேர்முனிவர்வைகும்புட்கரசரசினூனைக்
காதுவனெய்தியீதைக்கழறுகென்றுரைத்தான்மாயன். (கஅ)

தூயசாத்தகியைநோக்கித்துலங்கியமறையோன்றன்னோ
டேயெனுமுன்னரெய்தியியல்பிலங்கிசமன்றன்னைத்
தீயவசெருக்களத்திற்செருச்செயவருதியென்றே
மீயுயர்துவசத்தேரின்மீள்குதிகடிதினென்றான். (கக)

மாதவன்மொழியைக்கேட்டுச்சாத்தகிவையமீதில்
வேதியன்றன்னோடெய்திவிழுப்பமிலங்கிசன்முன்
போதலுமுனிந்துநோக்கிப்பொதுவர்தங்குலத்தினைய
யாதவனெங்கேயீந்தலவணமெங்கேசொல்லென்றான். (உ0)

திறையிடுலவணத்தோடுந்தேவகிசுதனிலாமன்
மறையவமீடியோவென்றுரைத்துவாய்மடித்தேயென்றன்
விறலெலாமறிந்தென்முன்னர்மேவியவிவனார்வல்லை
யறைதியென்றுரைத்தலோடுமச்சுதனனுசன்சொல்வான். (உக)

அப்பினில்மருமையனனுசன்யானங்கிசாகே
ளுப்பினைவிருப்புற்றாயேவுயரருந்தவத்தோர்வேதஞ்
செப்பியேவேள்விசெய்யும்புட்கரசரசிற்சேர்ந்து
நப்பினைகேள்வன்றன்னால்மடிதியென்றுரைத்துநக்கான். (உஉ)

மாதவனனுசன்கூறவடவைபோல்விழித்துநோக்கித்
தீதுறுமனத்தனுன்னைவதைப்பனீசெப்பவந்த
தூதனுய்ந்தையானேதூயபுட்கரத்தினெய்தி
யாதவர்குலத்தையெல்லாமிமைப்பின்முன்கொல்வனென்றான். (உ௩)

தீயவனுரைப்பக்கேட்டுச்சினியருள்செம்மனோக்கி
நீயுமுன்கிளைஞரோடுகெடியமால்வாளியாலே
மாயவேபுட்கரத்தின்வருதியென்றுரைத்துமீண்டு
தூயவச்சுதன்றன்முன்னரிவையெலாஞ்சொன்னானன்றே. (சச)

தீதுறுமங்கிசன்முன்செப்பியவுரையைக்கேட்டு
மாதவத்துருவாசன்றன்வதனத்தைநோக்கிமாயன்
வேதனையுமைச்செய்தோனைவீட்டுவெண்புட்கரத்தின்
போதுமினென்றலோடுமகிழ்ந்தவர்போயினாரால். (சரு)

முனிவர்கள்போயபின்னர்முராரிதன்முன்னோன்றந்தை
சினிசுதன்கிருதவன்மாசீருறுகுவசன்சாங்கன்
றுனியகல்கிகடன்கஞ்சன்முதையார்தூயமன்ன
னனிகமும்புடைசூழ்ந்தேகப்புட்கரத்தடைந்தாரன்றே. (சசு)

துந்துமிமுரசஞ்சங்கந்தூயகாகளஞ்சின்னங்கள்
சிந்துவினரவம்போலத்திசைதொறுமிரட்டல்செய்ய
வந்தரத்தமரராடியாடகமலர்கவே
விந்திரைகொழுநனெய்திப்புட்கரத்திருந்தவேலை. (சஎ)

அடல்பொரவருதியென்றேசாத்தகியறைந்துபோகக்
கொடியனங்கிசமனெஞ்சிற்கோபவெங்கொழுந்தீமூள
விடையனுமவனையுஞ்சேர்யாதவர்குலத்தினோடு
கடிதினிற்கோறல்செய்யக்கடும்படையெழுகவென்றான். (சஅ)

தீயவனுரைக்கப்பேரிமுரசொலிதிசைகள்சேரப்
பாயயமூன்றுகோடிபருப்பதநிகராய்த்தோன்றிக்
காயுமேழயுதமானகரிபத்தக்குரோணிகாலாள்
மீயுயர்கனகத்தேர்நூறாயிரமிடைந்தமாதோ. (சகூ)

விசக்கிராசுரனுந்தீயவிடும்பராக்கதனும்வெய்ய
நிசிக்குளேசரிப்போரெண்ணிருதர்தானவர்கள்சூழத்
திசைக்கணினுறுவோரோடுந்தேவர்களிரியவாசைக்
கசக்குலம்போலவீரர்கலித்திடவெழுந்தாரன்றே. (ருo)

ஏறுறுமிறைவனீயவங்கிசன்களிக்கவெய்து
மாறில்பிங்கிருடிகும்போதாரிவர்வரையாமெய்யி
னீறணிந்துருத்திராக்கமணியினைநிறையப்பூண்டு
சீறியமனத்தராகிச்சிலைகரத்துறவேவந்தார். (ருக)

முரசொலிகறங்கப்பேரிமுழங்கிடவிரதமீதி
னரசர்கள்குழாங்கள்சூழவங்கிசனனுசனோடுந்
திரைசெறியளக்கர்போலத்திரண்டெழுசேனையார்ப்ப
வரிசைசேர்மகுடமின்னவானவர்வெருவவந்தான். (ருஉ)

கட்கம்வேல்முசுண்டிபாசங்கப்பணமுசலமீட்டி
முட்கணைபலவுமேந்திமுடங்குளைபோலத்தேவ
ருட்குலைவெய்தவீரருவரிபோல்வாய்விட்டார்ப்பப்
புட்கரசரசின்வந்தானங்கிசன்பொறையிலாதான். (ருங)

மாதவர்வெருவத்திக்குமறைந்திடுஞ்சேனையார்ப்ப
வாதவன்றோற்றம்போலவங்கிசனெய்தலோடும்
யாதவர்சேனைவெள்ளமெதிர்ந்திரதங்கள்பாய்மா
போதகமிடையக்கண்கள்பொரியுகத்தாக்கினாரால். (ருச)

பரியினமயங்களோடும்பாய்ந்திடப்பருப்பதம்போற்
கரியினமிபங்களோடுகாதினகனகத்தேர்மே
லரியினம்போலவீரரடைந்துவெஞ்சிலைகள்கோலிப்
பரவைவான்றிசைகளெல்லாமறைந்திடப்பகழிபெய்தார். (ருரு)

வேலினாற்றோலின்கைகால்விழுந்திடத்துணிசெய்தார்த்துங்
காலைநேர்பரியையெல்லாங்கதையினால்வதைத்தும்வில்லின்
கோலினாலிரதமோடுகொடிவிழவலவன்மாள
வாலமாவிடமேபோலவடர்த்தனரரசரம்மா. (ருசு)

வரிசிலைவளையவாங்கிவான்றிசைமறையவாளி
சொரியவேவிரதங்கைமாத்துரகம்வீழ்ந்துதிரவெள்ளந்
திரையுறுநதிபோலோடச்சிரமுரந்தோள்கைகால்க
ளரைதுணிந்தரசர்வீழவாடினகவந்தமம்மா. (ருஎ)

போதகநிரைகள்பாய்மாப்புவியிடைமடியத்தண்டான்
மோதியேயிரதவீரர்முடித்தலைபுரளத்திங்கட்
பாதிபோலொளிருந்தூயபகழிகடூவியார்த்தே
யாதவர்முனிந்துதாக்கவிரிந்தவங்கிசன்றன்சேனை. (ருஅ)

அங்கிசமனன்றன்சேனையாசைதோறிரியக்கண்டு
வெங்கணன்கடுவையொப்பான்விசக்கிராசுரனும்வீரன்
சங்கரன்றோற்றம்போலச்சாதுரங்கமுமுன்சூழ
மங்குல்கள்பொழிவபோலவாளிகடூவியார்த்தான். (ருகூ)

விசக்கிராசுரன்கைவில்லால்விசிகமாமழைபெய்தார்ப்பக்
கசக்குலமிவுளிவீரர்கணக்கிலாவரசர்மாளத்
தசைக்குவைவரைபோலோங்கத்தாவியேயலகைமூளை
பொசித்திடக்கவந்தமாடக்குருதிநீர்புரண்டபார்மேல். (சூ0)

தீயவன்முனிவினோடுஞ்சிலையினால்விடுத்தவாளி
பாயவெங்கரிமாமாளநிருபர்கள்படியினோட
மாயவன்றனுவைநாரிதன்னினால்வளையவாங்கி
யேயெனுமுன்னர்வாளியெண்டிசைமறையவெய்தான். (சூக)

மால்விடுவிசிகந்தன்னால்வாளெயிற்றசுரரெல்லாங்
காலுரங்கரந்தோள்சென்னிகடிதடந்துணிந்துசாயத்
தோலினம்வரைபோல்வீழத்துரகந்தாடுடையுமற்று
ஞாலமேமற்புரளவெண்ணில்கவந்தங்கணடித்தவன்றே. (சூஉ)

மானவனிமைப்பின்முன்னம்வரிசிலைவளையவாங்கித்
தானவர்குலங்கள்மாளச்சரம்பலதூவக்கண்டே
யீனமில்மணித்தேர்மீதினிலங்கியவிசக்கிரன்றா
னானையன்றுரித்தானஞ்சவழற்கணைதூவியார்த்தான். (சூ௩)

மறனுறுமகரனெய்தவடிக்கணைமாரிதன்னை
யிறையவன்விசிகத்தாலேயறுத்தெழுபத்துமூன்று
பிறையெனவயங்கும்வாளிபெய்திடவவுணன்மார்பி
னுறவழிகுருதிபாரிமேனோடினதிபோலெங்கும். (௬௪)

உரமிசையுதிரவெள்ளமோடலும்விசக்கிரன்று
னெரியுறுநயனனாகியிந்திரன்படையைவாங்கி
யரிதிருமார்பினுழைவழுத்தலுமருணைநீத்தம்
பெருகலுமவுணர்கோமான்பின்றுகனஞ்சவார்த்தான். (௬௫)

நிலனுறவுரத்தின்வீழுங்குருதிநீர்நிறைபமாயோன்
சிலையினைக்குனியவாங்கிச்சிலீமுகம்விடுத்துத்தீயோன்
வலவனொடிரதம்பாய்மாமடியவிற்றுண்டமாக்கி
யுலகொடெண்டிசையுமஞ்சவூதினனுயர்வெண்சங்கம். (௬௬)

வரிநெடுஞ்சிலையுமற்றுவலவனோடிரதம்வீழத்
தரையினினிழிந்துவெய்யோன்றமனியப்பொருப்பைநேராங்
கிரியெறிந்தார்த்தலோடுங்கேசவனதனைப்பற்றி
யுரமிசையெறிதலோடும்விசக்கிரனுதிரங்கான்றான். (௬௭)

காலனைநிகர்க்கும்வெய்யவிசக்கிரனுதிரங்கான்று
ஞாலமேலயர்ந்துவீழ்ந்தாண்டெழுந்துவானடுங்கவாங்கோர்
சாலம்வேருடனேவாங்கித்தடக்கையாற்சுழற்றிவிட்டான்
மாலெழுகணையானூறுதுணிபடவறுத்தான்மன்னோ. (௬௮)

காயும்வெங்கனற்போனெஞ்சங்கதழுறக்கதைகொண்டார்த்து
மாயவன்மீதினோடிவிசக்கிரன்வருதலோடுந்
தூயவன்வரிவிற்கோலியழற்படைதொடுத்துவிட்டான்
தீயவன்சிரத்தைத்தள்ளிச்சென்றது[illegible]ார்ப்ப. (௬௯)

அந்தகன்முதலோரஞ்சவடர்ந்திடும்விசக்கிரன்று
ணிந்திரைகொழுநனம்பாலிறந்திடவிமையோரெல்லாந்
துந்துமிமுழங்கப்பொற்பூச்சொரிந்திடச்சுரர்கள்கோனுங்
கந்தமார்கமலன்றானுங்களிப்புடன்றுதித்தாரன்றே. (௭0)

வேறு.

காலனைநிகர்த்திடுவிசக்கிரன்மடிந்தசெயல்கண்டுகனலா
மாலமெனவேடிபிகன்முந்தியிரதத்தின்மிசையாடகவரை
போலவரிவெஞ்சிலைவளைத்துநெடுவாளிகள்பொழிந்துவரவே
மாலனுசனானவுயர்சாத்தகிதடுத்தனன்வடிக்கணைகளால். (௭௧)

மாயனனுசன்கணைவழங்குதலுமேடிபிகமன்வரிவிலா
லேயெனுமுனாசுகமையாயிரம்விடுத்திடவெழிற்சினியருள்
சேயின்மெய்யழுந்துறவலர்ந்ததொருகிஞ்சுகமலர்ச்செயல்பெறக்
காயநிறைசெங்குருதியோடியதுகாசினியின்மீதருவிபோல். (௭௨)

வெஞ்சினமிகுத்தடிபிகன்விடுவடிக்கணைகண்மெய்யினுறவெங்
கஞ்சனைவதைத்தமனனுக்கிளையகாவலன்மனங்கதழுற
விஞ்செழிலிபெய்தவெனவேவிசிகமெண்ணிலவிடுத்தெதிரேயும்
வஞ்சகனெடுஞ்சிலையறுத்துலகமஞ்சவளையூதினனரோ. (௭௩)

மற்றுமொருவெஞ்சிலையெடுத்துடிபிகன்கணைவழங்குதலுமே
வெற்றியுயருஞ்சினிசுதன்முனிவினேடுவிசிகங்களவன்வில்
விற்றிடவிடுத்திடவிமைப்பின்முனர்வெய்யவனெடுத்தொருகையாற்
பற்றியெய்தனுக்களறுநூறுமுறியப்பகழியேவினனரோ. (எசு)

முற்குணமலிந்திடுமுராரியனுசன்முனிவினேடுடிபிகன்
விற்களறுநூறுதுணிசெய்தவிறல்கண்டுவிபுதத்திரடுதி
சொற்கள்கொடுபூமழைசொரிந்தனர்களங்கிசமனுக்கிளையனும்
பிற்குணனிலத்தினுயர்வாள்கொடுபிறங்கவெனவந்தனனரோ. (எரு)

வீறிவருகாவெனவடர்ந்துவருவெய்யவனெடுத்தசுடர்வா
ளூறுதுணியாய்விழநொடிக்குமுனேம்வாளிகள்விடுத்தரிபினே
னூறருகுருதிப்புனல்விழக்கணையுரத்திடையழுந்தடிபிகன்
பாறவதுகண்டசுரர்பன்மலர்கவீனர்கள்பார்நிறையவே. (எசு)

அங்கிவைநிகர்த்தடிபிகன்னிடையநோக்கியவரக்கர்பெருமான்
வெங்கனல்பிறங்குநயனன்விறலிடும்பனிருதக்குழுவுடன்
சங்கினொடுதுந்துமிமுழங்கவுயர்தேரின்மிசைசாரும்வரைபோன்
மங்குலிடியஞ்சவகல்வாயொலியுறக்கடிதுவந்தனனரோ. (எஎ)

வேறு

விக்கிரமத்தின்மிக்கவிடும்பன்வரலோடு
முக்கிரசேனனுடன்வசுதேவனுயர்தேரிற்
புக்கெதிர்வந்தேபொருதடர்நிருதர்திரள்மாளத்
திக்கயமஞ்சச்சிலையொலியுறவெங்கணைபெய்தார். (எஅ)

விருத்தரின்முந்துமுக்கிரசேனன்மிகுசூரன்
திருத்தமுறுந்தேவகிகணவன்றுன்சமர்செய்யு
மருத்தியுறப்போராகுளியனையவழல்வாளி
பெருத்தவிபத்தோடிவுளிகள்மடியப்பெய்தார்த்தான். (எகூ)

நீடியசிலையாவிருவரும்வாளிநிலன்வானம்
மூடியமுகில்போற்பெய்திடமூளுஞ்சினநாகங்
கோடகம்வீரர்கோடியின்மேலுமடியக்கண்
டோடினர்நிருதருவகைகொளரசர்திரளார்ப்ப. (அ0)

நிருதர்கள்பாறக்கண்டவிடும்பன்நிலன்மீதின்
வருதனிமேருபொருவவடர்ந்தேவலன்விஞ்சப்
பொருதிறலரசர்புகரிபவினமாவிரதங்க
டரைதனின்மடியக்கைகொடறைந்தான்றழல்மண்ட. (அக)

கரியையெடுத்தேபரியைவதைத்தான்கனகத்தே
ரிருநிலமிசையிற்சிதறவடித்தானிருகையா
னரர்களைவாரித்தின்றுசெருக்கிநடிபோலப்
பெருகியகுருதிபருகினனகலும்பிலவாயால். (அஉ)

இப்பரினிறையுமிவுளிகணரர்நீவிபமெல்லா
மும்பர்கள்வெருவத்தின்றுகுடித்தானுதிரங்க
ளம்பரமெனவேயடரரிகளைவாயிடுவீரக்
கும்பகனன்போலெய்துமிடும்பக்கொடியோனே. (அங)

மருவமர்தொடைதுடுக்கிரசேனன்வசுதேவ
னிருவர்கள்சிலையும்பற்றியிறுத்தேயென்வாயின்
னரர்புகுவீரொன்பசிகெடவென்றேநலனில்லா
னுரைசெயவரிகாணியரெனவஞ்சியுலைவுற்றார். (அச)

சிலையிறவோட்டேரினிழிந்தேபெயர்வாரை
நலனிலிடிம்பன்பற்றிடுமன்றாரணன்முன்றோ
னிலகியகையாவிடியெனவவன்மார்புறவெற்ற
நிலமிசைவீழ்ந்தேதிருபர்களார்ப்பவயர்வுற்றான். (அரு)

வாயுறுகுருதிமண்ணிடைநிறையவயர்வுற்றே
யேயெனுமுன்னந்தேறியெதிர்ந்தானிருகாலத்
தூயவிராமன்பற்றியெறிந்தான்சுரர்போற்றத்
தீயவன்மாண்டான்காவலதுநெறிபோய்ச்சிதைவுற்றே. (அசு)

அடும்பழவினையையொத்துலகத்தையடர்கின்ற
விடும்பனிறந்தநற்செயல்கண்டேவிமையோர்கள்
கடம்பொழியயிராவதவிலைமயுடனுங்கனகப்பூ
விடம்பொழியரவினுருவொழியரசன்மேல்விட்டார். (அஎ)

வேறு.

வெங்கணனிடும்பன்றியவிசக்கிரன்மடியக்கண்டு
சங்கரன்முனிவையொத்ததழற்பொறிநயனன்றேரி
னங்கிகேரங்கிசன்றனைகளிரதம்வீரர்
எங்கணுநிறையநந்தானிணையிலாவீரரார்ப்ப. (அஅ)

ஆலமாவிடமேபோலவங்கிசனடர்தல்கண்டு
காலகேசனாம்வீரன்றமணியவிரதத்தேறிக்
கோலமார்சிலையின்வாளிகொண்டல்போற்பொழியத்தேர்க
டோல்கள்மாமடியவீரர்துணிந்தனர்குருதியோட. (அகூ)

கன்னுடையனிகமாண்டுசனைபடவெருவினோர்கள்
வெந்திடக்கண்டுபொங்கிவிடத்தைநேரங்கிசமன்
னன்னமார்வண்ணன்மார்பினழுந்துறநூறுவாளி
வன்னிபோன்மடப்பவெய்யமதிதிறனுதிரங்கான்றான். (கூ0)

சக்கரந்தரித்ததாமோதரன்முனோன்குருதிவாயாற்
கக்கினன்கனன்றுபொங்கிக்கடுஞ்சிலைகையின்வாங்கி
யுக்கிரமிகுத்தவேழாயிரங்கணையுலகமஞ்சக்
கொக்கரித்தெதிர்த்தவெய்யகொடியவனுரத்தினெய்தான். (கூக)

மதிவண்ணன்சரங்கள்பாயமதியிலங்கிசன்றன்மார்பி
னுதிரநீர்பெருகலோடுமுளங்கனன்றழனேர்வாளி
கதுமெனவிடுத்திராமன்கடுஞ்சிலைதுணித்துத்திண்டேர்
சிதைவுறவலவன்மாளச்சிலீமுகம்விடுத்தங்கார்த்தான். (கூஉ)

வலத்திலங்கிசன்றனேவும்வாளியால்வலவன்மாண்டு
நிலத்துறவிரதம்வீழநெடுஞ்சிலைதுணியக்கண்டே
சலத்தினிநிராமநம்பிசழக்கன்றேர்முரிந்துசிந்த
வலத்தினினடித்தங்கார்த்தானசனியாரரவமொத்தே. (கூங)

தேரிறவலவன்மாளச்சினத்துடனங்கிசன்றான்
பாரினிற்குதித்துநீண்டபருமணிக்கதையைப்பற்றி
வாரியினொலிபோல்வாய்விட்டடித்தலுமதியார்வண்ணன்
வீரியவலத்தினாலேவிலக்கினன்விண்ணோர்வாழ்த்த. (கூ௪)

சாரிகைமாறியோங்குந்தமனியவரைகளேலப்
பாரினிற்றிரிந்துவிஞ்சும்பரவையினொலிபோலார்த்துப்
போரினெனண்ணலத்திரோடுமணிக்கதைபுடைத்துத்தாக்கி
வீரியரமர்செய்வேலைவெய்யவன்கடலில்வீழ்ந்தான். (கூ௫)

இரவிபோய்மறைதலோடுமிருவருமுலகமஞ்சப்
பொருசமரொழியத்தூயபுட்கரமிசையினெய்தி
யரிபெருஞ்சேனைசூழவமர்ந்தனனங்கிசம்மன்
சரியிலாத்தேர்மேற்கோவர்த்தனகிரிதன்னைச்சார்ந்தான். (கூ௬)

குடதிசைமறைந்தவெய்யோன்குணதிசையுதயமாகக்
கடகளிறடர்த்தகோமான்கரிபரியிரதஞ்சூழ
வடகிரிபொருவுங்கோவர்த்தனவுயர்வரையைச்சார
வடர்மணித்தேரினேறியங்கிசனார்த்துவந்தான். (கூ௭)

அங்கிநேரங்கிசன்றானார்த்துவந்தடர்தலோடுஞ்
சங்கரன்பணியினாலேசார்ந்தபிங்கிருடியோடும்
வெங்கண்பொங்கனலுங்காலவிறல்செய்கும்போதரன்றான்
மங்குல்கள்பொருவவார்த்துவங்கியங்கறங்கவந்தான். (கூ௮)

## வேறு.

கும்போதரப்பெயரோனுடன்கொடிதாயபிங்கிருடி
வம்பார்தொடையணியுந்திருமாயோன்படைவீரர்
தம்பாதமுரந்தோளாகரம்வேறுறத்தழலா
ரம்பாற்றுணிசெய்தேகயமயமெண்ணிலவதைத்தார், (கூ௯)

கதையாற்பலகணம்போலெழுங்கரிவீழ்ந்திடப்புடைத்தாண்
டிதையாற்கொடியுயர்தேரினமொடிந்தேயுருண்டிடவுங்
குதியாற்பரியினந்தோறசைகுழம்பாயிடமிதித்தே
மதியாற்பொலிசடையோன்விடவரும்பூதர்களார்த்தார். (௧00)

கரிதேர்பரிமடியக்கடுவிடமாமெனவடரு
மிருபூதமும்வெருவக்கடிதிருகாலையும்பற்றி
யரிநூறுசுற்றுறக்கையினிற்சுழற்றாவரன்பதியாம்
வரைமேல்விழவெறிந்தார்த்தனன்வானோர்மலர்சொரிய (௧0௧)

புயலார்நிறத்தரிவந்தெதிர்பூதங்களைக்கரத்தாற்
கயிலாயவெற்புறவீசிடக்கண்டான்கதமுறவே
வயமார்கயநெடுந்தேர்மிசையமரங்கிசன்சிலையாற்
கயமாவினமுயர்வீரர்கண்மடியக்கணைசொரிந்தார். (௧0௨)

உயருக்கிரசேனன்சினிசுதனொண்வசுதேவ
னியல்புற்றிடமலத்தோனுடனெதிர்ந்தார்திரளெல்லா
மயமுற்றிலகுந்தேர்சிலையழியச்சமர்பயிலுஞ்
செயலற்றிரிந்தோடக்கணைதிசையெங்கணுநிறைத்தான். (௧0௩)

சீயம்வரவிரிந்தோடியதிரட்போதகமெனவே
மாயன்றொருவனாநின்றிடமதிநேர்வணன்முதலோ
ரோயென்னாமுனிடைந்தோடிடவிமையோர்களும்வெருவத்
தீயன்வளைமுழக்கிப்பெருஞ்சிலைநாணினையெறிந்தான். (க0ச)

அரிமுற்படவிடமாமெனவடரங்கிசனறைவா
னிருபர்க்கிறையானென்பனுமறிந்தேயிடையாநீ
வெருவித்திறையிடுமுப்பெனக்களித்தேயடிவீழாய்
சரிநிற்குதியென்றேமொழிந்தழல்வாளிகள்பொழிந்தான். (க0ரு)

சினிதன்கூன்றேறூர்ந்திடச்சிலைவான்பிறைகடுப்ப
வனகன்றொருபொடியின்முனரனலம்புகள்சொரிய
விளைபொன்றியவிறலங்கிசன்விடையோனெனமுனியாக்
குனிவில்லினிற்சரமாரிகள்கோத்தேயவைகுறைத்தான். (க0சு)

அனிலன்படைதொடுத்தச்சுதனார்த்தானதுகண்டே
புனலின்படைதொடுத்தேயவைதடுத்தான்பொறையிலமன்
கனமொத்தமெய்யினனுசுகன்படைவிட்டிடக்கனலாஞ்
சினமெற்றியமனனிந்திரன்கணைகொண்டவைசிதைத்தான். (க0எ)

ஈசன்படைதொடுத்தானிறையதுகண்டெரிநயன
னீசன்னரன்படைகொண்டவையறுத்தார்த்தனுநெடியோன்
வாசஞ்செறிமலரோன்படைவிடுத்தார்த்திடவானோர்
கூசும்படியயன்வெம்படைகோத்தங்கிசன்குறைத்தான். (க0அ)

அரிதன்படைதனைவாங்கலுமயனார்திசையனைத்து
மெரியுற்றிடுஞ்செயல்கண்டிரதத்தங்கிசனிழியா
வெருவிப்பெருகுங்காளியமடுவின்னிடையியலார்
வளையொத்துறக்குதித்தான்புவிபரிமாசுணமஞ்ச. (க0கூ)

வேறு.

அரிபடைவாங்கலுநடுங்கியங்கிசன்
வெருவியேயமுனையின்வீழவேநகைத்
தொருநொடியிடுமுனமுகைந்துமற்றவன்
சிரமிசைப்பாய்ந்தனன்சீதரப்பிரான். (கக0)

காளியன்மடுவிற்குப்புற்றுக்காலினான்
மீளியைநிகர்த்திடும்வீரவங்கிசன்
மாளவேசிரம்விழவுழக்கிமாயவன்
கேளிர்கள்களித்திடக்கிளர்ந்துதோன்றினான். (ககக)

நதியினிலங்கிசன்மடியநாரம்விட்
டுதயமாகிரியினிலுச்சிநீடிய
கதிரவனெனமணிமகுடங்காணவே
யெதுகுலமன்னவனிரதமேறினான். (ககஉ)

நீரினுளங்கிசன்மடியநேமியோன்
றேரின்மேற்சிறந்திடத்தேவதுந்துமி
வாரிபோன்முழங்கமாமலர்கவினார்
பாரின்மேலருந்தவர்பாடியாடவே. (ககங)

வெங்கணனாகியடிபிகவிரியன்
சங்கிடக்கையனைச்சார்ந்தென்முன்னவ
னெங்குளான்விளைவினினியம்புவாயெனா
மங்குல்போலொளிருமெய்மாயன்கூறுவான். (௧௧௪)

தமயனைத்தேடியடிபிகசார்ந்துநீ
யமுனையைக்கேளெனவிறைவன்கூறலு
நமனைநேரங்கிசன்றனைநாடியே
கமையிலான்காளியமடுவின்மூழ்கினான். (௧௧௫)

கோடடர்யமுனையிற்குதித்துத்தம்முனைத்
தேடிநீராழுவத்துட்டிரிந்துங்காண்கிலான்
வீடினனாமெனாமேவிக்கூலமே
லாடகன்காலன்முன்னமூதரற்றினான். (௧௧௬)

ஆவலின்வெண்ணெயுண்டடிபட்டேயுழல்
கோவலவென்முனோன்றன்னைக்கொன்றிடும்
பாவிநீயென்றுநாப்பற்றிவாங்கித்தன்
னாவிவானுறப்பறித்தரற்றிமாண்டனன். (௧௧௭)

அங்கிநேரங்கிசனனுசன்மாண்டிட
மங்கிடாதருந்தவர்மகிட்சியெய்தினார்
சங்குதுந்துமியொடுமுழங்கச்சக்கர
னெங்குமன்னவர்தொழவிருந்தவேலையின். (௧௧௮)

நறுந்துழாயணியரிநதியினண்ணிய
தறிந்துயர்நந்தனுமசோதைநங்கையு
நிறைந்தெழுகளிப்பொடுநேயவாயருஞ்
சிறந்திடுமரிவையர்சூழச்சேர்ந்தனர். (௧௧௯)

சிந்தையிற்களிப்புறத்திருவினாயகன்
றந்தைதாயடியினின்முடியைத்தாழ்த்தலு
மைந்தனைமகிழ்வுறத்தழுவியானிறை
யிந்துநேர்சிந்துவின்மகிட்சியெய்தினார். (௧௨0)

நெய்யிழுதுடன்றதிநிறைந்தவோதனந்
துய்யபாலனமலி * சூபமாதியாய்
வையமேழுண்டமாருவயிற்றனா
மையனையருந்துவித்தனளசோதையே. (௧௨௧)

கடிமலர்த்தொடையலையணிந்துகங்கைசே
ரடியன்மெய்யழகுறக்கலவையப்பியே
யுடலெலாம்புளகமுற்றுச்சிமோந்துதன்
மடிமிசையிருத்தித்தான்மகிட்சியெய்தினாள். (௧௨௨)

முன்னுறுதவத்தினான்முடிவிலாததோர்
நன்னலனெய்தியநந்தகோபனை
யிந்நிலத்தவரிமையோர்களேத்தவா
ழன்னையைநோக்கிமாலருளுவானரோ. (௧௨௩)

---

* சூபம்—ஓர் பலகாரம்.

காயும்வெங்கரியினைவதைத்தகாவலன்
றூயராங்குமரர்கள்சுதருங்கூடமூ
வாயிரங்கோடியெண்ணாயிரத்தெணா
ரேய்விலாவீரர்சூழ்ந்துறவிளங்கினான். (௧௩௪)

## அங்கிசமன் டிபிகன் வதைப்படலம் முற்றிற்று.

ஆ படலம் ௨௨-க்குக் கூடிய திருவிருத்தம் ௧௩௫௪.

ஸ்ரீக்ருஷ்ணபிரான் திருவடித் தாமரைகளே துணை.

ஸ்ரீ

விஷ்ணுமயம்.

௧௦௧ - வது உருக்குமி

# திருக்கலியாணப் படலம்.

பெருநாடவஞ்செயவெய்தியபிறைவேணியனருளும்
வரசோதனையறியக்கரமரன்சென்னியில்வைப்பான்
றரைமீதுயருலகெங்கணும்விரைந்தோடியசழக்கன்
விருகாசுரன்மடியும்வகைசெயுமால்புகழ்விரிப்பாம். (௧)

திருவாகியவுருக்குமிணித்தேனின்புறத்திறல்சா
லரிதானருண்மதனார்சுதனநிருத்தமன்றனக்குச்
சரியாகியவடிவாடனைத்தரணிக்கணினாடிப்
பரிவானெறியறியுத்தவனுடனிம்மொழிபகர்வான். (௨)

நீயின்றுருக்குமனார்சுதனருணேரிழையாளைத்
தூயன்னுயரநிருத்தமன்றனக்குத்தரச்சொல்லென்
றேயும்பொதுவோருய்ந்திடவனலுண்டவனோத
வேயென்னுமுனுயருத்தவனிரதம்மிசைபோனான். (௩)

பொன்னார்மதில்சூழ்போசகடம்மாநகர்புகுந்தே
தன்னேரிலுத்தவன்வீடுமகன்சேயிடைசார்ந்தே
யுன்மாமகன்றருமங்கையையுலகேழையுமளந்தோன்
றன்மாமகனருளுஞ்சுதன்றனக்கீகுதியென்றான். (௪)

உயருங்குணமலியுத்தவனுரைகேட்டுருக்குமமன்
னயிலொன்றியகரத்தான்மகனருண்மங்கையையன்பாற்
கயலெண்ணியவிழிநங்கைதன்சுதனாகியகாமன்
னியல்பிற்றருமநிருத்தமன்றனக்கீகுவனென்றான். (௫)

விறல்சேருருக்குமனன்புடன்விளம்புமுறைகேளா
நெறிமேவியவெழினூத்தவனெடுந்தேர்மிசையெய்தி
மறையோருறுதுவராபதிமன்னேடுலவையறையப்
பிறைநேர்நுதற்கமலாசனியுடனேபெரிதுவந்தான். (கூ)

மாயோன்றனைத்தருதேவகிவசுதேவன்மன்மதனுஞ்
சேயோயெரகிருத்தமன்றேர்மீதினில்வரவே
தூயாளுயர்மலர்நாயகியுடன்றேவியர்சூழக்
காயாமலர்வடிவாகியகருணைக்கடல்சென்றான். (எ)

சினிபுத்திரனெறியுத்தவன்றிறல்சாலலமுடையோன்
கனமுற்றிடுமெழினூக்கிரசேனனுடன்களித்தே
முனையுற்றெறதிரடல்வீரர்கண்முகிலொத்தெழுகரிசே
ரணிகத்துடனுயர்தேரினுமயமீதினுஞ்சென்றார். (அ)

வேறு.

காகளங்கொம்புதாரைகம்புதுந்துமிகளெங்கு
மோகரித்தெழுந்துமேகத்திடியெனமுழக்கம்விஞ்ச
நாகந்தாவிவுளிபொற்றேர்நலனுறுதுவசமோங்க
வேகினனெயில்சூழ்போசகடநகர்க்கெழில்கொண்மாயன். (9)

நந்தநுசெங்கைமாயனளினமின்னுடனேதேரின்
வந்தனனென்றுதூதர்கூறிடவிதர்ப்பன்மைந்தன்
சிந்தையின்மகிழ்ந்துபோசகடநகர்தன்னைச்சீரா
மிந்திரநகரியேலவலங்கரித்தெதிர்சென்றானல். (கo)

உருக்குமவரதன்சீராமுருக்குமவாகுப்பேரா
னுருக்குமமாலிவீரவுருக்குமகேசன்விஞ்சு
முருக்குமமனன்போலொத்தவிளைஞர்களுவந்துசூழ
வுருக்குமர்மாயன்றன்னையுரமுறத்தழீஇக்கொண்டாரால். (கக)

முன்னவன்றன்னையன்பான்முளரிமின்னிறைஞ்சலோடு
மன்னரெண்விதர்ப்பன்மைந்தன்மனமகிழ்ந்தெழில்கொண்மாயன்
றன்னொடும்விரைவினெய்தித்தாரகோபுரங்களோங்கும்
பொன்னவிர்மதில்சூழ்போசகடநகர்புகுந்தானன்றே. (கஉ)

ஏருறுகிரீடமோங்கவெழில்கொள்குண்டலமிலங்கத்
தாருறுமுரத்தின்மீதிற்றரளமாவடங்களாட
நேரிலாத்தவளப்பட்டுமருங்கினினிறைந்துசூழ
மாரவேள்வெள்கவந்தான்மற்றவன்சுதன்றேர்மீதின். (கஙு)

தூயதாம்வீதிதோறுந்துலங்கியகலன்வில்வீச
வேயுறுதோளின்மாதர்விரைகுழலலையவெய்தி
மாயனைநோக்கிவேளின்வடிவினைநோக்கிமாரன்
சேயினைநோக்கிப்பாரிற்சித்திரம்போலநின்றார். (கச)

துந்துமியிடக்கைதக்கைதுடிகைமாபேரியார்ப்ப
வந்தமார்மாதரெல்லாமாடகமலர்கவே
விந்திரைமருகியானவிரதிதன்சிறுவன்றேர்மேல்
வந்தியர்திரண்டுவாழ்த்தமறுகிடைச்செல்லும்வேலை. (கரு)

புயல்பிறைவரிவில்வாளிபொற்குமிழாம்பல்வள்ளை
சயிலம்வேய்நந்துகாந்தடயங்குமின்கதலிநள்ளி
யியல்புறுகளினமேந்துமிரணியக்கொம்புபோல
வுயர்மணிக்கும்பவூசலுருக்குமியாடினாளால். (கசு)

குவரிகடிகழக்காதிற்கவின்கொடோடாடமெய்யி
னவமணிக்கலன்கண்மின்னநாமநன்னுதலிற்றோன்றத்
தவளவெண்ணகைவில்வீசத்தாளினூபுரங்களார்ப்ப
வுவமையிலம்பொனூசலுருக்குமியாடினாளால். (கஎ)

ஊசலினிலங்கவாடுமுருக்குமியெழிலைநோக்கித்
தேசுறுமிரதிபெற்றசிறுவனோர்கயத்தின்மீதின்
வீசுவெண்கவரியோங்கவெய்தலும்விரைகொண்மாலை
காசணிகையிற்சிந்தைகளித்தவன்புயத்தினிட்டாள். (கஅ)

சீருறுமலங்கறன்னைத்தேவிதன்புயத்திற்சூட்ட
மாரவேள்சிறுவன்சிந்தைமகிழ்ந்துயர்மணங்கொண்மாலை
நாரிதன்கந்தரத்தினலனுறவணிந்தேயூச
லேறுறமனைவிதன்னோடெய்தியேயாடினானால். (ககூ)

இரணியவூசன்மீதின்மனைவியோடிரதிமைந்தன்
றரணியன்றிடந்தகோவுந்தனையருமகிழவாடி
முரணுறுமரசர்வாழ்த்தமுரசுதுந்துமிகளார்ப்ப
வருணவண்டேண்கள்சேருமண்டபமிசையின்வந்தான். (உ0)

நித்திலவிதானமோங்கநிறைவிளக்கினங்கள்சூழச்
சுத்தநன்மணிகளம்பொன்றுலங்குமாதனத்தின்மீதிற்
சித்தசனருளுமைந்தன்றேவியோடிருக்கும்வேலை
கைத்தலக்கனிபோனூலின்பயனுணர்கற்கன்வந்தான். (உக)

சரதவேதியர்கள்சூழத்தவமுறுகற்கனெய்திச்
சுருதிநூல்வழியினேமந்துடங்கமங்கலநாண்கையா
லிரதிதன்சிறுவன்றேவிகந்தரத்திலங்கச்சாத்திக்
கரதலம்பற்றித்தீயைக்கவினுறவலம்வந்தானால். (உஉ)

ஆலிலைவயிற்றளாயவுருக்குமியம்மிமீதிற்
காலினின்மிதிக்கத்தேவியுடனருந்ததியைக்கண்டு
மாலினையிறைஞ்சிமாரனடியிணைவணங்கித்தூய
சீலமார்வாரிமின்னைப்பணிந்தனனிரதிசெம்மல். (உங)

அறனுறுமக்குரூரனுக்கிரசேனனன்ற
நெறியுறுவசுதேவன்சீர்நிறைந்தசாத்தகிபோர்தன்னிற்
றிறலுடையலாயுதத்தோன்றேவகியுடனுள்ளோரை
மறுவிலாமனைவியோடுமதன்மகன்வணங்கினானால். (உச)

மருதிறவுதைத்தோன்மைந்தன்மகனுருக்குமிதன்னோடு
மிரதியைவணங்கித்தூயவின்னமுதருந்திமேற்கிற்
பரிதிபோய்மறையத்தேவியுடன்பரியங்கமீதிற்
சுரதநூல்வழியின்மோகந்துய்த்தினிதிருந்தானன்றே. (உரு)

ஏதமின்மதனன்மைந்தனெழிலுருக்குமன்சேய்நல்கு
மாதுடனின்பமெய்திமகிழ்ந்தினிதிருக்கும்வேலை
யாதவன்கிரணமோங்கியளக்கரினெய்தத்தூய
வேதியரிருகையாரவருக்கியம்விடுத்தாரன்றே. (௨௬)

ஆதவனுதயமாகவரசர்கள்குழாங்களோடு
மாதவன்முன்னோன்பொன்னின்மண்டபத்திருக்கும்வேலை
நீதியில்கலிங்கன்றன்னோடுருக்குமனெறியிலாத
சூதினிலிராமன்றோற்கவெல்வம்யாமென்றுசொன்னான். (௨௭)

நீதியிலுருக்குமன்றானிகழ்த்திடக்கலிங்கராசன்
சீதரன்முன்னோனென்றுஞ்செருக்களந்தன்னிற்றோற்கான்
பூதலத்தரசர்முன்னும்புந்திப்புள்ளுவத்தினாலே
சூதினைப்பொருதிராமன்றோற்றிடவெல்லென்றானல். (௨௮)

விரகினிற்கலிங்கனிவ்வாறுரைத்திடவிதர்ப்பன்மைந்த
னருவினைதுடரவெய்தியலாயுதன்றன்னைநோக்கித்
தரணியிலரசர்முன்னர்சதுரநெத்தம்பூட்டி
யிருவரும்பொருவோமென்னவிசைந்தனனிராமநம்பி. (௨௯)

இரணியப்பலகைதன்னினெழிலுறச்சாரிபூட்டி
யரசர்கள்குழாங்கள்சூழவிருவருமாடலோடு
முருமெனவதிர்க்குஞ்சொல்லானுருக்குமன்றோற்கவேதான்
விரைவினிற்பொருதுவென்றான்விறலுடையலாயுதத்தோன். (௩௦)

பின்னருஞ்சாரிபூட்டிப்பெருஞ்சினவுருக்குமன்றா
னின்னலிலலத்தோன்றன்னோடிருங்கவறெறிந்தேயாடித்
துன்னியவரசர்முன்னேதோற்றவனிராமன்றன்னை
யென்னுடன்பொருதுதோற்றாயிரண்டுபோதென்றுநக்கான். (௩௧)

தீயவன்மொழியக்கேட்டுச்சிறந்திடுந்தவளவண்ண
னீயெனக்கிருகாற்றோற்றுநிகழ்த்துவதிதுவேதென்ன
மாயும்வெங்காலமெய்திமதியிலாவுருக்குமன்றான்
றூயவன்றன்னைநீயேதோற்றனையென்றுசொல்வான். (௩௨)

அரசரேல்லீருங்கேண்மினலாயுதன்சூதென்னோடும்
பொருதிருதரந்தான்றோற்றும்பொய்யிவண்மொழிந்தானென்றே
யுரைசெயக்கலிங்கராசனுண்மையீதென்றுகூறி
யிருவருங்கரங்கடாக்கியிடியெனநகைத்துச்சொல்வார். (௩௩)

அரசர்முன்சூதிங்காடியலாயுதன்றோற்றானென்று
முரசறையென்றலோடுமுனிந்தரிமுன்னோன்சீறி
யொருகையாற்கபோலந்தன்னிற்புடைத்திடவுருக்குமன்றான்
வரையெனவுருண்டுமாண்டான்மன்னவர்வெருவியோட. (௩௪)

சீலமில்கலிங்கன்றன்னைச்சினத்தலாயுதத்தோன்கையாற்
காலினைப்பற்றிச்சுற்றியெறிதலுங்கலங்கிவீழ்ந்து
ஞாலமன்னவர்களெல்லாநகைத்திடப்பாறலோடு
மாலுடனுற்றதெல்லாமுரைத்தனன்மதியின்வண்ணன். (௩௫)

இன்னல்செய்துருக்குமன்றானிறந்தமையிராமன்சாற்ற
மன்னரெண்வசுதேவன்சேய்மவுனனாயிருக்கும்வேலை
முன்னவனிறந்தமாற்றங்கேட்டுயர்முளரியன்னந்
தன்னிருவிழிநீர்சோரச்சக்கரன்றாளில்வீழ்ந்தாள். (௯௬)

வந்தடிவிழுந்துகண்ணீர்மலியவேயரற்றுகின்ற
விந்திரைதன்னைநோக்கியிருகையாற்றழுவிவாடி
முந்துமூழ்வினையின்செய்கைமூவருங்கடக்கலாற்றார்
சுந்தரியிரங்கலென்னாத்தேற்றினான்சுருதிநாதன். (௯௭)

துடியிடையாளைத்தேற்றிச்சுந்தரன்முன்னோன்கையி
னடியினின்மடிந்தான்றன்னையனலுறவிடுத்தலோடும்
படியினினிறந்தான்மைந்தன்பயத்தொடுதிலத்தாற்செய்யுங்
கடனெலாமறையோர்நூலைக்காட்டவேமுடித்தானன்றே. (௯௮)

படியினின்மடிந்துவீழ்ந்தவுருக்குமன்பயந்தசேய்க்கு
முடியினையிலங்கச்சூட்டிமுராரிதன்றேவியோடுங்
கடிமலர்க்குழலியானவுருக்குமிகாமன்பெற்ற
வடிவுடையவனோடெய்திமணிநெடுந்தேரிற்சென்றாள். (௯௯)

தவமுறுதந்தைதாயர்தேவியர்தனையர்முன்னோ
னவனிபர்நிறைந்துசூழவயமுறுமிரதமீதிற்
கவரிகளசையப்பேரிகாகளஞ்சின்னமார்ப்பத்
துவரையின்விரைவினெய்திச்சுந்தரனிருந்தான்மாதோ. (௱)

## உருக்குமி திருக்கலியாணப்படலம் முற்றிற்று.

ஆக படலம் ௨௯-க்குக்கூடிய திருவிருத்தம் ௧௯௯௪.

ஸ்ரீகண்ணபிரான் றிருவடித்தாமரைகடுணை.



ஸ்ரீ

விஷ்ணுமயம்.

## க௱உ - வது நிருகராஜன்

# மோட்சப்படலம்.

---

பாதவன்றெளியிற்பவங்களோவிநற்
கோதமன்மனைவிமுன்னுருக்கொண்டேகவே
நீதயல்சனகர்கோன்பயந்தசீதையா
மாதினைமணந்தமாயவனைவாழ்த்துவாம். (௧)

நந்தொடுதிகிரியையேந்துநாரணன்
மைந்தர்கடமக்கெலாம்வதுவைசெய்துயர்
சுந்தரஞ்செறிபுதல்வியரைத்தோமிலா
வந்தமாரரசர்க்கீந்தமருநாட்டனின். (௨)

பானுநற்சாம்பன்விற்காமன்பத்திர
னீனமில்சாருசங்கிராமனேருடிவர்
கானகந்தனின்விரைந்தேகிக்கட்கமோ
டேனமானெண்கிலைபிடித்தின்புற்றனர். (௩)

ஆவிதநகாயுதமடர்ந்துபற்றியே
தூவியன்னங்குயிறுலங்கத்தோன்றிய
காவினினெய்திநீர்காண்கிலாதபாழ்ங்
கூவலின்வரைநிகர்கோம்பிகண்டனர். (௪)

தரணியிற்றாழ்ந்திடுஞ்சலமில்கூவலில்
வரைநிகர்கோம்பியைக்கண்டமைந்தர்கள்
விரைவினிற்கயிற்றிடையீக்கிவாங்கவே
வொருசிறிதசைவிலாதிருந்ததோதியே. (௫)

கிரியெனக்கூவலுட்கிடந்தவோதியின்
பெருமையையேகிநற்புதல்வர்பேசிட
வரியிரதத்தின்மேலரசர்சூழ்ந்திட
விரைவினினெய்தியேவியந்துநோக்கினான். (௬)

அரிபுவியின்னிடத்தாழ்ந்தகூவலின்
வரையெனக்கிடந்திடுமோந்திவாலினை
யொருகையாற்பற்றலுமுருவமிக்கதோர்
புருடனாய்விமானமேற்பொலிந்துதோற்றிற்றால். (௭)

துலங்கியகிரீடமுஞ்சிரத்திற்றோன்றநற்
கலன்களும்வயங்கிடக்கனககுண்டல
மிலங்கியேயசைந்திருகாதினேருற
வலங்கலுமார்பிடையலையத்தோன்றினான். (௮)

வரையிவர்கோம்பியாமுருவமாற்றிநற்
புருடனாய்விமானமேற்பொலிந்ததன்மையை
யுரையெனவருள்செயுமுலகுணேமியா
னிருகழல்பணிந்தவனியம்புவானரோ. (கூ)

இரவிதன்குலமனுப்பயந்தவிக்குவா
வருளியநிருகன்யானயோத்தியென்னுமா
புரியினினறநெறிபொருந்தப்பாரெலாந்
திருவுறவுயர்ந்தசெங்கோற்செலுத்தினேன். (கய)

பரவையின்மணலினைப்பரந்தமீனினைத்
திரையினுளெழுந்தசீகரத்தையெண்ணினு
மருமறையவர்க்கலங்காரத்தோடியான்
இருநிலத்தளித்தகோதானமெண்ணொணா. (கக)

மாமறையறைந்திடும்வறியவர்க்கெலாம்
பூமிதானங்களெண்புகரிபங்கவின்
மாமணித்திரவியம்வயங்குகன்னிய
ரேமமோடெண்ணிலாதின்புற்றீந்தனன். (கஉ)

தீதகன்றிடமகாதானஞ்செய்தயா
னேதமிலிருக்கினையியம்புவானுக்கோர்
கோதிலாதுயர்ந்தகோதானமீதலும்
வேதியன்பசுவுடன்மனையின்மேயினான். (கந)

சரியிலாமறையவனகத்திற்சார்ந்தகோ
விரைவினிற்பாறியென்னிரையின்மேவவே
யருவினையேனுணராதவ்வாவினை
யொருதினத்தொருமறையோனுக்கீந்தனன். (கச)

ஏகலிக்கோவைமுன்னீயப்பெற்றிடுந்
தேசுறுமறையவனெங்குந்தேடியே
யாசுறப்பின்னர்யானளிக்கவாங்கிய
மாசறுமறையவன்மனையிற்கண்டனன். (கரு)

சுருதியையறைபவன்கண்டுதூயகோ
நிருகனெற்கீந்தனனென்னநீதியா
ராசனின்றெனக்கிவ்வாவளித்தனன்னென
விருவரும்விரோதமாயென்முனெய்தினார். (கசு)

இருவருநிகழ்ந்தமையியம்பவாயிர
நிரையிதற்கீகுவனென்னநேரிலா
வருமறையவரிசையாதவ்வாவினைச்
சரியிலோர்வேதியன்றனக்கன்றீந்தனன். (கஎ)

சரியிலாக்கோவினைத்தானமீந்திட
விருவருஞ்சினமுறவென்னைநோக்கியே
யரசநீயவனியினாழ்ந்தகூவலிற்
கிரியைநேரோந்தியாய்க்கிடத்தியென்றனர். (கஅ)

இருமறையவர்களன்றியம்புசாபத்தாற்
பருவரையெனப்பயமிலாதகூவலி
னொருகொடியிடுமுனமோந்தியாகியே
மருளுறுவினையினல்வந்துவீழ்ந்தனன். (௧௯)

தீவினையேனையுன்கரத்திற்றீண்டியே
நாவினன்மறையவர்நவின்றசாபமாம்
பாவமாவிருளினைப்பற்றறுத்துயர்
தேவனுக்கினையெனைத்திருவினாயகா. (௨௦)

மையுறுகருங்கலாய்க்கிடந்தவானுதற்
றையறன்பவமெலாந்தாளினீக்கினாய்
கையினின்றென்வினைக்கடலைப்போக்கினாய்ப்
துய்யவவென்றடிதொழுதுசொல்லுவான். (௨௧)

துன்பகன்றுயர்பெருஞ்சோதியெய்தயா
னுன்பெயரோதியுன்னடிமறக்கலா
வன்பெனக்ககல்கிலாதருடிநீயென்றன்
புன்பிறப்பகற்றியபுனிதவென்றனன். (௨௨)

நிருகனிவ்வுரையெலாநிகழ்த்திநேமியோ
னிருசரணங்களினிறைஞ்சிக்கண்ணினீர்
தரையினினிறைந்திடத்தழைத்தவன்பினாற்
சுரர்துதிசெய்திடச்சுவர்க்கமெய்தினான். (௨௩)

இவையெலாமியம்பிவாணிருகனேகலுந்
துவரையினெய்தியசுருதிநாயக
னவனியிற்கினாராமரசர்கேட்கவே
யுவமையிலவர்களுக்குரைக்கலுற்றனன். (௨௪)

திருவுறவுலப்பிலாவேள்விசெய்துயர்
பரிவினாலளப்பின்மாதானம்பண்ணினோ
னிருவருக்குமொருபசுவையீந்திடு
மருவினைதுடரவேயோந்தியாயினான். (௨௫)

ஆதலினளக்கரினரவமன்றுமிழ்
தீதுறுவிடமருந்திடினுந்தீர்க்கலாம்
வேதியர்சொம்முகொள்வார்க்குமீட்கொணா
வேதமாந்தீவினையெய்துமென்றனன். (௨௬)

மறையவர்க்கீந்திடும்புவியையவ்விநோ
னறுபதினாயிரமாண்டமேத்தியக்
கிருமியாயுழலுவானென்றுகீழ்மையி
லறிஞர்கள்சொலுமொழியுண்மையாமென்றான். (௨௭)

என்னுரைதனைமறையிம்புஞ்சொல்லென
வுன்னிநல்வேதியருடைமைகொள்கிலீ
ரன்னவருயரரியயனையானனன்
றன்னினும்பெரியரென்றுணர்ந்துதொழுமின். (௨௮)

அந்தணர்பெரியவரதிமினென்றுயர்
மைந்தர்கட்கிம்மொழியியம்பிமாயவன்
சிந்துவினலைசெறிதுவரைசேர்ந்தவ
ணிந்திரைதன்னுடனிலங்கினனரோ. (உகூ)

எண்ணிரண்டாயிரச்சதத்தெண்மாதரார்
மண்ணிடைமகிழ்ந்தருண்மைந்தர்வாணகு
கண்ணியரெண்ணிலார்தம்மைவேட்கக்கார்
வண்ணனுட்களிப்பொடுமகிழ்ந்துமேயினன். (௩௰)

நிருகராசன்மோட்சப்படலம் முற்றிற்று.

ஆ படலம் உச - க்குக்கூடிய திருவிருத்தம் - கசஉச.

ஸ்ரீகண்ணபிரான் றிருவடித்தாமரைகடுணை.

ஸ்ரீ
விஷ்ணுமயம்.

## க௦௬-வது அத்தியாயம்

# பேர்ப்புப்படலம்.

கும்பன்மாநிகும்பன்வெய்யமகோதரன்கும்பகன்ன
னும்பர்கோன்பகைஞன்றன்னோடுற்றிடுநிருதர்மாள
வம்பினுலிலங்கைவேந்தனருயிர்கொண்டான்பாத
நம்பியார்த்தொழுவர்த்தொண்டர்நவையுறுபிறவிநீங்க. (க)

வித்துருமத்திற்பொன்னின்வயிரத்தின்வெள்ளிதன்னி
னித்திலத்தன்னினுெப்குநிகரில்கோபுரங்கள்சூழ
நத்துபர்முரசம்பேரிகறங்கிடநவையிலாத
வத்திவெம்பரிதேர்மல்கவத்தினபுரத்தையாள்வோன். (உ)

கண்ணிலாநிருபன்பெற்றசுதனெழிற்காமன்போல்வா
னண்ணலார்மடியமோதிநாவிருதிசையும்வென்று
மண்ணெலாமொருகோலோச்சிமதிநிகர்கவிகையோங்க
வெண்ணிலாவரசர்போற்றவிலங்கியவிராசராசன். (௩)

சந்திரவண்ணனானதாலகேதனன்முன்பெற்ற
சுந்தரியானபானுமதியுடன்சுயோதனன்று
னிந்திரன்சசிதனோடுமிலங்கியதென்னமுத்தின்
பந்தரிற்சுரதநூலின்படிநலக்கலவிசெய்தான். (ச)

நிலக்குறும்பறுத்துச்செங்கோனிறுத்தியசுயோதனற்கே
யலக்கரவரசன்பெற்றவணங்கரம்பையரின்விஞ்சுந்
துலக்கமுற்றுயர்ந்தபானுமதிவயின்றோன்றினோர்க
ளிலக்கணகுமரன்றன்னோடிலக்கணையென்னுமாதும். (௫)

பானலேவள்ளையாம்பல்பகழிவிற்குமிழியெல்லாம்
வானிறைமதியின்மீதின்வயங்கியமாட்சிபோல
வானனமிலங்குகின்றவணங்குயரம்பைநாணுந்
தேனுறுமொழியள்கஞ்சத்திருமகளெழிலையொப்பாள். (௬)

காந்தளைநிகர்த்தகையாள்கழையெனவயங்குந்தோளாள்
பாந்தளினல்குலாள்செம்பவளம்போலிலங்கும்வாயாள்
மாந்தளிர்மேனியாள்சீர்வடவிலையிற்றாள்காது
நாந்தகநயனியாடன்னடையினாலனத்தைவெல்வாள். (௭)

இந்துவின்வதனத்தாண்மாநதியினீர்ச்சுழியீதென்னு
முந்தியாள்கதலிநாணுமூருவினுருவமிக்கா
ணந்தெனுங்கழுத்தாள்கோங்கின்முகைநிகர்நகிலாணிலக்
கந்தரமனையவைம்பாற்கொடியிடைக்கமலத்தாளாள். (௮)

இந்திரையெழிலுக்கொத்தவிலக்கணையென்னுமாதைச்
சுந்தரஞ்செறிந்தோனெய்திவதுவைசெய்சுயம்வரத்துக்
கிந்தமாநிலத்திலுள்ளவரசர்கள்வருவீரென்றே
யந்தமன்புதல்வனாயவரசன்றூதுவரைவிட்டான். (௯)

தூதுவர்திசைகடோறுமெய்தியேசொல்லலோடும்
பூதலத்தரசரெல்லாம்புகரிபந்தேர்மாச்சூழ
மாதர்தந்திலகமாயவிலக்கணைவடிவைநோக்கு
மாதரம்பெருகவத்திநகரியையடைந்தாரன்றே. (௧௦)

சாம்பவன்புதல்விமைந்தன்சாம்பன்பொற்றடந்தேர்மீதிற்
காம்பினைப்பழித்ததோளான்கமலத்தைப்பழித்ததாளா
னாம்பலைப்பழித்தவாயாளிலக்கணையழகுநோக்கப்
பாம்புறுதுவசன்வைகும்பதியினைச்சேர்ந்தானன்றே. (௧௧)

நித்திலம்வயிரம்பச்சைநீலநற்பதுமராகம்
வித்துருமங்களெல்லாம்விளங்கியதூணோர்கோடி
வைத்தமண்டபத்திலங்குமடங்கலாசனத்தின்மீதி
னத்தினபுரியையாளுமரசர்கோனிருந்தானம்மா. (௧௨)

கவரிகளசையத்தாரக்கவினுறுங்கவிகையோங்க
நவமணிக்கிரீடமின்னநானமெய்கமழப்பாரி
னுவமையில்கலன்வில்வீசவுரகமீதுயர்த்தகோமான்
றவமுறுவிபுதர்நாதன்சரியெனவிருந்தான்மாதோ. (௧௩)

வீடுமன்விதுரன்கன்னன்வேதியன்சிறுவன்சிந்து
நாடுமன்காந்தாரன்சேய்பகதத்தனவையின்மாலை
சூடியபூரிபூரிசிராவெழிற்சோமதத்தன்
ஆடரவுயர்த்தகோமானருகினிலிருந்தாரன்றே. (௧௪)

வினைமலிந்துயர்ந்ததுச்சாதனனெனும்வீரன்றன்னோ
டனுசரெம்மருங்குஞ்சூழவரசர்கண்மகிழ்ந்துநிற்ப
வனிதையர்குழாங்கள்பல்லாண்டிசைத்திடமறையோரெல்லா
மினியதாமாசிகூறவிருந்தனனிராசராசன். (கரு)

போரிடையதிகரானபுரவலர்பரிவாற்பெற்ற
வேருறுகுமரரெல்லாமிருமருங்கிலங்கிநிற்ப
வாரமார்கலன்கண்மின்னவாடகவாடைதோன்ற
மாரனும்வெள்கநின்றான்மாயவனருளுஞ்சாம்பன். (கசு)

இலங்கியகுமரரெய்தியெழிலுறநிற்குமெல்லை
கலன்கள்மெய்யிலங்கமாழைக்கலிங்கமென்மருங்கிற்றோன்ற
வலங்கலைக்கரத்தினேந்தியிலக்கணையவையினுள்ளே
துலங்குமிந்திரைபோலெய்திச்சுயோதனனருகுநின்றாள். (கஎ)

மாவடுவெகிருநாண்கணிலக்கணைவடிவையுற்றே
கோவிளங்குமரரெல்லாங்குறித்திருகண்ணுநோக்கி
யாவியுஞ்சிந்தைதானுமவள்வயினெய்தவேதா
னோவியம்போலநாட்டமிமைக்கிலாதுருகிநின்றார். (கஅ)

ஆடரவயுர்த்தகோமானன்பிற்றன்மகளைநோக்கி
யேடவிழலங்கலுன்றனெழினிகர்மகிணன்றோளிற்
சூடுதியென்னலோடுந்தோடுகாதாடத்தூய
வாடகவாடைதோன்றவனமெனவவையின்வந்தாள். (ககூ)

அரசர்தம்மவையுளெய்தியரவிந்தமடந்தைபோலச்
சரிகரத்திலங்கத்தாளிற்சதங்கைநூபுரங்கள்கொஞ்ச
விரைவினிலெய்திச்சாம்பன்றோண்மிசைவிரைகொண்மாலை
பரிவுடனணிந்துநின்றாள்பாவையர்திலகமன்னாள். (உ0)

வேறு.

நாம்புறுமதியினலங்கிளர்நுதலுநாந்தகநயனமுங்கூம்பா
வாம்பலுளாரமவிர்பரந்தெனவேயதரமூரலும்வயங்கக்
காம்புயர்ந்தோளின்றொடியதுந்தயங்கக்காந்தளேல்கரத்தினிலங்கச்
சாம்பன்வல்லுரத்தினணிந்துளமகிழ்ந்தாள்சர்ப்பகேதனனருடனையள். (உக)

வேறு.

தெரிவைசாம்பன்றன்றோளிற்றெரியலையணியக்கண்டே
யரவுயரரசனெஞ்சமழன்றெண்கினரிவைமைந்தன்
புரவலரவையுளச்சமொருவியேபோந்தான்றன்னை
விரைவினிற்பற்றுமென்னவெகுண்டனர்வீரரெல்லாம். (உஉ)

வேறு.

முரசுதுந்துமிகள்வளைமுழங்கவுயர்முரணுறுங்கரியினிரைகொடே
ரரசரெண்ணிலர்களடுசினங்களுடனுலகாலமெனவடரவே
புரிசைவிஞ்சியுறுதுவரைமாயனருள்புதல்வனாகிவருசாம்பவன்
வரிசைதுன்னுமணியிரதமேறிவளையூதிவாளிகள்பொழிந்தனன். (உங)

வாள்வைவே லுடனுலக்கைதோமரமுசுண்டிமாலையிவ்விசியே
மீளியாமெனவெகுண்டுமென்னவர்கள்விசிகமாமழைகள்பொழியவே
காளமாமுகினிகர்த்தமாயனருள்குமரன்வெங்கணைகடாவலு
நீளுமாகரிகளிவுளிவீரரொடுகிருபரெங்கணுமடிந்தனர். (௨௪)

கரங்களற்றுயர்விலற்றுமார்பினுறுகவசமற்றிரதமற்றுமா
சிரங்களற்றுநிலமேன்மடிந்தனர்கனாசர்சிறுகரியினமெலா
முரங்களற்றுவனைபோலவெட்கூறுமுருண்டசெங்குருதியோடியே
தரங்கமுற்றகடலுற்றவெண்ணிலகைந்தமாடியுதாவியே. (௨௫)

கோடுடைக்கரியைவென்றமாயனருள்குமரன்வெங்கணைகடாவலு
மாடல்வெங்கரிகளுருளமாவயவர்மடிதல்கண்டரசரோடலும்
வீடுமன்விதுரன்வேதியன்சிறுவன்வெய்யவன்னருளுமைந்தன்வான்
மூடவெங்கணைபொழிந்தெதிர்த்தனர்கண்முரசதுந்துமிமுழங்கவே. (௨௬)

வந்தெதிர்ந்துகணைசொரியும்வில்விதுரன்வீடுமன்மறையவன்சுத
னந்தகன்னெனவடர்ந்துசீறிவருமங்கராசனிவரைவர்தே
ருந்துவெம்பரிகளோடுபாகனிறவுலகுமேனமிதரீனயன்கணை
சிந்திமற்றவர்கள்சிலையறுத்திடலுமோடினார்கடிசைதோறுமே. (௨௭)

வேதியன்சிறுவன்வீடுமன்விதுரன்வெய்யவன்குமரனிவர்கடாம்
பீதிகொண்டிரிதல்கண்டுகன்கனல்பிறந்திடுஞ்சகுனிபூரியோ
டேதமற்றபகதத்தனோடரவுயர்த்தகோவினாருரோடரு
ணீதியற்றறனில்சிந்துநாடனொடுகிருபரெண்ணிலர்நெருக்கினார். (௨௮)

சிலைவளைத்தரசரிறுதியிற்பெய்மலிசெல்லெனக்கணைகள்சிதறவே
யலைவளைத்திடுமளக்கரிற்றுயிலுறந்தவச்சுதனருட்சுதன்
கொலைவளைத்தகரிகோடிவீடவுயராசைதோறுமிகுகொற்றவர்
தலைவளைத்திடமுனிந்துசாயகம்விடுத்தனன்றனுவளைத்தரோ. (௨௯)

கஞ்சமாமனைவதைத்தமாயனருள்குமரன்வெங்கணைகடாவவே
விஞ்சுமாகரியுலப்பிலாவிவுளிவீரரெங்கணுமடிந்திட
விஞ்சிசூழ்நகர்வீதிதோறுநிறைகுருதிவாரியெனவேகலு
மஞ்சியோடினர்கள்சிலையறச்சகுனிசிந்துநாடன்முதலனைவரும். (௩௦)

திரிபுரத்தையெரிசெய்துநின்றசிவனொத்தமாயனருடிருமக
னரவுயர்த்தவன்விடுக்கவந்தடரனீகமெல்லவுமவிந்திட
வெரிசினத்தின்வருமங்கபூபதியெழிற்றுரோணனுயர்வீடுமன்
வரிசிலைக்கையின்வளைத்துவாளிமழைதூவியேவளைகளூதினார். (௩௧)

மாதவன்னருள்குமாரன்வெஞ்சிலைவளைத்துவாளிகள்விடுத்துயர்
வேதியன்கைவிலறுத்துவீடுமன்விளங்குதேரினையறுத்துவா
னாதவன்னருளுமங்கராசன்மெய்யழுந்தவாசுகநிறுத்தவே
பூதலத்தினுயிரதமீதினின்மயங்கினனிரவிபுதல்வனே. (௩௨)

ஊனுறுசெங்குருதிவாயின்மீதிழியுமருவியென்னநிலனோடவே
தேறினன்னிரவிசிறுவன்மாயனருடிருமகன்றனொடுசீறியே
நூறுமாயிரமுமெய்துவாளிகளெடுப்பினெண்டிசைமறைத்திட
மாறில்சாம்பவதிமைந்தன்வெம்பகழியெய்தறுத்துவளையூதினான். (௩௩)

பருதிமைந்தன்விடுபகழியெல்லவுமறுத்துநின்றபரமன்சுதன்
பொருதவீரமதுகண்டுகெண்களனல்பொங்கவேயரவுயர்த்தகோன்
இருபன்வீடுமெனல்வேதியன்சகுனிகிரியையொத்தபகதத்தன்மா
நிருபரெண்ணிலர்களுடனுமெய்தியுயர்வாளிவிட்டெதிர்நெருக்கினான். (௫௪)

உரகமுற்றதுவசத்தன்வந்தடரவுலகுணேமியனருட்சுத
னெரிகனற்கணைவிடுத்துமாகரியொடெண்ணில்வீரரைவதைத்துமா
குருகுலத்தரசன்வரிவிலோடுகொடிகுடையறுத்திடலும்வெருவியே
யரிவரக்கடுகியோடுமும்பலெனவோடினாரரசரஞ்சியே. (௫௫)

பங்கமெய்திடவிராசராசனுயர்படியின்மீதுகடிதோடலு
மங்கராசனெடுவீடுமன்சகுனியந்தணன்னரசரனைவருஞ்
செங்கண்மால்சிறுவன்மேனியிற்குருதிவீழவெங்கணைகள்சிதறிவெண்
சங்கமூதினர்வளைத்தடர்த்தனர்கடாவனையெங்கணுநிறைந்திட. (௫௬)

வாசவன்விபுதர்முனிவரஞ்சியிடமன்னர்வெஞ்சிலைவளைத்துமா
வாசுகங்கள்விடவச்சுதன்சுதனழன்றுவானமொடுதிசையெலா
மோசையுற்றிட்விணெறிந்துபலபகழிதூவிவனையூதினு
ஞசைமுற்றனர்கள்வீரரெங்கணுநடித்தவெண்ணிலகவந்தமே. (௫௭)

சிதரன்றனையன்வென்றுநின்றதிறல்கண்டுசீறியமனத்தினான்
வேதியன்முடுகிவில்லறுத்திடலும்வீடுமன்கொடியறுத்தனன்
ஆதவன்சிறுவனுரகவெங்கணைகொடச்சுதன்னுதவுகுமரனைப்
பூதலத்திடைபிணித்தனன்னுவகைபொங்கிமன்னவர்களார்ப்பவே. (௫௮)

வேறு.

மந்தரகிரெண்டோவின்மருப்பிணையிறுத்தோன்மைந்தன்
இந்திரன்றன்னைமுன்னுளிருந்தளையிட்டபோன்றே
யந்தகனனையகன்னனரவினாற்பிணித்துக்கட்டச்
சுந்தரச்சாம்பன்றன்னைச்சுயோதனனேமஞ்செய்தான். (௫௯)

இவையெலாமுணர்ந்துதூயயாழ்முனிதுவரைக்கேகி
யுவமையிலரிதனோடேயுணர்த்துவானுன்றன்சேயாங்
கவினுறுசாம்பன்றன்னைக்கணவனுய்க்கருத்திலுன்னி
யவையினிலலங்கறன்னையிலக்கணையவன்றேளிட்டாள். (௬0)

தொடையினைவிரைவிற்சாம்பன்றேண்மிசையரிவைசூட்டப்
படவரவுயர்த்தகோமான்பணியெனமுனிந்துநோக்கி
வடிவுடையவண்முன்னெய்திநின்றமாயவன்சேய்தன்னைக்
கடிதினரசர்பற்றிக்கடுஞ்சிறையிடுமினென்றான். (௬௧)

அரசர்தேர்கரிமாச்சூழவலைகடலஞ்சவார்த்துப்
பொருதமாவனிகமெல்லாம்பொடிபடநொறுக்கிச்சாம்பன்
விரைவினிற்பரிதிமைந்தன்வீடுமன்முதலாம்வீரர்
தனையினின்வெந்நிட்டோடத்தழலுறும்வாளியெய்தான். (௬௨)

ஆம்பரிசுணராநாகத்துவசத்தோனடர்ந்துசிறத்
தாம்புறுதடாகஞ்சூழ்நாட்டங்கர்கோன்சுடிகையோங்கும்
பாம்பினிற்சாம்பன்றன்னைப்பற்றியேசிறையின்வைத்தான்
கோம்பியாகிருகன்சாபநீக்கியகோவேயென்றான். (௬௩)

சூரர்முனிசாம்பன்றன்னைச்சுயோதனன்சிறைவைத்தானென்
றுரைசெயக்கேட்டமாயனுழித்தியெனவேகிறி
விரைவினிற்றேரினேறிச்சேரனும்விலக்கிமுன்னோன்
அரவுயர்துவசன்பாற்சினமுறேலகல்வாயென்றான். (௪௪)

பொருகரிபரிசூழ்த்திப்புரியிடையானேயெய்திக்
குருகுலபதிபன்பெற்றகுமரியையெண்கின்பாவை
திருமகன்றனக்குக்கோலவதுவைசெய்வித்தேயீவ
னிருகண்வெஞ்சாபநீக்குதியாயென்றுபோனான். (௪௫)

உத்தவனுடனேவானினுநிறைநதியின்வண்ணன்
சித்திரமணித்தேர்மீதிற்றெரிவையர்கவரிவீசச்
சுத்தவொண்கலன்கண்மின்னத்துந்துபிமுழங்கவேகி
யத்தினபுரியின்வேற்றோரிமலர்ச்சோலைபுக்கான். (௪௬)

நத்துறுவண்ணன்யானீண்டிருத்தலைநவினீயென்ன
வுத்தவன்விரைவினெய்தியுரககேதனனுக்கோத
வத்தினபுரியையாள்வோனங்கர்கோன்சகுனிபின்றோர்
மைத்துனன்மறையோன்வானநதிமகன்சூழவந்தார். (௪௭)

சீலமில்சுயோதனன்றன்சிறந்திடுமரசரோடுஞ்
சோலையில்விரைவினெய்திச்சுடர்முடிமகுடமின்ன
மாலின்முன்னோனையன்பாற்றழுவிமன்னவர்கள்சூழக்
கோலமுற்றிருந்தவேலையலாயுதக்கோமான்சொல்வான். (௪௮)

வடிவினையுடையபானுமதியருண்மைந்தனோடும்
படியினிற்செங்கோலோச்சிப்படவரவுயர்த்தகோவே
யிடரறச்சுகத்தினெய்தியிருந்தனைகொல்லோவென்றே
மிடலுடையலாயுதக்கோன்பின்னரும்விளம்பலுற்றான். (௪௯)

அரசர்தம்மவையினுள்ளேயிலக்கணையன்பினோடுந்
தெரியலைச்சாம்பன்றோளிணையணிந்திடச்சீறியேநீ
கரிபரியிரதஞ்சூழக்கடுஞ்சமர்செய்தேயெண்கு
தருமினுடனையன்றன்னைத்தளையினிருத்தினையாம். (௫0)

சூரர்முனிதுவரையெய்தியிவையெலாஞ்சொல்லலோடு
முரனுடன்செங்கோலோச்சுமுக்கிரசேனமன்னன்
விரைவினின்மணித்தேரேறிவெகுண்டிவண்வருதலோடுந்
திருமகள்கொழுநன்றன்னோடியானவன்சினத்தைத்தீர்த்தேன். (௫௧)

விரைவினின்யானேசென்றுவிடவரவுயர்த்தோன்பெற்ற
வரிவையையெண்கின்பாவையருள்சுதன்றனக்குவேட்டு
வருவனென்றுன்பால்வந்தேனென்னக்காந்தாரிமைந்த
னிரவிதன்சிறுவன்றன்னோடிருகரம்புடைத்துநக்கான். (௫௨)

சகுனிதுச்சாதனன்சீர்சற்றுமில்சிந்துநாடன்
மிகநகைத்துரைக்கலுற்றார்விளங்குசிங்காதனத்தி
னிகரிலாக்கிரீடந்தாங்கிநிருபனாயிருக்கைகேளா
மிகழ்வுறுவிருத்தனுய்வாமுக்கிரசேனனென்றார். (௫௩)

வரிசிலைபிடிக்கும்வன்மைவல்லமீறுமேவினென்பார்
கரிபரியிரதமூருங்கல்வியுமுளமேறுமென்பார்
திரைசெறிகடலுமேராவியுக்கிரசேனன்சீறி
விரைவினிக்கரத்தெய்தினன்செய்வோம்விளம்புமென்பார் (ருச)

நரிவரிலரியினங்கள்வெருவுமோநன்றிதென்பார்
கரியினங்கரத்தைக்காணிற்கலங்குமீதுண்மையென்பார்
வரிசிலைமறையோன்கங்கைமகனிவர்தடுக்கில்லா
ரொருவரையொருவர்நோக்கியுருமெனநகைத்தாரன்றே. (ருரு)

அரவமர்துவசன்றுச்சாதனனங்கதேசமாள்வோன்
வரைநிகர்சிந்துநாடன்மறனுறுசகுனிமற்றும்
புரவலராயினோர்கள்போசனையிகழ்ந்துகூறி
விரைவினிலெய்தித்தம்மனையினின்மேவினாரால். (ருசு)

நிந்தைகள்பலவுங்கூறிச்சுயோதனனிருபரோடு
நந்தல்வந்துறவேசோலைகடந்துபோய்நகரியெய்தச்
சிந்தையினழன்றிவ்வூரைச்சிந்துவினிடுவெனென்றான்
டிந்துறுவண்ணநம்பியலாயுதமெடுத்தானன்றே. (ருஎ)

உத்தரதிக்குத்தாழவொருகொடியிடுவதின்முன்
கைத்தலத்தலாயுதத்தாற்கடுஞ்சினத்துடன்பால்வண்ணன்
அத்தினபுரியைப்பேர்க்குமளவினிலளப்பிலாத
சித்திரச்சிகரமெல்லாமிடிந்தனவீதிதோறும். (ருஅ)

கொடியுறுமாடநீடுங்கோபுரங்கூலந்தோறும்
பொடிபடவிடிந்துவீழ்ந்தபுகரியம்வெருவியோடப்
படிமிசையரசரெல்லாம்பருவரலுடனேபாறத்
துடியிடைமடந்தைமார்கடுனியொடுங்கலங்கிவீழ்ந்தார். (ருகூ)

ஆடரவுயர்த்தகோவேடரசர்கள்வெருவிப்பாரைச்
சேடனின்றலைக்கின்றானென்றவர்திகைக்கும்வேலை
வீடுமனிராமனிந்தப்பதியினைக்கடலின்வீழ்ப்பான்
பீடுடையலத்தைக்கொண்டுபேர்க்கின்றானென்றுசொல்வான். (சுO)

உக்கிரசேனன்றன்னையெள்ளிநீயுரைத்ததாலே
சக்கரன்முன்னோனிந்தப்பதியைச்சாகரத்தின்வீழ்ப்பான்
விக்கிரமத்திறனோடும்வெகுண்டலாயுதத்திற்பேர்த்தான்
இக்கணத்தெறியுமுன்னமவன்சரணடைதியென்றான். (சுக)

பகிரதிமைந்தன்கூறப்படவரவுயர்த்தவேந்தன்
மிகமெலிந்தெழிலார்பானுமதியுடன்விரைவினெய்திப்
புகழுடையிராமநம்பியடிமிசைப்பணிந்துபோற்ற
நகையுடனலாயுதத்தோனவனொடுநவிலலுற்றான். (சுஉ)

மதியுறுவதனத்தாளுன்மகளிலக்கணையாமாதைத்
தகிகளவாடுமாயன்றனையனுக்கின்றென்முன்னர்க்
கதுமெனவதுவைசெய்தியிலதெனிற்கலப்பையாலே
யுததியினுன்னூர்தன்னையிடுவெனென்றுரைத்தானன்றே. (சுங)

மதிவண்ணன்மொழியைக்கேட்டுமாசுணமுயர்த்தவேந்தன்
சுதைதருமொழியளாயவிலக்கணைதன்னைத்தூய
விதியினைப்பயந்தான்பெற்றவரியன்றனக்கீந்தமன்னன்
ருதகஞ்செய்திருவர்தம்மையொருதவிசிடையின்வைத்தான். (௬௪)

அருமறையவர்களெல்லாமாகுதிசெய்யச்சாம்பன்
றெரிவைதன்கரத்திற்சிறந்தமங்கலநாண்சாத்தி
யரிவைதன்னுடனேதீயைவலம்வரவம்மியின்
மருவலர்குழலிகாலான்மிதிக்கவான்வடமீன்கண்டார். (௬௫)

மதிமுகம்வயங்குகின்றவிலக்கணையென்னுமாதைச்
சதுமுகன்றந்தைதந்தசாம்பனுக்கீதலோடுங்
கதமொழித்தவனிதன்னைப்பேர்த்திடுங்கலப்பைவாங்கி
யதிரதர்குழாங்கள்போற்றவரிமுன்னேயுவந்துநின்றான். (௬௬)

வேறு.

பரியினஞ்சதவாயிரம்பருப்புதகிகராங்
கரிகளும்பனீராயிரங்கனகமாமணிசே
ரிரதமோர்பதினாயிரமீரைந்துநூறு
மரிவைமாருடனீந்தனனரவுயர்துவசன். (௬௭)

குருகுலத்திறையளித்திடுங்குரகதநிறைதே
ரிருமருங்கினுநெருங்கிடவிலக்கணையுடனே
யரியினற்சுதன்வயங்கிடவரசர்கள்போற்றச்
சுரர்துதித்திடவலாயுதன்றுவரையிற்புக்கான். (௬௮)

மாயனெய்தியேமுன்னவனடிமிசைவணங்கத்
தூயசாம்பனற்கமலன்சுதன்மகளுடனு
நேயம்விஞ்சிடசிகரிலாமுராரியையிறைஞ்சித்
தாயரைப்பணிந்தெழுந்துவேடாடனிற்றாழ்ந்தான். (௬௯)

சுந்தரஞ்செறிசுயோதனன்மகளுடன்சாம்பன்
சிந்தையின்மகிழ்ந்தோதனமருந்தியேசிறந்த
சந்தணிந்தின்பமாகியசாகரந்தலைழப்ப
விந்திரன்சசியிலங்கியவாறெனவிருந்தான். (௭௦)

அத்திநபுரப் பேர்ப்புப் படலம் முற்றிற்று.

---

ஆகபடலம் - ௨௫ - க்குக் கூடிய திருவிருத்தம் - ௧௬௬௪.

---

ஸ்ரீகல்யாணபிரான் றிருவடித் தாமரைகடுணை.

---

ஸ்ரீ

விஷ்ணுமயம்.

கoச - வது.

# வாணாசுரப்படலம்.

வீணைசேர்கரத்தாள்கனவினிற்கண்டவேளருள்குமரனைத்தோழி
சேணினோர்நொடியிற்கொணர்ந்திடவசுரன்றிருமகள்கொங்கையிற்சேர்ந்தே
பேணலார்மடியச்சமர்பொருதரவிற்பிணிப்புண்டபேரனுக்காக
வாணனாயிரந்தோடுணித்தருடிருமான்மலரடிவணங்குவாய்மனனே. (க)

தன்னுடைப்பெயரெவ்வுலகமுமுரைக்கச்சங்கரன்முராரிபேர்தவிர்த்தே
அன்னவெந்நறுவோனமரர்கோன்முதலோரஞ்சிடவரியிலையென்றே
மின்னியமணித்தூண்மிசையறைந்ததனில்விளங்கியமீளியான்மாண்ட
பொன்னவன்சுதனும்பரமபாகவதன்புத்திரன்விரோசனனுமவுணன். (உ)

அவுணனும்விரோசனருளுமாவலிமாவிரந்திடமூன்றடியளித்த
தவனுவந்தளித்ததனையர்நூற்றுவர்க்குந்தலைவனாய்ச்சனித்திடும்வாணன்
நவமணிக்கடகமிலங்கியகரமோராயிரம்வயங்கநற்கயிலைச்
சிவனடிநினைந்தேயிலிங்கமைஞ்ஞூறுந்தினந்தொறுமருச்சனைசெய்வான். (௩)

அஞ்செழுத்தையுந்தனெஞ்சினினழுத்தியளப்பறுமருந்தவம்புரிந்தே
விஞ்சியவாணாசுரன்களிப்பெய்தவிழுமியநீறுமெய்க்கணிந்து
பஞ்சின்மெல்லடியாளுமையிடப்பாகம்வயங்கிடப்பரவையினெழுந்த
நஞ்சினைநுகர்ந்துதிரிபுரமெரியநகைசெய்கங்காதரன்வந்தான். (௪)

தேவர்கடொழவேவிடையினின்வயங்குஞ்சிவனுயர்வாணனைநோக்கி
யீவனுன்மனத்திச்சையாம்வரத்தையியம்பெனவென்னுடன்சினத்துப்
பூவினிலயனைப்படைத்தவன்பொரினுநீயுன்றன்புதவல்ரோடெய்திக்
காவெனையெனவேமொழிந்திடவதற்கங்கிசைந்தரன்கயிலையிற்போனான். (௫)

இந்திரனகரியெனவிலங்கியசோணிதபுரத்திருந்துகும்பாண்ட
மந்திரியுடனுமகிழ்ந்துலகாண்டுவயங்கியவாணன்வானவர்கள்
சிந்தையிற்கலங்கியிரிந்திடப்பொருதுதிசைதொறும்புவியினைச்சுமக்குந்
தந்திகள்வெருவியுடைந்திடத்துரந்துதாரமார்கயிலையைச்சார்ந்தான். (௬)

உமையிடப்பாகனடிமிசைவணங்கியுரைசெய்வான்வாணனென்னுடனே
சமர்பொருதிறலோரிலாமையாலென்கைதினவுறத்தரிக்கிலேனதனா
லிமையவர்வெருவக்கவந்தநின்றாடவெங்கணுங்குருதிநீர்பெருக
வமர்பொருமவரையருளெனநகைத்தேயந்தகாந்தகனிவையறைவான் (எ)

கடகரியிவுளிகனகமாரிரதங்காதியேகவந்தநின்றாட
மிடலுடையவயவர்மிடைந்துவெம்போர்களுன்னுடன்விளைத்திடுங்காலந்
துடிகைசங்கிடக்கைதுந்துமிமுழங்குஞ்சோணிதபுரத்தினிற்சிகரக்
கொடிதுணிந்தவனிமிசைவிழுந்திடுநாட்குறுகுமென்றரன்மொழிந்தனனால். (அ)

அரனிவைமொழியமகிழ்ந்திடுவாணனசுரர்கள்சூழப்புடைசூழ
விரைவினினிரதமிசையினினெய்திவிளங்கியசோணிதபுரத்தின்
கிரிநிகர்சிகரங்கிளர்ந்தமண்டபத்தின்கிரீடசேகரம்வயங்கிடாநற்
றெரிவையர்கவரியசைத்திடமணியாற்சிறந்தசிங்காதனத்திருந்தான். (௯)

வரைநிகரெனவேவயங்குகும்பாண்டமந்திரியுடன்மகிழ்வாணன்
கரமொராயிரமுமிலங்கிடக்கலன்கள்கயிறுறவிருந்துளிக்கவினூர்
சுரருலவளவாய்த்துலங்கியதுவசந்துணிந்ததன்முன்விழக்கண்டு
செருவருந்தினந்தான்சேர்ந்ததுவென்றெகிழ்ந்தையின்மகிழ்ந்துரைசெய்வான். ( )

சிவனடியிறைஞ்சியென்னுடைப்புயத்திற்றினவறச்செருச்செயவொன்னார்
அவனியினெதிரவருளெனவுரைப்பவதற்கரன்சோணிதபுரத்திற்
றுவசமற்றுன்முன்விழுந்திடிற்சமரந்தடாமேவருமெனவுரைத்தான்
குவடெனநிகர்தோளுடையகும்பாண்டவுணர்திநீயென்றுகூறுவனால். (கக)

விடையுடைவிமலனருள்மொழிவழியின்விண்டலமிசையினினுயர்ந்த
கொடிதுணிந்திவணின்விழுந்ததுசமரங்குறுகியதறிதிகும்பாண்ட
கடகரிபரிதேர்கமுறுமசுரரணிவகுப்பாயெனக்கழறிக்
குடையொளிதிகழத்துந்துமிமுழங்கவாணன்றன்கோயிலிற்புக்கான். (கஉ)

வேறு.

உரனுறுவாணனல்குமுடாங்கனையென்னுமங்கை
விரைபுரைபுயல்வேல்வள்ளைவிற்குமிழாம்பணந்து
கரியிருகோடுகொம்புகாந்தண்மின்கதலிநள்ளி
மரைமலரிவையைத்தாங்குமாழையின்கொம்புபோல்வாள். (கங)

உருவினிலெவருமொவ்வாவுடாங்கனையுவப்பினாலே
யரனுறுகயிலையெய்தியம்பிகைதனையிறைஞ்சிச்
சரியிலேழிசைகொள்வீணைதரளவெண்ணகையாளோதி
தெரிவையர்திலகமென்னத்தினந்தொறுமகிழுநாளின். (கச)

செம்பொனின்மணிகளான்றுசிறந்தமாமண்டபத்தின்
வம்பவிழலங்கலுலமாழைசால்விதானமோங்க
வம்பிகையுடனேநம்பனமர்ந்திடவாணனல்குங்
கம்பெனுங்கிரிவத்தாள்வெண்கவரிகையசையநின்றாள். (கரு)

வித்துருமத்திரோடும்விளங்குமாமரகதம்போற்
சித்தசன்றன்னைக்காய்ந்தான்சிறந்திடுமிமவான்பெற்ற
வுத்தமியுடனுந்தோன்றவுடாங்கனைவிரகமுற்றே
யெத்தனைதினத்தோர்கொண்கன்வருவனென்றெண்ணினாளால் (கசு)

மனமுறவருந்திவாணன்மங்கைதான்விரகமுற்ற
நினைவினையறிந்துநம்பன்றேவிசொனிகழ்த்துவானீ
கனவினோர்குமரன்றன்னைக்காண்குவையவனேயெய்தி
யினிமைசேர்கொழுநனாகியணைகுவனுன்னையென்றாள். (கஎ)

கடகரியுரியைப்போர்த்தோன்காதலியின்சொற்கூறி
விடைகொடுத்தருளலோடுமுடாங்கனைவிரைவிற்சென்று
துடிகைகாகளங்கள்சின்னமுழங்குசோணிதபுரத்திற்
கொடிககனத்திறோங்குந்தமணியக்கோயிற்புக்காள். (கஅ)

வித்துருமங்கணீலமரகதம்விளங்குதூண்கள்
பந்திசெய்திலங்குகின்றபசும்பொனின்மண்டபத்தின்
நித்திலவிதானந்தோன்றுநிகரிலாச்சேக்கைமீதி
னுத்தமவடிவுமிக்கவுடாங்கனைதுயிலுங்காலை. (க௯)

ஓவியப்பாவைபோலவுடாங்கனைதுயிலும்போழ்திற்
காவினோர்குமரனெய்திக்கருங்குழன்மிசையிற்காவின்
பூவினைச்சூட்டக்கண்டுபொருக்கெனவிருகையார
வாவலிற்கொங்கைமீதிலணைத்தவள்விழித்துப்பார்த்தாள். (௨௦)

தன்னெழில்வடிவுக்கொத்தகாந்தனைத்தன்கையாரக்
கன்னறேன்மொழியாளன்பாற்றழுவிக்கண்விழிக்கக்காணா
தின்னலினழுந்தித்தூயவிருவிழியருவிசோர
வன்னமென்னடையாளாகமனலுறவறைகின்றாளால். (௨௧)

ஆய்யமன்மதனுநாணுந்தோன்றலைக்கனவிலேயென்
கையினினிறுகப்புல்லுங்காலையில்விழித்தேயென்றன்
மெய்யினைக்கரைத்தகண்ணைவிளக்கின்னிடத்துத்தீட்டு
மையினைக்கரைத்துநீயீண்டழுகின்றவாறேனென்றாள். (௨௨)

சுழித்திடுங்கங்கைவேணிச்சோதிதன்குமரன்றன்னைப்
பழித்திடுமுருவினானைப்பரிந்தியானணைக்குமுன்னர்
விழித்தகண்ணிரங்கவேனோவிழுமியோர்தமக்குத்தீமை
யிழைத்தவரிடருறாமலிருப்பரோவென்றுசோர்ந்தாள். (௨௩)

விரைகமழமளிமீதின்வயங்குமின்னிடையாடன்னை
யரிவையரணைத்துமெய்யினிமசலமடர்ந்துவீசக்
சுரிகுழன்மடவாரேத்தத்துய்யகும்பாண்டன்பாவை
தெரிவையர்திலகமென்னுஞ்சித்திரரேகைசேர்ந்தாள். (௨௪)

சித்திரரேகையெய்திச்சிறந்திடும்வாணனல்குந்
தத்தையின்மொழியினாளைத்தழுவிநீதளருந்தன்மை
யெத்துயரதனால்வந்ததியம்பெனவிசைத்தலோடு
நித்திலநகையளாயவுடாங்கனைநிகழ்த்தலுற்றாள். (௨௫)

என்னுயிர்த்துணைவிகேளீயான்றுயில்கொள்கனவிற்
கன்னலஞ்சிலையினானோகயிலையோன்குமரன்றானோ
பன்னகப்பாயலானோபகரொணாக்கவின்கொள்மெய்யன்
றன்னியவெழிற்பூங்காவிற்றோன்றியேயென்முன்னின்றான். (௨௬)

கருமுகிலனையமெய்யன்கமலம்போலிலங்குகண்ணான்
வரையினைநிகர்த்ததோளான்மதியைநேர்வதனச்செல்வன்
றரளவெண்ணகையான்முந்நூறரித்திடுமுரத்தான்வாணி
னிரவிநேர்கலன்கள்பூண்பான்யாவனோவறியேன்றோழி. (௨௭)

வந்துமுன்னின்றுகாவின்மலரினைக்குழலிற்சூட்டிச்
சுந்தரஞ்செறிந்தமெய்யாற்றுலங்கியநகையாலென்றன்
சிந்தையுமுயிருங்கொண்டசெல்வனையணைத்துத்தூய
விந்திரகோபமன்னவிலவிதழமுதின்றுண்டேன். (௨அ)

அஞ்சலைவாணனருட்புதல்வீநா, ணிஞ்சிகள்சூழ்துவராபதியெய்திக்
கஞ்சமலர்க்கொடிபெற்றருள்காமன், மஞ்சனுடன்வருவேனெனநவில்வாள். ()

நீயயராதிருநிகரின்மடந்தாய், மாயையின்மாயன்மகன்சுதனைக்கொண்
டேயெனுமுன்னிவணெய்துவனென்று, மீயுயர்வானின்விரைந்துபெயர்ந்தாள்.

திகழ்கலனகிலொளிர்சித்திரரேகை, ககபதிவிசையினுமுடுகினள்கடல்சூழ்
சிகரமொடெயில்கள்சிறந்திடுதுவரை, நகரெழினோக்கினளிருநயனத்தால். (௪௪)

கடலகழாகியகவினுறுமெயில்கள், வடவரைநிகரெனவானுறநிறையுங்
கொடியினினிரவுறவேகொழுமணியின், சுடரொளியாற்பகலாகியதுவரை. (௪௫)

புயலிணையணவியபொழில்பொலிவுறவே, யபிமபவிரதமொடணிகமுடலிய
வெயிலவனொளிதருகலனகில்பிடையக், கயனிகர்விழியினர்கவினிறைநகரம். ()

காசணிநகிலியர்கயல்விழியிலக, வாசவினெழிலுறவாடினரொருபால்
வாசமென்மலர்மலியிமசலமடவார், வீசினராடவர்மேலுறவொருபால். (௪௭)

சுகனெனமறையறையறுதொழிலவர்கள், மகமுடிவனசெய்துமகிழுவரொருபா
ணகில்கலனணிபவர்நாயகர்விரகச், சிகியுறவவரொடுசேறுவரொருபால். (௪௮)

இந்துவின்வதனியரிழைகள்மெய்யிலகக், கந்துகநிலனறையுங்கவினொருபா
றந்திகளிவுளிகடமனிவிரத, முந்திடுகுமரர்களெழிலுறுமொருபால். (௪௯)

மாதவர்விரகமுறத்தனிமடவார், கீதநலோசைகிளத்துவரொருபாற்
காதலினுயர்கணவரிடத்தே, தூதினையேவிடுதோகையரொருபால். (௫௦)

கோடுகெடாரைகள்கொம்புகள்வாரான், மூடியபேரிமுழங்குவவொருபால்
ஊடியமாதர்கள்விரகமுளுறவே, கூடுவராற்புரிகொண்கரையொருபால். (௫௧)

இவ்வெழிலுறுதுவராபதியிலகச், செவ்விதழ்வாயினள்சித்திரரேகை
நவ்வியொண்விழியினினோக்கியிநகர்போ, லவ்வியமகல்புரியிலையெனவறைவாள்.

ஏசறுதுவ்வரையினெழிலினைநோக்கி, வாசவனகரளகாபுரிமலரோ
னசகல்பதிமுதலாநகரெல்லா, மாசறுமெனுமுரைகூறிமகிழ்ந்தாள். (௫௩)

இனையனகூறியசித்திரரேகை, வினையறுதுவரையினெய்திடும்வேலைத்
தினகரனவிர்குடதிசையினின்மறைய, நனியிருள்பரவினநாலிருதிசையும். (௫௪)

வேறு

பகலவன்குடதிசைப்பரவைமூழ்கவே, யுகவிறுதியினிடையுமையினுயகன் [தே.
புகரிபவுரிபுவிமூடப்போர்த்தபோற், ககனமெண்டிசையெலாங்கங்குல்பாய்ந்த

சித்திரரேகைதன்குழலிற்சேவிணை, வைத்தெனவயங்குகண்மையின்மற்றவள்
குத்திரமனத்தினின் கொள்கையேலவே, யெத்திசைதொறும் பரந்திருண்ட
கங்குலே. (௫௬)

அங்கண்மாவவனியிற்றிமிரமான்றுற, வெங்கணுந்தாரகையாரம் பூண்டெழுங்
கங்குலினுரத்தின்வெண் கலவைசேர்த்தபோற், பொங்கிளந்திங்கண் மங்குலிற்
பொலிந்தனன். (௫௭)

அவனியெண்டிசையினம்பிறைநிலாவுற, வுவமையின்மதன்சுதனுறையுங்கோ
யிலிற், குவிமுலைச்சித்திரரேகையாங்கொடி, துவசமெய்மறைந்திடத்தோன்றன்
மாறினள். (௫௮)

மறைந்தவனிருத்தலுமன்மதன்சுத, னறந்தவராதவச்சுதன்றன்பேரவை
யுறைந்தரியேவிடவொளிருந்தேர்மிசை,நிறைந்திடுங்கரிபரிநெருங்கவெய்தினான்.

பல்லியங்கறங்கிடப்படைஞர்சூழ்ந்திட, வல்லிறமணிவிளக்கங்கையேந்தியே
மெல்லியர்குழாமுறக்கவரிவீசிட, வொல்லையினடைந்தனனுயரும்வேள்சுதன். ()

அரசர்தங்குமரர்களளப்பிலாருறச், சரிப்பிலாக்கொடிகள்சாமரைகளோங்கவே
தெரிவையர்யாவருந்திடமேவிடப், புரவலர்துதித்திடக்கோயிற்புக்கனன். (சுக)

ஓவியத்தலைப்பதித்தொளிருருக்குமிப், பாவைசென்றெதிர்ந்தடிபணியவேள்சு
தன், றேவிதன்னுடன்மணிசிறந்தமண்டப, மேவியங்கிருந்தனன்கவரிவீசவே. ()

மையமர்நயனியாமனைவிதன்னுடன், றுய்யபொற்கலத்தினிற்றுலங்குமோதன
நெய்யுறவறுசுவையருந்திநேயமாக், கையிடசலத்தினாற்கழுவினனரோ. (சுங)

கலன்கள்மெய்வயங்கிடக்கலவைபூசியே, யலங்கலங்கிருவருஞ்சூடியானனந்
துலங்கவெள்ளடை யினையருந்தித்தூயபொன், னிலங்கியமலரணை யெய்தினா
ரே.
(சுச)

உருக்குமியுளத்தினையுருக்கிக்கா[illegible], [illegible]பருக்காற்கலவைகள் பிறழுங்கொங்
கைக, ணெருக்கியேயுரத்திடையணைத்துநேரிலா, முருக்கிதழதரநீர்முழுதுமுண்
டனன்.
(சுரு)

பரிபுரமரற்றிடப்பசும்பொன்னார்வளை, கரமிசையொலித்திடக்கலன்கண்மின்ன
வே, யரியுறுமலங்கல்சோரளகபாரமுஞ், சரியநற்கொழுநனைத்தழுவினாளரோ. ()

அயில்விழியிலங்கிடவானனங்களின், வெயர்வுறச்சரதநூல்வினைத்துத்தீர்ந்தபின்
குயின்மொழியுருக்குமியுடனுங்காற்றவ, னியல்புறத்துயின்றெழிலிலங்குமெல்
லையின்.
(சுஎ)

காவிநேர்விழியுருக்குமியைக்காமன்சே, யாவலினணைக்கவேளமரொழிந்து
வெண்,பூவலரிருமுகப்புங்கவர்தலை, யாவுமுன்மறைத்தபோலகன்றவம்பிறை. ()

திணிநிசியுறவிளந்திங்களேகமெல், லணைமிசையணங்கினையணைத்துக்கண்டுயி[ள்
விணையிலாக்குமரன்றன்னெழிலையெய்தியே, கணைவிழிச்சித்திரரேகைகண்டன

வேழமாக்கயத்தினுளழைக்கமேவிய, வாழியான்மகன்சுதனழகைநோக்கியென்
றூழிதானிவன்புயந் தோய்கிலாதுயிர், வாழ்கிலாளென்று தன்மனத்திலுன்னி
னாள்.
(எ0)

மருளுறுமந்திரமாயைதன்னினால், ஒருவடையுருக்குமிதன்னையோர்கணத்
திருகையினெடுத்திருநிலத்தினிட்டனள், சுரிகுழலநங்கனை துயரைநீக்குவாள்.

மாயையால்வந்தபேயுயிரைமாய்த்தவன், சேயருட்புதல்வனைச்சிறந்தமாமணித்
தூயபொற்கட்டிலோடெடுத்துத்தான்சுமந், தேயெனுமுன்னம்வான்மிசையினே
கினாள்.
(எஉ)

மாரவேள்சுதன்றனைமாழைக்கட்டிலிற், காருறுகனமீக்கரத்தினேந்தியே
சீருறுசோணிதபுரத்திற்சேர்ந்திட, வேருறுபயோதரியெய்தும்வேலையின். (எங)

சித்திரரேகையாள்சிறந்தவேளருள், புத்திரன்றனைக்கொடுவருவன்போயென
வத்திருழ்துவரையினனுகிமீளுமு, னித்திலநகையுடைநிகழ்த்துவாளரோ. (எச)

துயிலிடையெய்தியென் றுணைமென்கொங்கையிற், புயலெனவணைந்தியான்வி
ழிக்கப்போயவன், மயலினையழித்தெனை வருத்தஞ்செய்தனன், கயலுறுதுவச
வேள்கணைகள்பெய்யவே.
(எரு)

சிந்தையிற்களிப்புறக்கனவிற்சேர்ந்துவேள், மைந்தன்யான்விழித்திடமறைந்து தன்னெழிற், றந்தையெய்மலர்க்கணைதைத்தபுண்வழி, யிந்துவுஞ்சுடும்படியியற் றிறனென்றுள். (எசு)

வேறு.

கனவிலென்னையயக்குகள்வனையின்றுகிட்டிசையுறுகடற்
றினகரன்வருமுன்னமேகொடுவருவனென்றுரைசெப்பிய
வனிதைபோயினள்வந்திலாளெனமதிமயங்குமுடாங்கனை
னைவழிந்தெழுவிரகவேதனைநிறையவேயயர்வேலையின். (எஎ)

பனசமன்படைமேகநாதன்விடுப்பமாதசரதன்மக
னனுசனோடனைவோருமாருதிதந்தமால்வரையவுடதந்
நனையளாவியவாசுகம்வரவுய்ந்தபோலநிருத்தனு
மனகன்மேனியின்வாசம்வீசவயர்ந்தவாயிழைதேறினாள். (எஅ)

வாசுதேவனருட்சுதன்மகன்மெய்யின்வாசமலிந்துமேல்
வீசவேயுடையென்னுமங்கைதெளிந்துவிண்ணிடைநோக்குமுன்
னேசிலாவநிருத்தமன்றனையணையின்மீதுறவேந்தியே
பாசிலாதமடந்தைசித்திரரேகையன்புடன்வந்தனள். (எகூ)

வந்துமாமணிமண்டபத்தினின்மாழைவிஞ்சியமஞ்சமேல்
விந்தைமாமகனருள்குமாரனைவைத்தசித்திரரேகையின்
னிந்துநேர்வதனத்துடாங்கனைதன்னையின்பமுறத்தழீஇச்
சிந்தைவெந்துயர்தீரவேயணைநீதில்கொண்கனையென்றனள். (அ0)

துணைவிகூறமகிழ்ந்துடாங்கனைதூயகட்டிலின்மலருறு
மணையின்மீதநிருத்தமன்றுயிலழகைநோக்கியளப்பிலாப்
பிணியைவீழ்க்குமருந்துபெற்றவர்போலவன்புபெருத்திட
வினையிலாக்கமலங்கள்நாணவிலங்குதாளினிறைஞ்சினள் (அக)

களிகொள்சிந்தையுடாங்கனைத்திருகணவன்மெல்லடியிணையினை
யொளிகொடன்கவினுறுகவான்மிசைவைத்துவந்துசிறந்திடுந்
துளைகொணித்திலவடமமைந்துதுலங்குகொங்கையிலங்கவே
வளைகறங்கிடவிருகரங்கொடுவருடியேமகிழ்வேலையின். அஉ

தூயமாதிருவடிபிடித்திடுமெல்லையிற்றுயினீங்கியே
பாயன்மீதினுணர்ந்துவாளநிருத்தமன்பரவைக்குளின்
மாயனென்னவெழுந்தபோதினின்வாணனல்குமினேகவே
நேயமோடுமுனின்றசித்திரரேகையோடுநிகழ்த்துவான். (அங)

இந்தமாபுரிதுவரைமாநகரன்றெலீர்களுமெமரலீர்
கந்தமார்குழலாளுருக்குமிதனையொளித்தொளிர்கட்டின்மேற்
சிந்துசூழ்நகரொழியவேயிருள்செறியமல்கியகங்குலிற்
றந்தவாறிதுவென்கொலென்றுதடக்கைதாக்கிநகைத்தனன். (அச)

அங்கைதாக்கிநகைத்தவீரியனடியின்மீதினிறைஞ்சியே
சிங்கவில்லெழிலுடையசித்திரரேகைநின்றிவைசெப்புவா
ளெங்களூரிதுசோணிதாபுரியிறைவன்வாணனவன்பெறு
நங்கைபேருடையென்பர்மற்றவடுணைவிநானெனநவிலுவாள். (அரு)

ருனிவில [illegible] மெனுநுழலியாவுடைங்களைக்காடி [illegible]
கனவினிற்கடிகாவி [illegible] னெழில்கண்டவனைத்துயர்த்திக் [illegible]
கனியவட்குமெயயகன் [illegible]
யனமுறக்கலறுருகவொடினளென் [illegible] (அ௬)

## வேறு.

உன்மயஅுப்பவெயோதன [illegible]
மன்மதனடலால்வாடின [illegible] டாள்வாவியி [illegible]
நன்மலர்சூடாளுசல் [illegible]
பொன்மயமா [illegible] ப்படுதனிமைப்படலவுமினர [illegible]. (அ௭)

சந்திரனையனியிற்செந்தழலென்பாடமனியவளைச்சேர
விந்துவையுயருமென்றெனமொழிவாளரியுமுறைபூகாரு
எந்தகனுருவாமினையெனவைவாளந்தியையுறநோக்கிச்
சிந்துவிறுலியாற்சிந்தையினயர்வாவினியுரைசெயலாமோ. (அஅ)

அன்றிவினிசையாலயருமுலிவாளருவங்காணயனந்தர
டென்றன்மெய்யுறவேசிறுவனளினத்திருமெனவெளிரவோர்கா
னென்றியமணிநாவோலசையின்மெலிவாயுழ*அரிபெயர்கொண்டாள்
‡கொன்றையையணிவான்பெயருறவுழையுங்கொடியிடைதுயரிதால். (அ௯)

உடலிடையுயிர்தானிலையெனவயருமுடையினிமுனர்யாரோ
படமிசையெழில்சேர்பவர்களைவரையப்பார்த்தவருளைநோக்கிக்
கடிகமழ்பொழில்விற்கணவிடையணையுங்காவலனிவனென்றே
அடியிடைமடவாள்படுதுனியொருவந்துவரையின்யான்வந்தேன். (௯0)

துனியறுதுவரைப்பதிதனிலெய்திச்சோதிசெயெழிலாமுன்
மனையவடனைமண்மிசையினின்வைத்தேமலரணைதனையேந்தி
யுனையுயர்வானிற்கொடுகடிதிவணினுற்றனனுடைகாணுங்
கனவினினவனைமயல்செயுமுதல்வாவென்றனள்கவின்மிக்காள். (௯௧)

இனியவிவ்வுரையைச்சித்திரரேகையியம்புமுன்னெழின்மிக்க
வனிதையர்திலகமாயவள்வாணன்மகண்மலர்மகள்போலத்
தினகரனவிர்சேர்மணியுறுகலன்பெய்திகழ்வுறமுனமொய்த்தி
யனமெனுநடையாளுவகையினநிருத்தனையடிதொழுதாளால். (௯௨)

வந்தடிதொழுதேநின்றிடும்வாணன்மகளெழிலினைநோக்கி
யிந்திரைபுதல்வனருளியவநிருத்தனுமயலெழவோடுஞ்
சந்திரவதனச்சித்திரரேகைதமருடன்மறைபோழ்திற்
சுந்தரியுடனேமலரணைமிசையிற்றூயவன்மகிழ்வுற்றான். (௯௩)

கலவைகளுதிரக்கரமிசைவளைகள்கலகலகலவென்றே
யொலியுறநன்னூபுரமிருதாள்களிரேலமிடக்கோல
மலருறுமளகங்களமெனவலயமதிமுகம்வெயர்வாகக்
கலனுறுநகிறன்பதியுரமுறவேகலவிசெய்தனளன்றே. (௯௪)

---

* அரிபெயருளொன்றுமால் ஆகவேமால்கொண்டாள் என்க.
‡ கொன்றையையணிவான்பெயருளொன்றுபித்தன் ஆகவே பித்துக்கொண்டு ழைந்தாள் என்க.

அயில்விழியிலகச்சுவைதருமமுதத்தயமிருவருமுண்டே
குயின்மொழிபதறக்கொடியிடைதுவளக்கொங்கைகள்புளகிப்பக்
கயினகமுடலிற்கவினுறவெழுதிக்கலவிசெய்மதனூலி
னியல்புறவநிருத்தமனுடனுடைதாமெழிலுறமகிழ்வுற்றாள். (௯௫)

இலகியவிருவருடலொருமெய்போலிறுகிடவநுராகச்
சலதியின்முழுகிக்கலவிகடணியத்தாமெழிலுறவேநற்
கலவைகள்கமழக்கவினுறுமணைமேற்கண்டுயிலுறுவோரை
நலனுறுமணையிற்சோதனையினென்றரியர்பலர்கண்டார். (௯௬)

வடிவுடையவரேருடைவிழிதுயிலக்கண்டிடுமடநல்லார்
கடிதினில்வாணாசுரனிடையெய்திக்கவினுறுமொருமனிதன்
மிடலுடையிறைவாநீயருள்மகளாமெல்லியலுடன்மேவிக்
கடிகமழ்மலரினணைமிசைதுயிலக்கண்டனம்யாமென்றார். (௯௭)

பிறையெனுநுதலாரிவ்வுரைமொழியப்பின்னுகன்முனிவோடு
மிறுதியின்வருவன்போலெழுவாணனசுரர்கடமையேவி
மறுவிலென்மகடன்மனைதனின்மேவுமனிதனைநீர்பற்றிச்
சிறையினினிடுமினென்றுரைசெய்தான்றேவர்கடிரளஞ்ச. (௯௮)

வெம்பியவாணனிவ்வகைகூறவிடமெனவடர்வீரர்
தும்பிகளிவுளிதேர்நிரைதுன்னத்துந்துமியுயர்பாண்டில்
கும்பிகைதிமிலைகம்புலிதுடிகைகாளமொடுகோடு
பம்பைகளுறுமிமுரசிவைபம்பச்சென்றனர்படிமீதின். (௯௯)

விரலுடையசுரரெரியுறுநயனர்விடையவன்முனிவொப்பார்
பிறையெயிறிலகப்பலபடைகொண்டேபெருவரையினமேபோற்
கறையடியடரத்தேர்மிசையுயருங்கதலிகைநிறைவாகத்
திறலுடையநிருத்தமனுறுமனையிற்சென்றனர்பெரிதார்த்தே. (௧00)

குயின்மொழியினளாமுடையிருகொங்கைக்கோடுரமிசைபூணத்
துயிலுறுமநிருத்தமனசுரேசரார்த்திடுதொனிகேளாக்
கயனிகர்விழியளுடனுணர்வுற்றுக்கவினுறுபொற்கச்சை
யியல்புறவரையினணிந்தெழுசியமெனவவனெழுபோழ்தின். (௧0௧)

வரையினைநிகராமசுரர்கள்செயலிங்கடுமெனவறநோக்கிப்
பருவரலுடனேயிருநயனங்கள்பயமுறவழுவாளைத்
தெருமரலொழிநீயிவர்செருவென்றுசேருவனெனவோதி
யரிவையையிருகையுறமெய்யணைத்தானச்சுதன்மகன்மைந்தன். (௧0௨)

உடையெனுமினைநீதெருமரலொழிவாயென்றினிதுரைசெய்து
மிடலுடையநிருத்தமனுயர்முழையைவிட்டெதிரரியொத்தே
கடிதினின்மனைவாயிலினிடையெய்தியவனொருகதைகொண்டே
வடவரைநிகராமசுரர்கள்வெருவவந்தெதிரார்த்தனனால். (௧0௩)

வந்தெதிரார்த்தேநின்றருடிருமான்மகன்மகன்விறனோக்கித்
தந்திகளிவுளிதமனியவிரதந்தாரணிநிறைவாகச்
சிந்தினர்கணைவேல்வாண்மழுவுடன்வெந்தீயுறுமயில்விட்டே
யுந்தினரசுரர்துந்துமிமுரசமுழங்கிடவனையூதி. (௧0௪)

கடியவசுரேசர்திரளைக்கதைகொடெற்றி,நொடியின்முன்வதைத்தவநிருத்தமனை
நோக்கி, வடிவுடையுடாங்கனைமகிழ்ச்சியுறுபோழ்தின், மிடலுடையவாணன்வர
வேயுளமெலிந்தாள். (௧௨0)

மிடலுடையவாணன்வரவேளருள்குமாரன், வடமிசையிலைவிழுதின்குழுவுதா
னே, தடவரையினுலுழுயர்சர்ப்பவினமோவெவ், கடியவசுரன்பிணைசெய்கைக
ளெனநக்கான். (௧௨௧)

நகைத்தெதிர்நடந்தவநிருத்தமனைநண்ணிப்,பகைத்திருமருங்கசுரர்பல்படைகள்
விட்டே, மகத்துரகமோடிபம்வளைக்கவுயர்வானோர், திகைத்திடவழற்கணைகள்
சிந்தினர்களெங்கும். (௧௨௨)

விக்கிரமவல்லசுரர்வாளிகள்விடுத்தே, திக்கினைமறைப்பவுயர்காமனருள்செல்வ
ன், பொக்கமிறவெய்நுழைவைபோலவுயர்தண்டா, லிக்கிறமிதிக்குமிபமென்ன
வதைசெய்தான். (௧௨௩)

தேரறவடித்திவுளிகண்சிதறமோதிக், கார்நிறவடற்கரிகள்காலினமொடிந்தே
பாரின்வரைபோலுடல்பதைத்துவிழவேயோர், மாரன்மகன்வன்கதையினெற்
றினன்வலத்தால். (௧௨௪)

சிரமுடையவேகடிதின்மாள்வர்சிலர்காலோ, டுரமொடியவேவரைகள்போலவுரு
ள்வார்வன், கரமொடியவேசிலர்கள்வீழ்ந்தனர்கலங்கிக், குரமொடியவேகுரகதங்
கள்குலைவுற்ற. (௧௨௫)

அடர்ந்தகைசுழற்றியநிருத்தமனடிப்ப, மிடைந்துகரிதேர்பரிகள்வீழவசுரேசர்
கடைந்தகடன்மீனெனநடுங்கினர்கலங்கி, யுடைந்திடவெகுண்டெழும் வாணனெ
திருற்றான். (௧௨௬)

வாணனெதிருற்றுவரிவெஞ்சிலைவளைத்துப், பாணமழைதூவியிடவேயுயர்பத
த்தாற், சேணுறவளர்ந்ததிருமால்சுதனருட்சேய், தூணிணைநிகர்த்தகதைசுற்ற
வவையற்ற. (௧௨௭)

மாலின்மகன்மைந்தனுயர்வன்கதைசுழற்றி, யாலமெனுமாசுகமனைத்தையுமுரி
க்கக், காலனெனவாணனழல்வெங்கணைகடாவி, வேலயின்முசுண்டிமழுவீசினன
னந்தம். (௧௨௮)

நூறுதசமானகரவாணனொடியின்முன், சீறிவிடுவேலயில்சிலீமுகமனைத்து
மாறிலரிசேய்புதல்வன்மாற்றியொருதண்டா, லூறியசுரேசரைநொறுக்கினனு
ருக்கி. (௧௨௯)

எய்தகணைமாரிகளெறிந்தபடையெல்லா, நொய்தினநிருத்தமனொறுக்கியதுகண்
டே, கைதவமுறுங்கடியகாலனிகர்வாணன், நெய்தணலினுற்றெனநெருப்பெழ
விழித்தான். (௧௩0)

அட்டதிசைமுற்றவுமடர்த்ததிறல்வாணன், சிட்டர்துதிசெய்யரிகுமாரனருள்
சேய்மேன், மட்டவிழும்வேணியனளித்தவடிவேலை, விட்டனனயன்றனொடுவி
ண்ணவர்களஞ்ச. (௧௩௧)

கண்டையொடு தண்டைகள்கறங்கவனல்சிந்த, வண்டரயனிந்திரனருந்தவர்க
ளஞ்ச, வெண்டிசையினுற்றகரியும்வெருவவென்றின், மண்டலநடுங்கவடிவேலெ
திரின்வந்த. (௧௩௨)

சுற்றுமனல்விஞ்சவருதூயவடிவேலைப், பற்றியநிருத்தமனெறிந்தபதகன்மே
னற்றவர்துதித்திடவிடுத்திடலுநண்ணி, யுற்றவுயர்வாணனுரமீதினுரகம்போல்.

கைத்தலமிசையினேந்திக்ககனமீதேகப்பின்ன
ருத்தமவடிவுமிக்கவுருக்குமிவிழித்துப்பார்த்தாள். (கசச)

கணவனையணையினோடுங்காண்கிலாளாண்டுநோக்கிப்
பிணைவிழிநிறையத்தோயம்பெருகிடவிதலையெய்தி
யுணர்விலையென்னச்சோர்ந்தேயுறுதுனியுளத்தைத்தீய்க்க
மணமலிகுழலிபின்னும்வாய்திறந்தரற்றலுற்றாள். (கசரு)

கருந்தடமுகில்போன்மேனிகவினுறுங்கணவன்றன்னைப்
பிரிந்துமென்னுயிர்போகாதபேதையேனன்புளார்போ
லரந்தையுற்றிரங்குகின்றேனழகிதென்கற்பென்றுள்ளம்
வருந்தியேயரற்றலோடுமடந்தையர்பலருங்கேட்டார். (கசசு)

உருக்குமியரற்றுமோசைகேட்டவொண்டொடியாரெல்லாம்
பொருக்கெனவெய்திவேடன்புதல்வனைக்காணாராகி
யரக்கனாலுற்றதென்னவாகுலமுற்றெல்லோரு
மிரக்கமுற்றழுதவோசையாவருங்கேட்டாரன்றே. (கசஎ)

அரிதனையன்றன்மைந்தன்கோயிலினரற்றக்கேட்டே
யிரதிவந்தெய்திச்சேயைக்காண்கிலாதிரங்கிமார்பிற்
கரதலமதனாலெற்றிக்கங்குலினழுதவோசை
புரிதனினுறைவோர்கேட்டுப்பொருக்கெனவெழுந்தாரன்றே. (கசஅ)

மாயவனுரத்திற்கொங்கையழுந்துறமலர்க்கையார
நேயமோடணைத்துத்தீபநிறையிருமருங்கிற்றோன்றத்
தூயபொன்னமளிமீதிற்றுயில்கொளுமலரின்றோகை
யாயிழையார்களெல்லாமரற்றியவோசைகேட்டாள். (கசகூ)

தன்னுடைத்தனையன்பெற்றதனையன்றன்கோயின்மேவி
யன்னமென்னடையினாளாண்டவன்றனைக்காண்கிலாளா
யின்னல்வந்தெய்தக்கண்ணீரிருநிலமிசையினோட
வன்னியின்மெழுகுபோலவுருகினள்வயிற்றினெற்றி. (கருo)

உருக்குமிதன்னைக்கையாலணைத்துளம்வாடிநொந்து
மருக்குழன்மடவாயுன்றன்மகிணனெங்குற்றானென்றே
யிரக்கமுற்றிடவேதூயவிரேவதியரிதன்மாதர்
முருக்கிதழ்வாயினாரோடரற்றியேமொய்த்துநைந்தார். (கருக)

குண்டினபுரக்கோன்பெற்றகோதையென்மகன்றன்மைந்த
புண்டரீகக்கட்செவ்வாய்ப்பொலிவுறும்வடிவாயுன்னைக்
கொண்டகன்றனர்கள்யாவர்கொடியவல்லசுரர்தாமோ
வண்டர்நாயகனுக்கிவ்வாறறைவனென்றேகும்வேலை. (கருஉ)

கருதுவேள்சுதன்றனில்விற்கங்குலினரற்றக்கேட்டு
விரைவினிலெழுந்துதூயவுருப்பிணிமேவவேசி
ரரியநிருத்தமன்சோணிதபுரத்தமர்ந்ததெல்லாந்
திருவுளத்துணர்ந்துமொன்றுந்தெரிகிலான்போலநின்றான். (கருங)

தீவிகைமாதரேந்தச்சீதரனிற்கும்வேலை
யோவியமுயிர்பெற்றென்னவுருப்பிணியொல்லையெய்தித்
தேவநங்குமரன்சேயைக்காண்கிலேனென்றுசெப்பி
யாவியும்பதைப்பத்தூயதாளின்வீழ்ந்தரற்றினாளால். (கருச)

இருகணீர்நிலத்தினோடவிறைஞ்சியதேவிதன்னை
யரியிருகையினாலெடுத்தணைத்தன்னமேநந்
திருமகனருளுமைந்தனுருவினைநத்தித்தீதி
லரிவையொடுத்துக்கொண்டுபோயினானாகுமென்றான். (கருரு)

மோதமெழுங்கடல்போலவுற்றிடவேயுயர்தேரி
னூதமலிந்திடவந்தானுகர்நடுங்கவடர்ந்தே. (௧௬௭)

வரையெனவுயரியதோளார்வளர்பிறைபோலெயிறுடையா
ரெரியுறுமுதிர்சினவிழியாரியமனும்வெருவுறமுனிவார்
பரவையிலொலியெனவதிர்வார்படியலையும்படிவருவார்
கரிபரிதேர்மிசையுயர்வார்கடுவிடமனையவர்மறவோர். (௧௬௮)

விழியுறுதழலினிமெனழிலிவெந்திடவேயுயர்தேரி
னுழுவையினினமெனவெதிர்வாருயரயில்வேல்கரமுடையார்
பொழிமழையெனவிடுகணையார்புகரிபவெரிமிசையெழுவார்
முழைவிடுமெரியினைநிகராய்முடுகினரவுணர்கள்வரைபோல். (௧௬௯)

* ஆனகதுந்துபியருள்சேயரசர்கள்பலருடன்வளையா
மானிடனிவனெனமதியார்வடவையினனலெனமுனிவார்
தானவர்சதவெளமுறவேதசசதமுறுகரமிலக
வானவர்வெருவுறவர்தான்மாவலியருளியவாணன். (௧௭௦)

வேறு.

கோபம்விஞ்சியசிந்தையர்கூற்றஞ்சும், பரிபமீருருவாய்ப்படிவந்தெனக் [ஞர்.
கூபகன்னன்கும்பாண்டன்குனித்தெழுஞ், சாபங்கொண்டுயர்தேர்மிசைத்தாவி

சங்கமார்த்தனபேரிதழங்கின, சிங்கம்போன்றசுரேசர்திரண்டுபொ
ரெங்கும்வேல்கதைவாளெறிந்தார்த்தனர், மங்குராளெனவானவரஞ்சவே. ()

அவுணரெய்துமெறிந்தும்வந்தார்த்தலுந், துவரையாதவவீரர்கடுன்னியே
கவனமாக்கரிதேர்கள்கடாவியொண், டவளமாவளையூதினர்தாக்கியே. (௧௭௩)

கவளமாகரிதன்னுடன்காதின, விவுளியோடுபுரவியெதிர்ந்தன
துவசவையமுந்தேருந்துளங்கிட, வவுணர்தம்மொடரசர்கடாக்கினர். (௧௭௪)

தோளுந்தோளுந்தொடர்ந்தெதிர்தாக்கவே, சூலஞ்சூலமொடேயடரச்சுடர்
வேலும்வேலுமிடைந்திடவிற்செறி, கோலுங்கோலுமுமிழ்ந்தகொடுங்கனல். ()

திசைதொறுங்கணைமாரிகள்சிந்தியே, தசையுமென்புஞ்சிதைந்திடத்தோமரம்
விசையினெற்றிவிழிக்கனல்பொங்கிட, வசுரரெங்குமடர்ந்தெதிர்த்தார்த்தனர்.()

முரசுதுந்துமிசங்குமுழங்கிட, நிரையமாகரிதேர்கணெருங்கிடச்
சிரசின்மீமகுடந்திகழ்ந்தேயிட, வரசராசுகமாரிபெய்தார்த்தனர். (௧௭௭)

கரங்களற்றனர்கால்கடுணிந்தனர், சிரங்களற்றனர்தேர்சிலையற்றபின்
னுரங்களற்றுமடிந்தனவும்பல்கள், குரங்களற்றுவிழுந்தனகோடகம். (௧௭௮)

மேகமின்னெனும்வீழ்வனபோன்றுகை, நாகமெங்குமடிந்தநல்வீரர்கள்
சேகரங்கடுணிந்திடச்செம்புனல், சாகரங்களிற்சார்ந்தலைவீசின. (௧௭௯)

சிலையிழந்துருடேரறச்சீறியே, நிலனிழிந்துநெடுங்கதைதன்னினு
லலையெழுங்கடல்போலடர்ந்தார்த்துயர், தலைபிளந்திடச்சாடிமடித்தனர்.(௧௮௦)

மீளிபோலவெகுண்டெழும்வீரர்கள், வாளொண்வேல்கள்மழுக்கரத்தோச்சியே
தாளுந்தோளுந்தலையுந்துணித்தனர், கூளியாடினராளிகுரைக்கவே. (௧௮௧)

அரசரும்மசுரேசருமார்த்துயர், வரிவில்வாளிகளெங்கும்வழங்கவே
பரிகள்பொன்றப்பருப்பதம்போன்றெழுங், கரிகள்வீழக்கவந்தமுமாடின.(௧௮௨)

மழுமுசுண்டிவலயங்கள்கப்பண, மெழுமுரட்கதைவிட்டெறிந்தியாதவக்
குழுவுளோரசுரேசரைக்கொன்றன, ருழுவைமானினத்தைச்செற்றதொத்தரோ.

* ஆனகதுந்துபி=போசன் பிதா.

வேலும்வாளுமுலக்கையுமிக்கமுட், கோலுமிட்டிடுமுத்தமும்விட்டெதிர்க்
காலமென்னவழன்றவுணதியர், மாலின்சேனையைப்புடைத்தனர். ()

படகம்பேரிபணிலமுழங்கவே, கொடியவல்லசுரோசர்கொதித்திடப்
படைவைபோலெழுவாளிகடுவிசிய, யடரவோடினமாயவனணிகளே. (க௦௫)

வேறு.

எரிசினமுற்றசுரோசர்களெங்கணுமுனிவொடெதிர்த்திடவே
புரவிகளெண்ணிலபுகரிபவீரர்கள்பொன்றிடமன்னவரோடா
பிரிதலுமஞ்சன்மினென்றுயர்வேறுபாற்றனிராமனிறை
வரிசிலைகொண்டெழுசாத்தகிசாம்பனிபம்முடைய்தனரால். (க௦௬)

பேரிகறங்கிடவேயுயர்தேவகிபெற்றிடுமைந்தன்முனோன்
றேரினிழிந்தலமேகொடுமாவணிசிந்தரவெங்கரிகள்
வீரர்கரங்களுரங்கள்சிரங்கள்முரிந்துவிழுந்திடவே
சாரிகையாகவடர்ந்தெதிர்மோதினன்வானவர்தாமகிழ. (க௦௭)

வரைகளெனக்கரிநிரைகள்மடிந்திடவாசிகளுஞ்சமுற
வரமொடுதோள்கரமென்புமொடிந்திடவீரர்களுண்டுதிர
மிருநிலமேனதியாயெழவெண்ணிலதேர்நிலையிற்றிடவே
விரைவினலாயுதமேகொடுமோதினன்விபுதர்களிதிசெயவே. (க௦௮)

சில்லுனைமாவுறுதேர்மிசையேதிகழ்சினியருள்சாத்தகிதன்
வில்லொலியேயுலகெய்திடவேபலவிசிகம்விதித்திடலும்
மெல்லையிலாவிவுளித்திரள்கரிநிரையிரதமொடசுரர்குழா
மொல்லையினிற்றனருதிரமிகுத்தவணோடினநதியெனவே. (க௦௯)

வாரிகலங்கிடமாரனெதிர்ந்தவிறலொடுவிவாளியுறப்
பாரினிடைப்பொழிமேகமெனப்பலபகழிசொரிந்திடவே
தேர்நிரைமீதசுரப்பதிவுளிகள்சிந்துரவெங்கரிக
ளோரிமையின்முன்மடிந்திடவாடினவலகையுலப்பிலவே. (கக௦)

அடிதுடையற்றனகுரகதமுற்றவுமமரர்துதித்திடவே
கடகரிநிரைகரமுரமறவரைகள்கடுப்பவிழுந்திடநீள்
கொடிகுடையிரதமறச்சினவசுரர்குலைந்துமடிந்தனரால்
வடிவுடைமதனன்விடுத்திடுபல்லவமாரியெனச்சொரிய. (ககக)

சாம்பனெடுங்கணைதூவிடவேயுயர்தானவர்வெண்கவிகைக்
காம்பறநீள்கொடியிரதமொடேசிலைகவசமுமற்றிடவே
சோம்பினர்பாறினர்மற்றவர்துஞ்சினர்தோல்பரிபொன்றினகண்
டேம்பலறக்கடிமலர்கள்சொரிந்தனரிமையவரெங்கணுமே. (ககஉ)

நந்தனுடேயுபநந்தன்விடுங்கணைநஞ்செனவேமுடுகத்
தந்திகள்பொன்றினசடனொடுசாரணனேவியசாயகமே
முந்தியறுத்திடவிவுளிகள்பட்டனமுக்கணனார்முனிவால்
வெந்தபுரத்தினர்போலமடிந்தனர்வெவ்வியதானவரே. (ககங)

சடனொடுசாரணன்மதனுயர்சினியருடனேயனலப்படையோன்
மிடலுடையெண்கருண்மகண்மகன்வீறுபநந்தனொடிவர்கள்விடு
மடுபகழித்திரளாலணிகத்தைவதைத்திட்டசுரருமோர்
கடலிறுதியின்வருகாலினுடைந்தெனவோடினர்காசினிமேல். (ககச)

வாசிகடோலணிதேருறுவீரர்மடிந்திடவேகுருதி
காசினிமேனதிபோலுறவெண்ணில்கவந்தநடித்திடவே
ஆசுகன்மோதநிலாதுபறந்திடுதூளிகர்த்தசுர
ராசைகடோறுமிரிந்திடமாமலரமரர்பொழிந்தனரால். (கக௫)

வேறு.

பாறுசேனையையஞ்சலென்றேபகர்ந், தேறுமேவுமிறையெனவேமிகச்
சீறுகின்றகும்பாண்டனுஞ்சீயம்போல், வீறுகூபகன்னன்ஞெடுமேவினான்.(ககசு

கொடிகொடேரிடைக்கோளரிபோலவே, யிடிகளஞ்சிடவார்த்திருவோர்களும்
வடவைபோலெழும்வாளிகளெய்துவந், தடரவோடினமாயனனீகினி. (ககஎ)

மீளிபோலக்கும்பாண்டன்வெகுண்டுயர், வாளிதூவிவருதலும்பால்வணன்
மூளும்வெஞ்சினத்தோடுமுடுகிப்புத், தேளிர்தேறிடச்சென்றெதிர்தாக்கினான்.()

அசுரன்விட்டவழற்கணையாவையும், விசிகமொன்றின்விலக்கியலாயுதன்
சசியினிற்பிளவன்னசரங்கள்வான், றிசையனைத்துமறைந்திடச்சிந்தினான். ()

தாலகேதனனெய்தசரங்களைச், சீலமில்லவண்மாற்றிச்சிலீமுக
மாலின்முன்னவன்மார்பினழுத்தியே, யாலமென்னவடர்ந்துஉந்தார்த்தனன். ()

உரமுறக்கணைதைக்கவுதிரநீர், பெருகவேமுனிந்தேபிறைவாளியா
லரிமுனோனசுரன்சிலைதேர்கொடி, பரியெலாமறுத்தானவன்பாறினான். (உ0க)

பாபரூபிகும்பாண்டன்பரிகடேர், சாபமுமற்றுப்பாறச்சழக்கனுங்
கூபகன்னன்கொதித்தெய்தக்கோதிலா, மாபதிச்சிறுவன்வந்துதாக்கினான். ()

மாரன்வந்துதடுத்தலுமாறிலாக், கோரனாகியகூபகன்னன்றிறல்
வீரவெஞ்சிலையால்விடுத்தான்கணை, பாரினிற்பெய்பயோதரமானவே. (உ0ரு)

தீயனேவுசிலீமுகம்யாவையு, மாயன்மைந்தன்வடிக்கணையாலறுத்
தேயெனும்முன்னவனிரதங்கொடி, தூயவெஞ்சிலையோடுதுணித்தனன். (உ0ச)

கொடிகடேர்சிலையற்றுக்கொடியவன்,கடிதின்வேல்கொடெறிந்திடக்காமவேள்
சுடர்கொள்வெங்கணையாற்றுணித்தேயவ, னுடலின்வாளியழுத்திடவோடினான்.

தீயகூபகன்னன்சிலைதேரற, வேயெனும்முன்னிடைந்திடவாணன்மா
வாயுவேகிகரும்பரிவையமேற், சீயம்போலணிகத்துடன்சென்றனன். (உ0சு)

வேறு.

பரிகரியிரதமொடளவறுபடைஞர்கள்படிமீதி
னிரைதரவுயர்கொடிககனமொடுறவரிநிறைதேரில்
வரையுறுகதிரெனவேமுடிசிரமிசைதிகழ்வாண
னெரியுறுவிழியினனிமையவர்வெருவுறவெதிர்வந்தான். (உ0எ)

தெசசதமுறுகையினயிலெழுமழுவொடுதிகழ்வாகத்
திசைசெவிடுறவுயர்சிலையொலியெழவளையிணையூதி
யசுரர்களிறைபவனமரர்கள்வெருவுறவழல்வாளி
விசையுறுமெழிலிகள்பொழிவதுநிகரெனவிடுகின்றான். (உ0அ)

பூரகமெய்குரமிருதுடைசிரமிவைதுணிபடவேவண்
கரிகரமுரம்வருபதமறவிழுவனகனமேபோல்
வரிசிலைகொடிகுடைதலையறவிழுவர்கள்மனர்பாரிற்
குருதிகள்பெருகிடவலகைகளணிவனகுடர்மாலை. (உ0கூ)

அரனருள்வரனுறுமவுணர்களதிபதியனல்வாளி
விரைவினிலெழிலிகள்பொழிவதுநிகரெனவிடவேபூ
நிருபர்கணிலயிசைவெருவினர்நிலையிலையெனவோட
வெரிசினமுறவுயர்சினியருடனையனெதிர்ந்தானால். (உக0)

இரிதருபுரவலர்வெருவன்மின்வெருவன்மினெனவோதி
வரிசிலைகொடுசினியருண்மகன்முனிவொடுவடிவாளி
சொரிதலுமசுரர்கடலைநிலன்விழவுயர்துரகங்கள்
சிரமிபநிரையுடலடியறவுருள்வனதிசையெங்கும். (உகக)

அவுணர்கடலைக்கரமுரமறைநுடையடியற்றவேமு
மிவுளிகள்சிரமறவிபகிளைகரமறவுயர்தேர்க
ளவனியினிறவலவனுமறயுகேணைபலவிட்டா
னுவகையில்சினியருள்சுதனுகவிறுதியின்மழைபொழிந்தே. (உகஉ)

கடகரிபரிநிறைறகதமுறுமசுரர்கள்படிமீதின்
மடிவுறவெமுகுருதியணைதியெனவரபகிழ்கூளி
குடர்தொடையணியனநடமிடவசுரர்கள்குலைவுற்றே
யுடைதலும்விபுதர்கள்வெருவுறமுகிலனுயர்வானோன். (உகங)

எதிரினமுறவுயர்தசகதமுறுமகையினிலகும்போர்
வரிசிலைபலகொடுமழைபொழிவெனவடிவாளி
சொரிதலுமருள்செறிசினியருள்சுதனொருசுடர்வாளி
விரைவினின்விடவவைபறுதலும்விபுதர்கடுதிசெய்தார். (உகச)

வினையுறுமசுரர்களிறையனலுறுபடைவிடலோடுஞ்
சினியருள்சுதனழலுறுபடைசெலவிடவவையற்ற
துனியுறுபவன்மகபதிசரம்விடவவைதுணிசெய்தான்
றினகரனருளியபடைகொடுசிதரணனுசன்றான். (உகரு)

அந்தகன்வெருவுறவவுணர்களதிபதிசரமெங்குஞ்
சிந்திடவவையறவரியனுசன்சிலிமுகமாரி
யுந்திடவெதிர்பொருமாவலியருள்சுதனுறுதேர்மா
விந்துவையணவியகதலிகைபலசிலைநிலையிற்ற. (உகசா)

உருளிரதம்பரிகொடிகுடைவில்லிவையறவூழி
யெரியெனமுனிவுறுமசுரர்களிறையொருதேமோதி
வரிசிலைபலகொடுசினியருள்சுதனுரமிசைவாளி
சொரிதலுமிமையவர்வெருவுறவுருவினதுனைசெய்தே. (உகஎ)

உரமிசைகுருதிகள்பெருகிடமுனிவுறுமாகன்போ
லெரியுறுவிழியினனுயர்சினியருள்சுதனிடியஞ்ச
வரிசிலையொலியுறவசுரர்களதிபதியகன்மார்பி
னுருவிடவடுகணைகடவினனொருநொடியின்முன்னம். (உகஅ)

தியவனுரமிசைகுருதிகள்பெருகிடநனிசீறி
யாயிரமடுகணைகொடுசினியருளரசன்றேர்மா
தூயவிலுயர்குடைதுவசமுமறவிருநிலமீதின்
வாயுவின்விசைகெடவோடினன்மாதவனனுசன்றான். (உககூ)

பூதலமிசைசினியருளியபுதல்வனிடைந்தோடத்
தீதுறுமவுணர்களிறையவனார்த்துயர்சிலைகோலி
மாதிரம்வான்மண்மறைந்திடவாளிகள்விட்டேகோ
தேதிடயாதவவீரர்கள்வெருவியுடைந்தாரால். (உஉ0)

யாதவவீரர்களெண்டிசைதோறுமிரிந்தோட
மீதுயர்தேர்மிசைநின்றுவிளங்கியமேகம்போன்
மாதவன்வெஞ்சிலைகோலியடர்த்திடுவாணன்மே
லாதவன்வெஞ்சுடர்போற்றிகழாசுகமெய்தார்த்தான். (உஉக)

மாயன்விடுங்கணைமாரியைவாளிதனால்வாண
னேயெனுமுன்னமறுத்தியமன்படையெய்த்தார்ப்பத்
தூயவனிந்திரன்வெம்படைகொண்டவைதுணிசெய்தே
மீயுயரண்டம்வெடித்திடவூதினன்வெண்சங்கம். (உஉஉ)

வாயுவின்வெம்படைவாணன்விடுத்திடநிரைமேய்க்கு
மாயனெடிப்பினினாசுகன்வாளியினவைமாற்றத்
தேயுவின்வெம்படைதீயன்விடுத்திடவருணக்கோன்
றூயவடற்படையாலவைமாய்த்தனன்சுடர்நேமி. (உஉங)

பிரமனடற்படைவிட்டனனவுணர்கள்பெருமானெம்
பரமனயன்படைகொண்டதுமாய்ந்திடுப்டியெய்தான்
புரமெரிசெயநகைசெய்தருளும்புனிதன்னீயுஞ்
சரமசுரன்னுயர்தனுவைவளைத்துவிடுத்தானால். (உஉச)

ரனவன்விட்டதழற்கணைவெம்படைசகமோடு
னவரஞ்சிடவடவனலிதுவெனவரலோடும்
னுவின்மண்டலமீதுறையும்பரனுமைமாதின்
ானுடைவெம்படையெய்துகுறைத்தனனுயர்வில்லால். (உஉரு)

வங்கயமன்றுவதைத்தருள்மாலொருவிசிகத்தாற்
ங்கரன்வெம்படையைத்துணிசெய்திடுசெதிர்கணடே
ங்கமெனச்சினமுறவுயர்வாளிகள்சிலைகோலி
ங்குல்பொழிந்தெனவெங்கும்விடுத்தனன்விறல்வாணன். (உஉசா)

யவன்விட்டசிலீமுகமெங்கணுமுறவேசீர்
ரயவன்மேனியின்மங்குவின்மூந்தியதுகிரோபோ
லயெனுமுன்குருதிப்புனல்விஞ்சிடவிமையோரோ
ாயிரநயனனும்வெருவினனவுணர்கடிரளார்த்த. (உஉஎ)

ஆடகன்மகன்மகனுதவியசேயிருள்சுதனம்பு
டலுமானகைசெய்துயர்வாளிகள்விட்டூட
ீடியகொடிசிலையறவலவன்சிரநிலன்வீழக்
காடகமுருளநிறைந்தனசெம்புனல்கொடியோன்மேல். (உஉஅ)

வேறு.

லையழிந்துயர்கொடியிழந்துருடேரிழந்தயமறமிகும்
லவன்மங்கிடமெய்துளைத்தடர்மாலின்வாளியின்வாணனூர்
லையழிந்திடுபொழுதின்மற்றவனன்னைகேட்டுநெறியிலாள்
லையிலாதளகம்விரித்தொளிர்கண்ணன்முன்னரினெய்தினள் (உஉகூ)

ரக்கினத்தொடுகுழல்விரித்தவணண்ணவேமிகநகைசெயாச்
சக்கரத்தவனுணியேபொருசமரபூமிகழிந்தன
னுக்கிரத்தெதிர்வாணன்மால்விடுபகழியான்மெய்யுளைந்தமை
பக்கணத்தினறிந்தனன்கயிலைக்கண்வாழதிபதியரோ. (உகூ0)

வாணனுக்குயர்வரமளித்தருளீசன்வாளிநிறைந்திடுந்
தூணிதன்வெரிந்வீக்கிநற்சிலைதூயகையினிலங்கிட
வேணியிற்சசிகங்கைமங்கைவிளங்கவேயுரகங்கடாம்
பூணாரத்தின்வயங்கிடப்புலியதளினுடைபொருந்தவே. (உகூக)

விடமமைந்தகிரீவமீதுவியாளபூடணமிலகவே
நடமிடும்பதமிசையின்வச்சிரநற்சிலம்புபுலம்பிட
வடிவுடைத்திருமேனிதன்னில்வெணீறுமன்னிவயங்கிட
விடபமேநிகழ்துவசம்வானடரிரதமீதினிலேறினான். (உகூஉ)

கொன்றைதும்பைகரந்தைமத்தையெருக்குநன்மலர்கூவிளை
யொன்றுசெஞ்சடைதிகழவேநுதல்விழிவயங்கிடவொப்பின்மான்
கன்றுநன்மழுவங்கிநீடுகரங்கள்மீதுதுலங்கிட
வென்றுறுஞ்சுடர்மானுமாமணியிரதமீதினிலங்கினான். (உகூங)

ஆகுவாகனமீதிணங்கரனெய்தவேயழகானதோர்
கேகயத்தினின்மேவியாறுகிரீடமார்குமரன்வர
வேகமாகியகுறளிடாகினிவிஞ்சுபூதபசாசுகள்
சாகரத்தொலியஞ்சவாய்விடுபிரமராக்கதர்தாம்வர. (உகூச)

விடமதாகியயாதுதானர்கள்விகடமாகியபிரமதம்
படியின்மீதுயர்கூச்சுமாண்டர்கள்பயமிலாதவேதாளர்க
ளிடிகளஞ்சமுழக்குபூதமதாவுடன்னிவரெண்ணிலார்
கடுவைநுங்கியகாலகாலன்முனேயடர்ந்துகலந்தனர். (உகூரு)

மூடுவென்மீதிடைடமரகங்கண்முழக்கியேவருவயிரவர்
துடிகைசச்சரிபம்பைகும்பிகைதிமிலைதுந்துமிதூயகோ
டிடிகளஞ்சுமுழக்கமோங்கிடவிரணியச்சினமெங்கணும்
விடையன்வந்தனன்விமலன்வந்தனனென்றவோசைகள்விஞ்சவே.

திரிபுராந்தககாலகாலசிவாசிவாவிடபாரணா
வுரகபூடணசசிசடாதரயுழுவையின்னுரியாடையா
வுரகராவிமவானளித்தருளரிவைநாயகவென்றுதா
மிருமருங்கினுமெண்ணில்பூதகணங்கண்மேவியியம்பவே. (உ௩௭)

இறுதியின்னுலகெங்கணும்நுதல்விழியினங்கியினிறவுசெய்
கறைமிடற்றிறையெண்ணில்பூதகணங்களோடுயர்கரிமுக
னறுமுகத்தவன்வயிரவத்திரளடரவானவரஞ்சவே
பிறையெயிற்றசுரேசன்வாழ்பதியெய்தினன்பிறிதிணையிலான். (உ௩௮)

வேறு.

மயிலினுயர்குமரன்வயிறுபெரியவனொ
டயில்கள்கரமிலகவமரும்வயிரவர்கள்
கயிலையிறையினொடுகெடுகிவரவரசர்
அயமொடிபமிரதமளவில்கடவினர்கள். (உ௩௯)

சூலம்வலையமழுதூயகதைசுரிகை
வேல்கள்குலிசமுறவீசியுகவெழிலி
போலவிடுகணைகள்பூதகணமலகை
மேலின்விடுநிருபர்வீரர்வெருளலுமே. (உ௪௦)

பூதகணமலகைகுகியர்பொறிகளுக
வேதமுறுநயனரிருகைகதைகள்கொடு
மோதவிபநிரைகண்மூளைசிதறவுயர்
பாதமுரமொடியவீழ்வபடியின்மிசை. (உ௪௧)

சீயமெனும்வதனர்தீயையுமிழ்விழியர்
வாயினுகுபுகையர்வானினுறுமெயினர்
நோய்களெனநவில்வர்நூறுசிரசினர்கள்
காயுமயில்கள்விடமாள்வகரியினினம். (உ௪௨)

நெடியகதைகள்கொடுநிருபர்தலைதுணிய
முடிகள்சிதறிவிழிபறியமுதுகொடிய
விடிகளெனவறைவரிபமொடயமனிதர்
குடர்கடலையணிவர்கொடியகுகியர்களே. (உ௪௩)

ஆசைதொறும்வடவையாகவயிரவர்கள்
நாசிதனிலுமிழநாகநலவிரதம்
வாசியுடனெரியமாள்வநிருபர்திர
ளோசையுறுகுருதியோடநிலமிசையே. (உ௪௪)

வாவுபரியினர்கள்சேரவயிரவர்கள்
நாவின்வளைவரெரிநாசிதனிலுமிழ
வீவர்நிவர்கரியைவீறுபிரமதர்க
ளாவலுடனுகர்வராடிநிலமிசையே. (உ௪௫)

விதியொடமரர்களும்வெருவவயிரவர்கள்
கதைகள்கொடுபரிகள்கரிகள்படவறைய
நதிகணிகர்குருதிபரவநடமிடுவர்
குதிகொள்குகியரொடுகொடியவலகைகளே. (உசசு)

தேர்கடனையெறிவர்சிறுகரிகடமை
வாரியுறவுதைவர்வாசியுடனுமவர்
வீரர்தலைகிள்ளுவர்மேவுபிரமதர்கள்
பாரினடமிடுவர்பாறுகழுகுறவே. (உசஎ)

வாயுவெனவறைவர்வாரியெனவளைவர்
தீயதெனவடர்வர்சீறுவயிரவர்கள்
பாயுமிவுளிகரிவீரர்படியின்மிசை
சாய்வர்தழலடரவேகுசருகெனவே. (உசஅ)

கழைகொள்வரைகணிகர்காலவயிரவர்கள்
விழியினுமிழழல்கள்வீறியடரவுய
ரெழிலிகருகிநிலன்விழுவவிமையவர்க
ளழியுமுலகமெனவெருவியலறினரே. (உசகூ)

வேறு.

பூதமாதீவிழிப்பொறிகள்வேதாளமோ
டேதமார்பிரமராக்கதரிடாகினியுளோர்
தீதுசேர் கூர்ச்சுமாண்டார் சினம்மலியவே
காதினாரசர்கள்கதைகளான்மடியவே. (உருo)

பரிகளைத்துகளுறப்படிமிசைப்பிசைகுவார்
கரிகணற்கோடுகைகாலும்வேறுகவே
தரையினிற்றுகைசெய்வார்தமனியத்தேர்களை
வரையிடத்தறைகுவார்வயிரவத்திரர்களே. (உருக)

கோடுடைக்கரிகளின் குருதியைப்பருகியே
யாடிநற்பரிகளின் றசையருந்திடுவர்தேர்
சாடிவெஞ்சூரர்தந்தலைகளைத்திருகுவார்
பாடியங்கோடியேபிரமராக்கதர்பலர். (உருஉ)

பூதவேதாளமாவயிரவர்பொங்கியே
பாதவம்வேர்பறித்தோங்குபல்வரையின்மேன்
மோதிவெங்கதையினான்முடுகியேசாடவே
யாதவப்படைஞர்நில்லாதிரிந்தோடினர். (உருங)

தோலினற்றேரிலேபோர்த்தவன்படைஞர்சூழ்ந்
தாலகாலம்மெனவடரவேயரசர்கண்
ஞாலமீதோடலுங்கண்டனல்நயனனைத்
தாலகேதனனலங்கைக்கொடேதாக்கினான். (உருச)

கயிலையங்கிரியெனக்கையினலந்திகழவே
சயிலநேர்பூதவேதாளடாகினியர்தஞ்
செயலழிந்தோடவேசெகதலங்குலையவே
முயலகன்முதுகினின்றான்முனம்மோதினான். (உருரு)

சிகியெனுங்கண்ணன்வெண்சிகரமேபோலவான்
புகையுயிர்த்தேயலத்தாற்புடைத்திடலுமே
குகியரும்பிரமராக்கதர்களுங்குருதிவா
யுகநிலத்தோடினரும்பருங்காணவே. (உ௫சு)

வடிவனற்பிறழுகண்மதிவணன்ஞஞ்சிலா
விடிகளோங்கலின்விழுந்தென்னமோதிடலுமே
கொடியவெங்கூச்சுமாண்டருமுளங்குலையவே
கடுகியேயோடினார்குருதிவாய்காலவே. (உ௫எ)

அரவெனச்சீறியேயலமெடுத்தரிமுனோன்
பரவையைக்கடையுமத்தனையமாவயிரவர்
சிரமிசைக்கடிதடித்திடலுமேதிசைதொறும்
வெருவியக்கணநிலத்தோடினார்வெள்கியே. (உ௫அ)

புரமெரித்திடுமரன் படைஞராய்ப்பொருமவ
ருரமிசைக்கிரியின்வீழுருமெனச்சசிவணன்
கரமெடுத்தலமுறக்கடுகியேமோதலும்
பிரமதப்பெயரினார்பீதியோடோடினர். (உ௫கூ)

வேறு.

சினியருட்சுதன்முனிவொடுந்தியதேரின்மீதுயர்சிலையினு
லனலுகுத்திடுமாசுகங்களையாசைதோறுநிறைத்திட
முனைமிகுத்தடர்பிரமராக்கதர் மூளும்வெஞ்சினடாகினி
யினநடுங்கிமெய்க்குருதிநீர்நில னிழியவெங்கணுமோடினர். (உசுo)

மாரன்வெஞ்சிலைகோலிநாணுலிவாளுெடண்டமவிந்திடக்
கோரவெங்கணைநூறுகோடிவிடுக்கவெங்குருதிப்புனல்
வீரம்விஞ்சியகுகியர்பூதர்பசாசர்மெய்யினிலருவியாய்ப்
பாரினேடைவளைந்துநொந்தவர்பாறினர்திசைதோறுமே. (உசுக)

சாம்பனெண்டிசைதோறும்வில்லுறுசாயகங்கள்விடுத்திடப்
பாம்பணிந்தருளீசன்வெம்படையோர்கண்மேனிதனிற்படத்
தூம்பினுள்வருநீர்கள்போலுதிரங்கள்வந்துசொரிந்திட
நாம்புகோமினியென்றுமிச்சமரென்றுபாறிநடுங்கினர். (உசுஉ)

தாலகேதனன்மதனன்விஞ்சியசாத்தகிப்பெயரோனுயர்
ஞாலமெண்ணியசாம்பனேடிவர்நால்வரும்மடர்ந்தேபொர
வாலமாவிடமுண்டவன்விடுபடைஞரஞ்சிநிலத்தினிற்
காலின்முந்தியகாலினேடினர்கயிலையங்கிரிமீதரோ. (உசுஙா)

வேறு.

கூடுபூதகணமடங்கவோடும்வேலைகொடியளா
மோடியாளிமீதினேறிமுனிவர்தேவரஞ்சிட
நீடுதோல்கள்குரகதங்கள்நிருபரொங்குமடியவே
சாடினாள்பலாயுதந்தடக்கைதோறுமிலகவே. (உசுச)

கொடிகடேர்கள்குரகதங்கள்குஞ்சரங்கடுகளுற
முடிகொள்வீரர்சிரமனந்தமுகில்கொள்வானநிறையவே
சுடர்கொளாயுதங்கரங்கடோறும்வீசியடருமக்
கடியளார்ப்புரித்தவோசைககனமுற்றுமுற்றவே. (உசு௫)

அனங்கன்வில்லறுத்தலாயுதன்வயம்மழித்துவெஞ்
சினங்கனன்றுவந்தசாம்பன்மார்பினிற்சிலீமுக
வினங்கடுன்னவெய்துமாலினனுசர்நாமவெரிநிறக்
கனங்கொடாரைபோலவாளியெங்கணுங்கடாவினான். (உசுசு)

சிங்கவாகனத்திலங்கடர்ந்துபோர்செய்திறவினா
லெங்கும்வீரரிடைதல்கண்டியாதவர்குலப்பிரான்
மங்குல்போலவட்டதிக்குமறையவாளிபொழியவே
வெங்கணீலிபாறினாண்மெய்குருதியாறுவழியவே. (உசுஎ)

வேறு.

சங்கரன்விடுநீலியஞ்சிமெய்தளரவோடியதன்மைகண்
டைங்கரன்கதமுறுமனத்தினனுகுமீதினினேறியே
வெங்கயம்பரிவீழவெங்கதைகொண்டுமோதினன்வீரர்கள்
சிங்கம்வந்திடவெருவுமாகரிபோலவோடினர்திக்கெலாம். (உசுஅ)

வாளிவிட்டெதிர்சாம்பனோடரன்மதலைபோர்செய்துகதையினான்
மூளும்வெஞ்சினமோடவண்பரிதேருருண்டிடமோதினன்
மீளிபோல்வருசாத்தகிப்பெயரோன்விடுத்திடுகணையெலாந்
தூளியாகவடித்தனன்முசலத்தினாலுமைசுதனரோ. (உசுகூ)

மீண்டும்வாளிகள்விட்டசாத்தகிவிஞ்சுதேருறுமாவெலா
மாண்டுவீழவடித்தனன்கதைதன்னினாலரன்மதலையே
மூண்டவெஞ்சினமுறவடர்ந்திடுமெதனன்வெங்கணைமுடுகலும்
ஸையில் பாண்டுறும்மொருகொம்பினாலயல்பற்றியேதுணிசெய்தனன். (உஎ0)

மீளவுங்கணைமதனனெய்திடவேவெகுண்டவனிரதமா
மாளவெங்கதைகொண்டுமோதினன்வண்மைசேர்கரிவதனனுங்
காளமாமுகின்மானுமெய்யொளிர்கண்ணன்மூன்னவனுமிறை
மூளும்வெஞ்சினமோடலாயுதமேந்தியேயெதிர்மூந்தினான். (உஎக)

வந்தெதிர்ந்திடுமாயன்முன்னவன்மீதின்வெஞ்சினம்வந்துறத்
தந்தியானனன்முந்தியேயொளிர்தண்டுகொண்டுறமோதலு
மிந்துவண்ணன்முனிந்தலத்தின்விலக்கியேயெதிரெற்றிட
வந்திவண்ணனருட்சுதன்கதைகொண்டடர்ந்துதடுத்தனன். (உஎஉ)

கரிமுகன்கதமுறமுரண்கதைகொண்டுவானவர்காணவே
யரிமுன்னோனுரமிசையடித்திடவடுசினத்தொடுசிவண
னெரிவிழித்திடிவரையினுற்றெனவிரைகடற்றிரையெனவும்வா
யரவமுற்றிடவரனருட்சுதன்மீதடித்தனனழலுற. (உஎங)

ஆகுவின்னுடன்மீதடித்துயரைங்கரன்னொருகொம்பின்மே
னாகமுற்றிடிவீழ்வபோற்றிருநாதன்முன்னவன்மோதிட
வாகவந்தனினிற்கலானுயரண்டர்நோக்கிடவக்கணம்
வேகமோடுகெழிந்துபோயினன்விறலடங்கிவிநாயகன், (உஎச)

வேறு.

பூதகணமோடுகரியானனனிடைந்திடவெகுண்டுபுகழ்சே
ராதவனளக்கரினிலங்குகவின்விஞ்சியிடவாறுமுகவன்
ஏதமின்மயூரமிசையேறியொளிராறுமகுடம்மிலகவே
யூகினன்வயங்கியவலம்புரியையண்டர்திரளோடியிடவே. (உஎரு)

தண்டைமணிநூபுரமலர்க்கழலின்விஞ்சுதபனனசுடர்தர
மூண்டகமலர்ந்ததெனவேநகைபொருந்தியமுகங்களிலகக்
கொண்டலினுறும்மிரவிபோலமயின்மீதொளிர்குலாவியுலகோ
டெண்டிசையுமஞ்சிடவெழிற்சிலையினாணினையெறிந்தனனரோ. (உஎசு)

நாணினையெறிந்திறுதியிற்பெய்மழைபோலவளைநற்சிலைகொடே
பாணமுயர்வானுலகமெண்டிசைகளும்பரவவெய்திடலுமே
தூணைநிகர்தாளுடைய தும்பியொடுவெம்பரிதுணிந்துநிருபர்
பாணியொடுகந்தரமிழந்தனர்கவந்தநடமிட்டபடிமேல். (உஎஎ)

கோடுடையவெங்கரிகள்கோடியழல்வாளிகொடுகொய்துகொடிதே
ராடகம்வயங்கவுருடேரினுயர்மாவலவனற்றுவிழவே
நீடுசரமேவிநிருபத்திரள்கண்மாளவிசிகங்கணிறைய
மூடினன்முனாளினடர்சூரனைவதைத்தருளுமாறுமுகவன். (உஎஅ)

சாம்பன்விலறுத்தவிர்கொள்சாத்தகியுரத்தெரிதழற்கணைவிடப்
பாம்புருவொழிந்தவன்மெய்யெங்குமுதிரப்புனல்பரக்கமுதுகிற்
போம்படிசுடர்க்கணைவிடுத்துயர்புராரியருள்புத்திரனணி
யேம்பலுறவூதினன்வலம்புரியையெண்டிசையுமஞ்சியிடவே. (உஎகூ)

காலினணிதண்டைகள்கலின்கலினெனக்கனமெனத்திகழ்மெயிற்
பீலியுறுதோகைகவினுற்றிடவயங்குவெரிநின்பிறையணிந்
தாலநுகர்வோன்மகனமர்ந்திடவிலங்கியமயூரமதமார்
தோலிவுளிவீரர்கண்மடிந்திடவடித்தவிருதூயசிறகால். (உஅ௦)

வீரமயில்வாகனனெடுங்கணைசொரிந்தவிறல்கண்டுமுனியா
மாரனுயர்தேர்மிசையின்வெஞ்சிலைவளைத்தெழில்கொள்வாளிபொழியச்
சூரனைவதைத்தவிறைதூயவிசிகத்தவைதுணித்துநெடிய
வாரியலையஞ்சியிடவூதினனிலங்கியவலம்புரியரோ. (உஅக)

ஆறுமுகன்வெய்யவனடற்படைதொடுத்திடலுமச்சுதன்மகன்
மாறிலனல்வெம்படைதொடுத்தவையறுத்துவளையூதியிடவே
யேறுளவன்மைந்தனியமன்படைதொடுத்துவிடவிந்திரசுதன்
கூறரியவிந்திரன்விறற்படைதொடுத்தவைகுறைத்தனனரோ. (உஅஉ)

வேறு.

காலனுயிர்கொண்டவிறைநல்கியருள்கந்தன்
நாலுமுகன்வெம்படைதொடுத்துவிடநன்கா
ராலிலையின்மீதினமரச்சுதகுமாரன்
சீலமலரோன்படைதொடுத்தவைசிதைத்தான். (உஅங)

கோலமிகுவள்ளியுயர்கொண்கன்முனிவுற்றே
வேலினையெடுத்தெறியவேலைதனில்விஞ்சு
மாலமெனவேயமரரஞ்சினரிரிந்தார்
ஞாலமிசையோர்வெருவுதன்னவிலலாமோ. (உஅச)

கண்டைகள்கலின்கலினெனக்கனல்கள்சிந்த
விண்டலநடுங்கவடவெற்புமசைவெய்த
வெண்டவர்களஞ்சியிடவேயலறியென்றின்
மண்டலமுமின்மினியையொப்பவெதிர்வந்த. (உஅரு)

கந்தன்விடுவேல்ககனமஞ்சவரலோடு
மிந்திரைதன்மைந்தனரன்வெம்படையெடுத்தே
மந்திரநவின்றுவிடமாவடவைபோலச்
சிந்துதழலோடுமவன்வெம்படைசிதைந்த. (உ௮௬)

வேலவரன்சுதன்வெகுண்டுவெரிவந்த
வாலநிகர்வெங்கணையடர்ந்துவிடலோடு
மாலின்மகன்மார்புறுதல்வாகுகரமெல்லாங்
காலமுகில்பெய்தவெனவேகுருதிகான்ற. (உ௮௭)

தீயுமிழும்வாளிவிடவேள்சினமிகுத்தே
வாயுவினில்மும்மடிவிசைத்தறையும்வாளி
தூயவுமையாண்மதலைமெய்யிடைதுரப்ப
வேயெனுமுன்மாமயிலொடேகினனிடைந்தே. (உ௮௮)

வேறு.

போதகவதனன்பூதபசாசர்புகைவாயர்
தாதவிழ்தொடைசேர்சண்முகனிவர்வெஞ்சமர்செய்தே
பீதியொடோடக்கண்டனனுயர்பிஞ்ஞகநாதன்
சூதனைவிடுநீதூய்மைகொளிரதந்தனையென்றான். (உ௮௯)

ஆதவனவிர்போலிலகியவிரதந்தனையாசில்
சூதன்விடச்சாமரைகுடைதிகழத்துவசம்வாள்
போதவடர்ந்தேபூதகணங்கள்புடைசூழ
நாதனெதிர்ந்தான்நான்முகன்வானோர்நனியஞ்ச. (உ௯௦)

திங்கள்கடுக்கைகூவிளைகொன்றைதிரைவீசுங்
கங்கைவயங்குஞ்செஞ்சடைமீதிற்கவின்மல்க
வங்கையில்மானுமங்கியுமழுவுமழகாகத்
தங்கிடவம்பொன்னூபுரமுந்தாடனின்மேவ. (உ௯௧)

சூரியுரியுடலிற்போர்த்தருண்முதல்வாகடல்மீதின்
வருவிடநுகர்வாய்மதிவளர்சடையாய்மழுவல்லாய்
திரிபுரதகனுதக்கனல்யாகஞ்சிதைவித்தாய்
அரகரசிவனேயென்றடர்பூதத்திரளாட. (உ௯௨)

துந்துமிதக்கைகடிகையிடக்கைகளறைபம்பை
நந்துயர்முரசம்படவிகைநற்பொன்னுறுசின்னஞ்
சிந்துவினலையும்மஞ்சிடவெண்டிக்கினில்மேவுந்
தந்திகள்வெருவப்பேரொலியெங்குந்தரவந்தான். (உ௯௩)

பிறையெனவளைவுற்றிலகுபிஞகங்கரமேந்திக்
கறையுறுகிரிவங்கட்செவிதிகழுங்கலன்மல்க
விறுதியினீரேழுலகையழிக்குமிறைவன்வா
னுறைபவர்மறுகிடவூதினனெண்சங்கினையம்மா. (உ௯௪)

* இண்டைகொள்சடையானிந்துவினெழிலார்வளையூத
வண்டர்களண்டம்விண்டதுகொல்லென்றடர்நஞ்சை
யுண்டவன்முனிவுற்றேயிவண்வந்தானுலகோடு
மெண்டிசையுள்ளார்யாவருமுய்யாரெனநொந்தார். (உ௯௫)

---

* இண்டை — தும்பை கொன்றை முதலிய மாலைகள்.

பூதகணத்தோடேயிரதத்திற்பொலிவெய்தி
மாதொருபாகன்வானவரஞ்சவரலோடு
மூதையினில்லாதோடியபூளைதனையொத்தே
யாதவவரசர்களெண்டிசைதோறும்மிரிவுற்றார். (௨௯௬)

நீருறுசடையன்முனிவொடுவரவேநெடுவோனிற்
பாரினினமர்வோரிரிவதுகண்டேபைம்பொற்றேர்த்
தாருகன்முடுகத்தாமரைமலரார்புயறானே
யேருறவெதிருஞ்செயலுறவந்தானெழின்மாயன். (௨௯௭)

ககபதியுறுநற்கதலிகையுயரக்கனகத்தேர்
செகதலமதிரச்செலவளைசார்ங்கந்திகழ்வான்மே
லுகவிறுதியினின்வருமரன்வெய்துற்றுறுமேக
மிகவவனிக்கண்பெய்ததுபோல்வாளிகள்விட்டான். (௨௯௮)

ஆலநுகர்ந்தவனெய்திடும்வாளிகளடரச்சீர்
மாலனல்வெங்கணைகொண்டுசிதைத்துயர்வளைவில்லா
னாலிருதிக்குமறைத்திடவேயுகமழைநாண
நூலிடைமங்கையர்நோக்கநிகர்த்திடுகணையெய்தான். (௨௯௯)

அரிவிடுகணைகளறச்சிவன்வெங்கணையெய்தார்ப்ப
விரவிநெடும்படையெய்தனனிந்திரைகொழுநன்றான்
கரியுரிதரியிறைகாலனெடும்படைகைக்கொண்டே
வரிசிலைவளையவிடுத்தவைமாற்றினன்வளையூதி. (௩௦௦)

கடுவிடநுகரிறைகனகமணித்தேர்வலம்வந்தா
லிடம்வருமாயவனிரணியவிரதம்மிருவோரும்
விடுபடையதனால்விண்ணகமெல்லாம்புகையாகப்
படியினொடெண்டிக்குறவனலெங்கும்பரவிற்றால். (௩௦௧)

அரியிவனரனிவனென்றயன்மகபதியிமையோர்
டெரிவகையறிகிலர்சிந்தைதியங்கினருயர்தேரி
னிருவருமிடம்வலமெண்ணிலசாரிகைவந்தேவிண்
சொரிமழைபோனெடுவாளிபொழிந்தனர்சுரரஞ்ச. (௩௦௨)

குழலிசைவாயனுமுமையவள்கொழுநனுமெய்தார்ப்ப
வழலுறும்வாளிகளம்புவியாசைவிண்ணளவாக
வெழிலிகரிந்தனவுடுவுமுதிர்ந்தனவிமவானுஞ்
சுழலநெடுங்கிரியசையவறண்டதுசூழ்வாரி. (௩௦௩)

கங்கைகொள்வேணியனுங்கடல்வண்ணனுமெய்தார்ப்ப
வெங்குநிறைந்திடுவாளிகளெண்டிசைதனைமூட
வங்கியுமங்கினவாயுவுமற்றனவடர்சீதத்
திங்களழிந்திடவிரவிசுழன்றதுதிசைமாறி. (௩௦௪)

மலிதவமுனிவர்கண்மகபதிவிபுதர்கண்மனநொந்தே
நிலையினியுலகினிலழியுமெனச்சொலிநினைவற்றங்
கலையுறுபரவையுளமிழ்வுறுவங்கமதாமென்ன
மெலிவுறுமுடலினர்வேதனுடன்பகர்வுற்றார். (௩௦௫)

ஏழுலகுண்டவனிவனவனவ்வேழுலகத்தை
யூழியின்மாய்ப்பவனிருவருமொன்றாயுயர்வோர்கள்
பாழிகொள்புயமீதிடைவலிகாட்டிப்படைவிட்டா
லேழையரெங்ஙனமுய்குவமென்றாரிமையோர்கள். (௩0௬)

இமையவர்முனிவர்களிவ்வுரைகூறிமெய்மெலிபோழ்திற்
சமனிலவரிவிடுசாயகமெங்கணுநிறையச்சீ
ருமையவண்மகிணன்விழிக்கனல்பொங்கவுருத்தேகா
மமனையன்மீதினின்வாயுவின்வெம்படைவிட்டார்த்தான். (௩0௭)

வேறு.

ஈசனெய்தருளும்மனிலன்படையீழநல்வரையும்மசைவெய்திட
வாசையெங்குமமர்ந்தபிறங்கல்களான்றெழுந்தமரங்கள்பறிந்திட
வீசியெண்டிசையுந்துகண்மண்டிடமேகபந்தியலைந்துகுலைந்திட
வாசவன்கமலன்றிகழண்டர்கண்மாபயங்கொளவந்ததுமுந்தியே. (௩0௮)

மாறில்வெம்பவனன்படைவிஞ்சியவாரியின்னயமுங்கழிவெய்திட
வீறிவந்திடுசெய்கையறிந்துயர்வேதனையனும்வெஞ்சிலையின்விடு
பாறுவின்படைகண்டனிலன்படைபாரின்விண்டுவிழுந்திடவைமுகன்
சீறியண்டர்நடுங்கவிலின்னடர்தேயுவின்படைசென்றிடவுந்தினான். (௩0௯)

மங்கைபங்கன்விடுங்கனல்வெம்படைவங்கமுந்தியசிந்துவரண்டிட
வெங்குமங்குல்கள்வெந்துவிழுந்திடவென்றொடிந்துநடுங்கிடவெண்டிசை
வெங்கயங்கண்மெலிந்துகுலைந்திடவிஞ்சுமண்டமும்விண்டிடவும்பர்க
ளுங்குமெவ்வுலகங்களையும்மெனநொந்துலைந்துநுவன்றிடவந்ததே. (௩௧0)

தேயுவெம்படையெவ்வுலகங்களுந்தேயமுந்தியசெய்கைதெரிந்தெழின்
மாயவன்வருணன்படையுந்திடமாரியென்னவளைந்தழலின்கணை
யோயவெங்குமடர்ந்தயரும்பரிரேனைடிவந்தரிவெந்நுரையுட்புக
வாயதன்மைகள்கண்டுமுனிந்தனனாறுசெஞ்சடைதங்கியவள்ளலே. (௩௧௧)

பாவகன்கணையும்மறலும்முமைபாகன்விஞ்சியசெஞ்சிலையிற்செயு
மாவகம்முறவெஞ்சுரவன்படையாசையெங்குநிறைந்திடவெய்தலும்
வாவுகங்கையுமிந்துவும்விஞ்சியவாரியும்மனன்மண்டவயந்தரை
தூவுகந்தரமுஞ்சுடவந்ததுதூயவம்புவியின்னுயிர்துஞ்சவே. (௩௧௨)

பூதலந்திகழும்முயரெண்வரைபோதவெங்கனன்மண்டிடவெண்கண
வேதியன்சசியின்பதிவிண்ணவர்மேலருந்தவருள்ளமெலிந்திட
மாதுபங்கன்விடுஞ்சுரவன்னுறுவாளிவந்துவளைந்திடநந்துகொள்
சீதரன்னதுகண்டுலகுய்வகைசீதம்விஞ்சுசுரந்தனையுந்தினான் (௩௧௩)

தாழியின்னிறையுந்ததியுண்டருள்சாமளன்விடுதண்சுரம்விஞ்சிய
வாழியின்னடுவெங்கனலுங்குளிராகிநொந்துவெளிர்ந்திடமுன்செயு
மூழிதென்னவடர்ந்திடுவெஞ்சுரமோட்வெங்கணுமெய்தியடர்ந்திட
வேழமன்றுரிசெய்தவன்வெம்படைமீளவந்தரிமுன்னிவைசொல்லிய (௩௧௪)

நீயுடன்றெய்ததண்சுரம்வந்தெனைநீதிகொன்றயன்வெந்நிலரயந்தனு
ளோயும்வண்மையையொன்றிடவெண்டிசையோடினுங்குளிருள்ளடர்கின்றது
போயுயுந்திரமில்லையுன்மெல்லடிப்போதுநம்பியடைந்தனனென்றலு
மாயன்வெண்முறுவல்செய்துதண்சுரவாவெனும்முனகன்றிடவுய்ந்ததே (௩௧௫)

வேறு.

தானவிடும் வெஞ்சுர மஞ்சியகன்றிடு தன்மைகள்கண்டுமையாள்
கோன்விடமென்ன முனிந்துநெடுஞ்சிலை கோலியதிர்த்துயரும்
வானநடுங்கிட விஞ்சியபாசு பதாத்திரம் வாங்கியொளிர்
பூநனிசந்து நிறைத்தடர் மூச்செழுபுகையுற விட்டனனால். (௯௧௬)

மூன்றுசிரங்கர மாறுகொடுங்கனல் முதிர்விழி யொன்பதுடன்
றோன்றியடும்படை பூதபசாசுகள் சுற்றியுறக்கடுவே
கான்றுகொளும்புகை யோடனல்வீசிய காலுறவேயுலக
மீன்றவன்முன்னுல கெங்குநடுங்க வெழுந்ததுபாசுபதம். (௯௧௭)

அனில நிறைந்தன வொருதிசைகனமழை யாயினவோர் திசையிற்
கனல்களெழுந்தன வொருதிசை பூதகணங்க ளனந்தவகை
யினமொடடர்ந்தன வொருதிசையெங்கணு மிடிகளுமஞ்சிடவே
கனவொலி விஞ்ச வெழுந்ததுகண்டை கறங்கியபாசுபதம். (௯௧௮)

சாகரம் வெந்தழ லாகிவறண்டன தாரணி தாங்கியிடும்
நாகநடுங்கி யலைந்திட வெண்டிசை நாகமிரிந்திடவே
மேகமெரிந்துவின் மீனுமுதிர்ந்தன மேருவசைந்தனவா
னேகிடுமென்றொடு மிந்துசுழன்றன வீசன்விடும் படையால். (௯௧௯)

ஆசைகளம்புவி யம்பரமுற்றவு மாசுகனுங் கனலும்
வீசிடவெண்ணில பூதகணங்கண் மிடைந்து மருங்குறவே
பாசுபதம்வர வெண்டவரண்டர்கள் பதியய னேழுலகும்
நாசமுறும்மினி யென்றுநவின்று நடுங்கி யிரிந்தனரால். (௯௨௦)

வேலையின் வடவை கலங்கிடவேயுயர் வெற்பு மசைந்திடவே
காலன் வெருண்டிட வேயனல்வீசிய பாசுபதக் கணைதா
ஞலிருதிசையு நடுங்கிட வருதலு நாகணை மீதழரு
மாலொளிர் நைருத வத்திரம் விட்டனன் வரிசிலை கோலியரோ (௯௨௧)

பங்கயமாதுறு மார்பின னெய்திடு நயிருத பத்திரம்வா
னெங்கும் நிறைந்துய ரொன்றொளி மின்மினியென்ன விலங்கிவருஞ்
சங்கரன் விட்டிடு பாசுபதக்கணை தன்னையிமைப்பி னின்முன்
னுங்கி யெழுந்தரி வெரிநுறு மாவமுளுற்ற றொடிப்பினரோ. (௯௨௨)

பாசுபதக்கணை பழுதுறநீடிய பரவையி னஞ்சை றக
ரீசன்முனிந்து பிநாகம் வளைத்துக மாமழை யென்னவொளி
ராசுகமாசைக டோறுநிறைத்திட வச்சுதன் மெய்யுதிரங்
காசினியெங்கு நனைந்தது மகபதி கமலனொடுஞ்சிவரோ. (௯௨௩)

ஆகநிறைந்திடு குருதிகள் கண்டுய ரச்சுத னகையிலக
மோகநெடும்படை வரிசிலை நாணொலி செவியுற முடிகிடனு
நாகமுரித்தவ னிணைவற நின்றன ஏற்பவளக் கிரிபோல்
வேகமிகுத்திடு பூதகணம்பல வெருவி யிரிந்தனவால். (௯௨௪)

பாணியிலங்கிட வேமழு மானிவர் பாவக னுற்றிடுநீர்
வேணிய னிணைவற நின்றமை கண்டு வெகுண்டிர தத்திடையே
வாணனெடும்புய மாயிர மோடெதிர் வந்து வயச்சிலையி
னொலி திசையுற வெய்தனன் வாளிக ளுகர் நடுங்கிடவே (௯௨௫)

ககனமொ டெண்டிசை கவினுறு பரவைகள் காசினிமேருவெலா
முசவிறு தியின்மழை யாமென வாளிக ளுறவிடு வாணன்மிசை
யிகல்புரி மாயவனிடர்கெட வெழிலுறு கரமிசை யிலகிடநற்
றிகிரியை யேவின னுகர்கண் முனிவர்க டேவர்கண் மகிழ்வுறவே. ()

சூரியர்கோடி யெழுந்திடுதன்மை துலங்கிட வேயுயரு
மேருவை வலம்வரு கதிரெனவாணன் விளங்கு புயங்களெலாம்
பாரிடை விழவிழு குருதிக ளொலியுறு பரவையினெய்திடவே
வாரியனேவிய திகிரியறுத்தன வண்டர்க ளார்த்திடவே. (௩௨௭)

மாறிலை யெனவரு திகிரி யுயர்ந்திடு வாணனடுங்கிடவே
வீறிய தோள்களை யொருநொடி யின்முனறுத்திடும் வேலையின்வாய்
யேரூறு மிறைதெளி வெய்தியிலங்கைம னிலகிய தலைகளெலா
நூறிய கணைவல மாதவன் முன்னரி னின்று நுவன்றிடுவான் (௩௨௮)

மாதவவற்புத வச்சுதவண்டம ளந்தருள் வாமனனும்
வேதிய வித்தக நின்னிருதாளை விடுத்தொரு தேவதையை
யாதி யெனத்தொழு மறிவில ரமிழ்தினை விட்டவ்வாலநுகர்
பேதையரொத்திடு வாரெனவேயுயர் பிஞ்ஞகனுரை செய்வான் (௩௨௯)

சிறியெழுந்தமர்செய்விறல்மாவலி சேய்தசநூறெனவே
வீறுகரங்களினுலகை விட்டருளென்றரன் வேண்டவுய
ரேறிறவென்றருள் மாலசுரன்னுடை யீரிருகையறமுன்
மாறிலையாகிய திகிரியைவாவென வந்துகையுற்றதுவால். (௩௩0)

அவுணர் பிரான்கரநலொழியப்புயமாயிரமற்றிடவே
யுவமையிலாதுயர் திகிரியை விட்டருளும்புருடோத்தமன்மேற்
றவரயன் வானவர் சதமகன் வெறியுறுதண்மலர் மாமழைபோ
லவனியினன்பொடு தூவினரந்தர துந்துமியார்த்திடவே. (௩௩௧)

மூலமெனுங்கரியுய்ந்திட வந்தருண்முண்டகமின் கணவன்
மாலரிகே சவநாரணனச்சுதன் மாயவன் முன்னரின்வந்
தாலநுகர்ந்தவன் வேண்டவுயர்ந்திடு மாழியறுக்கவிலா
நாலுகையிற்றொழு தேவிறன்மாவலி மைந்தனவின்றிடுவான். (௩௩௨)

கிரியுருவாயுறு பொற்கணனுருடல் கிழியவதைத்தனையா
லரியுருவர்யொளிராடகன்மார்பு பிளந்தனையவனருள் சேய்க்
குரியபெரும்பதமருளினை யெந்தையுயும்படிமூவடிநீ
தருகுதியென்றிருதாளினளந்தனை தாரணிவானமெலாம். (௩௩௩)

பிற்குணமென்னை மயக்கவினைத்தொழு பெருமையையறியகிலேன்
நற்குணமின்றொழிவித்தனைநேமிய சுருதியினெறியினுறும்
முற்குணமாதவ வாமனமாய முகுந்தமுராரியுயர்
சிற்குணநாரண வச்சுதவற்புத சீதரவென்றனனால். (௩௩௪)

மாயவநீயருளத்திகழ்மாரன்மகன்ன னிருத்தமனுக்
கீயுகுவனென்மகளான வுடாங்கனையெனுமினையென்றனுமே
பேயுயிருண்டவனன்றெனவே யுயர்பிஞ்ஞகன் மகிழ்வுறநற்
[illegible] (௩௩௫)

மாரனருட்சுதனன்பொடு வந்தடிபணிதலுமற்றவனை
யாசியன்மார் பிணைத்திடவே ளுடனனைவருமெய்தலுமே
வீரியனுமநிருத்த மனவரடிவிழுதலும் வாசமலி
தாருறுமுரமிசை சிந்தையின்மகிழ்வொடு தழுவினர்புளகமுற. (௩௩௬)

ஏதுகுலம்வாழநிருத்தமனுக்குடை யென்னுமிளங்கொடியை
யுதவுவனென்றுயர்வாணனுரைத்திட வுதிரபுரத்தினுளோர்
கதலிநிறைத்தனர் கழைகளுயர்த்தனர் கமுகுகணட்டனரான்
மதமுறுகரிகுடாலகைகடசையொடு வாரியவீதியெலாம். (௩௩௭)

பூரணபொற்குடமழகுறவேயுயர் பொன்னின்விதானமுதற்
றோரணநட்டனர் தீவிகைவைத்தனர் தூபநிறைத்தனரால்
வாரணமுற்றவரிற்றிட வாடுக வந்தமொடேமணிசேர்
தேரணியிற்றிகழவுணர்சிதைந்துடல் சிதறியவீதியெலாம். (௩௩௮)

நாசமுறுங்கண வரை யுணினைந்தழு நாரியர் வீதியெலாந்
தூசுதிகழ்ந்திட வெய்திய மங்கையர் சோபனமே நவிலக்
காசணிகொங்கையர் நூபுரம் விஞ்சிய காலினர்கடகமின
வீசினரிமசலம் வீரியகுருதிகளோடிய வீதியெலாம். (௩௩௯)

அண்டரியக்கர்கள் சாரணர் சித்தரரம்பையர் நின்றனரா
கண்டலனெண்கணனன் கயிலைக்கிறைகடலரசன் முதலோர்
முண்டகமின்கணவன் முதலரசர்கண் முனிவர்களணி நிறையு
மண்டபமேவி யிருந்தனர் வாணன் மகிழ்ந்துடனேயமர. (௩௪௦)

மின்னியநவமணிவிஞ்சிய பீடமிசைக்கணின் வேள்சுதனு
மன்னநிருத்தனொடுங்குணவுடையெனுமாது மகிழ்ந்தமரத்
துன்னியதொடைகவினுறவள்ர்தீவிகை தூப நிறைத்திடவே
யன்னமெனடையினர் சாமரையெங்கு மசைத்தன ரழகுறவே. (௩௪௧)

அந்தணர் முனிவர்களோம நிறைத்திடவேய நிருத்தமனன்
னிந்துவின்வதனம்வயங்கிட நயனமிலங்கு முடாங்கனைதன்
கந்தரமிசையெழின் மங்கலநாணிருகைகொடணிந்திடலுந்
துந்துமிநந்துமுழங்கிட வம்மிதித்தனடோகையரோ. (௩௪௨)

மாயனருட்சுதனுதவியமைந்தனொடேயுடையாகியமான்
றேயுவைவலமுறவந்து பினெற்பொரிசிதறி மகிழ்ந்துயர்வான்
றூயவருந்ததி நோக்கிடவமரர்துதித்தனர் சுருதியினு
லாய்பவராசிபகர்ந்தனரந்தர துந்துமியார்த்தனவால். (௩௪௩)

மின்னிடையாயவுடாங்கனை யோடநிருத்தமன்விழுமியமால்
பொன்னடிமீதுபணிந்துயரும் விடையேறியபுனிதனயன்
றன்னியவமரர்கள் பதியிவர்தாளினிறைஞ்சியெழுந்துசுடர்
மன்னுகலன்களிலங்கவணங்கினன் மதனனொடனைவரையும் (௩௪௪)

நாரமமர்ந்திடும் வேணியனுன் முகனுகர்கடம்பெருமா
னாரணமோதிய மாதவரண்டர்களன்புடன் மாயவனைக்
கோரமுறுஞ்செயல் செய்திடுவோர்கள் குலங்கள்களைந்தவனிப்
பாரமகற்றுதியென்றுயராசிபகர்ந்தவர் போயினரால். (௩௪௫)

மங்கையுடாங்கனையும் மநிருத்தமன் மனமகிழத்திரைகொள்
கங்கையுறும்பதன்வாணனை யுன்பதிகாவெனவேகழறி
வெங்கயமாவணி வீரரலாயுதனேடு மிடைந்துவரச்
ங்கொடுபேரிதழங்கிடவே துவரைப்பதிசார்ந்தனரால். (௬சசு)

டக்கிரசேனனொடே வசுதேவனுவந்தெதிர் வந்திடவே
க்கரன்மற்றவர்தாளினிறைஞ்சி யெழுந்துதவங்கடனின்
ரிக்கிடுதேவகிதாடொழுதே திருமேவியபொன்மனையிற்
ரக்கினனற்கலன் மெய்யினிறைந்திடு போதமர்மின்பணிய. (௬சஎ)

மாரனருட்சுதன் வாணனளித்திடு மங்கைதனேடெய்தி
வரியுறுங்கமலத்திருவின்னடிவீழ விதற்பன்மக
ளார்வமொடாசிபகர்ந்துடைமின்னினை யன்பினணைத்திடலு
மேருறுமிரதியை யடிதொழுதே மனையேகினன் வேள்சுதனே. (௬சஅ)

இடரறவேயெதிரெய்தியுருக்குமி யெழிலுறுகணவனுடை
படிமிசையன்பினிறைஞ்சிட நாயகிதன்னையணைத்தனளு
லுடையெதிர்வந்துயர் முன்னவடாளினிறைஞ்சியுவந்திடவே
துடியிடையாரிருதேவியரோடுதுலங்கினன் வேள்சுதனே. (௬சகூ)

## வாணசுரப்படலம் முற்றிற்று.

---

ஆகபடலம் உ௬-க்கு கூடிய திருவிருத்தம் க௮ச௬.

---

ஸ்ரீ கண்ணபிரான் திருவடித்தாமரைகளே துணை.

---

ஸ்ரீ

விஷ்ணுமயம்.

௱ரு - வது - மகதராஜன்

# வதைப்படலம்.

---

உலகெலாம்புடைத்தழித்துண்டுமிழ்ந்தளந்
தலகையினுயிர்செகுத்தரவினாடியே
சிலைகையினிறுத்திபஞ்செற்றுமல்லர்க
டலைகளைந்திடுமையன்றாளையேத்துவாம். (க)

மாறிலாவிதர்ப்பர்கோன்பயந்தமாதுட
னூறியகலவிசெய்துவகைவிஞ்சவே
யேறுறுமிறையவனிடரைத்தீர்த்திடு
நாறுபூந்துழாயன்வீற்றிருக்குநாட்டனின். (௨)

வாரியிற்கதிரவன்வந்துதோன்றவே
வாரியனிருக்கினிலருக்கியம்மளித்
தேருறுமறையவர்க்கீந்ததானங்க
ணீரொடுமளித்தனனிருபர்போற்றவே. (௩)

கோபமிலந்தணராசிகூறவே
சோபனமரிவையர்சொல்லவெண்ணிலாத்
தீபமுமடந்தையரெடுப்பத்தேன்மலர்
நாபியனிருந்தனனாகரோத்தவே. (௪)

சீருறுநவமணிச்செவ்வித்தேரின்மேற்
றாருகன்கோல்கொளச்சங்குதுந்துமி
வாரிபோன்முழங்கவந்தியர்களேத்தவே
வீரியனிகரின்மண்டபத்தின்மேவினான். (௫)

வாசவன்கொணர்சபாமண்டபந்தனி
லேசிலாநவமணியிலங்குமாசனந்
தேசுறச்சத்திரந்திகழச்சாமரை
வீசவீற்றிருந்தனன்விளங்குமாழியான். (௬)

உத்தவன்சாத்தகியுமரும்வேளவன்
புத்திரன்சாம்பனொடலப்பில்பொற்புடை
வித்தகக்குமரர்கள்விளங்கிவண்மைசேர்
நித்திலப்பந்தரினிறைந்துசூழவே. (௭)

மீனினஞ்சூழ்ந்தவெண்மதியமானவே
வீனமிலரசரெம்மருங்குமொய்த்திட
மானவனிலங்கவானரம்பைநாணநற்
பானகுமொழியர்கீதங்கள்பாடினார், (௮)

பணவமோடிலகியதாளம்பாரினி
விணையிலாவுறுமிசச்சரியிரட்டவே
மணமலிமலர்க்குழலசையமாறிலாக்
கணைநிகர்விழியினார்நிருத்தங்காட்டவே. (கூ)

மாதவராசரொம்மருங்குமொய்த்திட
யாதவனிவ்வுழியிருக்குமெல்லையிற்
பூதலத்தரசர்கள்விடுப்பப்போந்ததோர்
தூதனற்புதன்வண்வந்துதோன்றினான். (க0)

வாயிலாரற்புதமனிதன்வந்தமை
யேயெனுமுன்னர்வந்தியம்பமாதவன்
றூயவன்றனைக்கொணர்கென்றுசொல்லலு
நேயமோடணுகினனிருபர்தூதுவன். (கக)

வந்துமுன்வணங்கியவவனைமாயவ
னெந்தமாபுரியுனக்கிவணென்முன்னரின்
முந்தியகருமநீமொழிதியாலெனச்
சுந்தரகேளெனத்தொழுதுசொல்லுவான். (கஉ)

தரணியிற்கொடுவினைதழைப்பவாழ்கின்ற
நிருபனுமகதர்கோனெறியையோவிய
திருவிலிசிறையிடத்தியங்குமன்னவ
ரிருபதினாயிரரோவவெய்தினேன். (கங)

நரகனையமரினில்வதைத்துநன்றிசா
லரசர்கள்சோடசவாயிரத்தவர்
பருவரலொழித்திடுபரமவீண்டிவர்
தெருமரலகற்றுதியென்றுசெப்பினான். (கச)

மாரதர்வாண்முகநோக்கிமாயவன்
பேரிதவசனமேபேசுந்தூதன்சொல்
வாரிதியமுதநேரொன்னுமுன்னமா
நாரதனவ்வுழிநண்ணினனரோ. (கரு)

சுரர்முனியடைந்திடத்தூயமாயவ
னரசரோடெழுந்தவனடிவணங்கலும்
பரிவுடனாசிகள்பகரமாழையாம்
வரிசையாராதனம்வழங்கினனரோ. (கசு)

மாதவனுவந்துநல்வரிசையாலரி
யாதனமீந்துநீருக்கியம்மளித்
தேதமின்முனிவனையிருத்தியென்றலுந்
தீதறுமுனியிருந்தான்சிறந்தரோ. (கஎ)

ஆதனத்தருந்தவனிருக்கவச்சுதன்
மாதவவெவணிருந்திவணின்வந்தனை
யோதுதியென்றலுமுயர்ந்தவொண்முனி,
சீதரன்வியப்புறச்செப்பலுற்றனன். (கஅ)

தீதிலாவிந்திரப்பிரத்தஞ்சேர்ந்தியான்
யாதவர்நாயகவெய்திநேனென
மாதவன்மகிழ்ந்துயர்தருமன்வண்மையை
யோதுதியெனமுனியுரைக்கலுற்றனன். (கக)

அனுசர்கள்சூழ்ந்திடவறஞ்செய்தன்மனோர்
வனசமார்திருவவண்வைகமாமணி
புனைசபாமண்டபம்பொருந்திப்பாரினைக்
குனிசெயாதுயர்ந்தசெங்கோல்கொடாள்கின்றான். (உ0)

மதியிவர்வெண்குடைவயங்கமன்னவர்
துதிசெயத்துவாதசவாயிரத்தர்மா
சதுமறையறிபவர்தழைப்பவாழ்கின்று
னெதிரிலாத்தருமனென்றியம்புவானரோ. (உக)

நீண்டகன்றழகெலாநிறைந்தகண்ணினு
டேண்டியவிளக்கெனத்தூயமாதவம்
பூண்டகற்புடையபாஞ்சாலிபொற்பமர்
பாண்டவர்க்கைவரைப்பரிந்துபெற்றனள். (உஉ)

தீவினையொருவருச்சுனற்குத்தென்னவன்
பாவையும்பன்னகன்பயந்தவூகியுந்
தேவகியருளியசெல்வநங்கையு
மூவரும்பெற்றனர்சிறுவர்மூவரை. (உங)

இன்னலின்மைந்தர்களெய்தவேமகிழ்ந்
தொன்னலர்வெந்திடவுயருமாநெறி
துன்னிடத்தருமன்வெண்குடைநிலங்கமா
மன்னவர்திலகனைவயங்குநாட்டினன். (உச)

மறலிதன்னவைதனிற்பாண்டுமன்னவ
னுறையுழியானவனுற்றகாலையிற்
றிறலுடைநிருபனைச்சேய்க்கென்செய்கைதா
னறியநீவிளம்புகென்றறையலுற்றனன். (உரு)

நன்னெறியோம்பியேநடத்திவாழ்கின்ற
தன்னையும்பயந்தியான்சமனுலோகத்தின்
மன்னுவதேழமைவலாரிவாழ்பதிக்
குன்னுமுனெய்தயானுபாயங்கூறுகேன். (உசா)

இன்னல்கடிணியவேயிராயசூயமா
மங்கலவேள்வியையமைத்துளானெனின்
மன்னுவன்மகபதிநகரையென்றுமன்
சொன்னசொல்லுதிட்டிரனறியச்சொல்லினேன். (உஎ)

தந்தைசொற்கேட்டுயர்தருமனேந்திடுஞ்
சிந்தையன்பிதாவுயர்கதியைச்சேர்ந்திட
வந்தணரிலங்கவேயிராசசூயமா
மந்திரவேள்வியைவளர்க்கவெண்ணியே. (உஅ)

மாதவனிவைவயெலாமாயவன்றனக்
கோதியேபருவரலொருவவொல்லேயில்
யாதவன்றன்னெடுமெய்துவாயென்று
ஞதலின்வந்தனனமலவென்றனன். (உக)

சீரர்முனியிவைவயெலாஞ்சொலத்தூயவன்
றருமன்மாவேள்வியைநடத்தச்சார்வமோ
வரசர்தஞ்சிறையினேயகற்றச்சேர்துமோ
வுரையெனவுத்தவனுணர்ந்துகூறுவான். (௩0)

இந்திரப்பிரத்தமாநகரியெய்திநற்
குந்திதன்சுதரொடுங்கூடிப்பின்னரின்
மந்திரமுணர்ந்துமேல்வருவசெய் கெனப்
புந்தியின்மிகுத்தவுத்தவன்புகன்றனன். (௩க)

உத்தவனுரைநலனென்றவுத்தமன்
மைத்துனர்வயங்கியாள்வண்மைசேர்பதி
அத்திமாவிரதமோடணிகமெல்லவு
மொத்துமுற்செல்கெனவுரைபகர்ந்தனன் (௩உ)

மாதவனிவ்வுரைவழங்கவள்ளுவர்
போதகமிரதமாவனீகம்போர்மனர்
தீதிலாத்தருமன்வாழ்புரியைச்சேர்மினென்
றேதியேயறைமுரசுததியொத்ததால். (௩௩)

மூரசொலியெண்டிசையுறலுமூரிமா
விரதமோடிபநிரையெண்ணில்வீரர்கள்
கரைசெயற்கரியதோர்களிப்புமல்கவே
தரையினிற்றுகள்விணிற்றுவவேகினர். (௩௪)

சூலம்வாள்கப்பணமுசுண்டிதோமரங்
காலவேலெழுமழுக்கணையமீட்டிமுட்
கோலொளிர்வரிசிலேவயங்கக்கொற்றவர்
ஞாலமேற்பரிகரிநடக்கவேகினர். (௩௫)

கரியினங்கருங்கடல்கடுப்பவேகின
பரியினநதியெனப்பரந்ததெங்கணுந்
தெரிமணிவயங்கியதேர்கண்மங்குலின்
சுரருறுவிமானமேயேலத்தோன்றிய. (௩௬)

கொடிகுடைகவரிகண்மிடையக்கோதிலாப்
படியெலாமிருண்டிடப்பைம்பொற்றேர்மனர்
சுடர்மணிக்கலன்களாற்றுலங்கிக்காட்டுவ
வடர்மருளறவருமறிவையேயலவே. (௩௭)

நாகமேலமர்ந்தெழினலங்கொண்மங்கையர்
மேகமேல்வயங்கியமின்னேமானவே
யேகினுரிணைவிழியிலக்கேகயத்
தோகைபோன்மலர்க்குழலழகுதுன்னவே. (௩அ)

குங்குமங்கருப்புரங்குழைத்தசந்தன
நங்கையரிருதனத்தணிந்துநாண்மலர்
மங்குலைச்சுமந்துகீழ்வளைவயங்கிடும்
பங்கயமிலங்கநற்பரியினேகினார். (௩௯)

காலணிநெகிழ்கண்மிழற்றக்கைவளை
யோலமிட்டிலகவேயுவமைகூறொணா
நூலிடைநுடங்கிடநோக்கினுடவர்
மாலெழுமலர்க்குழலசையவந்தனர். (௪0)

காசணியிருதனங்கதிப்பவாசமே
வீசியகுழற்பினல்வெரிநில்வீழ்மை
மாசுணமேலுறுமதியம்போலவே
யேசிலாவானனமிலங்கவேகினார். (௪௧)

கனகமேகலையல்குற்றேர்கொடேகவின்
குனிசிலைப்புருவமுங்கோட்டிக்கட்கணை
யனநடையணங்கனார்விடுப்பவாடவர்
மனமெலிந்திபமிரதத்தின்வாடினார். (௪௨)

கதமுறநடந்திடுங்கரியினங்களின்
மதமுறுமருவிகண்மண்ணின்மல்கிய
நதியெனப்பெருகவேநங்கைமார்கடம்
பதிகரமிருகையாற்பற்றியேகினார். (௪௩)

பாட்கமிலங்கவான்பருதிவெம்மையால்
வாடியேவருவனிதையர்க்குவீரர்கள்
கேடகநிழலுறக்கிட்டித்தாங்கித்தம்
மாடகத்துசவரடியினுக்கினார். (௪௪)

தாரணியுறுங்குழற்சரியவானனம்
வேர்வழிந்துறச்செலுமின்னனுருக்குக்
காரணிகலுழியிற்காந்தட்கையினாற்
பேரளியுடனளித்தவர்பின்சென்றனர். (௪௫)

அந்தணரரசர்கட்காசிகூறியே
குந்தியநடையினர்குடைகைதாங்கிநீ
டந்திகளிவுளிதேர்தையலார்திரள்
வந்திடவிலங்கியவழிக்கொண்டாரரோ. (௪௬)

அவ்வியமழித்துமாமறையினார்பொருள்
வவ்வியசிந்தைமாதவர்கள்சூழ்ந்திட
வெவ்விடப்பணிமணிமிளிருநித்திலங்
கவ்வியசிவிகைமேற்கற்கனேகினான் (௪௭)

உருக்குமற்கிளையவுத்தமியொண்மாமணி
வருக்கமார்சிவிகைமேல்வயங்கிவானுளோ
ரிருக்கறைநதெழின்மலர்தூவியேத்தவே
முருக்கிதழ்வாயினார்மொய்ப்பவேகினாள். (௪௮)

சத்தியவாய்மைசாம்பூவதிகாளிந்தி
பத்திரைநாக்கினசித்துபண்மொழி
மித்திரவிந்தைமெய்விளங்கிலக்கணை
நித்திலச்சிவிகைமேனெறியினேகினார். (௪௯)

எண்ணிரண்டாயிரத்தேற்றநூற்றுவர்
பெண்ணருங்கலமனார்பிறங்குமாமணி
வண்ணமார்சிவிகைமேல்வாமமல்கிட
விண்ணவர்மடநலார்வெள்கவேகினார். (௫0)

குயிலெனமயிலெனக்கோதிலோதிமத்
தியல்பெனவெண்ணிலாவெழில்கொண்மாதரா
ரயில்விழியிலங்கிடவயனமெங்கணும்
புயல்வணன்றேவியர்மருங்கிற்போயினார். (௫௧)

மதிவணன்சாத்தகிமாரன்மற்றவன்
சுதனெழிற்சாம்பனோடிவரைத்தூமா
லெதிருமொன்னலரைவிண்ணேற்றிவாரிசூழ்
பதியினைக்காவுமென்றுரைபகர்ந்தனன். (௫௨)

சாரதிதாருகனுகச்சக்கர
னாரதமுனியொடுநற்பொற்றேரின்மேற்
பேரிதவெள்வளையொலிபெருக்கவே
மாரதர்திசைதொறும்வணங்கவேகினான். (௫௩)

ககபதிக்கதலிகைககனமோங்கவான்
மகபதிமுதலினோர்மலர்கவேவே
நகபதிமருகன்வில்முரித்தநாரணச்
செகபதியேகினான்றேரின்மீதரோ. (௫௪)

சாமரைபுரளநற்றரளவெண்குடை
சோமனைநிகர்த்தெழிற்றுலங்கநீலமார்
மாமலையுச்சியில்வயங்குசெங்கதி
ராமெனக்கிரீடமீதமரவேகினான். (௫௫)

மன்னவர்மருங்குறவாசிதேர்கரி
துன்னவேவீரர்கணிறைந்துசூழ்ந்திட
முன்னமீரேழுலகளந்தமூர்த்தியோன்
சின்னவோசைகடிசைசேரவேகினான். (௫௬)

துந்துமிபடலிகைதுடிகையம்புலி
நந்துகாகளஞ்சின * நகிபிகம்பலை
முந்தியபணவமாமுரசுபம்பைகள்
சிந்துவினொலிகெடமுழங்கச்சென்றனன். (௫௭

கறையடியிடர்கெடக்கராவையட்டகோன்
மறையவராசிகள்வழங்கவான்மிசை
நிறையுமாதவர்நெடுந்தேவர்தூவிய
நறுமலர்வெறிநெறிநாறவேகினான் (௫௮

* நகிபி—ஓர் வாச்சியம்.

இவுளிகளிபநிறையெண்ணில்வீரர்க
ணவமணிநிறைந்திடநலங்கொடேரின
மவனியினெழுத்துகளடர்ந்துபொன்னகர்
புவியினைநிகர்த்திடப்போயினனரோ. (௫௯)

வேறு.

அவனியினிலங்கானர்த்ததேசத்தையடைந்தேயயன்
றவர்களெண்சவ்வீரப்பேர்ப்புரியினைச்சார்ந்தங்கேகி
நவமணிநிறைந்தேயோங்குநலமருணாட்டிற்சேர்ந்து
பவமிலவனசநற்பேர்ப்பதியினையொருவிப்போனன். (௬௦)

வேறு.

முரசினொடுதுந்துமிமுழங்கிடவெழுந்தே
யரசர்திரடேரிடையமர்ந்துவரவேகிப்
பிரசமுமிழுங்கிரியினூறுபிரயாகை
சரசுவதியென்னுநதிசக்கரனிருந்தான். (௬௧)

கூலமிசைவாளைகயல்சேல்கள்குதிகொள்ள
வாலொளிர்கொளும்வளைவராலொடுமெதிர்ப்ப
வேலையொலியஞ்சவிளையுந்திரைவிசைப்ப
ஞாலமிசையோடியநன்னதிபரந்தே. (௬௨)

பங்கயமலர்த்ததுறைதோறுமளிபாட
மங்கையர்குறங்குநிகர்வண்கதலியெங்குந்
தங்கிநிறையக்கமுகுசந்தனமரங்க
ளெங்குமிருபக்கமுமிலங்குநதிபொங்க. (௬௩)

தூயநதியின்கரைதுலங்கியபொழிற்கே
மாயனுயர்தேவியர்வயங்கிடவமர்ந்தா
ராயுமறைவேதியரருந்தவர்களெல்லா
மீயுயர்பிறங்கன்முறையெய்தினர்விரும்பி. (௬௪)

வாசிகரிதேர்நிறையினொடிலகமன்னர்
பாசிழைவயங்கவருபாவையர்களோடும்
வீசுதிரையின்கரைவிளங்குகடிகாவி
லோசையுறவேலையவனூற்றெனவமர்ந்தார். (௬௫)

வேறு.

சீறுஞ்சுகஞ்சூழ்ந்திடும்சோலைவாய்ப்
பகடுறும்பகடெங்கும்பரந்தன
சிகையுறுஞ்சிகியின்னினஞ்சேர்ந்தபோல்
நகையுறும்நகைநாரியர்துன்னினார். (௬௬)

பவர்பகட்டினம்பாதவம்பேர்த்தெழக்
குவிதனத்தியர்கொட்புற்றிரிந்தனர்
உவரிபோலறைதூம்பினவோசையாற்
கவனவொண்கவியோவினகாவெலாம். (௬௭)

வேறு.

பயம்பயம்பிரித்தபாற்றந்தபார்ப்புறங்
கயங்கயங்குடைந்திடக்கானமாமெனு
வியம்பியம்புயத்தொரீஇச்சுதமேகச்சந்
தியந்தியங்செய்தவந்தணர்கள்செய்தனர். (௬அ)

சாடரம்பைக்கனி * சாடரம்மல்கக்
கோடரமொருவுகோடரமருந்திய
பாடரங்கினினலபாடரிப்பிணை
யோடரவிந்தமோடரியுற்றேறேதின. (௬௯)

ஆசினிஆசினியணவநீண்டடர்
காசினியுறுநதிகான்றகாசினம்
வீசினகதிரவிர்வீசினப்பொடி
பூசினகேசரம்பூசல்செய்தரோ. (௭0)

போதில்காம்போதியைப்புகலச்சிதரம்
மேதிமேதினிக்கயம்மேவமாங்கனி
கோதியேகோதிலாச்சுகங்கள்கொஞ்சவே
யோதியோதியர்சளொண்வீணையோதினார். (௭௧)

வேடனையுதவியமின்னெடெண்மருஞ்
சோடசவாயிரத்தொகையொடேசதங்
கூடியவனிதையர்குழாமுஞ்சேரமா
லோடமோநதியினீராடவுற்றனன். (௭௨)

பொருப்பெனவளர்முலைத்தடத்துப்பூசிய
கருப்புரக்கலவைகள்கரையநூலினு
மருப்பநுண்ணிடையரச்சுதன்றனோடுமே
விருப்பமுற்றயவிளையாட்டின்மேவினார். (௭௩)

புதிதலர்பங்கயம்போன்முகத்தியர்
நதியினிற்படிந்தெழுநாரம்விஞ்சிய
வுததியிற்றிருப்பலவுருவமாகிய
விதமெனவெங்கணும்விளங்கினாரரோ. (௭௪)

அளிதொடர்ந்தோடவேயளகநீருற
நளினமென்முகத்தியர்நாரணன்றனை
வளைபவர்மரகதமலையைச்சுற்றியே
யொளிகொளுந்துகிர்க்கொடியொத்துத்தோன்றினார். (௭௫)

அரிவையர்நதியினுளாடப்பொங்கிய
திரையினுளமிழ்ந்தசெங்கமலத்தேமலர்
வரிநெடுங்கண்ணினார்வதனமாண்பினைச்
சரியொவ்வோமென்றயந்தாழ்வபோன்றதே (௭௬)

* சடரம் என்பது சாடரம் என முதனீண்டது வயிறென்பது பொருள்.

மின்னியமுகிலெனவிளங்குமாழியான்
றன்னுபங்கயமலர்பறித்துச்சோர்விலா
வன்னமென்னடையவர்க்களிப்பவோர்மினாண்
முன்னமீய்ந்திலையெனமொழிந்துசீறினாள். (எஎ)

அரிவையர்சுற்றவேயயத்துளாடிய
கருமுகிலெனவொளிர்கமலக்கண்ணினான்
சரியிலாக்கரிபிடியினத்தொடுஞ்சலம்
மருவியவியல்பெனவயங்கினானரோ. (எஅ)

சுதைதருமொழியுடைத்தூயவாணகை
மதிமுகமடந்தையர்மருங்குசூழ்ந்திட
நதியினுட்குடைந்துயர்கரையினண்ணியே
புதியபொன்னாடைமால்புனைந்துநின்றனன். (எகூ)

ஏசகல்கிரிமிசையெழுந்தவென்றெனக்
கேசவன்சென்னியிற்கிரீடமோங்கவே
மாசகல்கலன்மெயின்வயங்கமாழைசேர்
தூசுநன்மருங்கினிற்றுலங்கநின்றனன். (அ0)

உழையெனும்விழியர்பொற்றூசுடுத்துமை
யெழில்விசூழ்மதியெனுமுகமிலங்கநற்
கழையினைவென்றதோள்வயங்கக்கையினாற்
குழலினிற்புனலறக்கோதிநின்றனர். (அக)

நீல்மார்கவரிபோனிறைந்தவோதியிற்
கோலமார்மலரிணையணிந்துகோதிலா
வேலைநேர்விழியின்மைவிளங்கமெல்லிதழ்க்
காலினூபுரங்கதிரெறிப்பநின்றனர். (அஉ)

ஆசகன்மெய்யினங்காரம்வில்லிட
வேசகன்முலையினிற்றொய்யலேருற
வாசமார்கலவைகளணிந்துமாழையின்
றூசுமீமேகலைதுலங்கத்துன்னினார். (அங)

ஓவியநாணவேயுருக்கொண்டோங்கிய
தேவியர்கலன்மெயிற்றிகழச்சூழநற்
கோவியர்துகிலொடுங்குருந்திலேறினான்
காவினன்மலர்கொயக்கருதியேகினான். (அச)

நாகமாரம்வழைநாளிகேரநீள்
பூகமாம்பிரமலர்பொலியுஞ்செண்பக
மேகமார்மாதவிமிளிருய்யானத்தின்
றொகைமாருடனிறைதுலங்கினானரோ. (அரு)

கோகிலங்கூவிடச்சுகங்கள்கொஞ்சிட
நாகமேலளியினாதம்விஞ்சிடக்
கேகயமாடவேகிளர்ந்தசோலையி
னாகமாங்கனியுதிர்த்தோடநோக்கினார். (அகூ)

குழலினுற்கேகயமொதுங்கக்கோகிலா
மொழியினுற்கோகிலமுடுகிப்பாறவே
யெழில்கொள்மானடையினேதிமங்களேகிட
வழகியவணங்கினாலர்கொய்தாரரோ. (அ௭)

தளவுமெல்வலம்புரிசாதிமவ்வற
ணளியுறுகருமுகையான்றபட்டிகை
கிளர்வழைபாடலம்வகுளங்கேகயம்
வளனுறுசாயல்மங்கையர்கள்கொய்தனர். (அஅ)

கீதநற்கீதங்கள்கிளர்த்தக்கேழிலாச்
சூதமேற்சம்பரசூதன்காகள
நாதமல்கிடச்செகநாதன்தேவியர்
மாதர்மாதருமலர்மலியக்கொய்தனர். (அ௯)

வேலினைவிழியினார்மிடைந்துசுற்றவே
மாலவரொடுமலர்பறித்துவண்மைசேர்
சோலையினிருந்துநற்றொடையல்சூட்டிநற்
பாலனமருந்தினன்பாவைமாருடன் (௯0)

வெள்ளடைக்காயமுதருந்திவித்தக
வள்ளறன்றிருவுளமகிழ்ந்ததேவியர்
தெள்ளியவிளரியாழ்செங்கைதாங்கியே
யொள்ளியவசுணமும்வியப்பவோதினர். (௯௧)

தெரிவையர்புருவநற்சிலைகுனிக்கிலார்
தரளமார்மிடறவிம்மார்கள்தாழ்விலாக்
கருமைசேர்நெடுங்கணார்கற்புற்பாதவ
முருகநல்வீணைகையுறவங்கோதினர். (௯உ)

தும்புருநாரதர்தியங்கச்சூர்கிகர்
வம்பவிழ்குழலியர்மதுரகீதயாழ்
அம்புதியமுதெனவறையக்கேட்டரு
ளெம்பரனுயயாதவன்மகிழ்ந்தனன். (௯௩)

ஆதவன்குடகடலுறவருக்கியஞ்
சீதரனளித்துருக்குமணித்தேன்முதல்
மாதர்கட்கத்தனைவடிவமாகியே
போதமரமளியிற்புல்லினனரோ. (௯௪

மங்கையர்கொங்கைமார்பமுந்தமாதவன்
செங்கையினணைத்துநற்கலவிசெய்யவே
கங்குன்மினுறக்கழிந்தபோலவா
னெங்குமூடிருளறவிரவிதோன்றினன். (௯௫

வாரியிற்கதிரவன்வந்துதோன்றலு
மாரியனருக்கியமளித்தம்பொன்னினார்
தேரின்மேல்வயங்கிநற்சேனையார்த்தெழப்
பேரிகாகளத்தொலிபெருக்கவேகினன். (௯௬

வேறு.

தூயபாஞ்சாலதேசமொருவிநீர்த்துறையிற்சங்கு
மேயுமாவிராடநாடுமிகந்துவெவ்வினைகளெல்லாஞ்
சாயவேதருமமோங்குஞ்சக்கரப்பிரத்தமோவி
மாயன்மாதருமனுட்டின்வண்மைகண்டுவந்தான்மாதோ (கூஎ)

கன்னலொண்கதலிபூகங்கவினுறுபழனமெல்லாஞ்
செந்நெலின்பெருக்கமெங்குஞ்சிறந்திடவரம்பின்மீதி
னன்னம்வந்திருப்பச்சங்கமடர்ந்தநித்திலங்கள்பாரின்
மின்னவேமணங்கொள்பூங்காவிளங்கியபலவுங்கண்டான். (கூஅ)

மாதரானனங்கள்போலவலர்ந்திடுவனசவோடை
மேதிவீழ்ந்துழக்கவாளைவெருவியேகரையிற்பாயச்
சூதமேற்குயில்கள்கூவச்சுகவினமிழற்றவண்டி
ஞதமேழிசையுமல்கநதிபரந்தோடக்கண்டான். (கூகூ)

ஆலவாய்ப்புகையுந்தூயவந்தணர்வேள்விமுற்றுஞ்
சாலவாய்ப்புகையுமாதர்தமனியமனைகடோறும்
பாலுடனடிசிற்பாகம்பரிந்திடும்புகையுமோங்கிக்
கோலமார்வானிற்கொண்மூக்குறுகியேயடரக்கண்டான். (க௦௦)

ஆவெலாமலியத்தூயவந்தணர்மறைகளோது
நாவினுமகளுமெய்யும்விரதநன்னெறியுமல்கு
தேவராலயமுமெங்குஞ்சிறந்திடுந்தருமனுட்டை
மாவின்வாய்பிளந்தானோக்கிமகிழ்ந்துமாநெறிசெல்வேலை. (க௦க)

வேறு

தூதுவரோடினர்மாதருமன்னிடைதுள்ளிமகிட்சியொடே
யாதவன்வந்தனனாரணன்வந்தனனெம்மிடரைக்களையும்
மாதவன்வந்தனன்மாயவன்வந்தனன்வாமனன்வந்தனனஞ்.
சீதரன்வந்தன னென்றிரு கைதொழுதாடினர் சீருறவே. (க௦உ)

கேசவன்வந்தனனென்றமுதச்சொல்கிளர்த்தியதூதுவர்கட்
காசகலுங்கலனுடையளித்துயரார்வமுறுந்தருமன்
வாசவனூருடனேயளகாபுரிநாணவிமாநகரந்
தேசுறவெய்தியலங்கிருதஞ்செயுமென்றுரைசெய்தனனால். (க௦௩)

மன்னனுரைத்திடவள்ளுவரெங்கணுமாமுரசெற்றிடவே
துன்னினர்மாநகர்வீதிநிறைந்துதுலங்கிடவாடவர்கள்
கன்னன்மணங்கமழ்பூகமொடேவளர்கதலிகள்கதலிகைகள்
பொன்னினன்மாலையயங்கிடநீடொடைபொலியநிறைத்தனரால். (க௦௪)

தேரணிவாரணமாவுயர்மன்னர்சிறந்திடுவீதியெலாந்
தோரணமல்கியயங்கினநித்திலமாலைதுலங்கிடவே
பூரணபொற்குடமெங்குமிலங்கினபொன்னின்விதானமுற
வாரணிகொங்கைமடந்தையர்தீபநிறைத்துமகிழ்ந்தனரால். (க௦௫)

வீடுமகன்மனளித்தருண்மெல்லியலோடொளிர்வெண்ணகையார்
கூடவியாதவன்வந்தனனென்றுரைகூறமகிட்சியொடும்
பாடினர்பண்ணுறவேபனிநீர்கள்பரந்திடவீசியெழுந்
தாடினரோடினராடவரோடளியாடளகத்தியரே. (க௦௬)

கோபுரமண்டபம்வே திகை துன்னியகோயில்வயங்கிடவே
தீபநிறைந்தன துவசமிலங்கினதேவர்களூரெனலாய்த்
தூபநறும்புகைவிஞ்சியவெறிகமழ்தொடையல்விளங்கியதாற்
பாபமறத்திருவைகிடவேயரசாடருமன்பதியே. (க0எ)

பொன்னகர்மாசுறவேயழகெய்தியபுதுமணியாரமெலாந்
துன்னிவயங்கியபதியெழிறேக்கிமகிழ்ந்தருள்குந்திசுதன்
பின்னவர்சூழவெழுந்துயர்தேர்மிசைபேரிகறங்கிடமா
மன்னர்மருங்குறவேயுயர்மாயனையெதிர்கொளவந்தனனால். (க0அ)

வாசிகலித்திடமதகரிபிளிறநன்மணிவயிரங்களுறு
மோசைமிகுத்திடமுரசநெடுங்கொடியும்பரினுற்றிடவே
யேசில்புகட்டருமன்னிளையோரணிகங்களுடன்னிலக
யோசனையொன்றுகழிந்தெதிர்கொண்டனனொப்பிலவுத்தமனே. (க0கூ)

அன்புமுன்னுற்றிடவருவினைபின்னிடவனிகனியின்னவே
யென்புருகப்புளகம்மெயின்மல்கிடவெதிர்வருதருமனையே
துன்பமகற்றியசோதியெதிர்ந்தவனடியிணைதொழுதிடலுந்
தன்பதமீதுவணங்கியவரியின்மெய்தழுவினன்வீமன்முனேன். (கக0)

வீமன்முனெய்திவணங்கியமாயனைமெய்யினுறத்தழுவச்
சோமனைகிகரிமொனனமகபதிசுதனெனும்வாள்விசையன்
மாமுகில்கண்டமயூரமெனக்களியெய்திடவருமவனைத்
தாமமழுந்துறமார்பினணைத்தனன்யாதவர்தம்பெருமான். (ககக)

மத்திரன்மருகர்களிருவருமெய்திவணங்கியெழுந்தவரை
அத்தியினரவினமர்ந்தருளச்சுதனன்பினுடன்றழுவி
நத்தொடுபேரிகறங்கிடவீதியினன்மணியிரதமிசை
மைத்துனமாரொடுமெய்தினன்மண்மிசைவானவர்மலர்சொரிய. (ககஉ)

வேறு.

குந்திதன்மைந்தர்சூழக்கொடிகுடைசவரியோங்கத்
தந்திகளிவுளியீட்டந்தமனியத்தேர்கள்சுற்றத்
துந்துமிபணவஞ்சின்னந்துடிகைமாமுரசுமார்ப்ப
விந்திரப்பிரத்தம்புக்கானிணையில்யாதவர்கள்கோமான். (ககங)

மானெனவனத்தின்கூட்டம்வருவனபோலமஞ்ஞை
தானெனச்சதங்கைகொஞ்சத்தமனியஞெகிழியார்ப்பத்
தேனினம்விரும்புமாலைசெறிகுழலிசையமாதர்
நானமெய்கமழவந்தார்நாரணன்றன்னைக்காண. (ககச

காவியுங்காயாம்பூவுங்கருமுகினிறமுநாண
மாவுறுமணித்தேர்மீதுவருகின்றமாலைநோக்கி
யாவியுமையத்தூசுமாழியுமவனிவீழ
வோவியம்போலநின்றாரொப்பிலாவுருவமாதர். (ககரு

மாளிகைவாயிரேறுமண்டபமிசைகடோறுஞ்
சாளரநெறிகடோறுந்தாமரைமலரின்றய்ய
வாளிணைவயங்கிற்றென்னமதிமுகங்காணநோக்கிக்
காளமாமுகிலொப்பானைக்கண்டிவைகழறலுற்றார். (ககசு

ஓதுதற்குவமையில்லாவுருவமெய்யொளிரநீலப்
பூதரமென்னவோங்கும்புயலெழிலுடையனான
சீதரன்றனக்குத்தூயதேவியராகிவாழும்
மாதரெத்தவஞ்செய்தாரென்றுரைத்துளம்வாடினாரால் (௧௧௭)

நாரணனழகைநோக்கியிமைத்திலாநயனராகிப்
பாரினில்வளைகடயேபசும்பொனின்கலைகள்வீழ
வேருறுமணங்கனார்களெழுதுமோவியம்போனிற்பச்
சீருறுதருமன்கோயிற்சேர்ந்தனன்றிருவின்கேள்வன். (௧௧௮)

வாருறுமுலையினார்கண்மங்கலகீதம்பாடக்
காருறுகுழலினார்கள்கருப்புரத்தீபமேந்த
வேருறுமறையோராசியியம்பிடத்தருமன்கோயி
லாரியனெய்திக்குந்தியடிமிசைவணங்கினானால். (௧௧௯)

மருகன்வந்துவகையோடும்வணங்கிடக்குந்திதேவி
யுருகியமனத்தண்மெய்யினணைத்தவனுச்சிமோந்து
பெருகியவன்பினாலேபீதகப்பீடமீதின்
முருகவிழ்தொடையாள்வைத்துமுகமலர்ந்தாசிசொன்னாள். (௧௨௦)

தூயபாஞ்சாலன்பாவைசுபத்திரைதென்னன்பெற்ற
வேயுறுமிருதோணங்கைமின்னிடையுலூகியோடு
மாயவன்மலர்ப்பாதத்தின்மகிழ்வினால்வணங்கிநிற்ப
வாயிரநாமத்தையனாசிகள்பலவுஞ்சொன்னான். (௧௨௧)

ஒருகையிற்குன்றேந்தையனுயர்சுபத்திரையாநாமப்
பொருகயல்விழியாள்பெற்றபுதல்வனாமபிமன்றன்னை
மருகனென்றணைத்துமாழைவயிரநற்கடகந்துய்ய
விருகையிற்சேர்த்துமார்பினணிந்தனனிலங்குமாரம். (௧௨௨)

துன்னுபொற்கலன்கண்மல்குந்துரோபதைசுதரைவர்க்கும்
பன்னகவரசன்பாவைபயந்திடுங்குமரனுக்குந்
தென்னவன்மகடன்சேய்க்குஞ்சிறந்தபூடணங்களெல்லாம்
பின்னைதன்மணாளன்பூட்டிப்பெரிதுவந்திருந்தான்மன்னோ. (௧௨௩)

சுந்தரவிதர்ப்பன்பெற்றவுருக்குமற்கிளையதோகை
நந்தணிகரத்தராயநங்கையருடனுமெய்திச்
சிந்தையின்மகிழ்ந்துகுந்திதேவியையிறைஞ்சலோடு
முந்தியமகிழ்வினாலேமொழிந்தனளாசிமாதோ. (௧௨௪)

உருச்சமனிலாதமெய்யாளுருப்பிணிமுதலோர்பாதத்
தருச்சனைசெய்துதுய்யவருச்சுனன்றேவிமாருந்
திருச்சமனென்னத்தோன்றுஞ்சிறந்தபாஞ்சாலிதானு
மருச்சுருளளகந்தாழவணங்கிமெய்மகிழ்ந்தாரன்றே. (௧௨௫)

வந்தடியிறைஞ்சுந்தூயதுரோபதியபிமன்மாதா
சுந்தரவுலூகிதென்னன்றோகையரிவர்கடம்மை
முந்தியவுவகையோடுமுருப்பிணிமுதலாமாதர்
சந்தணிமுலையினாரமழுந்துறத்தழுவினாரால். (௧௨௬)

தவர்களினதிகஞயதவுமியமுனிவனெய்த
வுவமையின்மாயனெய்திவணங்கவுமுவந்தநெஞ்சன்
சிவனிடர்களைந்ததேவதேவனுக்காசிகூறி
நவமணியிலகும்பீடத்தமர்ந்தனனவையிலாதான். (கஉஎ)

கற்கவெண்டவனும்வீணைகரத்துறுமுனியுமெய்த
வற்கியமளித்துத்தன்மனனுசரோடடியின்வீழ
வற்கலைமருங்குசுற்றுமாதவர்மறையின்விஞ்சுஞ்
சொற்களினுசிகூறிச்சுவர்ணபீடத்தினுற்றூர். (கஉஅ)

சரியிலாத்தவர்க்கும்வெவ்வேறிருப்பிடமளித்துத்தாழ்வி
லரியுளமகிழ்ந்துதுய்யவறுசுவையடிசிலன்பாக்
குருகுலத்தைவரோடுங்கூடியாண்டமுதுசெய்தே
விரவிமேற்கடலின்வீழயாவருந்துயின்ருரன்றே. (கஉகூ)

தினகரனுதயஞ்செய்யச்சிறந்திடுமுனிவர்சூழக்
கனகமாமண்டபத்திற்கவரிகணிறைந்துவீச
அனகன்வீற்றிருப்பத்தன்மனனுசர்களுடனுநீதி
புனைகவினரசர்சுற்றப்பொருந்திடவிருந்தவேலை. (கநூ0)

சுந்தரன்வதனநோக்கித்தூயமாதருமனென்றன்
றந்தையாம்பாண்டுவேந்தன்சமனுறையுலகமோவி
யிந்திரன்பதியினெய்தவிராயசூயத்தொல்வேள்வி
முந்தியான்முடிக்கும்வண்ணம்மொழிகெனமுராரிசொல்வான். (கநூக)

செயலழித்தரசர்தம்மைச்சிறையிலிட்டவனியாளுஞ்
சயிலநேர்புயத்தனுனசராசந்தன்றனைச்செற்றே
வியல்புடையிராசசூயவேள்வியையியற்றலாமென்
றுயரரிகூறக்குந்திகான்முளையுரைக்கலுற்றுன். (கநூஉ)

அதிரதவரசர்தம்மைச்சிறையில்வைத்தவனியாள்வோன்
மதியமர்சடையினுனும்வதைக்கொணுவலிமைமிக்கோ
னெதிரிலாமகதர்கோனையாவரேகொல்லவல்லா
ருததிசூழ்துவரையாளுமுத்தமவுரைத்தியென்றுன். (கநூநூ)

தீமையில்செங்கோலோச்சித்திருவுறவுலகையாளுங்
கோமகன்மனத்திநேர்ந்துகூறியவசனங்கேளா
வீமனுன்மகதன்வீயவகைசெய்வன்வெருவலென்று
தாமரைமலர்மேன்மங்கைநாயகன்சாற்றினுனல். (கநூச)

அரியிவைகூறத்தன்மனறனிலாமகதர்கோனைத்
திருவுறைமார்பநீசென்றிவன்றனுற்செற்றுப்பின்னும்
விரிவுளவிராசசூயவேள்வியைமுடிப்பாய்வீம
னுரமுளவிசையனேடுமுன்னடைக்கலமென்றீந்தான். (கநூரு)

திருமணிதுரைத்தியாமுன்சரணமேகெதியாய்வாழ்வோந்
திருவிஞயகனேகாத்தியென்றுசென்றடியின்வீழ
வரியிருகையினுரவணைத்துமார்பமுழுத்திநேரி
னிருபநின்னிடரையெல்லாநீக்குவனென்றுசொன்னுன். (கநூசு)

குறைவிலாத்தருமன்றன்னையிருத்திநீயென்றுகூறி
யிறையவன்வீமனோடுமிந்திரன்சிறுவனோடு
மறையவர்வேடந்தாங்கிமகதனைவதைக்கவெண்ணி
நெறியுறுவரையுங்கானுநீங்கியேகடுகிச்சென்றார். (௧௩௭)

வேறு.

திருவிசையத்தொடுந்திகழுமார்பொளி
ரரிவிசையன்கவியனுசனோடுமே
வருவிசைவாயுமும்மடங்குமானவே
கிரிவிரசன்னகர்கிட்டினாரரோ. (௧௩௮)

சரியிலாமண்டபந்தராளவேதிகை
பருமணிவயங்கியபசும்பொற்கோயில்கள்
கிரிநிகர்சிகரங்கள்கிளர்ந்துதோன்றிய
புரியினற்செவ்வியைப்புகலலாவதோ. (௧௩௯)

முரசொலியுருமெனமுழங்கவெங்கணு
மரசர்கடிறைகொணர்ந்தளிப்பவானுயர்
புரிசையினுஞ்சில்கள்பொலிந்துதோன்றிய
வரைசெறியிருபுயமகதன்வாழ்பதி. (௧௪0)

காரினமெனக்கடகளிறுதுன்னநற்
பாரிணிற்கோடகந்துதையப்பன்மணித்
தேரினம்வயங்கிடச்சிறந்தபல்லியப்
பேரொலியுலகெலாம்பெருத்ததாமரோ. (௧௪௧)

எண்டிசையினுஞ்சமரெதிர்த்துவென்றுயர்
மண்டலத்தரசரைச்சிறையில்வைத்தெழிற்
குண்டலமறையவர்குழாங்கள்சூழ்ந்திடத்
திண்டிறன்மகதன்மாமகஞ்செய்கின்றனன். (௧௪௨)

தவத்தினர்மருங்குறத்தானமெண்ணிலாப்
புவிதலமறையவர்க்களித்துப்பொன்னுறு
பவுத்திரவொளிவிரற்பரவவெண்குடை
கவித்திடுமகதர்கோன்மகஞ்செய்காலையின். (௧௪௩)

சரியிலாமறையவர்வேடந்தாங்கிய
வரியுடனருச்சுனன்வியப்பவாடக
வரையிவரெயிலினைமுரித்துமாருதி
புரியிடைநெறியிடப்போயினாரரோ. (௧௪௪)

வீதியிற்கவினெலாம்விளங்கநோக்கியே
மாதவர்மலியமாமகஞ்செய்சாலையின்
வேதியரெனத்திகழ்வேடந்தாங்கினோர்
நீதுறுமகதன்முன்சென்றுநின்றனர். (௧௪௫)

வெற்பெனும்புயனிடிவெருவிவீழ்ந்திடு
சொற்பகர்மகதர்கோன்றூயவேதிய
ரற்புதரிவரெனவறைந்துமற்றவர்
பொற்பதம்பணிந்திவண்போதுமென்றனன். (௧௪௬)

மாதவர்மறையவ்ருறையுமண்டபத்
தாதனத்தமர்கிலாவந்தணாளரை
வேதியர்குழுவினின்மேவலீரிவ
ணேதுநுங்கருத்தெனவிறைவன்கூறுவான். (கசஎ)

நீண்டகலவனியினிருபர்மண்மிசை
மாண்டிடப்பொருதுமாமகஞ்செய்தேயிவண்
வேண்டியவதனைவேதியர்க்குநல்குவா
யீண்டியான்கேட்குவதீதியாலென்றான். (கசஅ)

மறையவனிம்மொழிபகரமாகத
னறைகுதிர்வினவியதருள்வனென்றுநீ
ருறைதருகுண்டிகையுதகம்பண்ணவே
யிறைவன்முன்கரத்திடையேந்தினானரோ. (கசகூ)

ஈகுவன்வேண்டுவதியம்புவாயென
வேகமுந்தியதிறல்வீமனேகியே
யாகவத்தானநீயருடியென்றலு
மாகதன்முகிணகைமலரக்கூறுவான். (கரு0)

வேதியர்க்கடாதவெஞ்சமரம்வேண்டினா
னீதலுக்கிசைவனோவென்னவீமனும்
பூதலத்தரசன்யான்பொருவனுன்றொடுங்
காதுதற்கேயெனக்கழறினானரோ. (கருக)

ஏவலான்றமையனீதியம்பலோடுமே
சேவலானெனமனஞ்சீறிமாகதன்
மூவர்நீராரெனமொழிதிராகவ
மீவனானென்றலுமிறைவன்கூறுவான். (கருஉ)

இவரெழிற்றருமனுக்கிளையகொற்றவர்
துவரையிற்றேவகிதோன்றல்யானென
வுவரியின்விடமெனக்கனன்றன்றாழியிற்
சிவனெனமாகதன்சீறிக்கூறுவான். (கருஙு)

நீயெனக்கிடைந்துயர்நெடியமால்வரைத்
தீயிடையொருவியேதிரைகொள்வேலையிற்
போயுயிருய்ந்ததாற்போருக்காளலை
வாயுவின்மதலைபோர்வல்லனோவென்றான். (கருச)

மகதர்கோனிவ்வுரைவழங்கமாருதி
நகையுறப்பொருதுனைத்தெறுவனானென
மிகமுனிந்துயருமாவேள்விச்சாலைவிட்
டிகல்புரிநிலத்திடையேகினாரோ. (கருரு)

தும்பையின்மலர்மகுடத்திற்றோன்றநற்
செம்பொனார்கச்சினைமருங்கிற்சேர்த்தியே
வும்பரும்வெருவிடவுயருமாகத
னிம்பரின்மடங்கல்போலெதிர்ந்துநின்றனன். (கருசு)

மந்தரமெனவயங்கிரண்டுமொக்கதை
வெந்திறல்மகதனும்வீமனும்பெறத்
தந்திடவிருவருந்தடக்கைபற்றியே
சிந்தையிற்கதமுறச்சென்றுதாக்கினர். (கருஎ)

வேறு

தண்டுகைசுழற்றியெதிர்தாக்கினர்கண்மேன்மே
லண்டர்கள்வெருக்கொளவடித்தனர்கள்கண்டீ
மண்டிடவிழித்தனர்கள்வாயினொலிமண்வின்
ணெண்டிசையுமுற்றனவிடிந்தநிலமெங்கும். (கருஅ)

அதிர்த்தனரடர்த்தனரடற்கதைகள்கொண்டே
குதித்தனர்கொதித்தனர்கள்கோளரிகள்போல
வெதிர்த்தனர்நகைத்தனரிடத்தினும்வலத்தும்
விதிர்த்தனர்கள்சாரிகைவிழிக்கனல்பிறக்க. (கருகூ)

வீரமுறுமாமகதராசனிவன்விஞ்சு
மேருறவயங்கியெதிர்வீமனிவனென்றே
யாருமறியாவகையடற்கதைசுழற்றிச்
சாரிகைதிரிந்தனர்தடக்கிரிகண்மான. (கசுo)

சக்கரமெனச்சுழல்வர்சாரிகைகள்மாறி
யுக்கிரமுறக்கதைகொடோடுவரடித்தே
முக்கணனுமஞ்சிடவதிர்ப்பர்கண்முழக்குந்
திக்குறுமதக்கரிசெறுத்தெதிர்வதொத்தே. (கசுக)

மாமகதராசன்வயிரக்கதைசுழற்றி
வீமனுரமீதிடிவிழுந்ததெனமோதக்
காமன்மகன்முன்னவன்முனிந்துகதைகொண்டே
பூமியதிரப்பகைஞன்மார்பிடைபுடைத்தான். (கசுஉ)

கடந்தருமதக்கரியெனக்கதமனத்தின்
மிடைந்துவருமாகதனும்வீமனுமெதிர்ந்தே
வடர்ந்தசனியஞ்சிடவடித்தெதிர்தடுப்பப்
பொடிந்தவிருவோர்கரமுறுங்கதையிரண்டும். (கசுங)

பூரணுறுமணிக்கதைமுரிந்துவிழவோடு
மிருவருமெதிர்ந்திருகரங்களைமுறுக்கி
வரையினிடிவீழ்வதெனமார்பினுமுகத்துங்
குருதிசொரியக்கடிதுகுத்தினர்களொத்தி. (கசுச)

விக்கிரமவாலியும்விளங்குகதிரோன்சேய்
சுக்கிரிபனும்பொருவதென்னவுயர்தோளர்
உக்கிரமுறக்கைகொடுரத்தின்மிசைகுத்தக்
கக்கினர்செழுங்குருதிகாதியகளத்தே. (கசுரு)

மகதன்முனிவெய்தியுயர்வீமனைவலத்தா
லிகல்புரிநிலத்திடையெடுத்துவிணெறிந்தான்
ககபதியெனக்கடிதினெய்தியொருகாலாற்
பகைஞனுரமீதுபவனன்சுதனுதைத்தான். (கசுசு)

உதைத்தவனுரத்தின்மகதன்னுருமுபோலக்
கொதித்துரமுறுங்கைகொடுகுத்துதலும்வீம
னெதிர்த்தவன்விழும்படியுதைப்பவிமையோர்க
டுதித்துமலர்தூவினர்கள்சூரிவரென்றே. (கசுஎ)

தெழித்துவருமாகதனைவீமனனல்சிந்த
விழித்தவனடித்துணைபிடித்தவனல்வீர
மழித்தொருகரங்கொடுசுழற்றிமிகவார்த்தே
கிழித்தனன்விண்ணோரிகிரீடிமகிழ்வெய்த. (கசுஅ)

இருபிளவதாய்மகதனிம்பரின்விழுந்தே
யரனொடுநெடித்தலகைசுற்றியவணுங்காஞ்
செரையுடல்பொருத்துசெயலாலுருவுகூடி
வரையிணைநிகர்த்துவிறல்துன்னவெதிர்வந்தான். (கசுகூ)

பிளந்தமெய்பொருந்தியுயிருற்றுயர்பிறங்கல்
வளர்ந்ததெனவேயெதிருமாகதனைவீமன்
கிளர்ந்துபின்வரும்மவனையுற்றுடல்கிழிப்பத்
தளர்ந்திலனெழுந்துசரசந்தன்மிகவார்த்தான். (கஎ0)

கண்ணினிமைகூடுவமுனேயுடல்கலந்து
விண்ணவருமஞ்சமகதன்னெதிரவீம
னெண்ணிலதுமீளவுமெதிர்ந்துமெய்கிழித்தே
மண்ணிலிவன்மாழ்கிலனெனுமனமுழந்தான். (கஎக)

கூறுபடவேவடிவுகூடிவருவோனை
வேறுவகைசெய்வகையில்வீமன்முகநோக்கி
யீறிலிறை*சாயதையெடுத்துகிரிலங்கக்
கீறியடியின்னுனிகிடந்திடவெறிந்தான். (கஎஉ)

சிறந்தவரிசெய்தவகைதிண்டிறல்கொள்வீம
னறிந்துமகதன்றலையின்மீதினடிசேர்ந்தே
யிறந்திடவுரங்கொடுகிழித்தவனெறிந்தான்
றுறந்ததவராடவிமையோர்மலர்கவே. (கஎங)

வேறு.

முரணுறுமகதராசன்முடியின்மேலடிதான்வீழத்
தரணியின்மடிதலோடுந்தருமனுக்கிளையவேந்தன்
வருணமுற்றிலங்குகின்றவாசவன்மைந்தனோடு
மரணெமக்குன்றுளென்றேயச்சுதனடியில்வீழ்ந்தான். (கஎச)

அடியினிலிறைஞ்சுந்தன்மனனுசரையணைக்கவன்பாய்
வடிவுடைமாயன்றன்னைமகபதிசிறுவனோக்கி
மிடலுடைவீமன்கையாற்பிளப்புண்டுமகதன்வீறி
யுடலுயிர்மாயாதொன்றியெதிர்ந்தவையுரைத்தியென்றான். (கஎரு)

இந்திரன்சிறுவன்கூறவிந்திரைகொழுநன்சொல்வான்
மந்தரவரைபோன்மாண்டுகிடந்தவிம்மகதராசன்
றந்தையெண்டிசையுமாள்வோன்றனையரில்லாமையாலே
கந்தனுர்தந்தையெய்தக்கடவிடைத்தவஞ்செய்தானால். (கஎசு)

* சாய்=ஓர்வகைக் கோரை.

தனையவைவேண்டிவேந்தன்றவம்பலகாலுஞ்செய்ய
வினியனாய்விடையினேறுமிறையவனெய்தியானி
னினைவுறுவரந்தானீவனிகழ்த்துதியென்றலோடும்
வினையறநோற்றுநின்றவிறலுடைமன்னன்சொல்வான். (௧௭௭)

மாதுபங்காளவெற்கோர்மைந்தனையருடியென்னச்
சூதமீன்கனியொன்றீய்ந்துன்றுலங்கியதேவிதானே
யீதினையருந்தினேரிலிருபதாயிரத்துப்பாதிப்
போதகப்பலத்தையெய்தும்புதல்வனுண்டாகுமென்றான். (௧௭௮)

அரனீவைகூறியீய்ந்தவாம்பிரக்கனியைவேந்த
னிருபிளவாக்கித்தூயவிரண்டுதேவியர்க்குமீயத்
தெரிவையர்மகிழ்வினோடுமருந்திடச்சிறிதுநாளிற்
கருவயிற்றெளிர்தலோடுங்காவலன்களிப்புக்கொண்டான். (௧௭௯)

மாங்கனிப்பிளவைவாங்கியருந்தியமடநல்லார்க
ளோங்கிடவொருகண்கைகால்செவியுடனிதையப்பாதி
நீங்கியேகுழவியாகியிருவரும்பெறவேநீதிப்
பாங்குறுமன்னன்நோக்கிப்பருவரலெய்திச்சொல்வான். (௧௮௦)

சிகியுறுகரத்தானீய்ந்தசிறந்தமாங்கனியினாலே
மிகுவலிமதலைதோன்றிவிளங்குமென்றருளப்பொய்த்தீண்
டிகழ்வுறப்பிறந்தபாதியுறுப்பனையிரவினேகி
யகழிடையெறிமினென்றுசெவிலியர்க்கரசன்சொன்னான். (௧௮௧)

அரசனீதுரைக்கப்பாதியுறுப்பனையங்கையேந்தி
விரைசெறிகுழலினார்கள்வீதியினிரவினேகிக்
கிரிசெறிந்தெனவேதுள்ளிக்கிளர்ந்தகோபுரங்களோங்கும்
புரிசையின்புறத்தினாழ்ந்தவகழிடைப்போட்டாரன்றே. (௧௮௨)

அகழியினிடிபோற்பாதியுறுப்பினரரற்றக்கேட்டு
நகரியைச்சூழக்காப்பாளரனுடனடித்தநங்கை
புகையுறவிழித்துத்தோன்றுமலகைகள்புடைசூழ்ந்தேக
விகழ்விலாச்சரையாநாமக்காளிவந்தெய்தினாளால். (௧௮௩)

ஒருகரங்கண்கால்பாதியுடலுறுவினையாய்த்தோன்றச்
செரையிரண்டொன்றாம்வண்ணஞ்சேருறப்பொருத்தத்தாழ்வி
லுருவுடைக்குமரனாகியுருமெனவழுதவோசை
யிரவிடைநகரிலுள்ளோர்யாவருங்கேட்டாரன்றே. (௧௮௪)

இரவிநேர்குணபால்வேலைவலயத்தினெழுதலோடு
முருமெனவரற்றுகின்றமதலைவாயோசைகேட்டுப்
புரவலனகழினெய்திப்புத்திரன்றன்னைநோக்கிச்
சரியிலாவுருவனென்றுதடக்கையாற்றழுவினானால். (௧௮௫)

சரையுடல்பொருத்தலாலேசராசந்தனென்றுநாம
முருவுடைமதலைக்காமென்றுயர்ந்தசரீரியோத
வரசனுண்மகிழ்ந்துசேயையங்கையினேந்திச்சென்றே
திருவெனவயங்குகின்றதேவியர்கையினீந்தான். (௧௮௬)

ஆரன்வரமருளப்பெய்திவளர்ந்தருளரசன்மைந்தன்
சராயுடற்பொருத்தலாலேசராசந்தனென்னும்பேரோன்
கிரியிவருடலைவீமன்கிழிப்பவுநொடிப்பின்முன்ன
மிருபிளவொன்றாய்க்கூடியெதிர்ந்தமர்செய்தானென்றான். (கஅஎ)

ஆரியன்மொழியக்கேட்டவருச்சுனன்மகிழ்வினோடுங்
கோரையையுகிராற்கீறியடிநுனிகூடும்வண்ணம்
பாரினிலெறிந்துகாட்டிப்பகைஞனைவதைப்பித்தாயென்
றேருறவீமன்றன்னோடேத்தியாண்டிறைஞ்சினானால். (கஅஅ)

மறுவிலாவீமனோடுமருச்சுனன்வணங்கக்கண்டே
இறைவனிருபர்தம்மையணைத்தின்புற்றிருக்கும்வேலை
சிறைதனினிருந்தமன்னர்திரண்டுளமகிழ்ச்சியெய்தி
நிறையவேமலர்களேவிநேமியைவணங்கினாரால். (கஅகூ)

திறலுடைமகதன்வைத்தசிறையிடர்தீர்ந்துவந்த
நெறியுறுநிருபர்தம்மைநீவிரும்பதியினெய்தி
மறனிலாவறன்சேய்வேள்விகாணியவம்மினென்றே
யிறையவனறையப்பாரினிறைஞ்சியாண்டேகினாரால். (ககo)

வாயுவின்மதலைதன்னான்மடிந்திடுமகதராசன்
சேயுயர்சகாதேவன்றன்சிரத்திருகரத்தைக்கூப்பித்
தூயமாதுவளையாளுஞ்சோதிநீகாத்தியென்றே
யாயுமாமலர்களேவியடியினிலிறைஞ்சினானால். (ககக)

இவுளிகடேர்களெண்ணிலிபநிறையெல்லாங்கொண்டு
நவமணிவயங்குஞ்செம்பொனவையகலகலன்களெல்லா
மவனியிற்பிறங்கல்போலக்குவைசெய்தைம்புலன்கள்செற்ற
தவர்களெண்முராரிபாதத்திறைஞ்சினன்சராசந்தன்சேய் (ககஉ)

இருநிலத்திறைஞ்சிநின்றமகதன்சேய்க்கெழில்கொள்மாய
னரசனீயாகிவையமறத்துடன்காத்தியென்று
முரசொலிகறங்கப்பொன்மாமுடிதனையிலங்கச்சூட்டித்
தருமன்மாவேள்விக்கிந்தத்திறையொடுஞ்சார்தியென்றான். (ககஙு)

யாதவனருளலோடுமிறைஞ்சியேமகதன்மைந்தன்
சீதராதருமன்வேள்விகாணவித்திறையுங்கொண்டு
போதுவனென்றுகுந்திபுதல்வரைவணங்கிப்போனான்
மாதவன்மணித்தேர்மீதின்வயங்கியேநெறியிற்சென்றான். (ககச)

மணிமுடியிலங்கவோங்குமைத்துனரிருவரோடு
மணிகலன்வயங்கமாவினணியுடனனீகவீட்டங்
கணகணகணவென்றோசையுறுமணிக்கரிகள்சூழப்
பணிவிரிபணத்தின்மீதாடித்தருள்பரமன்சென்றான். (ககரு)

துந்துபிமுழங்கத்தேவர்தூயமாமலர்களேவத்
தந்திகளிவுளியீட்டந்தமனியத்தேர்கள்சூழக்
குந்திதன்புதல்வராயவிருவருங்கூடவேதான்
இந்திரப்பிரத்தஞ்சேர்ந்தானிணையிலாவெழில்கொள்மாயன். (ககசா)

கரிதுரகந்தேர்சூழக்கதலிகைககனத்தோங்கத்
தருமன்வந்திடலுமன்புதழைத்திடவணங்கிமாயன்
தெரிவையர்குழாங்களெண்ணிறீவிகையெடுப்பச்சேர்ந்து
புரவலர்பணிந்துபோற்றப்பொன்னவிர்கோயிற்புக்கான். (௧௯௭)

திருமகள்கணவனெய்திச்செம்பொனாதனத்தினோங்கக்
கிரிவிரசத்தினெய்திக்கிளர்ந்திடுமகதனாய
மருவலன்மடியச்சாயைவகிர்ந்தமால்செய்கையெல்லாந்
தருமனுக்கன்பினாலேதனஞ்செயன்சாற்றினால். (௧௯௮)

பற்குனன்பகர்தலோடும்பரிவுடன்பணிந்துதன்மன்
முற்குணமுதல்வாவெங்களிடரறுத்தருளுமூர்த்தி
பொற்கணன்மடியக்கோலமாகியேபுவியைக்கீண்ட
சிற்குணவென்றுபோற்றத்திகழ்ந்தனன்றிருவின்கேள்வன். (௧௯௯)

## மகதராஜன் வதைப் படலம் முற்றிற்று.

ஆகபடலம் - ௨௭ - க்குக் கூடிய திருவிருத்தம் - ௨௦௪௨.

ஸ்ரீகண்ணபிரான் றிருவடித் தாமரை துணை.

ஸ்ரீ

விஷ்ணுமயம்.

௧௦௯ - வது சிசுபாலன்

# வதைப்படலம்.

அத்தியையுரித்துப்போர்க்குமாதியால்விருகாசூரன்
அத்தமேல்வைக்கயாருமவியவேபெறுவரத்தாற்
பித்தனோடிடவேதோன்றிப்பேதுறவதைத்தமாயோன்
பத்தவற்சலன்மால்சோதிபரமன்றாள்பற்றுநெஞ்சே. (௧)

வேறு.

மகதராசனுயிர்வீமன்வவ்வும்வகைசெய்துமன்னர்சிறைவிடுவியாத்
தகுநீதியுணர்தருமன்வேள்விதனிலக்கிரபூசைதனையேதகைந்
திகல்செய்சேதிபனுடற்றுணித்துமவனுயிர்பெறுஞ்சுடரெழுந்துதன்
னிகரிலாததிருவடியினெய்தியுறநின்றமால்வடிவைநினைமினோ. (௨)

மதியெனக்குடைவயங்கவாழ்தருமராசன்மாதவன்முனெய்தியே
யெதிரிலாதநலவிராயசூயமெனும்வேள்விசெய்வகையியற்றென
வதிரதர்க்குளுயர்மகதராசனையடர்ந்துவீமன்வதைசெய்தன
னுததிசூழுலகிலொன்னலார்களினியில்லையென்றரியுணர்த்துவான். (௩)

ஆசையின்கணுறுமரசரைத்திறைகொடெய்தவேயனுசர்நால்வரை
வீசுதொல்புகழையுடையமன்னவவிடுத்தியென்றறிவிளம்பிட
வாசவன்மகன்வடக்குமாருதிகிழக்குயாவலவன்மேற்குற
வேசின்மத்திரைதனிளையமைந்தனுயர்தென்றிசைக்கணுறவேவினன். (ச)

தென்றிசைக்கணுறுநால்வருக்கிளையசிறுவன்மன்னவர்கடிரளெலாம்
வென்றுமற்றவர்கொடுத்தமாதிறையும்விறல்கொடென்னவனளித்திடு
மென்றுநாண்சுடர்கொண்மணியுநித்திலமொடெண்ணிலாதகலனிவையெலாங்
குன்றுபோலொளிரவெய்தியேதருமன்முன்னரிற்குவைகள்செய்தனன். (ரு)

வீரம்விஞ்சியுயர்நகுலனுங்குடதிசைக்குண்மேவுமனர்வெருவுறப்
பாரின்வெஞ்சமரின்வென்றுமற்றவரளித்தபன்மணிவருக்கமோ
டாரமம்பொன்வரைபோலவேகொடிகொடேரின்மாநகரடைந்துதா
னேருறுந்தருமன்முன்னர்வைத்தடிவணங்கினானிணையிலாதவன். (சா)

உத்தரத்திசையினேகும்வாள்விசயனென்னலார்கடிரள்விறலெலா
மத்திரத்தினிலழித்துமற்றவரளித்தவம்பொன்மணியவிருறு
நித்திலங்கள்கலனுயர்பிறங்கலைநிகர்த்திடப்பதியினேகியே
யுத்தமத்தருமன்முன்னரிற்குவைகள்செய்தனன்னுவகைவிஞ்சவே. (எ)

விறல்கொள்வீமனுயர்பூருவத்திசையினுற்றமன்னவர்கள்வெருவுறக்
கறைமிடற்றரன்முனிந்தெழுந்ததெனவேவயங்குகதைபற்றிமா
மறலியஞ்சிடவடித்துழக்கியமர்வென்றுமற்றவரளித்திடுந்
திறைபிறங்கலெனவெய்தியேதருமன்முன்னரிற்குவைகள்செய்தனன். (அ)

பாழிமல்கியபுயத்தனுகியகடோர்க்கசன்பரவைதாண்டியே
ஆழிசூழ்நகரின்வீடணன்முனரினாழியோனறனருட்சுதன்
வேள்விசெய்யவெனையுன்முனுற்றிடவிடுத்தனன்னெனவளித்திடு
மேழுமாழையொளிர்தாலமங்கைகொடியாதவன்னடியிறைஞ்சினான். (கூ)

வீடணன்வரவிடுத்தமாழையுறவிஞ்சுதாலம்வரநோக்கியே
கோடுகையினில்வயங்குமாயனொடுகுந்திமைந்தர்கண்மகிழ்ந்தனர்
ஓடையானையினமெண்ணிலாவிரதமுவரிபோலணிகநிறையொடு
மாடன்மாவினணிநிறையவெண்டிசையினரசர்வந்தடிபணிந்தனர். (கO)

வேறு.

வாயுமகனேஇவணாமீதினறைகூவி
நீயெனைவிரைந்திருகைபற்றெனநிகழ்த்த
வேயெனுமுன்ஞானசிவபூசையையியற்றித்
தூயபுருடாமிருகமெய்தியதொடர்ந்தே. (கக)

விரைவினுயர்வீமனகர்வாயினிடைமேவப்
புருடமிருகங்கடிதுபோந்தடிபிடிப்ப
விருவரும்விரோதமுடனேகியெழின்மன்னுந்
தருமன்முனரெய்தியிவைசாற்றினர்கணின்றே. (கஉ)

நீதியுடன்வந்தமைநிகழ்த்துதலும்வீமன்
பாதியுடல்கொண்டுபெயர்கென்றுரைபகர்ந்த
மாதருமனைத்தழுவிவாயுமகனுக்கை
யேதமகலும்மிருகமீய்ந்தனனெனென்ற. (கங)

அந்தமுறுவேள்விமுடியும்மவுளமன்புற்
றிந்தநகர்சுத்தமுறவேயமர்தியென்று
குந்தியருண்மைந்தன்மொழிகூறிடவிருந்த
புந்திமகிழ்வோடுபுருடாமிருகமுற்றே. (௧௪)

வேறு.

வீடுமன்விதுரன்கன்னன்வேதியனவன்றன்மைந்தன்
பீடுடைப்பூரிபூரிசிரவாவுடன்பிறங்கும்வேந்தர்
கோடகநிரைகள்கைமாக்கொடியுடைத்தேர்கள்சூழ
வாடரவுயர்த்தகோமானனுசரோடடைந்தானன்றே. (௧௫)

அத்தினபுரியையாளுமரசர்கோனெய்தலோடு
முத்தமத்தருமனெய்தியணைத்தின்பவசனமோதிச்
சுத்தனும்விதுரன்கங்கைசுதனுயர்துரோணனெய்தப்
பத்திசெய்தடியில்வீழ்ந்தான்பாண்டுவின்சுதரின்மூத்தோன். (௧௬)

அங்கர்கோசலவர்தென்னரவந்திகர்சோழர்கங்கர்
சிங்களர்குலிங்கர்போசர்கவுசிகர்சிந்துநாடர்
கொங்கர்காம்போசர்மச்சர்குச்சரர்கலிங்கர்சோனர்
வங்களர்துளுவர்சீனர்மத்திரர்மகதர்வந்தார். (௧௭)

கேரளர்சேதிநாடர்கவுடர்கேகயர்கள்வீர
வாரியர்விறற்பாஞ்சாலவரசர்யாதவர்கள்வண்மை
நேரில்காந்தாரர்துய்யநெறியுறுவிதர்ப்பராசர்
வாரிசூழுலகினெண்ணுமாளுவர்பலரும்வந்தார். (௧௮)

காடவர்விறலின்மிக்ககன்னடர்குருதரோடும்
ஆடவர்திலகராணவவனியினரசரெல்லாங்
கோடுடையிபங்கள்சூழக்குரகதவணிகள்விஞ்ச
நீடியகொடிகொடேரினிறைவுறவடைந்தாரன்றே. (௧௯)

பொறையுறமரங்கள்வீயப்பொறிகலங்காமலோங்கு
நெறியுறநால்வேதங்கணிகரில்சாத்திரங்களோதி
யிறையறிந்திலங்குகின்றமறையவரெண்ணிலாதோ
ரறிவுறுதருமன்முன்னராசிகள்பலவுஞ்சொன்னார். (௨௦)

வேறு.

தவுமியனாசுரிசவுனன்போதனேர்
கவுதமன்கண்ணுவன்கணுப்பராசர
னுவமையில்செயமுனிசுமதியொண்சுதன்
நவையகல்பார்க்கவராமனாரதன. (௨௧)

காசிபன்புலத்தியன்சுமந்துசற்கனற்
கோசிகன்காத்துவன்வீதிகோத்திரன்
மாசகலகத்தியன்வைசம்பாயனன்
றேசுறுபிருகுடன்றிரிதமாமுனி. (௨௨)

மாதவவசிட்டனெண்வாமதேவனால்
வேதமார்கிருதவவிரமாமுனி
ஏதமிலசிதனோடதர்வணீறிலாப்
போதனேர்வியாசனும்பொறைகொண்மாமுனி. (௨௩)

பவமறவிலங்கியபரத்துவாசனெண்
டவர்களெண்ணியமயித்திரயன்றத்துவத்
துவமையிலாவுபகூதனோடெழிற்
புவனமீதருந்தவரடையப்போந்தனர். (௨௪)

மாதவரனைவரும்வரலுமேமகிழ்ந்
தேதமிறருமன்றனிளைஞரோடுமாண்
டாதரத்துடனடிவணங்கிமற்றவர்
பாதமீதருச்சனைபண்ணினரோ. (௨௫)

காரிணைக்கரியிற்பொற்கலப்பைவீக்கியே
யேருறுமணிநுகமிலங்கப்பூட்டிநற்
கூரியவச்சிரக்கொழுமடுத்திடச்
சீரியவேள்விசெய்நிலந்திருத்தினார். (௨௬)

சாலறவுழுதபொற்றலங்கொள்சாலையின்
காலையினவிர்மலர்க்கவின்கொண்டோங்கிய
மாலையினணிநவமணிகொடாவட
காலவேநிறைத்தனர்நறுநெய்தீபமே. (௨௭)

மாழையின்கம்பலம்வயங்கமாமணஞ்
சூழவேநறும்புகைதூபம்விஞ்சிட
வீழமார்நவமணியிலங்கச்செய்திடும்
வாழையும்பூகமும்வயங்குஞ்சாலையே. (௨௮)

மாலொடுமரசர்கள்வயங்கிச்சூழ்ந்திடச்
சீலமாமனுசர்கள்சிறந்துதோன்றிடக்
கோலநற்றுரோபதைக்கொம்பனாளொடு
சாலையிற்புக்கனன்றருமராசனே. (௨௯)

மண்டலத்தரசர்மாதவர்மலிந்திட
முண்டகத்திறைபரன்முகிலினார்தியோ
டெண்டிசைக்காவலரியக்கர்சாரணர்
விண்டவவிபுதரந்தரத்தின்மேயினார். (௩0)

கெருடர்காந்தருவர்கிம்புருடர்கின்னரர்
மருடருவிழிகொள்வானுறையுமங்கைமார்
அருடருந்தருமனன்பாரச்செய்திடும்
பொருடருவேள்விகண்டுவப்பப்போந்தனர். (௩௧)

சித்தர்வித்தியாதரர்சிறந்துதோன்றிய
வித்தகத்தும்புருவுடனுமேயினர்
நத்தொடுகாகளநலங்கொடுந்துமி
மத்தளமுடன்முழங்கியதுவாரிபோல். (௩௨)

மோடுடைத்தவனிறைமுனிவரெங்கணு
மாடுறவுதிட்டிரன்மகநடத்தவே
சோடசவிருத்துகள்வரித்துத்தூய்மையா
நீடியகனவினாகுதிநிறைத்தனர். (௩௩)

சாத்திரவழிப்படிதவறலின்றியே
சூத்திரவிதிப்படிதுடங்கினாலிரு
நேத்திரன்றிசையினர்நிருத்தமாடுகைப்
பாத்திரன்மகிழ்ந்திடப்பரிவிற்செய்தனர். (௩௪)

முன்னநாள்வருணமன்முடித்தவேள்விபோல்
இன்னல்களொருவமாமறையியம்பியே
துன்னியவருந்தவர்துடங்கிச்செய்திட
மன்னரெண்ணுதிட்டிரன்மகம்வளர்த்தனன். (௩௫)

திக்கிலெண்பாலர்கடிசைமுகத்தவன்
நக்கனோடிமையவர்மகிழநான்மறை
மிக்கவர்வேள்வியைவிளைத்தபின்னரின்
அக்கிரபூசையார்க்களிப்பமென்றனர். (௩௬)

அக்கிரபூசையார்க்களிப்பமென்றுநான்
மிக்கவர்மகிழ்வுடன்விளம்பமத்திரை
மக்களினிளையவன்வாசுதேவனே
தக்கவனுமெனச்சாற்றுவானரோ. (௩௭)

சாங்கியயோகதத்துவத்தினுச்சியை
நீங்கலாவிறையிவனீண்டபேரொளி
யோங்கியவொருமுதலிவனிதுண்மையா
லீங்கிவனிருக்கவேறியார்கொலென்றனன். (௩௮)

குன்றினாற்பொழிமழைகாத்தகோவினுக்
கின்றியாமளியுடனீயும்யாவையு
மொன்றுதானனந்தமாயோங்குமெய்ம்மையே
யென்றுமாநகுலனுக்கிளையவன்சொன்னான். (௩௯)

மாதவர்மகிழமத்திரைதன்புத்திர
னாதியைவணங்கியர்ச்சித்துமற்றவன்
பாதநீர்சென்னியிற்றெளித்துப்பன்மறை
யோதியேயீவதற்கொருப்பட்டானரோ. (௪௦)

தடித்துறச்சொரிமழைதாங்கக்குன்றையன்
றெடுத்தவர்க்கக்கிரபூசையீயுமுன்
மடித்திடுவாயினன்மறங்கொள்சேதிபன்
றடுத்தனன்மத்திரைதனயன்றன்னையே. (௪௧)

மாலினுக்கக்கிரபூசைவாங்கியே
கோலமாயளித்திடுங்கொற்றவன்றனை
யாலமாவிடமெனவடர்ந்துசேதிபன்
சீலமேயிலாதனசெப்புவானரோ. (௪௨)

காங்கையனிருக்கயானிருக்கக்கைதவ
நீங்கியமகத்துவானவரிருக்கநீ
பாங்கிலாவிடையன்றன்பாதநீர்சிரந்
தாங்கினாய்பாலனுந்தன்மையாலென்றான். (௪௩)

ஆதியாமன்னவன்சபிக்கவினமாய்ப்
பூதலத்திழிகுலமானபுன்மையான்
நீதிசேர்வருணமாங்குலத்தினிற்கிலாங்
கோதுறுவானிறையாகுங்கொல்லென்றான். (சச)

மானமெய்யிலாதிவன்முன்னவன்மதுப்
பானமேபண்ணினன்பதிதர்போலவே
யீனமாங்குலனிவனிடையர்மாதர்தோள்
கானிலேகலந்தவன்கடலுளீசனே. (சரு)

மகத்தினிலேபுரோடாசம்வாங்கியே
செகத்தினிற்காகத்துக்களிக்குஞ்செய்கைபோன்
மகத்துவானவர்களீண்டிருக்கமார்க்கமி
லிகட்சியானவனுக்கோவீகுவாயென்றான். (சசா)

ஓங்கலாத்திருந்துடற்கனன்றுசேதிபன்
பாங்கிலிவ்வசனங்கள்பகர்தலேகடுமே
காங்கெயன்செவியிணைக்கையினுலைமைத்
தீங்கிறைவனையெள்கேலென்றுகூறுவான். (சஎ)

மாதவர்க்ககப்படாவனசப்பாதனைச்
சோதியையுயிர்தொறுந்துலங்குவான்றனை
யாதியையறிவிலாதெள்கலையுன்றுப்
பேதைநீயென்றிவைபேசுவானரோ. அ)

வேறு

இவனேயுலகேழையுமீன்றருள்வோ
னிவனேயயனைத்தருமீறில்பிரா
னிவனேயரன்வெவ்விடரைக்களைவோ
னிவனேயுயரும்பதமீபவனே. (சகூ)

நிலனீரெரிகானெடுவானகமாய்
அலைவீசிடுமாழிகளாய்வரையாய்
மலர்மேலயனாய்மழுவாளனுமா
யுலவாவுயர்சோதியுமாமிவனே. (ருo)

பாயாவுழைசெற்றருள்பாணனிவன்
பாயாவுழையுற்றொளிர்பாதனிவன்
காயாமலர்மெய்க்கவினுமிவனே
காயாமலரைக்களைவோனிவனே. (ருக)

உயிராயுயிர்தோறுறையும்பரனுக்
கயிலாழிவயங்கிடகார்முகில்போற்
றுயில்வானரவின்மிசையென்றுசொலும்
அயிராவிலைமீதமர்வோனிவனே. (ருஉ)

மாமானைவதைத்திடுமாயனிவன்
மாமானையணைத்திடுமார்பனிவன்
பாமான்பதிதந்தைபயோதரமொப்
பாமாமெயனேபரமேட்டியிவன். (ருங)

கூடாழியொடைம்படைகொண்டுகையிற்
றிராவினைதீர்த்துயர்பத்தர்க்குக்
காராவமுதாயளவந்தமிலாப்
பேராயிரமானபெமானிவனே. (ருச)

மகன்வாய்மைபொய்மாதவனில்லையெனு
மிகழ்வாலறையுந்தறியுள்ளினெழுந்
துகிராடகன்மார்பிடையுற்றிடவே
வகிர்வீரமடங்கலிமாதவனே. (ருரு)

மீனுமைவராகம்விளங்கரிபார்
வாறைவளர்ந்தவன்மாமழுவோன்
றேனார்குழறுன்னியசீதையுடன்
கானாரநடந்தருள்காரிவனே. (ருசு)

நறுமாமலர்நண்ணியநான்முகனோ
டிறையாமெனவெண்ணியதேவர்களு
மறைதானுமயங்கிடமாயைசெய
நெறியோனெளிதாய்வெளிநின்றவிவன். (ருஎ)

தானேபதினாலுலகந்தருவோன்
றானேயதின்மீதுசனித்திடுவோன்
றானேகொடியோர்கடமைத்தடிவோன்
றானேயுயராழிதரித்திடுவோன். (ருஅ)

என்றின்னவிர்மன்னிடவெவ்வொளியுங்
குன்றுஞ்செயல்போலுறுகுழவியதா
யன்றிவ்வுலகுண்டவனன்றிமறை
யொன்றும்மிறைவேறிலையீதுணர்வாய். (ருகூ)

அகழ்வேலையதாகுமரக்கன்முடி
திகழ்மாதெசசென்னிகளைக்களைவோன்
புகழ்பாடிமகிழ்ந்திடுபுந்தியிலா
யிகழ்வாயினியெங்ஙனமுய்குதியோ. (சுo)

அன்றிவ்வுலகுண்டருளாதியைநீ
பொன்றும்படியேயிகழ்புன்மையினாய்
நன்றன்றிவைசேதிபர்நாயகனே
யென்றெண்ணதிமைந்தனியம்பினனால். (சுக)

வேறு.

கங்கைதன்மைந்தனுயகாங்கெயன்மொழியக்கேட்டே
யங்கையோடங்கைதாக்கியனலெழநகைத்துவெய்ய
சிங்கமேபோலவோங்குஞ்சேதிபனிறுதிக்கால
மங்கைபங்காளனொத்துவாய்மடித்திவைகள்சொல்வான். (சுஉ)

மதியினையுடுக்களெல்லாம்பொருவிடின்மண்ணினோடு
நதியெலாந்துலங்குமந்தாகினிநலநிகர்க்குமாகி
லெதுகுலத்திடையன்றானுமிறைவனுமென்றுநக்கு
முதுமதிக்கங்கைமைந்தாகேளெனமொழியலுற்றான். (சுங)

உததிபோல்யமுனையாற்றிறெனலியுறுபாடிதன்னிற்
றதியிழுதுடனேயள்ளித்தடக்கையானுகரக்கண்டே
கதுமெனமாதர்மத்தாலடித்திடக்கலங்கிமண்மேன்
மதியிலாதோடுவானேமறைகடேடரியனுவோன். (௬௪)

நீருளேகுடையுமாதர்நிறைதுகில்வாரியேகிப்
பாரினேர்குருந்தினேறிப்பணியநக்கினத்தராகி
வாருநீர்தொழுமினென்றுமற்றவர்முலைமேற்றேய்ந்த
சோரனேவுலகமெல்லாம்படைத்திடுஞ்சோதியாவோன். (௬௫)

விஞ்சுமாமதுரைதன்னிற்பிறந்திடைப்பாடிமேவி
நஞ்சுபோன்மறைந்துதுய்யநந்தகோபன்றன்சேயாய்க்
கஞ்சமாதுலனைச்சற்றுங்கருணையையாமற்கொன்ற
வஞ்சனேகஞ்சமேவுமங்கைதன்மணாளனுவான். (௬௬)

மழுவொளிரரன்போற்காலையவன்வரமதுராவிட்டே
யுழுவையைக்கண்டமான்போல்வெருவியாண்டோடியோடித்
தழைகொள்மால்வரையின்மன்னுமுசுகுந்தன்றுயிலுஞ்சார்வார்
முழையினிற்கரந்துய்வானேமூவராமூர்த்தியாவான். (௬௭)

சரியிலாமகதர்கோமான்றொடர்ந்திடத்தளர்ச்சியெய்தி
வரையினிற்கரந்துபின்னர்மற்றவன்வளைத்ததீயால்
வெருவியேவியாளங்கண்டகருப்பைபோற்பெயர்ந்துவிஞ்சும்
பரவையிற்கரந்துய்வானேநிகரிலாப்பரமனுவான். (௬௮)

குலமிலன்மகுடமில்லன்குருவிலனுறவுமில்லன்
நலமிலனறனுமில்லனுணர்விலன்றிண்டோளின்
வலனிலனருளுமில்லன்வரம்பிலன்றெய்வம்பேணும்
பலனிலனெறிகளில்லன்பண்பிலனிவனோநாதன். (௬௯)

சேதிபனிவைகளாம்புல்லெள்கலைச்செப்பக்கேளா
மாதவக்கங்கைமைந்தன்மனமெரிந்தவனித்தூள்கு
ளாதவன்சுடரையெய்திமறைப்பவவ்வவிர்போகாதா
லோதவமுரைக்குமன்னுவென்றனனுவமையில்லான். (௭௦)

தூயனுங்கங்கைமைந்தன்சொல்லியவுரையைக்கேளாத்
தீயவனிகட்சியாம்பல்வசனங்கள்செப்பலோடு
மாயவனகைப்பவீமன்வடவனலெய்தநோக்கிக்
காயும்வெஞ்சினத்திறேடுங்கதைகைக்கொண்டெழுந்தானன்றே. ()

வாயுவின்மதலைபொங்கியெழுதலும்வலாரிமைந்தன்
றாயகாண்டபங்கையிற்றுலங்கிடவெழவேநோக்க
மாயவனவர்கடம்மைமலர்க்கையாலமர்த்தலோடுந்
தீயவன்பின்னும்வெய்யகடுஞ்சொலேசெப்பினுல். (௭௨)

நாவுகைநுதலிற்றேன்றுநயனமொன்றுடனேநீண்ட
ஞாலமேற்சிசுபாலன்றான்சனிக்கநாரதன்வந்திந்தப்
பாலனைவதைக்கவெய்தும்பகைவன்வந்தடுக்கநெற்றி
மேலுறுவிழியமங்கையிரண்டும்போமெனவிளம்ப. (௭௩)

நிருபரொல்லாருமெய்தியெதிர்த்திடநிகரிலாத
கரியினைவதைத்தோனெய்திநோக்கலுநுதலிற்கண்ணு
மிருகையுமொருவலோடுமிவன்றனையீன்றமாது
வெருவியேதுவரைவாழும்வீரனைவணங்கிச்சொல்வாள். (எச)

மாறில்சேதிபன்றன்மாதாமாதவனுடனேயென்சேய்
நூறுவெம்பிழைசெய்தாலுஞ்சமியெனநுவலக்கேட்டே
வீறிலொண்மாயோன்றீயனியம்புசொற்சதந்தானெண்ணிச்
சீறிலாச்சிசுபாலாநீசெருச்செயவருதியென்றான். (எரு)

அரியிவையருளக்கேளாவனலுறச்சேதிராசன்
நரியெதிர்ந்திடவேசியநடுங்குமோவென்றுநக்காண்
டிருமெனவதிர்த்துத்தேரினுற்றடாபொருதியென்னத்
திருமகள்கொழுநன்வையத்தமர்ந்தவண்சேர்ந்தானன்றே. (எசு)

இருவருமிரதமேறியெதிர்த்தனுமிமையோர்கோமான்
அரிவைபங்காளன்வானோரயனொடுமனுநோக்கப்
புருவமுஞ்சிலையுங்கோட்டிப்புகையுயிர்த்தடருந்தீயோன்
றிருவமர்மார்பன்றன்மேற்சிலீமுகமழைபெய்தார்த்தான். (எஎ)

சேதிபன்சிலையாலெய்தசிலீமுகந்திசையைப்போர்ப்ப
மாதவன்வரிவில்வாங்கிவாளியாலறுத்துமாற்றி
யாதவன்படையைவிட்டாங்கார்த்திடமறங்கொடீயோன்
மோதுவெந்தழலினம்புமுடுகியேதுணித்துவீழ்த்தான். (எஅ)

மாறிலாமாயன்வெய்யவாயுவின்படையைவிட்டான்
பாறுவின்படையைவிட்டேயறுத்தனன்பவங்கொணெஞ்ச
னீறிலச்சுதனுமையனிந்திரன்படையைவிட்டான்
சீறியேசேதிராசன்மறலிதன்படையாற்றீர்த்தான். (எகூ)

வெஞ்சினம்பெருகவெய்யசேதிபன்வின்றாண்வாங்கி
நஞ்சுமிழ்ந்தடருகின்றநாகபாணத்தைவிட்டான்
கஞ்சனைக்கடிந்தவெங்கோன்கருடன்றன்படைகடாவப்
பஞ்செனப்பறந்துபோனபன்னகப்பகழியம்மா. (அ0)

மலரயன்படையைவிட்டான்மாயவன்மறவன்கண்டு
சிலைவளைத்தெண்கணான்றன்படையினாலறுத்துத்திங்க
ளிலகுவேணியன்றானீய்ந்தபடையினையெடுத்துவிட்டா
னுலகயிலையன்றானுமுமாபதிபடையால்வீழ்த்தான். (அக)

விடமெனமுனிந்துவெய்யசேதிபன்வின்றாண்வாங்கிக்
கடிதினிற்கனமேபோலக்கடுங்கணைசொரிந்துமாயன்
கொடிகுடைசவரிவீழ்த்துக்குனிசிலையறுத்துத்தேரைப்
படிமிசைத்துகளதாக்கிப்பணிலம்வாய்முழக்கியார்த்தான். (அஉ)

மருடருமனத்தனானசேதிபன்வாளிதன்னா
லுருடருமணித்தேர்பாய்மாவுயர்சிலைதுவசம்வீழப்
புருடவுத்தமன்றான்மிக்கபொன்முடிதுலங்கத்துய்ய
கருடவாகனனாய்நின்றான்கலங்கண்மெய்கவின்கொண்டோங்க. ()

சங்குவாளாழிதண்சொர்ங்கமோடைந்துந்துய்ய
வங்கையினேந்தியம்பொனுடைதன்மருங்குசேர
மங்குலின்வனசமல்கிமலர்ந்தபோல்வயங்குவானைச்
சிங்கமேபோலநின்றசேதிபன்றெரியக்கண்டான். (அ௪)

இரவியினவிராற்பாறுமிருளெனச்சேதிராசன்
அருவினையொருவத்தூயவறிவுவந்தணுகப்போற்றோர்
மருவுசாரதியைநோக்கிமாதவன்கலுழன்மீதிற்
கருமுகிலெனவேநின்றானவ்வண்ணங்காண்டியென்றான். (அ௫)

வேறு.




புவனமீரேழையுமுதரத்துட்பொதிந்
தவரிருழண்டம்விண்டெயருநாரமேற்
கவினுறுவடவிலைமிசையிற்காட்சியா
மவிருறவமர்ந்தவச்சுதனைக்காண்டியால். (அ௬)

அப்பமரரிதனக்கடியரான்முனிற்
செப்பியசாபத்திற்சென்மந்தீர்த்தெனை
முப்பிறப்பாக்கியமுராரிசெற்றெனக்
கொப்பிறண்சரணழிக்குவனென்றோதினன். (அ௭)

தரணியினிலங்குமிம்மாயன்சாற்றவே
யிரணியனுயுறைந்தெற்றுந்தூணிடை
முரணுறுமுடங்குளையாகிமுந்தியான்
மரணமுற்றிடவுயர்மார்பைப்போழ்ந்தனன். (அ௮)

பின்னரும்விச்சிரவாவின்பிள்ளையா
யின்னலிற்சிரங்களீரைந்துநாலைந்து
துன்னியகரங்களாய்த்தோன்றுமென்னையே
மன்னவனிராமனுய்வதைசெய்தானரோ. (அ௯)

இருபிறப்பொழியவேயிம்பரின்னுய
ரரசரிற்சேதிபன்சிறுவனுகிவல்
லுரனுறுந்தேரிடையுற்றவென்முன
ரரியுருவாகியேயரிக்கவெய்தினன். (௯௰)

ஆதலாலரிதிருவாழிதன்னினாற்
பூதலத்தியான்மடிந்தாவிபோயுயர்
மாதவனடிமிசையடையும்வண்மையைச்
சூதனீகாண்டியென்றறியச்சொல்லினன். (௯௧)

சூதனோடிவைசிசுபாலன்சொல்லுமுன்
மாதவன்கலுழன்மேல்வயங்கித்தோன்றியே
சோதிசெய்திகிரிவான்றுலங்கவேவிடச்
சேதிபன்சிரத்தினையறுத்துச்சென்றதால். (௯௨)

சீருறுதிகிரிசென்றறுப்பச்சேதிபன்
பாரினின்மடிந்திடப்பறிந்தவாவிமின்
பேரொளிவானுறப்பிறங்கித்தோன்றியே
வாரியனடிமிசையடைந்ததாமரோ. (௯௩)

சேதிபன்மடிந்தவனுவிசென்றுயர்
சோதிசெய்பேரொளியாகித்தோன்றியே
மாதவனடிமிசையடையவானுளோர்
போதனோடொளிமலர்பொழிந்துபோற்றினர். (கூச)

கைதவமகற்றியேகருதொணுத்தவஞ்
செய்தவர்பெருத்திருவடியைச்சேதிபன்
வைதிவணடைந்திடவழங்கினையென்று
பொய்தவிர்முனிவர்கள்போற்றினரரோ. (கூரு)

பகையிலனுறவிலன்பரமன்றனென
நிகரினன்மறைப்பொருணிகழ்த்துநீர்மையால்
இகழ்வுறுமிவன்றனக்கடிமையீந்தனை
புகலருஞ்சோதிநீயென்றுபோற்றினர். (கூசா)

அகழ்ந்தவர்க்கவனிநல்லயமளிப்பபோல்
இகழ்ந்தவனுவியுன்னிணையிலாவடி
திகழ்ந்திடவளித்திடுந்தேவநீயுனைப்
புகழ்ந்தவர்க்களிப்பனபுகலலாவதோ. (கூஎ)

என்றுநான்மறைப்பொருளியம்பியேருறு
கொன்றைவார்சடையினன்கோதிலாவயன்
பொன்றவில்முனிவர்கள்புரந்தரனொடு
மன்றல்சேர்மலர்மழைபொழிந்துவாழ்த்தினர். (கூஅ)

வீடுமன்வேதியன்விதுரன்மத்திரன்
ஆடினர்தருமனோடனுசர்கூடவே
வீடினவினையெனவிமலன்மெல்லடி
சூடினர்சென்னியிற்றெழுதங்கேத்தியே. (கூகூ)

சோதியென்றுணர்ந்திடுந்தூயமன்னரை
மாதவன்மாயையால்மயக்கமாறிலா
வாதியென்றறிகிலாரவனியெய்திய
யாதவனெனவணைத்தின்புற்றனரரோ. (க00)

செருவிடைச்சேதிபன்மடியச்சீருறு
தருமனோடனுசர்கடழீஇக்கொண்டின்புற
முரசுடன்பேரிகைமுழங்கமாதவன்
றரணியின்வேள்விசெய்சாலையெய்தினன். (க0க)

உக்கிரச்சேதிபன்மடியவோங்கிய
சக்கரம்விடுத்தருள்சார்ங்கபாணிக்கே
யக்கிரபூசையையளித்துமத்திரை
மக்களிவினையவன்மகிழ்ந்துவாழ்த்தினன். (க0உ)

வேறு.

எதிரிலாவிராசசூயமென்னுமாவேள்விசெய்து
சதுமறையறைபவர்க்குத்தருமன்றெக்கணைகணல்கி
யெதியினமகிழ்ந்துசூழவெண்ணின்மாதானமெல்லா
மதிதிகள்பெறவேயீய்ந்தானம்பொன்மாமாரிதன்னை. (க0ஙு)

தனமெலாநகுலன்சேர்க்கத்தடக்கையாற்சுயோதனன்றன்
மனமெலிந்தியவின்சொன்மகபதிசிறுவனேத
வனகன்வேதியர்கள்பாதத்தருக்கியமளிப்பப்பொற்பார்
கனகமாதானமெல்லாங்கன்னனேசெய்தான்மன்றே. (கoச)

மத்திரைக்கிளையமைந்தன்மகிழ்ந்தருச்சனைகள்செய்ய
வித்தகவிதுரன்பூரிவிகர்ன்னனேவலர்களாகப்
பத்திசெய்தனகவற்கம்பவனன்சேய்சமைப்பித்தியச்
சுத்தமாமறையோர்க்கெல்லாந்துருபதன்சுதரேயிட்டார். (கoரு)

வேறு.

பூதலத்தருமறைபுகலுவோர்க்கெலாந்
தீதகலத்தெசதானஞ்செய்துயர்
மாதவர்மகிழமாதருமன்வையமே
லாதபத்திரநிழலமரவேகினன். (கoசு)

சங்குதுந்துமிபடலிகைதழங்கவே
வெங்கயமிரதமாமிடையவேகிநற்
பங்கயமுகத்துரோபதிதன்றேடுமே
திங்களேர்குடையன்வானதியைச்சேர்ந்தனன். (கoஎ)

நவையகறருமன்பின்னவர்களுல்வரோ
டுவமையிறுரோபதையுவப்பவேகியே
பவமகல்பகிரதியயத்தினிற்படிந்
தவபிரதங்குடைந்தாடினரோ. (கoஅ)

அவபிரதங்குடைந்தாடியாடக
வுவமையிலாடையொண்மருங்கிற்றேன்றவே
நவமணிக்கிரீடமுஞ்சிரத்தினண்ணிடத்
தவர்களாசிகள்சொலத்தருமனேங்கினன். (கoக)

நவையகறம்பியர்நால்வரோடுமே
உவமையில்கலன்கண்மெய்யோங்கவெய்தியே
துவரையின்விளங்கியதூயமாயனைத்
தவர்களெண்ணுதிட்டிரன்றழுவினரோ. (ககo)

மாயவன்றருமனைமகிழ்வுறத்தழீஇத்
தூயநல்வசனங்கள்சொல்லியின்புற்றுப்
பாயயம்வயங்கியபசும்பொற்றேரின்மேன்
மீயுயரலரிபோல்விளங்கினரோ. (கசுக)

தம்பியர்தமணியத்தேரிற்சார்ந்திடக்
கம்புதுந்துமிசினங்கறங்கவானுய
ரும்பர்கண்மலர்மழையுதவிவாழ்த்தவே
வம்பவிழ்தொடையுதிட்டிரன்வயங்கினன். (ககஉ)

அடிமிசைநூபுரமுறப்பொன்னுடைசேர்
துடியிடைமருங்கின்மேகலைதுலங்கிடக்
கடயமின்கரமிசைக்கவின்கொண்டோங்கநல்
வடிவுடைத்துரோபதைவயங்கினளரோ. (ககங)

தவளவெண்ணகையுறத்தாளமாவடங்
குவிநகிலிணையினின்வயங்கக்கோதிலா
நவமணிக்கலன்கள்கந்தரத்தினண்ணவே
துவரிதழ்வாயினாடுளங்கினாளரோ. (௧௧௪)

புதிதலர்பங்கயப்போதைவென்றுயர்
மதியினிலிருகயல்வயங்குமாட்சிபோ
லெதிரிலானனம்விழியிலங்கமாதர்க
டுதிசெயத்துரோபதிதுலங்கினாளரோ. (௧௧௫)

நணிமலர்க்குழலளிநண்ணியாடவே
யணநடையணங்கனாளரம்பைநாணிட
வினமணித்தோடுகாதிலங்கத்தேரின்மேல்
வனிதையர்க்கரசிபோல்வயங்கினாளரோ. (௧௧௬)

துலங்குபொன்னிரதமேற்றுரோபதைத்திரு
விலங்கிடக்கவரிகளசையவெய்தியே
கலங்கண்மெய்யிலங்கிடக்கவிகையோங்கிட
வலங்கொளுந்தருமன்முன்வழிக்கொண்டானரோ. (௧௧௭)

அதிரதர்துவாதெசவாயிரத்தவ
ரெதிரிலாவிரதமேலிருகைகூப்பவே
மதியுறுநீள்கொடிநிறையமாமுர
சுததியினொலியுறவுவந்தங்கெய்தினான். (௧௧௮)

தவளவொண்ணகையினார்சாமரைத்திரள்
கவினுறவிருமருங்கசையக்காட்சியார்
துவசம்வானுற்றிடத்துரகந்தேர்கரி
யவனிமேனிறைந்திடவணிகமார்ப்பவே. (௧௧௯)

மங்குலைநிகர்த்தகொந்தளகமாதரா
ரெங்குநற்சுண்ணமண்ணிலங்கவீசிடக்
குங்குமவிமசலங்கொண்டுமைந்தர்க
ளங்கையினிறைத்துயர்வசந்தமாடவே. (௧௨௦)

துந்துமிவளைசினந்துடிகையார்த்திட
வந்தமன்சிறுவனெஞ்சனலுறுத்தவே
தந்திகள்புடைவரத்தருமன்வையமே
லிந்திரைகொழுநனோடேகினானரோ. (௧௨௧)

பொருப்பெனவளர்முலைப்புயலொண்கூந்தலார்
கருப்புரத்தீவிகைகரத்தினேந்தவே
விருப்பமுற்றமரர்வான்மலர்கள்வீசிடத்
திருப்பொலியுதிட்டிரன்வீதிசென்றனன். (௧௨௨)

அயனகர்தன்னினுமதிசயித்திடு
மயன்மகிழ்ந்துதவுமாமண்டபந்தனிற்
கயல்விழிமடநலார்கவரிவீசவே
இயல்புடன்றருமன்வீற்றிருந்திட்டானரோ. (௧௨௩)

சின்னமூதொலிகளெண்டிசையுஞ்சேர்ந்தன
மன்னவர்குழுவெலாமகிழ்ந்துபோற்றவே

கன்னன்மென்மொழித்துரோபதியுடன்கவின்
பொன்னெடுங்கோயிலிற்றருமன்புக்கனன். (கஉச)

ஆடகவாடைபொற்கலன்களாரநற்
கோடகமதமுறுங்குஞ்சரங்கடேர்
பீடுடைத்தருமன்பேருவகையெய்திட
வேடவிழ்தொடையுறுமரசர்க்கீய்ந்தனன். (கஉரு)

வேண்டியதனைவர்க்குமளித்துவிஞ்சிய
பாண்டுவின்மதலையாந்தருமன்பாரினை
நீண்டடர்வராகமாயிடந்துநீணெறி
பூண்டவனுடனிருந்தனன்பொற்பூரவே. (கஉசு)

சாமரைதிவளநற்றம்பிமாருறச்
சோமனுணனத்துரோபதன்றரு
மாமலர்த்திருவனுள்வயங்கித்தோன்றவே
ராமனேர்தருமன்வீற்றிருக்குங்காலையின். (கஉஎ)

தருமன்மாவேள்விசெய்தருக்குந்தம்பிமார்
பெருமையுந்துரோபதியழகும்பேர்கொணுத்
திருவுறுசெல்வமுங்கண்டுசீறிலா
வரவுயர்துவசனெஞ்சழல்வதாயினன். (கஉஅ)

நத்துருசெங்கைநாரணன்றன்செய்கையி
லித்திருவிவர்களுக்கெய்திற்றுமெனுச்
சித்தநொந்திலங்கியசெல்வநோக்கிலா
னத்தினபுரிநகர்க்கடையவெண்ணியே. (கஉகூ)

உயர்ந்திடுதருமனுக்குணர்த்தியோவுவா
னயம்பளிங்கெனப்பளிங்கமருநீரென
வியங்கிடுமண்டபமருங்கினின்சொலார்
நயந்திடவிணையிலானண்ணினனரோ. (கஙo)

கூரியவாளினைச்சுழற்றிக்கொற்றவ
னோருறுதுகிறுடைக்கேறவாங்கியே
நீரெனப்படிகத்துநடந்துநீரினைப்
பாரினிற்பளிங்கெனப்படிந்துநீந்தினன். (கஙக)

பயமெனப்பளிங்கெய்திப்பளிங்கிதாமென
வயமதினமிழ்ந்திடுமவனைநோக்கியே
செயலுறுதுரோபதிதிருவைநேரெனு
மெயினவிர்கலனுறமிகநகைத்தனள். (கஙஉ)

நிலவெனத்தளவலரிலங்குநீர்மைபோ
னலனுறத்துரோபதைநகைக்கநோக்கியே
வலனுறுமுதிட்டிரன்முனியவாரியி
னலையுறத்துயில்கொள்வோனறைகுவானரோ. (கஙங)

வீரியர்போலவாள்விதிர்த்துவந்தவ
னீரழுத்தழுந்திநீந்திடுதல்கண்டவ
ரார்நகைசெயாதவரரசகேளென்றே
நாரணனிலங்கிடநகைசெய்தானரோ. (கஙச)

பவர்களானவரெலாம்படியின்மாண்டுய
ரவனியாள்சுமடகனகையிதாமென
விவுளியாய்முன்வருமிறைவனெண்ணியே
வுவகைவிஞ்சிடக்கவினுறநகைத்தனன். (௧௩௫)

திருமகணுயகன்சிரித்தெலீர்களு
மொருமுகமாகவேநகைமினென்னவொண்
ணரிவையர்நகைசெயவனுசர்தம்முடன்
றருமனுநகைத்தனன்றவர்களோடுமே. (௧௩௬)

நீரினுளமிழ்ந்திவணீந்தியேறியே
யீரவெண்டுகில்களைந்திணமேமலி
நேரிலாக்காழகம்புனைந்துநின்றவன்
சீருறுந்துரோபதிசிரிக்கநோக்கினன். (௧௩௭)

தருமனுடைவருநகைப்பச்சக்கர
னிருகரங்கொட்டியேசிரிப்பவீனமுற்
ருருவரைநோக்கிலானுளங்கனன்றுற
விரைவினின்மண்டபமிசையின்மேயினன். (௧௩௮)

அரவுயர்த்தவன்வரவன்பினேடுமோ
முரசுயர்த்தவனலமொழிகள்பேசியே
தெரிமணிக்கலனெலாஞ்சிறக்கவீய்தலும்
விரைவினிலெழுந்தவன்விடைகொண்டேகினன். (௧௩௯)

வேதியன்காங்கையன்விதுரன்கன்னனே
டேதமிலனைவரும்விடைகொண்டேகவே
ஆதவனெனத்திகழரவுயர்த்தகோத்
தீதகலத்தினபுரியிற்சென்றனன். (௧௪௦)

இருடருமனச்சுயோதனமனேகவே
யருடருதவர்களாச்சிரமத்தெய்தினர்
கருடவாகனனிருகழல்பணிந்துயர்
புருடமாமிருகமும்போயிற்றுமரோ. (௧௪௧)

சேதிபன்சிரத்தினைத்துணித்துச்சீருறு
மாதவர்மருங்குறப்பாண்டுமைந்தர்கள்
வேதனையொருவவேவேள்விமுற்றுவித்
தாதியோனிருந்தனனமரரேத்தவே. (௧௪௨)

வையமாசினியுமாய்மதியுடுக்கதிர்
வெய்யவெங்கனல்புனல்வாயுமேருவாய்ச்
செய்யதாமரையயன்சிவனுமாய்மறை
யையனேயச்சுதாவனந்தரூபனே. (௧௪௩)

சிசுபாலன்வதைப்படலம் முற்றிற்று.

ஆ படலம் உஅ - க்குக்கூடிய திருவிருத்தம் - உ௧அ௫.

ஸ்ரீகண்ணபிரான் திருவடித்தாமரைகளே சரணம்.

ஸ்ரீ

விஷ்ணுமயம்.

௧௦௭ - வது சாலுவன்.

# வதைப் படலம்.

உந்தியம்புயத்தினுலகெலாமுதவியொருமுதலாய்ப்பலவுருவாய்த்
தந்திமுன்னின்றுகராவினைச்செற்றுச்சகமெலாந்தானளந்தருளி
யிந்திரையவனிக்கினியகொண்கனுமாய்யாதவர்குலத்தினுற்பவித்துச்
சிந்தியாமறவோர்குலமறமுருக்கிச்சிறந்தசீதரனையேதுதிப்பாம். (௧)

வேறு.

சீலமன்னுமதனோடடர்ந்துபதினாலுமேழுமூறுதினமெலாம்
ஆலமென்னவுலகெங்குமஞ்சவடுகணைசொரிந்துவிசையோடய
வேலியெங்குமுறநின்றசாலுவனோடமர்செய்வேலைமுறையிட்டபாஞ்
சாலியாடைதொலையாதுநல்கியவனுயிர்கொண்மாலினடிதாழ்மினோ. (௨)

கோலமாகியவிதர்ப்பனல்கியருள்கோதையோடிரதமேறியே
நீலமேனியனடர்ந்தபோரினெதிர்நிற்கலாதுநிலனோடிய
சாலுவனிருகைதன்னின்மண்கொடுதழற்கணன்றனைநினைந்துயர்
ஞாலமீதினொருவருடனற்றவநிரம்பவீசனவணண்ணினான். (௩)

தூயமாவிடபமீதினேறியருள்சோதியைத்தொழுதுசாலுவன்
மாயன்மாநகரழித்துமற்றவனைவெல்லவெண்டிசைகள்வானெலா
மேயெனும்முனரினெய்தவானுயரிருப்புவேலியொளிர்மாபுர
நீயெனக்கருள்செயென்னவேயரனினைக்குமூன்றுதவிநீங்கினான். (௪)

சிவனளித்திடுமிருப்புவேலியொளிர்திகழ்புரத்தினிடையெய்திமா
துவரையிற்கணைசொரிந்துமாமழைகள்போலவெண்மணல்கடூவியே
பவனனாயனலைவீசிவானுயர்பருப்பதங்களையெறிந்துதா
னுவமையிற்கனககோபுரங்கள்பொடியுறவழித்தனன்முனிந்தரோ. (௫)

எரிவளைந்திடவெறிந்தவாயுதிசையெங்கணும்மனல்பரப்பிட
வரவினங்கள்விடம்வாயுமிழ்ந்துவளையப்பிறங்கன்மழையடரவே
உருமெனக்குரலினோசையுற்றிடவுயர்ந்துசாலுவன்முடுக்கலும்
அரசரோடினர்களிறுதிகாலவழிவாமெனவமரர்வெருவவே. (௬)

சாலுவன்னயமிலங்குவேலியுறுபுரமொடுஞ்சமரமுடுகலு
மாலின்மைந்தனொடுசாம்பன்விந்தனுயர்சாரணன்சினிமனன்சுதன்
சீலம்விஞ்சுதிறலக்குரூரனொடுமரசர்தேர்கண்மிசையேறியே
காலமாரியெனவில்லினானொடியநெடியவாளிகள்கடாவினார். (௭)

சாகரந்திகழூரின்மன்னர்கணைதூவிடக்கடியசாலுவன்
ஏகரூபவெகுரூபமாகியுயரெண்டிசைக்கணினுமுற்றெழிற்
சேகரம்புயமுரங்கரங்குருதிசொரியவாளிமழைசிதறலு
மோகரங்களுடனடரும்வீரர்திரண்முறியமாரனெதிர்முடுகினான். (௮)

மாரன்வெஞ்சிலைவளைத்துவாளிகள்வழங்கிடக்கடியசாலுவன்
கோலவெங்கணைகொடேயறுத்தரிகுமாரன்மார்பினூறுகுருதிகள்
பாரினோடைவொளிராசுகங்கண்மெய்யழுத்தலோடுமெழுபருதிபொற்
றேரின்மீதிடைமயங்கினானளினமங்கைதன்னுடையசிறுவனே. (௯)

சீதரன்சுதன்மயங்கிவீழவுயர்தேர்கொடேவலவனேகனு
மேதமில்விரதிகொழுநனோர்கடிகையெய்தவேதெளிவுவந்திடப்
பீதிகொண்டுவெரிகிட்டனன்பகைஞன்முன்னரென்றுசிலர்பேசிடச்
சூதனீயிரதமீளவிட்டனையெனாவிரைந்துரைகள்சொல்லுவான். (௧0)

எந்தைதன்னொடுமலாயுதன்றனொடுமியானிடைந்துயிர்கொடுன்முனின்
வந்தனன்னெனவுரைப்பனோவனுசர்தேவிமாரெனைமதிப்பரோ
முந்துமென்விறலையழிவுசெய்தனையெனாமொழிந்துயருமாரவேள்
சிந்தைநொந்திடலுமிருகையிற்றொழுதுதாருகன்சிறுவனுரைசெய்வான். (௧௧)

சூதர்செய்தொழில்கள்செய்தனன்னதிலுன்வீரியத்திறமைசோருமோ
சீதரன்குமரவென்றுகைதொழுததாருகன்சிறுவனைக்கடி
தேதமற்றவிரதத்தைநீவிடுதியென்றுமாரனுமுனெய்தியே
யாதவன்படையைவிட்டனன்மறவனழலின்வாளிகொடறுத்தனன். (௧௨)

மாயவன்குமரன்வாசவன்படையைவிட்டனன்வலியனாகிய
தீயவன்மறலிவெஞ்சரங்கொடுவிலக்கினன்றிருவருட்சுதன்
வாயுவின்படைவிடுக்கவேமறவன்மற்றதேகொடுதடுத்தனன்
றூயவன்முகில்கள்போலவெண்டிசையுமறையவெங்கணைசொரிந்தனன். (௧௩)

சம்பரன்றனைவதைத்தவன்கணைசொரிந்திடக்கடியசாலுவன்
வெம்புநெஞ்சினன்வில்வளையவாளிகள்விடுத்தறுத்திடலும்வேனிலா
னம்பரத்தினொடுதண்டுகொண்டறையவேயயப்புரனொளித்தனு
மும்பர்மாமலர்சொரிந்துவந்தனர்களுவரிபோலரசரார்ப்பவே. (௧௪)

அந்தரத்திடையொளித்தசாலுவனரைக்கணத்தினியப்புரத்
திந்திராதியர்நடுங்கவெய்திவளையூதிவாளிமழைபொழியமா
விந்தைமைந்தன்முனிவெய்திவில்வளையவாசுகங்கொடுவிலக்கவே
யிந்தவண்ணமிருபத்தினோர்தினமெதிர்ந்துவெஞ்சமர்செய்காலையின். (௧௫)

வேறு

வீரனையெதிர்ந்துவந்தசாலுவன்விசிகத்தாலே
பாறினார்மன்னரஞ்சிப்பலதிசைதோறுமோட
மாரவேளெதிர்ந்துதாக்கும்வலனெலாமாலுக்கோதச்
சூரசேனன்சேயாண்டோர்தூதனைவிடுத்தானன்றே. (௧௬)

தூதுவன்விரைவினெய்தித்துய்யமாதருமனாரு
மேதமினகரியெய்தியிறைவனைவணங்கிமாரன்
மீதலத்தயங்கொள்வேலவிஞ்சுசாலுவன்றனோடே
பூதலத்தமரிற்றாக்கும்பொருளெலாமுறைசெய்தானால். (௧௭)

மாரவேளமரிற்றாக்கும்வகையெலாந்தூதன்கூற
வாருநேரிலாதமாயோனணிமணித்தேரினேறித்
தாருகன்விரைவிற்றூண்டச்சத்தியவாமையோடு
மேருறுதுவரைதன்னிலிமைப்பின்முன்னெய்தினானால். (௧௮)

நீலமாமேகம்போலநேமியையமைய்தலோடு
மாலமாவிடமேபோலவயங்கொள்மாபுரத்தினூடே
காலனோடிமையோரஞ்சச்சாலுவன்கணைகள்பெய்து
கோலமாவளையையூதிக்கோளரிபோலவார்த்தான். (௧௯)

சாலுவன்வரிவில்வாங்கிவிடுத்திடுஞ்சரங்களெல்லா
மாலொருகணையினாலேயறுத்திடமறவன்வெய்ய
நீலகண்டன்றானீய்ந்தநிகரிலாவேலைவாங்கி
நாலிருதிசையுமஞ்சவெறிந்தனனமனேபோல்வான். (உ0)

சாலுவனெறிந்தவேலெண்டிசைகளுந்தழல்கள்கால
வாலமாவிடமேபோலவமரர்களஞ்சமாயோன்
மேலுறவருதலோடும்விமலன்வில்வளைத்தேயைந்து
கோலினானூறுகூறாய்க்குறைத்தனனிமையோரேத்த. (உ௧)

வேலொருநூறுகூறாய்விழுதலும்விடமேபோலச்
சாலுவன்முனிந்துவெய்யசரங்களான்மாயோன்கையிற்
கோலவில்லறுத்துநீண்டகொடியினைத்துணித்துவீழ்த்திக்
காலன்மெய்ந்நடுங்கவார்த்துக்கடியவன்கழறலுற்றான். (உஉ)

எனக்குயிர்த்துணைவனானவெதிரிலாச்சேதிராசன்
றனக்குநிச்சயித்தமாதுதன்னைநீபுணர்ந்ததன்றிக்
கனக்கிரியேலவிஞ்சுமவனையுங்கடிந்துசெற்ற
வுனைக்கொடுஞ்சரங்களாலேவதைப்பனென்றுறுத்துச்சொன்னான் (உ௩)

சூரியனினையவாய்மைபுகறலுமாயோனோக்கி
வீரியர்வில்லினல்லால்விளம்பிடார்புன்மையென்றே
யாரியன்கதையைவாங்கியறைந்திடப்புரத்தினோடு
நேரிலாதொளித்துப்போனானெறியில்சாலுவன்றான்மாதோ. (உ௪)

ஆயமொளிர்புரத்தினோடுமந்தரத்தொளித்துப்போன
கயவனோர்கடிகைமீதிற்கடலுறுவிடமேபோல
வியமனிந்திரன்வானோர்கணடுங்கிடவெதிர்வந்தார்த்துப்
புயல்வணன்மீதில்வானம்புதைந்திடச்சரங்கள்பெய்தான். (உ௫)

தீயவன்விடுத்தவாளியனைத்தையுஞ்சிலீமுகத்தான்
மாயவனறுத்தலோடுமுலப்பிலாமாயைவல்லோன்
றூயமாவசுதேவன்றன்றோளினைக்கயிற்றால்வீக்கி
யேயெனுமுன்னர்யாகப்பசுவெனவிசித்துவந்தான். (உ௬)

இந்திரைகொழுநன்றீயோனியற்றியமாயமெல்லா
முந்தியேயறிந்துங்கண்ணீர்முகில்வி[illegible]தாரைபோலச்
சிந்திடவெந்தாயந்தோசெருநனுன்றனைவீக்கித்
தந்தனனென்செய்கேனென்றாற்றினான்றடந்தேர்மீதின். (உ௭)

அரியிருகண்ணீர்சோரவரற்றலுஞ்சாலுவன்றா
னொருகையின்வாளைவாங்கியுயர்ந்திடும்வசுதேவன்றன்
சிரசினையறுத்துப்பாரினெறிந்திடத்தேரின்மீதின்
வெருவியோர்கடிகைப்போதுவிமலன்மூர்ச்சித்தான்மன்னோ. (உ௮)

மாயையிற்றன்னைவீக்கித்துணித்துத்தன்மகன்றன்முன்னர்த்
தீயவனெறிந்தசெய்கைதெரிந்துயர்வசுதேவன்றான்
தூயவொண்ணிரதமீதிற்றோன்றலும்விழித்துநோக்கி
யாயிரநாமத்தையன்றேவியோடறையலுற்றான். (௨௯)

சாலுவனெந்தைதன்னைத்துணித்துமுன்னெறிந்ததன்மை
வேலினைவிழியாய்மாயமென்பதுவிளங்கிற்றென்றே
மாலொளிர்முறுவல்செய்துவரிவில்லைவளையவாங்கிக்
காலமாமாரிபோலக்கணைபொழிந்தார்த்தானன்றே. (௩௦)

ஆரியனெய்தவாளியனைத்தையுஞ்சாலுவன்றான்
கோலவெஞ்சரத்தான்மாற்றிக்கொடுங்கணைதூவியார்ப்ப
வீரியன்விசிகத்தாலேவிலக்கியேதிகைத்துவில்லைத்
தேரின்மேலூன்றிநிற்பத்தேவிபார்த்தறையலுற்றாள். (௩௧)

மருவலனெய்தவெய்யசரங்களைவாளியாலே
ஒருநொடியிடுமுன்னமறுத்துநீயுயர்த்தவில்லைச்
செருவிடையிரதமீதினூன்றியேதிகைத்துநின்ற
கருமமேதறைதியையாவெனவரிகழறலுற்றான். (௩௨)

பாவமில்பாஞ்சாலன்றான்பயந்திடுமமுதம்போல்வா
ளாவினைந்துருகிவெய்யவரந்தையுற்றிருகைகூப்பிக்
காவெனைமாயாவென்றுகழறிடத்திகைத்தேனென்ன
மாவடுவெகிளையொத்தவாட்கணாளியம்பலுற்றாள். (௩௩)

அருந்ததியனையகற்பாடுரோபதையரந்தையெய்தி
வருந்தியின்றுன்னைக்காவென்றுரைத்திடும்வசனமெல்லாங்
கருந்தடங்கண்ணினார்தங்கலையெல்லாம்விளைவின்வாரிக்
குருந்தின்மேலொளிருமையாகூறுதிதெரியவென்றாள். (௩௪)

சத்தியவாமையிவ்வாறுரைக்குமுன்சாலுவன்றான்
அத்திரம்நிறைப்பக்காத்தேயரியழல்வாளியேவக்
குத்திரமனத்தோன்வாணிற்கரந்திடக்குடக்கூத்தாடி
நித்திலநகையினாளேகேளெனநிகழ்த்தலுற்றான். (௩௫)

இந்திரப்பிரத்தத்தைவர்க்கெய்தியவிபவங்கண்டு
நொந்தவன்பளிங்கென்றாழ்ந்தவயந்தனின்விழவேநோக்கி
நந்தொளிர்கரத்தளாயதுரோபதைநகைத்தலோடும்
வெந்திடுசிந்தையோடுஞ்சுயோதனன்நகரின்மேவி. (௩௬)

நீதியில்சிந்துநாடனெறியிலாக்கா[illegible]ர்சே
யாதவன்சிறுவன்றீயனானதன்னனுசரோடு
தீதகறருமனோடுஞ்செல்வமுஞ்சகுனியோடுஞ்
சூதினாற்கவர்வானாகிச்சுயோதனன்சிந்தைசெய்தே. (௩௭)

சந்திரனவிர்போற்றுய்யதரளமண்டபத்தின்வண்மை
குந்திதன்சுதர்கள்காணவருகெனக்கூறியேதான்
தந்தையால்விதுரன்றன்னையேவவேவவனுந்தாழ்வி
லிந்திரப்பிரத்தத்தெய்தித்தருமனோடிவைகள்சொன்னான். (௩௮)

தந்தைதான்பணித்தமாற்றந்தவிருதனன்றன்றென்றே
யிந்திரப்பிரத்தமோவியெழிலுறுமடந்தைதன்னோ
டந்தமாரறன்சேய்பின்னோரனைவருங்கூடவேகி
விந்தைசேரழகாரத்திப்பதியிடைமேயினாரால். (௩௯)

மன்னரெண்டருமன்மூத்ததாதையைவணங்கிப்பின்ன
ரன்னையையிறைஞ்சித்தூயதுருபதனருளவந்த
மின்னையாண்டிருத்திப்பின்னோர்மேவிடவிளங்குமாரந்
துன்னுமண்டபத்தின்வந்துசுயோதனனருகிற்சார்ந்தான். (௪0)

அந்தமாரறன்சேயெய்தவந்தகன்சிறுவனாங்கே
சிந்தைவெந்திருகையாரத்தழுவிச்சிங்காதனத்தின்
குந்திதன்மைந்தரோடுங்கூடியேயிருத்தலோடும்
வெந்திறற்சகுனிபாண்டுசுதனுடன்விளம்பலுற்றான். (௪௧)

நீதிசேர்தருமவீண்டோர்வினோதமாய்நிகரிலாத
சூதினைப்பொருதியென்னவுதிட்டிரன்சூதையாடி
லேதமார்நாசமெய்துமென்னலுமிச்சூதுக்கே
யாதவன்சிறுவனீதானஞ்சினைகொல்லோவென்றான். (௪௨)

இரவிதன்சிறுவன்சூதுக்கிடைந்தனைகொல்லோவென்னத்
தருமன்வெஞ்சினத்தினோடுந்தருதிசூதாடவென்ன
விரவிலச்சகுனிதந்தக்கயிறுமின்சாரியெல்லா
மிருநிலமிசையின்வைப்பவிருவருமாடினாரால். (௪௩)

நிகரிலாவிவுளிகைமாநெடுமணித்தேர்கடோற்றுப்
பகரொணாவளங்கள்விஞ்சும்பதியொடுநாடுதோற்று
மிகவொளிர்கலன்களோடுவிழுமியநிதிகடோற்றுச்
சகுனியோடாடித்தன்மன்றம்பியர்தமையுந்தோற்றான். (௪௪)

தன்னையுந்தோற்றுத்தன்மன்றுருபதன்றவத்தாற்பெற்ற
மின்னையுந்தோற்றலோடும்விடவரவுயர்த்தகோமான்
றுன்னியமகிழ்வினோடுஞ்சூதினைத்தவிர்மினென்று
கன்னனோடிலங்கினான்வெண்கவரிகளசைந்துசூழ. (௪௫)

ஓவியமலியவம்பொனோங்கியகோயின்மேவி
யேவல்செய்தாதியாகியிருக்கப்பாஞ்சாலன்பெற்ற
பாவையைவிடுதியென்றேபகர்ந்தனனந்தன்சேயாங்
காவலன்றன்றேரூரும்பிரதிகாமியன்றனோடே. (௪௬)

பிரதிகாமியன்றானேகத்துருபதவரசன்பெற்ற
விரதிநேரழகினோடன்கற்பினாலெய்தவஞ்சிச்
சுருதிநூல்வழியினாய்ந்தவழக்கவனெஞ்சிற்சொல்ல
நிருதர்போனெறியிலாதநிருபன்முன்னெய்திச்சொல்வான். ௪௭)

தன்னைமுன்றோற்றுச்சூதுசகுனியோடாடித்தன்மன்
பின்னரினென்னைத்தோற்கப்பெறாவழக்காகையாலே
யிந்நிலமதனிலுங்கட்கியான்பணியில்லையென்று
சொன்னளப்பழிப்பிலாததுரோபதையென்றுசொன்னான். ௪௮)

சொன்னவன்றன்னைநோக்கிச்சுயோதனன்முனிவினோடு
மன்னவர்முன்னீசொல்லும்வழக்கினையுரைக்கவாவென்
றன்னமென்னடையினாளைத்தருதியென்றனுசன்றன்னை
யின்னல்கண்மலியுநெஞ்சனேவினானெவருமஞ்ச. (௪௯)

துன்மதியானதுச்சாதனன்சென்றுதூயவாணி
னன்மதிமுகத்தளாயதுரோபதைதன்னைநண்ணி
யுன்மதிதன்னாற்சொல்லும்வழக்கினையுரைக்கவேதான்
மன்மதனானவெங்கோன்முன்னரின்வருதியென்றான். (௫௦)

இன்னல்கொளரசன்கூறவென்னைப்பின்றோற்றதன்மன்
றன்னைமுன்றோற்கையாலேதாதிநானல்லவென்ன
வன்னையுந்தடுக்கிலாளத்துரோபதியணங்கினாளை
மன்னவரவையின்முன்னேமயிர்பிடித்திழுத்துவந்தான். (௫௧)

கங்கைதன்மைந்தன்கண்டுகாவலனிளையோன்றன்னை
யங்கையிலடித்தேயன்பால்விடுவித்தேயரற்றுகின்ற
மங்கையைத்தேற்றிநீசொல்வழக்கினையுரைத்தியென்ன
நங்கைமெய்நடுங்கிநாவினீரறநவிலலுற்றாள். (௫௨)

தருமனிச்சூதையாடித்தன்னைமுன்றோற்றுப்பின்னர்
நிருபரேயென்னைத்தோற்கநீதியோவென்றுகூற
வரசர்வாய்திறப்பவஞ்சவரவுயர்த்தவன்றன்பின்னோன்
விரைசெறிமாலைமார்பன்விகர்ணனங்கெழுந்துசொல்வான். (௫௩)

விரைவினிலெழுந்துதன்னைத்தோற்றபின்மெய்ம்மைசேருந்
தருமனீங்கிவளைத்தோற்கத்தகாதிந்தநெறியைத்தப்பி
லருநரகடைவரென்றேயியம்பலுமவனைவைது
மருவமர்குழலினாளைவாங்குதிதுகிலையென்றான். (௫௪)

அரவுயர்துவசன்சொல்லவறனிலாவனுசன்றானே
மருவமர்குழலினாடன்றுகிலினைப்பற்றிவாங்க
வரியின்வாயுற்றமான்போற்றுரோபதையாவியில்லா
ளிருகரஞ்சிரத்தில்வைத்தேயாதவாகாத்தியென்றாள். (௫௫)

சுற்றமும்விட்டாள்வெற்றிப்பதியரைவிட்டாயே
நற்றுணையென்றன்பேணாநவின்றிருதாளைநெஞ்சாற்
பற்றலுந்திகைத்துநின்றேன்பாவைதன்மருங்குமீதிற்
சுற்றியதுகிலோவாமல்வளர்ந்திடச்சொன்னேனென்றான். (௫௬)

அத்தியன்றோலமென்னவடைந்துகாத்தருள்வோன்கூறச்
சத்தியவாமைதூயகொழுநன்பொற்றாளிற்றாழ்ந்து
பத்திசெய்பாஞ்சாலன்றன்பாவைவெந்துயரந்தீர்த்த
சுத்தனீசுருதிக்கெட்டாச்சோதிநீயென்றுசொல்வாள். (௫௭)

சூதினிற்றருமன்றோற்பத்துரோபதிதூசைப்பற்றி
நீதியிலரசன்வாங்கநீதுகினிறைத்ததெல்லா
மோதினாயுந்தைதன்னைச்சாலுவனுயிர்கொண்டானென்
றோதிநீயறியார்போல்வரற்றியதென்கொலென்றாள். (௫௮)

இறையெனவுயர்வைமீளவிருநிலத்திழிந்தேயாய
ருறியினிலிழுதுநெய்பாலுகருவையுவமையில்லாய்
மறைகளுக்ககப்படாமன்மயக்குமுன்மாயந்தன்னை
யறிபவர்யாரோவென்றேயறைந்தடிதொழுதாளன்றே. (௫௯)

என்றவளுரைத்தலோடுமெதிர்நிலாதொளித்துப்போன
குன்றெனவுயர்ந்ததோளான்கொடியசாலுவன்றன்றோன்றி
வென்றிவில்வளையவாங்கிவிசிகமாமழைபெய்தார்ப்ப
மன்றலந்துளபத்தாரோன்வாளியாலறுத்துவீழ்த்தான். (௬௦)

ஏயெனுமுன்னர்வானினெண்ணிலாவுருவமாகி
வாயுவோடனலாய்வீசிமலைபலவெறிந்துதோன்றுந்
தீயவன்கவசம்வெய்யசிலைசிரோமணியையன்பான்
மாயவனறுத்துவீழ்த்துவளைதுகளாகவெய்தான். (௬௧)

சிலையொடுகவசமின்னுஞ்சிரோமணிவீழக்கண்டே
மலையொடுமரமுமேந்திமறவன்றனெறியமாதர்
கலைபலவாருமையன்கதையினாலெற்றலோடு
மலையுறுகடலின்வீழ்ந்தானயப்புரந்துகளதாக. (௬௨)

உததியின்விழுந்துநீந்தியோங்கல்போற்சாலுவன்றன்
மதிதவழ்வேணியான்றன்வரத்தினாலீயப்பெற்ற
கதையினையிமையோரெல்லாங்கலங்கிடவெறிதலோடும்
விதிதனையருளும்வீரன்விசிகத்தாலறுத்துவீழ்த்தான். (௬௩)

காலனைநிகர்த்துவெய்யகடியவன்கனன்றுநேரிற்
சூலம்வெங்கரத்தாற்பற்றிச்சுழற்றியேவருதலோடு
நீலமாமேகவண்ணனேமியைவிடுத்தலோடுஞ்
சாலுவன்சிரத்தைத்தள்ளிச்சென்றதுதபனன்போல. (௬௪)

மந்தரவரைவீழ்ந்தென்னச்சாலுவன்மடிதலோடுந்
துந்துமிமுரசமார்ப்பத்துய்யமாமலர்கடூவி
யந்தரத்தமரரெல்லாமாவலங்கொட்டியார்த்தா
ரிந்திரைகொழுநன்றேவிதன்னொடுமிலங்கினானால். (௬௫)

## சாலுவன் வதைப் படலம் முற்றிற்று

ஆ படலம் ௨௯-க்குக்கூடிய திருவிருத்தம் ௨௨௫௦.

ஸ்ரீகண்ணபிரான் றிருவடித்தாமரைக டுணை.



ஸ்ரீ

விஷ்ணுமயம்.

## க௦அ - வது தந்தவக்கிரன்

# வதைப்படலம்.

அலரியோன்றன்குலத்துதித்துமருளார்முனிபின்னடந்நரக்கி
பலமாரரக்கருடன்மடியப்படுத்திமகங்காத்தப்பாற்போய்
மலரினுறைவாள்சீதையைவில்லிறுத்துமணந்திராவணன்.பட்
டலரவாளிதொடுத்தருளுத்தமராகவனைநினைந்துய்வாம். (க)

வேறு.

நகிலொளிர்துரோபதிநவின்றநாமத்தாற்
றுகிலளவில்லதாய்க்கொடுத்தூத்தூய்மைசால்
பகலிரவாக்கியபரமன்றன்புகழ்
புகலுவோரிமையவர்போற்றவாழ்வரே. (உ)

சாலுவன்மடிந்திடத்தந்தவக்கிரன்
வேலைபோற்கரிபரிவீரர்தோன்றவே
யாலமாவிடமெனவதிர்த்துவெங்கணை
மாவின்மேலெண்டிசைமறையத்தூவினான். (ங)

தந்தவக்கிரன்விடுசாயகங்களை
யிந்திரைகொழுநன்வில்லேந்திவெங்கணை
சிந்தியேயறுத்தவன்சேனையீட்டத்தை
வெந்திறற்பகழியால்வீட்டினனரோ. (௪)

வெங்கரியிவுளிதேர்வீரர்மாளவுஞ்
சங்கரனெனமுனிதந்தவக்கிரன்
மங்குல்போலெங்கணும்வாளிதூவவே
யங்கண்மால்பகழியாலறுத்துவீழ்த்தனன். (ரு)

தீயவன்பின்னருஞ்சிலீமுகங்களை
மாயன்மேல்விடுத்தலுமாற்றிமாதவ
னேயெனுமுன்னவனேந்தும்வெஞ்சிலை
தூயமாகொடிகடேர்துணித்துவீழ்த்தனன். (சா)

கொடிகடேர்சிலையுநக்கொதித்துவெய்யவ
ணிடியெனவதிர்த்தொருகதையையேந்தியே
வடவனாகிகொனவந்துமாயன்மேன்
மிடலுடைக்கரங்கொடுவீசியோச்சினான். (எ)

தண்டுகொண்டோச்சியதந்தவக்கிர
னண்டமுண்டவன்மிசையடர்ந்துதாக்கலு
முண்டகன்றனையருண்முராரியோர்கதை
கொண்டுறவதிர்த்தனன்குருதிகக்கவே. (அ)

உக்கிரக்கதையைமாலுரத்திறேச்சலுங்
கக்கினன்குருதிநீர்கடியவன்னுயிர்
மிக்கவெஞ்சுடரொனவிளங்கித்தோன்றியே
சக்கரத்தவனிருதாளிற்சேர்ந்தது. (௯)

உடலிடையுயிர்பெருஞ்சோதியோங்கியே
புடவியையளந்தவன்றளிற்புக்கிடத்
தடவரைநிகரொனத்தந்தவக்கிரன்
படியின்மேற்குருதிநீர்பரவமாண்டனன். (௧0)

இரணியக்கண்ணனுயிறந்திலங்கையாண்
முரனுறுமிராவணற்கிளையமூர்க்கனுய்த்
தரணியின்மடிந்தவித்தந்தவக்கிரன்
வருணமாரரிபதமலரிற்சேர்ந்தனன். (௧௧)

தந்தவக்கிரன்மடிந்திடலுந்தாழ்விலா
விந்திரனேடிமையோர்கண்மாதவர்
துந்துமிமுழங்கிடமலர்கடூவினர்
நந்தொளிர்கரத்துநாரணனையேத்தியே. (௧உ)

தந்தவக்கிரனுயிர்த்தம்பியானவன்
மந்தரவரையெனவளர்ந்ததோளினன்
வெந்திறலாளன்வீடூரதன்சின
வந்தகனேலவந்தடர்ந்துதாக்கினன். (௧௩)

வாளொடுகேடகஞ்சுழலமால்வரைக்
கோளரிபோலவேகொதித்துமேல்வர
நீளதன்னுயகனேமியாலவன்
றளொடுதலையறத்துணித்துத்தள்ளினன். (௧௪)

விடமெனமேவுவீடூரதன்னுயி
ருடறலைநிலமிசையுருளமானலுங்
கடிமலரிமையவர்பொழியக்கார்வண
னிடமுடையிரதமேலிலங்கினனரோ. (௧௫)

மாரன்வந்தடிமிசைவணங்கமாதவன்
வீரவச்சுதன்றனைவிரும்பிநோக்கியே
யார்வமுற்றிருகணீரவன்றன்குஞ்சியிற்
சாரவேயிருகையாற்றழுவினனரோ. (௧௬)

மாதவரொண்வசுதேவனெய்தவே
சீதரனவனடியிறைஞ்சிச்சேர்தலும்
போதனைப்படைத்தருள்புண்ணியன்றனை
யாதரத்துடனணைத்தன்புற்றனரோ. (௧௭)

தாலகேதனன்வரச்சக்கரத்தவன்
ஞாலமேலவனடியிறைஞ்சிநண்ணியே
நீலமால்வரையெனநிறைந்தமேனியான்
மாலின்மார்பழுந்துறமகிழ்ந்துபுல்லினன். (௧௮)

சினியருள்சுதனொடுசாம்பன்சீருறு
தனையர்களனைவருந்தாளிற்றாழ்தலு
மனமலிமகிழ்வொடுமொர்பிற்புல்லியே
கனமெனமாயவனின்றகாலையின். (௧௯)

ஓவியம்பழித்தமெய்யொளிருருப்பிணித்
தேவியோடனைவருஞ்சிவிகைமீதினின்
மாவினமிபமுறுமன்னர்காக்கவே
மேவினரிந்திரப்பிரத்தம்விட்டரோ. (௨௦)

மாதவன்றேவியரனைவரும்வரத்
தீதிலாத்துவரையினடைந்துதேவகி
பாதமீதிறைஞ்சிடப்பரிவினொடெடுத்
தேதமில்குமரனையிறுகப்புல்லினாள். (௨௧)

செறுநர்கள்செருக்களத்தவியத்தேவர்க
ணறுமலர்பொழியநால்வேதமோங்கவே
நெறியுறுந்தேவியர்நிறைந்துசூழ்ந்திட
விறையவன்றுவரையினிலங்கினானரோ. (௨௨)

## தந்தவக்கிரன் வதைப் படலம் முற்றிற்று.

ஆ படலம் - ௫௦ - க்குக் கூடிய திருவிருத்தம் - ௨௨௭௨.

ஸ்ரீகண்ணபிரான் றிருவடித் தாமரை துணை.

ஸ்ரீ

விஷ்ணுமயம்.

௧௦௯ - வது பாண்டவர்

# வனவாசப்படலம்.

சூதினால்வஞ்சஞ்செய்துசுயோதனனடர்க்கானின்
மாதினாளுடனுமேகுமறனிலாப்பாண்டுமைந்தர்
வேதனைதவிர்த்துத்தூயமீள்கிலாக்கதியையீந்த
சீதரனானவெங்கோன்றிருவடிவணக்கஞ்செய்வாம். (௧)

மன்னனொண்டருமராசன்மறமிகுசகுனிதன்னோ
டின்னல்செய்சூதையாடியியல்புறுநாடுந்தோற்றுப்
பின்னவர்தம்மைத்தோற்றுப்பிறங்கியகலன்கடோற்றுத்
தன்னையுந்தோற்றுத்தேவிதன்னையுந்தோற்றான்மன்னோ (௨)

நீதியிலரவுயர்த்தோன்னெறிகொள்பாஞ்சாலன்பெற்ற
மாதைமண்டபத்தினேற்றிவாங்குதி துகிலையென்றே
யோதலும்வெகுண்டுதுச்சாதனன்சென்றேயுரிதலோடுஞ்
சீதராகாத்தியென்றேதுரோபதைதியானஞ்செய்தாள். (௩)

காலனைநிகர்த்ததுச்சாதனனிடைக்கலிங்கம்பற்றச்
சேலெனமிளிருங்கண்ணாள்சென்னிமேற்செங்கைகூப்பி
மூலமென்றோதுமானைமுன்னர்வந்துதவுஞ்செய்கை
யேலவேயென்னைக்காத்திபுயல்வண்ணாவென்றுசொன்னாள். (௪)

வேலொளிர்விழியாளங்ஙன்விளம்பிடக்கேட்டுவெய்ய
சாலுவனுடனேதாக்குஞ்சமரினைத்தவிர்ந்துமன்றே
யாலிலையகட்டாள்சுற்றுமாடைதான்வளர்கவென்றே
சேலுருவாகியோங்குஞ்சீதரனறைந்தானன்றே. (௫)

கோடொளிர்கரியையட்டகொற்றவன்கூறுங்காலை
சூடகமிலங்குகையாடுரோபதைதுகிலைப்பற்றி
மூடனாமரசன்மேன்மேல்முடுகிடவுரிதலோடு
நீடுபொன்னுடைநீங்காமருங்கினினிறைந்ததன்றே. (௬)

முறைமையின்மன்னன்மேன்மேல்முடுகலுமிளையமூட
னிறைமலர்க்குழலினாடைநெடுந்துகிலதனைப்பற்றி
யுறுவலிக்கரத்தாலொன்றைவாங்கவொன்றுளதேயாகி
மறுவிலாமறையோர்க்கீவான்றனமெனவளர்ந்ததன்றே. (௭)

நேரின்மின்னிடையினாடைநெடுந்துகினிறையக்கண்டு
பூரியனரவுயர்த்தோன்பொறைகொண்மாமடநல்லாளை
யூருவினிருத்தியென்றேயுரைக்கவவ்விடத்தினாங்கா
வீரியவீமன்றண்டால்வீகுதியென்றாண்மின்னே. (௮)

ஏருறுவீமனெய்தியிலங்குநூற்றுவரைச்செற்று
நேரிலாமடந்தைசுற்றுநெடுந்துகிற்பற்றினோன்றன்
மார்புறுகுருதியள்ளியுண்பளவுந்தான்வாவி
நீர்கதையதனான்மோதிநிறைபுனலுகர்வேனென்றான். (௯)

பாரினிற்பாஞ்சாலன்றான்பயந்திடும்பாவையாரு
நேரிலாவணங்குசெவ்வாய்துடித்திடநிகழ்த்துவாளென்
வீரியவீமன்றண்டால்வீந்துவீழரவுயர்த்தோன்
மார்பிடையேறியல்லான்மயிர்முடியேன்யானென்றாள். (௧௦)

சகுனியைச்சகாதேவன்றான்றெறுவனென்றுரைத்தான்றாழ்வில்
பகலவன்குமரன்றன்னைப்பற்குனன்வதைப்பனென்றான்
மிகமுனிந்திவர்களெல்லாம்விளம்பிடவெள்கல்கூறி
நிகரிலாவரவுயர்த்தோனிளமணிக்கோயிற்புக்கான். (௧௧)

கண்ணிலாவரசனெய்தித்துரோபதனருளுங்கற்புப்
பெண்ணினைச்சிறியோர்செய்தபிழையினைப்பொறுத்தியென்று
புண்ணியத்தருமன்சூதாற்றோற்றிடும்பொருள்களோடு
மண்ணுறுவளநாடுமுற்றுமன்னனீபோதியென்றான். (௧௨)

கரிபரியிரதம்வீரர்கணக்கிலார்மருங்குசேர
வரசர்கண்மிடையத்தன்மனனுசர்தற்சூழநொய்தி
னூரனுறுதேரினேறியுயர்ந்தபாஞ்சாலியோடு
மரவுவாய்விழுங்கிவிட்டவாதவன்போலச்சென்றான். (௧௩)

தருமனுங்கெய்தலோடுஞ்சகுனிதன்மருகனோடே
வரையிற்கந்தரத்திற்றூங்குமடங்கலையெழுப்பிவீக்கிப்
பரிபவஞ்செய்துவிட்டபான்மைபோலிவரைவிட்டா
லரியுடனெழுந்தெல்லோருமவியவேபொருவனென்றான். (௧௪)

ஆதலிற்றருமன்றுய்யவனுசரோடேகுமுன்னந்
தாதையாலழைத்துவெய்யதரணியினுறுங்கான்றன்னிற்
சூதினிற்றோற்கவென்றேதூரத்துதல்கருமமென்றே
யோதிடத்தந்தைபாலினுரககேதனன்றானுற்றான். (௧௫)

தாதைநீயைவர்தம்மைத்தனயனொன்றேவினாயேன்
மாதவனோடுங்கூடிவளநகரொல்லாங்கொள்வா
ராதலிவ்வரைமீளவழைத்துயர்சூதால்வென்று
தீதுறுபுறவந்தன்னிற்சேர்த்துதல்கருமமென்றான். (௧௬)

மைந்தனீதுரைத்தலோடுமருளுறுங்காணாவேந்தன்
அந்தமாரறன்சேய்தன்னையனுசரோடழைத்தென்பாலிற்
றந்திடுமென்னத்தூதருரைத்திடத்தருமராச
னெந்தையேனழைத்தானென்றேயிளையவரோடுமீண்டான். (௧௭)

வந்தடிவணங்கிநின்றவள்ளியத்தருமன்றன்னை
யந்தமன்னெறியிலாதானாறிரண்டாண்டுகானின்
முந்தியேகரந்தோராண்டுமுடியுநாளதனிற்கண்டான்
மைந்தனேபதின்மூவாண்டுவனமுறச்சூதாடென்றான். (௧௮)

என்றவனுரைக்கவேதானிசைந்திடுந்தருமனோடுங்
கன்றியசகுனியெய்திக்கடியசூதாடிவெல்ல
வொன்றியவினையினாலேயுதிட்டிரனனுசர்சூழ
மன்றல்சேர்குழலியோடும்வனத்திடையேகினானால். (௧௯)

குந்தியைக்காணாவேந்தன்கொடிநகரிருத்தியென்றே
யிந்திரப்பிரத்தத்திற்றம்வனிதையொவருந்தந்தந்
தந்தையர்பதியினெய்தச்சாற்றியேதூதர்தம்மை
யந்தணர்நம்பாலெய்தவரைமினென்றேவினானால். (௨௦)

இந்திரப்பிரத்தந்தன்னிற்றூதுவர்தம்மையேவிக்
குந்திதன்மைந்தர்தேவிதன்னொடுங்கொடியகானின்
முந்தவேபகாசுரன்றனிளையவன்முழங்கவார்த்து
வந்திடவவனைவீமன்வதைத்துமாதவர்பாற்சேர்ந்தான். (௨௧)

மாதவரிடத்திற்செல்லமகிழ்ந்தவராசிகூற
வாதவனைவர்முன்னரடைந்தொருபாண்டந்தன்னை
யோதனஞ்சுவைகளாறுந்தினந்தொறுமுதவவேதா
னீதலுங்குந்திமைந்தர்பணிந்திடவிரவிபோனான். (௨௨)

தூதுவர்வினைவினெய்திச்சொல்லலுங்குந்திதேவி
மாதுயருழந்தேயத்திவளநகரதனிற்சேர்ந்தா
டீதிலாமடந்தைமார்தந்தந்தையர்பதியிற்சேர
வேதியர்பன்னிரண்டாயிரர்மன்பான்மேயினரால். (உ௩)

உவமையிலபிமன்னுடுஞ்சுபத்திராதேவியோங்குந்
துவரையினெய்திமாயோனடிமிசைவணங்கச்சோதி
நவமணித்தேரினேறிநாகர்மாமலர்கவேப்
பவமிலாதைவர்வாழும்பழுவத்தினெய்தினுல். (உச)

மாயவனெய்தலோடும்வருடங்காணுலர்பைங்கூழ்போற்
றூயவரைவர்வாட்கட்டுரோபதியுடனுமெய்தி.
யாயிரநாமத்தையனடிமிசையிறைஞ்சலோடு
நேயமோடிரங்கிக்கண்ணீர்நிலத்துறவணைத்தானன்றே. (உரு)

சீதரனணைத்தைவர்க்குஞ்சிந்தையின்றுயரமாற்றி
மாதவப்பாஞ்சாலன்றன்மகளிருகண்ணீர்மாற்றிச்
சூதுசெய்சுயோதனன்றன்சுற்றமோடமரின்மாளக்
கோதைநின்குழலையானேமுடிப்பனென்றுரைத்தான்கோமான். (உசு)

துடியிடைமடந்தையெய்துந்துனியறத்தேற்றியைவ
ரிடரினையகற்றிமாயோனெழிலுறுந்துவரைக்கேகக்
கொடியவெஞ்சுரத்தினைவரந்தணருடனேகூடிக்
கடிவினையொருவுந்தூயகாசிபனிருக்கைசேர்ந்தார். (உஎ)

## பாண்டவர் வனவாசப் படலம் முற்றிற்று.

ஆ படலம் ௯க - க்குக்கூடிய திருவிருத்தம் - உஉ௯௯.

ஸ்ரீகண்ணபிரான் றிருவடித்தாமரைக ளேணை.

ஸ்ரீ
விஷ்ணுமயம்.

௧௧0 - வது குருகுல

# மரபுப் படலம்.

ஆதிமால்பரமன்மாயோனயன்றனக்கன்னமாகி
வேதநூலருளுந்தூயவிமலநாரணன்வைகுந்தச்
சோதியாடகத்தோன்றுய்யசுதன்முனிற்றுலங்கத்தூணின்
மோதவாண்டெழுந்துதோன்றுமுடங்குளையடியிற்சேர்வாம். (க)

காசிபன்றன்னையைவர்வணங்கலுங்கருணைதன்னே
டாசிகள்பலவுமோதியருந்தவன்மகிழ்தலோடு
மேசகன்மறையோர்கூடவைவருமிருக்குநாளின்
மாசகல்பராசரன்றன்மகன்வரவணங்கினரால். (உ)

தருமனோடைவரெய்திவணங்கலுந்தாழ்வொன்றில்லா
வருமறையதனாலாசியறைந்தமர்முனியைநோக்கித்
தரணியிற்காசிபன்றான்சந்திரகுலத்துவந்த
குருகுலமரபுசொல்லென்றுரைத்திடவியாதன்கூறும். (ங)

வேறு.

நாதனும்புருடோத்தமனுபியிற்செனித்த
வேதனெண்வரையெழுகடல்விண்ணவர்முனிவர்
பூதலத்துயர்சராசரம்படைத்தவன்பொறையார்
நீதிவிஞ்சியநிகரிலத்திரியையுமளித்தான். (ச)

வித்தகத்தரியருளியவேதியன்பயந்த
அத்திரித்தவனேத்திரத்தழகுறப்பிறந்தா
னுத்தரத்துயர்வரையினைவலம்வருமொளியோன்
சுத்தவுத்தமச்சுதையினையுதவிடுஞ்சோமன். (ரு

அந்தணன்றருமத்திரிநுதலினிற்றோன்று
மிந்துவிஞ்சியவிராயசூயத்தினைமுடித்துச்
சிந்தையிற்களிப்பெய்திடச்செய்யுமாறறியா
னிந்திரன்குருமனைவியைப்பற்றியேகினனால். (சு)

வேறு.

ஈரேழுலகத்துள்ளவர்களெள்ளும்பழிவந்தெய்திடவே
சீரார்வலாரிபுரோகிதனுச்சிறந்தக்கணவன்றனையொருவி
வாரார்முலைபொற்கலசமெனமருங்குகொடியாமெனவயங்குந்
தாராதேவிசந்திரனைத்தழுவிக்கருப்பந்தரித்தனளால். (எ)

சுரர்தம்மிறைபீதகன்றேவிதன்னைச்சோமாவிடுதியென்றே
யிரையுங்கடல்போலிலேகருடனெழுந்தங்கடர்ந்துமுடுகுதலுஞ்
சரியிலுசனன்சசிக்காகச்சாற்றவசுரர்மிகவெகுண்டு
பரியுங்கரியுங்களத்தவியப்பணிலமுழக்கிப்பொருதனரால். (அ)

அண்டம்விண்டதாமெனவேயசுரரார்த்தங்கமரருடன்
மண்டிச்சமர்செய்திடுங்காலைவனசத்திறைவந்தமர்விலக்கித்
தொண்டைக்கனிவாய்த்தாரைதனைச்சுரர்தங்குருவின்கைக்கொடுத்தே
யிண்டைச்சடையோனிகர்முனிவரிமையோரோத்தவேகினனால். (கூ)

தவரெண்வலாரிபுரோகிதனுந்தாராதேவிமுகநோக்கி
யுவமையில்லாவென்சேயாங்கசனுன்வயிற்றினுதித்தமையாற்
பவவார்கலியினீவிழுந்துபதைப்பச்சபியாதின்றொழிந்தேன்
அவமேமுயலும்பொதுமகட்குமிழிவாந்தொழிலாயெனவறைந்தான். (க0)

சதுவேதத்தையறிந்தகுருசாற்றத்தாரைவிதலையுற்றுப்
பதிபாதத்தினிறைஞ்சியென்றன்பிழையைப்பொறுத்தியெனப்பகர்ந்து
விதிதானிழைத்தசெயற்படியேமெலியுமடவாளழகுமலி
புதனும்புதல்வன்றனைப்பயந்தாள்புவிவானமையாப்பழிபூண்டாள். (கக)

பிறந்தபுதனைப்பீதகன்றன்பிள்ளையென்றுமகிழ்நாளிற்
செறிந்தவமுதகிரணனுமென்சேயாமென்றுசினுகிடவே
யறிந்தபிரமனவணடைந்திம்மகவைப்பயந்ததார்க்கென்ன
நிறைந்தபழிபூணரிவைவிதுசுதனுமென்றுநிகழ்த்தினளால். (கஉ)

தாராதேவிசந்திரற்குப்பயந்தேனென்றதனையனைத்தா
னோரார்பிரமனிரவியுடனொருவாதமர்வாயென்றகலச்
சீரார்குணமிக்கெழுந்தபுதன்சிறந்தேவயங்குங்கோள்களுக்கு
ணேராயுயர்ந்தவடவரையைநித்தம்வலமாய்வருநாளில். (௧௩)

வேறு.

கர்த்தமப்பிரசாபதிபயந்திடுங்காளை
யுத்தமத்தினனுருவிலிவெள்கிடுமொருவோன்
வித்தகக்குணன்விபுதர்கடுதித்திடும்விறலோ
னித்தலத்துயர்வாலிகதேசத்துக்கிறைவன். (௧௪)

இளமனன்கரியிவுளிதேர்வீரர்கணெருங்கக்
கிளைகடுன்னியகடத்தினிற்கிருடிசார்த்தூலம்
விளையும்வெஞ்சினமுடங்குளையெல்லவும்வீட்டி
யளகைமன்சகாவமர்ந்தகாந்தாரத்தையடைந்தான். (௧௫)

அரனிலங்கியவுமையுடனரிவையாய்த்தோன்றி
விரியுங்கானிடைமேவியசெயலினலதனுட்
டிரியும்பல்லுயிரொவைகளுந்தெரிவையராகத்
தரையின்வைகியவிளமனன்றையலாயினனால். (௧௬)

அரிவையாகியவிளமனனரன்றனைநோக்கிப்
புருடனாகவேதவஞ்செயப்புராரிவந்தெய்தித்
தெரிவையாமுருவொழிக்கிலனுனக்கெனச்செப்பத்
தரையையாளுமன்றளர்தலுமுமையவள்சாற்றும். (௧௭)

கங்கைவேணியன்காதலியிளமனைநோக்கித்
துங்கமன்னவதோகையாயேகமாந்திங்க
டங்கியும்மொருமாதநற்புருடனாய்ச்சரித்துஞ்
சிங்கம்வைகுகானிவ்வுளித்திரிகுதியென்றாள். (௧௮)

அரிவணக்குயிலம்மொழியறைந்திடவரசன்
கரிவணக்குகாவலர்கள்காரிகையராய்ச்சூழ
வரிவணக்கியவாணகுவிலோசனியாகிச்
சரவணத்தினினிலையளாய்த்திரிந்திடுங்காலை. (௧௯)

மதிபயந்திடவானுறுப்வுங்களையொருவாப்
புதனிறைந்திடுசரவணப்பொய்கையினெய்தி
விதமடந்தையரிருமருங்கினுமுறவிளங்குஞ்
சுதையெனும்மொழியிளையெனுந்தோகையைக்கண்டான். (௨௦)

கம்பெனுங்கிரிவக்குயிலழகினைக்காணு
வம்பரத்தினிற்சசிசுதனனங்கசாயகத்தால்
வெம்புநெஞ்சனிம்மின்னிடையெவளெனவுள்கி
நம்பனுவிறைநாரியாயினசெயலறிந்தான். (௨௧)

அறிந்தநற்புதனரிவையர்தங்களைநோக்கிச்
சிறந்தகிம்புருடாளுடன்சேருமென்றவர்கள்
பிறிந்துபோம்வகையியற்றியேபிறங்கியகலன்க
ணிறைந்தமெய்யினைதன்னுடன்கலவியைநிறைத்தான். (௨௨)

தேவமங்கையர்திலகமாய்ச்சிறந்திடுமிளையோ
டாவல்விஞ்சவேயமுதசம்பூதனன்குமரன்
பூவினுண்மதுப்பொசித்திடும்பொறிவரியளிபோற்
காவிவாளியான்வெள்கிடக்கலவிசெய்தனனால். (௨௩)

இரவுநண்பகலும்மொருவாமலேயியம்புஞ்
சுரதநூல்வழிச்சோமன்றன்சுதன்புயந்தோய்ந்து
வருதினங்களாய்நிறையுமோர்மாதமுமொருவப்
புருடனாமிளன்புதன்றனைநோக்கியேபுகல்வான். (௨௪)

மிருகயாத்திரைவிரும்பியிவ்வனத்தின்மேயினனென்
பரிகரிக்குலம்படைஞரெங்குளரெனப்பகரச்
சொரிகலாய்க்கனஞ்சொரிந்திடவிறந்தனவொன்றே
முருகவிழ்தொடைப்புயன்சசிசுதன்மொழிந்தனனால். (௨௫)

விரகினிற்புதன்விளம்பிடமெலிந்திடுமரசன்
சொரிகலிற்றனைமடிந்தவென்படைஞரைத்தொடர
வெரிகனற்படிந்திறப்பனென்றெழச்சசிபுதல்வ
னுரைகளிற்பலமொழிந்திடரொழிந்திடப்பகர்வான். (௨௬)

இறந்தநின்படைவீரர்களெவருமோராண்டு
நிறைந்தபோதினிற்கரிபரிநெருங்கிடநின்னோ
டுறைந்துவாழ்வரொன்றுரைத்திடத்தேறிநால்வேத
நிறைந்தநற்புராணங்கள்கேட்டிருந்தனனிருபன். (௨௭)

நிருபனாகியோர்திங்களானதற்பினர்நிகரி
லரிவையாகியேசசிசுதனுரத்தினிலணைந்து
தரையினிற்பினும்புருடனாய்த்தையலாய்மாறி
வருதினங்கண்முந்நூறுநற்புதனுடன்மகிழ்ந்தான். (௨௮)

அஞ்சுதிங்களாண்டரசனாயருள்செறிபுராணஞ்
செஞ்சொனற்பொருளுணர்ந்துநூற்றைம்பதுதினமும்
பஞ்சின்மெல்லடிப்பாவையாய்ப்பரிபுரத்தொலிகள்
விஞ்சிடப்புதன்மகிழனுராகத்தைவிளைத்தான். (௨௯)

அரிவையாகியசெயலெலாமாணதாய்மறந்து
நிருபனாகியசெயலெலாநிகரின்மின்னுருவாய்த்
தெரிகிலாதுநற்புதனுடன்சேர்ந்துறுகருப்பம்
பருவமாகியேபுரூருவாவினைப்பயந்தனளால். (௩0)

அரிவையாகிநன்மகவினைப்பயந்தபின்னறிவாம்
புருடனாகியவிளமனன்புன்மைதீர்ந்திடத்தான்
சரியிலாப்புதன்றவர்களைக்கூவியேபழிப்பி
லரன்மகிழ்ந்திடவேயயமேதத்தைவிளைத்தான். (௩௧)

குறைவின்மாதவர்கோடகமேதத்தைவிளைப்பக்
கறைமிடற்றரன்கண்முனிற்றோன்றியேகரிமா
நிறையவீரர்கடன்னுடனிருபனாய்நிலத்தி
னுறைகுவாயெனவிளமனற்குரைத்தனன்போனான். (௩௨)

அரன்வரங்கொடுத்தேகவேயரிவையருருவைத்
தனையிழேனைவிதனிபமயும்வீரர்கள்சாரப்
புருடனுகியவிளமனன்புதனடிவணங்கிப்
பரிகரித்திரள்பொருளத்தன்பதியிடையடைந்தான். (௬௬)

அரசனுகியாண்டிளமனன்றன்னகரடையச்
சரியிலாப்புதன்புரூருவாத்தனைவளர்த்தெழில்சால்
நிருபனுக்கியேமுடிகவித்துலகினீள்சிகர
மிரவிசேர்பிரதிட்டமாபுரியினையீந்தான். (௬௪)

புதனளித்திடும்புரூருவாபுரியினினெய்தி
மதியெனக்குடைவயங்கிடமதனனூநாண
விதிமதித்திடுவேதியராசிகள்விளம்பக்
கதமிலாதரசியற்றியேகளித்திடுங்காலை. (௬௫)

வேறு.

மித்திரவருணரென்போர்விசும்புரைவோர்கடம்மி
லுத்தமவடிவுமிக்கோருருப்பசியெழில்விற்காம
னத்திரமடரநொந்தேயவளைத்தாம்வரித்துக்காம
மொத்துவீரியமுன்வீழவொருகுடத்தமைத்தாரன்றே. (௬௬)

இருவர்வீரியத்தைநொய்தினிலங்குகும்பத்தினேற்பச்
சரியிலாநிமிசாபத்தாற்றவர்களெண்வசிட்டன்ரூனுங்
கரையிலாவுவரிதன்னைக்கரத்திடையமைத்தோன்ரூனு
மரியநான்மறைகளோங்கவவதரித்தார்களன்றே. (௬௭)

ஒருகுடத்திரண்டுபேருமுதயமாய்வயங்கியேகத்
தெரிவையர்திலகமாயவுருப்பசிநகிவிற்சேர்ந்து
சுரதநூற்படியிற்ரூயாத்துன்பவீரியந்தான்வீழ
விரகவேதனையினுலேமித்திரவருணர்சொல்வார். (௬அ)

மீனகுவிழியாயெம்மைவிரும்பியுன்னகிவிற்சேர்த்தே
யீனமிலதரவூறலீய்ந்திலையதனுல்நீபோய்
மாணிடன்றேவியாகிவாழ்குதியென்றுபோக
வூனமிலுருப்பசித்தேனும்பர்விட்டிம்பர்வந்தாள். (௬௯)

வேறு.

பரிபுரமரற்றச்சதங்கைகண்மிழற்றப்பாதசாலம்பதமிலங்கக்
கரவளையொலிப்பத்தொடிக்கையுந்தயங்கக்காஞ்சிநற்கலிங்கமேல்வயங்க
விருதனமசையக்கொடியிடைதுவளவிருகயல்விழிகுழையடர
வரிமலர்க்குழன்மையெழிலியைப்பழிப்பவவனியினுருப்பசியடைந்தாள். (௪0)

அரூபியாமதனன்மனந்தடுமாறவருந்தவர்மயலெழுந்தலையப்
புரூருவாமுனர்வந்துருப்பசிநிற்பப்புதனருள்புதல்வன்பொற்பாருஞ்
சுரூபியாமிவள்விண்டோகையர்துதிக்குஞ்சுவைதமொழியெவளெனவுளத்தி
னிரூபியாதயர்ந்தேயனங்கசாயகமெய்நிறையநீயாரெனவுரைப்பான். (௪௧)

மித்திரவருணரறைந்தசாபத்தான்மேதினியடைந்தனன்பழிப்பில்
சித்தசன்சமிழ்க்குமுருவுடைமனநின்செய்லெலாநாரதன்செப்ப
வித்தகநின்றூனையவெய்தினன்யானுருப்பசியெனவிறலரசன்
எத்தவமுறநீயிவணடைந்தனையென்றியம்பிடவிலங்கிழைமறைவாள். (௪௨)

நெய்யெனக்குணவாய்ப்பருகுவன்மிகுத்தநேயமாய்வளர்ந்திடுமிரண்டு
மையிளம்பறவைக்காத்துமீயிருளின்மகிழ்வுடனுணைகுவதன்றி
வெய்யவன்கனலியுபெதியொளியால்விழுமியகலையினக்கினமாய்த்
துய்யவிப்புவியினிருவருங்காணிறொருவுவன்யாவெனச்சொன்னாள். (சங)

ஓவியத்தெழிலைப்பழித்தொளிவிளங்குமுருப்பசிமொழிந்திடவதற்குக்
காவலனிசைந்துபருதிபோய்மறையக்கங்குலிற்கவினுறுமணைமே
லாவியுமுடலும்வதிந்தசீரெனவேயறுபதினாயிரம்பருவம்
பாவையர்திலகிபயோதரவணைமேற்சுரதநூற்பரவையிற்படிந்தான். (சச)

தூயநற்புரூருவாவுரத்தழுந்தத்துணைநகிற்கிரியினைமடுத்து
வாயமிர்தளித்துநகக்குறிவகுத்தும்வன்பதாயுதங்குயின்மயிறே
னீயனஞ்சகோரஞ்சரோருகங்குறும்பூழியம்பிடுங்குரன்மொழிந்தணைந்தே
யாயுமன்னவனோடுறுவரைப்பயந்தாளமரர்தம்பதியுறையணங்கு. (சரு)

சந்திரன்புதல்வன்சிறுவனைத்தழுவித்தனயர்களறுவரைப்பயந்த
சுந்தரமலிந்தவுருப்பசியணங்குதுலங்கியபுவியமர்நாளி
னிந்திரனவையின்முராரிரூருவினிலெழுந்தபூங்கொம்பினைக்காணான்
கெந்தருவரைச்சென்றவணியினரிவைக்கிளியினைத்தருதிரென்றுரைத்தான். ()

சசிபதிமொழியாற்சென்றகந்தருவர்தரணியிற்றபனன்போய்மறைய
நிசிபரந்தெழுந்தகங்குலினணைமேனிகரிலாவுருப்பசியுடனே
கசரததுரகவலமனன்சுரதக்கலவியிற்களித்திடுங்காலை
விசையினிற்செச்சைப்பறழிரண்டரற்றவிண்ணிடைப்பற்றியேகினரால். (சஎ)

அயப்பறழிரண்டுமரற்றியவொலியையணங்குகேட்டழுகதாயுயர்தன்
குயத்தினின்வதிந்துகலவியைவிளைக்குங்கொற்றவன்றன்னையெண்டிசையுஞ்
செயித்திடுமனவென்சிறுவர்போல்வளர்த்தசெச்சையைக்கள்வர்கொண்டேகப்
பயத்தையுற்றெதிராவலியெனவிருந்தாயென்றுபல்விழிவுகள்பகர்ந்தாள். (சஅ)

இக்கிரதச்சொலேந்திழைவிளம்பவினைமகனுந்தகமெடுத்து
நக்கினத்தவனுய்ப்பின்றொடர்ந்திடவேநகிலொளிருருப்பசிகவினன்
மிக்கபொன்னுடைபுனைகிலளாகிவெற்றரையாகிப்பின்னடக்க
விக்கிரமத்தர்லேருகந்தருவர்மின்னவிர்மாயையால்விளைத்தார். (சகூ)

மின்னருவதனற்புவிவெளியுறவேமெல்லியல்வெற்றரைதன்னை
மன்னவன்பார்க்கவரசனக்கினத்தைமான்விழியுருப்பசிகண்டே
யின்னவினிருபவிருவர்நக்கினமுமிருவருநோக்கினமென்னுச்
சொன்னசொற்படியினவனியையொருவிச்சுரரிறைநகரினைச்சேர்ந்தாள். (ருo)

இருவர்நக்கினமும்வெளிசெய்ததெனவேயியம்பிவானுருப்பசியேக
நிருபனெந்துளைந்துநினைவிலாதயர்ந்துவிழுந்தவண்டேறியேகிரி
வரிமலரணையிற்காண்கிலன்வெருவியகன்மனையெங்கணுந்தேடி
மருளுறவறிவுபறிபடநகரின்மருங்கெலாந்தேடினன்மயங்கி. (ருக)

ஓவியமுயிர்பெற்றெனநடந்தெய்தியுவட்டிலாக்கலவியைவிளைத்தே
ணுவியுமனமுந்தன்னிடத்தடையத்தினந்தினமற்புதமுறவே
காவிநல்விழியானகையினன்மொழியாற்கலசமென்முலையினவிடையாற்
பூவின்மெல்லடியானடையினுளுருக்கும்பொற்கொடியகல்வதென்னென்னும்.

புயல்பிறைகயல்விற்குமிழ்வளையிலவம்பூகம்வேய்காந்தள்பொற்கலச
மியல்புறுந்துடிகட்செவிகவின்கதலியலவனெண்ணிணைவரால்கமடஞ்
செயல்புரைநளினமமர்ந்தகொம்பெனவேசிறந்தமின்சேணுறினென்மெய்
யுயிரிராததனாலிம்பரினுளளென்றோடியேநேடினானெல்லை. (௫௩)

புரவலன்கலங்கிச்சலதியிற்பிறவாப்புதியநல்லமுதெனப்பொருந்தி
யிரவுநண்பகலுஞ்சுரதநூற்சுவையையீய்ந்தமின்யாண்டுளாளென்றே
கரிபரியிரதந்துதைந்திடும்புரியிற்காண்கிலானாட்டினையிகழ்ந்து
கிரியரியிரலைகிளர்கறையடிசேர்கிரியடர்பழுவத்தையடைந்தான். (௫௪)

வரையிடைக்காணான்பொழிலிடைக்காணான்வாவியின்மருங்கிடைக்காணான்
வெருவிவிண்பிறைவில்லெழிலியைக்கண்டுவிரியுநீர்மீன்வரால்கமட
மரைமலர்குமிழாம்பல்வளர்கதலிவல்லிநீர்ச்சுழியெலாநோக்கி
யரிவைதன்னுருவைப்புவியினுசினியிற்சிதறினள்கொல்லெனவயிர்த்தான். ௫௫

நிலமிசையயர்ந்தநிருபர்கோன்றேறிநிகரிலாவரையிடத்தெய்திக்
கலவியின்கனியேயமுதினிற்சுவையேகடுவினையேனுடற்குயிரே
புலவிசெய்தகன்றாய்புல்லவாவெனவேயம்மொழிமலைத்தொனிபுகலச்
சிலையெனுநுதிலியிவணுளளெனமன்றேடியேகாண்கிலாதறைவான். (௫௬)

அணைக்கவாவெனயானுரைத்தசொல்லுரைத்ததரிவையோபிறங்கலோவறியே
மணத்தபூங்கணையோனிரதம்வான்கவிகைமாமுரசியாவையும்பகையாய்ப் [ன்
பிணைக்கைமாவருந்தும்விளாங்கனிபோன்றேன்பாவியேனாவிசோர்ந்திடுமுன்
கணைக்குநேர்விழியாய்வருதியென்றுரைத்துக்காசினியெங்கணுந்திரிந்தான். ௫௭

மாறிலாக்குருக்கேத்திரத்தலப்பொழிலின்மங்கையர்குழாம்புடைசூழ
நாறுபூங்குழலாளுருப்பசியவணினண்ணவேபுரூரவாநோக்கி
யூறியகளிப்போடவண்முனரெய்தியுன்மயலுறவரன்விழியா
னீறுறவெரியுமதனனைப்போல்யானிறந்திடாதணைத்திநீயென்றான். (௫௮)

மதிசுதன்சிறுவன்மொழிந்திடக்கேட்டவனமுலையுருப்பசியணங்கு
பொதுமடந்தையர்க்குங்கற்புமெய்யுளதோபுவியினெண்டிசையினும்வென்று
மதகரிவெரிநின்வருமனுமகளிர்மயக்கினைவெல்கிலையென்னாச்
சுவைதருமொழியாள்வருடமொன்றொருவிற்றோய்குவனின்னையென்றகன்றாள்.

அரிவையர்திலகியிவையெலாமறைந்தேயமரர்தம்பதியினையடைய
விரகவேலையின்வாய்வதிந்திடும்புரூரவாவொளிர்நகர்தனின்மேவி
வருடமொன்றொருவக்கழிந்தநாட்குருக்கேத்திரந்தனின்வயங்குமோடையினிற்
பரிவுடனனுசவுருப்பசிமடந்தைபரிபுரம்புலம்பிடவந்தாள். (௬0)

மங்கையர்திலகியுருப்பசிவரலுமனமகிழ்புரூரவாவவடன்
கொங்கைதன்னுரத்திற்குழைவுறக்கமழுங்குங்குமக்கலவைகள்கொட்டித்
தங்கமெல்லணையிலிருவரோருடல்போற்றழுவியேசுரதநூற்கலவி
பொங்கிடவமுதவாயினீரளித்துப்புரவலன்மயங்கிடப்போனாள். (௬௧)

இலவிதழமுதவூறலைப்பருகியிளமுலையிறுகுறத்தழுவிக்
கலவியைவிளைத்துப்புளகமெய்யரும்பக்களிப்புடன்போகமுற்றுயர்ந்தே
யுலர்பயிரெழிலிபொழிந்திடத்தழைத்ததொத்துளம்வியந்திடுமரசன்
மலரணைமிசையினுருப்பசியணங்கைக்காண்கிலான்மாழ்கலுற்றயர்ந்தான். (௬௨)

மங்கையங்கொருவவலரியின்வெயிலால்வாடியேயுலர்ந்தபாதவங்க
ளங்கிவந்தடரவெரிந்திடுசெயல்போலரசன்மெய்யனங்கசாயகத்தால்
வெங்கனன்மடுப்பவிரகவேதனையுள்வெதுப்பவேறொருசெயலறியான்
சிங்கலின்முனிவர்திரளிருப்பிடத்தைச்சேர்ந்தடிபணிந்திவையறைவான். (௬௩)

அருப்பநுண்ணிடையாளுருப்பசியெனையேயணைந்துயர்விசும்பிடையடைய
நெருப்புறுவிரகவேதனையுளத்தைநிறைத்திடநகரினைநீங்கிப்
பொருப்பிணைப்புயத்தின்வலியெலாம்பொன்றிப்புவியையாடரமெலாமழிந்தேன்
கருப்புரக்கலவைகமழ்குயத்தவளைக்கலந்திடவருளுவீரென்றான். (௬௪)

நிருபனீதுரைப்பநெடுந்தவமுனிவர்நிறைமதிமுகமடந்தையர்மேல்
விரகமுற்றவர்க்கிண்டறநெறியுரைத்துவிலக்கினுந்தவிர்கிலர்பயத்துட்
சிரமமிழ்ந்திடவேயுறுபவன்றன்னைத்தீயினாற்சுடவொண்ணாதுபோற்
பரமனைநினையாதுருப்பசிசெயலைப்பற்றினையெனத்தவர்நகைத்தார். (௬௫)

முறுவல்செய்முனிவரரசனைநோக்கிமொழிகுவாரித்தலையோடு
நிறையநின்னூட்டிவிரந்திடவலையேனிகரிலாவுருப்பசிநின்றோ
னுறுவளென்றுரைப்பப்புரூருவாவுவந்தேயுயர்ந்திடுங்கலத்தினையேந்தி
யறனுறத்தானுளவனியினிரப்பவடைந்தனன்மயலினாலலைந்தே. (௬௬)

அரிவைதன்மயலாலறிவழிந்தரசனடவியையொருவியோர்கரத்தின்
விரிவுறுங்கபாலமேந்தியேதானுணகரத்திற்சென்றவண்வெள்கி
வரையுயர்பழுவத்தெய்தியத்தலையோடுடைத்துருப்பசிமயறன்னு
ளரியமீச்செய்வதறிகிலானயர்ந்தேயருந்தவர்பாற்சென்றிதறைவான். (௬௭)

தவர்கணீருரைத்தமொழியினாலவணிற்சுட்டியதலையினோடேந்திப்
பவமிலாதிலங்குநாட்டினிற்சென்றுபலியெனவெள்கியேவிரைவி
னுவமையில்பழுவத்தெய்தியத்தலையோடுடைத்துருப்பசிமயலொருவா
திவணின்வந்தனன்யானெனனுமாமுனிவர்நகைத்திவையியம்பலுற்றனரால். ()

நீயவனுடைத்தகபாலமோர்மரமாய்நிவந்திடுமதனினைக்கடையப்
பாயுதாசனனையெம்முனிற்கொடுவாவென்றவர்பகர்ந்திடப்பாறி
வேயுயர்பழுவத்துடைந்திடுங்கடிஞைபிசுமந்தமாகியேவிளங்கத்
தீயுறவஃதைக்கடைந்துதேயுவினைமுனிவர்பாற்சென்றுசுட்டினனால். (௬௯)

முனிவர்மன்கொணர்ந்தகனலினான்மறையைமொழிந்துகாமியமகமுடிப்பக்
கனமணியிலங்குவிமானமேற்கவரியசைந்திடக்கலனெலாமிலங்க
வனமெனநடைகொளுருப்பசிபுரூருவாவினையங்கைபினழைத்துத்
தினகரனவிரைச்செயித்தொளிதிகழுந்தேவர்தம்பதியினைச்சேர்ந்தாள். (௭௦)

உருப்பசியுடனும்விருப்பமுற்றுயர்ந்தவும்பர்கோனகருறைநிருபன்
திருப்பொலியுரத்தனழிவிலாப்பதத்திற்சேர்கவென்றருந்தவர்செப்ப
வருப்பநுண்ணிடையாள்கலவியையொருவியவனியினிழிந்துநன்மதியாற்
பொருப்பினிற்றவஞ்செய்தரியமர்பதத்திற்புகுந்தனனுலகெலாம்புகழ. (௭௧)

தூயநற்புரூருவாவுருப்பசியைத்துறந்துநற்கதியுறவவன்சே
யாயுமன்னரசாண்டறனெறிதழைப்பவழகியநகுடனைப்பயந்து
மீயுயர்மவுலிசிறுவனைக்கவித்துவெவ்வினைவேரொடுமடிய
வாயுமாதவனைப்பணிந்திருந்தவத்தாற்கதியினையடைந்தனனன்றே (௭௨)

பகடெயிரதம்பரியெலாநிறையப்படைஞர்கள்பரவைபோற்றுதைய
விகடராங்கியவர்வேரொடுமடியவிழுமியவறனெறிவிளங்க
நகுடனசனத்தின்கவிகைமீதுயரநற்புயத்தழகியநளின
மகடணிந்தயமாச்சதமகமுடித்துமறையவர்சூழவாழ்நாளின். (௭௩)

வேறு.

இந்திரன்பீதகன்றூன்வரவெழுந்தெதிரிற்சென்று
வந்தனைசெயாமற்செல்வமகிட்சியாலிகட்சிசெய்ய
நொந்துபூசுரனுமேகநூறுபத்தாகுநோக்கான்
சிந்தையிற்றளர்ந்துதேவகுருவின்பாற்செல்லும்வேலை. (௭௪)

வாசவனெய்தித்தன்னைவந்தனைசெயாதுயான்செய்
யாசினைப்பொறுத்தியென்றங்கறைவதன்முனரிற்றெய்வப்
பூசுரன்கரத்தலோடும்புரந்தரன்விறல்கள்பொன்ற
வீசனுமஞ்சவார்த்தேயவுணர்களெதிர்த்தாரன்றே. (௭௫)

தானவர்க்காற்றூராகிச்சக்கரன்மொழியினாலே
வானவர்துவட்டாமேலாமறைநெறியோம்பிநல்கு
மீனமில்விசுவரூபன்றனக்கின்சொலியம்பித்தங்கட்
கூனமிலாசானென்றுரைக்கச்சம்மதித்தானன்றே. (௭௬)

சதமகனுடனேவானோர்தழைத்திடவாசானாகிக்
கதமிலாவிசுவரூபன்காமனுக்கன்பினாலே
சுதைதருமொழிசேர்நாராயணகவசத்தைத்தூய்தா
யிதவுபதேசஞ்செய்யவிலேகர்கள்களித்தாரன்றே. (௭௭)

சிந்தையின்மகிழ்ந்துநாராயணகவசத்தைச்செப்ப
விந்திரன்விறல்கள்சேரவிலேகர்களுடனேதந்தத்
தந்தியின்வெரிநிற்றோன்றித்தானவர்தன்னைநூறிப்
புந்தியிற்களிப்பினோடும்போந்தினிதமருநாளின். (௭௮)

சுவையுயர்சோமபானந்தூயதாமன்னமெல்லாம்
பரிவுடனுதரமாரப்பருகியுமருந்தமூன்று
சிரமுளவிசுவரூபன்சிறந்திடத்தன்னைநல்கும்
அரிவைநல்லசுரனன்பாலருண்மகளாகையாலே. (௭௯)

நிரந்தரம்வேள்விதன்னினிறைந்திடுமெவிர்ப்பாகத்தைக்
கரந்துநற்றுவட்டாநல்குங்காளைவாளவுணர்க்கீயப்
புரந்தரன்வேலினாலேபொறியுறவவன்றன்மூன்று
சிரந்தனைத்துணித்துவீழ்த்தான்றேவர்கள்மகிழமன்னோ. (௮௦)

அன்னவன்சிரங்கண்மூன்றுங்கபிஞ்சலமழகார்தோகை
துன்னியகலிங்கமுந்தித்திரியெனுங்ககமாய்த்தோன்றி
யிங்கிலத்தெழலுமப்போதெழும்பிரமத்திதேவர்
மன்னனையடர்தலோடுமற்றவன்கரத்தினேந்தி. (௮௧)

அருமறையோனைக்கொல்லவடர்பிரமத்திதன்னைத்
தரைமரந்தோயந்தூயதையலார்தாங்கவீய
வரிவையர்கருப்பமாயும்புணரத்தோண்டவனிமல்கிப்
பெருகநீர்தறித்தசாலந்துளிர்க்கவிவ்வரங்கள்பெற்ற. (௮௨)

மண்ணினிற்களரோயாகிமரத்தினிற்பிசினேயாகி
யெண்ணருந்தோயந்தன்னிலிழிவதாநுரையதாகிப்
பெண்ணினுக்கோரோர்திங்கள்பிறந்திடுமிருதுவாகி
நண்ணியவலாரிதன்னைநலிபிரமத்திதானே. (௮௩)

இந்திரன்கரத்தின்மீதினெழும்பிரமகத்தியேக
மைந்தனைக்கொன்றுனென்றுமனமெலிதுவட்டாசீறித்
தந்தியையூருவோனைவதைக்கச்சத்துருவந்தெய்த
மந்திரநவின்றுநேரின்மகத்தினைவளர்த்தான்மாதோ. (௮௪)

இந்திரன்றன்னைக்கொல்வேனெனுவெழுஞ்சபதம்பேசி
யந்தமிக்குயரச்செய்யும்வேள்வியினழலின்முந்தி
மந்தரவரையுநாணவிருத்திராசுரன்வானோங்கு
மந்தகாந்தகனைப்போலவவுணர்கண்மகிழநின்றான். (௮௫)

தினமொருசார்பாகத்தானகன்றுயர்ந்தெழுந்துதேவர்
மனமறுகிடவேயோங்கிவிருத்திராசுரன்வானோங்குந்
தினகரனவிருநாணச்சிறந்திடுஞ்சூலங்கொண்டாண்
டனவெரிநமருவோனுமஞ்சிடவார்த்தானன்றே. (௮௬)

கண்டகவசுரர்சிந்தைகளித்திடத்தினங்டோறும்
விண்டலத்துயர்ந்துசூழவகன்றெங்கும்வெளியிலாதா
யண்டமாமுகட்டைமுட்டியார்த்துவந்தடர்க்கவேயா
கண்டலனமரரோடுங்கலங்கிமெய்விதலையுற்றான். (௮௭)

விதியரன்வெருவத்தோன்றும்விருத்திராசுரனைநோக்கிச்
சதமகன்விபுதர்கட்குஞ்சமர்விறன்மல்கத்தான்மாப்
பதியினையுலகமெல்லாம்படைத்தளித்தழித்தேயோங்குங்
கதியினையருளுவானைநினைந்தெமைக்காத்தியென்றான். (௮௮)

உந்தியிற்பிரமன்றன்னையுதவியேயவன்றானோங்கித்
தந்திடுமுலகமீதிற்சனித்ததீயவர்களாலே
நொந்தவெந்துயரநீக்கியவர்களைநொறுக்குமையா
தந்திமுன்வந்தாற்போல்வந்தெம்மிடர்தவிர்த்தேயென்றான். (௮௯)

துவாதசாக்கரமுமட்டாக்கரமுநெஞ்சிடையிற்றுன்னக்
குவானிருவடியாற்கொண்டுகொடியகோளரியேயாகிக்
கவான்மிசைக்கனகன்றன்னைவதைத்துக்கட்செவியின்வைகி
யவாவவர்க்ககப்படாதானடிநினைந்தியோகஞ்செய்தான். (௯௦)

வெந்துயரதனலியாக்கைமெலிந்திடயோகஞ்செய்யு
மிந்திரன்விபுதர்தங்களிடரறவிளங்குபேரி
துந்துமிமுழங்கவீணைச்சுரர்முனிநடிப்பத்தூய
சிந்துவையரவையோவிச்சீதரன்றோன்றினானல். (௯௧)

**வேறு.**

சனந்தனுஞ்சனாதனுஞ்சனற்குமாரனுஞ்
சுனந்தனுஞ்சனகனுந்தூயநந்தனு
மனந்தனிற்களிப்புறமறையயோதியே
யனந்தன்மீதமருவோன்முன்னர்வந்தாடே (௯௨)

## வேறு.

நீலமாகிரியினம்போருகநிறைந்துச்சிமீதின்
கோலமார்தபனனெய்துங்கொள்கைபோற்கிரீடமின்னக்
கால்கரமுந்திமார்பங்கண்செவ்வாய்கவின்கொண்டோங்கச்
சீலமார்கலுழன்மீதிற்றிகிரிசங்கேந்திவந்தான். (௯௩)

சூரியர்கோடிபேர்கடுன்னியவொளிகளான்றங்
கேருறுகிரீடந்தன்னிலெண்ணிலாமணிகடோன்ற
வாரியினிலவுவெய்யோனிளவெயிற்பரந்தான்மான
வாரமுங்கலனுமெய்யினவிருறத்தோன்றினானல். (௯௪)

கனகபூதரத்தினுற்றகருமுகிலேலமாயோன்
றினகரன்வலவன்றம்பிதோளின்மேற்சேர்தலோடும்
வினைகடீர்ந்துய்ந்தோமென்றுவிண்ணுறைவிபுதர்நாதன்
புனமயில்புயலைக்கண்டபொற்பெனவாடினரால். (௯௫)

ஆடினர்புளகமெய்யினரும்பவாரணத்தின்சொற்கள்
பாடினர்நெடியோன்பாதம்பணிந்தனர்படியிற்கண்ணீ
ரோடத்தம்முளமுமென்புமுருகிடவிருகைகூப்பி
யாடகாந்தகனைநோக்கியமரர்கோன்றுதிக்கலுற்றான். (௯௬)

அண்டமெண்ணிலாதவாகியவற்றுளும்புறத்துமாகி
முண்டகத்திறைவனேந்துமுகனுமாயெவர்க்குந்தோன்றாய்
கண்டகக்கராவாஞெந்தகயமுய்யவடைந்ததேஸப்
புண்டரீகங்கள்பூத்தபுயலெனவந்தாயென்றான். (௯௭)

மந்தரவரைமத்தாகவாசுகிகயிறதாகச்
சிந்துவைக்கடைந்துதூயவுரிவையாயமுதமீய்ந்து
மந்தகன்வெருவவெய்துமாடகன்றெசக்கிரீபன்
வந்தெமைநலிப்பவந்தேவதைத்திடர்கடிந்தசோதி. (௯௮)

உருத்தமணியத்திஞெங்கற்பொடிப்படவுயர்ந்துதோன்றும்
விருத்திராசுரனைக்கொல்லும்விறலிலேன்சுதையினெய்து
மொருத்தியையுரத்தின்வைத்தவொருவனேயவனைவெல்லுந்
திருத்தநீயருடியென்னத்திருமகள்கணவன்செப்பும். (௯௯)

கடுவினையகற்றுநாராயணகவசத்தைநெஞ்சிற்
றிடமுடன்செபித்துயோகஞ்செய்யுமத்ததீசியத்தி
மிடலுறுவயிரமாகுமதுதனையவன்பால்வேண்டிக்
கடையவாங்குலிசத்தாலவ்வவுணனைக்களைதியென்றான். (௧௦௦)

பின்னருங்கமலைகாந்தன்பேசுவான்முனிவனத்தி
தன்னின்மற்றதனையேந்துஞ்சதமகவுன்கைதன்னின்
மின்னெயிற்றவுணனுக்கைவீழ்ந்திடுமவனிதன்னின்
மன்னுமென்சத்திநீபோய்வதைபுரியவனையென்றான். (௧௦௧)

என்றரியருளலோடுமிந்திரனெழுந்தங்காடி
மன்றலந்துளவினனைவணங்கியேபோற்றவரனே
ரன்றுலகளந்துநுங்கியாலிலையுமர்ந்தவயா
வின்றெமையளித்தாயென்றேயிறைஞ்சமாலேகினனல். (௧௦௨)

அரிபயோததியினெய்தவமரர்கள்மகவானோடுஞ்
சரியிலாத்ததீசிதன்னைச்சார்ந்தவணிறைஞ்சியம்டெ
வரைதுகளாகவோங்கும்விருத்திராசுரனைமாய்க்க
வருளுவாய்முனிவாவுன்றனத்தியையெமக்கீண்டென்றார். (௧௦௩)

கரிவெரிநுயர்வோன்வானோர்கழறிடத்ததீசிகேட்டுச்
சரிரஙித்தியமீங்கன்றுசரோருகன்றனக்கென்றுனு
நரைதிரைமூப்புநோய்கணலியுமிக்குரம்பைவேண்டேன்
பரவுபகாரமாகப்பருத்தவென்பளிப்பேனென்றே. (௧௦௪)

தேவர்கட்குபகாரத்தைச்செய்திடத்ததீசிதன்மெய்
யாவிபோயரிபதத்தையடையயோக்த்தானீங்கப்
பாவமில்விபுதர்கோமான்பழுதிலாமுனிவனத்தி
யாவலிற்கரத்தால்வாங்கியமரரோடேகினானல். (௧௦௫)

உயிரகன்முனிவன்மெய்யினூரமுறுமத்திதன்னைச்
செயலுறக்கடைதியென்றுமகபதிதெய்வத்தச்சன்
கையினுறக்கொடுக்கவன்றான்கடைந்தவச்சிராயுதத்தைப்
புயறனைப்பரியாயூரும்புரந்தரன்கரத்தினீய்ந்தான். (௧௦௬)

அத்திவெங்குலிசமாகவகமகிழ்வலாரிவெண்மை
யத்தியின்வெரிநிற்றோன்றியமரர்கண்மிடைந்துசூழ்ந்தாண்
டத்தியெனொலிபோலார்த்துத்துதைந்திடவவுணனிற்கு
மத்திசைநோக்கிச்சென்றானதபத்திரமீதோங்க. (௧௦௭)

சுரர்தெசரிபுக்கள்சித்தர்துவாதெசாதித்தர்தேயு
மருதவொண்வசுக்களேகாதெசர்விடையமர்ந்தோர்வானிற்
சரியிலாப்பிதுர்க்கடெய்வவயித்தியர்தாழ்வொன்றில்லா
வருகுறுவிசுவதேவர்முதலினோரார்த்துவந்தார். (௧௦௮)

துந்துமிபேரிதக்கைதுடிகைகாகளங்கள்சின்னஞ்
சிந்துவினொலியுமஞ்சத்திசைசெவிடுறவேயார்ப்பத்
தந்தியின்வெரிநிற்றோன்றிச்சாமரைதயங்கியோங்க
விந்திரனவுணரோடாண்டெதிர்பொரவடைந்தானன்றே. (௧௦௯)

பருத்தவெள்வரையைப்போலும்பகட்டிறைவரலுநோக்கி
விருத்திராசுரனுமெண்ணிலசுரர்கண்மேவவஞ்சக்
கருத்தினனாகிவானோர்கலங்கிடக்கடைநாட்டோன்று
முருத்திரனெனவேசீறியுருத்தனனுலகமஞ்ச. (௧௧௦)

வேறு

சம்பரன்முசிபனருளுவானிடபன்சங்குசிராவயக்கிரீவ
னம்பரன்றுழிமூர்த்தனன்புலோமாநீடழல்சினவிருடபாவாவு
மூம்பரஞ்சேதியுயர்பிரகெதியனூற்கரன்விப்பிரசித்தி
யம்பரவொலிபோலார்த்தனர்சுமாலிமாலியோடரக்கர்வந்திடவே. (௧௧௧)

வேறு.

எரிசினத்தினர்பிறையெயிற்றினரிறுதியிற்பெயுமுகிலெனச்
சரம்விடுப்பவர்வடவையொப்பவர்தழலெழச்சுழல்விழியினார்
வரைதுகட்படவடிபெயர்த்திடுமறவர்குத்திரரொருகையா
லிரைதிரைக்கடறனையிறைப்பவரொதிரடர்த்திடுமவுணரோ. (௧௧௨)

இடிவெடித்திடுகுரல்ர்முற்கரமெழுமழுப்பலவெறிகுவார்
வடவையொத்திடுவிழியர்கப்பணம்வலயம்விட்டெதிர்மலேகுவார்
கடன்மடுத்திடுகரியெனக்கதமுறமுரட்கணைகடவுவார்
கொடியநக்கனும்வெருவவிற்கொடுகுறுகியத்திரம்விடுகுவார். (ககங)

பறையிடக்கைகடிமிலைசச்சரிபணவமொத்திடுகரடிகை
யறையுநற்சினவொலிமிகுத்திடவடரரக்கர்களவுணரோ
டுறைவர்மைக்கிரியெனவெதிர்ப்பவருருமினைப்பொடியுகுகையார்
க்றைமிடற்றரனணிபணிப்படைகடவுமுக்கிரர்கடுகவே. (ககச)

விடையினுற்றவொனவயிற்கொடுமிடைவர்விற்கணைசொரிகுவார்
வடவனக்குவடுறவுயர்த்தெழுமகுடமெத்தியசிரசினர்
புடவியுட்கிடவடிபெயர்ப்பவர்புகைமிகுத்திடுநகையினர்
திடமிகுத்தவரழல்சினக்கணர்தினகரப்படைவிடுகுவார். (ககரு)

அறனழித்தவர்திறன்மிகுத்தவரடர்சுடர்க்கதைவிடுகுவார்
இறுதியுற்றிடுமரனெனக்கடிதிரவிநற்படைகடவுவார்
மறலியுற்றெனவெதிர்நடப்பவர்வடவனற்கணைசொரிகுவார்
நெறியறுத்தவர்புகையுயிர்ப்பினர்வெடவெடச்சொலுநிருதரோ. (ககசு

மூதுசினத்தவர்வயிரமுற்றவர்முகிலெரித்திடுவிழியினர்
திதியளித்தவர்விதிமதித்திடுதிறலர்சக்கரமெறிகுவார்
மதிதனிற்பிளவுறுமெயிற்றினர்வரைபொடிப்படவிடறுவா
ருததியுற்றெனவொலிமிகுத்தவருமைபதிப்படைவிடுகுவார். (ககஎ

திருமுகத்தவர்கதமடுத்தவர்சுசியினைத்தருமழல்கணர்
வரமிகுத்தவர்வரிசிலைக்கையர்வடவையுற்றெனவருகுவா
ரரவுகுத்திடுவிடமெனப்படியதிரவுற்றிடுமெடியின
ருரனுறக்கரியுதைபதத்தினருரகவத்திரம்விடுகுவார். (ககஅ

சலமிகுத்தவர்கொலைமனத்தினர்தழலுகக்கணைபொழிகுவார்
சிலைபிடிப்பவர்மலையையொப்பவர்சிவனருட்படைவிடுகுவார்
வலனையுற்றவர்கலனையற்றவர்வலயமுற்கரமெறிகுவார்
கலியையுற்றவருலவையொத்தவர்ககபதிக்கணைமுடுகுவார். (கககூ

வேறு.

தானவப்படைஞர்வாடண்டயின்முற்கரம்
வேன்மழுக்கணையம்விட்டேறுவிட்டேகணை
சோனையிற்பதின்மடங்காகவேசொரியவே
வானவக்குழுவெருண்டேமலைந்தாரரோ. (கஉ

குந்தம்வாள்கப்பணங்கூரயில்லெழுமழு
நந்தகம்விட்டுவின்ஞணிகாதுறவனைத்
திந்துவின்பிளவைநேர்கணைசொரிந்தெதிரவே
யந்தரத்தவுணர்தம்படையெலாமற்றவே. (கஉக)

சூரர்விடுங்கணையினூற்றிதிதருஞ்சுதர்படை
யெரியமாநிருதரும்மசுரரும்மெண்ணிலா
வரைகளுஞ்சாலமும்வானமீன்மறையவே
சொரிதலும்விபுதர்கள்கணைகளாற்றுணிசெய்தார் (கஉஉ)

நிருதருமவுணருநெறியிலாரவிர்வரை
மரமெலாந்துகளுறவாளியான்மாற்றிநற்
சுரர்நெடும்படைகளும்விசிகமுஞ்சொரிதலுஞ்
சரிகிலாதோடினர்தானவப்பெயரரோ. (க௨௩)

கடையுகக்காலினற்கடல்கிழிந்தென்னவே
வடன்முனிந்தேயெதிரவுணருநிருதரும்
உடைதலும்நீள்துவட்டாசுதன்னுருமெனத்
தடைசெய்தங்கவரொடுஞ்சாற்றலுற்றனரோ. (க௨௪)

அதிதிதன்சுதர்களோடமர்செயப்பயமுறத்
திதிதருஞ்சிறுவராந்திரளெலாம்பாறினீர்
மதியிலீர்சமர்செய்திங்குயிர்துறந்தார்கள்வான்
கதியினேறுவரலானிரயமேகாண்கிலார். (க௨௫)

ஈதுரைத்தஞ்சன்மின்னெனுமுறைகூறியே
யோதையாருவரியினொலிகளும்மஞ்சிடப்
பாதவம்வரையகற்படியினிற்பொடியுகப்
போதுவான்றாள்புடைத்தார்த்தனன்பொறியுக. (க௨௬)

கண்டகன்றாள்புடைத்தார்த்திடக்கவினுறு
முண்டகன்றரமாமலையுளோன்முனிவரோ
டண்டம்விண்டதுகொலோவெனவுளைந்தாரமர்
மண்டுமெண்டருமுயிர்மாய்ந்தபோல்மாழ்கினர். (க௨௭)

அரியொலிக்கஞ்சியேயயமயர்ந்தாலெனச்
சுரர்துவட்டாசுதன்றொனியின்மூர்ச்சித்தனர்
கரிவெரிந்நறுமவன்கண்டுகெண்கனலவெம்
முரணுறும்வேலயின்முந்திடவீசினன். (க௨௮)

வேலயில்லெழுமழுக்கணையம்விட்டேறுமுட்
கோலடர்கப்பணங்குந்தம்வாளெறிதலுங்
காலனுகிய துவட்டாசுதன்கண்டுகைச்
சூலவெம்முனையினிற்றுணிசெய்தேயார்த்தனன். (க௨௯)

ஆர்த்தவன்செய்கையைக்கண்டவாகண்டலன்
பார்த்துவெஞ்சினமுறப்பாய்பகடுந்தியே
காத்திநீயென்றுவெங்கதைவிசித்தெறிதலும்
பூத்தவன்னஞ்சிடவவுணன்மேற்போயதே. (க௩௦)

சதமகன்விறலினற்றன்விசித்தெறியும்வெங்
கதையினையவுணர்கோன்கையினற்பற்றியாண்
டதிதிசேய்மேல்விடுத்தானையின்மத்தகம்
பிதிரவேமோதினன்பெருமையார்கரமதால். (க௩௧)

தந்தியின்மத்தகக்குருதிதாரணியுற
விந்திரன்கதையினுவிபமொடேசோர்ந்தவண்
சிந்தையிற்கதமுறத்தேறினன்றன்னுடன்
மந்தரமனையவாளவுணனும்மொழிகுவான். (க௩௨)

கரியினேடுன்னையுங்கடுகியேகொன்றெனக்
குரியமாபகைமுடிப்பேனலாதொழியினே
விரைவுகொண்டென்னைநீவதைசெய்தால்விதியரு
கரியவீடடைகுவேனென்றுபின்னறைகுவான். (௧௫௩)

மூனைவெலிற்பகைமுடித்தேனஃதொழியினீ
யெனைவெலின்யான்சுவர்க்கந்தனையெண்ணிலேன்
முனிவர்பிஞ்ஞகனயனுணரொணுமுண்டகத்
தனமுறும்மார்பினன்பதவிசென்றடைகுவேன். (௧௫௪)

ஆதலாலுன்றனைவதைசெயாதேகியான்
சாதலேநலனெனச்சாற்றியேவிபுத்தர்தம்
நாதநிற்கதைகொடேநானடித்தேனெனப்
பீதிகொள்ளேலெனப்பின்னரும்பேசுவான். (௧௫௫)

தூயவிக்கதைபழுதாயபோற்சுரர்கடம்
நாயகாவுன்கரக்குலிசநல்லூரனுலா
மோயுமென்றேயுரைக்கிலனதற்கேயுறப்
பாயுமத்திறலினைப்பகர்வனென்றுரைசெய்வான். (௧௫௬)

வேறு.

தீதினையகற்றுநாராயணகவசத்தைச்சீரா
யோதியததீசியத்தியுரனுறுகுலிசமாக
நீதரித்ததுவுமன்றிநெடியவன்சத்தியெய்திக்
கோதிலாயுதமாய்த்தோன்றிற்றென்றுபின்கூறலுற்றான். (௧௫௭)

சூலமில்லொனினுநோயாற்குறையுளரெனினும்வஞ்சக்
கலரிவரெனினுங்கள்வக்கடியவரெனினுநக்கன்
சிலையிறுத்தருளுமெந்தையளியுறினவரோதீரா
வலனுறப்பகையைச்செற்றும்வானவர்க்கதிகராவார். (௧௫௮)

ஆதலாலரிதன்சத்தியமரர்கட்கிறைவவுன்றன்
கோதகல்கரத்தின்மீதுங்குலிசத்துநிறைந்ததும்பர்
வேதனைதீரவென்னைவதையெனவிளம்பக்கேட்டுப்
பீதிகொண்டிருத்தியென்னநகையுறப்பேசினுனல். (௧௫௯)

நகையுடனவுணர்கோமான்நவின்றிடுமுரையைக்கேளா
மகபதியுரனற்றேனென்றெனைமதியாதிருக்கு
மிகழ்வினைப்பகர்ந்தாயென்னவெதிர்ந்திடத்துவட்டாமைந்தன்
நகபதிமருகன்போலநாட்டங்கள்சிவந்தானன்றே. (௧௬௦)

வேறு.

காலனும்வெருவவெதிர்த்தசுரன்கடுவிடமேயாம்
நீலமுறுங்களனஞ்சிடவெண்கரிநிலனேட
வேலைகிழிந்திடவார்த்துயர்விண்ணவர்பெருமான்மேற்
சூலமெடுத்தழல்சூழவெறிந்தனன்முனிவுற்றே. (௧௬௧)

கண்டைகலித்திடவழலுறமல்கியகதிர்கோடி
மண்டியசெயலெனவவிர்கள்பறந்திடவடவைத்தீ
மொண்டுபொழிந்தெனமூவிலையோரமுமெரிமூள
வண்டர்நடுங்கியரற்றிடவெய்தியவயிலம்மா. (௧௬௨)

சூரர்முறையிட்டனர்முனிவர்பதைத்தனர்துயராலே
யரர்கைவிதிர்த்தனரயன்வெருவுற்றனனெறிமாறி
யிரவிதிகைத்தனன்மதிதணவுற்றனனிமவானும்
வரைபிதிர்வுற்றனவுடுவினமுட்கினமழைவற்ற. (க௪௩)

**வேறு.**

அந்தகனஞ்சிடமணிகள்கறங்கிடவழலுறவெதிருமயில்
வந்ததுகண்டமரர்க்கிறைகுலிசமெறிந்திடவானின்மிசை
முந்தியமூவிலையொளிர்படையிற்றுகமுகமுயர்வாளவுணன்
மந்தரவரைநிகரொருபுயமற்றதுவானவரார்த்திடவே. (க௪௪)

சிந்துவினணையெனவேயுயர்தோள்படிசிதறிவீழ்ந்திடலு
முந்தியகறைநதியாமெனவோடமுனிந்துபினுகியெனு
விந்திரன்மீதொருகைகொடுமோதியிலங்கயிராவதமாந்
தந்திமுகத்திடிபோலவடித்தனனவுணர்கடம்பெருமான். (க௪௫)

வீறியவசுரனடித்திடவிந்திரனூரனுறுகுலிசம்விழ
வூறியகறைநதியாமெனவோடவுளைந்தயர்வுற்றமரர்
பாறிடவோர்கனல்பொறபின மும்மதநீடுபகட்டின்வெரிந்
தேறியவனுடனாயுதமேந்தவொனுனிவைசெப்பினனால். (க௪௬)

நீயிவனென்கரமோதவயர்ந்தனனென்றுநினைந்துபயந்
தேயமர்செய்கிலையென்னவிகட்சிகள்செப்புவரார்பலரும்
மாயவனச்சுதன்வாமனன்மாதவன்மாலரிகேசவன்விண்
டாயன்முராரியருட்பெறுநீதளரேலெனவேயறைவான். (க௪௭)

வென்றவர்தோற்பர்கள்வெருவினர்பயமிலரார்விபவத்தினுளே
நின்றவர்நல்குரவாகுவரிரவலர்புரவலராய்நிறைவா
ரன்றுலகுண்டருளாதியியற்றியசெயலினிவ்வாறுறுமால்
குன்றைநிகர்த்திடுமெதகரிமேலமர்கோவுணரென்றுசொல்வான். (க௪அ)

மசகமறைந்திடமேருவிழுந்திடுசெயலெனவலனூறுமென்
புசமுனியத்திறைநீவிடவற்றதுபுனலுறுவேணியினிற்
சசிதரியரனிடர்களைபவனருளெனவுணருதிசதமகனே
வசையறவமர்செயமுனைகுதியென்றுயர்வாளவுணன்சொலுவான். (க௪௯)

**வேறு.**

அரியிணைமுனிவனத்தியதினைனவதைத்தியென்றுரண்
டுரைசெய்தானெனுமாங்காரமொழிதியாலுன்றலென்றன்
சரிரம்வீழ்போதென்னுவிசக்கரந்தரித்தோன்பாதத்
திரவியினதிகமாகவேகுவகாண்டியென்றான். (க௫௦)

பின்னருமுரைப்பானும்பர்பெருமனீகேட்டியென்ற
னன்னையும்வேள்வியாகியத்தனுந்துவட்டாவாகி
யென்னரும்பகையாயிங்ஙனெதிர்ந்திடுநீயுமாகி
யுன்னரும்பதத்தென்னுவியுறவருளொருவனுவோன். (க௫௧)

சோதியாயுலகமெல்லாம்படைத்தளித்தழித்துத்தோன்றி
நீதியாய்நெறியாய்நாலுமறையதாய்நிறைந்துநிற்கு
மாதியுன்னடியார்தங்கட்கடியர்தம்மடியாரம்பொற்
பாதமேபற்றுவோரைப்பற்றவேயருள்செய்வாயே. (க௫௨)

தரணியினரசுந்திக்குக்காவலர்விபவந்தானுஞ்
சுரரிறைசெல்வந்தானுந்தூயநான்முகன்றன்வாழ்வு
நரகெனநினைவனுன்றன்பதவியைநத்திலேனான்
பரமவுன்பத்தர்க்காளாய்மகிழ்ந்திடப்பணித்தியென்றான். (கடுங)

தோர்வையிற்றுயரமில்லேன்செயத்தினிற்சுகமுமில்லே
னேருறுபதங்கடானுமிச்சியேனுழியேந்து
மாரியவுன்றன்பத்தர்க்கடியவர்க்கடியனாகுஞ்
சீரினைச்செனனந்தோறுமளித்தருள்செல்வவென்றான். (கடுச)

இருகணீர்புரளவென்புமிதயமுமுருகநின்றே
யரிதிருமகிணையவச்சுதவனந்தமூர்த்தி
யுரியவிவ்வுலகமெல்லாமுண்டுமிழ்ந்தளந்துவைகுங்
கரியவவென்றென்றேத்தியவுணர்கோன்கழறலுற்றான். (கடுரு)

சதமகபதியோவிச்சமர்பொரமுனைதியென்று
கதமுறுமவுணன்கூறமகபதிகழறலுற்றா
னதன்மனுமசுரனாயுமந்தகாலத்திற்பூமின்
பதியினைப்பத்திசெய்துபரமபாகவதனானாய்· (கடுசு)

புரகதிரச்சிலேனுன்பத்தர்கட்கடியனாகும்
வரமருளென்றாயஃதேயமுதமாம்வாரியோவி
ருளுறக்கூவரீரைப்பருகிமெதியிலார்போ
லரியடியவனைவிட்டடங்கவன்பதமிச்சிப்பாரால். (கடுஎ)

ஆதலாலவுணர்வேந்தேயந்தகாலத்திலொப்பில்
சோதிதன்னடியார்க்காளாய்த்துலங்கிடச்சிந்தைசெய்தா
யேதுனக்கரியதென்றேயியம்பியமகவான்மீதிற்
சீதகவரையுமஞ்சப்பெருங்கதையெறிந்தேயார்த்தான். (கடுஅ)

உலகெலாமஞ்சவேதனுலேந்திடவும்பரெல்லா
நிலைகுலைந்தோடவெய்துநெடுங்கதைதன்னைநோக்கிச்
சிலையுறுசிறகைநீக்குந்தேவர்கோன்குலிசந்தன்னை
லகியதிருமஞ்சுமவிருறவெறிந்தங்கார்த்தான். (கடுகூ)

நாளினல்வரையையெற்றுந்தானவர்பதிதான்விட்ட
ளமாக்கதைதுளாகநிலத்துறவெறிந்துதுனூர்
கோளரிநகமேபோன்றகுலிசங்கூற்றஞ்சநின்றான்
றோளினைத்துணித்துவீழ்த்தசுரரெங்குந்துள்ளியாட. (ககூ0)

தரையினைத்தாங்குஞ்சேடன்படந்தமோறவோங்கும்
வரையினந்துகளதாகமகபதிகுலிசத்தாலே
யரிசினத்தவுணன்றோளற்றிருநிலமிசையின்வீழக்
குருதிபோராறுய்ப்பக்கமிரண்டினுங்குரைத்ததன்றே. (ககூக)

ஞாலமேவிரண்டுதோளும்விழுந்திடநயனந்தீயைக்
காலவெண்டிசையினெட்டுக்கரியினிந்தோடவேழு
வலைகுழண்டம்விண்டதாமெனவவுணனார்த்துக்
காலகாலன்றானெனவலாரியைக்குறுகினானல் (ககூஉ

கீழணமவனிதன்னைமறைத்திடக்கிளர்ந்தவானைச்
சூழமேலோட்டம்பற்றச்சுரர்பதியுடனுந்தந்தம்
வேழமோடகன்றவாயால்விழுங்கிநல்விபுதரோட
ஆழிகாலத்திற்றோன்றமுருத்திரனைத்தங்கார்த்தான். (௧௬௩)

கரியுடன்மகவான்றன்னைக்கடியவன்விழுங்கக்கண்டு
சுரரிருகண்ணினெற்றித்துறந்தவரோடுமோட
வரனயன்றிகைப்பவட்டவசுக்களாதித்தர்சித்தர்
மருதரோடனேகரெட்டுத்திசையினுமிரிந்தார்மாதோ. (௧௬௪)

வேறு.

நீடுநாராயணகவசநெஞ்சுறக்
கூடியயோகத்தால்விபுதர்கொற்றவ
னுடைமால்யானையோடவுணனுண்ணவும்
வீடிலாதவனகட்டினில்விளங்கினான். (௧௬௫)

வளர்ந்திடுமவுணர்கோன்வயிற்றினுட்புகுந்
தளர்ந்திடுகரிவெரிநமருங்கொற்றவ
னுளந்தவறுதவனுதரந்தன்னையே
பிளந்தனன்குலிசத்தாற்பெருமையோங்கவே. (௧௬௬)

அறந்தவறிடக்கடிதவுணனுங்கவங்
கிறந்தனனிந்திரனெனவிரங்கிய
துறந்தவராடநற்சுரர்மன்றோனுடன்
பிறந்தனனுமெனப்பெயர்ந்தனன்னரோ. (௧௬௭)

சுரரொடுமுனிவர்கடுதித்துத்துள்ளவே
கரிவெரிநின்னுறுவிபுதர்காவல
னுரனுறுமவுணர்கோன்சென்னிமேலொளி
ரிரவிநேர்வச்சிராயுதமெறிந்தனன். (௧௬௮)

கடமுறுகரிவெரிக்காவலன்விட
வடவரைவலம்வருமிரவிமானவே
திடமுடையவுணர்கோன்சென்னிசுற்றிநற்
சுடருறுவச்சிராயுதந்துலங்கிய. (௧௬௯)

கருடவாகனன்கையிற்கதிர்கொளாழிபோ
லிருடவிர்குலிசம்வானிலங்கவேகியே
கிரிடமொன்றவுணர்கோன்கழுத்தைக்கீறித்தான்
வருடமொன்றறுக்கக்கம்மண்ணில்வீழ்ந்தவே. (௧௭௦)

சேடனும்வெருவுறத்தேயுவின்சகாக்
கூடியேயவனிவான்குலையமோதிட
வாடகவரைக்குவடளக்கர்வீழ்ந்தபோ
னீடுதானவன்சிரநிலத்துவீழ்ந்ததே. (௧௭௧)

இரணியவரைக்குவடிருத்தும்வேரறத்
தரணியின்விழுந்தபோற்றானவன்னுடல்
சிரம்விழுந்ததற்பினர்திசைக்கணெண்கரி
வெருவிடவரவுமெய்குலையவீழ்ந்ததால்.

ஆடகவரைநிகரவுணன்மாண்டிட
வோடினரவுணர்களிருதரோடுமே
வீடினவினையெனமுனிவர்விண்ணவ
ராடினராவலங்கொட்டியார்த்தரோ. (கஎரு)

துந்துபிமுழங்கிடச்சுரர்கள்பொன்மலர்
சிந்தினரரம்பையர்திபமேந்தவே
சந்தமார்வசுரிபுமருதர்சாரண
ரிந்திரன்றனைத்துதித்திறைஞ்சுமெல்லையின். (கஎசு)

வேறு.

தாரணிதன்னின்மாண்டதானவனுடலையோவிப்
பேரொளியாகிச்சீவன்பெயர்களாயிரத்தோன்வைகுஞ்
சீருறுபதத்திலேகச்சிறந்திடுமுனிவர்புத்தே
ளேருறுமரியையேத்தவிந்திரனறையலுற்றான். (கஎ)

என்றனுலவுணன்றன்னைவதைத்தவனுவியுன்னை
யொன்றவிங்கருள்செய்சோதிவுன்றனக்குறவுமில்லைக்
கன்றியபகையுமில்லைக்கால்புயந்தேயுமன்னி
ணென்றிவைநிறையுமண்டமெண்ணிலாதளிப்பாய்வீழ்ப்பாய். (கஎசு)

தொலைவிலாச்செல்வத்தென்னையிருத்தியதொழிலினாலு
நலமிலாவிராசதத்தானுனுன்னையறியாதைந்து
புலன்வழிநின்றேனுன்றனடியரைப்போற்றிவாழும்
பலனைநீயருடியென்றுபகர்ந்தவணிற்குங்காலை. (கஎஎ)

சித்திரகேதுவென்னுந்திறலுடையரசன்கோடி
நித்திலநகையாரானதேவியர்நிறையவேட்டுப்
புத்திரயாகஞ்செய்தங்கிராவவிசீயப்பொற்பா
ருத்தமச்சிறுவன்றன்னையுதவினண்மூத்தபாரி. (கஎஅ)

மூந்தினதேவிபெற்றபுதல்வனைமுடுகுசீற்றம்
வந்திடமற்றங்குள்ளமனைவியர்மருந்தாற்கொல்ல
நொந்துமன்னரற்றலோடுநாலறியங்கிராவுஞ்
சந்ததம்வீணையேந்துந்தவனும்வந்தடைந்தாரன்றே. (கஎகூ)

வேறு.

அறிவுறுமுனிவர்தேற்றவரசர்கோன்றேறானுகிச்
சிறுவனத்தவர்களாலேயுயிருறச்சிறந்துதோன்றி
மறுவறுமரசநீயோதந்தைநான்மகனேவெண்ணில்
பிறவியினியார்யானுமொன்றிவைபேசினுனல். (கஅ0)

மறுவறுசிறுவனிவ்வாறுரைத்தவண்மரித்தலோடு
மறிவுவந்துறவேதேறுமரசனுக்கங்கிராவு
நெறிகொணாரதனுந்தூயநேமிதோத்திரத்தைக்கூறி
யறைதிநீயெழுநாளிலனந்தன்றோன்றுவனென்றூரால். (கஅக)

முனிவரிதோதியேகமுராரிதோத்திரத்தைவேந்த
னினியனுயறைதலோடுமேழுநாளூறலுந்தூய
தினகரனவிரைப்போன்றகலன்களுஞ்சிறந்துதுன்னத்
துனியறவனந்தன்வந்துதோன்றமன்வணங்கினுனல். (கஅஉ)

மறையினூலன்பினேத்திமன்னவன்வணங்கலோடு
மிறைவனுமனந்தனுக்கியென்னெழிற்பதத்தினீதா
னுறைகுதிசிலநாளேகியென்றுரைத்தேகலோடும்
பொறைகொளுமரசன்வித்தியாதரனுகிப்போந்தான். (கஅரு)

தூயதோர்விமானம்வானிற்றுலங்கிடவதன்மீதேறி
வாயுவின்விசையாலெட்டுத்திசையினும்வயங்கியேகுந்
தீயவையகயற்றிஞானந்தெரிந்தவன்றேவர்சூழ
வாயிழையுமையாள்வாமத்திடையுறுமரனைக்கண்டான். (கஅசு)

கறைமிடற்றனைநோக்கிக்கழறுவான்றேவர்சூழ
விறையெனவிருப்பாய்நாணமேகவுன்னூருமீதிற்
பிறைநுதற்றேவிதன்னையிருத்தினைபெரியோர்க்கீது
முறைமையோவென்றுசாலமுறுவலித்திகழ்ந்தானன்றே. (கஅஎ)

முறுவலித்திகழ்ந்தான்றன்னைமுக்கணன்றேவிநோக்கி
யறைகுவாளென்னைநீதானவமதித்துணைத்தசொல்லா
னெறியறுமசுரனுகிச்சனித்தியென்றியம்பநேரி
லறிஞனுந்துவட்டாவேள்வியனலிடையுதித்தானன்றே. (கஅசு)

கருத்தினிலரியைவைத்துக்கவினைகளைந்ததூயோ
னெருத்தமரிறைவன்றேவியியம்பியசாபத்தாலே
விருத்திராசுரனுனைவீட்டியபாவந்தானே
யிருத்திமகீசியாகிக்கிட்டியவலாரிதன்னை. (கஅஎ)

வேறு.

வரத்தால்விருத்திராசுரனைவலாரிவதைக்கப்பிரமகத்தி
யுரித்தாயடரப்பாதாளத்தோடையயத்துளமிழ்ந்திடவெஞ்
சரத்தாலசுரரடர்த்திடவுஞ்சாயும்விபுதர்தலைவனில்லாக்
கருத்தார்துனிகண்மலிந்திடவேகளைகணில்லாதலைந்தனரால். (கஅஅ)

தலைவனில்லாவிபுதரொடுந்தவர்கணூறுமகஞ்செய்ய
நிலனையாளுநகுடனுந்தானிகரிலமரர்க்கிறையாகக்
கலனெலாமெய்யிலங்கிடவேள்கவரிகவிகைகாட்சியுற
வலர்பூந்தொடையலுரத்தணிந்தேயரியாசனத்தினமர்ந்தனனால். (கஅசு)

இந்திராணிதனையணைக்கவெண்ணிநரவாகனமேறக்
கந்தர்தாதைநிகர்முனிவர்கனகத்தண்டிகடாவிடவு
முந்தியடையுமுயற்சியினூற்சற்பசற்பவெனமொழியச்
சிந்துறுகருங்குருமுனிநீசெப்புஞ்சற்பமாதியென்றான். (கக0)

அரவாய்விழுதியெனமுனிவனறையவரசன்மிகநடுங்கித்
தரைமேற்பணியாமுருவொழியச்சாற்றுகென்னத்தவத்தோனுன்
மரபார்தருமனுடன்சுருதிவழுவாதுரைத்திவ்வடிவொருவி
விரிவான்சுவர்க்கத்தடைதியெனவியாளமாய்மன்னிலன்வீழ்ந்தான். (கககக)

உரத்தால்விருத்திராசுரனைவதைக்கவும்பர்க்கிறைமீதின்
பெருத்தேயடர்த்தபிரமகத்தியொருவப்பெரியதவர்கூடிக்
கருத்தார்மறையாலயமேதமகத்தைமுடிக்கக்கடுவினைபோய்த்
தருத்தார்மாலையுரத்துறவேசசியோடமர்ந்தான்சதமகனே. (கககஉ)

வியாளமாகியவணிமிசைவீழ்ந்தகுடனெழிற்புதல்வன்
யயாதிமௌலிகவித்தழகாரரியாசனத்தின்மிசையேறி
நியாயப்படகமுரசினொலிநிறையவயங்குமமரர்பதி
யையாழியெனவேபுவனமெலாமருளோடரசாண்டமர்நாளின். (௧௯௩)

சசியின்கணவன்புரோகிதனைத்தாராதேவியணைத்துதவுங்
கசனென்சஞ்சீவினியுரையைக்கற்பான்கருத்தினிறைந்திடவே
யுசனனடியிற்றொழுதெனக்குக்குருநீயென்னவுவந்தவனும்
பசுவின்குழுமேய்த்திடுதியெனப்பணிக்கநிரையைமேய்த்தனனால். (௧௯௪)

அசுரராசான்மொழிப்படியினமரர்குருவினெழிற்புதல்வன்
பசுவினிரைமேய்த்தடவியுறும்பலமூலங்கடனையருந்தி
நிசிவந்துறவேயகத்தடைந்துநீதியுடனாயிரவருடம்
வசையிலுசனன்மனமகிழவவுணர்பதியில்வைகினனால். (௧௯௫)

பாவமலியுமவுணர்குருப்பயந்தமான்பங்கயவதனி
காவிவிழியாள்சிலைநுதலாள்கனமேபோன்றகருங்குழலா
டேவியனம்போனடையுடையாடிடிபோன்மருங்கினெழிலுடையா
டேவயானைகசன்மீதிற்சிறந்தவன்பாயமர்நாளில். (௧௯௬)

மகவான்குருவின்சுதனமரின்மடியும்விபுதர்க்குயிர்வரவே
நிகரிலாதவுசனன்மறைநிறைமந்திரத்தைத்தனக்கருளும்
வகையானிரைமேய்க்குவதறிந்துவடிவாளாலேயசுரர்திரள்
நிசிபோற்கனன்றுகசனுடலைச்செந்நாயருந்தவதைத்தனரால். (௧௯௭)

விசைகொள்பரிபூணிரதமொடுவெய்யோன்மறையமனையிடத்திற
பசுவின்குழுவந்தடைந்திடவேபவமிலுசனனருள்குமரி
கசனைக்காணாதுயிர்விடுவேனென்னவசுரர்கதிர்வாளால்
வசையிலமரர்குருச்சுதனைவதைத்தசெயல்சுக்கிரனறிந்தான். (௧௯௮)

தீயவசுரர்கசன்றன்னைவதைத்துச்செந்நாய்க்கிட்டதெல்லாந்
தூயவுசனனுணர்ந்துயருஞ்சஞ்சீவினிமந்திரஞ்சொல்ல
நேயமிகுகன்னிகைமகிழநிசியில்விபுதர்குருச்சிறுவன்
சீயமெனச்செந்நாயகட்டைப்போழ்ந்துசென்றங்கமர்நாளில். (௧௯௯)

மாறிலுசனன்செபித்திடவேவலாரிகுருவின்மகனுடலி
னூறுமுயிர்வந்தெய்திடவங்குரப்புஞ்செந்நாயுடைவயிற்றைப்
பீறியெழலுங்கொதித்தசுரர்பின்னுமவனைவதைத்தரைத்து
வீறுந்தரையின்றிரைகுரைக்கும்வீரையயத்துட்கரைத்தனரால். (௨௦௦)

ஆவின்குழுவோடழகுடனேயடையுங்கசனைக்காணாமற்
காவிவிழிநீர்ததும்பிடவேகலங்குமகளைக்கண்டுசனன்
றேவர்க்கிறைவன்புரோகிதன்றன்சிறுவனுடலைத்துணித்தரைத்துப்
பாவமலியுமவுணர்கடற்பயத்துட்கரைத்தசெயலறிந்தான். (௨௦௧)

அறிந்தவுசனன்செபித்திடவேயமரர்குருவினழகியசேய்
சிறந்தவடிவமொளிதிகழத்தெய்வயானைமனமகிழ
நிறைந்ததிரைசூழ்சிந்துவினைநீங்கியசுரர்புரோகிதனைச்
செறிந்தகளிப்பினுடன்வணங்கிச்செகத்தாவினத்தோடமர்நாளில். (௨௦௨)

இரையுங்கடலிற்கரைகுரம்பைகூடியெழுந்தானிரைமேய்க்குஞ்
சுரர்தங்குருவின்மகனுடலைச்சுட்டுச்சாம்பறனைவாரி
விருடபருவாமனையிடத்தின்வேரிமலியக்கலந்தசுரர்
பரிவினுடனேகொடுத்திடலும்பானஞ்செய்தானுசனனம்மா. (௨0௩)

இருகொம்பொளிரவருநிரையோடிலங்குகசனெய்தாமையினு
லரிவையரற்றச்சுக்கிரன்றனவுணரவனைவதைத்துடலை
யெரியினடுக்கியடலைதன்னையெடுத்துச்சுராநீர்தனிற்கலந்து
விரகிற்றனக்காண்டளித்ததெலாமறிந்தேமிகவுமுனிந்துசொல்வான். (௨0௪)

மதுவைப்பருகியசுரர்செய்யுமாயத்தலைந்தேன்சுராநுகர்வோர்
பதிதராவரொனச்சபித்துப்பவமிலுசனன்செவித்துயருஞ்
சுதையையருந்துமிலேகர்குருச்சுதனையழைப்பத்தன்வயிற்றுள்
விதியினியற்று லுருவுறவேவிஞ்சுங்கசன்கூவென்றனனால். (௨0௫)

வீறியெழுந்துதரத்தினுள்ளேமிண்டிக்கூவுங்கசன்றனக்கு
மாறிலுசனன்மந்திரத்தையுபதேசித்தென்வயிற்றினையே
பீறியெழுந்துதறையினின்றுபெருமையுறுசஞ்சீவினிதா
னூறுமுறையாற்செவித்தெனைத்தானெழுப்புகென்றுநுவன்றனனால். (௨0௬)

அசுரராசான்மொழிப்படியினவன்சாடரத்தைப்போழ்ந்தெழுந்த
கசன்சஞ்சீவிமந்திரத்தைக்கழறவெழுந்தசுக்கிரன்றன்
வசைகொளசுரருனையினமும்வதையாமுன்னரேகெனவே
யுசனனடியின்வணங்கியவனும்பருலகினுறுங்காலை. (௨0௭)

தேவயானைகசனடியில்வணங்கிச்செப்பலுற்றனளென்
னுவியனையாயெனைவேட்டின்றணைத்தென்றுடுமடைதியெனப்
பாவமகல்வோன்செவிபுதைத்துநீயுநானும்பழமறையை
நாவினுணர்வோனகட்டுதித்தோநங்காய்நானுனனுசனென்றான். (௨0௮)

தீதையொருவுங்கசனிவ்வாறுரைப்பத்தெய்வயானையென்றன்
றுதையருளுமுவமையிலாச்சஞ்சீவினிமந்திரமுதவா
தேதமுறுதியெனச்சபிக்கவெரியுநயனனேந்திழையை
வேதமுறுமந்தணர்க்காகாய்வேந்தனிலத்தின்வேட்பனென்றான். (௨0௯)

சஞ்சீவினிமந்திரம்பழுதேயாகச்சபித்ததையறனை
நெஞ்சார்சினத்தினிலநிருபனின்னையணவனெனநிகழ்த்தி
யஞ்சார்விசும்பிற்கசனடையமடந்தைவெருவிவரும்விதியை
யஞ்சானனற்குங்கடக்கவரிதென்றேமாழ்கியமர்நாளில். (௨௧0)

விருடபருவாப்பயந்தமினுள்வேனேர்விழியாளுருவமிலாப்
புருடன்விரும்புமபயோதரத்திபுயனேரைம்பாற்சம்மிட்டை
வருடகாலமொருவிடவேமாதர்சூழவொருநயனங்
குருடனுவேரன்குமரியொடுகுன்றவிலிலஞ்சிக்கூலமுற்றாள். (௨௧௧)

மருங்கிற்கலைகடலத்திலஞ்சிமருங்கினெறிந்துநதிபதிபோற்
றரங்கமெறியுந்தடாகமெல்லாஞ்சர்துநானங்கமழ்ந்திடவே
கருங்கண்சிவப்பக்குழலவிழக்கவினுராதரம்வெளுப்பமினார்
நெருங்கிக்கொழுநருடன்கலவிநிறைத்தார்போலப்பயந்திளைத்தார். (௨௧௨)

வனசமலர்கள்ப்றித்தெறிந்தும்வளைகளொலிப்பக்கரங்கோர்த்தும்
புனலுளமிழவிழுந்தெழுந்தும்பொற்பார்மடவார்மகிழ்வேலை
யணிலன்விசையாலறைந்தவர்களம்பொற்கொடிகள்குவித்தேகக்
குனிவினுதலோர்தமனியநற்கொம்புபோலக்கலைந்துடைந்தார். (௨௧௩)

நனையுங்குழற்காலலையநதிநாரநிலத்தினருவியுறப்
புனலையகற்றிப்பாறுமவிர்பொற்கொம்பெனவேசம்மிட்டை
யணிலன்விசையாலெழுங்கலைக்குளசுரர்குருவின்மகளழகாய்ப்
புனையம்பரத்தையெடுத்துடுத்தத்தெய்வயானைபுகலலுற்றாள். (௨௧௪)

வேறு.

அந்தணப்பெண்ணினுடையசுரர்ஃகோன்மகளாநீயோ
வந்திவண்புனைவாயென்றுமதிப்பிலாதிகட்சிகூறச்
சிந்தையிற்கனன்றென்றாதையீயத்தேகியென்றேற்பான்
றந்தநீயிகழ்ந்தாயென்றுசம்மிட்டைமுனிந்தாண்மாதோ. (௨௧௫)

சம்மிட்டைமுனிந்துதோழித்திரள்களுந்தானுங்கூடிக்
கும்மட்டங்கிழித்துநீரில்கூவலுட்கோதின்மாதை
யம்மட்டைசிவனுமங்கையங்குலியுறவேபற்றிக்
கம்முட்டித்தள்ளவீழ்ந்தாள்கவின்மலிதெய்வயானை. (௨௧௬)

பாவமுண்மலியவெய்யசம்மிட்டைபயமிலாத
கூவலிற்றள்ளவீழுங்கொடியதிற்கொடியைப்பற்றி
யாவெனவரற்றும்வேலையவனியின்யயாதியென்னுங்
காவலன்மிருகவேட்டையாடுவான்கண்டானன்றே. (௨௧௭)

ஓவியப்பாவையாவியுற்றிடவயங்கிற்றென்னக்
கூவலுட்கொடியைப்பற்றியரற்றியகோதைகையைச்
சேவினிற்றிகழ்வோன்கண்ணினெரிந்திடாச்சீர்வேளேலக்
காவலன்வலக்கைதன்னாற்பற்றியேகணாயின்விட்டான். (௨௧௮)

வலக்கையாலரிவைசெங்கையழுந்துறப்பற்றிவாங்கி
யிலக்கணமிலங்குமன்னன்கூவலின்கூலத்தேற்றிக்
கலக்கமுற்றரற்றுமின்மெய்க்கவினெலாங்கண்டுவாரி
யலைக்குளினமிழ்ந்தமின்போலடைந்தநீயாவளென்றான். (௨௧௯)

ஆசகலரசன்கேட்கவசுரர்கோன்புதல்வியென்றன்
றாசினைப்புனைந்தும்வைதுந்தன்மதியென்னைப்பற்றி
வீசவிக்கூவறன்னின்வீழ்ந்தயான்மெலிவுதேர்ந்தே
னேசகனுசனன்பெற்றநானெனவியம்பலுற்றாள். (௨௨௦)

என்னெழிற்கரத்தைநீயுன்னிலங்கியவலக்கையாலே
மன்னவபற்றலாலென்மகிணனீமணஞ்செய்கென்ன
வின்னவின்மறையோன்பாவைநீயியானிம்பர்வேந்தன்
உன்னையான்புணருநீதியில்லையென்றுரைக்கலுற்றான். (௨௨௧)

அந்தணன்மின்னீமன்றுறுதலான்மணஞ்செய்நீதி
யிந்தமாநிலத்திற்றீதேயென்னினுமுன்னைநல்குந்
தந்தைவந்துதகஞ்செய்யிற்றாரமாய்க்கொள்வனென்று
கந்தநற்றொடையன்மன்னன்கழறிநன்னகரிபுக்கான். (௨௨௨)

அசலமன்னிவைகளெல்லாமறைந்துதன்னகரியேக
வுசனனொண்புதல்வியாங்கோர்வடத்தின்கீழுளைந்துவைக
வசையகல்சுக்கிரன்றன்மகளைப்பாழ்ங்கிணற்றிற்றள்ளி
யசுரர்கோன்புதல்விசெய்தபுள்ளுவமறிந்தானம்மா. (உஉ௩)

மகடனைக்கிணற்றிற்றள்ளும்வஞ்சகிசெயலால்வெள்ளி
மிகமுனிந்தசுரர்கோன்பாலிவையெலாம்வெகுண்டுகூறிச்
சிகியுறுநயனனெஞ்சார்சினத்தினனெழுந்துநின்றே
யிகழ்வுனக்காகவுன்னையொருவுவனென்றுசொன்னான். (உஉ௪)

வெஞ்சினத்துடனும்வெள்ளிவிளம்பவேயசுரர்கோமான்
அஞ்சினனிருகைகூப்பியையநீயகலினுங்கள்
விஞ்சுசிந்துவினில்வீழ்ந்துவீடுவம்வினையேனல்கும்
வஞ்சகிபிழைபொறுத்தியென்றடிவணங்கினானால். (உஉ௫)

வெந்திறலவுணர்கோமான்வணங்கியவ்வெள்ளியோடு
தந்திவல்லூகம்வெம்பூதாரமாவனத்தினுள்ளே
சிந்தைநொந்திருந்ததெய்வயானையைச்சேர்தலோடுந்
தந்தையைத்தழுவியேங்கியிரங்கினாடையலம்மா. (உஉ௬)

தந்தைதன்பதத்தின்வீழ்ந்தேயிரங்கியதையறன்னைச்
சிந்தைநொந்தசுரர்கோமான்வணங்கியென்மகளாஞ்சீரில்
புந்தியளிழைத்தவஞ்சம்பொறுத்தியாலென்றுகூற
இந்துநன்முகத்திதெய்வயானைதானியம்பலுற்றாள். (உஉ௭)

வாதம்வந்தறையக்கூடும்வண்ணமார்துகிலினென்றன்
பீதவம்பரத்தைச்சாத்திப்பெலத்தினாற்கிணற்றிற்றள்ளி
வேதனையுவரிபோலவிளைத்தநின்குமரிதன்னைத்
தாதியாய்த்தருதியாகிற்சார்வனுன்பதியினென்றாள். (உஉ௮)

சிந்தையிற்கனன்றுதேவயானையிவ்வாறுசெப்ப
இந்திரன்பகைஞனவசுரனென்புதல்விதன்னைத்
தந்தனன்றாதியாகச்சாருதிபுரியினென்ன
நந்தொளிர்கரத்திதந்தைதன்னொடுநகரம்புக்காள். (உஉ௯)

உசனனற்புதல்விதன்னோடொளிர்நகரெய்தலோடு
மசுரர்கோன்பரிவினாலேயளித்தசம்மிட்டைதன்னை
வசையின்மான்விழியார்நூற்றுப்பத்துமங்கையர்களோடே
சசிமுகத்தேவயானைதனக்குத்தாதியராயீய்ந்தான். (உ௩0)

தானவர்கோமானீயுஞ்சம்மிட்டைத்தோகைநல்லாள்
மானிவர்விழியார்நூற்றுப்பத்துமங்கையர்களோடு
மீனமேமவியுந்தாதியூழியத்தேவல்செய்ய
ஊனமேயிலாத்தேவயானைதானுவக்குநாளின். (உ௩௧)

பாவமிலுசனன்பாதம்பணிந்தவன்பாவைசொல்வாள்
கூவலில்விழுந்தவென்னைக்குறுகியேவலக்கைதன்னாற்
காவலன்பற்றியென்னையெடுத்திடக்களைந்தானென்ற
னாவியேயனையான்றன்னையணைத்திடவளித்தியென்றாள். (உ௩உ)

உசனன்றன்புதல்விகூறுமுறையினையுள்ளத்தெண்ணிக்
கசனிவண்மறையோர்க்காகாள்காவலர்க்காவாளென்று
சுசியெனமுனிந்துசொல்லுஞ்சாபத்தாற்சூழ்ந்ததென்றே
யசலையாள்யயாதிபாலந்தணர்களையேவினானால். (௨௩௩)

அந்தணரழைக்கவந்தயயாதியாமரசனுக்கு
மந்திரவிதியினாலேமங்கையையுதகஞ்செய்யக்
கந்தரக்குழலிதேவயானைதன்கணவனோடுந்
தந்தையைவணங்கிப்போனாடாதிசம்மிட்டையோடே. (௨௩௪)

வாயுவின்விசையின்முந்தும்வையமேன்மடவார்சூழத்
தூயவத்தேவயானைசம்மிட்டைத்தோகையோடும்
பாயுமாகரிதேர்சூழப்பதிபதிகோயின்மேவி
யாயிரவருடமன்னோடனங்கசாத்திரத்தினாழ்ந்தாள். (௨௩௫)

மாதவொண்டேவயானைதன்னுடனயாதிமன்ன
னாதரவுறவேதோய்ந்தங்கவள்சீற்றுமறியாவண்ணந்
தாதிசம்மிட்டைதன்னைத்தழலின்முன்விவாகஞ்செய்து
போதவிழ்சோலைதன்னுட்கரந்தனுபோகஞ்செய்தான். (௨௩௬)

அசுரர்கோன்மகளோடன்புற்றணைந்திடுமயாதிசெய்கை
யுசனன்றன்புதல்விசற்றுமுணர்ந்திலளன்புவைத்துச்
சசியுயர்கவிகையானசகுலிகேதனன்றனாலி
ணிசையுறத்தழுவித்தோய்ந்துதுருவசுபூருவீன்றாள். (௨௩௭)

முருகவிழ்குழலாள்கோங்கின்முகைநகிற்சம்மிட்டைப்பெண்
பெருகியவன்பினாலேயயாதியையணைத்துப்பெற்ற
துருவசுபூருவென்னுமூவராய்த்துலங்கும்பேறை
யொருகணிலுசனன்பாவைக்கொளித்தவள்வளர்த்தாளன்றே. (௨௩௮)

பெருந்திறலவுணர்கோமான்பெற்றசம்மிட்டைப்பேரா
ளருந்தவவுசனன்பாவையவளியினறியாவண்ணங்
கரந்துதான்வளர்க்குமூன்றுதனயரைக்கண்டுநெஞ்ச
மெரிந்திடுந்தேவயானையயாதியைமுனிந்துசொல்வாள். (௨௩௯)

ஆதரவுடன்யானுன்னையணைக்கவுமன்புநீத்தென்
றாதியைப்புணர்ந்துமூன்றுதனயரையளித்தாயென்று
வேதனைமலியக்கண்ணீர்வெள்ளமொத்திழியவேகித்
தாதையாமுசனன்முன்னர்த்தாழ்ந்தெலாஞ்சாற்றினாளால். (௨௪0)

இருகணீர்கலுழத்தேவயானைவந்திறைஞ்சிநின்றே
யரசவொண்ணயாதிசெய்தபிழையெலாமறைதலோடு
மெரியெனமுனிந்தென்பெண்ணையெள்குமன்னிளமையோவி
நரைதிரைமூப்புவந்தேநலிகவென்றுசனன்சொன்னான். (௨௪௧)

முனிவினாலுசனன்சாபமொழிந்திடவயாதிமன்னன்
குனிவிலின்வளைந்துமூப்புக்குறுகிடநரைவந்தெய்த
மனமெலிந்தசுரராசான்மலரடிவணங்கியென்றன்
வினையகல்வரமீயென்னவெள்ளியங்குரைக்கலுற்றான். (௨௪௨)

மன்னவுன்மைந்தர்தம்மிலொருவனிம்மூப்பைவாங்கி
யின்னலிலிளமையீகிலெழிலுறுபுருடனாய்நீ
யன்னமென்னடையினாரையணைந்துநின்னாசைதீர்த்த
பின்னுன்சேய்க்கிளமையீய்ந்துபெருந்தவமுயனீயென்றான். (உ௪௩)

வேறு.

ஏருறுமுசனன்மொழிந்திடநகரினெய்தியென்சரையினைத்தரித்துச்
சீருறுமிளமைதருகுதியெனவச்சிறுவருக்கரசர்கோனுரைப்ப
வீரியவெதுமன்றுருவசுதுருவோடெழில்வசுமறுத்திடவிளங்கும்
பூருநல்விளமையளித்திடவயாதியழகுறப்பொலிந்தனனன்றே. (உ௪௪)

பூருமன்னிளமையளித்திடவயாதிபொற்புடைச்சம்மிட்டையெழிலார்
பாரியின்றனத்திற்படிந்துவாயமுதம்பருகியேமதனசாத்திரமாம்
வாரியின்வருடமாயிரமழுந்திவெறுத்தபின்மகன்மெயிற்சரையை
நாரியால்வளைந்ததனுவெனத்தரித்துத்தனயனுக்கிளமைநல்கினனால். (உ௪௫)

சீருறுசுதனுக்கிளமையையளித்துச்சிறந்தவொண்மவுலியைக்கவித்துப்
பாரினிலரசாண்டிருத்தியென்றந்தச்சிறுவரைப்பரிவறநோக்கி
யேருறுமகுடமிலாதுநீரிழிவாய்த்திரிதியென்றவர்களைமுனிந்தே
நாரியர்கலவியொழிந்துகானகத்தினயாதிபோய்நற்றவம்புரிந்தான். (உ௪௬)

கதமிகும்யாதிமொழிந்தசொற்படியேகனகநன்மகுடமுமின்றி
யெதுமனன்மரபோர்யாதவரானாரியல்பிலாத்துருவசுக்குலத்தோர்
மதமிகுதுருக்கராயினார்துருவின்வழியினார்போசராயினர்க
ளதன்மமேமலிந்தவசுப்பயந்தவர்தாமிலேச்சர்களாயினரம்மா. (உ௪௭)

தந்தைதன்முனிவான்மகுடமுமின்றித்தனையர்நால்வருமிகழ்வாகக்
கந்தனைநிகர்த்துக்கனகநன்மவுலிகவித்தெழிற்பூருநன்கமல
விந்தையின்கருணைமலிந்திடவவனிவிளங்கவேயிருந்தரசாண்டா
னிந்திரனெனவேபுவியிடையரசர்திறைகொணர்ந்தெங்கணுமிறைஞ்ச. (உ௪௮)

பூருவின்குமரனசனமெய்யவன்றன்புத்திரன்பிரதிமானவன்சே
யேருறும்பிரவீரன்னவன்சுதன்றானிலங்கியநமசியிப்புவியிற்
சீருறுமவன்றன்புதல்வனாயெழுந்தோன்சிறந்தசாரூபனாமரசன்
பாரினிலவன்றன்சிறுவனாயுயர்ந்தோன்பழுதகலுஞ்சுதத்துய்மன். (உ௪௯)

நீதிசேர்குணத்துச்சுதத்துய்மன்புதல்வனிகரிலாவெருகவனவன்சேய்
கோதிலாவயாதியவன்சுதனியாதியவனருட்குமரனாயுயர்ந்தோன்
மாதவமுடையரவுத்திராசுரனாமற்றவன்மகனரிதேயு
பூதலத்தவன்றன்சிறுவனாயெழுந்தான்புலனுறுதத்திரிமன்னே. (உ௫0)

தூயதத்திரிமன்சுதனெனவுயர்ந்தோன்றுலங்குகேதாரியாமரசன்
றீயர்களவியச்செயித்திடுமவன்சேய்சிறந்திடுவலாரியைநிகர்த்தே
காயுமாக்கரிமாக்கவினுறுமிரதங்கடலெனநிறைந்திடவதன்ம
மோயவேதருமம்வளர்த்தவனுலகேழொப்பிலாத்துச்சந்தநிருபன். (உ௫௧)

நீதிமெய்தருமநிறைந்திடவோம்பிநிகரிலாமதனவேள்வடிவாய்ப்
பூதலமிசையின்மடங்கலாதனத்திற்புரந்தரன்போலவீற்றிருந்து
மாதவர்மகிழமலர்மகள்விரும்பமறையவராசிகள்வழங்கத்
தீதறமவுலிபுனைந்துதுச்சந்தன்றிசையெலாம்புகழுறவாண்டான். (உ௫௨)

சிறுவர்தாய்தந்தைதசகோதரரிவரையிகழ்ந்திடுஞ்செனங்களுக்கெல்லாங்
குறைவறவவராயிடரினையகற்றிக்கொழுநனையிழந்தமங்கையர்க்கு
நறுமலரணையிற்புணர்வதையன்றிமற்றெலாநடத்துவனென்றே
பறையறைபுவியினெனவுரைத்தந்தப்படியினிற்புடவியையாண்டான். (உருங)

தூயதாகியதுச்சந்தமன்னிரதந்துரகம்வெங்கரியினஞ்சூழ
வாயுநேர்புரவிமிசையினின்வயங்கிவயவர்கள்வாரிபோல்வளைய
நாயெலாந்துடரவலைகொடேசவரர்நடத்திடப்பழுவத்தினன்னிச்
சீயமானுழுவைகிருடியாவிதங்கள்சினமுதிரெண்கெலாம்வதைத்தான். (உருச)

எண்ணருங்கலைதோனகாயுதமுழுவையெண்குபூதாரமாவிதங்கண்
மண்ணிடைவிழவேவலக்கைவாளதனுல்வஃதத்துயரிவுளிமேல்வயங்கி
விண்ணவர்க்கரசனெனக்கலனணிந்துவிளங்கியதுச்சந்தமன்னன்
கண்ணுவமுனிவனினிதுவீற்றிருக்குங்கடற்றிருச்சிரமத்தைக்கணடான். உருரு

வேறு.

முனிவனுச்சிரமத்தினெய்திமுண்டக
வனிதைநோக்குளமனன்மனையுளாரெனக்
கனிகள்கொய்திடத்தவன்கடற்றினேகவே
தனியளாஞ்சகுந்தலைத்தையரேன்றிருள். (உருசு)

கந்தரம்பிறைநிலைகணையெட்பூவனை
நந்துவண்டிகிரிவன்கோடுநன்குறு
மந்தரம்வடவிலைவயங்கநீர்ச்சுளி
யந்தரஞ்சுமந்தபோலணங்குதோன்றிருள். (உருஎ)

மின்னிடைதுவண்டிடவெறிகள்வீசவம்
பொன்னிழைவயங்கிடப்பொறியுநாணவே
அன்னமுமொதுங்கிடவணுகுமாமயின்
மன்னனைக்கண்டிவன்மதனென்றுன்னிருள். (உருஅ)

நீவியுங்காஞ்சியும்வயங்கநேரிலா
வோவியப்பாவைபோலுற்றமங்கையைக்
காவலன்கண்களிற்கண்டுநெஞ்சிறே
டாவியுநையநீயார்கொலென்றனன். (உருகூ)

வண்ணவெம்பரிமனனறையவாட்கணுள்
கண்ணுவன்மகளியான்கனிகள்கொய்திட
யெண்ணரும்வனத்தவனேகிருனெனுப்
பெண்ணருங்கலமருள்பேசிருளரோ. (உசூ0)

அன்னமென்னடைமிருளறையமன்னவன்
கன்னல்வில்மதனனைக்காயுங்கண்ணுவ
னுன்னையென்றுதவிருனுண்மைகூறுவாய்
மின்னருயென்றிவைவிளம்புவானரோ. (உசூக)

வேதியன்பாவைநீயென்னின்மின்னுன்மேற்
காதலுற்றென்மனங்கலங்குமோவகல்
பூதலத்தரசர்தம்புதல்விநீயெனு
வோதமான்முகிணகையொளிரக்கூறுவாள். (உசூஉ)

அரசநீகேட்டியென்சனனமென்றணங்
குரைசெய்வாளுலெகலாமறைகளோங்கிட

வரிசையார்மடங்கலாசனத்தின்வைகியே
விரைசெய்தார்கவுசிகவேந்தனுண்டனன் (உசுங)

சுரர்கள்கோனுமெனச்சுவர்னபீடத்தி
னிருபனுயாள்கின்றநிகரில்கோசிகன்
மிருகயாத்திரையினைவிரும்பிக்கானிடை
யரிகரிகிரிமரையடங்கச்செற்றனன். (உசுச)

வனமுறுமிருகங்கண்மடியமோதிமன்
வினையகல்வசிட்டனுச்சிரமமேவவம்
முனிவன்வந்தாசிகண்மொழிந்துதேனுவை
யினியநல்லடிசிலையிடுதியென்றனன். (உசுரு)

ஈனமில்வசிட்டனீ துரைப்பவெய்தியத்
தேனுமன்னவனுக்குஞ்சேனைநாதர்க்கு
மூனமிலடிசிலையுதவவுண்டபின்
ஞானமுஞ்சார்ந்தநன்மலருநல்கிற்றே. (உசுசு)

அறுசுவையடிசிலையளித்தங்காரமு
நறுமலருடன்கொடுத்திடுநல்லாவினை
மறுவிலாவசிட்டனைவேண்டமண்ணினுக்
கிறைவயானீகிலனென்றனன்றவன். (உசுஎ)

மையகன்முனிவனீதுரைப்பமன்னவன்
றுய்யநற்பசுவினைத்தொடர்ந்துபற்றவா
மெய்மயிர்சிலிர்த்துதறிடவும்வெஞ்சமர்
செய்யவேசோனகர்சினர்தோன்றினர். (உசுஅ)

தேனுவின்மெய்ம்மயிர்சிலிர்ப்பத்தோன்றிய
சோனகர்ப்பபரர்யவனர்சூலம்வாள்
வானகமறையவேயெறிந்துமன்னர்கோன்
சேனையைச்சின்னபின்னங்கள்செய்தனர். (உசுகூ)

மாசறுசுரபியின்மயிரின்வந்தவ
ரேசறுவசிட்டன்வஞ்சனையினுலெழுந்
தாசறுசேனைசெற்றனர்களாமெனக்
கோசிகன்றனையர்கள்கொதித்துவந்தனர். (உஎ0)

மாயையிங்கியற்றியமுனிவன்மாளவே
காய்வமென்றயில்கொடங்கடரக்கண்டவன்
றீயெழவிழிக்கமன்சிறுவர்மேலழற்
பாயவங்கெரிந்தனர்படியிற்சாம்பராய். (உஎக)

தவன்விழித்தழலினுற்சாம்பராய்விழு
முவமைமில்சிறுவருக்கிரங்கியோங்கல்போல்
இவுளிகொண்டெழுமிரதத்திற்கோசிகன்
சிவனெனமுனிந்துவெங்கணைகள்சிந்தினன். (உஎஉ)

காத்திரமுறக்கவுசிகன்கைவில்லினுற்
கோத்தெதிர்விடுத்தெழுங்கோல்கள்வெங்கன
னேத்திரனஞ்சவேநிறைப்பத்தன்கையின்
வேத்திரந்தனைமுனியெதிரவிட்டனன். (உஎங)

மங்குல்கள்பொழிந்தெனமன்னனேவிடு
மங்கியம்மிறையயனரனருட்படை
வெங்கனன் மடுத்திடமுனிவன்வேத்திர
நுங்கினவவையெலாநொடிப்பின்முன்னரோ. (உஎ௪)

வேறு.

பாவமில்வசிட்டன்கையிற்பாண்டில்வந்தெதிர்த்துநின்று
தேவர்தம்படையையெல்லாம்விழுங்கவுஞ்சிவனைநோக்கிக்
காவலன்றவத்தாற்பெற்றுக்கடாவியகணையைப்பார்த்து
நாவினால்வளைத்துவேதமுனிநுங்கநடுங்கினான்மன். (உஎ௫)

தவர்களுக்குயர்ந்தஞானமன்றியேசமருக்காகாப்
புவியையாளரசர்வென்றிபொருந்தியபுயத்தரென்ப
தவமருந்தவர்க்கேவெற்றியறிதரநிறையுமஃதே
யுவமையில்வசிட்டனாலேயுணர்ந்தனனென்றுசொல்வான். (உஎ௬)

நிலனையாணிருபர்செல்வங்கரிலூவிளமைசெய்யும்
வலனருந்தவத்தாற்பெற்றபடைக்கலமற்றுமெல்லாஞ்
சலவிபியாகிமாண்டுசெமன்கையிற்படுகைதிண்ணம்
புலனையுள்ளடக்கிஞானம்பொருந்தியதவநன்றென்றான். (உஎஎ)

அவனியாள்விபவம்விட்டானரிவையர்கலவிவிட்டா
னிவுளிதேரணிகள்வீரரிபநிறையெல்லாம்விட்டா
னவமெலாமொருவஞானமடையப்பூருவமாந்திக்கின்
பவனமேயுணவாயோகம்புரிந்தனன்படியின்மாதோ. (உஎ௮)

நாசியைப்புதைத்தேயுச்சிநடுவுறமூலவங்கி
வீசயோகத்தனுகவிசும்பெலாமழலாய்ச்சூழ
நாசமாமுலகமென்றுநடுங்கினர்விபுதர்தூய்ய
வாசவன்கவுசிகன்செய்தவமெலாமனத்துட்கொண்டான். (உஎ௯)

வானகமெல்லாமூலவங்கிதான்வளையநின்று
கானகத்தியோகஞ்செய்யுங்கவுசிகன்றவத்தைநீக்க
மானருவிழியளம்பொன்மலைநகுமுலையளாய
மேனகையென்னுமாதையேவினன்விபுதர்கோமான். (உ௮0)

சோமனங்குறைப்பக்காமன்கடிமலர்க்கணைவிற்கொண்டு
சோமனும்வசந்தன்றானுந்துணையதாய்த்தொடர்ந்துசூழ
வீமனுங்குழலிவேலின்விழியண்மேனகையாங்கொம்பு
பூமனுந்திருவுநாணப்புபூமிசைநடந்துவந்தாள். (உ௮௧)

காசணிகுயங்களம்பொற்கலசமாமெனவேவாசக்
கேசமென்மலர்கடுன்னக்கேவிலாக்காஞ்சிமாழைத்
தூசுடனிலங்கமின்னுந்துடியிடைதுவளத்துய்ய
கோசிகன்முன்னர்வந்தாள்கூற்றுக்கவின்கொள்கொம்பு. (உ௮௨)

பரிபுரமரற்றக்கையின்பருமணிக்கடகமின்னச்
சுரிகுழறுவளக்காதிற்றோடுகெடயங்கமானுண்
வரிவிழியிலங்கமுல்லைநகைநிலாவயங்கவாா
மிருதனமிசையினுடைவெழிலுறநடந்துவந்தாள். (உ௮௩)

சுந்தரவடியாலன்னநடையினாற்றுடிமின்னாளு
மந்தரவிடையாலம்பொற்கலசமார்முலையாண்மாண்பார்
நந்தெனுங்கழுத்தால்வேலினாட்டத்தாற்பவளவாயாற்
கந்தரக்குழலாற்றுய்யோன்றவமெலாங்கலங்கவந்தாள். (உஅச)

வருமவளெழிலைநோக்கிமறந்தனனியோகமெல்லா
மெரியுறுதுப்பாமென்னவிதையமுழுருகவாசை
பெருகமாமதனன்வாளிபெய்யவேமதிதனான்மெய்
கருகநற்கவுசிகன்றான்கண்ணிமையாதுநின்றான். (உஅரு)

மன்றலங்குழலினாடன்மார்பினின்வயங்குந்தூசைத்
தென்றல்வந்தலைத்துவீசச்செம்பொனின்கலசநாணக்
குன்றினைநிகர்த்துவிம்முங்குவிமுலைக்கவினைநோக்கித்
தன்றவமழித்துவந்துதழுவினன்றடக்கையார. (உஅசு)

கொங்கையைத்தழுவித்துய்யகுமுதவாயமுதமுண்டு
மங்கைதன்மருங்கிற்காஞ்சிமாழையார்கலிங்கநீக்கிச்
சிங்கலிலாடைதானேசேக்கையாய்மதனநூல்கள்
பொங்கிடக்கலவிசெய்தான்காமத்தால்யோகம்போக. (உஅஎ)

ஆயிரவருடம்பாயலகல்கிலனாகிமங்கை
ஆயமென்முலையிற்றோய்ந்துசுரதநூல்விளைக்கலோடும்
வேயெனவயங்குதோளாண்மேனகைகருப்பந்தாங்கி
மாயிரும்புவியினீன்றாண்மகளதாங்குழவிமாதோ. (உஅஅ)

கானகந்தனிற்றனைப்புணர்ந்திடுங்கவுசிகற்கு
மேனகைபயந்தசெய்யகுழவியாமினைக்காட்ட
வானகத்தரசன்செய்தவஞ்சமென்றறிந்துதூயோன்
றேனகுமொழியினாளைமுனிந்துதென்றிசையினுற்றான். (உஅகூ)

வேறு.

கவுசிகன்றென்றிசையேகக்காரிகை
யவனியிற்றான்பெறுமணங்கைவைத்தவ
ளுவமையில்விபுதர்கோன்பதியையுற்றிடப்
புவியிடையழுதப்பொலன்கொணற்சிசு. (உகூ0)

தந்தைதாயின்றியேதரையின்வைகிய
வந்தமன்குழவிதானழுதுவிம்மலுங்
கந்தமார்மலர்ப்பொழிற்ககங்கள்பார்ப்புடன்
வந்துதஞ்சிறையினான்மறைத்தணைத்தன. (உகூக)

அலரியின்வெயிலினாலடர்ந்துபெய்ம்முகிற்
சலம்விடுதாரையாற்றளர்தலின்றியே
நலமுறுஞ்சிறையினான்மறைத்துநாரம்வீழ்
மலையுறுபிரசந்தம்வாய்கொடுய்ந்தன. (உகூஉ)

எண்ணருங்ககக்குலமிரண்டுபோழ்தினு
மண்மிசைக்குழவியைவளர்க்குநாடனிற்
கண்ணுவமுனிவனங்கெய்திக்கண்டுதன்
னுண்ணலக்களிப்பினான்மகளென்றோம்பினான். (உகூங)

மறுவிலாக்குழவியைவளர்த்தவெண்ணிலாப்
பறவைபேர்சகுந்தமென்றுரைபகர்ந்திடு
முறைமையாற்கண்ணுவமுனிவன்பெண்பெயர்
குறைவிலாச்சகுந்தலையென்றுகூறினான். (உகூச)

கானிடைக்கவுசிகன்கலந்தணைக்கவே
மீனகுவிழியண்மேனகைபயந்திட
வூனமில்ககக்குலங்காப்பவொண்முனி
தான்வளர்த்திடுஞ்சகுந்தலையென்பேரென்றாள். (உகூரு)

பின்னருஞ்சகுந்தலைபேசுவாளுயர்
மன்னவவுன்பெயரேதுவைகிடு
நன்னகர்தானெதுநவில்கநீயென
மின்னனாள்விளம்பவவ்வேந்தன்கூறுவான். (உகூசா)

வேறு.

இந்துத்தருபுதனின்மரபுளின்வந்தவனெனதூர்
தந்திக்கடணிறையும்பிரதிட்டானவண்பதிதண்
சந்திற்படிதனத்தாய்பெயர்துச்சந்தமனென்றன்
சிந்தைப்படிமயறீர்க்குதியெனமாதிவைசெப்பும். (உகூஎ)

கந்தங்கனித்திரளேகொடுகெடிதின்வருமெந்தை
தந்தின்புரினான்மார்புறவணைப்பேனெனச்சாற்ற
வுந்தைவரத்தாழ்க்குமெனதுயிர்போமுனந்தழுவிச்
சிந்தைத்துணிதீர்ப்பாயெனத்திகழ்மாதிவையறைவாள். (உகூஅ)

ஓமக்கனன்முனரென்கழுத்தொளிர்நாணிதரித்துத்
தாமப்புயத்தணைப்பாயெனத்துச்சந்தன்சம்மதித்தே
வாமத்திரளெழுவேதியர்சொலுமந்திரப்படியின்
காமற்கவிடேகப்பெண்ணைமணந்தான்களிப்புறவே. (உகூகூ)

இருவோருடலொருமெய்யெனவணைத்தெண்புளினிசையுந்
தரவேல்விழிசிவப்பக்கலையொருவப்பதந்தனிலார்
பரிநூபுரமரற்றக்கரவளைபம்பமதுவென
வருவோர்வுகல்வதனத்துறமதநூலினைவிளைத்தார். (௩00)

தந்தக்குறியதரத்துறத்தனமேனகக்குறியு
முந்தக்குழலலையத்தொடைவிழச்சொன்மொழிபதறச்
சிந்தைக்களிப்புறவேயணைத்திருவோர்களுஞ்சிறந்து
கந்தக்கடுங்கோலெய்மதநூலின்கரைகண்டார். (௩0க)

அனுராகவன்கடல்வீழ்ந்தெழுமிருவோருமன்புறமா
மனனீயிருமாதேநகரடைவேனெனமடமா
னுனைநான்பிரிந்துயிர்வாழ்கிலனெனவாண்டொளிர்நயனப்
புனறுரைகண்முலைமேற்குதிகொளவேபொருமினளால். (௩0உ)

தன்னாருயிரனையாடுயர்கண்டேதலவரசன்
மின்னேபுரியடைந்தேயுனையென்பாலினின்மேவப்
பொன்னார்வுறுமிரதம்வரவிடுவேனெனப்புகன்று
நன்னாரிதனயனப்புனறுடைத்தேநகரடைந்தான். (௩0௩)

வேறு

மன்னவன்மணந்துதன்னைத்தழுவியேயொருவமாது
துன்னியவறிவினோடுபெரிவுறத்துளங்கியேதான்
சன்னன்முத்துதிர்ப்பதொத்துக்கண்ணினீர்ததும்பிநிற்க
வன்னமென்னடையாண்முன்னர்க்கண்ணுவனணுகினால். (௬௦௪)

கனியுடன்கந்தங்கொண்டுகண்ணுவனெய்தலோடும்
வனிதைபொற்சிரகநீரான்மலர்ப்பதம்விளக்கிநாணி
முனிவதனத்தைநோக்காண்மொழிகிலாதருகுநிற்ப
வினையறுதவத்தோன்மின்னையணைத்திவைவிளம்பலுற்றான். (௬௦௫)

வனிதைநீநாணிநின்றசெயலெனவனத்தினெய்தி
யுனைமணந்தவன்றான்யாவனுரைத்தியென்றோதமாது
தனைநிகரிலாதசோமன்குலத்துத்துச்சந்தமன்ன
னெனைமணந்தணைத்துப்போனானென்றனள்வெள்கிவெள்கி. (௬௦௬)

அன்னமென்னடையாள்கூறவருந்தவன்மகிட்சியெய்தி
மன்னவர்திலகனானதுச்சந்தன்மணந்தான்செய்ய
வென்னமாதவஞ்செய்தாயுன்னுதரத்தினெழில்கொண்டோங்கித்
தன்னிகரிலாதவண்மைத்தனயன்வந்திடுவனென்றான். (௬௦௭)

அருந்தவன்மகிழ்வினோடுமருளவேமனத்துட்கொண்டு
கருந்தடங்கண்ணியின்பம்பெருகிடக்கழிக்குநாளிற்
பெருந்தவப்பலத்தினாலேபெலனுறுகருப்பங்கற்புத்
திருந்துமின்னுதரத்தின்கண்சிறந்திடநிறைந்ததன்றே. (௬௦௮)

மருடனையொருவிவையம்புரக்குந்தன்மகிணனானை
புருடன்மாநகரந்தன்னிற்போந்தபின்பெறுவனென்று
வருடமூன்றுதரத்துள்ளேமகவினைப்பரித்தலோடு
மருடருமுனிவன்மங்கைகருத்தறிந்தறையலுற்றான். (௬௦௯)

மாதுநின்மகிணன்பாற்போய்மகவினைப்பெறுவனென்று
வேதனையுடன்மூவாண்டுபரிப்பதுவிழுமிதன்றா
லேதமிலுயர்ந்தநாளிலீன்றிடுமகவையென்னத்
தாதைசொற்படியேபெற்றாள்சகுந்தலைமதலைதன்னை. (௬௧௦)

ஐந்துகோளுச்சமாகவமரர்கண்மலர்கடூவ
மைந்தனைப்பெற்றுமங்கைமகிழ்தலுமுனிவனெய்திச்
சிந்தையின்மகிழ்வினோடுஞ்சாதகவோமஞ்செய்தே
யந்தணருடனுமாசிபகர்ந்தினிதிருந்தானம்மா. (௬௧௧)

உவமையின்மதலைமெல்லத்தவழ்ந்துபின்னடந்தேயோங்கச்
சவுளமுநடத்தித்துய்யதவனுபநயனஞ்செய்து
பவமறுபுராண்வேதசாத்திரம்பலவுங்கற்பித்
தவனியினிடர்கடீரவளர்த்தின்பமடைந்தானன்றே. (௬௧௨)

வேறு.

உவமையில்குமரனாகியேவருடமொன்பதோடேழுறப்பலத்தாற்
பவமலிநிருதரசுரரைப்பிசைந்துபகடுபெஞ்சானனமுழுவை
யிவையெலாங்கரத்தாற்புடைத்துடலொடித்தவெதிரிலாதவன்றனைநோக்கித்
தவருளங்களித்தங்கிவன்பெயர்சருவதமனனென்றுரைத்தனர்மன்னோ. (௬௧௩)

வரிவில்வலத்தாற்பெலத்திறற்குணத்தான்மண்ணினினிகரிலாக்குமர
னரன்விழிக்கனலாலெரிந்திடாமதனுமிழிவுறுமழகமைந்திடவே
சரியிலாக்கொழுநன்கலவியைநினைந்துசகுந்தலைதளர்ந்தவளுடலங்
கருகியசெயலைக்கண்ணுவமுனிவன்கண்டிவைகழறலுற்றனனால். (௩௧௪)

மங்கைநின்மகிணனுறையுமாபுரத்தின்மகனொடுமடைகுதியென்று
சிங்கலின்முனிவன்மொழிந்திடவிறைஞ்சிச்சகுந்தலைசிறுவன்றனுடனே
பொங்கியமகிழ்வாலருந்தவர்சூழப்புவியினிடந்துகான்கடந்து
வெங்கயம்பரிதேர்நிறைந்திடும்பிரதிட்டானமாநகரின்மேயினளால். (௩௧௫)

புரியிடையடைந்துவயங்குமாதவனைப்போழினாச்சிரமத்தினென்றே
யரிகொளாசனத்தினமரர்கோனிகராயமர்ந்ததுச்சந்தமன்னவனைச்
சரியிலாமகனோடிறைஞ்சியாண்டெழுந்தசகுந்தலைதறியினைச்சார்ந்தே
யிருகணுங்கொழுநன்புயத்தழுந்துறத்தானிமைக்கிலளாகினின்றனளால். (௩௧௬)

இரதியிந்திராணியரம்பைமேனகையோடுருப்பசியிவரொலாநாணத்
தரளமாவடங்கடனமிசையசையத்தமனியக்கொம்பெனச்சாரு
மருவலர்வெருவுஞ்சிறுவனோடடைந்தமின்னினைத்துச்சந்தமன்ன
னிருகணானோக்கியவையுளெய்தியநீயெவளெனச்சகுந்தலையியம்பும். (௩௧௭)

அரசநீவனத்தினடைந்துகண்ணுவனாச்சிரமத்தினணுகியேயென்மேல்
விரகமுற்றுயர்நான்மறைவிதிப்படியால்வேட்டெனையணைக்கயான்பயந்த
திருமகனிவனைமவுலியைக்கவித்துசெம்பொனாசனத்திடையிருத்தித்
தரணியைக்கொடுத்தியெனச்சகுந்தலைமின்சாற்றமன்னகைத்திவைமொழிவான்.

யான்வனத்திடையேயெய்தியேயணைக்கவெனக்குநீபயந்திடும்புதல்வன்
றானிவனெனவேயசத்தியமொழிந்துதரணியைவிடுகுதியென்று
மீனமுண்மலியும்பொதுமடந்தையர்போலியம்பினைதந்தைதாயுனக்கார்
நீநவிலெனவாண்டரசர்கோன்கழறநிகரிலாச்சகுந்தலையுரைப்பாள். (௩௧௯

கானகத்திடையிற்கவுசிகமுனியையணைந்திடுங்கவினுறுமணங்கா
மேனகைபயந்தபுதல்வியானிவைகள்விளம்பிடமணந்தெனையணைத்த
நீநகைத்திவணினசத்தியமுரைத்தாய்நிருபநீயளித்திடும்புதல்வன்
றானொருவுவனேமவுலியைக்கவித்துத்தரணியைக்கொடுத்திடென்றுரைத்தாள்.

சுதைதருமொழியாள்விளம்பிடக்கேட்டுத்துச்சந்தன்றவத்தினையொழிந்து
மதியறுமுனிவன்விரகமுற்றிடத்தான்மயக்கியேயணைத்தமேனகையாம்
பொதுமகள்பயந்தபுதல்வியானதினாற்பொய்விளம்பினையெனப்புகன்று
கதுமெனக்கரங்கொடறைந்துறநகைக்கக்காரிகைகண்சிவந்துரைப்பாள். (௩௨௧)

என்னைநீயிழிவாங்குலத்தியென்றுரைத்தாயிந்துவின்சுதன்புதனளித்த
மன்னனையணைந்தேயுருப்பசியுதவுமகன்வழிவருமயாதிக்குத்
தன்னிகரில்லாவுசனனொண்மகடன்றுதிசம்மிட்டைதான்பெறவே
யின்னிலத்துயர்ந்தோன்மரபினில்வந்தாயெனையிகழ்ந்தனையெனநகைத்தாள். ()

ஆரிவையர்திலகநகைத்திவைமொழியவரசர்கோனதற்கிழிவறைந்து
தெரிவையையுனக்கன்பானவரிடத்திற்சிறுவனோடேகெனும்வேலை
சுரரொடுமுனிவர்நிலத்தினிற்றோன்றித்துச்சந்தமன்னனைநோக்கிச்
சரியிலாவடமீனிகர்சகுந்தலையைச்சாற்றலையெள்கலென்றுரைப்பார். (௩௨௩)

காவலர்திலகநீவனத்தெய்திக்கண்ணுவமுனிவனாச்சிரம
மேவியிவ்வணங்கைக்கண்டுதான்களித்துவிரகமுற்றனவின்முன்வேட்டா
யாவியுமுடலும்பொருந்தியபோலவளியுடனணைத்தநின்னெழிலார்
தேவியையிகழேலிவள்பயந்திடுமிச்செல்வனின்சிறுவனுமென்றார். (௯௨௪)

சாரரொடுமுனிவர்திரளினைவிளம்பத்துச்சந்தமன்னவனுரைப்பான்
மிருகயாத்திரையைவிரும்பியான்வனத்தின்மேவியேயிவடனையணுகிப்
பெருகியகளிப்பான்மணந்தியானணைந்துபிரிந்தென்னூரடைந்ததுமுளதே
யிருநிலத்தவர்கள்பழித்திகழுவதொன்றதற்கியான்வெள்கினனென்றான். (௯௨௫)

நெறியுறுநிருபனிவையெலாநிகழ்த்தநெடுந்தவர்மன்னனைநோக்கி
மறுவினின்மனைவியருந்ததிக்கற்பாண்மதனனெனவடிவினற்குணத்தாற்
குறைவிலுன்குமரனிவனாநீயெள்கேலென்றவரறைந்திடக்கோமான்
சிறுவனைத்தழுவிமவுலியைக்கவித்துச்செம்பொனாசனத்திடைவைத்தான். ()

சுருதியையறையுமறையவர்விதிப்பத்துச்சந்தன்சுதன்றனக்குயர்பேர்
பரதனென்றுரைத்துப்பரிவுடன்மவுலிகவித்துப்பாரரசெலாமீந்தே
யிரதியையணையுமதனனுநாணவெழிலுடைச்சகுந்தலையுடனற்
சுரதநூல்வழுவாதவளிணைநகிலிற்றோய்ந்துபல்லாண்டினிதிருந்தான். (௯௨௭)

வேறு.

கோசிகன்னருள்குமரியோடெழில்கொடுச்சந்தன்
வாசமும்புதுமலரும்போலாயிரவருட
மாசைமல்கிடவணைந்தபின்னறிவுவந்துறவே
யேசின்மாதவம்புரியவேவனத்தினேகினனால். (௯௨௮)

விரதமாதவம்வெஃகியேதுச்சந்தனைகச்
சுருதிநூனெறித்துணையதாய்ப்புவியினையாளும்
பரதமன்னவன்மரபினிற்பருதிபோலெழுந்தா
னிரதிகொண்கனைநிகர்த்திடுமத்திநேரிலாதான். (௯௨௯)

அத்திமன்னவனருணெறியறன்மறைதழைப்ப
வத்திவெம்பரியம்பொனினிரதமாரணிகம்
அத்தியென்னவேநிறைந்திடவரியணைமிசையி
னத்திநன்னகர்தன்பெயராலமைத்தமர்ந்தான். (௯௩௦)

சரியிலத்திமன்மரபினில்வந்தவன்றரணி
யரசர்தங்களையாயுதம்பயிற்றுவித்தமையாற்
குருவெனப்பெயரறைந்திடக்குருகுலமெனவே
யுரைசெயக்குருக்கேத்திரம்படைத்தினிதுவந்தான். (௯௩௧)

காமனேரெனக்களித்துலகாண்டுயர்கவிகை
சோமனென்னவேதுலங்கிடவயங்கியகுருவா
நாமமன்னவன்மரபினினலனுறச்சனித்தான்
வீமசேனமன்விறலுடைவிடையவனெனவே. (௯௩௨)

அத்திமாநகரழகுறவரசுசெய்வீமன்
புத்திரன்பிரதீபனும்பொறையுடையரசன்
சுத்தரெண்மறைச்சொல்வழுவாநெறித்துணையாய்ச்
சித்தசன்னெனச்சிங்கவாதனத்தமர்நாளின். (௯௩௩)

மனுவின்மைந்தனாமிக்குவாகுப்பெறுமன்னன்
றுனியகற்றியமகாபிடாக்கறநெறிதுலங்க
வினியசொல்லினாலிலங்குசெங்கோலினையோச்சி
வினையறுத்தயமேதமாயிரம்புரிந்தனனால். (௯௯௪)

ஆரகமேதமாயிரமுடித்ததிதிதன்சுதனோ
டரியினாசனத்தழகுறவமர்மகாபிடாக்குக்
கரியையூருவோன்முதலினோர்களித்துவந்தேத்த
விரைசெய்மாமலர்த்தவனமரவையின்மேவிடவே. (௯௯௫)

வேதன்வானதிமடந்தையைவியந்துறநோக்கித்
தீதினுற்றமாபாதகமியாவையுந்தீர்க்குங்
கோதையாளிவடனக்குநேரிலையெனக்கூற
மாதுபங்கனார்வேணியின்மருவுவாள்மகிழ்ந்தாள். (௯௯௬)

மலர்மணிம்மொழியறையமந்தாகினியெனைப்போ
னலனையுற்றவரிலையெனும்பாடலநண்ணக்
கலைமின்மங்கைதன்னாயகன்பணியினாற்கங்கை
முலையினிற்றுகிலொருவிடமோதினன்பவனன். (௯௯௭)

சரியில்வானதிமடந்தைதன்றனத்தினைவிரும்பி
யிரவிதன்குலமகாபிடாக்கிருகணானோக்க
மரைமலர்த்தவனுணர்ந்துநீர்மண்மிசைச்சனித்தே
சுரதநூலினைவிளைத்திடுவீரெனச்சொன்னான். (௯௯௮)

கந்தநாண்மலர்க்கடவுளிவ்வுரையினைக்கழறச்
சிந்தைநொந்துமாபிடாக்குமன்செய்தவஞ்சிதையச்
சுந்தரஞ்செறியும்பிரதீபனற்சுதனாய்ச்
சந்திரன்குலத்துதித்தனன்சந்தனுவாகி. (௯௯௯)

தனையனாகியசந்தனுத்தரணியாண்டிடவே
வினையறும்பிரதீபன்மாவனத்திடைமேவி
யனிலமேயுணவாயருந்தவஞ்செயுநாளிற்
றுனியகற்றிடுஞ்சுரநதிதோகையாய்வந்தாள். (௯௬௦)

சீருறத்தவஞ்செய்பிரதீபன்றெக்கணத்தி
னூருவின்னுருப்பசியெனவொளிரவேயிருந்துன்
பாரியாமென்றன்பயோதரத்தணைத்தியென்றுரைப்ப
நாரிதன்னையேநோக்கிமன்னவிலனுற்றனனால். (௯௬௧)

வாமவூருவிலிருந்தவண்மனைவியாமென்றுந்
தோமிலாவலத்துடையிடையிருந்தவள்சுதனுக்
காமெனச்சொலுமாரணமாதலினுனக்கு
மாமன்யானெனவுரைத்தலுமறைந்துபோயினளால். (௯௬௨)

துடையின்வைகியசுந்தரிமறைந்துபோயிடவே
யடவியெய்தியவருள்செறியும்பிரதீபன்
கடகரித்திரள்குரகதங்கவினுறுமிரதம்
படியிடைந்திமெத்திமாபதியினிற்சேர்ந்தான். (௯௬௩)

பதியினெய்திநற்பண்புடைச்சந்தனுப்பெய[illegible]த்
சுதனைநோக்கியேசொல்லுவான்சுரநதிபடியின்
மதியெனத்திகழ்வதனியாய்வருவனையவளைக்
கதுமெனக்கலந்தணைத்தியென்றகன்றனன்காணின். (கூசச)

தந்தையிம்மொழியறைந்துகான்சாரச்சந்தனுமன்
சிந்தையின்மகிழ்வெய்திடச்சிறந்தமர்நாளிற்
றந்திரத்துடன்சானவிநதியினிற்சார
விந்தையேலவேபகீரதிமேவிமுன்னின்றாள். (கூசரு)

அன்னமென்னடையந்தரநுசுப்பிருகொங்கை
பொன்னவிர்க்கலசங்கவினொண்கிரீவநற்பூகங்
கன்னறோள்சிலைநுதல்விழிகணைகுமிழ்நாசி
துன்னுமைமுகிற்குழலெனக்கொண்டுதோன்றினளால். (கூசசா)

வந்துதோன்றியமடந்தைதன்வடிவினைநோக்கிச்
சந்தனுப்பொருமதனன்சாயகத்தினுற்றளர்ந்தே
யிந்துவெள்கிடுவதனியேயென்றனுருயிருஞ்
சிந்தையுந்திறைகொண்டநீதேவியாகென்றான். (கூசஎ)

தீங்கறுங்குணச்சந்தனுச்செப்பவானதிமான்
பாங்கிலாதமாபாவம்யான்செய்கினும்பரிவே
யோங்கவென்னைநீயணைத்தியேலமர்வனதோவி
னீங்குவேனெனநிகழ்த்தினள்கிஞ்சுகமெனவே. (கூசஅ)

கோதையிம்மொழியறைந்திடக்குற்றமிலரசன்
பாதகங்களாங்கொலைத்தொழினீபலசெயினு
மேதமென்றுனையிகழ்கிலனிகழ்ந்திடேனென்
றோதவானதியுளமகிழ்ந்தவனையுற்றணைந்தாள். (கூருகூ)

தத்தைநாணவேமொழிந்திடுசானவிதன்னோ
டத்திமாநகரடைந்துமன்னலர்மலரணையிற்
சித்தசன்னுடனிரதிமன்வெள்கிடச்சேர்ந்து
வித்தகத்துடன்சுரதநூற்கலவியைவிளைத்தான். (கூரு0)

வேறு.

சந்தனுமன்னன்றோளிற்சாநவிமடந்தைதோய்ந்து
மைந்தர்களேழுபேரைப்பெறப்பெறமண்ணினோடிச்
சிந்துவையதிரத்தாக்கிச்செல்லும்வானதியிற்போட
வெந்தசிந்தையனுமொன்றும்விளம்பிடாதிருந்தானன்றே. (கூருக)

பின்னருங்கங்கைமாதுபெற்றிடுமைந்தன்றன்னைத்
தன்னிருகரத்தினேந்திச்சாநவிநதியிற்போடு
முன்னமன்றடுத்துமைந்தெழுவரைக்கொன்றமூர்க்கை
யின்னமிச்சிசுவைக்கொல்லேலென்றுகண்சிவந்தானன்றே. (கூருஉ)

தனையரைக்கொன்றபாவியென்றுமன்சாற்றமங்கை
யெனைமனுவிகட்சிசெப்பேலெண்டிசைவசுக்களெல்லா
முனிவனுங்கறைந்தசாபமுடுகவென்னகட்டிற்றோன்றிப்
புனலினுண்மடிந்தவண்ணங்கேளெனப்புகலலுற்றாள். (கூருங)

சுகமுனிபிதாவின்றந்தைபிதாமகன்றொருவின்பாலை
நுகருவோர்வருடநூறாயிரமெழிவிளமையுற்றுச்
செகதலத்தமர்வவொன்பதுணர்ந்தெட்டாம்வசுத்தன்றேவி
பகரொணாப்பெருமையாவைத்தருகெனப்பதிக்குச்சொன்னாள். (௯௫௪)

வனிதையீதுரைப்பக்கேட்டுவசிட்டனாவினைத்தான்பற்றித்
தனைநிகரற்றவேழுவசுக்களுந்தானுமேக
முனிவனீதறிந்தேயட்டவசுக்களைமுனிந்துமண்மேற்
றுனியுறச்சனிப்பீரொன்றுசபித்தனன்சுசிபோற்சீறி. (௯௫௫)

சீருறுவசிட்டன்கூறத்திகைத்தெட்டுவசுக்களஞ்சி
நேரிலாமுனியேயெம்மைக்காவெனநிறைநூல்வல்லோன்
ஏருறுமெழுவர்நீவிர்பிறந்தன்றேயிறப்பீராக்கொள்
பூரியனாரியின்றிப்புவியிடையுழல்வனென்றான். (௯௫௬)

தவமுனிவெகுண்டுகூறுஞ்சாபத்தாலேழுபேரு
மவனியிலுனக்குமக்களாகியென்வயிற்றிற்றோன்றிப்
புவியின்வானதியின்வீழ்க்கப்பொன்றினாராவைப்பற்று
மிவனெடுங்காலமண்ணினிருப்பனென்றியம்புவாளால். (௯௫௭)

மலரயன்சாபத்தாலேமன்னனின்றேவியானே
னலனுறுகங்கையாவேனென்சொனீமறுக்கையாலே
நிலனையாணிருபநின்னைநீங்குவன்சிறுவன்றன்னைப்
பொலனுறவளர்த்தேயீவனென்றுசேயோடும்போனாள். (௯௫௮)

தனையனைக்கரத்தினேந்திச்சாநவிமறைதலோடுந்
துனியுறவெதும்பிநைந்துஞ்சுதனொடுதேவிதன்னை
நினையுமோய்ந்திருக்கும்வீழுநிருபனாகுலத்தையெய்த
வனைவருந்தழுவித்தேற்றவறிவுவந்திருந்தானம்மா. (௯௫௯)

ஈனமிலரசர்கோமானிடர்க்கடன்மூழ்கவேகிச்
சானவிதனையன்றன்னைச்சுரர்குருதன்னால்வேத
மூனமில்புராணமெல்லாமோதுவித்தெழில்கொண்டோங்கு
மானையானனன்பினோன்போலழகுறவளர்த்தாளன்றே. (௯௬0)

அரசர்களெழுமூன்றானதலைமுறையடங்கச்செற்ற
பரசுராமன்றனாலேபல்படைபயிற்றுவித்து
வரிசையார்குமரனாகவளர்த்துமந்தாகினிப்பெண்
கணாசெயாக்களிப்பினோடுங்கவினுறவளருநாளின். (௯௬௧)

சந்தனுத்தந்திகுழத்தமணியத்தேரிலேறி
யிந்திரனெழிலைப்போலேயிலங்குவானதியைச்சேரச்
சுந்தரக்கங்கைமைந்தன்றூயவில்வளைத்தம்பாலே
சிந்துவையதிரத்தாக்குஞ்செலத்தினையடைத்தான்மன்னோ. (௯௬௨)

தளையினிற்கடிதினோடுஞ்சாநவிதனையம்பாலே
விளைவினிலடைத்துநின்றவீரன்வில்விநோதநோக்கி
யரசர்கோன்வியப்பினாலவ்வாடவர்திலகனொன்
றுணைசெயுமுன்னமந்தாகினிவந்தேயோதலுற்றாள். (௯௬௩)

அத்திரமதனுலோமயத்திணையடைத்துநின்ற
வித்தகனிவன்யானீன்றவீரியனுன்றன்மைந்த
னத்தினபுரியையாளுமரசவுன்றேவியாகி
யித்தலத்தமர்ந்தேனென்பேர்கங்கையென்றியம்பினாளால். (௧௬௪)

சந்தனுமன்னவுன்றன்றனையன்பேரறங்கண்மேவுஞ்
சிந்தையன்றுய்யதேவவிரதனென்றறியச்செப்பி
யந்தரநதிப்பெண்ணீருண்மறைதலுமரசர்கோன்றன்
மைந்தனோடேகியத்திவளநகர்வாழுநாளில். (௧௬௫)

உத்தரதேசந்தன்னிலரசரிலொப்பிலாதான்
சித்தசன்வெள்குங்காமப்பிரியன்செல்லூருவோனை
யொத்தியாகவத்தின்வெல்லுமொன்னலரசுரர்சாய
வத்திரவருடமெங்கும்பொழிந்தமர்வென்றானன்றே. (௧௬௬)

அவுணரைவென்றகாமப்பிரியனையனைத்தியென்றே
யுவமையில்வலாரிகூறவுருப்பசிமறுக்கச்சீறிப்
புவியுள்வானதியின்மீனாய்ப்புகுந்தரீதிரிதியென்று
நவிலமாறுடையின்வந்தாள்வகுலியாய்நாரத்துற்றாள். (௧௬௭)

சூரர்பதிசாபத்தாலேதூயவானதியின்மீனா
யுருவசிதிரியுநாளிலுபரிசவசுவாமன்ன
னிரதமீதேறிக்கானின்முனிவராச்சிரமத்தேகிக்
கரிபரியிரதஞ்சூழக்கவினுறவிருக்குங்காலை. (௧௬௮)

கிரிகையாந்தேவிதன்மேற்கிளர்ந்திடுங்காமத்தான்மன்
னுருகியவிதயனாகவொழுகும்வீரியஞ்சிந்தாம
லரியுறுமடலினேற்றோரரியையென்றேவிக்கியென்
றுரைசெயத்தத்தைவாயாற்கவ்வியங்கோடிற்றன்றே. (௧௬௯)

வன்னிவானேகக்கண்டுவெருங்கங்கமறைதலோடும்
பொன்னவிர்மடலைக்கங்கைப்புனலினிற்கிள்ளைபோட
வின்னலிலரிவையானவடிவோர்மீயிருந்தமீன்றான்
மன்னன்வீரியஞ்சிந்தாமல்வாயுறவிழுங்கிற்றன்றே. (௧௭0)

உருப்பசிவடிவையோவியொளிருமீன்மடலைக்கவ்வி
விருப்பமுற்றேகுங்கிள்ளைவெருவியேவீழ்ப்பநீரின்
பரப்புவீரியங்குன்றாமற்பதறித்தான்விழுங்கலோடுங்
கருப்பமுற்றிடவேகங்கைக்கரையருகடைந்ததன்றே. (௧௭௧)

கரையருகாகத்துள்ளிக்கதித்தெழுவகுலிதன்னைப்
பரதர்தம்வலையிற்பற்றிப்பருப்பதம்போலத்தாங்கி
வரிசையின்றமக்குக்கோனாமகிழுஞ்சத்திரவாமுன்னர்த்
தரையினில்வைத்தலோடுஞ்சாலவும்வியந்தானன்றே. (௧௭௨)

வரையெனக்கிடந்தமீனின்வயிற்றினைவகிர்தலோடு
மரிவையர்திலகியானசிசுவுடனரன்றன்சீற்றத்
தெரிகிலாமதனன்போலவிலங்கியமகவுந்தோன்ற
விருகையாலெடுத்துநோக்கித்திமிலர்கோனின்புற்றானால், (௧௭௩)

சலசரவயிற்றிற்றோன்றுஞ்சரியிலாவாணும்பெண்ணும்
வலையர்கோன்மனைவிகையிலளித்திடவளருநாளி
னிலனையாள்வசுமனெய்திநிகரிலச்சேயைக்கொண்டே
நலனுறமறையோரோமாடத்தநற்சுதனைக்கொண்டான். (கஎச)

வசுமனன்மதலைதன்னைமச்சியவரசனாக
விசையவேமெளவிருட்டியினிதுறத்திமிலர்கோமான்
வலசயிலாச்சிறுவிதன்னைவளர்த்திடமடந்தையாக
விசையநீரோடுநாவாய்விடுத்தியென் றுரைத்தானன்றே. (கஎரு)

தந்தையாம்பரதர்கோமான்சாற்றவேநாவாய்தன்னை
யிந்துவினுதலிகோல்கொண்டிடைஞ்ஞூற்றுவரையேற்றி
நந்தொளிர்கரத்தினாலேநடத்தியேவாழுநாளில்
வந்தனன்விபுதரோத்தும்பராசரமுனிவன்மாதோ. (கஎசு)

பராசரமுனிவனெய்திப்பாவைதன்னெழிலைநோக்கிச்
சரோருகமுகையோகொங்கைதரளமோதசனமல்கு
லராவினற்படமோசெவ்வாயாம்பலோவனங்கன்வாழ்வோ
விராசதப்பெண்ணோவென்முனின்றவளென்றுரைந்தான். (கஎஎ)

வலையர்கோன்மடந்தைகண்ணும்வலதனைவளைத்துக்கொள்ளப்
புலனவளிடத்திலெய்தப்பொருமதன்றடக்கையிக்குச்
சிலையினாற்பொழியும்பூவின்சிலீமுகஞ்சிந்தைதன்னை
நலியவேமுனிவன்செய்வதறிகிலானவிலலுற்றான். (கஎஅ)

மங்கைநீயென்னைநாவாய்தன்னிலேயேற்றிமாறில்
கங்கைநீர்கடந்துபோகவிடுதியோகழறுங்கூலி
யங்கையாலளிப்பேனன்னவாயிரம்பேர்களேறு
திங்குநீமுனிவனேகனேகரிதென்றுசொன்னாள். (கஎகூ)

ஒருவனாயிரம்பேர்ப்பாரமுறுவன்யானென்றேயோத
விருபதிற்றைம்பதாம்பேர்ப்பாரமாயிருப்பதெங்ங
னுரைசெய்நீயதுசெய்தாலுமோமெம்பிக்குக்கூலி
தருதியோவென்றுமங்கைதடக்கையைக்கொட்டிநக்காள். (கஅ0)

அங்கையோடங்கைதாக்கியரிவைவெண்முறுவல்செய்தே
யிங்குநீயிலம்பாடுற்றாய்வெறிகொடென்சொன்னாயென்ன
வங்கமீதிடையினேறிவருஞ்சதபத்துப்பேர்க்குத்
திங்களானனத்திகூலியிஃதெனச்சொரிந்தான்செம்பொன். (கஅக)

செம்பொனைச்சொரிந்துநின்றுசிறந்திடுமுனிவன்றன்னை
யம்பியினேற்றலோடுமாயிரம்பேரிதென்னத்
தும்பவேவியந்துநின்றதுடியிடைகோல்கைக்கொண்டு
நம்பன்றன்சடையினண்ணுநதியின்மேனடத்தினாால். (கஅஉ)

வனிதைகோல்கொண்டுநாவாய்நடத்தலுமறையையோது
முனிவன்மாலெய்தமாரன்முடுகியேகணைகவேக்
குனிசிலைநுதலினாளைக்கூடவேமனத்திலெண்ணிப்
பனியிருநாலுதிக்குமறைத்திடப்பண்ணினானல். (கஅக)

வேறு.

விரகமுற்றிடுமுனிபணிவிளக்கமிக்
இருவிசும்பவனிதிக்கெலாமறைப்பவவ்
வரிவைகைப்பிடித்தலுமவடன்மேனிசம்
பரசரநாறுதென்றிவைபகர்ந்தனன். (கஅச)

சரிரமிச்சலசரநாற்றமின்றியே
மருவுடன்மருவவாய்மலர்ந்துபோதயன்
சரியெனத்தனையனைத்தந்துகன்னியா
முருவொருவாதனைத்தருளென்றோதினான். (கஅரு)

காசணிதனத்தினள்கழறலோடுமே
யோசனைகெந்தியாயுயர்ந்துநான்மறை
பேசிடும்புதல்வனைப்பெற்றுங்கன்னியா
யாசகன்றிடுதியென்றவளைப்புல்லினான். (கஅசு)

கரதலாமலகம்போன்ஞானங்காட்டுவான்
பரதர்கோன்மடந்தைதன்பயோதரந்தழீஇச்
சுரதநூல்விளைத்திடச்சுரர்துதிக்கவே
சரதநான்மறைதருந்தனையன்றோன்றினான். (கஅஎ)

ஆசகன்முனிவனையணைத்தநங்கைதான்
யோசனைகெந்தியாயுளமகிழ்ந்தவ
ளேசகல்புதல்வனையீன்றுங்கன்னியாய்
மாசகன்மணியெனவயங்கினாளரோ. (கஅஅ)

வேறு.

முஞ்சிகோவணமுப்புரிநூலிவைவிளங்க
மஞ்சனாகிவந்தடிபணிந்தனக்கிடர்வரினீ
நெஞ்சினினையன்னையேநேர்வனென்றுரைத்து
விஞ்சுதந்தையோடேகினன்வியாசனாம்பெயரோன். (கஅகூ)

தன்னையுற்றணைத்திருந்தவன்றனையனோடேக
வின்னலின்றியேயிலங்கியயோசனைக்கெந்தி
யன்னமாமெனவலம்பியமணியெனவழகார்
கன்னியாகியேயம்பியிற்கவினுறநின்றாள். (ககூ0)

கங்கைமீதுநாவாயினைக்கடிதினிற்றிருப்பி
மங்கைமீடலும்வலையர்கோன்மகளெழினோக்கி
யெங்கண்மாதவத்தணங்கனையின்றுதொட்டென்றும்
வங்கம்நீவிடேலெனவவண்மனைவைகுநாளின். (ககூக)

இந்துவின்குலத்திலங்கியசந்தனுவென்பான்
றந்திவெந்நிடைத்தனிக்குடைநிழற்றிடத்தயங்கு
நந்துசேரும்வானதிக்கணாநண்ணவவ்வலைப்பெண்
கெந்தமெங்கணுங்கிளர்ந்துமன்னாசியின்மடுத்த. (ககூஉ)

கெந்தமெவ்வழிக்கிளர்ந்ததென்றதனெறியறிந்தே
முந்திமன்னவன்றந்தியைமுடுக்கிவானதியி

னுந் திகிரிறுவாய்விடுமதின் மருங்குறவே
வந்துகண்டனன்மடந்தையைவலையர்வீதியிலே. (௧௯௩)

கலனிலங்கியபுயத்திரையைக்கண்டிடுமாச
னிலனில்வாரிணிலவளோரோமொனவினைக்தே
யலையுநெஞ்சமென்றுவிஸைக்குறைறகொள்ளணங்கிக்
கலையர்வீதியில்வருவதென்றேனெவனவருந்தா. (௧௯௪)

கயலையுந்தியவிலோசனிகவிழெலாங்கண்டு
மயன்மலிந்திடுமென்னவனிவனெவனெனவே
பயவினின்றவரம்பிநாயகன்மகளாம்வான்
புயலினேர்கொடைப்புரவலவெனவிவைபுகன்றார். (௧௯௫)

வேறு.

அவனியிற்பரதரிறைறவனையழைத்தான்மகடனையருளெனக்கெனலு
முவமையிலணங்கையுதவினலவடன்மதலைக்கிவ்வுலகெலாங்கொடுத்தான்
மவுலியைக்கவிக்கவிசைதியோவெனவேமறுத்தனன்வலைமகள்சேய்க்கிப்
புவியினைக்கொடுப்பதவமெனக்கருதிப்புரவலன்புரியினையடைந்தான். (௧௯௬)

புரியினையடைந்தபுரவலன்வலைஞன்புதல்விதன்வடிவினைநினைந்து
விரகமுற்றணைமேல்விழுந்தெழுந்தயர்ந்துமெலிகின்றவாறெலாமறிந்தே
சுரர்நதியருளுஞ்சுதன்றனையளித்தோன்றனிலறத்திமிலருமொய்திப்
பரதர்கோன்றனையென்பிதாவினுக்குன்றன்பாவையைத்தருதியென்றுரைத்தான்.

சுரர்நதிசுதனிவ்வாறுரைத்திடவேதொழுதிமித்திமிலர்கோனுரைப்பா
னரசநின்பிதாவுக்களிக்கிலென்மகடான்பயந்திடுஞ்சிறுவனுக்கவனி
தருதியோவெனலுந்தந்தனனெனுஞ்சொற்சாற்றலும்பரதர்கோன்சமனி
னிருபநீகொடுத்தாயெனினுநின்மைந்தர்கொடுப்பரோவெனவிகழ்த்தினனால்.

உரைசெயுமச்சரசனைநோக்கியொப்பிலாச்சானவிசுதன்றான்
விரதமாதவர்போலூர்த்தரேதசுவாய்மருவுவனெனுமுறைவிளம்பச்
சுரரொடுமுனிவர்தோன்றியேயிவன்றான்வீடுமனெனப்பெயர்சொல்லித்
தருமலர்சொரிந்துபுகழ்ந்தனர்விசும்பிற்றேவதுந்துமிதழங்கிடவே. (௧௯௯)

தேவர்கடிதிப்பமுனிவர்கண்மகிழச்சிறந்திடும்வானதிபுதல்வன்
பாவையர்மணம்யான்புணர்கிலேனெனவேபரதர்கோன்மகடனைக்கொணர்ந்து
காவலர்க்கரசனுடுபதிகுலத்துட்கவினுறுசந்தனுத்தனக்குத்
தேவியாயளித்தேனெனப்பகிரதிசேய்சிறவ்வையுடனகர்சேர்ந்தான். (௨௦௦)

வேறு.

ஊனமிலெழிலினுறுமோசனைக்கெந்திதன்னைச்
சானவியருளுமைந்தன்றந்துமுன்னிற்றலோடு
மீனமிலரசன்சேயையிச்சையான்மணமாகி
மானினைவதைத்தோன்பத்தனுகியேவாழ்தியென்றான். (௨௦௧)

மைந்தனுங்கங்கைசேயைவாழ்த்திநான்மறையையோது
மந்தணரோமஞ்செய்யவணங்கினுடன்னைவேட்டே
யிந்திரைசிறுவன்கேளிவிரதியும்வெள்கவேதான்
சந்தனுதிமிலர்கோமான்றையலைத்தழுவினான். (௨௦௨)

வேறு.

அத்திமாநகரரசன்சேர்வாசனைக்கெந்தித்
தத்தைதன்னிருதனமெனுந்தடாகத்தில்வீழ்ந்து
வித்தகத்துடன்மதனசாத்திரத்தினைவிளைப்பச்
சித்திராங்கதவிசித்திரவீரியர்செனித்தார். (௩௦௩)

சரியிலாதசந்தனுமனையாடனைத்தழுவி
யிருவரைப்பயந்திடவவரெழிலுடன்வளர
வரிகொளாசனத்திருந்தயனுசையையீத்து
விரியுங்கானிடைத்தவஞ்செயமேயினனன்றே. (௩௦௪)

மெய்த்தவஞ்செயச்சந்தனுப்பிரியவீடுமன்
சித்திராங்கதன்சென்னியின்மவுலியைச்சேர்த்தே
யத்திமாநகராளுதிநீயெனவறைந்தே
வித்தகப்பரசிராமன்பால்மேவுவேலையிலே. (௩௦௫)

சித்திராங்கதப்பெயரினாற்சிறந்தகெந்தருவ
னத்திமாநகர்ச்சந்தனுந்தனையனையடைந்தே
யித்தலத்தினிலென்பெயர்விடுவிடாயென்னிலின்னே
வித்தகச்சமர்விளைத்திடுவாயெனவிளித்தான். (௩௦௬)

வந்தகெந்தருவன்னிவைமொழிதலுமறுவிற்
சந்தனுத்தனையன்குருக்கேத்திரஞ்சார்ந்து
முந்திவெஞ்சமரிருவருமூன்றுநாட்பொரவே
மந்தரம்மெனச்சித்திராங்கதமனன்மடிந்தான். (௩௦௭)

ஆருநேரிலாக்கெந்தருவனடர்ந்திடலுந்
தீரனாகியசித்திராங்கதன்சிதைந்திடவே
வீரனாகியவீடுமன்கேட்டுநெஞ்சுளைந்து
பாரினேரிலாவத்திமாபதியினைச்சேர்ந்தான். (௩௦௮)

அத்திமாநகரடைந்துசிற்றன்னையைத்தேற்றி
வித்தகன்முடிவிசித்திரவீரியன்சிரத்தில்
வைத்துமண்ணுலகாளுதியென்றுரைவழங்கச்
சித்தசன்னெனவவன்சிறந்திருந்தநாட்டன்னின். (௩௦௯)

இம்பரொப்பிலாக்காசிமன்பயந்திடவிலங்கு
மம்பையம்பிகையெதிரிலம்பாலிகையென்போ
ரும்பரும்விரும்பெழிலுடையோர்களைவேட்கச்
செம்பொனின்முடியரசர்களெண்ணிலர்சேர்ந்தார். (௩௧௦)

அங்கண்ஞாலத்தினரசர்களமருமண்டபத்தின்
கங்கைதன்சுதன்வந்திடக்கண்டவர்விருத்தன்
மங்கைமார்கண்மேன்மனம்வைய்னென்றநீமருளுற்
றிங்குவந்ததென்னோவெனநகைத்திகழ்வுரைத்தார். (௩௧௧)

இகழ்வுரைத்திடுமன்னர்முன்னிலங்குகன்னியரை
நிகரில்சானவிசுதனெடுந்தேர்மிசையேற்றி
இகல்செய்வீரர்களுளரெனிலெதிர்மினீரென்று
புகல்மன்னவர்புணரிபோல்வளைந்தெழுந்தார்த்தார். (௩௧௨)

மன்னரெங்கணுமவளைப்பவீடுமன்றனுவளைத்தே
துன்னுமைம்முகிற்பொழிந்தெனவாசுகஞ்சொரிய
முன்னர்வந்தடர்வீரர்கண்முடிசிரந்துணிய
வெந்நிட்டோடினர்வேலைபோற்குருதிகள்விழவே. (௬௧௩)

படியின்மன்னவர்படைஞர்கண்மடிந்திடவெருவி
நொடியின்முன்னரின்வெந்நிட நுவலுதற்கரிய
மிடல்கொள்வீடுமன்மின்னிடைக்கன்னியருடனீள்
கொடிகொடேரின்மேலத்தினபுரங்குறுகினனால். (௬௧௪)

வேறு.

நத்தெனுங்கிரிவநாரியர்கடம்மொடும்
மத்தினபுரிதனினம்பொற்றேர்மிசை
வித்தகவீடுமன்மேவவம்பையாந்
தத்தைகாங்கையனுடன்சாற்றுவாளரோ (௬௧௫)

சாலுவமனனென்னேர்தாரமாகவே
ஞாலமேல்விரும்பினானவ்வேந்தன்மேன்
மாலெழுமனத்தினளென்னவானதிப்
பாலனீவிரும்புவோன்பாலினேகென்றான். (௬௧௬)

உம்பர்கடுதிக்கும்வீடுமமன்றேதனு
மம்பைசாலுவனிடையடையவேகத்தன்
றம்பியாம்விசித்திரவீரியன்றனக்
கிம்பரினவட்கிளையோரைவேட்பித்தான். (௬௧௭)

அம்பைமின்னேகவம்பிகையம்பாலிகை
பம்பைகள்சச்சரிபணிலம்பம்பவே
நம்பர்செஞ்சடையினினண்ணுவாள்சுதன்
றம்பியைமணந்தின்பந்தழைக்கவைகினார். (௬௧௮)

ஏருறுவிசித்திரவீரியற்கெழி
னாரியரிருவரும்பாரியாகநற்
பாரினிற்கவினுறப்பவமில்வீடுமன்
சீருறுபுராணங்கேட்டமர்தினந்தனில். (௬௧௯)

ஆலிலையகட்டினாளம்பையெய்தியே
சாலுவமன்னன்பாற்சார்ந்துமெய்க்குணச்
சீலனீயெனைமணஞ்செய்தியாலெனக்
கோலமார்நிருபர்கோனகைத்துக்கூறுவான். (௬௨௦)

குறைவிலாக்காங்கையன்கொண்டுபோயவன்
சிறையினிலிருத்தவேயிகழ்ச்சிசேருநீ
மறுவிலாவெனக்குயர்மனைவியாமென்கை
முறைமையோவெனக்கெனமுடுக்கினானரோ. (௬௨௧)

சாலுவன்முடுக்கிடத்தையல்வீடுமன்
பாலடைந்தென்னைநீபற்றுஞ்செய்கையான்
ஞாலமேலரசர்கணத்திலாரெனைக்
கோலமாருரத்தனேயென்றுகூறினாள். (௬௨௨)

கோதையீ துரைத்தலுங்குறைவில்வீடுமன்
மாதர்தம்மேன்மனம்வைக்கிலேனென
வோதியசபதத்தாலுன்னைவேட்பது
நீதியன்றேகெனநிகழ்த்தினனரோ. (௪௨௩)

உவமையில்வீடுமெனுரைப்பவம்பைபின்
னவனியாளரசரையடைந்தெல்லீர்களும்
பவமறுகாங்கையனென்கைபற்றியே
நவையகன்மணஞ்செயநவிலுவீரென்றாள். (௪௨௪)

அரிவையீ துரைத்திடவவனியாள்கின்ற
புரவலர்கூடியேபுகன்றுவேண்டினும்
வரநதிசுதனுனைமணஞ்செயானவற்
றெரிவையேசமரினிற்செயிப்பமென்றனர். (௪௨௫)

வித்தகவரிவையோடிவைவிளம்பியே
சுத்தநற்பகீரதிதோன்றல்பாலடைந்
துத்தமவம்பையைமணஞ்செய்தின்னிலின்
வைத்திடுகெனக்கங்கைமைந்தன்கூறுவான். (௪௨௬)

எந்தைதான்பெட்புறுமெழில்கொண்மங்கையைத்
தந்திடுசெயலினுற்றையலார்களைச்
சிந்தையாலுந்தொடேனென்றயான்செகத்
தந்தமாரம்பையையணைப்பனோவென்றான். (௪௨௭)

அம்பையையணைக்கிலாயென்னிலாகவ
மிம்பரிற்றருக்குதியென்றுகூறியே
வெம்பியமன்னர்மேல்வெகுண்டுவீடுமன்
றும்பியவருடம்போற்கணைசொரிந்தனன். (௪௨௮)

வீடுமன்வரிசிலைவளைத்துவிட்டிட
நீடியசாயகநிறைந்துமாகரிக்
கோடகவீரர்கண்மடியக்கொற்றவ
ரோடினரரிவைநெஞ்சுளைந்துபோயினள். (௪௨௯)

சுத்தநற்பகீரதிதோன்றறன்னொடு
மொத்தியேபொருமனரோடவம்பையாந்
தத்தைபோய்ப்பரசிராமன்றன்றாள்பணிந்
துத்தமவென்னிடர்தீரென்றோதுவாள். (௪௩௦)

வீடுமனென்றனைப்பற்றிவிட்டிட
வாடவரிகழ்ந்துநச்சிலர்களாதலின்
காடுறுமாதவவென்னைக்காங்கையன்
கூடுமாறருளெனக்கூறினளரோ. (௪௩௧)

அரசர்கள்வெந்நிடவலையுமம்பைபின்
கரைசெயாவிடருடன்கழறக்கேட்டருள்
பரசுராமன்னதற்கிசைந்துபாரின்மேற்
புரிசையாரத்தினபுரியில்வந்தனன். (௪௩௨)

வந்தருள்குருவினைவணங்கிவீடுமெ
னந்தமாராசனத்திருத்தியர்க்கியஞ்
சிந்தையின்மகிழ்வுறவளித்துச்சிரிலே
னெந்தமாதவஞ்செயவெய்தினையென்றான். (௬௯௩)

தேசலாவுறுமனனிவைகள்செப்பலு
மாசிலாவருந்தவனுங்கூறியே
யேசிலாவீடுமவென்சொற்பேணியிம்
மாசிலாவம்பையைமணஞ்செய்வாயென்றான் (௬௯௪)

குருவிவைமொழிந்திடக்கோதிறுதைபாற்
சரியிலோசனைக்கந்திதன்னைச்சேர்க்கையா
லரிவைமார்தங்களையணைக்கிலேனென்றே
யுரைசெய்தயானிவணகிலுறேனென்றான் (௬௯௫)

வேறு.

கங்கைமாதருளுங்காங்கையனிவைகள்கழறிடப்பரசுராமன்றான்
மங்கையம்பையைநீயென்சொலைமறுத்துமணஞ்செயாயெனின்மன்னவனே
பொங்குவெஞ்சமரமென்னுடன்பொருதியென்றுவாய்புகையெழவுரைப்பத்
திங்களையணிந்தசிவனெனும்விறல்சேர்வீடுமன்செப்பலுற்றனனால் (௬௯௬)

மறனுறுமவநீதியைமுயலிதுவேமார்க்கமென்றுரைத்திடுமூர்க்க
வதிவிலாவாசானுடனமர்பொரினுமறனெனவீடுமன்றேர்மேற்
பிறையணிசடையிற்சுரர்நதியிலகும்பினாகிபோற்சீறியேநிற்ப
மறலிபோற்றவத்தோன்வையமேல்வைகிவருடம்போல்வாளிகள்பொழிந்தான் ( )

அரியெனமுனிந்தநெடுந்தவன்விடுத்தவாசுகமெண்டிசைமறைப்பச்
சரியில்வானதியின்றனயன்வாளிகளாலறுத்துயர்தழற்கணைவிடுப்பப்
பரசுராமன்றான்பகலவன்படையான்மாற்றிடப்படியிவ்வண்ண
மிருவருமிருபத்தொருதினஞ்சமர்செய்தெதிர்த்தனரியமனஞ்சிடவே. (௬௯௮)

இருவிசும்பெரியவிம்பரினுயிர்களரற்றிடவெண்டிசைசுமந்த
கரியினம்வெருவக்கடல்களுஞ்சுவறக்கணைபொழிந்தெதிர்த்திடுங்காலை
வரிசிலைவளைத்தேவீடுமன்விடுத்தவாளியால்வலவனுமானப்
பரியுறுமிரதந்துணியவில்லிறவும்பாறினன்பரசுராமன்றான். (௬௯௯)

கோடகமுறுதேர்கொடிசிலையறலுங்குருதிமெய்சொரிந்திடநிலத்தி
னோடியேதளரும்பரசுராமன்பின்னேக்கியேயுருவிலிகணையைச்
சாடியேமறங்கடளரவேயறங்கள்வளரவேசத்தியநிறுத்தும்
வீடுமவுனக்குநிகரிலையெனவேவிளம்பியாச்சிரமத்தையடைந்தான். (௭௦௦)

உம்பர்கள்வெருவவுருத்திரன்போலவுருத்தெதிர்பரசுராமன்று
னிம்பரினிவுளியிரதம்வெஞ்சிலையோடிற்றிடப்பாறவங்கிடருற்
றம்பைநெஞ்சழன்றேயருந்தவம்புரியவரனுமையாளுடனெய்த
நம்பரின்சடைவாழ்நதிசுதன்றனைநான்வதைசெயும்வரநவிலென்றாள். (௭௦௧)

மருடருமனத்தாண்மொழியவைம்முகத்தோன்மடந்தைநீயெழில்கொள்பாஞ்சால
னருடருமகளாய்ப்பின்னரினியக்கனடவியினழிப்பமைந்தனுமாய்க்
கருடவாகனன்றன்விநோதமாகத்தான்காங்கையனுயிர்விடக்கணையாம்
வருடநீபொழிந்துசமரொழிந்திடுநாளிரவினின்மாளுதியென்றான். (௭௦௨)

கந்தனார்தந்தையறைந்திடமடந்தையரசரிற்கவின்கொள்பாஞ்சாலன்
றந்திடுமகளாய்ச்சனித்தபின்வனத்திற்றனையனும்படித்தழல்வீழ்ந்தா
ளந்தரநதிசேய்சரத்தினாற்பரசுராமனையமரிடைத்துரப்பச்
சிந்தையின்மகிழ்வோடவனியாண்டிளவல்சிறந்தினி திருக்குநாட்களிலே.(சசங)

வேறு.

அரிவையர்திலகியம்பிகையம்பாலிகை, யிருதனமிசையணைந்தின்பமெய்திய, நிருபர்கோன்சயப்பிணிநீண்டுமாண்டிட, வெரிதனில்வளர்த்திமுன்றேனிரங்கினான். (சசச)

சிற்றவ்வைதன்னொடுமிரங்கித்தேறிய, கொற்றவன்றனையனைநோக்கிக்கூறுவாள், இற்றவிக்குருகுலமிருமனைமண, முற்றொழிற்சுதர்களை யுதவுவாயென்றாள். (சசரு)

அனுசர்மாதாவிவையறையவீடுமன், வனிதையர்தங்களை மணஞ்செயேனென, வுனைமகிழ்தாதைமுன்னுரைத்தயானினித், துனியுறவரிவையர்தோளுறேனென்றான். (சசசு)

வினையறுவீடுமன்விளம்பச்சந்தனு, மனைவிநொந்திரங்கியேமறைகடந்திடுந், தனையனைநினைத்தலுஞ்சமனினான்முக, னனவனைமுன்னரின்வியாதனெய்தினான். (சசஎ)

வந்திடுவியாதனைமகிழ்ந்துநோக்கிநற், சந்தனுமனைவியென்றனையர்மாண்டனர், சுந்தரவீடுமன்றுறவுசேர்ந்தன, னிந்துவின்குலமறுதருளென்றேசொல்வாள். (சசஅ)

பாவமில்சந்தனுப்பயந்தமைந்தன்ற, னாவியேயனையதேவியரையன்புடன், றேவரினியாயமாய்ச் சேர்ந்துமைந்தரை, நீவருத்தருளென நிகழ்த்தினாளரோ. (சசகூ)

யோசனைக்கெந்தியா ளுரைத்தலோடுமே, யேசின்மாதவனதற்கிசைந்தநெஞ்சனாய், மாசறுகுருபியாய்மலிவிருத்தனா, யாசிலம்பிகைதனையணைத்தங்கேகினான். (சருo)

சந்தனுமனைவிமுன்சார்ந்துமாமுனி, யந்தமிலென்னுருக்கண்டவம்பிகை, முந்தியபயத்தின்வேற் கண்கள்மூடலா, லந்தனாஞ்சிறுவனைப் பெறுவளாமென்றான். (சருக)

அந்தனைப்பெறுவளென் றறிஞன்கூறலுஞ், சிந்தையினொந்துசந்தனுவின்றேவிதா, னந்தொளிர்கரத்தளம்பாலிகைக்குநன், மைந்தன்வந்திடவருள்மாதவாவென்றாள். (சருஉ)

அன்னைநொந்திம்மொழியறையமாமுனி, மன்னுமம்பாலிகைநோக்கிமாபயந், துன்னமெய்வெளுத்திடுமவளைத்தோய்ந்துபின், றன்னையீன்றவண்முனஞ்சார்ந்துசொல்லுவான். (சருங)

என்னுருக்கொடுமையை நோக்கியேயெழின், மின்னிடைவெருவிமெய்வெளுத்தசெய்கையாற், றுன்னியபாண்டுவாஞ்சுதனையீனுவ, ளென்னயோசனைக்கெந்தியம்புவாளரோ. (சருச)

அந்தனும்பாண்டுவுமான சேயரைத், தந்திடற்பயனிலைச்சமனிலாவெழின், மைந்தனையம்பிகையுதவமன்னியென், சிந்தையினுறுமிடர் தீர்த்தியென்றனள். (சருரு)

மாதவனன்னைசொல்மறுமலேகவே, யேதமிலம்பிகையேவலால்வ, டாதிவந்தன்புடன்றழுவிக்காமனூ, லோதியேயவன்றனையுற்றணைத்தனள். (சருசு)

நீதியோன்றியமுனியவனேநீங்கியே, தீதகலன்னை முன்செப்புவானெனை,
யேதமிலம்பிகையிகழ்ந்தங்கேவிய, தாதிநற்குமரனைத்தருகுவாளென்றான். ()

தாதிநற்குமரனைத் தருவளென்றுயர், வேதியனுச் சிரமத்தின்மேவவே,
நீதிமன்னம்பிகைவயிற்றினீங்கியே, பூதலத்தந்தனும்புதல்வன்றோன்றினான். ()

தீதிலம்பாலிகையென்னுந்தேன்மொழி, சூதகல்பாண்டுவாஞ்சுதனைப்பெ
ற்றனை, ளேதமிலம்பிகையில்வினைவல்செய், தாதிபெற்றிடுமகன்சனனஞ்சாற்று
வாம். (சருக)

வேறு.

தீயராஞ்சோரர்சிறந்ததோரரசன்கோயிலிற்சிலபொருடிருடி
வாயுவின்விசையிற்பாறிடவறிந்துவளநகர்க்காவலர்தொடரத்
தூயவானவர்கடுதித்திடவியோகத்தொழில்செய்மாண்டவ்வியமுனிவ
னேயமோடமராச்சிரமத்தினெய்திநிதியைவைத்தோடியேமறைந்தார். (சசுா௦)

சோரர்போமடியின்சுவட்டினையறிந்துதொடருவோர்கானிடையேகி
யாருநேரிலாமாண்டவ்வியனிருக்குமாச்சிரமத்தினினிதியை
வீரரானவர்கணேக்கியீண்டெய்துங்கள்வரொங்குளரொன்றுவினவச்
சீரருமுனிவன்மவுனமாயிருப்பத்திருடனுமிவனெனப்பிணித்தார். (சசுாக)

சதுமறைமுனியென்றறிகிலாவயவர்தனங்கொளுந்திருடனென்றோர்த்துப்
பதியினையடைந்தேயரசன்முன்கள்வப்பவன்றனைக்கொணர்ந்தனமெனலும்
விதிவழிதனிலாய்ந்துணர்கிலாநிருபன்வெருண்டுயர்வசியின்வையெனவே
கதுமெனத்தவனைநகரிகாவலர்கள்கழுவினில்வைத்தனரன்றே. (சசுாஉ)

வசியுடலுருவவருந்துமாதவன்றனுயிர்விடாதிருந்தவாறறிந்த
வசையிலாமுனிவரனைவருமெய்தியரசனின்புகழ்க்கழிவாகச்
சசிதிகழ்சடையணிகர்தவன்றன்னைத்தரணியிற்கழுவினில்வைத்தாய்
நிசியுறுநிரயத்தழுந்துவாயெனலுநிருபர்கோன்வெருவவேயெழுந்தான். ()

மறையடிமுனிவர்மறுவின்மாதவனைவசியிடைவைத்தனையெனுஞ்சொ
லறையமன்னனெங்கிக்கழுமிசையுயர்ந்தவருந்தவன்றனைத்தொழுதிரங்கிப்
பிறையணிசடையணிகர்த்திடுந்தவவென்பிழைபொறுத்தருளுதியெனலுங்
குறைவில்கொற்றவனீவெருவலையெனக்குவிதிச்செயலென்றுகூறினனால். ()

விதிவழியெனக்குவெருவலையரசவென்றுதன்விலாப்பக்கத்துருவும்
புதியநல்வசியினுதியிருந்திடவேபுவியிலார்கழுவினைநறுக்கிச்
சதுமறைமுனிபூங்கூட்டைத்தனுடலிற்றயங்கியநீள்கொம்புதாங்கக்
கதுமெனத்துணைக்கைமலர்கொய்துநிறைத்துக்கடவுளைத்தினமருச்சித்தான். ()

மறுவிலாவுடலினுறுவசியதனுலாணிமாண்டவ்வியனென்று
நெறியுறுதவர்கணிகழ்த்திடுமுனிவனிகரிலாமறலிபாலேகி
யெற்றுழ்வலிப்புயத்தோய்நான்கழுமீதின்வீழ்ந்திடவிழைத்ததீவினையை
யறையெனவுரைப்பவவன்றனைநோக்கியந்தகன்மொழியலுற்றனனால். (சசுாசு)

அறிஞமுற்பிறப்பினறிவிலாதைந்துபருவத்தினெறும்புகடன்னைச்
சிறியகோலீர்க்குநுதியினிற்கோத்தசெய்கையால்வந்ததென்றுரைப்ப
நெறியுறுமுனிவன்பதினறுவருடநிறைந்திடுங்காறுமண்மிசையின்
சிறுவர்களிழைத்ததீவினையவர்தந்தந்தைதாய்க்குறுமெனச்செப்பும். (சசுாள)

பூதலமிசையினறிவிலாச்சிறுவனாகியானிழைத்தபுன்மையதாந்
தீதினையென்னையளித்தவர்க்குறுத்தாதென்றன்மேலிழைத்ததீமையினாற்
றுதிதன்சுதனைச்சனித்திடுகெனவத்தவன்சபித்திடத்தண்டதரன்பா
ரேதமில்குணத்தம்பிகைமனைச்சேடிவயிற்றின்வந்திலங்கினனன்றே. (௬௬௮)

அம்பிகைசுதனைத்திருதராட்டிரனென்றழைத்தவட்கிளையவண்மகனை
யிம்பரிற்சிறந்தபாண்டுவென்றியம்பியெழிலுறுதாதியாயிலங்கும்
வம்பவிழ்குழலிமதலையைவிதுரனென்றுவீடுமன்குலமைந்தர்க்
கும்பர்கண்மகிழச்சாதகஞ்சவுளமுபநயனமுநடத்தினனால். (௬௬௯)

திருதராட்டிரனைமுடியினைக்கவித்துச்சிறந்திடும்பாண்டுவாமனனைத்
தரணியைக்காக்கவிளவரசாக்கிச்சமனிலாவிதுரன்மந்திரியா
யுரைசெயுமறைகளறனெலாந்தழைப்பவுலகினையாளுவித்தனனாற்
பரவைசூழுலகின்விசும்பினிலியாருநிகரிலாப்பகீரதிசுதனே. (௧௭௦)

சீதமறைவளரமறையவர்மகிழச்சமனிலம்பாலிகைபயந்த
சுதன்மதியெனவேநிகரிலாக்கவிகைதுலங்கிடவிசும்புறுவிபுதர்
பதியெனவயங்கிவிதுரன்மந்திரியாயிலங்கநற்படியினையாள
வெதிரில்காந்தாரன்குமரியைவேட்டானெழிலுறுமம்பிகைபுதல்வன். (௬௭௧)

வேறு.

யாதவவீரசூரன்கன்னிகைவிரதையென்னு
மாதினைக்குந்திபோசன்மகளெனவளர்க்கமண்ணிற்
றீதறக்குந்திதேவியென்றுபேர்சிறந்தாளென்றே
மாதவனவடான்செய்தசெயலினைமதித்துச்சொல்வான். (௬௭௨)

வேறு.

மாதவரெண்டுருவாசன்வந்துமின்
றீதறப்பஞ்சமத்தேவர்மந்திர
மோதுவித்திடவொன்றைக்குந்தியுன்னவா
னாதவனெய்தியேயவளைச்சேர்ந்ததும். (௬௭௩)

ஆதவன்குந்தியையணைக்கக்கன்னனென்
றோதிடுஞ்சிறுவன்வந்துதயமாகவே
மாதிழிவாமெனச்சுதனைவானதி
மீதொருபேழையினமைத்துவிட்டதும். (௬௭௪)

அலரியோன்மைந்தனையளித்துங்கன்னியாய்ப்
பொலனுறவிருந்தியென்றகன்றுபோயது
நலனுறுமுனிநவிலாதுகுந்தியை
யிலகியபாண்டுவேட்டனனென்றோதுவான். (௬௭௫)

பின்னரும்பாண்டுமன்பெருமையோங்கிய
மன்னரெண்மத்திரன்பயந்தமத்திரை
யென்னுநாமப்பெணையெதிரிலந்தணர்
சொன்னநான்மறைநெறிதுலங்கவேட்டனன். (௬௭௬)

விழுமியதேவகமனன்விரும்பவே
வழகுறுமிரதிபோலவனைப்புல்லியே
விழிகுலப்பாசவியீன்றமாதுமான்
விழியினுடன்னையேவிதுரன்வேட்டனன். (௬௭௭)

## வேறு.

தாரணியிற்செங்கோலோச்சியபாண்டுசெமனிலாக்குந்திமத்திரையோ
டிரணியவிரதமிசையினினேறியிபநிரையிவுளிகள்சூழ
வருணமார்கலன்கள்கதிரவனவிரைவழங்கமாவனத்தினிற்சென்றே
யருணமெண்குழுவையரிகிரிமயிடமாவிதமெல்லவும்வதைத்தான். (சஎஅ)

விரகமுற்றடைந்தசெனனவன்மனைவிதன்னுடன்சுரதநூல்விரும்பி
வரைசெறிவனத்தின்மான்கலையாகவணைந்திடமன்னர்கோனறியா
தொருகணைசிலையிற்றொடுத்துறவிடவுமுடலிடைப்பட்டுமெண்வீழ்ந்த
விரலையோடுழையாமுருவினையொருவியிருவருமுனிந்திவையறைவார். (சஎகூ)

சாகரஞ்சூழ்ந்ததரணியையாளுந்தலைவனீ டிடஞ்செறிவனத்தி
னேடுமாமிருகவினங்களைவதைப்பதரசர்கணீதியென்றாலும்
போகவேளையிலின்றெங்களைச்செற்றபுன்மையாற்போந்தரிவையரை
மோகம்விஞ்சிடவேயணைந்திடின்முடிவாயென்றிவைமொழிந்துயிர்துறந்தார். ()

சதுமறைமுனிவன்மனைவியோடரசைச்சாபமிட்டாருயிர்துறப்ப
விதிசெயலெவர்க்கும்விலக்கரிதென்றுமெலிந்திடும்பாண்டுமென்னத்திப்
பதியினிவிரதங்கரிபரியுடனற்படைஞரையேவியேநிறையு
மதிநிகர்வதனக்குந்திமத்திரையோடெருமாதவஞ்செயப்போனான். (சஅக)

இந்துவின்குலத்துப்பாண்டுமென்சென்றேயிந்திரத்துய்மனசரசின்
செந்திருவனையாரிருவர்களுடனுஞ்சேர்ந்தொருதினமிருந்தப்பான்
மந்தரவரைநேரஞ்சனக்கூடமலையினின்வைகிச்சின்னாளிற்
சந்திரன்பதத்தையளவிடும்பிறங்கற்சதகொடிமுடியினைச்சார்ந்தான். (சஅஉ)

அந்தமாமலையின்மனைவியருடனேயரசர்கோனமர்ந்திடுநாளிற்
சிந்தையிற்கதமின்முனிவர்கள்வரவுந்தேவியருடனவணிறைஞ்சி
யெந்தமால்வரையினிருந்துநீர்வருதிரெங்ஙனமேகுதிரெனவே
கந்தமாமலரோனுலகினைக்காணக்காவலபோவமென்றனரால். (சஅங)

சதுமறைமுனிவர்சரோருகன்பதியைச்சார்வமென்றுரைத்திடப்பாண்டு
மதிவளர்சடையோனிகருமாதவத்தீரியாங்களும்வருதுமென்றுரைப்பக்
கதமிலாத்தவத்தோர்புரவலசிறுவரிலாதவர்கதிபுகவரிதா
மதனிலூற்புதல்வர்தம்மையுண்டாக்கிப்பிதுக்கடனகற்றிவாவென்றார். (சஅச)

மைந்தர்களிலாதார்கதிபுகவரிதென்றறைந்துமாதவர்கடாமேக
நொந்தசிந்தையனுய்க்குந்தியைநோக்கிநுவலுவாளென்னையென்மாதா
தந்திடுசெயல்போல்நீயுமோர்தவனையணைத்தொருதனையனைப்பெறுகென்
றிந்துவின்குலத்தோன்மொழிந்திடமனைவியிசைகிலாதிவையியம்பினளால். ()

மன்னயான்கன்னியாயமர்நாளின்மாதவரெண்டுருவாசற்
கன்னநாநுகர்வித்திடவவன்மகிழ்ந்தேயருளியமந்திரந்தன்னை
யுன்னியதேவரெய்திநன்மகவையுதவுவாராதலினரச
வென்னையுன்சிந்தைக்குவந்ததேவதையையுள்கெனவியம்புகென்றுரைத்தாள். ()

மைந்தனைத்தரவுன்மனத்தினுக்குவந்ததேவரையுரையெனமன்ன
னந்தமாரறனையழைத்தியென்றுரைப்பவருந்தவனருளுமந்திரத்தைக்
குந்திசிந்தையினினினைக்கவேதருமதேவதைகுறுகிவந்தணைப்பக்
கந்தனைநிகராமுதிட்டிரன்றன்னைப்பயந்தனள்பாண்டுமென்களிப்ப. (சஅஎ)

சூந்திரன்மகவைப்பயந்திடவிதனைக்கொற்றவனொருதவதினனைத்
தந்தையாங்கங்கைசுதன்முனோனனுசன்றுயர்கடாதைதன்னன்னை
சிந்தையிற்களிக்கவறையெனமுனிவன்சிறந்தவத்தினபுரிசேர்ந்தே
யந்தன்முன்மொழியவனைவருமேமவளக்கருற்றமிழ்ந்திடும்வேலை. (௪௮௮)

அந்தமன்விரும்பியணைத்திடக்கருப்பமாலிலையுதரத்திற்றங்கிச்
சிந்தையின்மகிழ்வோடிலங்குகாந்தாரிசிறந்திடுங்குந்திமாவனத்தின்
மைந்தனைப்பயந்தாளென்றவாசகத்தால்வயிற்றினிற்கற்கொடுமோத
நொந்திடுங்கருப்பார்மிசையினில்விழலுநோக்கினோர்வீடுமற்குரைத்தார். (௪௮௯)

வீடுமன்றிருதராட்டிரன்விதுரன்முதலினோர்விதிவலிதென்றே
வாடியென்செய்வமென்னுமுன்வியாசன்வந்துபார்மிசையுறவிழுந்த
பீடுடைக்கருவைநூறுகும்பத்திற்பிரிவுசெய்தடைத்ததன்பின்னர்ச்
சேடனேர்புவியிற்சிதறினசினையைத்திரட்டியோர்கலசத்தில்வைத்தான். ()

மாதவன்சதகும்பத்தினிலடைக்கவளர்கருவொருதினங்கழிய
வேதமில்சிறுவனாகவிவ்வழியினீரைம்பதாகியதினத்தின்
பூதலமிசையிற்புதல்வர்நூற்றுவர்கள்வயங்கநற்பொற்கலசத்தின்
கோதிலாவனிதையொருத்திதோன்றிடவேகுருட்டுமன்மகிழ்ந்தனனன்றே. ()

அந்தமன்முந்துங்குமரனுக்கிசையச்சுயோதனனெனப்பெயரறைந்து
மைந்தர்தொண்ணூற்றொடொன்பதின்மருக்குமவர்க்குறுநாமத்தைவகுத்து
விந்தையைநிகராமணங்களுடனனைத்துச்சளையாமெனவிதித்துச்
சிந்தையின்மகிழ்வோடிருக்கநற்றவன்போய்ப்பாண்டுவுக்கிவைகள்செப்பினனால்.

தீயகாந்தாரிவிளைத்திடுசெயலைத்திருந்தியமுனிசொலக்கேட்டுத்
தூயநற்பாண்டுமெலிந்துதிட்டிரனுக்கனுசனாமுரத்தினோன்றோன்ற
நேயமாய்வயங்குங்குந்தியைப்பவனன்றனையழையென்னமின்னினைக்க
வாயுவந்தவளையணைத்திடச்செனித்தான்வலிடையுவீமனாமதலை. (௪௯௩)

சரியிலாப்பாண்டுசேமனிலாவுபயதனையர்கள்வளர்ந்திடமகிழ்வா
லரிவையர்மதிக்குங்குந்தியைநோக்கியழகுறுஞ்சிறுவனைப்பெறவான்
சுரர்பதிதனையேயழைத்தியென்றுரைப்பத்தூயவணினைக்குமுன்வலாரி
தரைமிசையடைந்தேயவடனையணைக்கத்தனஞ்செயன்சனித்தனனன்றே. ()

உத்தமப்பாண்டுவிளம்பிடக்குந்தியுயர்தவனியம்புமந்திரத்தை
மத்திரைக்குரைக்கமன்னன்வானவர்கள்வயித்தியர்தமையழையென்னக்
குத்திரமிலாதாளந்தமந்திரத்தாலுள்கவவ்விருவருங்குறுகி
நத்துறுகரத்தினவடனையணைக்கநகுலசாதேவர்கள்சனித்தார். (௪௯௫)

தீதகல்பாண்டுசிறுவரைவரையுஞ்சிறந்திடுமந்தணர்மொழியாற்
சாதகஞ்சவுளமுடித்துபநயனஞ்செய்துசாத்திரமறையெல்லா
மோதுவித்துயருங்குந்திமத்திரையோடுவெந்தவப்பிறங்கலுற்றமரு
மாதவர்மொழியும்புராணமெய்ப்பொருளைமகிழ்வுடன்கேட்டுணர்நாளின். (௪௯௬)

வேறு.

தருமனுட்சனிவாரத்திற்சார்ந்திடக்குந்திதேவி
யருமறையவர்க்குத்தானஞ்செய்யவோராற்றின்கூலத்
துருவுடைச்சிறுவரோடுமுறைந்திடப்பாண்டுவேந்தன்
மருவமர்குழலியானமத்திரைதனிப்பக்கண்டான். (௪௯௭)

அத்திரவிழியள்வில்லினள்கத்தளாம்பல்வாயா
ணித்திலநகையனத்தின்கழுத்தினணிகரிலாத
வித்துருமத்தின்மெய்யண்மின்னெனுமிடையளாய
மத்திரைகவினைநோக்கிமன்னவன்விரகமுற்றான். (சகூஅ)

விரகமுற்றெழுந்தமன்னன்விரைகொண்மத்திரையைப்பற்றிச்
சுரதநூல்விளக்கவெண்ணித்தொடரவேதுணிகொணெஞ்சி
னரிவைகோவினைநீர்சோரவன்னம்போற்பாறியாண்டோர்
வரையருகாகப்பூங்காவனத்தினுண்மறைந்தாளன்றே. (சகூகூ)

ஓவியமுயிர்பெற்றென்குந்தன்மைபோலொளிகொணங்கை
யாவியும்பதைப்பப்பாறிமறைதலுமரசர்கோமான்
றேவியைத்தொடர்ந்துமாலின்சிகியுறமாள்வதெண்ணான்
காவினின்மறைந்துநின்றகாரிகைதன்னைக்கண்டான். (ருoo)

பங்கயத்தாளினாலின்மருங்கினிற்பகட்டின்கோடாங்
கொங்கையிற்குமுதவாயிற்குனிசிலைப்புருவந்தன்னிற்
செங்கையிற்கண்ணின்மாலின்சிகியுறச்செய்யதோரான்
மங்கையைப்பற்றினான்மன்மறலியுங்குறுகமாதோ. (ருoக)

இக்கிரதச்சொன்மங்கையிசைகிலாதுடல்கொடாளை
நக்கினமாகவாடைபறித்துநற்குழலைப்பற்றிக்
குக்குடம்பெட்டைவன்பாற்புணர்வதோர்கொள்கைபோன்று
விக்கிரமத்துமன்னனணைத்துயிர்விட்டானிப்பால். (ருoஉ)

தனையர்கள்குழக்குந்திதானங்கள்செய்துவந்து
மனைதனின்மகிணனோடுமத்திரைதன்னைக்காணு
துனியொடுஞ்சுதர்களோடுஞ்சோலையினெய்தித்தங்கை
தனியிருந்தரற்றப்பாண்டுமாண்டிடுந்தன்மைகண்டாள். (ருoங)

மகிணன்மாண்டிடவேகுந்திவயிற்றினிலெற்றிவீழ
மிகவுமெய்நடுங்கிமைந்தரைவருமரற்றியேம்பச்
சுகனிகர்புனிதரெய்தித்தூயவர்தம்மைத்தேற்றி
யிகழ்விலாப்பாண்டுமன்னையீமத்திலிடுவித்தாரால். (ருoச)

சதுமறைமொழியின்மன்னைத்தழலிடைவளர்த்தலோடுஞ்
சுதைநிகர்மொழியளாயமத்திரைசுதர்கடம்மை
மதிநிகர்வதனியானகுந்திகைக்கொடுத்துத்தான்றன்
பதியுடனனலில்வீழ்ந்தாள்பார்த்தவரிரங்கியேங்க. (ருoரு)

அனலிடையெரிந்ததந்தைதாயினுக்கறன்றன்மைந்தன்
வினையறுமறையோர்வேதம்விளம்பிடத்திலநீர்விட்டே
துனியுறுகுந்திபாதந்தொழுதுபின்னோர்கள்சூழ
வனைவரெல்லாம்போதவத்தினாபுரியிற்சேர்ந்தான். (ருoசு)

வேறு.

அன்னையோடைவருமெய்தியந்தமன், முன்னரின்வணங்கலுமுனிவர் வேந்தநின்,பின்னவன்மத்திரன்பெண்ணினாளுடன்,மன்னியேயணைந்துமாண்டனனென்றோதினார். (ருoஎ)

பின்னவனிறந்தனனென்றபேச்சினான், முன்னவனிரங்கமுதாதையானவன், றன்னிருவிழியினீர்தரையிலோடவே, வன்னியின்[illegible]கெனவாடினாரோ. (ருoஅ)

விதுரன்முன்னவன்மடிந்தமைவிளம்பிடக், கதுமெனப்படிமிசைவிழுந்துகண்ணினீர், நதியெனப்பெருகவேநலன்கொள்குந்திதன், சுதர்களைத்தழுவியேதுன்பமுற்றனன். (௫௦௯)

வேறு.

குந்தியுடனவள்சுதரைக்கண்டுநெஞ்சங் கொதித்துவஞ்சக்காந்தாரிதழுவலோடு, மந்தன்மகனைவரைக்கண்டழலுநெஞ்ச னனைத்திடவேயம்பிகைதானருளுமைந்த, னிந்துவண்ணனனுசன்மகிழ்சிறுவரைவரின்னல்புரிசுயோதனனோடினைஞொல்லா, மந்தணரின்மிக்கதுரோணன்றன் பாலினாயுதங்கள்பயிற்றிடவேயமைத்தானன்றே. (௫௧௦)

குந்திசுதருடனந்தன்மைந்தரொல்லாங் குழுமியேயாயுதங்கள்பயிலுநாளிற், சிந்தையினிற்சினமலிகாந்தாரிமங்கை சிறந்தவொருகலத்திலன்னநிறைப்பவீமன், வந்திருந்தங்கருந்துகின்றநயனமில்லான் மகிழ்சிறுவர்நூற்றுவர்தம்வலக்கையெல்லா, நொந்திடவேயிடக்கரத்தாற்பற்றிச்சோற்றை நுகர்ந்திடலுநோக்கியவருளைந்தாரன்றே. (௫௧௧)

பின்னருமோர்தினத்தினினூற் றைவரொய்திப் பெருந்தடநீர்குடைந்திடவேவாயுமைந்தன், பன்னககேதனனையவனனுசர்தம்மைப் பற்றியயப்புனலிடைப்படுக்கத்தன்மன், பின்னவனைவைதுவிடுவிக்கவாவிபெற்றவர்கள்மிகவெருவிமனையினெய்தி, யன்னையுடனிகழ்ந்ததெல்லாமறையக்கேட்டேயவள்வீமன்றனைவதையுமென்றாளன்றே. (௫௧௨)

தாய்சினத்தினிவைமொழியச்சுயோதனன்றன் றம்பியரோடைவருடன்சிரமஞ்செய்து, தூயமலருய்யானத்திருக்கவாங்கேதுயில்வீமன்கந்தரத்தினரவைக்கட்ட, வாயினுமிழ்விடமுறவேகடித்தலோடும்வளையெயிறுமுறிந்திடவங்குணர்ந்துவாயு, சேயதனின்வாலுதியைப்பற்றியெற்றச் சிரந்துணியவுடல்சிதறிமடிந்ததன்றே. (௫௧௩)

விடவரவுசிரந்துணிந்துமடியக்கண்டு வியாளகேதனன்சினத்தினொருநாட்டோய, மடுவினிடையத்தினுளேமறையவைந்துவசிபதிப்பமாலரியையதனின்வைக்கக், கொடியசதப்பெயரினர்களதனைத்தப்பிக் குப்புறவேயளிகளலையாமணிற்பக், கடிதினுயர்வீமனயநீந்தியோங்குங் கழுக்கடனைப்பறித்தெறிந்தான்களையின்மாதோ. (௫௧௪)

பன்னககேதனனயத்திற்கழுவையெல்லாம் பறித்தெறியும்பவனசுதன்விறலைநோக்கி, யொன்னலர்கணம்மையெல்லாம் வதைக்கநாட்டுங்கழுக்களைநீபறித்தெறியவுய்ந்தோமென்று, சொன்னவன்றன்விடச்சோற்றையவர்கட்கீயத்தூயவர்கணுகர்வேலைநிகரின்மாய, னின்னலிலாவேதியனாய்வேண்டவன்னமீயவிடமறநோக்கியேகினானால். (௫௧௫)

விடமுறுசோறருந்தியைவருயிர்விடாமல் விளங்குசெயல்கண்டுசுயோதனன்விண்ணோங்குங், கடிகொண்மலர்ச்சோலையினிலைவரெய்திக் கண்டுயிலக்காலரசன்சுதனைப்பற்றி, மிடலுடனேயெடுத்தகன்றபாதாளத்தின் விழவெறியவீமனுடல்சிதையாமுன்னம், படமிசையினேற்றவனைப்பாதலத்திற், பையவிருத்தியபரவைமத்தார்பாசம். (௫௧௬)

வாசுகிதன்படமிசையினேற்றுவாயு மதலையுடனேகாமற்பையவைத்தே, யேசிலிரசாயனநற்குடங்கள்பத்தங் கீழ்ந்திடலுமவைபருகியெதிரிலாத, வாசகமன்னருள்குமரனயுதயானைப்பலத்தினுடனத்தினமாபுரியையெய்தி, மாசறவாண்டிராங்குகின்றவனைமுன்னோன்மகிழ்ந்திடவேவணங்கியிவையுரைத்தான்மாதோ. ()

அந்தணருள்புதல்வர்செய்ததீமையெல்லா மறையமெலிந்தன்னை தன்மனணைக்கப்பின்னோர், வந்தடியின்விழுந்திரங்கக்கங்கைதந்த மைந்தனயனங்களிலான்விதுரன்மாசி, லந்தணரிங்கிவர்களடியிறைஞ்சியோங்கு மாசுகன்சேயரியெனவேயமருநாளின், சிந்துபதிக்கெழிலுறுதுச்சளையையீய்ந்து சிந்தைமகிழ்சுயோதனன்றான்சிறந்தானன்றே. (ருகஅ)

தங்கைமணவாளன்மிகவன்பாய்ச்சேரச் சகுனியெனுமாதுலனும்வந்துசாரக், கங்கைதனின்மிதந்துவரும்பேழைதன்னுட் கண்டுவளர்த்திடுஞ்சூதன்சுதனுங்கன்னன், பங்கமிலாத்தவர்களெணும்பரசுராமன் பல்படையும்பயிற்றுவிக்கவவனையோவிச், சிங்கமெனவந்தவனைச்சகாவாய்க்கொண்டு சிறந்துதுரியோதனன்றான்மகிழுநாளில். (ருககூ)

பூதலத்தினுயர்ந்திடுபாஞ்சாலராசன்புதல்வர் பெறப்புலனடக்கித் தவஞ்செய்வேலை, மாதுபங்கனெய்தியொருசுதனையீய்ந்தேனென்று மறைந்திடமன்னனகரியெய்தத், நீதகலுமவன்றேவிசிறிதுநாளிற்சிறந்ததொரு பெண்சிசுவைப்பெறவேநோக்கிக், கோதிலுமைநாயகன்சொற்குன்றுதென்று குமரனெனவளர்த்தனனாற்கொற்றவேந்தன். (ருஉ௦)

சாதகஞ்செய்துயர்சிகண்டியெனும்பேரோதிச் சவுளமுபநயனமறையோர்கள்சாற்றும், வேதமொழிவிதிப்படியின்முடித்தபின்னர் வின்முதலாயுதங்கள்பயிற்றுவித்துவீரம், பூதலமெண்டசாருணமன்றனையடன்னைப் புதல்வனெனவேவளருமரிவைவேட்க, வாதரவின்முடிகவித்துப்பாரையாள் வித்தரசனெனும்பாஞ்சாலனமருநாளின். (ருஉக)

அந்தமிக்கபாஞ்சாலன்பெறவேயோங்கு மரிவைதனக்கேமனைவியானமங்கை, தந்தைநகமொய்தியிடச்சிறிதுநாளிற்றாதை யவண்முகநோக்கிச்சாற்றுவாளால், விந்தையெனுமெழிலுடையாய்கொழுநன்றன்பான்மே வெனலுமவணகைத்துவிறற்பாஞ்சாலன், மைந்தனெனவளர்த்தபெண்ணுக்கென்னையீய்ந்தாய் மனைவாட்கைநன்றெனவேமொழிந்தாண்மாதோ. (ருஉஉ)

காவிவிழிமாதிவைகள்கழறலோடுங் கடுவெனவேமுனிந்தவளைத்தந்ததாதை, பாவமுறுபாஞ்சாலமன்னவன்றன் பாவைதனைக்குமரனெனப்பாவித்தேயென், றாவிநிகர்குமரிதனைவேட்பித்தானென் றடுசினத்தினானைபரியி ரதஞ்சூழத், தேவர்பதியெனத்தேரின்வயங்கித்தோன்றிச்சிறந்த துருபதனகரைவளைத்தானன்றே. (ருஉங)

மைந்தனெனத்தான்வளர்க்குமாதுக்கென்றன் மகளை மணஞ்செய்வித்தமன்னன்சென்னி, சிந்துவினில்விழக்கணையாலறுப்பனென் றுசேர்ந்திடவச்சொற்கேட்டுச்சிகண்டியென்பா, டந்தையென்னால்வருந்துவதோவென்றுகானிற்சார்ந்துபெருங்கூவலிற்றான்வீழும்போழ்தி, னந்தமிகுதூணனெனுமியக்கனெய்தியரிவைதனைத்தடுத்திவைகளறைந்தான்மாதோ. (ருஉச)

கோதகலுங்கொடியிடையாய்பழுவத்திந்தக் கூவலினீவிழுகருமங்கூறென்றோதப், பூதலமெண்பாஞ்சாலன்மகளாமென்னைப்புதல்வனெனத்தெசாருணமன்மகளைவேட்பித், தாதரவால்வளர்த்திடவச்செய்திகேட்டங்கவடந்தையமர்பொரவேவந்தானந்த, வேதமறவுயிர்விடவேவெண்ணினேனென் றியம்பியிடவியக்கனிவைபகர்ந்தானன்றே. (ருஉரு)

பூவினுயர்திருவெனவே வயங்குநங்காய்புருடலிங்கங்கோடியுன் றனுருவைக்கொண்டு, பாவையெனவிவ்வனத்தினிருப்பனீபோய்ப்பதியணுகியுனைமாதென்றெள்குமுன்றன், றேவிதனையனுபவித்தோர்திங்கடன்னிற்சேர்ந்தெனக்கென்னுருவைத்தருதியென்ன, வோவியங்கள்பழுதறவேயொளிரும்வேலையொத்தேகிச்சிகண்டிதந்தைக்கிவைகள்சொன்னான். (ருஉசு)

தெரிவையுருவொழிந்துமைந்தனாகிவந்தசிகண்டிதனையமர்பொரவேசினைந்துவந்த, நிருபன்முனிரதமொடுவிடுத்தலோடுங்கரிலவன்றனைநோக்கிநெஞ்சினேயம், பெருகிடநற்பாஞ்சாலன்றன்பாலெய்திப்பிரியவசனங்கள்சொல்லிமருகனோடும்,பொருகரிமாச்சில்லியந்தேர்விருதர்சூழப்புரியினுளோர்மகிழ்ந்திடப்பொற்கோயிற்சேர்ந்தான். (௫௨௭)

மறுவுறவேமங்கையெனவேட்டாளென்று மனங்கருகியுழல்கின்றமாதுகாத, னிறையவெழிலுறவொளிகொள்கொழுநன்றன்னைநித்திலப்பந்தரிற்பூவிணணைமேற்சேர்ந்து, வெறிகமழமதனசாஸ்திரத்தினோங்கும்வெற்பெனவேபணைத்தமுலையவன்றன்மார்பி, னுறவணைத்துமனமகிழுந்தையறன்னோடுற்றனனாற்சிகண்டிதந்தையுறையுமூரின். (௫௨௮)

மனைவிதனையில்வைத்தோர்திங்களாக மனமெலிந்துசிகண்டியந்தப்பதியையோவித், துனியுறமுன்னமர்வனத்தினேகும்போழ்தின்றோகையெனவயங்கியிடுதூணன்முன்னர்த், தனபதிவந்தவனெழிலாமடந்தையானசதிரினைக்கண்டிவ்வுருவுதவிர்ந்தாணாவை, வினையகலும்பாஞ்சாலன்மைந்தன்போரில்வீய்ந்திடுநாளெனவிளம்பியகன்றானன்றே. (௫௨௯)

தனபதியிவ்வுரையறையக்கேட்டுநொந்த சரியிலாவியக்கனெய்துஞ்சிகண்டிதன்னை, யுனைவிரும்புமனைவிதன்பாலிவ்வேடத்தோடுற்றணைத்திபோதியெனவுரைத்தலோடும், வனிதையிடப்பாகனருள்வரத்தினாலேமங்கையுருத்தவிர்ந்தாணாய்மகிழ்ந்தேயேகித், தனையுதவுந்துரோபதனுக்கிவைகளெல்லாஞ்சாற்றிடவேயவனுரத்திற்றழுவிக்கொண்டான். (௫௩௦)

மகன்மகனாயெழிலுறவேமகிழ்பாஞ்சாலமன்னனொடுவிரோதமுறுதுரோணன்விஞ்சு, மிகல்புரிந்துதுருபதனைப்பிணித்தென்முன்னரெய்திடுவீரியருளரோவென்றுகூறப், பகலவன்சேய்சகுனிசிந்துபதியெண்ணில்லாப்படைஞரொடுபன்னககேதனன்றானேகி, நிகரறவாழ்சிகண்டிதந்தைவிடுநீளம்பானிருபர்திரள்மடிந்திடவேபாறினாரால். (௫௩௧)

சீறியெழுந்துரோபதன்றன்சிலையாற்பெய்யுஞ்சிலீமுகத்திற்சினக்கரிமாத்தேர்கண்மாள, வீறடங்கிச்சகுனிகன்னன்சிந்துநாடன்வியாளகேதனனிவர்கள்வெருவிமண்ணிற், பாறிவருஞ்செயனோக்கிநொந்தவாசான்பதம்பணிந்துபாஞ்சாலனிரதமெல்லா, நூறியவன்றனைப்பிணித்துவருவனென்றேநுவன்றுவிசையன்றேர்மேனொய்திற்சென்றான். (௫௩௨)

சூரர்பதிதன்சுதனெய்தித்துரோபதன்றன்றுரகநிரைபோதகங்கள்சூரரெல்லாந், தரையினுடறுணிந்துவிழச்சிரம்வானேகத்தரங்கமுறுகுருதிநதியெனவேபாற,வெரியுமிழ்சாயகம்விடுத்தேயிரதம்பாய்மாவிணையில்சிலை துணித்தவன்றன்புயத்தைவீக்கி, விரைவினிற்சென்றாசான்முன்வைத்தலோடும்விசையனைத்தன்மெய்யிறுகத்தழுவினானல். (௫௩௩)

விசையனைச்சேகுறத்தழுவித்துதித்தபின்னர் விழுமியநற்பாஞ்சாலன்றன்னைநோக்கித், திசையினுறுதேவர்களுமமரிலென்றன்சிலீமுகத்துக்கஞ்சுவரென்றுரைத்துநீதான், வசையுறவேதனஞ்செயனாற்பிணிப்புண்டாயென்றவன்வளநாட்டினிற்பாதிவலுவின்வாங்கி, யுசனனிகர்துரோணனகைத்தேகென்றோதவுளமெலிந்துதுரோபதன்மாவனத்தையுற்றான். (௫௩௪)

கந்தமிகுகாந்தாரத்தடைந்துமன்னன்காலுணவாய்க்கனல்வளையத்தவஞ்செய்காலை,யிந்துசேகரன்றோன்றியரசயான்றானீயுநலனியம்பெனமன்னிவேகர்

கோமான், மைந்தனெனும்விசையனுக்குத்தேவியாகவடிவுடையவொருமகளுந் துரோணனுன, வந்தணனைவதைக்கவொருமகனுநல்கென்றறையவரம்பெறுதி யெனக்கயிலைசேர்ந்தான். (ருகூரு)

கந்தர்தந்தையிவைகழறக்கேட்டுமன்னன்களிப்புடனே தன்னகரமெய்தி ப்பின்னர்,சந்தமுறத்தான்வளர்க்கும்வேள்வியின்கட்டழலிடையிற்சங்கரன்றன ருளினலே, செந்திருவைநிகர்த்ததுரோபதியுந்திட்டத்துய்மனெனும்பேருடைய சிறுவன்றானும், வந்திடவேமறையவர்களாசிகூறவானவர்கண்மலர்மழைகள்பொ ழிந்தாரன்றே. (ருகூசு)

அரனருளால்வேள்வியுறுமழலின்வந்தவரிவைமையுஞ் சிறுவனையுமன்பி னலே, நிருபரெண்ணும்பாஞ்சாலன்வளர்த்துநீதிநெறிநிறையவினிதிருந்தானி ப்பாலந்தப், புரவலன்சேய்தனைவென்றதுரோபதன்றன்புயம்பிணித்ததனஞ்செ யன்றன்விறலையுன்னி, யெரிசினத்தாலவரைப்புள்ளுவத்திற்கொல்ல வெண்ணி மறச்சகுனியுடனிவைசெய்தானல். (ருகூஎ)

அரக்கினுறுமனையிடத்துவாரணுகியதனிலைவரன்னையொடுந்தந்தைசொ ல்லாற், பொருக்கெனப்போயமர்நாளினையினமில்லான் புதல்வன்விடுமறையவன் போய்ச்செவிக்கவங்கி, பெருக்கவிதுரன்னமைத்ததறியைப்பேர்த்துப்பிலவழியி லைவரையுஞ்சுமந்துவீம, னருக்கனெழுமுனமேகியிடும்பன்றன்னைவதைத்தவன் றனிளையாடோளணைந்தானன்றே. (ருகூஅ)

வாயுசுதன்கமலவல்லிகொங்கையென்னு மலைகுழையவணைத்திடவோரா ண்டிலந்த, வாயிழையாள்கடோர்க்கசனைப்பெறவிட்டேகியந்தணர்கடுயரகலப் பெகனைச்செற்றுத், தூயதுருபதனகரினெய்திப்பார்த்தன் றுலங்குவிலைவளைத்துய ர்மீன்கணையாலெய்ய, மாயன்மகிழ்ந்தருளவிறற்பாஞ்சாலன்றன்மகளையெழிற்பா ண்டவர்கண்மணந்தாரன்றே. (ருகூகூ)

குந்தியுடனைவர்களுங்குருடன்வைகுங்கொடிநிறையுநகரதனிலெய்திமூத்த, தந் தையருளமரர்பதிப்பிரத்தத்தெய்தித்தருமனுயரிராயசூயத்தைச்செய்ய, வந்தன் மகன்சூதையுறவிதுரன்றன்னுலழைத்துவஞ்சச்சூதாடிவெல்லவைவர்,' இந்தவன த்தெய்தினர்களென்றுதூயவியாசமுனியியம்பிடக்காசிபன்றான்கேட்டான். ()

குருகுல மரபுப் படலம் முற்றிற்று.

ஆ படலம் ௩௨ - க்குக்கூடிய திருவிருத்தம் - உஅ௬௯.

ஸ்ரீகண்ணபிரான் றிருவடித்தாமரைக ளேண.

ஸ்ரீ

விஷ்ணுமயம்.

கககக - வது

# தெட்சப்படலம்

காருருவவாமனனுமறையோனுகிக்கவினுறுமாவலியருண்மூவடியானினு ம்,பாரினையோர்பதத்தகங்கானுள்ளினேதான்படிந்திடவேயளந்துதிகழொருதா ள்வீசித், தாரகணமமருமிடமயனுரெல்லாந்தாழ்ந்திடவானண்டமுகடளவாய்நீ ட்டிச், சீருறவாண்டளந்தருளுந்தேவதேவன்றிருவடியைத்துதித்திறைஞ்சவம் மின்றொண்டீர். (க)

ஏசகனும்பராசரன்றன்சிறுவன்விஞ்சுமிந்துகுலத்தரசர்திரமெல்லாமோதக், காசிபமாமுனிவியந்துகேட்டுப்பாண்டுகாளையரைநோக்கிமறையாசிகூற, மாசகனுந்தருமனந்தமுனியையன்பால்வணங்கியபின்வியாசனடிபணிந்துநின்றே, யாசுமவிசயோதனன்செய்வஞ்சந்தன்னலடருமிடரொருவும்வகையருடியென்றான்.()

## வேறு.

தூயமாமுனிவன்பாண்டுசுதர்களின்மூத்தோன்சொல்ல
நேயமோடவர்தங்கணெஞ்சுறுமிடரைநீக்கித்
தீயரானவர்கண்மாளத்தெக்கன்செய்தவத்தைச்செற்ற
நாயகன்றன்னைக்காணினற்கணையீவனென்றான். (௩)

நிகரிலாமுனிவன்கூறநெறியுறுதருமன்சொல்வான்
புகரிபவுரியைப்போர்த்தான்பொறையிலாத்தெக்கன்செய்த
மகமறச்சிதைத்ததெல்லாமலரயனிகர்க்குமையா
புகலுதியெனலும்வஞ்சப்புலன்களைந்திடுவோன்கூறும். (௪)

## வேறு.

சீருறவயங்குந்தெசநலப்பிரசாபதியரில்திகதெக்கனுக்குப்
பாரியாயினசுந்தரப்பிரசூதியந்திடும்பெண்கள்சோடசரி
லேருறுந்தருமதேவதைதனக்கீராறுடனொன்றுகூடியநற்
காரிகையாரையுதவியக்கினிக்குக்கவினுறவொருத்தியைக்கொடுத்தான். (௫)

மின்னிடைச்சுதையைப்பிதுவுக்குநல்கிவிடையவன்றனக்குநற்சதியை
வன்னியினனெய்வழங்கியேயளிப்பமழுவலோன்வடிவுடைப்பாரி
தன்னுடன்மகிழ்ந்தாண்டமர்ந்திடுதினத்தின்சத்திரயாகத்தைமறைநூன்
மன்னுமாமுனிவருறத்தெசப்பிரசாபதியர்தாநடத்தினர்மாதோ. (௬)

சத்திரயாகநடத்துமவ்விடத்திற்சதுமுகன்சங்கரனதிதி
புத்திரப்புத்தேள்பொறையுடைமுனிவர்போந்தமர்ந்திருக்குமெல்லையின்வாய்
நித்திலநகையாள்சதியினைப்பயந்தநிகரிலாத்தெக்கனண்டுறலு
மத்தியிற்றுயில்வோன்சிறுவனுமரனுமலாதவரொழுந்தடிபணிந்தார். (௭)

பிரமனைப்பரிவாற்றெக்கனும்பணிந்துபிஞ்ஞகப்பிரான்றனைமுனிந்தங்
கெரியெழநோக்கியிமையவர்முனிவர்க்கியம்புவான்யான்பயந்தளித்த
வரிவையையவேட்டென்மருகனுமிவன்றானெதிரொழுந்தடிமிசையிறைஞ்சான்
பிரியநல்வசனமுரைத்திலனென்றும்பின்னரும்பேசலுற்றனனால். (௮)

இவனெனைப்பணியாதிருந்தனனென்னும்விரோதத்தாலிலாதகிங்கியம்பே
னவனியினசுசியாகவெஞ்சுடுகாட்டலகையோடமர்வதுமன்றி
நவைமலிந்திடுமுன்மத்தருக்கினியனுகுவான்றனக்குநான்முகனுந்
தவனருளிடுநான்மகளையுங்கொடுத்தேன்சூத்திரர்க்கறைசதுமறைபோல். (௯)

கதமுறவிவைகளுரைத்திடுதக்கன்கங்கையார்வேணியன்றனக்குச்
சதுமறைமொழிசூழ்மகத்தினிற்பாகந்தவிருகவெனச்சபித்தேக
விதியுமஞ்சிடமாநந்திவெங்கனல்கண்மிடைந்திடவேள்வியின்மறையை
யுதவுமாதவரைச்சினத்திருநோக்கியுருமெனவிவையுரைத்தனனால். (௧௦)

அரனைநிந்தித்தின்றிகழ்ந்ததக்கனைத்தான்முனிந்திடாவந்தணர்நீயிர்
சுருதிநூற்கருமநடத்தியுஞ்சனனப்பரவையிற்சூழ்குவதன்றிப்
பரகதியுறவேவயங்குதத்துவத்திற்பயக்குவதறிகிலராகி
யருமறையறிந்தியாசகராகியடைகுதிரெனச்சபித்தனனால். (௧௧)

முறையவர்திரளைமுனிந்திவையுரைத்தநந்திதெக்கன்சிரமாறி
வெறிமுகமுறுகவெனச்சபித்திடலும்விதியினைநிகர்த்திடும்பிருகு
கறையிடற்றரன்றனடியரானவர்கள்கதியறவேரியைப்பருகி
நிறையநீறணிந்திங்கமார்க்கசாத்திரத்தினெறியினிலுறுகெனச்சபித்தான். (கஉ)

பிருகுமாமுனிவனிவையுரைத்திடலுநகைத்தரன்பிறங்கியவியாக
மருமறையதனுன்முடிந்ததற்பினரினமரர்கடிதித்திடக்கயிலை
வரையிடையுறவாண்டமர்ந்திடுதினத்தின்மகத்தினைத்தெக்கனுநடத்த
வரியரனிவர்களலாதுலகத்தினனைவருமவ்விடத்தடைந்தார். (கங)

தந்தையாகியதெக்கனின்மகந்தனக்குச்சரியிலாதுயர்சதிதேவி
யிந்துசேகரனையிறைஞ்சியென்கொழுநவிருவருமேகுவமெனலு
நிந்தையன்றுரைத்தோனிடத்தினெய்திலஞனிகரிலாநீயவண்செனுலுன்
சிந்தையிற்கலக்கமுறவுனையிகழ்வனென்றரன்பின்னருஞ்செப்பும். (கச)

அணங்குகேள்பத்துவிரிஞ்சர்மாமகத்திலன்றெனைத்தக்கனுந்தன்னை
வணங்கிலனெனவாங்கிகழ்ந்தனன்றிருவாழ்மார்பகத்தச்சுதன்கமல
மிணங்குதாடொழுவதன்றியேபிறரையிறைஞ்சுமோவென்சிரமதனுற்
கணங்கொண்மாதவரோடவன்புரிவேள்விகாணயான்வருகிலேனென்றான். (கரு)

அரனிவைமொழிந்துவருகிலனெனலுமரிவைகண்சிவந்துநீர்ததும்பப்
பருவரன்மிகுத்துக்கணவனைமுனிந்துபயந்திடுந்தாதைமேற்பரிவால்
விரைவினிற்றரையினடந்திடவிடையோன்மிகநகைத்தவிருறுகலன்க
டெரிவைமெய்க்கணிந்துவயிரவர்சூழச்சிவிகைமேல்விடுத்தனனம்மா. (கசு)

சிவிகையினடைந்துபுவியினையிடந்தகிரிமெயின்மயிர்சிலுத்துறநீ
ளவனியிற்குசையாய்ப்பிறந்திடுந்தலத்தினருமறைவேள்வியைநடத்து
முவமையிறுதைதனைப்பணிந்தனையைவணங்கிடவவரிகழ்ந்தொன்று
நவிலுதவிலாதாண்டிருப்பிடங்கொடாமலிருந்திடநற்சதிமுனிந்தாள். (களு)

அன்றியிம்மகத்தினுருத்திரபாகமளித்திடாதிருந்ததுநோக்கிக்
கன்றியசதியென்கணவனையிகழ்ந்தோன்மகளெனவெனைக்கழறுமற்
பொன்றுவன்சனனமெடுக்கினும்புராரிமனைவியாய்ப்போதுவனென்று
மன்றலங்குழலாளியோகவக்கினியைவளர்த்துடலெரிந்திடமாண்டாள். (கஅ)

சூராரற்றிடவேயோகவக்கினியாற்சுந்தரியிறந்திடநோக்காக்
கருணையற்றிடுதெக்கனைவருகதத்தாற்பயிரவர்களைந்திடவடர
வருமறைநெறியிற்செயுமகத்தணலினுதியவன்விடவெழுந்த
சரியிலாரிபுக்களுறுத்தெதிர்ந்திடலுஞ்சங்கரன்படைஞர்வெந்கிட்டார். (கசு)

மகமுறுமனலினெழுந்திடுரிபுக்கள்வரப்பயிரவரிடைந்திடலு
நிகர்பிறிதில்லாச்சதியிறந்திடுஞ்சொனெறியுறுநாரதன்றூர
நகமிசையிலங்குமரனுடன்விளம்பநயனம்வெங்கனலுறவாயிற்
புகையுறச்சிரசிற்சடையினைப்பிடுங்கிப்பூதலத்தடித்தனன்மாதோ. (உ0)

அவனிகம்பிக்கவடித்திடுஞ்சடையினுயிரங்கையுடைவீரன்
புவனமுநடுங்கமுகத்தினின்மூன்றுபொறியுகும்விழியுறத்தோன்றச்
சிவனவன்றன்னைத்தெக்கன்மாமகத்தைத்சிதையெனச்செப்பிடமுனிந்தே
யுவரியைப்பருகவெழுந்திடும்வடவையெனப்படிமிசையெதிர்ந்துருத்தான். ()

வடவரையசையத்திசையினின்வயங்குமதகரியினமிரிந்திடநீள்
கடலிடைமுடுகுகடுவிடமெனவுங்ககனமீயண்டமாமுகடு

வெடிபடவதிர்த் துவிழியினில்வடவைபிறந்திடவீரபத்திரன்முன்
கடிதினி லுயர்தெக்கனின்மகவிரித் துக்களின்சிரங்களைந்துகொக்கரித்தான். (௨௨)

பிருகுவின்முடிபறித் துயர்பகனேத் திரந்தனைப்பிடுங்கியேநிகரி
லிரவி தன்றசனமுதிர்த் துமாமகத்தினெரியிடைத்தெக்கன்வன்றலையை
விரைவினிற்றுணித் துவீழ்த்தந்தவழலின்விட்டைமூத் திரமெலாம்விடுத்துச்
சுரரொடுமுனிவர் துதிசெயக்கயிலையாளிதன்னடிதொழுதனனால். (௨௩)

சிவன்விடுத்திடுமெய்வீரபத் திரனுற்றெக்கன்வன்சிரமொடுமெசுமுந்
தவர்களஞ்சிடவேயெம்பலுற்றனவென்றவன்றமர்சதுமுகற்குரைப்ப
வுவமையில்சதியன் றிறந்திடவிலக்காதுவந்திகழ்ந்திடுதலாலுறுமிப்
பவமதினிவையோவருவதென்றுலைந்துப்பங்கயன்கயிலையைச்சேர்ந்தான். ()

கயிலையினுலப்பில்கனககோபுரங்கள்கவினுறநூறுயோசனையி
னுயரமாயெழுபத்தைந்துயோசனையினகலமாயொளிர்வடநிழற்கீ
ழியலிசையுணருமியாழருந்தவனுக்கிதவுபதேசத்தையருளி
யயர்வறவுயருந்தெக்கணாமூர்த்தியாமரனிடத்தயன்வந்தான். (௨௫)

அயனரன்முனரினடைந்துநேரில்லாவருந்தவன்கதியினையடைய
வியல்புறவுயர்தத் துவமருளிறைவவுனையவணிகழ்ந்ததெக்கனின்மேற்
றயையுறக்கதத்தையொழித் திடுகெனுஞ்சொற்சாற்றிமாவேள்வியின்சேடஞ்
செயலுறப்பெறுதியெனமதிவேணிச்சேகரன்முனிவொருவினனால். (௨௬)

முனிவினையொருவும்புராரியீரிரண்டுமுகமுடையயனொடுமேகி
யனலிடைச்சிரம்வீழ்ந்தெரிந்திடவாக்கையவனிமேற்கிடந்ததெக்கனைத்தான்
வினையகன்றுயவோர்வெறித்தலைபொருத்தியெழுப்பலும்விழிமுகிழ்த்துறங்கிக்
கனவுகெட்டிடவாண்டெழுபவன்போலக்கவினுறவெழுந்தனன்மாதோ. (௨௭)

பின்னருமவணின்மடிந்தவரெல்லாமுயிர்பெறப்பிஞ்ஞகனருளத்
துன்னியவினைகளொருவிடுந்தெக்கன்புராரியைத்தொழுதவன்றுதித்தே
யின்னவின்மகத்தைமுடித் தரிபாகங்கொடுத்திடவிந்திரையுரத்தின்
மன்னநற்றிகிரிவனைவயங்கிடமாமாயவன்றோன்றினன்மாதோ. (௨௮)

திருமகண்மகிணனடைந்திடவலரிதிசைமுகன்சிவனிவரிறைஞ்ச
வரியரனுடனேயுன்னையெள்ளினரோலென்னையுமகற்றினராமென்
றுரைசெய்துன்றனைத்தானரனெனவுணரார்சாந்தியையுறுவோனவோதப்
பரிவுடன்புராரிதுதித்திட்வமலன்பயோததியடைந்தனனம்மா. (௨௯)

சக்கரந்தரித்தோனிவையெலாமருளிச்சரியிலாப்பயோததியடையத்
தெக்கனுந்தொழுதுமகத்தினிற்சேடமளித்திடத்தேவர்கள்பணிய
முக்கணன்கயிலைவரையிடையடைந்துமுனிவர்கள்போற்றிசெய்திடவே
மைக்களமதனிலுரகபூடணங்கள்வயங்கிடவமர்ந்திடுகாளின். (௩0)

சதியெனுமடந்தையிகழ்ந்ததந்தையின்முன்றன்னுடலெரிந்திடவினைத்தே
யெதிரிலாவிமவான்மனைவியாமேனைவயிற்றினினிணையிலாவுமையாய்ச்
சதுமறையொளிரச்சனித்தவண்வளரச்சங்கரன்காதலாலெய்தி
வதுவைசெய்தெழில்சேர்வாமபாகத்தைவழங்கிடவயங்கினண்மாதோ. (௩௧)

## தெட்சப் படலம் முற்றிற்று.

ஆ படலம் ௩௩-க்குக்கூடிய திருவிருத்தம் ௨அ௭0.




ஸ்ரீ

விஷ்ணுமயம்.

௧௧௨ - வது

# பற்குனப்படலம்.

இருகையினாழிவலம்புரியொளிரவிருகணிலிரவியும்விதுவு
மருவிடவுரத்திற்றிருவயங்கிடமாமலரயனுந்தியிற்றிகழச்
சுரர்நதிபதத்திற்றுலங்கிடவேதச்சுருதிகளாவினினமரக்
கருவரையெனநீள்பயோததியரவிற்கவினாறுபரன்றனைத்துதிப்பாம். (௧)

பொறையிலாத்தெக்கன்மகத்தினையழித்தசரிதையைப்புகன்றிடக்கேட்டு
நெறியுறுதருமன்மகிழ்ந்திடவியாசனீபகைகளைந்திடவேண்டின்
கறைமிடற்றிறைவன்கணைகொடுத்தருளக்கடற்றிடையேகிநற்பார்த்தன்
குறைவறத்தவத்தைச்செயவிடுகெனவேகூறியம்மாதவனகன்றான். (௨)

வேறு.

எண்டவமுனிவன்கூறியேகவிந்திரன்றன்மைந்தன்
மண்டனிலறத்தின்சேயைவணங்கிமாவனத்தினேகிக்
கண்டபேரண்டனாவிகளைந்தவனில்லாள்வேண்ட
விண்டலத்தம்பையேவியவனுயிர்மேவப்போனான். (௩)

கயிலையங்கிரியின்பக்கத்தெய்தியோர்கடியகானி
னுயர்வுறுமலர்த்தண்சோலையொருபெருவிரலையூன்றி
மயர்வறவங்கிதன்னைவளைத்திடவானோரஞ்ச
முயலகன்வெரிநினின்றான்முன்வரத்தவஞ்செய்தானால். (௪)

ஆசறவொருமைச்சிந்தையரசன்மாதவந்தான்செய்ய
வீசன்மாதேவிதன்னோடெயினனாய்வலைகளெங்கும்
வீசியேமிருகவேட்டைவிரும்பியசவரரார்க்கு
மோசைவானுறவேமாயவுருவுடைக்கிரிபின்வந்தான். (௫)

நாககங்கணத்தன்வெய்யநாய்கொடுவலையப்பாறுஞ்
சூகரம்விசையன்முன்னிற்றோன்றிநீயெனைக்காவென்ன
வாகவத்தரசனஞ்சேலென்னுமுன்னடவியெங்குஞ்
சாகரத்தொலிபோலார்த்துச்சவரர்கோனெய்தினானால். (௬)

கொடியனாயெதிர்ந்துவந்தவெயினர்கோன்குரோட்டந்தன்னை
விடுதிநீதவனேயென்னவிடாதுயர்விசயன்வில்லாற்
கடவுவெங்கணைகளெல்லாங்கடியுடைமலர்களாகி
வடிவுடைச்சவரர்கோமான்முடிமிசைவயங்கிற்றன்றே. (௭)

சவரனெய்பாணந்தன்மேலழுந்திடத்தானெய்வாளி
யுவமையின்மலர்களாகியவன்முடியுறலும்பார்த்தன்
பவனன்மாவருணனங்கிபங்கயன்விபுதர்கோமான்
சிவனிவரியும்வெற்றிப்படைவிடச்சிதைத்தான்வேடன். (௮)

கோடிவெம்படைகளெல்லாமெயினர்கோனறுத்துக்கோதில்
ஆடவர்திலகன்வில்லினுணியையறுத்தலோடுஞ்
சேடன்வெங்கதமேபோலச்சீறிவெஞ்சிலையினாலே
சாடினன்விசயன்வெய்யசவரர்கோன்முடியின்மீதே. (௯)

தும்பையின்மலர்கள்சிந்தத்துளும்பவானதியிற்றூய
வம்பிறைசரியக்கொன்றையலரொலாஞ்சிதறிவீழ
நம்பனன்முடியின்மீதினுகர்கோமான்றன்மைந்த
னும்பர்கள்வெருவவோங்கியடித்தனனுயர்வில்லாலே. (௧0)

ஒல்லையிற்கிரீடிசென்றங்குரத்துடனடித்தலோடும்
வில்லினைப்பறித்துவேடன்வீசிடவிசயன்கையான்
மல்லுறக்கட்டமண்மேல்வீழுந்திருவருந்தான்வானிற்
செல்லுறுமுருமுமஞ்சப்புடைத்தனர்தெழித்துவைதே. (௧௧)

மந்தரவரைகள்போலவிருவருமற்போர்செய்யக்
கந்தனையருளுந்தூய்யகங்கைவேணியன்றன்காலா
லுந்திடவிசையன்வானினுயரவேயுமைமாதுள்ள
மைந்தரன்றன்னைவேண்டாற்கரத்தேந்தினானால். (௧௨)

கரத்தினில்விசயன்றன்னையேந்தியகாலகாலன்
சிரத்தினிற்றிங்கள்கங்கைசிறந்தகோடீரந்தாழ
வுரத்திடைவயங்குகின்றவுரகபூடணங்களோங்கப்
புரத்தினையெரித்தகோமான்விடையின்மேற்பொலிந்தானன்றே. (௧௩)

அங்கியுமழுவுமானுமங்கையிலிலங்கத்தோளிற்
கங்கணம்வயங்கத்தோடுகவினுறக்காதினோங்கச்
சிங்கவின்மங்கைவாமந்திகழ்வுறத்தேவரோடு
மங்குல்வாகனன்றான்போற்றமகிழ்ந்தரன்றோன்றினானால். (௧௪)

விடையினிற்கங்கைதங்கும்வேணியான்றோன்றலோடுங்
கடவிடையமுதங்கண்டுகளிப்பவர்போலச்சிந்தை
யுடலொடுமுருகக்கண்ணீருரத்தினிற்புரளவாடி
வடிவுடைவிசையனெய்திவணங்கியேபோற்றினானால். (௧௫)

இந்துவேணியனேபோற்றியிடபவாகனனேபோற்றி
நந்திநாயகனேபோற்றிநடம்புரிதலைவாபோற்றி
சிந்துரேர்காரியுண்டதிரிபுராந்தகனேபோற்றி
யந்தகாந்தகனேபோற்றியரகரபோற்றியென்றான். (௧௬)

வாசவன்மதலைநானுமறைகொடுதுதித்தலோடு
மீசனுமகிழ்ந்துபாசுபதாத்திரமினிதினீந்து
நேசமோடிருகணுக்கிநிருபநீபோதியென்றே
யேசில்வானவர்கள்சூழவிலங்குமாக்கயிலைபுக்கான். (௧௭)

ஏதமிலான்றான்பாசுபதாத்திரமினிதினீயத்
தீதகன்றிலங்குகின்றசிறுவனைமகிழ்வானோக்கி
மாதலியிரதங்கொண்டுவருவனீயவன்றனோடு
போதுபொன்னகரினென்றேபுரந்தரன்புகன்றுபோனான். (௧௮)

நேயம்விஞ்சிடவேயிவ்வாறுரைத்துயர்வலாரிநீங்க
வேயெனுமுன்னரோங்குமெழிலவனைக்கானினோகித்
தூயமாதேவதாரமாமரச்சோலையெய்திச்
சாயையின்சார்புளேகித்தனஞ்செயனிற்குங்காலை. (௧௯)

மகபதியருளினுலேமாதலிவையங்கொண்டு
நிகரிலாவிசையன்முன்னர்நிறுவத்தாளங்குட்டத்தைத்
திகழிரதத்தினூன்றிச்சிறந்தசாரதிகோல்கொண்டே
ககனமேல்விசையினோட்டக்கணையின்கோனிமிர்த்துநின்றான். (௨௦)

தாவினங்குட்டந்தன்னைச்சகடிதினோடிரதத்தூன்றிக்
கோலுறுகோவைநோக்கிக்கொற்றவனிற்கக்கண்டே
மாலுமுன்விறலுக்காற்றுனென்றுமாதலிதான்கூறச்
சீலமார்விசையன்பாகசாதனனகரிற்சென்றான். (௨௧)

வாசவன்மலர்ப்பாதத்தின்வணங்கியேகுந்திமைந்த
னேசிவிந்திராணிதாளினிறைஞ்சியின்புறுதலோடுந்
தேசுறுமமரர்கோமான்சிறுவனைமகிழ்ந்துபுல்லி
மாசுறுமசுரர்தம்மைவதைத்தென்றனிடர்தீரென்றான். (௨௨)

அதிதிதன்குமரன்கூறவருச்சுனன்விரைவினெய்தி
யெதிரிறுனவர்முக்கோடியெண்பதாயிரம்பேர்தம்மைக்
கதுமெனக்கனலப்பாசுபதாத்திரங்கையின்வாங்கி
மதிகொண்மாதலிதேர்தூண்டவதைசெய்துமீண்டான்மாதோ. (௨௩)

தானவர்தம்மைச்செற்றுச்சார்ந்திடுந்தனையன்றன்னை
வானவர்க்கிறைவன்சிந்தைமகிழ்வுடன்மவுலிசூட்டி
யீனமின்மணிகொள்சிங்காசனத்திடையிருத்தலோடு
மூனமினிருத்தஞ்செய்யவுருப்பசிதோன்றினாளால். (௨௪)

காலணிஞெகிழியோசைகலின்கலின்கலினென்றார்ப்ப
நூலிடைமருங்கிற்காஞ்சிநுண்டுளைமணிகண்மின்ன
வேல்விழியிலங்கத்தூயமதிமுகம்விளங்கிக்காட்ட
மாலருந்தவருமெய்தநடித்தனண்மயூரம்போல. (௨௫)

தூயமின்னிருத்தஞ்செய்யச்சுரர்பதிசுதன்றனோக்கி
யாயுவின்றந்தையைத்தன்னழகினன்மயல்செய்வஞ்ச
நாயகியிவளோவென்றுநகைத்தநுநடித்தமாது
நேயம்விஞ்சிடவேமையனிறைந்திடநின்றாளன்றே. (௨௬)

மயலுறுமாதுதன்னைவலாரியுன்மனைக்கேகென்றே
யியல்புறும்விசையகோயிலெய்துவாயென்றுகூறி
யுயருருப்பசியைவீமற்கிளையவுத்தமன்றன்பாலிற்
செயலுறப்போகியென்றுசிறந்தசாரணைசொல்லென்றான். (௨௭)

சாரணன்மொழியக்கேட்டுத்தத்தையைப்பழிக்குஞ்சொல்லாள்
பூரணகும்பநாணும்பொற்பமர்பயோதரத்தாள்
காரணிகுழலாயேகலனுறுகவின்கொண்மெய்யாள்
வாரணமனையவீமனனுசன்பால்வந்தாளன்றே. (௨௮)

ஓவியப்பாவைமெய்யினுயிருறநடந்ததென்னத்
தூவியோதிமமுநாணத்துலங்குபொற்கலன்கண்மின்னக்
காவியேர்விழியாளுள்ளங்காமத்தீயுறத்தலாற்று
ளாவிமுன்றூதாயேகவருச்சுனன்பாலிற்சென்றாள். (௨௯)

வாசமுன்றூதாயேகமணியுறுசிலம்பினெய்து
மோசைதானெய்திறுளென்றுரைத்திடவுருப்பசித்தே
ஞசைமீதுயரச்செல்லவருச்சுனனெழுந்துநின்று
தேசுறுமணங்கினுளையிறைஞ்சியேசெப்பலுற்றான். (௩0)

பொன்னகர்தன்னில்வைகுமடந்தையர்தம்மிற்பொற்பார்
மின்னெனுமிடையினுளேவிழுமியபாதநோவ
வன்னைநீயென்பாலெய்துங்கருமமேதுறைதியென்று
சொன்னவன்றன்னைநோக்கித்துனியுறச்சமிழ்த்தாளன்றே. (௩க)

கயனிகர்விழியாளுணிக்கவிழ்ந்துறுவதனியாக
வயலுறுமடந்தைநல்லாளருச்சுனகேட்டையுன்றன்
மயலுறவந்தமாதின்வருத்தநீயகற்றியுற்றே
யியல்புறவணைத்திடாமலென்சொனுய்மன்னுவென்றான். (௩௨)

தேயுநுண்ணிடையாள்கூறச்செவியிணைக்கரத்தாற்பொத்தித்
தூயமாவிசையனென்றன்றுலங்குமாமரபின்வந்த
வாயுவைத்தந்தான்றேவியாகியாயிரங்கண்ணுனை
நேயமோடணைத்தாய்நீயுமெனக்கன்னைநிகராமென்றான். (௩௩)

மதியுடைமன்னன்கூறமாயவன்றுடையின்வந்தாள்
பொதுமடந்தையர்க்குமுண்டோபுணர்ச்சியினீதியென்று
சுதைதருமொழியாலென்றன்றுனியறவணைத்தியென்றே
யிதவுரைபலவுமோதவிசைந்திலனிணையிலாதான். (௩௪)

நாடியேயுன்பாலெய்தநறுமலரணையினென்னைக்
கூடியேயணைத்திடாதகொடுமையாலாண்பெண்ணல்லாப்
பேடிநீயாதியென்றேபிறங்கியசினத்தளாகி
யேடவிழ்தொடையினுனைச்சபித்தவளேகினாளால். (௩௫)

சசிநிகர்வதனியானவுருப்பசிதளர்ந்துசென்று
சுசியுறுவிரகமோவவணைத்திடத்தொடுத்தலோடு
மிசைவின்மன்னவனைநோக்கிப்பேடிநீயாதியென்றே
விசையொடுபெயர்ந்ததன்மைவிண்ணவர்தலைவன்கேட்டான். (௩௬)

மகபதிவிசையன்றன்னையழைத்துமாமுனிவரோடே
செகதலம்விண்ணேடெட்டுத்திசையினுமிவனைப்போலச்
சிகியுறுகாமநோயைச்செயிப்பவர்யாவரொன்று
புகலுமினென்றுகூறிப்புதல்வனைப்போற்றினுல் (௩௭)

உருப்பசிதன்னைநோக்கியும்பர்கோனறைவான்றுய்ய
பொருப்பிணைப்புயத்தனுனபுதல்வனைப்பேடியாக
வருப்பநுண்ணிடையாய்சீறவடுக்குமோவென்னவாரும்
விருப்புறுபுருடனுகிவிளங்குதிவிசையவென்றாள். (௩௮)

அருந்தவர்மகிழப்பேடியுருவினையகலும்பார்த்தன்
வருந்தியாம்பன்னீராண்டுவனத்துறைந்திடினிவ்வேடங்
கரந்துறைகாலமெய்திக்கழிந்திடவருடியென்னப்
பெருந்தடவிழியினாணீபெறுதியாலென்றுசொன்னாள். (௩௯)

நீண்டகல்விழியாள்கூறமகிழ்ந்திடுநிகரில்பார்த்தன்
பாண்டுமென்மலர்ப்பாதத்திற்பணிந்திடச்சுதன்மேலன்பு
பூண்டுறவணைத்துநும்மைப்புத்திரராகப்பெற்று
வேண்டியதளிக்குந்தெய்வடதத்தினில்வீடுபெற்றேன். (௪௦)

மங்குலைநிகர்த்துத்தானம்வழங்கியதருமராசன்
செங்கவின்கோல்கொடோச்சச்சிறந்தநீர்நால்வர்திக்கெட்
டெங்கும்வென்றிராயசூயயாகத்தையியற்றவேமுச்
சங்குவின்மதலையெய்தும்பதியினைச்சார்ந்தேனென்றான். (௪௧)

தாதையிவ்வாறுகூறத்தனஞ்செயன்மகிழ்ந்துநோக்கித்
தீதறுமையாகேளுன்முன்னவன்சிறுவன்வஞ்சச்
சூதினில்வளநாடெல்லாங்கவர்ந்துபாஞ்சாலன்றூய
கோதையின்குழலைப்பற்றியுரிந்தனன்கூறையென்றான். (௪௨)

அருந்ததிக்கற்பாளாயமருகிதன்மருங்கினுடை
யுரிந்தனன்முன்னோன்சேயென்றுரைத்தசொற்பாண்டுமன்னுள்
ளெரிந்திடக்கண்ணீர்சோரவரவுயர்வேந்தன்சுற்ற
மெரிந்திடவிறப்பனென்னுவியம்பிநொந்திருந்தானன்றே. (௪௩)

தந்தைவெந்துயரமாற்றியவன்விடைதரவேபார்த்த
னிந்திரனுடனேயோராண்டிருக்கவேயிணையிலாத
வந்தமாமறன்சேய்தூயவனுசனைப்பிரிகையாலே
சிந்தைநொந்திருக்கும்வேலைபராசரன்சிறுவன்வந்தான். (௪௪)

சுகனுடைத்தாதையெய்தத்தொழுதிடுந்தருமராசன்
மிகமெலிந்திருந்ததன்மைநோக்கிநால்வேதங்கண்டோ
னிகரிலாப்புராணமெல்லாநிகழ்த்திவெந்துயரைநீக்கி
யிகழ்விலாவிசையனின்முன்னெய்துவனென்றுபோனான். (௪௫)

பற்குனப் படலம் முற்றிற்று.



ஆ படலம் ௩௪-க்குக் கூடிய திருவிருத்தம் ௨௩௯௫.



கண்ணபிரான் றிருவடித்தாமரைக டுணை.



ஸ்ரீ

விஷ்ணுமயம்.

௧௧௫ - வது

# அளகாபுரிப்படலம்.

கறையினிற்காலைக்குந்திக்கரத்தினிற்கோலினாலே
வுறிதனிற்பாண்டந்தன்னைப்பொதுத்திடவொழுகுகின்ற
நிறைமதிநிலவைநேருந்ததிநிலத்துறாதவண்ண
மறையறைவாயாலேற்றமாயனைவணக்கஞ்செய்வாம். (௧)

விதியினைநிகர்த்தவேதவியாசன்றானேகலோடுஞ்
சதுமறையவர்கடன்னத்தருமன்றானிருக்குநாளின்
மதிமுகம்வயங்குகின்றதுரோபதிவாயுசேயோ
டுததியினொலிபோலோடுநதியினையுற்றாளன்றே. (௨)

ஓடுகிலாலந்தன்னுளொளிர்சுசந்தியநற்பூவை
யேடவிழ்குழலாணோக்கியிம்மலரைம்பான்மீதிற்
சூடினாரன்றோபாரிற்றுலங்கியமாதவொன்று
வாடியசெயலைநோக்கிவாயுவின்மதலைசொல்வான். (௩)

அறணிகருற்றவைம்பாலாயிழாயளகைக்கெய்தி
வெறிகொண்மாமலரைக்கொண்டுமீண்டுநின்னளகமீதி
ணிறைவுறச்சூட்டுவேனென்றறைந்துநீள்பாதவங்கள்
பறியவேபிறங்கல்விண்டுபெடியினினுதிரச்சென்றான். (௪)

மஞ்சுயர்விலங்கன்மீதின்மரந்துகளாகவீம
னெஞ்சலிலுவணன்போன்றுநெறியிடையெய்தும்வேலை
யஞ்சனைசிறுவன்றுய்யகவுசலையருளவந்த
மஞ்சனையுள்கிவாழைவனத்திடையேத்துவானால். (௫)

அலரியோன்குலத்திற்றோன்றுமசன்சுதன்குமராவென்னுஞ்
சலமுறவெதிர்ந்துபோர்செய்தாடகைகாலாவென்னுங்
கலரவிந்திடவேவேள்விகாத்தருளிராமாவென்னுந்
தலனுறுகருங்கனாரியாக்கியதாளாவென்னும். (௬)

கறையடியுரியைப்போர்த்தான்கடுஞ்சிலையிறுத்தாயென்னுஞ்
சிறகறையளிமென்கூந்தற்சீதையைவேட்டாயென்னு
மறுவிலாப்பரசுராமன்வரிவில்வாங்கழகாவென்னுங்
குறைவிலாப்புளிஞர்கோமான்குகன்சகாவானாயென்னும். (௭)

பரதனுக்கெழிலான்மிக்கபாதுகமீந்தாயென்னும்
விரிதிரைக்கடல்போலார்த்தவிராதனைவதைத்தாயென்னும்
விரதமார்சரபங்கற்குமிளிர்பதமளித்தாயென்னுந்
தரைதனிற்கரன்றன்பின்னோருடன்விழத்தடிந்தாயென்னும். (௮)

எருவைமன்னவனுக்குன்றன்பதத்தினையீந்தாயென்னும்
வரைசிகர்கவந்தன்மாளவாளினிற்றுணித்தாயென்னும்
பரிவுடன்சவரிநல்கும்பலம்விருப்புற்றாயென்னு
மிரவிசேய்மகிழச்சாலமேழிறவெய்தாயென்னும். (௯)

மிடலுடைவாலிமார்புபிளந்தருள்வீராவென்னுஞ்
சுடர்முடியிரவிசேய்க்குச்சூட்டியமுராரியென்னுங்
கொடியவாளரக்கன்பின்னோன்குரைகடல்கடந்துநின்றா
ளடையவேயிலங்கைச்செல்வமளித்தருளரசவென்னும். (௧௦)

வாரிவெந்திடவேவெய்யவாளிகள்விடுத்தாயென்னு
நீரிறைவணங்கியேத்தவருள்செய்தவிமலாவென்னுந்
தேரிறத்தசக்கிரீபன்சிலைமுடியறவேநோக்கிப்
போர்பொரவருதிநாளையென்றருள்புனிதாவென்னும். (௧௧)

கும்பகன்னன்றன்சென்னிகுரைகடலிட்டாயென்னும்
வெம்பியவதிகாயன்றன்சிரமறவாளிவிட்டே
யிம்பரினதிகனாயவிந்திரசெயித்தைச்செற்ற
தம்பியையேமத்தோடுந்தழுவியதலைவாவென்னும். (௧௨)

கடிகையேழரையின்மூலபெலத்தினைக்களைந்தாயென்னு
நெடியமோதரன்றன்சென்னிநிலத்திடைப்படுத்தாயென்னுங்
கொடியவாளரக்கன்கம்பத்தறுத்துக்கோகனகனம்பாற்
கடுவைநேரவன்றன்மார்பைப்பிளந்துயிர்களைந்தாயென்னும். (௧௩)

சுடர்முடிவீடணற்குச்சூட்டியசோதியென்னுங்
கடுவமர்களனெண்கண்ணனேத்துகாகுத்தாவென்னுந்
திடமுடைத்தெசரதன்பாற்றீயகைகேசிசெய்த
கொடியவல்வினைதீர்ந்துய்யவரங்கொண்டகோவேயென்னும். (௧௪)

வானரத்தானைதுன்னவயங்குபுட்பகத்தின்மீதின்
மீனகேதனனைமானுமிலக்குவவீரனெய்த
வானவர்போற்றவேதான்வாமவூருவினிற்றுய்ய
சானகிவயங்குகின்றதசரதவிராமாவென்னும். (௧௫)

நெறியினற்புதங்கடேவிக்குரைத்தநின்மலனேயென்னும்
பொறையுறுபரத்துவாசன்வைகிடம்போந்தாயென்னு
மறைநெறிப்பரதனெய்திவணங்கிடவணைத்தாயென்னு
மறனுறுமயோத்திதன்னுளடைந்தருளழகாவென்னும். (௧௬)

சுடர்விரிமணிகடேண்கடிலங்குமண்டபத்தினுப்பண்
வடிவுடையனுசர்போற்றமடங்கலாதனத்தின்மீதிற்
புடவியினெழுந்தசீதையுடனிருந்தருளப்பொற்பார்
முடியினைவசிட்டன்சூட்டமகிழ்ந்தருள்முதல்வாவென்னும். (௧௭)

மதியில்லாவலனென்றில்லாமற்கடமானவென்னைத்
துதிசெய்துந்தடக்கையாரத்தழுவியுமெனதுதோள்மேற்
புதிதலர்கமலமன்னதன்பதம்பொருந்தவைத்த
ஏதுவெனநினையுஞ்சோருமேம்பலுற்றெழுந்துநிற்கும், (௧௮)

பூவைமையுதிகாவிபுயன்மரகதமுநாண்மமயத
தேவனிவ்வவனியெங்குந்திரிந்திடுஞ்சுவடுகாணு
மாவலிற்புடவியெங்குமடைகுவானமலன்பாத
மேவியதிவிடமென்றேவியந்துகைதொழுதானன்றே. (௧௯)

சீதையுங்கூடவெங்குந்திரிந்தவன் கமலமன்ன
பாதமார்தூளியீதென்றிருகணீர்படியினுருய்ப்
போதவப்பொடியையள்ளிப்பூசிமெய்ப்புளகமாக
வேதமில்குணத்தோன்வாலைநீட்டியேயிறைஞ்சினானால். (௨௦)

இந்திரநீலமொத்தேயிலங்குகந்தரத்தின்மீது
செந்துகிர்வனப்பாய்மல்கச்சேண்சிலைவயங்கிக்காட்ட
வந்தெழுந்தனபோற்றோன்றுமலர்மகள்காந்தன்றன்னைச்
சிந்தையினினையுநையுங்களிக்குமூர்ச்சிக்குந்தேறும். (௨௧)

வேறு.

இவ்வழியிராகவனெழிலைநோக்கியே
யவ்வியமவித்தவஞ்சனைதன்செம்மலான்
குவ்வுறப்படிந்துநீள்கூலநீட்டிய
நவ்விசேர்பழுவத்தின்வீமனண்ணினான். (௨௨)

தாரமார்கிரிதனைதயங்குந்தன்மைபோ
னேரிலாமாருதிவயங்கநீதிநூற்
சோர்விலாவாசுகன்சூனுவாகிய
தீரன்மாத்தமையனைநோக்கிச்செப்புவான். (௨௩)

நீநெறியடைத்திவணீட்டும்வாலினை
நானெய்தினேகவாங்கென்னவேநகைத்
தீனமிலரசயானெடுக்கலாற்றகி
லேனுன்றன்வலத்தெடுத்தேகென்றானரோ. (௨௪)

அஞ்சனைசிறுவனீதறையவாசுகன்
மஞ்சனீண்முதியமற்கடத்தின்வாலினைப்
பஞ்செனப்பறக்கவுந்துவதுபானொ
விஞ்சியவிடதுகால்விசித்துதைத்தனன். (௨௫)

உதைத்தகாலுகவேயோங்குசாலம்போற்
பதைத்திலாவலத்தினைப்பார்த்துவாயுசேய்
கொதித்துவாமக்கரங்கொடுபெயர்க்கவுங்
கதித்தவாலசைகிலகண்டுசீறினான். (௨௬)

ஒருகையினெடுக்கிலானுளைந்துசீறியே
யிருகரவலங்கொடுகடிதெடுக்கவு
மொருசிறிதசைகிலாவுரனைக்கண்டிவ
னரியலவரியயனரனில்யானொன்றான். (௨௭)

கயினெழுபிறங்கலைக்களையுமியானிவ்வான்
மயிர்நுனியசைத்திடும்வலனிலேனிவன்
புயல்வணன்புகலவேபுணரிதாண்டிப்போ
யியல்புறுஞ்சனகிபாலேகுந்தூதனே. (௨௮)

அக்கனைநிலத்தனைத்தரக்கர்தானையை
யிக்கெனத்துணித்துவீழ்த்திலங்கையெல்லவு
முக்கிரத்தழலினையூட்டிமீண்டுயர்
சக்கரனடியில்வீழ்தவத்தனேவிவன். (௨௯)

சரியினன்முகன்படைதசக்கிரீவன்சே
யிரவிடைவிடப்படுமெவருமுய்ந்திட
விரைவினின்மருந்துறும்விலங்கலேந்தியே
பொருகளத்துதவிடும்புனிதனேவிவன். (௩0)

என்றிவைபலமொழிந்தியாவணீயென
வன்றிறல்வீமனன்றுரைப்பமாருதி
யன்றுவாலியைத்தெறுமையன்றூதனியா
னென்றனுங்குந்திசேயிறைஞ்சியேத்தினன். (௩௧)

வாயுசேய்நானெனவணங்கும்வீமனைத்
தூயமைதுலிதுனிதுணித்ததூதுவன்
நேயமோடணைத்தபின்னனுசனீசினச்
சேயமார்பழுவத்திற்செல்வதேனென்றான். (௩௨)

அகந்திகழளியொடுமனுமன்கூறமன்
நகந்திகழருவிபாய்நதியினெய்திய
சுகந்தியமலரினைத்தூயளாகிய
சகந்திகழ்துரோபதன்றனையள்கண்டனள். (௩௩)

தளவலர்நகையளிம்மலரைத்தாவெனு
வளியொடுமறைந்திடவளகைக்கேகயான்
கிளையுயர்பிறங்கலிற்கிளைக்குங்கானிடைத்
தெளிவுறுமறிஞயான்சென்றதென்றனன். (௩௪)

அனுசனீதறையவேயனுமன்கூறுவான்
றனபதிபதியெய்திச்சமர்செய்தேவர
மனவரிதென்னினுமலையவந்திடுஞ்
சினமுறுவயவரைச்செயித்தியாலென்றான். (௩௫)

பின்னருமும்மொடுபெருத்தவெஞ்சம
ரின்னல்செய்சுயோதனனியற்றுநாட்டனிற்
கொன்னுறுவிசையன்றேர்க்கொடியின்வைகியா
னென்னலர்மடியவார்க்குவனென்றோதினன். (௩௬)

வேறு.

தெளிவுறவனுமனிவ்வாறுரைத்துநீசேறியென்ன
வளகையின்வீமனெய்தியமரினுக்கறைதான்கூவி
வளனுறுமணிமானைச்செற்றியக்கரைமடியநூறிக்
கிளர்வரைமீதினேங்குங்கேசரியென்னவார்த்தான். (௩௭)

தனபதிநகரின்வீமன்சமனிலாச்சமரஞ்செய்ய
மனமெலிதருமன்முன்னேமலரினுலெய்துந்தன்மை
துனியுறவிரித்தவைம்பாற்றேகைதானியம்பலோடு
நினைவதன்முன்னர்வந்தானிகரிலாக்கடோர்க்கசன்றான். (௩௮)

பாரினில்வயங்குந்தன் மன்பருதிவானெழுவபோலச்
சீருறுகடோர்க்கசன் றன்னுடனுயர்தேர்னேறி
நேரிலாவளகைமேவுமளவினினெடும்போர்செய்யு
மாருதியுடனேசீறிமலையப்பிங்கலன்றான்வந்தான். (௩௯)

சிந்தையிற்கதத்தினோடுஞ்சேர்ந்திடுகுபேரன்றுய்ய
வந்தமாரறன்சேய்தன்னைநோக்கியேயளப்பிலாத
புந்தியின்மகிட்சியோடும்போந்திடுங்கருமங்கேட்டுக்
கந்தமார்பூவைக்கொய்துகையினிற்கொடுத்தேகென்றான். (௪0)

திருமனோடிலங்குகின்றதனையனைந்தழுவிவீம
னொருநொடியிடுவெமுன்னமுறைந்தமர்சோலையெய்தி
யரிவையர்திலகியானதுரோபதையளகமீதின்
மருவமர்சுகந்தியத்தின்மலரினைச்சூட்டினானால். (௪௧)

சுகந்தியமலரைவீமன்சூட்டவேமகிழுநங்கை
முகந்திகழ்மூரற்பத்திமுத்தினினவிரைக்காட்டச்
சுகந்தினம்புகுந்துபார்ப்புந்தொடர்ந்திடக்கொஞ்சுங்காவி
னகந்துகள்செய்யுங்காலின்சுதனொடுதிரியுநாளின். (௪௨)

மத்தமாதங்கம்போன்றவாயுசேய்துரோபதன்றன்
புத்திரியுடனோர்காவிற்போதமந்தாரவாச
முத்தரமாலினாலேயுற்றிடவியந்துநங்கை
யெத்தவஞ்செய்தாரிந்தவெறிமலரணிவரென்றாள். (௪௩)

வேறு.

தாதுராகஞ்செறிசலதரக்குழற்
கோதையாளிவ்வுரைகூறவாயுசேய்
மாதராயளகையினெய்திவாசமார்
போதையான்றருகுவனென்றுபோயினான். (௪௪)

தேவதாரங்குரவங்கஞ்செல்லுறு
கோவிதாரங்கிளைகோங்கினோங்கியே
வாவுதார்மேயினவானரம்மலி
காவிதாரம்முறுகயங்களோவினான். (௪௫)

மரைகிரிகரியரிமயிடங்கட்கமா
னிரலைசார்த்தூலமாவிதமெண்கோடடர்
விரிவுறுகடறுகள்வேய்கடுன்னிய
வரைபலகடந்தனன்வாயுவெள்கவே. (௪௬)

சரியில்பிங்கலன்பதிசார்ந்துவாயுசேய்
விரிவுறுபொழிலினைக்காக்கும்வீரர்க
டரையினிரியவேசமர்செய்தேவெறி
புரையுமந்தாரத்தின்பூவைக்கொய்தனன். (௪௭)

பாரிடையோங்குமந்தாரப்பூப்பறித்
தேருறுமளகையையிமைப்பினேவியே
நேரிலாசுகன்சுதனெறியினெய்திநற்
சூர்மிகர்துரோபதைகுழலிற்சூட்டினன். (௪௮)

வேறு.

கொந்துமந்தாரப்பூவைக்கோதைதன்குழன்மேற்சூட்டி
யந்தமாரறன்சேயோடேமனிலன்சேய்மருவும்வேலை
யிந்திரன்விடைதானீயவிரதமேலமரர்வாழ்த்த
வந்தவாள்விசையன்றன்மன்மலரடிவணங்கினுனால். (சுகூ)

வந்தடிவணங்கிநின்றமகபதிசிறுவன்றன்னை
யந்தமாரறன்சேயன்பாலணைத்துளமகிழ்ந்துநோக்கிக்
கந்தனைங்கரன்றன்னேடேகயிலையிலிலங்கிவாழு
மிந்துசேகரனைக்கண்டவெழிலெலாமியம்புகென்றான். (ருo)

சரியிலாத்தருமன்கூறத்தனஞ்செயன்மொழியலுற்று
னரனொருசவரனுகியளப்பிலாவெயினர்சூழக்
கிரியினைத்தொடர்ந்தென்னேடெகிளர்ந்துபோர்பொருதுதோன்றி
யிருவினையகலப்பாசுபதாத்திரமீய்ந்தானென்றான். (ருக)

கந்தனூர்தந்தைவெய்யகணைகொடுந்தேகலோடு
மிந்திரனகரினெய்தியெதிர்ந்ததானவரைக்கொன்று
குந்திதன்கொண்கன்பாதங்குறுகிநான்வணங்கியீண்டு
வந்தனனென்னத்தன்மன்மகிழ்ந்தணைத்தமருநாளின். (ருஉ)

அளகாபுரிப் படலம் முற்றிற்று.



ஆ படலம் கூரு - க்குக் கூடிய திருவிருத்தம். உகூசுஎ.

கண்ணபிரான் றிருவடித் தாமரைகடுணை.



ஸ்ரீ

விஷ்ணுமயம்.

ககசு - வது சிந்துபதி

# சிரபங்கப்படலம்.



பகலவன்குலத்திற்றேன்றிப்பரதனுக்கரசையீந்து
குகனொடுங்கங்கைநீங்கிக்கொடியசூர்ப்பநகைமூக்கு
நகிலொடுமீனேயோனீக்கநலமிலாக்கரனைச்செற்று
மிகலிராவணனைக்கொன்றவிராமனைவணக்கஞ்செய்வாம். (க)

மாதவனருந்துஞ்சூதக்கனியைவாள்வீமன்கொய்ய
வேதமாமுனிவந்தெய்திச்சபிப்பனென்றிறஞ்சும்வேலை
யாதவனெய்தியுங்கள்மனத்துறுமியல்பையெல்லா
மோதுதிரென்னமெய்ம்மையுதிட்டிரனுரைக்கலுற்றான். (உ)

சத்தியமாதாஞானம்பிதாத்தன்மம்பிராதாநீதி
மெத்தியதயையாந்தோழன்விழுமியசாந்தந்தேவி
யுத்தமக்கமைநன்மைந்தனெனக்கென்றுதருமனேதைச்
சுத்தமாங்கனிமீதேறவாயுசேய்சொல்லலுற்றான். (ரு)

பரதாரமெனக்குமாதாப்பரபொருள்பாரினோடுஞ்
சரிஞாலத்துதயமானசற்குணவுயிர்களெல்லா
மரிதாமென்னுயிர்க்குநேராமென்றரிமைந்தன்கூறப்
பரிதாமாங்கனிமீதேறப்பற்குனன்பகரலுற்றான். (௪)

வேதசாஸ்திரங்களோதவிரும்பியமறையோர்போன்றுங்
கோதிலாப்பசும்புற்காணுங்கோவினம்போன்றுங்கொண்கன்
போதவேமகிழுநாரிபோன்றும்யான்சமரிற்போவன்
மாதவவென்னமாழைக்கனியெழமாமன்சொல்வான். (௫)

உயிர்தனின்மானந்தன்னினாதிகமிங்கேதென்றான்வின்
புயனுறுமின்னின்யாக்கைபொடிபடவாவிபோகு
நயனமெட்டுடையோன்பொன்றுநாளினுமானம்பொன்றா
தியல்புடையரியேயென்னக்கனியெழவிளையோன்சொல்வான். (௬)

தேவிசேயிளமைசெல்வந்தினமறத்தினமுங்கால
னாவியைக்கவரச்சேர்வனையமிலழியாவீட்டின்
மேவநல்லறமேயுற்றதுணையெனக்கனிமீதேற
மாவடுநயனமானுந்துரோபதியறைவண்மாதோ. (௭)

சுந்தரவடிவுமிக்கதூயவேணிகர்ப்பாராகிற்
றந்தைதன்பிராதாமைந்தனென்னினுந்தையலார்க
ணிந்தையென்றிகழார்போகவிரப்பிடநினைவொன்னக்
கந்தமார்கனிகொம்பேறாக்கருமத்தாற்கண்ணன்சொல்வான். (௮)

அரிவைநீமெய்கூறென்னவணங்கினாள்பகருவாளென்
னிருநகின்மிசையிற்றோயும்பதியைவொனினும்பார்த்தன்
சரியுளாரிலாமையாலேதவிர்ந்தனனாசையென்ன
விளைவின்மாங்கனிகொம்பெய்தவிமலன்போய்த்துவரைபுக்கான். (௯)

சகுனிதன்மருகன்றுய்யதவனொணுந்துருவாசற்கே
யிகழ்விலாயிரத்தின்வர்க்கப்பதார்த்தமோடன்னமெல்லா
நிகரில்பொற்கலத்தினேரினெய்யொடுநிறைப்பவன்பு
மிகுமுனியருந்தலோடும்வியாளகேதனன்றான்செல்வான். (௧௦)

இரணியக்கலத்திலியான்றானளித்திடுமெடிசிலெல்லாந்
தருமனாண்டளியானாகிற்சபித்தியென்றுரைத்துவேண்ட
வருமறையவன்றானீதேசெய்வனென்றறைந்துபாரின்
விளைவினிற்குந்திமைந்தர்மேவியவனத்திற்சேர்ந்தான். (௧௧)

நெறியுறுமந்தணாளர்நீதிசேர்குந்திமைந்தர்
குறைவறவமுதுசெய்தபின்னரின்குவலையத்தின்
மறுவில்பாஞ்சாலன்பாவையருந்தவேவயங்கும்பாண்டம்
வெறுமையாயிருக்கும்வேலைவிழுமியதவத்தோன்வந்தான். (௧௨)

தீமையிலவர்முந்திச்சென்றடிவணங்கலோடுந்
தூயனாமுனிவனோக்கித்துலங்குபொற்கலத்தின்மிக்க
வாயிரவருக்கமாயபதார்த்தமோடன்னமெல்லா
நேயமோடளியாயாகிற்சபிப்பன்யானென்றுநின்றான். (௧௩)

ஏருறுதவத்தோனிவ்வாறுரைத்திடமுனிவவேகி
நீரினிற்படிந்துவாவென்றறன்சுதன்னிகழ்த்தலோடும்
பாரினோடயத்துளெய்திப்படிந்திடநெறியோன்போனான்
சீருறுமைவரஞ்சிச்சீதராகாத்தியென்றார். (௧௪)

வீரர்கணினைக்குமுன்னம்விமலனுண்டெய்தியேதான்
நேரிலாப்பாண்டத்தன்னநிறைத்துயர்காரைச்சாகஞ்
சீருறுமிஞ்சிமேதித்ததியிவைசிறப்பவூணு
ணேரிலைக்கலத்தினெய்துமுனிவனுக்கிடுவித்தானால். (௧௫)

தூயபொற்கலனேருணிலையென்றுந்துருவாசன்றா
னாயிரம்பதார்த்தமிஞ்சிக்காரையோடளையாமென்று
நேயமோடருந்திச்சிந்தைமகிழ்வொடுநெறியிற்போக
மாயவன்பதியினெய்தமன்னவரிருக்குநாளின். (௧௬)

அத்தினாபுரியையாளுமரசன்றன்னனுசன்றீய
மைத்துனன்மாமன்கன்னன்மறமுறுமிவர்களோடுங்
குத்திரமதியினாலேகுந்திதன்புதல்வர்தம்மை
யத்திரப்பெருமையாலாண்டமர்செய்துவதைக்கவெண்ணி. (௧௭)

கரியினைவேட்டையாடக்கானிடைச்செல்வான்போலச்
சரியிலாப்பாண்டுமைந்தர்சார்விடத்தெழில்வாவிக்க
ணரிமலர்ச்சோலைதன்னுளரசர்கண்மிடையப்பொன்னின்
புரியுறைமன்னனாவினிரையெலாங்கொண்டுபோந்தான். (௧௮)

அத்தினபுரியையாள்வோனானிரைகவர்ந்தசெய்கை
மத்தவெண்களிற்றினேறுமன்னனுக்காயர்கூறச்
சித்திரசேனன்றன்னைச்செருவுறப்பொருதேயந்தன்
புத்திரன்புயத்தைவீக்கிப்போதெனப்புகன்றானன்றே. (௧௯)

தீய்மையில்வலாரிகூறச்சித்திரசேனனெய்தி
யேயெனுமுன்னமாவினிரையெலாமெதிர்ந்துமீட்டு
மாயவெம்படையினாலேமன்னனைமயக்கியந்தன்
சேயிருபுயத்தைவீக்கிச்சேணிடைச்சென்றானன்றே. (௨0)

அத்தினாபுரியையாளுமரசன்றன்புயத்தைவீக்கிச்
சித்திரசேனன்சேணிற்பெயர்ந்திடுஞ்செய்கையெல்லா
முத்தமத்தருமன்பாலினுரைத்திருகண்ணீர்சோரப்
பத்தியினிறைஞ்சிப்பானுமதிபதைத்தழுதாளன்றே. (௨௧)

அரவுயர்வேந்தன்றேவியறைந்திடக்கேட்டதன்மன்
வெருவியேயவனைமீட்கவீமநீபோதியென்ன
வெரியுறுநயனனாகிமறுப்பவிந்திரன்றன்மைந்தன்
சரியில்காண்டீபமேந்திச்சமர்செயச்சென்றானன்றே. (௨௨)

சித்திரசேனன்றன்னைச்செருவிடைவிசயன்வென்று
கைத்தலமவனாற்கட்டுண்கண்ணிலான்புதல்வன்றன்னை
வித்தகத்தருமன்முன்னர்விடுத்தலும்விடுதியென்னச்
சுத்தவான்வடமீனன்னதுரோபதிவந்துசொல்வாள். (௨௩)

என்னையன்றிகழ்வுசெய்தவேழைநீயெதிர்த்துப்போர்செய்
யொன்னலன்றன் றற்கட்டுண்டின்னமுமொருகோலோச்சி
மன்னவனுகிப்பாரையாண்டுநீமதியிலாத
கன்னனேடிருத்தியோவென்றிவையெலாங்கழறிநக்காள். (உ௪)

நாரியர்திலகமான துரோபதைநகைக்கநாணிப்
பாரினைநோக்கிநின்றபன்னகத்துவசன்றேளில்
வாரினைவிசையனீக்கமறனறநெறியையோம்பி
யேருறுந்தருமனேக்கியுன்னகர்க்கேகென்றுனல். (உ௫)

அறனருண்மைந்தனேகென் றறையப்பாஞ்சாலிநங்கை
யுறநகைசெய்தாளென்றேயுளங்கனன்றேகுகின்ற
வறிவிலியுடனேயைவர்தேவியாமணங்கைப்பற்றிச்
சிறையிடைத்தருவனென்றுசெயித்திரதன்றன்சொன்னன். (உ௬)

மைத்துனன்மொழியலோமெகிழ்ந்திடுமனத்தனை
வத்தினபுரியையாள்வோனவுடனைப்பற்றியென்முன்
வைத்தியேனலனென்றேதமறனுறுசிந்துநாடன்
உத்தமத்தருமராசனுறையுமாவனத்திற்சேர்ந்தான். (உ௭)

பூரியசிந்துநாடன்புடைவருங்கயவராலே
பாரினெண்டவத்தோர்வைகும்பதியினையழித்தலோடும்
ஏருறுமைவர்சீறியேகலுமெழிற்பாஞ்சால
வீரியன்மகளைப்பற்றிவெய்யவன்றேர்மேன்மீண்டான். (உ௮)

மறுவில்பாஞ்சாலன்பெற்றமங்கையைவையத்தேற்றி
யறிவிலாச்சிந்துநாடனகன்றனனென்றேபாறி
மறையவர்புகலவேகும்வாயுசேயவனைப்பற்றி
யெறுழ்வலிக்கரத்திறைலேபுடைத்தனனிரத்தங்கக்க. (உ௯)

புரத்தினையெரித்தோன்போலப்புகையுயிர்த்தனிலன்மைந்தன்
கரத்தினுலுரத்தின்மோதிக்கயவன்றேட்கயிற்றால்வீக்கிச்
சிரத்தினிற்சிகையையைந்தாய்ச்சிரைத்தொருகொடிப்பின்முன்னம்
விரித்திடுங்குழலாளோடுமேயினன்விறலின்மிக்கான். (௩௰)

சிரமிசைச்சிகையைந்தெய்துஞ்சீரிலாவரசன்றன்னைத்
தருமன்முன்காட்டவேதன்றங்கைதன்கொழுநனைய
நிருபனைவிடுதியென்றுநிகழ்த்தலுமனிலன்மைந்த
னுரமிசைமோதிப்போதியென்னவேயோட்டினுனல். (௩௧)

வெருவியேபாறுஞ்சிந்துநாடன்மெய்த்தவந்தான்செய்ய
அரனவணெய்திக்கொன்றைமாலையோடயத்தண்டீந்தே
பொருசினத்தைவர்தம்மைச்செயஞ்செயென்றேதிப்போக
வரவுயர்மன்பாலேகியிவையெலாமறைந்தானன்றே. (௩௨)

மைத்துனன்றன்னைவிமன்வசையுறச்செய்ததெல்லா
முத்தமக்கங்கைமைந்தன்முதலினேர்க்குரைத்துவெய்ய
குத்திரமனத்தனைகாளமாமுனியைக்கூவிக்
கைத்தலங்குவித்துநின்றேகண்ணிலான்மதலைசொல்வான். (௩௩)

துய்யவாகொடியவோமந்துடங்கிநீமுடித்தற்காணி
னைவனைவதைத்தியென்னவதற்கிசைந்தவன்றனேகி
வெய்யவனுவிசாரம்விளைத்திடச்சூலமேந்துங்
கையுடன்பூதமந்தக்கனலிடையெழுந்ததன்றே. (௩௪)

எரியுறுநயனமூன்றுமிருபிறையெயிறுந்தோன்றக்
கரனுறுசூலமேந்திக்கனலிடையெழுந்தபூதம்
விரைவினிலுனக்கியான்செய்கருமநீவிளம்புகென்னத்
தருமனோடைவர்தம்மைவதைத்திவண்சார்தியென்றான். (௩௫)

இன்னல்கொண்முனிவனுண்டீதியம்பிடவுயிரினோடு
மன்னவரைவர்தம்மைமண்மிசைக்கண்டிலேனே
னுன்னையான்வதைப்பனென்றேயுரைத்துயருததிநாப்பண்
வன்னிபோலெழுந்துபூதம்வனத்திடைச்சேரும்வேலை. (௩௬)

இந்திரைகொழுநன்றூயவியல்புறுமறனைக்கூவிப்
புந்தியின்முனிவனேமக்கனலிடையெழுந்தபூதம்
வந்துபாண்டவர்கடன்னைவதைசெயாவண்ணநீயே
முந்தியேகாத்தியென்றுமொழிந்தனன்வினைகடீர்ப்பான். (௩௭)

அரியிவையருளக்கேட்டவறனவண்விரைவினெய்தி
யிரலையினுருவமாகியிருபிறப்பாளர்வேள்விக்
குரியபிண்டத்தைவாயிற்கவ்வியேயோடலோடுந்
தருமனோடைவர்சீறித்தொடர்ந்தனர்தரணிமீதே. (௩௮)

கடிதினிரலைநூறுகாவதங்கழிந்துபோயோர்
வடவிருக்கத்தின்கீழ்மறைதலும்பாண்டுமைந்த
ரடவியின்வெம்மையாலுமலரியோன்வெயிலினாலு
முடலுளங்கனன்றேயந்தமரத்திடையுற்றாரன்றே. (௩௯)

தூயநீர்தருதியென்றேயறனருள்சுதன்றான்சொல்ல
வேயெனுமுன்னநால்வர்க்கிளையவன்கானினேகி
மீயுயரறனுங்கேயோர்பொய்கைநீர்விடமதாக
வாயவையறிகிலான்மற்றவ்வயமுண்டுமாண்டான். (௪௦)

மத்திரைக்கிளையமைந்தன்வருகிலானென்றுபாண்டு
புத்திரர்மூன்றுபேரும்போயயமுண்டுமாண்டார்
வித்தகவறன்றன்சேயினுயிரினைவாங்கிவிஞ்சுங்
கைத்தலத்தமைத்துமேனிகரந்தவணிருக்குங்காலை. (௪௧)

நீளியசூலமேந்திநிகரிலாப்பூதமெய்தித்
தாளுயர்கமலம்பூத்ததடத்தினும்வடத்தின்கீழு
மீளிபோன்மாண்டபாண்டுபுதல்வரைவிளித்துநோக்கிக்
காளமாமுனியைநுங்கிக்கனலிடைப்புகுந்ததம்மா. (௪௨)

படியினின்மாண்டுவீழ்ந்தபாண்டவர்தம்மைநோக்கிக்
கடிதினிற்பூதமெய்திக்காளமாமுனியைநுங்க
நடுவன்றன்சுதனுக்காவிநல்கிடவெழுந்துதன்மன்
கடிதினினீருக்கேகுங்கனிட்டனைத்தேடினானால். (௪௩)

படியினிற்கண்ணீர்சோரப்பருவரலுற்றதலைமயல
கடிதினிற்கானினேகிக்கடிமலர்த்தரங்கவாரி
விடசலம்பருகிமாண்டவேந்தரைக்கண்டுவிம்மி
யிடருளந்தரற்றினானொலியாவருமிணையிலாதான். (௪௪)

படியினின்மடிந்துவீழ்ந்தபவமிலாவனுசரெல்லாம்
விடசலமுண்டுமாண்டாரென்பதையறிந்துவீரன்
கொடியவந்நீரையள்ளிக்குடிக்குமுன்றடுத்துநின்றே
கடிதினின்மறையோனாகியறனிவைகழறலுற்றான். (௪௫)

வாவியென்காவன்மன்னாயான்சொலும்வசனந்தன்னை
நீவிளங்கிடவேயாய்ந்துநிகழ்த்திலிந்நீரையுண்டுன்
னாவியைவிடுதியென்றேயறைந்திடவருடியென்று
பாவமிலரசன்சொல்லவறனிவைபகரலுற்றான். (௪௬)

அருமறைப்படியேதுய்யவறநெறியடங்கக்கூறத்
தருமனுண்டிசையவெல்லாப்பொருளையுஞ்சாற்றலோடு
மரசவிந்நீரையுண்டுமாண்டவுன்னனுசர்தம்மி
லொருவனுக்குயிர்தந்தேனானெழுப்புகென்றுரைசெய்தானால். (௪௭)

சுத்தநான்மறையோன்சொல்லத்தூயமாதருமனேகி
யுத்தமமாவலோனையெழுப்பவேயுவந்துநோக்கி
வித்தகவீமன்றன்னைவிசையனையெழுப்பிடாமன்
மத்திரைதனயன்றன்னையெழுப்பியவாறேதென்றான். (௪௮)

குந்திதன்சிறுவனாகியானுளன்கோதிலாத
வெந்தைதன்னுடனேவானினேகியசிற்றவ்வைக்கு
மைந்தனாகுலன்றன்னையெழுப்பினேன்மாசிலாத
வந்தணவெனவேதன்மனறைந்திடவறனுஞ்சொல்வான். (௪௯)

நீதியினால்வேதத்தினெறியுறுவாய்மைதன்னிற்
பூதலத்தியாருமொவ்வாப்புகழுடையரசவுன்றன்
ஏதமிலிளையோரானநால்வரையெழுப்புகென்றே
யோதமன்மலர்க்கைநீண்டவெழுந்தனருவகையோடும். (௫0)

தம்பியர்நால்வரோடுந்தருமனுண்டுவந்துநிற்க
வும்பரினறன்றன்சிந்தையுவந்துதன்னுருவைக்காட்ட
வம்பவிழ்தாரோரெய்திவணங்கலுமவரைநோக்கி
யிம்பரினுமக்கின்றுற்றவிடர்சொலக்கேளுமென்றான். (௫௧)

கடுவரவுயர்த்தோன்கூறக்காளமாமுனிவனென்னுங்
கொடியவனாவிசாரமுடித்திடக்கொண்டன்மீதி
னிடியெனவதிர்த்துச்சூலமேந்தியக்கனலுளெய்து
நெடியபூதத்தையும்மைவதைக்கவேநிகழ்த்திவிட்டான். (௫௨)

கரியினைவதைத்தகோமானெனக்கிவைகழறலோடு
மிரலையாயாகசாலைப்பிண்டம்யான்கவ்வியேகத்
தரையினினீவிரெய்தித்தொடர்ந்திடச்சரியில்லாத
விரிவுறுவடத்தினீழல்மேவியேகரந்தேன்கேண்மின். (௫௩)

அடவியிலேகியுன்றனனுசர்களுல்வர்யான்செய்
விடசலம்பருகிவீழ்ந்தார்விழுமியமனநின்றவி
கடிதினிற்கரத்தின்வாங்கிவடத்தியான்கரந்துநிற்கக்
கொடியவெம்பூதம்வெய்யகூற்றெனவதிர்த்துவந்த. (௫௪)

மாண்டிடுமுங்கடன்னைநோக்கியேமறங்கொள்பூத
மீண்டுபோய்முனிவன்றன்னைவிழுங்கவேயிடர்கடீர்ந்தீர்
பாண்டுவின்குமரர்நீவிர்பவமிலாவிராடனூரி
னீண்டியேகரந்தோராண்டுமிருத்திரொன்றேகினுனல். (௫௫)

## சிந்துபதி சிரபங்கப் படலம் முற்றிற்று.



ஆ படலம் ௫௪-க்குக் கூடிய திருவிருத்தம் ௩௦௨௨.



கண்ணபிரான் றிருவடித்தாமரைக டுணை.



ஸ்ரீ

விஷ்ணுமயம்.

௧௧௫ - வது பாண்டவர்

# அக்கியாதவாசப் படலம்.



உருவெனவிளங்கித்தோன்றியுருவிலியாகிப்பூவின்
வருதிருவுக்குக்கொண்கனுகிருன்மறைகளெல்லாந்
தெரிகிலதாகமாயையியற்றியசெங்கண்மாலை
மருளுறுபிறவியோவவாழ்த்தியேயுய்திநெஞ்சே. (௧)

அந்தமாரறனீதெல்லாமறைந்திடக்கேட்டவைவர்
இந்திரைகேள்வன்றீமையகற்றியவியல்பினுலே
சிந்தையின்மகிழ்ந்துதூசுவளர்ந்திடச்சிறந்தாளோடு
முந்தியேகரந்துசெல்லுமுயற்சிசெய்திருந்தாரன்றே. (௨)

விடசலம்பருகியைவர்வீய்ந்தனரொன்றுகூறி
யடைதிர்நம்பதியையென்றேயந்தணர்தம்மையேவிக்
கடியவெங்கானமோவிக்கதலிவண்கமுககன்னன்
மிடையவேவளங்கொண்டோங்கும்விராடமாபுரத்தைச்சேர்ந்தார். (௩)

தருமன்மாமறையோனுகிமடையனுய்ச்சமீரணன்சேய்
மருளொழிவிசயன்பேடியாகிமாநகுலன்பின்னே
னிருவரும்பரியுங்கோவுமியற்றுவராகித்தூய
வரிவைதான்வனைதல்செய்யுமணங்குமாயடைந்தாரன்றே. (௪)

அறுவரும்வடிவுவேறுயடைந்திடவிராடராச
னெறியுறுமறையோன்றன்னைநீயென்பாலிருத்தியென்றே
மறுவிலாமடையனுக்குமாவலோன்றனக்குமண்ணிற்
கறவையாமேய்ப்போனுக்குமவரவர்தொழிற்கற்பித்தான். (௫)

வினையறுபேடிதன்னைவேந்தன்றன் பெற்றமங்கை
துணியறுமுத்தரைக்குத்தோழியாயிருத்தியென்று
வனைதல்செய்மடந்தைதன்னைமன்னவன் றன்றேவிக்கே
யினியவண்கோலஞ்செய்திண்டிருத்தியென்றேவினுனால். (௬)

சுந்தரவிராடராசன்றேவியாஞ்சுதக்கணைக்கே
அந்தமார்வனைதல்செய்யுமணங்குவாணியக்கரைவர்
வந்தெனையடைவரொன்னைமதிக்கிலாதடர்வார்தம்மை
முந்தியேவதைப்பரொன்றுமொழிந்தவளிருக்குநாளில். (௭)

ஏசிலாவிராடராசன்றேவிதன்னிளையோனுன
கீசகன்வனைதல்செய்யுங்கிளிமொழியழகுநோக்கி
யாசைகொண்டனன்யாரெனன்றேயடர்ந்திடநடுங்கியோடித்
தேசுறுசுதக்கணைக்காண்டிவையெலாஞ்செப்பினுளால். (௮)

மின்னிடைவிதலையெய்திவிளம்பிடவெருவலென்று
வன்னமென்னடையளாயசுதக்கணையறைதலோடுந்
துன்னியதுனிகண்மிக்கதுரோபதையமரும்போழ்தின்
முன்னவண்முன்னரெய்திக்கீசகன்மொழியலுற்றன். (௯)

ஓவியமுயிர்பெற்றென்னவுருவத்தாள்வனைதல்செயுங்
காவிசேர்விழியாளென்னைக்கலவிசெய்தணையாளாகி
லாவிபோமவளையென்முன்விடுத்தியென்றறைதலோடுந்
தூவியோதிமம்போல்வைகுஞ்சுதக்கணையிசைந்தாளன்றே. (௧௦)

சுந்தரவடிவுமிக்கசுதக்கணவனைதல்செய்யு
மிந்துவின்வதனத்தாளையெழிலுறுகீசகன்முன்
சந்துநீகொடுத்துமீடியெனவவள்சாற்றலோடுஞ்
சிந்தையின்வெருவிச்சென்றடிலாவடமீன்போல்வாள். (௧௧)

விரைவினிலெய்திநீசக்கீசகன்முன்னர்மேவி
யரிவைதான்கலவைபீய்ந்துமீளுமுனறனிலாதான்
விரிகுழலணங்கினளைத்தொடர்ந்திடவிண்ணினேங்கு
மிரவியைத்தொழுதுநீயேகாவெனவிளம்பினுளால். (௧௨)

தியக்கமுற்றேடுகின்றமின்னிவைசெப்பலோடு
மியக்கனையிரவியேவவவனெழுந்திம்பரெய்தி
மயக்கமுற்றடருவான்றன்மார்பிடையிடிபோன்மோதிக்
கயற்கணிதுனியைநீக்கிக்ககனமீதடைந்தானன்றே. (௧௩)

மன்னவன்விராடன்முன்னரெய்தியுன்மைத்துனன்ற
னின்னலாமுறைகள்செய்தேயென்னைவந்தடர்த்தானென்று
சொன்னமின்றனக்குத்தீயோன்சொல்லியவசனங்கேளா
னென்னலுமடையன்பாலினெய்திமீதியம்பினுளால். (௧௪)

தழலெனவடருங்கற்பாள்சாற்றலுமெழில்கொள்வீம
னழலுறுமனத்தனுகியரிவைநீயவன்பாற்சென்று
பொழிலிடையடைதியென்றேபுகலுதிமயலினுலே
யுழலுநெஞ்சினனைக்கொல்வனியானெனவுரைத்தானன்றே. (௧௫)

துனியறுவீமனிவ்வாறுரைத்திடத்துயரையோவி
வனைதல்செய்வனிதையெய்திப்பசலையாய்மயல்கொள்வானை
நனிமலர்ப்பொழிலிலியானேநண்ணுவனீயுமெய்தென்
றனநடையணங்குகூறமகிழ்ந்தவணடைவனென்றான். (௧௬)

கீசகனுடனிவ்வாறுகிளத்தியேவடமீன்போல்வா
ளேசிலாமடையன்றன்னேடியம்பலுமுனிந்துவீமன்
வாசமார்பொழிலிற்பண்மண்டபமிசையின்வைக
நாசமாநீசனந்தரள்ளிருளிடையின்வந்தான். (௧௭)

தூயமாமண்டபத்திற்றுயில்கொள்வான்போலுற்றானை
யாயிழையென்றுகையாலணைத்தின்பமறையலுற்ற
தீயனைமுடுகிவீமன்சினத்தவன்சிரத்தின்மோதி
யேயெனுமுன்னமாங்கேவதைசெய்தேயேகினுல். (௧௮)

மடிந்திடுகீசகன்றனனுசராமறவரெய்திக்
கடந்தருங்கரியையேயுங்கயவனைக்கனலினிட்டே
மடந்தையர்திலதமன்னவனிதையையழலுட்போடத்
தொடர்ந்தவர்தம்மைவீமனியக்கனுய்த்துணித்துவீழ்த்தான். (௧௯)

வனைதல்செய்வனிதையாடன்மயறன்னாற்கீசகன்று
னினியதன்னனுசரோடுமியக்கனுலிறந்தானென்றே
துனியுறுவிராடனேடுஞ்சுதக்கணையிடரின்வீழ
மனமகிழ்ந்தைவரோடுமடந்தைதானிருக்குநாளில். (௨௦)

படவரவுயர்த்தகோமான்பாண்டவர்பன்னீராண்டு
கடியவெங்கானிலெய்திக்கரந்துறையோராண்டுள்ளே
புடவியினவரைக்கண்டுவெளிப்படுத்திடப்போந்தூத்
ரடையவேயவனியெங்குமடைந்திடவேவினுல். (௨௧)

கொடியமன்கூறத்தூதர்குவலயமெங்குந்தேடி
வடிவுடையவரைக்காணார்மன்னர்மன்னவன்முன்னெய்தி
யடவியில்வரையினுட்டிலளப்பிலாப்புரியிற்காணேம்
விடசலமைவருண்டுமடிந்ததேமெய்மையென்றார். (௨௨)

ஆதுவர்மொழியக்கேட்டுச்சுயோதனன்மகிழ்தலோடு
மேதமில்கங்கைசெம்மலியம்புவான்பாண்டுமைந்தர்
மாதவனருளின்வாழ்வோர்மடிந்திடார்சூதிற்றோற்றே
யோதியபதின்மூவாண்டுமொருவிடவருவரென்றான். (௨௩)

கங்கைதன்மைந்தன்கூறக்கண்ணிலானருளுஞ்செம்ம
லங்கண்மால்சகாயரானவைவரும்விடநீருண்டு
மங்கிலரென்னிலன்றுருறையுமாபதியைநீயே
திங்களின்மரபின்வந்தாய்செப்புதிதெரியவென்றான். (௨௪)

அரவுயர்வேந்தன்கூறவருள்செறிதிகங்கைமைந்தன்
றருமன்வாழ்வளநாடெல்லாந்தருமமெய்நீதியோங்க
வரிவையர்கற்புண்டாகியாணிரைபல்கியாரு
மிருதியுறவேவைபங்கூழெங்கணுமிலங்குமென்றான். (௨௫)

ஏசறுகங்கைமைந்தனியம்பலுஞ்சுயோதனன்றான்
மாசறுதூதர்தம்மைநோக்கியேவாரிசூழுங்
காசினிமுழுதுந்தேடித்திரிந்தநீர்கவின்கொண்டோங்குந்
தேசுறுநாடேதென்றுதெரிவுறச்செப்புமென்றான். (உசு)

அரசனீதுரைத்தலோடுந்தூதுவரறைவராற்றின்
கரைசெறிபொழினீள்கன்னல்கதலிபூங்கமுகுசெந்நெல்
விரைசெறிந்திலங்குகின்றவிராடன்மாவளநாடென்றே
வுரைசெய்தோரற்புதங்கேண்மன்னவென்றோதுவாரால். (உஎ)

மாசகல்வனைதன்பின்னாண்மீதுறுமயலினாலே
கீசகனநுசரோடுங்கிளர்ந்துறுமியக்கனாலே
நாசமுற்றனனென்றந்தனன்னகர்நடுங்குமென்றே
யாசகறூதர்கூறவரவுயர்துவசன்சொல்வான். (உஅ)

கீசகன்றன்னைச்செற்றான்கேசரிநிகராம்வீமன்
மாசகல்வனைதன்பின்னாடுரோபதன்மகளேயாகு
மேசகனகரந்தன்னினல்வருமிருப்பரொன்றே
யாசறுமனத்தனாகிச்சுயோதனனறையலுற்றான். (உகூ)

விறல்செறிமல்லர்தம்மைவிராடமாபுரியினேவின்
திறலுடையவன்றன்மல்லர்திரளினைச்செற்றபோது
குறைவிலாவீமனங்கேயிருந்திடினிவனைக்கொல்வ
னறிவுதற்கிதுவேநல்லகருமமென்றறைந்தான்பின்னர். (௩0)

ஆயிரமல்லர்தம்மையழைத்தவர்க்காடைநல்கித்
தூயமாவிராடனூரிற்றொலைவிலாமல்லர்தம்மை
யேயெனுமுன்னமெய்திவதைத்திடுமென்றலோடு
மீயுயர்வரையுங்கானும்விரைவினிற்கடந்துபோனார். (௩க)

கடிதினிலெய்திமல்லர்விராடனைக்கண்டவ்வூரின்
மிடலுடைமல்லர்தம்மோடமர்செய்துவீட்டவீமன்
மடையனாண்டவரையெல்லாம்வதைத்தொருமல்லனைவிட்டா
னிடையனாங்கவன்றனெற்றிபின்னுறத்திருப்பிவிட்டான். (௩உ)

கடிதினிலவன்றானெய்திக்கண்ணிலான்மைந்தனோடு
மிடலுடைமல்லரவ்வூர்மல்லனைவீட்டலோடு
மடையனாண்டவரையெல்லாம்வதைசெய்தேயென்னைவிட்டா
னிடையனென்வதனம்பின்னேயுறத்திருப்பினனீதென்றான். (௩௩)

என்றிவைமல்லன்கூறவெதிரிலாச்சுயோதனன்றான்
கன்றியமனத்தனாகிக்கடுந்திறற்பகைஞர்பாரிற்
பொன்றினதில்லையென்னாப்புகன்றனன்விராடனாட்டிற்
றென்றிசையேகிச்சிந்துநாடனீசெருச்செய்யென்றான். (௩௪)

சிந்துவுக்கிறைவன்றேரினேறித்தென்றிசையினேகி
வந்தெதிர்பொருதுசீறும்விராடனைவரிவிற்கோலி
யுந்திடுபகழிதன்னாலொண்சிலையிரதம்பாரிற்
சிந்திடவறுத்துத்தோளைப்பிணித்தனன்சேனையார்ப்ப. (௩ரு)

விறலுறுசிந்துநாடன்விராடனைப்பிணித்தலோடு
மறலிபோற்சீறிவீமன்மைத்துனன்றன்னைப்பற்றித்
திறலுடைக்கரத்திருலேசிரத்தினைத்திருகுமுன்ன
ரறன்மகன்விலக்கலோடுமோருயிருய்ந்துபோனான். (கூசு)

சிந்துவுக்கிறைவனோடைவிராடனைத்தேரினேற்றி
யந்தமாரறன்சேய்வீமனருச்சுனற்கிளையவீரர்
தந்திவெம்பரிமாச்சேனைதரணியினிறைந்துசூழச்
சிந்தையின்மகிழ்வினேடுந்தேரிடைச்செல்லும்வேலை. (கூஎ)

அத்தினபுரியையாள்வோனனிரைகவர்ந்துகொண்டே
யுத்தரதிசையினெய்தவுத்தரன்முனிவினோடு
வித்தகவிசையனேயவிரவலர்தம்மையெல்லாங்
கைத்தலக்கணையினாலேவதைசெய்வன்காண்டியென்றான். (கூஅ)

வசையிலாவிராடராசன்மகனிவைகூறலோடு
மசைவில்கற்புடையளாயதுரோபதைதவனைநோக்கி
விசையனுக்குவமைநீயோமின்மினிவெள்ளியாமோ
சசிகுலர்வலனைத்தோற்றாதெள்கல்சாற்றுதியோவென்றாள். (கூகூ)

வீடுமன்விதுரன்கன்னன்வேதியனவன்றன்மைந்தன்
கோடுகண்முழக்கிவெய்யகொடுஞ்சமர்செய்யும்போழ்தி
னீடியபகழிதூவிநீயெதிர்நிற்கலாற்றாய்
பேடிதேருரில்வெல்வையென்றிவைபேசினாளால். (௪0)

வித்தகவைவர்தேவியானமின்கூறலோடு
முத்தரன்றங்கையானவுத்தரைதன்னைநோக்கி
யத்தினபுரியையாளுமரசனையமரில்வெல்லச்
சித்திரமணித்தேர்பேடியூர்கெனச்செப்புகென்றான். (௪க)

சீருறுமுன்னோன்கூறச்சிறந்தவுத்தரைதானேகி
யேருறும்பேடிதன்னையிருகையாற்றழுவிநோக்கி
நேரிலொன்னலரைவெல்லநீயெனதைசுதனுக்கின்று
தேரினையூர்தியென்னவிசைந்தவன்சென்றானன்றே. (௪௨)

ஓதுதற்கரியபொற்றேருத்தரைதோழியூர
வேதமில்விராடன்சேய்தானேகியேசுயோதனன்றன்
போதகமிவுளிவீரர்புணரிபோலார்ப்பக்கண்டு
பீதியோடோடலோடும்பேடிகைப்பிடித்துச்சொல்வான். (௪௩)

செருவெலவொருமைச்சிந்தைசேர்கலாய்படியிற்பாற
நிருபருக்கடுக்குமோதானீயின்றுவெருவலென்று
வரனெடுத்தாள்கோயிலனுகியாயுதங்களெல்லாம்
விரைவினிற்காட்டலோடுமுத்தரன்விளம்பலுற்றான். (௪௪)

பாரியகதையும்வில்லும்படைகளுமியாரதென்ன
வேருறுபாண்டுமைந்தரொடுக்குமாயுதங்களென்று
னேரிலாக்குந்திமைந்தரெங்குளார்திகழ்த்தியென்று
வீரவுத்தரன்றன்கூறவிசையனுங்கறையலுற்றான். (௪௫)

மறையவன்றருமன்வீமன்மடையன்மாவலவனீதி
யறிவுறுநகுலனயனாகிய சாதேவன்றான்
மறுவிலாவுந்தைதன்பால்வைகினர்வனைதல்செய்வா
ணெறியுறுபாஞ்சாலன்றன்மகளெனநிகழ்த்தினானால். (௪௬)

பீடுடைவிசயன்கூறவுத்தரன்பேசுவானெண்
ணாடவர்திலகனானவருச்சுனனெங்கேயென்னப்
பேடியாம்யானேபார்த்தனென்றுபேர்பத்தும்பேச
வாடுறாம்மாலையோடும்வயங்கினன்கிரீடியம்மா. (௪௭)

வித்தகவிசையனாகிவிளங்கின்றானைநோக்கி
யுத்தரன்பணிதலோடுமுவந்தெடுத்தணைத்துக்கொண்டு
சத்துருவெனவேயெய்துநிருபரைச்சமரின்வெல்லச்
சித்திரமணித்தேரூர்திநீயெனச்செப்பினானால். (௪௮)

உத்தரன்றேரையூரவுத்தமவிசயனெய்திக்
கைத்தலத்துயர்காண்டீபங்கடிதினின்வளையவாங்கி
யத்திரமாரிபெய்தேயானிரையெல்லாமீட்டாண்
டெத்திசைதோறுமொன்னாரிரிந்திடக்கணைபெய்தார்த்தான். (௪௯)

மறையவனவன்றன்மைந்தன்வரநதிபுதல்வன்கன்ன
னிறுதியின்மழையையேலவெய்தவரார்ப்பப்பார்த்தன்
மறுவிலாவாளிபெய்துமாற்றியேயவர்கள்கையி
னுறுசிலைகொடிதேரெல்லாமறுத்திடவோடினாரால். (௫௦)

அரவுயர்வேந்தனெய்தியடுகணைசொரியப்பார்த்த
னொருகணையதனான்மாற்றியுரத்தொருவாளியேவ
வெருவியேகுருதிவாயின்வீழ்ந்திடநிருபனோடு
மரிவரக்கண்டதோற்போலனைவருமோடினாரால். (௫௧)

வானதிபுதல்வன்கன்னன்மறையவனிவுளித்தாமா
வூனமேமலியுந்துச்சாதனனுயர்சுயோதனன்றா
னீனமேமலியப்பாறவெழில்கொண்மாவிசயன்பாரி
னானிரையடையமீட்டானமரர்கடுதிப்பவம்மா. (௫௨)

ஏதமில்விராடன்சேயோடிந்திரன்செம்மல்சொல்வான்
மாதுதானலாதபேடியாகியேவருவன்போரின்
வேதியன்முதலோர்தம்மைவென்றாநிரைமீட்டாயென்
றோதவேதூதர்தம்மையுந்தைபால்விடுத்தியென்றான். (௫௩)

ஈதுறவுரைத்துப்பேடியாகியேயிரதமூரத்
தீதுறுசுயோதனன்றன்சேனையோடிமைப்பின்முன்னம்
பீதியோடோடயானேவென்றனனென்றுபேசித்
தாதைபால்விடுத்தான்றூதர்தம்மையுத்தரன்றான்மன்னோ. (௫௪)

வீடுமன்முதலினோரைவென்றுன்சேய்மீண்டானென்றே
பீடுடைவிராடன்முன்னரெய்தியேதூதர்பேச
நாடுடையரசர்கோமானலனுறுமகிழ்வோடெய்தி
நீடியகொடிகள்வானினிறையுமாநகரிற்சென்றான். (௫௫)

இரவிசேய்முதலினோயிமைப்பின்முன்வென்றுன்மைந்தன்
நிரையினைமீட்டானென்று தூதுவர்நிகழ்த்தலோடுங்
கரைசெயற்கரியதாயகளிப்புடன்மறையோன்றன்னோ
டொருவிசைச்சூதிற்றோற்றமன்னவனுரைக்கலுற்றான். (௫௬)

வீடுமன்முதலினோரைவென்றவென்சுதன்போலிச்சூ
தாடியேவெல்வனென்னவரவுயர்வேர்தன்பாற
நீடியபகழிதூவிநின்மகன்செயிக்கமாட்டான்
பேடியேவென்றானென்றுபேசினன்மறையோன்மாதோ. (௫௭)

வேதியனுரைத்தலோடுமெலிவுடனென்றன்மைந்தன்
ஆதவனனவேயேகியரசவாச்சமரின்வெல்லத்
தீதுறுபேடிவென்றானென்றனனென்றுசீறி
யேதமில்பலகைதன்னினெறிந்தனன்கவற்றைமன்னன். (௫௮)

பற்றியேயெறியத்தூயபலகையிற்றைத்துமீதி
னுற்றிடுகவறுசென்றேயொளிதிகழ்வேதியன்றன்
னெற்றியிற்றாக்கலொடுநிறைத்திடுகுருதிசோர
விற்றொழில்விராடனோந்தேயினியனவிளம்பும்வேலை. (௫௯)

உவமையிலிரதமீதினுத்தரன்பேடியோடு
நவமணிவயங்குவீதிநண்ணியேமாதர்வாழ்த்தப்
பவமறுதந்தைபாதம்பணிதலுமைந்தன்றன்னைத்
தவமுறுமன்னனன்பாற்றழுவியேமகிழ்ந்தானன்றே. (௬௦)

வேறு.

தாதையோடொளிர்மணிக்கோயிற்சார்ந்தவன்
தீதறுசுயோதனன்சேனையார்ப்பவே
பீதியாலோடினேன்பேடியாகிய
வேதமார்விசையனேசெருவென்றானென்றான். (௬௧)

வேறு.

மறையவன்மடையன்கோலமாவலன்கோவலன்றான்
பொறையுறுபாண்டுபெற்றபுதல்வர்நால்வருமேகண்டாய்
மறுவிலாவனேதல்செய்யுமடந்தைதானுரோவென்னி
லறிவுறுபாஞ்சாலன்றானருளியவரிவையென்றான். (௬௨)

விற்றொழில்விசயன்றன்னோடிவர்களுமேவியேதா
னுற்றனரிவணினென்றேயுவகையார்மைந்தன்கூறக்
குற்றமில்விராடராசன்மகிழ்வொடுங்கோதிலாத
நற்றவத்தருமராசன்முன்னரினண்ணினுனல். (௬௩)

வேறு.

மைந்தனோடெய்தியேவிராடமன்னவ
னந்தமாறறன்சுதனடிபணிந்தெழிற்
செந்திருவனையவுத்தரையைச்சீருறு
மிந்திரன்மதலைக்கீண்டீவனென்றனன். (௬௪)

தீதிலாவிராடர்கோன்செப்பலோடுமே
நீதிசேர்பற்குனனீயுன்கோதையை
யாதவன்மருகனுக்கீதியென்றுதா
னோதியேயவனருளுதகமேற்றனன். (௬௫)

அரிவையையரிமருமகனுக்கின்புறத்
தருதியென்றுயருமாவிசையன்சாற்றலு
மிருவினைதுணியக்காமத்தினெய்திலாப்
பெருமையனிவனெனத்தருமன்பேசினான். (௬௬)

நீதியுந்தருமமுநெறியுமாண்மையு
மாதவர்வியந்திடுமொதர்சுத்தமு
மேதமிலெம்பியாம்விசயற்கெய்துமென்
றோதியேமகிழ்ந்துயர்தருமனுற்றனன். (௬௭)

## பாண்டவர் அக்ஞாதவாசப் படலம் முற்றிற்று.

ஆ படலம் ௬௭-க்குக் கூடிய திருவிருத்தம் ௩0௮௬.

கண்ணபிரான் றிருவடித்தாமரைகடுணை.

ஸ்ரீ
விஷ்ணுமயம்.

௧௧௬ - வது

# உத்தியோகப் படலம்.

தந்தைதாய்மனையுளாட்னையொன்றுறுஞ்
சிந்தையாம்பவமெனுஞ்சிந்துநீந்தொணு
வுந்திடும்பிறப்பிறப்பொழியவேண்டுமே
லிந்திரைகொழுநனையேத்திவாழ்மினே. (௧)

சூரர்களைவருஞ்சூதிற்றோற்றபி
னீரறுவருடமாவனத்தினெய்தியே
வீரியவிராடனூர்மேவியேகரந்
தோரொருவருடம்வெந்துயரந்தள்ளியே. (௨)

கரந்துறைகாலமொன்றேகவேகவின்
பொருந்தியமெய்யினர்புகலுமாரணந்
திருந்தியவேதியர்திரளினோர்க்கெலாம்
விருந்தினராகியேவெளிசெய்தாரரோ. (௩)

மாதவவிராடமாபுரத்தின்வைகியே
வேதனையொருவியேவெளிசெய்தோமென
யாதவன்றனக்குநீரியம்புவீரொனத்
தூதரையேவினான்றூயதன்மனே. (௪)

வாயுவின்விசையெனவழிக்கொடேதுவ
ரோயெனுமுன்னரிற்றுவரையெய்தியே
மாயவனடிமிசைவணங்கியைவராந்
தூயவர்செயலெலாஞ்சொல்லினாரரோ. (௫)

மன்னவனாவருமறுவிலாதுயர்
மின்னிடையாளொடும்வெளிசெய்தானெனச்
சொன்னதூதுவர்க்கணிதூசுமீந்தனன்
பன்னகப்பாயலிற்பள்ளியோவினன். (௬)

மாதரொண்சுபத்திரையென்னுமங்கையோ
டாதவனெனவயங்கபிமன்றன்னொடு
மீதுயர்தேர்மிசைவிளங்கத்தோன்றியே
சீதரன்விராடமாநகரிற்சேர்ந்தனன். (௭)

மாயவன்றேர்மிசைவரலும்பாண்டவ
ரோயெனுமுன்னரினெய்தியின்புறத்
தூயவனடிமிசைவணங்கச்சோதியோ
னேயமோடணைத்தனனிகரிலவனை. (௮)

துடியிடைத்துரோபதைதூயதண்ணினீர்
படிமிசைநிறைந்திடப்பணியயாதவன்
கடிமலர்க்குழலியைக்கையினலணைத்
திடரறவினியசொல்லியம்பினனரோ. (௯)

வீரியவபிமன்வந்தடியின்வீழ்தலு
மேருறுமைவர்மெய்யிறுகப்புல்லினர்
சீருறுதுருபதன்மகடன்சேயரோ
டாரமார்பொளியுறவணுகினாரரோ. (௧௦)

இன்னவில்விராடனூரிலங்கவைவர்கண்
மின்னிடையாளொடும்வெளிசெய்தாரெனப்
பன்னகப்பாவையும்பாண்டிநாடியுந்
துன்னியமகிழ்வுடன்சுதரொடெய்தினர். (௧௧)

தென்னவன்சீருறுசோழன்சேரனு
மன்னவன்கேகயன்முதலினோர்கண்மாத்
துன்னியவிரதமேற்றுலங்கித்தோன்றியே
யின்னவில்விராடமாநகரமெய்தினர். (௧௨)

அத்தினபுரியின்மன்னயனமெங்கணு
நித்திலமணியினேதனம்நிறைத்திட
மத்திரமன்னவன்வழிநின்றேயவை
மெய்த்தருமன்னொடுவிளம்பியேகினன். (௧௩)

நத்தொடுதிகிரிகைதிகழுநாரணன்
மைத்துனன்மாரொடுமகிழவேதிசை
யத்திசைநிகர்த்திடுமபிமன்னேரிலா
வுத்தரைதன்னையேயுவந்துவேட்டனன். (௧௪)

துன்னுமின்னலமுறத்துலங்குமைவரா
மன்னவர்தங்களைமாயனோக்கியே
பன்னகத்துவசன்பாற்பாரைவேண்டியே
யின்னவிலொருவனையேவுகென்றனன். (௧௫)

மாதவன்மொழிந்திடவுதிட்டிரன்மனந்
தீதுறுசுயோதனனருகுசென்றுயர்
நீதியின்வருமரசளித்தியென்றுநீ
வோதுதியெனவுலூகனையங்கேவினான். (௧௬)

வேறு.

அரவுயர்வேந்தன்றன்பாலேகுமந்தணனையூங்கார்
தருமனீயென்பாலெய்தவரவிடுகென்றுசாற்றித்
திருமகள்கணவன்றேரிலேறியேதேவரோத்த
விளைசெறிபொழில்கள்சூழ்[illegible]யின்மேவினானால். (௧௭)

துவரையின்மாயோனெய்தத்தூயவேதியன்றானேகி
நவையுறுசுயோதனன்பானண்ணியேதருமன்பாதி
யவனியையீதியென்னவவன்மறுத்திடலுமீண்டு
பவமறுமறையோன்பாண்டுமதலைக்குப்பகர்ந்தானன்றே. (௧௮)

தீயவனுரைத்தவெல்லாஞ்சென்றுநீமறையோய்தூய
மாயனுக்குரைத்தியென்னவறனருண்மைந்தன்கூற
வாயர்நாயகன்முன்னெய்தியசேதனச்சுயோதனன்றா
னீயிலனவனியென்றானென்றுவேதியனுஞ்சொன்னான். (௧௯)

அந்தணனுரைப்பக்கேட்டேயருள்செறிமறையோயேகி
யிந்திரன்சுதனையென்பால்வரவிடுகென்றேயேவி
யந்தமாரிரண்டுபீடமடிமுடியருகினாக்கிச்
சுந்தரன்றுயில்வான்போலதூயமெல்லணையிற்சேர்ந்தான். (௨௦)

திருமகள்கொழுநன்றுய்யசேக்கையிற்றுயில்கொள்வேலை
அரியையாவகத்துக்காக்குந்துணைகொள்வானாகியாங்கே
விளைவினிற்சுயோதனன்றான்மேவியேயுலகமுண்ட
பெரியவன்முடியின்பக்கப்பீடமேலிருக்கும்வேலை. (௨௧)

கடிதினின்மறையோனெய்திக்கவினுறுதருமனோடு
படியினையளந்தோன்றன்பாற்பார்த்தனைவரவிடென்றான்
கொடுமையிலரசவென்றுகூறலும்விசையனெய்தி
வடிவுடைமாயன்பாதமருங்கினிற்பீடத்துற்றான். (௨௨)

இயல்புறுவிசையனெய்தலோடுமவ்விறைவனாங்கே
துயிலுணர்பவன்போன்முன்னந்தூயவன்றன்னைநோக்கிக்
கயவனைத்தன்பினாகக்கண்டுமெய்யழுந்தப்புல்லிப்
புயல்வணனிருவோரீங்குப்போந்தமைபுகலுமென்றான். (௨௩)

முற்குணன்மொழிதலோடுமுன்னர்யான்வந்தேனென்று
துற்குணனெனக்குநீயேசமரிடைத்துணையாகென்னப்
பற்குனன்முன்னமொன்னைக்கண்டனனிங்ஙனென்று
நற்குணன்கயவன்றன்னைநோக்கியேநவிலலுற்றான். (௨௪)

முன்னநீயெய்தினாலுமுகிலினையூர்திமைந்தன்
றன்னையான்முன்னர்நோக்கிப்பின்னுனைக்கண்டேன்றாழ்வின்
மன்னயான்முன்கண்டார்தம்வசத்தனாயடைவனென்று
சொன்னவன்சுதர்கடம்மைச்சுயோதனன்றனக்காண்டூர்ந்தான். (௨௫)

இந்துசேகரனைநோக்கியான்றவமுயன்றுபெற்ற
மைந்தரோடக்குரோணிமறுவிலாச்சேனையெல்லாந்
தந்தனனுனக்கென்றேறதச்சக்கரமெடுப்பாயல்லே
நந்தொளிர்கரத்தாயென்றுநவின்றவனேகினனால். (உசு)

அரவுயர்வேந்தனேகவருச்சுனனோடுமையன்
விரைவினிவிரதமேறிவிராடமாபுரியினெய்தித்
தருமனோடைவரொய்தியிறைஞ்சலுந்தழுவியன்பா
னிருபர்கணிறைந்துசூழநேமியோனமருநாளின். (உஎ)

சோமனேர்கவிகையோங்கச்சுயோதனன்பதியினெய்தி
மாமன்வானதிதன்மைந்தன்மைத்துனன்கன்னனோடே
காமனூர்தந்தைகாமன்காளைதன்வசத்தனாக
நேமிமால்கரத்தெடாமணிறுத்தினேனென்றுசொன்னான். (உஅ)

அக்கிரமத்தால்வாழுமரவுயர்வேந்தன்கூற
விக்கிரமத்தான்மிக்கவ்மென்விளம்பலுற்று
னுக்கிரமெய்ப்போர்தன்னிலுதிட்டிரனிடைந்தால்மாயன்
சக்கரமெடுத்தறின்னஞ்சமரிடைக்காண்டியென்றான். (உகூ)

அஞ்சனவண்ணனாழியெடுத்திடலமரிலாற்றாய்
வஞ்சகச்சூதில்வென்றமண்ணினையருடியென்றே
செஞ்சொலாற்கங்கைமைந்தன்செப்பமன்சீறியேகச்
சஞ்சயன்றனக்குத்தீயவந்தமன்சாற்றலுற்றான். (௩0)

விரைவினிற்சிவிகையேறிவிராடமாபுரியினெய்தித்
தருமனைநண்ணிநீயேசமர்பொரநினைந்தாயாகிற்
குருவொடுதந்தைதாதையினைளாக்கொன்றேயாளு
மரசினினவதீர்த்தங்களாடுதெனன்றென்பாயால். (௩க)

நீதிசேர்தருமராசனினக்கடாச்சமரஞ்செய்தா
லேதமார்நிரயந்தன்னுளெய்துவாயிவற்றைத்தள்ளி
மாதவம்புரியென்றுன்றன்றந்தைசொல்வழங்கினனென்
றோதியேசமர்மூளாமலொழித்துநீவருதியென்றான். (௩உ)

அரவுயர்வேந்தன்றாதையருளவேசஞ்சயன்றான்
றெரிமணிச்சிவிகைமீதிற்றிசைமுகனென்னவேகி
விரைசெறிபொழில்களோங்கும்விராடமாபுரியினெய்தித்
தருமன்முன்னெய்தலோடுமவனிவனடியிற்றாழ்ந்தான். (௩௩)

தருமனைநோக்கிநேரிற்சஞ்சயன்மொழிவானுந்தை
யுரையினைக்கேட்டிதாயவுறுதவத்தொருவனாகி
யருவினைதுடைத்தநீதானமர்பொரநினைத்தியாகிற்
குருவதைமுதலாம்வெய்யகொடுமைகள்சூழுமென்றான். (௩ச)

இன்னலார்சுயோதனன்றனென்றுமென்வசனங்கேளான்
நன்மகனீயேயான்றனவின்றவையெல்லாங்கேட்டாய்
துன்னியவினைகடீரத்தூய்தவம்புரிதியென்று
மன்னவவுன்றன்றாதைவழங்கியசொல்லீதென்றான். (௩ரு)

சிஞ்சயன்மொழியக்கேட்டுத்தருமன்வெண்முறுவல்செய்தே
விஞ்சியசமரபூமியிடைந்துயர்போர்செய்யாம
லஞ்சினவரசரோழாநிகோதத்தினடைவொன்று
செஞ்சொனுன்மறைகளோதும்பொருளினைத்தெரிதியென்றான். (௩௬)

ஆதலின்மறைகளோதுமருந்தவகேட்டிவஞ்சச்
சூதினில்வென்றமன்னன் துவாதெசத்துடனேராண்டிங்
கேதமார்வனத்தினேகிக்கரந்திவணெய்தினேற்கென்
பாதிநாடீயானுகிலமர்செயப்பணித்தியென்றான். (௩௭)

இயல்புறுதருமனிவ்வாறியம்பிடச்சஞ்சயன்றான்
செயலுறுசிவிகையேறிச்சென்றிபநகரிற்சேர்ந்து
நயனமில்வேந்தனோடேயிவையெலாநவிலலோடுந்
துயருறுமனத்தனாகியிருந்தனன்றூய்மையில்லான். (௩௮)

சஞ்சயனுரைத்தவாறுந்தானதற்கிசைத்தவெல்லா
மஞ்சனவண்ணமாலுக்கறைந்தனன்றருமராசன்
கஞ்சனைக்களைந்தோனுங்கள்கருத்தினைத்தெரியக்கூறு
மெஞ்சின்மன்னவரோயென்னவறன்சுதனியம்புகின்றான். (௩௯)

மாதவகேட்டிவெம்போர்மலையும்போதிளைஞர்தம்மைத்
தாதையைக்குருவையொப்பில்பிதாமகன்றன்னைச்சற்றே
யேதம்வந்தடையாவண்ணமிரவிசேய்சகாயன்முன்னர்த்
தூதுநீபோதல்வேண்டுஞ்சுருதிநாயகனேயென்றான். (௪௦)

அறன்மகன்கூறலோடுமெடுசினத்துடனேநீக்கி
விறலுடைவீமன்றுய்யவிசயன்மாநகுலன்வேத
நெறியுறுமிவர்கண்மூவர்நேமியாய்நீதூதேகிற்
சிறுமையாய்முடியுமென்றேபின்னருஞ்செப்பலுற்றார். (௪௧)

மறனுறுசூதினாலேமண்கவர்ந்ததுவுமன்றி
யறனுறுதுருபதன்றானருளியவணங்கினாளை
நிறைமலர்க்குழலைப்பற்றிநெடுந்துகிலுரிவித்தான்பா
லிறைவநீயிரந்துமண்ணுண்டிருப்பதோவீரமென்றார். (௪௨)

ஒன்னலனாகிவாழுமுரககேதனனைச்செற்று
மின்னிடையணங்கினுடன்விரிகுழன்முடிக்கவோங்கு
மிந்நிலத்தமரின்வென்றேயேகவெண்குடைக்கீழாளா
மன்னவனுடனேயாங்கள்பிறப்பதென்மாலேயென்றார். (௪௩)

மிகமுனிந்தழன்றுவீமன்விசயன்மாவலவன்கூற
நிகரிலாமாயோனுக்கிநீதிசேர்தருமன்சொல்லை
யிகழ்கிலீர்தருமம்வென்றியீயுந்திடுமென்றுசொல்லி
நகுலன்பின்னவனைநோக்கிநவிலுநின்கருத்தையென்றான். (௪௪)

மாதவன்மொழியக்கேட்டுமெத்திளைக்கிளையமைந்த
னேதுவானையநீதானுரககேதனன்பாலின்று
தூதுதானேகிலென்வாழ்சுயோதனன்மடியவெம்போர்
காதிநீவிளைந்தாலென்னுன்கருத்தையாரறிவரென்றான். (௪௫)

குரகதவலவன்பின்ளேன்கூறிடவவனைநோக்கி
முருகவிழ்தொடையாய்நீயுன்முன்னவர்போற்சொலாதே
விரகிவனுரைத்ததெல்லாம்விளம்பெனத்தனித்துக்கூற
நிருகன்வெஞ்சாபந்தீர்த்தநிமலனுக்கவனுஞ்சொல்வான். (௬௯)

அவனியிற்பாரநீக்கவரசனுய்நிலத்திற்றேன்றிப்
பவர்களானவரையெல்லாம்படிமிசைவதைத்துவீழ்க்க
வுவமையிலரியேயெம்மையுரககேதனன்றனோடே
நவையுறவிரோதஞ்செய்யுமாயநானறிவேனென்றான். (௭௦)

சீருறுசாதேவன்றான்செப்பியவிரகுகேளா
வாரியனவனைநோக்கியறைகுவானவனிதன்னிற்
பாரம்யானகற்றவண்ணமுபாயநீபகர்தியென்னச்
சீரியநகுலன்பின்னேன்றெழுதிவைசெப்பலுற்றான். (௭௧)

வரிசிலைவிசயன்றன்னைவதைத்துயரிமங்கைசென்னிக்
கரியமைக்குழலைநீக்கிக்காலினிற்றளையைப்பூட்டி
யிரவிசேயரசையாள்வித்தியானுனைப்பிணிப்பேனுகிற்
றரையினின்வதைசெய்வோரைத்தடுக்கலாமென்றுசொன்னன். (௭௨)

மத்திரைக்கிளையமைந்தன்மொழிந்திடமாயோனேக்கி
யித்தனைவகைசெய்தாலுமென்னைநீபிணிப்பதெங்ஙன
னுத்தமவுரைத்தியென்னவுனக்குநானடியனுகிப்
பத்திசெய்மதியினுலேபற்றுவனுன்னையென்றான். (௭௩)

குரகதவலவன்பின்னேன்கூறலுமனந்தரூபன்
மரகதவடிவாய்நிற்கவனத்தினுளியிற்போங்கன்
றெருகுதிகொண்டுதாயையுணர்ந்துறவடைந்தசீர்போற்
பரகதியருளும்பாதத்திணையினைப்பற்றினனல். (௭௪)

தூயவன்மனத்தினலேசோதிதன்றளைப்பற்ற
மாயனுண்மகிழ்ந்துநீயோர்வரத்தினைவேண்டுகென்ன
வாயுதக்குருவின்சேயாலைவரைவதைசெய்யாம
னீயருள்செய்தியென்னநெடியவன்பெறுதியென்றான். (௭௫)

மைத்துனன்றன்னைமாயன்மகிழ்வொடுந்தழுவித்துய்ய
மெய்த்தருமன்றன்முன்னரிருவருமேவலோடு
மத்தியினமர்வோன்றீயவரவுயர்த்தவன்பாற்சேற
லுத்தமமென்றுசொன்னனுயர்சகாதேவன்மன்னே. (௭௬)

பின்னவன்கூறலோடும்பிறங்கியநெறியான்மிக்க
மன்னவனெழிலிபோன்றமாயவன்றன்னைநோக்கிப்
பன்னகத்துவசன்றன்னைப்பாதிநாடிரந்துகேட்டி
யன்னவன்மறுக்கிலேந்தூர்கொடேனெனிலமர்வேண்டென்றான். (௭௭)

தூயமாதருமனிவ்வாறுரைத்திடத்துயரமுற்ற
வேயுறுதோளினுடன்விழியினீரகற்றிமாய
னீயினியிரங்கவேண்டாநின்குழன்முடிப்பிப்பேனென்
றேயெனுமுன்னரத்திப்பதியினிலெய்தினனல். (௭௮)

நிகரின்மாலெய்துந்தன்மைநிகழ்த்தலுஞ்சுயோதனன்றன்
பகலவன்குமரன்றூயபகீரதிமைந்தன்சிர்தை
மிகமகிழ்விதுரன்சூழவெதிர்கொளமேவலோடுஞ்
சகுனிதானிடைவந்தெய்தித்தடுத்திவைசாற்றலுற்றான். (௫௬)

அரவுயர்வேந்தகேட்டியச்சுதனிவனென்றெண்ணிப்
பரிவுடனெதிர்சென்றுவிப்பாருறுநிருபரெல்லாந்
தருமனுணையினீண்டெய்துந்தூதுவன்றனக்குநீதான்
வெருவினையென்றுசொல்வரொன்றவன்விலக்கினனால். (௫௭)

மதியிலாச்சகுனிகூறமருளுறவிருத்தலோடும்
விதுரன்மாமறையோன்றூயவீடுமன்கிருதவன்மா
வெதிருறவிவர்களெய்தியிறைஞ்சலுமெழில்கொண்மாயன்
சதுமறையவர்கள்போற்றத்தமனியத்தேர்மேல்வந்தான். (௫௮)

மாதவர்மகிழ்ந்துசூழமறையவரின்புற்றேக
வேதமிலரசரொல்லாமிருமருங்கிலங்கியெய்த
மோதுதுந்துமிகணந்துமுழங்கிடமுரசமார்ப்ப
வேதனைத்தந்தோனத்திப்பதியினைமேவினனால். (௫௯)

காண்டிபங்கையினேந்துங்காளைதன்சகாயன்வந்தான்
நீண்டபார்வான்பாதத்தினளந்தருணிமலன்வந்தான்
பூண்டவண்புடையகைமாவழைக்கமுன்போந்தோன்வந்தான்
பாண்டவர்தூதன்வந்தானென்றனைபம்பொற்சின்னம். (௬0)

அதிரதக்குழாங்கள்சூழவமரர்கள்மலர்கடுவே
விதியினைநிகர்த்ததூயவேதியராசிகூறப்
புதிதலர்கமலம்பூத்தபுயலெனப்பொற்றேர்மீதின்
விதுரன்றன்கோயிற்சேர்ந்தான்விழுமியகதியையீவான். (௬௧)

மறப்பிலெட்டெழுத்துநாவின்வைகுமாமுனிவர்கூட்ட
முறப்பலவேந்தர்சூழவுலகளந்தவன்றனெய்தப்
பிறப்பினையவித்தேயார்க்கும்பேர்க்கொணுவீட்டினெய்த
விறப்பினைப்பிரித்தேயோடியிறைஞ்சினன்விதுரனம்மா. (௬௨)

பூதலத்தரசர்தம்மைவிடைகொடுத்தரிபொற்றேரின்
மீதினினிழிந்துகோயின்மேவலும்விதுரனெய்தி
யாதவனவிரோபோலுமாதனத்திருத்தித்தூய
பாதநீர்தெளித்துக்கொண்டான்சென்னியிற்பவங்கடீர. (௬௩)

மஞ்சன்மாடிமாழைத்துகிலொளிர்மருங்கிற்சாத்தி
யஞ்சனவண்ணன்றூயவறுசுவையடிசிலுண்டு
விஞ்சியகலவைபூசிவிளங்கியதெரியற்சூடிச்
செஞ்சொலால்விதுரனேத்தத்திகழ்ந்தினிதிருந்தான்மன்றே. (௬௪)

குடதிசையிரவியேகிக்குணதிசைதோன்றலோடும்
படியினையளந்தமாயோனருக்கியமளித்துப்பார்மேன்
மிடைகரிபரிகடுன்னவிளங்கியதேர்மேலேறிக்
கொடியபன்னகம்வானேங்குங்கொடியன்பாற்சேரும்வேலை. (௬௫)

ஏறுகளடர்த்தோனெய்திவிதுரனில்லிருந்தானென்று
சீறியமனத்தனுகிச்சுயோதனன்செம்பொனூர
மீறியமணித்தூணெண்ணில்விளங்குமண்டபத்தின்மீதின்
மாறின்மன்னவர்கள்சூழவலரிபோலிருந்தான்மன்னே. (௬௬)

இரவிசேய்பூரிபூரிசிராவெழிலிவுளித்தாமா
சரியிலாமறையோன்றீயசகுனிசானவிதன்மைந்த
னுரனுறுசோமதத்தன்பகதத்தனெப்பில்சிந்து
நிருபனோடரசர்சூழவிருந்தனனேரிலாதான். (௬௭)

ஃடிகதிரொளிபோற்றோன்றமுடங்குளைப்பீடமீதின்
நடைசசியெனவேயோங்கவயங்கியேகுருநாடாள்வா
ரிடையனென்னுமையின்வந்தாலெதிரொழுந்திறைஞ்சக்கண்டாற்
படியுறுநாடுமாறிப்பருந்தளையிடுவேனென்றான். (௬௮)

அரவுயர்வேந்தனிவ்வாறுரைத்தவணிருக்கும்வேலைத்
திருமகள்கொழுநனெய்தச்சிந்துவுக்கிறைவன்றூய
இரவிசேய்சகுனிபல்லாரொழுந்துநின்றிறைஞ்சமாழைச்
சரியிலாப்பீடமீதினிருந்தனன்சார்ங்கபாணி. (௬௯)

துகுலமன்னனெய்தியிருத்தலுமெரியினெஞ்சன்
திகுலமன்னனூனவாளரவுயர்த்தகோவென்
தியிடையடைந்துமின்றென்பன்மணிக்கோயின்மேவாய்
விதுரனில்லமர்ந்ததன்மைவிளம்புதிதெரியவென்றான். (௭௦)

தீதுறுசுயோதனன்றான்செப்பியவுரையைக்கேளா
மாதவன்மொழிவான்றன்மன்வரவிடவுன்பால்வந்த
தூதனுமுன்னிலன்னமருந்திநான்வெறுக்கைநன்றே
யாதலால்விதுரனில்லினமர்ந்தனனென்றுசொன்னான். (௭௧)

மாதவனிவ்வாறோதவெரிந்திடுநயனனாகிக்
கோதுறுகுணத்தனாயசுயோதனன்கூறலுற்றான்
தனதமில்விராடன்றன்பாலிழிதொழிற்செய்யுமைவர்
தூதனாய்வந்ததன்மைசொல்லுதிதெரியவென்றான். (௭௨)

அன்னகத்துவசனிவ்வாறுரைத்திடப்பரமன்சொல்வான்
உன்னுடன்சூதிற்றோற்றேயுரைத்திடும்பதின்மூவாண்டு
துன்னியவனத்தினெய்திவருந்தியுங்கரந்துந்தூய
மன்னவர்வெளிசெய்தார்க்குவழங்குநீயவனியென்றான். (௭௩)

மாதவனுரைப்பக்கேட்டேயறனருள்மைந்தனன்று
நதினிற்றோற்றநாட்டைவிரகினிலளிக்கச்சொன்ன
நீதனுக்கிசையேனென்னயாதவனவர்தநாட்டிற்
பாதிதானீதியென்னமறுத்தனன்பவங்கொணெஞ்சன். (௭௪)

மதிகுலத்தைவர்நாட்டிற்பாதிதான்வழங்கேனென்ன
தெவதுகுலத்திறைவனேந்துநீதியென்றிரந்துவேண்ட
வுததியின்விடமேபோலவுரககேதனனுஞ்சீறித்
பதிகளவாடுவாயாதருகிலேனென்றுசொன்னான். (௭௫)

அந்தமன்சிறுவனேதுங்கொடேனெனவரியிப்பானை
யிந்துநன்னுதலியானசிற்றவைசுதனுக்கீழ்ந்த
சந்தனுத்தனையனுன்றன்குலத்துளனன்றோதாழ்வி
லுந்தைதன்னினையோன்மைந்தர்க்குரியநாடிதியென்றான். (எசு)

சுந்தரனிவ்வாறோதச்சுயோதனனகைத்துச்சொல்வான்
றந்தையரைவர்தாயுமொருத்தியேதாமெல்லோருஞ்
செந்துவர்வாயாளாயதுரோபதிதன்னைச்சேரும்
அந்தமிலிகழ்வினோரோவொருகுலத்தரசனென்றான். (எஎ)

குயின்மொழிமடந்தைசுற்றுங்கூறையையவைபின்வாங்க
வியல்பறநாணமேகவிருந்துகண்டவருக்காகித்
தயிர்களவினிலுண்பாயுன்சதிரினாலந்தூர்கேட்டாய்
மயிர்நுனிமண்ணுமீயேன்மறுத்துரைசெய்யேலென்றான். (எஅ)

மெய்யறுகுணத்தனானவியாள்கேதனன்றான்சொல்ல
மையறுமலரின்மேலின்மங்கைநாயகனுஞ்சொல்வான்
பொய்யறுகுந்திதேவிபுதல்வரோடமர்நீசெய்யக்
கையறையென்றலோடுங்கனன்றுதூணறைந்துசொல்வான். (எகூ)

ஏதுகுலவழியிற்றோன்றியிடையர்தம்மில்வினோகித்
ததிகளவினிதேயுண்டுதாம்பினாலடிபட்டோடு
மதியிலியுன்னையோராய்மாசறுபிறப்பாமென்னைப்
பதிதனீகைபோடென்றுபகர்ந்தனையென்றுநக்கான். (அ0)

தீயவனிவைகளெல்லாஞ்சினத்துடன்செப்பலோடு
மாயவன்முறுவல்செய்துமணிமுடிதுளக்கிவானின்
றூயவான்முகிலேபோலக்கவின்மெயிற்றுலங்கவேகி
மீயுயிர்துவசத்தேர்மேல்விதுரன்றன்கோயிற்புக்கான். (அக)

ஏதுகுலத்திறைவனேகவெரியுறுநயனனாகிக்
கதமுறுமனத்தன்காந்திக்கண்ணிலான்மதலைசொல்வான்
பதிதனுமிடையன்றன்னைப்பரமனுமென்றுபோற்றி
விதுரனல்விருந்துசெய்தானென்றுரைவிளம்பலுற்றான். (அஉ)

ஒருவனுக்குயிரீவார்போலுருகியேயவனைவிட்டே
யிருநிதியதிகமாகவீந்தவன்றன்னைப்பற்றும்
வரைவிலாமகடான்பெற்றமதலையாமென்றெல்லோருந்
தெரியவேவிதுரன்செய்தசெய்கைநன்றென்றுநக்கான். (அங)

வல்லியமெனவேசீறிமதியிலானுரைப்பக்கேளாச்
சொல்லியநாவைவாளாற்றுணித்துநின்சிரம்பார்வீழக்
கொல்லுவன்முன்னோன்சேயாய்ப்பிழைத்தனையென்றுகூறி
வில்லினைமுறித்துவீழ்த்துவிதுரன்போய்க்கோயிற்புக்கான். (அச)

ஏதமில்விதுரன்வில்லைமுறித்துத்தன்மனையினெய்தப்
பூதலத்தரசர்புன்மைபுகலலாகாதென்றேகச்
சூதுறுமனத்தனெண்ணில்சூரருள்ளமரும்பொய்யா
மாதனமியற்றிமாலைப்பிணித்திடவழைமினென்றான். (அரு)

தூதுவனெய்தியயசோதனனழைத் தானென்ன
மாதவனகைத்தாண்டெய்திவயவருள்ளமரும்பொய்யா
மாதனமிசையினேறியடியுறவுறுத்தித்தாளான்
மீதுயரண்டமெல்லாம்விளங்கிடநிமிர்ந்தானன்றே. (௮௬)

முடிபுயம்விழிகடேயமுகமெலாமனந்தமாகிக்
கடிமலரிமையோர்தூவக்ககனம்வான்முகடுமுட்ட
நெடியவனாகிநின்றுநிலவரையதனுள்வைகுங்
கொடியவர்தம்மையெல்லாமடியினான்மிதித்துக்கொன்றான். (௮௭)

வரையிடையடித்துந்துய்யவுகிரினால்வகிர்ந்துங்காலாற்
றரையிடையரைத்துங்கையாற்பிசைந்துமச்சழக்கர்தம்மைத்
திரையுறுகடலுள்வீழ்த்துந்தீயிடைமடுத்துஞ்செற்றான்
ஒருநொடியிடுவமுன்னமுலகெலாமளந்துகொண்டான். (௮௮)

ஆடகமலர்கடூவியமரர்கண்முனியேலென்ன
வீடுமன்முதலினோர்கள்வெருவிநான்மறைகொடேற்ற
நீடியமுகடுமுட்டநிமிர்ந்தவனஞ்சவில்லா
மூடனைநோக்கித்தூயமுறுவலோடியம்பலுற்றான். (௮௯)

அரவுயர்துவசநின்னோடனுசரைவதைப்பனென்று
விரைசெறிதொடைசேர்வீமன்விளம்பியசபதத்தால்யான்
றரையினில்வதைத்திடாமற்றவிர்ந்தனனென்றுசாற்றி
நிருபர்களிறைஞ்சநீண்டவடிவினையடக்கிநின்றான். (௯0)

உரககேதனனையோவியுயர்மறையோன்சேய்தன்னை
யிரவியைப்பரிவேடந்தான்வளைத்தமைபார்த்தியென்னாத்
தரையிடைவிடுத்தவாழிதனையெடுத்தீகுவான்ற
னிருகையும்பிடித்துச்சேனாபதியெனவிராதேயென்றான். (௯௧)

அந்தணன்சிறுவன்றன்னையிரவியைநோக்கென்றாழி
தந்திடுமுன்னஞ்சேனைக்காவனீதவிர்கென்றேகிக்
குந்திமுன்பயந்தகன்னன்கவசகுண்டலத்தைக்கோதி
லிந்திரன்கவரமாயமியற்றினானெழிலின்வண்ணன். (௯௨)

கரியினைவதைத்தோனெய்தக்கண்டைவரிறைஞ்சலோடு
மரவுயர்வேந்தன்றன்பாலணுகியைந்தூர்தான்கேட்ப
வொருமயிர்நுனிதானூன்றுமவனியுமுதவேனென்று
வரைவிலானுரைத்துச்செய்தவஞ்சமுமொழிந்தான்மாயோன். (௯௩)

மயிர்நுனியூன்றுமண்ணுங்கொடேனென்றமன்னன்போரி
னுயிர்விடச்செருச்செய்தோங்குமொருகுடைக்கீழின்வைகி
யியல்புறுமவனியாளவியற்றுவனென்றேவைவர்
துயரறவுரைத்தலோடுந்தொழுதனர்பாண்டுமைந்தர். (௯௪)

தீதுறுமவருடன்போர்செயக்குருக்கேத்திரத்தின்
மாதவனைவரோடுமணிநெடுந்தேரினெய்தி
யேதமிலனிகமேழக்குரோணிக்குமிறைவனாகச்
சூதறுவிராடன்பெற்றசுவேதனைவிதித்தானன்றே. (௯௫)

திருமகள்கொழுநனைவருடன்செருப்பூமியெய்
வுரககேதனன்றன்சேனையொன்பதுமிரண்டுங்கூட
வருதொகையக்குரோணிக்கிறைவனாய்வானோர்போற்று
மிருநதிமைந்தன்றன்னைவிதித்தவனேகினான். (௯௬)
அத்தினபுரியையாள்வோனமரிடைவெல்லவேண்டி
மத்திரைக்கிளையமைந்தன்றன்னைமாமுகூர்த்தங்கேட்ப
வித்தகவிரவிவில்லின்வெண்மதியுடனேகூடு
மத்தினம்பலியையூட்டின்வெல்லலாமென்றானன்றே. (௯௭)
நிகரிலாநகுலன்பின்னோனிகழ்த்தியமுகூர்த்தங்கேளா
விகல்புரிசுயோதனன்றானெதிரிலாவுளாகிபெற்ற
புகழுடையவனைக்கண்டுகளப்பலிக்கிசைத்துப்போகத்
தகைமையில்கொடியோன்செய்தசதியெலாமறிந்தான்மாயன். (௯௮)
சிறுவனுமனுசன்றானுமுட்பகையாகிச்செய்தால்
விறலுடையவனையுன்னால்வெல்லலாம்வகைவேறில்லை
பொறையுடைத்தருமாயானுந்துவரையிற்போவனென்றே
யுறையுமாலடியைப்பற்றியவரின்மூத்தோன்சொல்வான். (௯௯)
பாலர்களுணர்விலாமற்பகர்ந்திடுந்தீமைச்சொல்லை
யாலிலையமருமையாவகற்றிநீயருடியென்ன
மேலவன்சகியினோடுமேவுநாட்பின்னாளாக
ஞாலமேலியற்றுவிப்பனென்றுநாரணனுஞ்சொல்வான். (௧௦௦)
பன்னகவரசன்பாவைபயந்தவன்பகைஞர்க்கானா
னென்னைநீர்சமரம்வெல்லக்களபலியிடுமினென்ன
மன்னவர்நடுங்கியாங்கள்வனத்திடைப்போவோமென்று
சொன்னவர்தம்மைநோக்கியுளாகிசேய்சொல்லலுற்றான். (௧௦௧)
அரவுயர்வேந்தன்கேட்டதினந்தனிலவனுக்கீவன்
விரைவினிலென்னைமுன்னங்களப்பலியூட்டிவெல்மின்
றரணிமீதென்னமாயன்சதுர்த்தசித்தினத்திற்சோம
னிரவியோடுறவெட்டோயமிறையுமாமறையோனென்றான். (௧௦௨)
சீதரன்மொழியக்கேட்டுச்சதுர்த்தசிதினத்திற்றூய
வேதியர்திலநீதொங்கும்விடுத்திடவிதுத்தானெய்தி
ஏதமிலிரவியோடுதருப்பணமறையோரீகை
யோதெனநீங்குற்றாலுவாவதாமென்றுநக்கான். (௧௦௩)
சரியிலாமாயன்றன்னாற்சதுர்த்தசியுவாவதாக
வரவருண்மடந்தைமைந்தனுருப்பெலாமறுத்தங்கீய
விரைவினிற்சமரபூமியெங்கணும்வீசியேதான்
நரபலியூட்டிவந்தார்நற்செயமாகவென்றே. (௧௦௪)
அதிரதக்குழாங்கள்சூழவைவரோடரவுயர்த்தோ
னெதிர்பொருஞ்சமரந்தன்னிலியாவருமின்றியேமன்
வதையுறுங்கொடுமைநோக்கேனென்றுமாமதியின்வண்ணன்
விதுரனுந்தானுந்தீர்த்தயாத்திரைவிரும்பிப்போனார். (௧௦௫)

## உத்தியோகப் படலம் முற்றிற்று.

---

ஆகப்படலம் ௩அ-க்குக் கூடிய திருவிருத்தம் ௩௧௧௯௪.

ஸ்ரீ

விஷ்ணுமயம்.

கக௭-வது

# பாரதப்படலம்.

தூதுசென்றைந்தூர்வேண்டிவிதுரன்விற்றுணியச்செய்து
கீதையுமொழிந்துவையமூர்ந்துயர்கெங்கைமைந்தன்
வேதியனங்கபூமன்மத்திரன்விடவியாள
கேதனன்மடியவைவர்க்குதவுகேசவன்றாள்வாழி. (க)

அரவருள்மடந்தைமைந்தனுறுப்பெலாமறுத்துத்தன்ம
னிருநிலமிசையினெய்திக்களப்பலியூட்டினானென்
றுரைசெயநயனமில்லான்சுதனுளங்கனன்றுதேர்மேற்
கரிபரியிரதஞ்சூழக்கடிதினிற்களத்துவந்தான். (உ)

மன்னவர்விறலையெல்லாமதிக்கும்வானதிதன்மைந்தன்
தன்னையத்தரதனாகச்சாற்றினானென்றுசீறிக்
கன்னனிச்சமரந்தன்னிற்கங்கைதன்மைந்தன்வீந்த
பின்னர்யான்பொருவனென்றுபேசித்தன்மனையிற்புக்கான். (௩)

அங்கமன்னேகலோடுமெணியெலாம்வகுத்துப்பாரி
னெங்குமன்னவர்கள்சூழச்சுயோதனனிலங்கிநிற்ப
மங்குலினிடிகளஞ்சவளையொடுபேரியார்ப்பக்
கங்கைதன்மைந்தனின்றான்கதிரவன்றோற்றம்போல. (௪)

அரவுயர்மன்னன்சேனையார்த்தெதிர்வருதலோடு
முரசுயர்வேந்தன்பேரிமுழங்கிடத்தேரினேறிக்
கரிபரியிரதம்வீரர்கணக்கிலார்மிடைந்துசூழ
நிருபனொண்ணனுசரோடுமடைந்தனனெறிகொணெஞ்சன். (௫)

திருமகள்கொழுநனம்பொற்றேரிடைவலவனாகிப்
பரியினைநடத்தவானிலரியுறுபதாகையோங்கச்
சரியில்வெண்டரளமாலைவயங்கிடச்சார்ந்தபார்த்த
னரசர்கடிசைகடோறுமவனியினிறையக்கண்டான். (௬)

குரவரைக்கிளைஞர்தம்மைக்குருவினையனுசர்தம்மை
வரிசையார்முன்னோர்தம்மைமைந்தரைமடியநூறி
யிருநிலம்வாழும்வாழ்வாற்பெரும்பயனேதென்றுன்னி
வரிசிலைநிலத்தின்வீழமலர்க்கணீர்சொரியநின்றான். (௭)

மனமெலிந்தமரினிந்தமன்னவருடனேயென்ற
னினமெலாமடியநூறியென்னதானறனென்றுன்னித்
தனைமறந்திருகணீர்பார்நிறைந்திடத்தனுவும்வீழத்
துணியுறுவிசயன்றன்னைச்சுந்தரனோக்கிச்சொல்வான். (௮)

இருநிலமிசையின்மன்னர்யாரையும்வதைசெய்வேனென்
றுருகியமனத்தனாகிப்புரந்திடும்விசயகேளீ
தரையெரியனிலம்வானஞ்சலமெலாம்யானேபோரி
னரசராயெதிர்வோன்யானேயவர்களைவதைப்போன்யானே. (௯)

அவனியைத்தீவிதீவியளர்த்தயிப்பவனும்யானே
புவனமூன்றெயிழ்ந்துகோட்டாவிடத்தபுங்கவனும்யானே
சிவனயன்வலாரியிந்துசெங்கதிர்முனிவர்தேவர்
பவமுறுமசுரர்மெய்யவிருதர்பார்மனிதர்யானே. (௰)

ஓதையாருவரியானேயோங்கியபிறங்கல்யானே
பாதவங்களைகள்யானேபழுவம்யான்பகக்கள்யானே
வேதநாலுடனேயாறுசாத்திரம்யானேமிக்க
போதியான்மணம்யானுண்ணும்பொறிவரியளியும்யானே. (௧௧)

இபமுதலுறவிகீழாயெழுந்தபல்லுயிரும்யானே
தபனனல்லொளியும்யானேசந்திரன்குளிர்ப்பும்யானே
விபவம்யான்வெறுமையானேமேகம்யானுடுவும்யானே
சுபமும்யானசுபம்யானேசுவர்க்கம்யானரகம்யானே. (௧௨)

அறனியான்மறனியானேயருப்பம்யான்பெருக்கம்யானே
யுறவும்யான்பகையும்யானேயூழியான்முயற்சியானே
விறலியானிழிவும்யானேவெற்றியான்றோர்வையானே
பொறையும்யான்முனிவும்யானேபுகட்சியானிகட்சியானே. (௧௩)

உருவும்யானருவும்யானேவுறுதல்யான்விரிதல்யானே
திருவும்யான்றவ்வையானேசெனனம்யான்மரணம்யானே
யரிவையாளாணும்யானேயலியும்யானொலியும்யானே
மருவும்யான்பரிசம்யானேவயங்கல்யான்மயங்கல்யானே. (௧௪)

விடமும்யானமுதம்யானேவெளியும்யானிருளும்யானே
யடியும்யான்முடியும்யானேயறனும்யான்முரணும்யானே
நெடுமையான்குறளும்யானேநிழலும்யான்வெயிலும்யானே
கொடுமையான்குணமும்யானேகுறைவும்யானிறைவும்யானே. (௧௫)

ஆதலாலெவையுமாகியண்டமோரனந்தமென்னுட்
போதயானதனின்வைகிப்புவனமேவிடர்கள்செய்யு
மேதிலார்திரள்கள்வீயவீண்டிருந்தியற்றலாலே
காதியகளத்திற்கொல்வைகணைகளால்விசயவென்றான். (௧௬)

விசயநீயானேயுன்றன்வில்லியான்விசிகம்யானே
சுசியுறுகதமும்யானேதுணிபுமொன்னலொன்சேட்டை
வசையுனக்கெங்ஙனெய்தும்வருந்தலீயென்றுமாய
னிசைவுறவிளம்பித்தன்பேருருவம்வானிலங்கநின்றான். (௧௭)

புயல்வணன்சிரங்களெண்ணில்பொன்முடிதுலங்கக்கண்டான்
கயினுயர்திகிரிசங்குகணிப்பருங்வனப்பைக்கண்டான்
மெயினுறுகலன்கள்கோடியிரவிபோல்விளங்கக்கண்டான்.
மயிர்நுனிதோறுமண்டம்வயங்கியமாட்சிகண்டான். (௧௮)

இருசுடருடுவான்மேகமெண்டிசைப்பாலர்வேலை
வரைசிவன்முனிவர்வேதனிரூதர்தானவர்கள்வானோர்
தரையுறுமனிதர்பல்வேறுயிர்சராசரங்களெல்லா
மொருதனியண்டந்தோறுமுறுவனவெல்லாங்கண்டான். (௧௯)

அண்டங்கடோறுந்தேர்மேலரியொடுந்தன்னைக்கண்டான்
மண்டணில்வயங்குகின்றமன்னரோடணிகங்கண்டான்
எண்டவரெவர்க்குமெய்தாவிறைவன்றனுருவங்கண்டான்
விண்டனவினையென்றெண்ணியிறைஞ்சியேவிளம்பலுற்றான். (௨௦)

உலகினைப்படைத்துக்காத்தேயழித்தொருமுதலாயோங்கி
நிலனடைமுதல்வாபோற்றிநேமிசேர்கரத்தாய்போற்றி
யிலகியதிருவாழ்மார்பாபோற்றியென்றேர்மேல்வைகும்
வலவனேபோற்றியென்றுமகிழ்ந்தெழுந்தாடினனால். (௨௧)

இறைவநீயியற்றியெல்லாக்கருமமுழுமுடிக்குஞ்செய்கை
யறிவிலாதியானேசெய்வனென்றுயராங்காரந்தான்
குறைவிலாதெழுந்துதோன்றுங்கொடுமையையகற்றினாயென்
றெறுழ்வலிக்கரங்கள்கூப்பியிறைஞ்சிநின்றேத்தினனால் (௨௨)

அல்லிறவெழுந்துதோன்றுமலரிபோல்விசயன்முன்னர்ச்
செல்லெனவொளிருமேனிதிசையெலாம்விளங்கிநின்றே
மல்லரைவதைத்தகோமான்வலவனாயிரதமூர
வில்லினையெடுத்துப்பார்த்தன்விசிகமாமழைபெய்தார்த்தான். (௨௩)

இந்திரன்சிறுவன்விட்டவிசிகமெண்டிசையும்போர்ப்ப
வந்தணனவன்சேய்மந்தாகினிசுதனரசரோடுந்
துந்துமிமுழங்கநந்துகறங்கிடத்துரகம்பொற்றேர்
தந்திகண்மிடைந்தேதாக்கச்சாயகஞ்சொரிந்தார்த்தாரால். (௨௪)

வாயுவின்மதலையோடேவாளரவுயர்த்தோன்றாக்கி
யேயெனுமுன்னம்வில்லோடிரதமுந்துணிந்துபாறத்
தூயமத்திரைதான்பெற்றசுதன்றனக்கிளையோனம்பாற்
றீயவெஞ்சகுனியோடத்தேர்சிலையறுத்தங்கார்த்தான். (௨௫)

ஏசிலாவபிமனோடேயிலக்கணகுமரன்றாக்கி
வாசவனிமையோரெல்லாமதித்திடச்சமரஞ்செய்தா
னாசைகடோறும்விஞ்சுமதிரதர்பொருதுமண்மே
னாசமுற்றிடச்செஞ்சோரிநதியெனவோடிற்றன்றே. (௨௬)

மத்திரவரசன்றேர்மாமறைந்திடவரிவில்லாலே
யத்திரமாரிதூவியசனியுமஞ்சவார்த்த
வுத்தரன்றன்னையங்கியுமிழ்வுறுவாளிதன்னாற்
சித்திரவதைசெய்தார்த்தான்சீருறுநகுலமாமன். (௨௭)

தூயமாவிராடன்மைந்தன்மடிந்திடச்சுவேதன்சீறிப்
பாயுமாவிரதந்தூண்டிப்பல்லவமாரிபெய்து
சீயமேபோலவெய்யசினத்தின்மத்திரக்கோன்மார்பி
னாயிரங்கடியவாளியழுத்திடப்பாறினனால். (௨௮)

வீடுமென் சகுனி துய்யவேதியன் விடசேனன்றன்
கோடகத்தாமாபூர்சிராவிவர் கொதித்துவந்து
பீடுடைச்சுவேதனம்பாற்பெருவிறலழிந்தேயோட
வீடியபிணத்தின் குப்பைவிலங்கல்போலுயர்ந்ததன்றே. (உகூ)

நிலைகுலைந்தெழில்கொள்கங்காசுதனிலத்தோடநேரின்
மலைமகள்கொழுநனீய்ந்தவரத்திறற்சுவேதமன்னன்
சிலைகரத்திருக்கத்தோராரெனன்றசரீரிசெப்ப
விலகியவிரதமீதினெதிர்ந்துவந்திணையசொல்வான். (௩௦)

வானுறுகதிர்போற்றுய்யவாண்மழுக்கதைவிட்டார்த்துச்
சானவிபுதல்வன்மச்சன்றனையனைநகைத்துநோக்கி
யூனமில்சிலையுன்கல்வியன்றிவேறென்றுங்கல்லா
வீனனீயெனவேவில்லையெறிந்துவாளெடுத்துவந்தான். (௩க)

வாளினைச்சுழற்றித்தேரினிழிந்துமாமுழையைவிட்ட
கோளரிபோலவார்த்துக்குறுகியசுவேதன்றன்னை
நீளியபகழியாலங்கதப்புயநிலத்தின்வீழ
மீளவுமவன்றன்சென்னியறுத்துவீடுமனங்கார்த்தான். (௩உ)

சூரனுஞ்சுவேதன்சென்னிதுணித்தவீடுமனைநோக்கி
வீரியவரசரோடுஞ்சுயோதனன்மகிழ்மிக்க
வாரியிற்பரிதியேகிமறைதலுமன்னரெல்லா
நேரிலாப்பாடிவீடுநிறைந்திடவிருந்தாரன்றே. (௩௩)

இரவிவந்துதயமாகவிரண்டதாந்தினத்திற்றன்மன்
பரிவொடுதுரோபதன்றன்பயந்திடுங்குமரன்றன்னைக்
கரிபரியிரதங்காலாளனிககாவலன்றனுக்க
விரைவினிற்சமரபூமிமிடைந்துவந்தார்த்தாரன்றே. (௩௪)

விடவரவுயர்த்தகோமான்வீடுமன்முதலாம்வீரர்
கடகரியிரதம்பாய்மாக்கணக்கிலாருடனேதாக்க
முடியுறுசிரங்கள்வானின்முகடுறக்கவந்தமாடப்
படியினிற்குருதிவெள்ளம்பரந்திடப்பொருதாரன்றே. (௩௫)

அதிரதர்வீரர்தாக்கியடுங்கணைசொரிந்துவந்தே
கதமுறுமிபமாவீழக்கடுஞ்சமர்செய்யுங்காலை
மதியொளிதிகழவெய்யோன்மறைதலுமன்னரெல்லா
முதநியுள்வாங்குஞ்செய்கையொத்துத்தம்மிருக்கையுற்றார். (௩௬)

ஆன்றபேருலகுக்கெல்லாமவிரிணையருளும்வெய்யோன்
தோன்றிடத்துரகங்கைம்மாச்சூரர்கண்மிடைந்துசூழ
மூன்றதாந்தினத்தின்வெய்யமுடங்குளைக்குற்றசீற்றம்
போன்றுமாமன்னரெல்லாம்பொறியுறுகணைபெய்தார்த்தார். (௩எ)

கங்கைமாதருளுமைந்தன்கடையுகவிறுதிகால
மங்கைபங்காளன்போலமுனிந்துமாவாளிதூவச்
சிங்ககேதனன்மாவல்லோன்சினிசுதன்றேர்விலின்றிச்
செங்கண்மால்விசயன்காணவிரிந்தனர்திசைகடோறும். (௩அ)

தாலகேதனன்றன்வில்லால்விடுத்தசாயகங்களெங்கு
மாலமாவிடமேபோலவரித்திடவரசரெல்லாம்
ஞாலமேன்மடியவெண்ணில்கவந்தங்கணடிக்கவோங்கும்
வேலைபோலரிநீர்பாரிற்பரந்தவெள்ளிடையுமின்றி. (௩௯)

வாரியிற்சுவறவாங்குவடவனலென்னவாளி
யேருறுங்கங்கைமைந்தன்பொழிந்திடவெதிர்நில்லாமல்
வீரியர்மடியநோக்கிவிசையன்றான்றடுக்கநில்லா
தாரியன்முனிந்துதுய்யவாழியைச்சுழற்றிச்சென்றான். (௪௦)

ஆடகன்றன்னைச்செற்றவாழியைக்கரத்திலேந்தி
மோடுடைக்கனமேபோலமுடுகியேநிலத்திலெய்த
வீடுமனோக்கிச்சிந்தைவெருவநாக்குளறவந்து
வாடியமனத்தனாகிவணங்கியின்றிவைகள்சொல்வான். (௪௧)

இரணியனவன்றன்பின்னோனிராவணன்கும்பகன்னன்
முரணுறுநரகன்கஞ்சன்முரனுயர்சேதிபன்றன்
றரணியின்மடிந்துவீழத்தாக்கியசோதியென்றின்
கிரணமேனாழியேந்திக்கிளர்ந்ததென்மொழிநீயென்றான். (௪௨)

மீளியாய்க்கனகன்றன்னைவகிர்ந்திடும்விமலனேயுன்
றாளிணையேத்திவாழுஞ்சமனிலாவடியார்பாதத்
தூளியாய்த்திரியுமென்மேற்சுடருறுதிகிரியேந்தி
மூளும்வெஞ்சினத்தனாகிவந்ததென்மொழிநீயென்றான். (௪௩)

செருவினிற்றிகிரிமாயனெடுக்கயான்சமர்செய்யேனென் ௨௨
றுரககேதனன்முன்னேதுமடியனென்னுமைபொய்செய்யாக்
கரமிசையாழியேந்திக்கமலங்கொளெழிலிபோலத்
தரைமிசைநடந்துவந்ததயாபரர்வென்றுசொல்வான். (௪௪)

தீயவனாகிவந்தசேதிபனுயிராஞ்சோதி
மாயவுன்னடியினெய்தமற்றவன்சிரத்தைத்தள்ளுந்
தூயவிவ்வாழியென்னைத்துணித்திடவிடுதியென்றே
யோய்விலாத்துதிசேர்நாவனுமைத்தடிவணங்கினானால். (௪௫)

வீடுமன்வணங்கியேத்தவிமலன்வெண்முறுவல்செய்து
கோடகம்வயங்குதேரிற்குறுகலும்விசையன்மாயன்
மோடுடைத்திகிரிதொட்டதெனமுனிந்திகழ்ந்ததென்றே
நீடியசரங்கள்வானினிறைந்திடத்தூவியார்த்தான். (௪௬)

பரவையெண்டிசைகளெல்லாம்பரந்திடும்வாளிதன்னா
லுரககேதனன்றன்சேனைமடிந்துயர்வேந்தரெல்லாம்
வெருவவேயிரவியேகிமறைந்திடவிருபாலுள்ள
வரசர்களனீகத்தோடும்பாடிவீடணுகினரால். (௪௭)

மேலவன்குணபாற்றிக்கின்விளங்கியேயுதையஞ்செய்ய
நாலதாந்தினத்தில்வேந்தர்நண்ணிவெங்கணைபெய்தார்த்துக்
குலம்வாள்முசுண்டியீட்டிதோமரங்குந்தம்வீசி
யாலமாவிடமேபோலவடல்பொருதவிர்ந்தாரன்றே. (௪௮)

குருதிமாநதிபோலோடக்கோடகம்வயங்குதேர்மேற்
பொருதவீரியர்கண்மாளப்புகரிபமடிந்துவீழ
விருதுறுமரசரெல்லாம்வெஞ்சமர்விளைக்கும்வேலை
பருதிபோய்மறைதலோடும்பாடிவீடணுகினரால். (௪௯)

விஞ்சியேகுணபால்வேலைவெய்யவனுதயமாக
வஞ்சதாந்தினத்திற்பேரியறைந்திடவரசரெல்லாங்
குஞ்சரங்கொடிகடேர்கள்கோடகமடிந்துவீழ
வெஞ்சரம்பொழிந்துவானோர்வெருவிடவார்த்தாரன்றே. (௫௰)

கரியுரிபோர்த்தோன்போலக்கனன்றுயர்வீமன்றண்டா
னிருபர்கண்மடிந்துவீழநிலத்திடையறைத்துத்தூய
பரியினைப்பதத்தாலெற்றிப்பன்மணித்தேரைவீசி
யரவுயர்வேந்தன்பின்னோரைவரைவதைத்தேயார்த்தான். (௫௧)

அனுசர்கண்மடிந்துவீழவரவுயர்துவசவேந்தன்
மனமெலிந்திரங்கிக்கங்கைமைந்தன்றனடியில்வீழ்ந்தே
யுனையுறுதுணையாயுள்ளேனிடர்க்கடலுறவோவென்று
துனியுறுமவனைநோக்கிப்பிதாமகன்சொல்லலுற்றான். (௫௨)

மன்னவகேட்டிபாண்டுமைந்தர்கள்விறலையெல்லா
முன்னம்யான்மொழியக்கேளாய்மூண்டெழுசமரிலுன்றன்
பின்னவர்போலயாமுமடிவதுபின்னீகாண்டி
கன்னனுஞ்சகுனிதானுங்கழறிடமகிழ்வோயென்றான். (௫௩)

உரககேதனனுக்கிவ்வாறுரைத்துயர்வீடுமன்றான்
வரிசிலைவளையவாங்கிவாயுவின்மைந்தன்மீதிற்
கருமுகிற்பொழிதலேயகடுங்கணைசொரிதலோடு
மெரிசகாச்சுதனூறம்பாலறுத்தனனிமைப்பின்முன்னம். (௫௪)

வெந்திறற்கங்கைமைந்தன்பின்னரும்விசிகந்தூவ
விந்திரன்மைந்தன்வீமனிவுளியைநடத்தவல்லான்
சிந்தியபகழியாலேதேருயர்துவசம்வீழ
முந்துமூதாதைவில்லுமுரிந்திடப்பாறினனால். (௫௫)

வரிசிலைப்பார்த்தன்வீமன்மாவலோன்சாதேவன்றா
னுருமெனவதிருந்தேரினுற்றுமாவாளிபெய்ய
வரசர்கண்மடியப்பேய்களாடவெங்குருதியோட
விரவிபோய்க்குடபாலேகப்பாடிவீடெய்தினரால். (௫௬)

ஆதவனுதயஞ்செய்யவாறதாந்தினத்தில்வெய்ய
போதகமிரதமெண்ணில்புரவிகணெருங்கவீர
ரோதையாருவரிபோலவார்த்துயரும்பரிம்பர்
மாதிரமறையவில்லால்வாளிமாமழைபெய்தார்த்தார். (௫௭)

விசையனுசுகன்றன்மைந்தன்விறல்செறிகடோற்கசன்றான்
வசுவரிபோல்வில்வாளிபொழிந்திடவயவர்மாண்டு
தசையுறுகுருதிமண்ணிற்றரங்கமார்நதிபோலோட
நிசியுறவிரவிவீழநிருபரில்லடைந்தாரன்றே.

இரவியுங்குணபால்வேலையெழுந்திடவேழாநாளின்
முரசொடுகறங்கப்பேரிமுழங்கிடவரசரெல்லாம்
பொருகரிபரிகள்சூழப்புணரிபோலனீகமார்ப்ப
விரைவினிற்களத்தினெய்திவெஞ்சமர்விளைத்தாரன்றே. (௫௯)

மிடலுடையரசரெண்ணில்விசிகத்தாற்பரிகள்வீழப்
புடவியிற்புகரிபங்கள்பொருப்பெனவிழவேநூறிக்
கடலெனக்குருதியோடக்கவந்தங்களாடவெய்யோன்
குடகடலடையப்பாடிவீட்டினிற்குறுகினாரால். (௬0)

என்றுயர்குணபால்வேலையிலங்கிடவெட்டாநாளில்
வென்றிகொளரசரெல்லாம்வெஞ்சமர்விளைத்துவிஞ்சுங்
குன்றெனப்பூட்கைவீழக்குரகதமுருளவீரர்
பொன்றிடக்கணையாமாரிபுயலெனப்பொழிந்தாரன்றே. (௬௧)

அரவருண்மடந்தைமைந்தனமரினிலனந்தமான
வுருவமாய்த்தீயாய்க்காற்றாயும்பருநடுங்கமோதிக்
கரியினமிவுளியீட்டங்கனகமாத்தேரின்வீரர்
புரவலர்மடியக்காலன்போலவேயமர்செய்வேலை. (௬௨)

நகபதிபொருவுமெய்யனலமிலாநிருதர்கோமான்
சிகிபதியெனவேவெய்யசினத்தினனலம்புதன்றான்
ககபதியுருவமாகிக்ககனமீதெழுந்துவந்தே
மகபதிசுதன்சேய்தன்னைவாளினாற்றுணித்துவீழ்த்தான். (௬௩)

மாசுணமடந்தைமைந்தன்மடிதலும்வெகுண்டுமோது
மாசுகன்குமரன்றுய்யவபிமனுங்கடோற்கசன்றான்
றேசுறுவிசயனோடுசிலீமுகமாரிபெய்ய
வேசறுவிபமாவீழவிரிந்தனரரசரெல்லாம். (௬௪)

கதங்கொளுநிருபர்மாளக்கவினுறுமணியினாலே
விதங்கொளுமிரதம்வீழவிலங்கல்போலிவுளிசாய
மதங்கொளுமிபங்கண்மாயமன்னர்கள்வெருவியோடப்
பதங்கன்வாரியினின்மூழ்கப்பாடிவீடணுகினாரால். (௬௫)

பன்னகத்துவசவேந்தன்பாடிவீடணுகியாங்கே
யொன்னலர்விறலையெல்லாமுன்னியங்குவமையில்லான்
கன்னனையழைத்துநீயுன்கணைகளான்மாரிபெய்தே
யென்னிடர்களைந்தைவோர்தஞ்சிரத்தினைத்துணித்தியென்றான். (௬௬)

ஈனமுற்றிராசராசனியம்பிடக்கன்னன்சொல்வான்
சானவிதனயனென்னைச்சமரிலத்திரதனென்ற
வூனமதொழியப்புல்வாயுற்றிடக்கவ்வுவானேல்
நானமர்பொருதுவென்றுநாடுனக்களிப்பனென்றான். (௬௭)

அங்கமன்கூறக்கேட்டவறிவிலாவரவுயர்த்தோன்
வெங்கணனான துச்சாதனனைநீவிரைவினெய்திக்
கங்கைதன்மைந்தனோடுகன்னனென்னலனைவெல்லப்
பொங்குவெஞ்சமரினானைப்புறக்கவ்வச்சொல்லுகென்றான். (௬௮)

முன்னவனுரைப்பக்கேட்டுமுறைமையில்பின்னோன்சென்றே
யின்னலில்காங்கையன்றனிணையடிவணங்கிநின்று
கன்னனென்னலனைவெல்லநாளைப்புறக்கவ்வுவாயென்
றுன்னைமன்சொன்னனென்னப்பிதாமகனுரைக்கலுற்றான். (௬௯)

மன்னவர்க்கிளையோய்கேட்டிவாசவன்மைந்தனாலே
யிந்நிலமதனினாளைகழியயானிறந்தபின்னர்
கன்னனென்னலர்கண்மாளக்கடுஞ்சமர்பொருதுவென்றே
யன்னவனோடுங்கூடியாளுமினரசையென்றான். (௭௦)

மறுவிலாக்கங்கைமைந்தன்கூறியவசனமெல்லா
மறனறுகயவனேகியரவுயர்த்தோனுக்கோத
நெறியறுமரசன்கன்னன்றன்னொடுநெடிதுநேர
முறுவனகருமமோதிச்சேக்கையிலுறங்கினானால். (௭௧)

உதயினலரிதோன்றவொன்பதாந்தினத்தில்வெய்ய
வதிரதர்மிடைந்துசுற்றவறன்சுதனெய்தவானி
னதிசுதனனிகமார்ப்பநாகமார்துவசனோடுங்
கதுமெனவடர்ந்துவில்லாற்கனமெனக்கணைகள்பெய்தான். (௭௨)

சானவியருளுமைந்தன்விடுத்தசாயகங்களெல்லாம்
வானவர்பதிதன்மைந்தன்வாளியாலறுத்துமாற்றிச்
சோனைபெய்வதுபோலெங்குஞ்சுடர்முகப்பகழிதூவச்
சேனைகண்மடியவெய்யோன்மறையத்தம்மிருக்கைசேர்ந்தார். (௭௩)

தினகரனுதயமாகத்தெசமதாந்தினத்திற்றுய்ய
கனகமாதானஞ்செய்துகருத்தினிலரியைவைத்துத்
துனிகளைந்தனங்கனம்பாற்றுவக்கிலான்றுவசமீதிற்
பனைகவினுறவேதேர்மேற்பருதிபோனின்றான்மாதோ. (௭௪)

முரசுயர்வேந்தன்பின்னோரனீகமுமொய்ப்பவேகி
யரவுயரரசன்சேனைதன்னுடனமர்செய்வேலை
வரிசிலைப்பார்த்தன்மந்தாகினியருள்மைந்தனோடுஞ்
சுரர்துதிசெய்யவெம்போர்துடங்கிமாவாளிபெய்தான். (௭௫)

விசையனெய்விசிகந்தன்னைவீடுமன்கணையான்மாற்றிச்
சுசியுறுவாளிமேகம்பொழிவபோற்சொரிந்துவெய்ய
வசுவரிசகாத்தன்மைந்தன்மாவலோன்வெருவியோடச்
சசியுறுசடையோன்போலத்தானையைச்செற்றானன்றே. (௭௬)

உருத்தெழுமுருத்திரன்போலுயர்திரிபதகைபெற்ற
விருத்தனெய்விசிகந்தன்னால்வீடியமனனைநோக்கி
வருத்தமோடணைவேனென்றமாதுருத்தவிர்த்துவந்த
கிருத்திமச்சிகண்டிதன்னைக்கேசவன்பொருதியென்றான். (௭௭)

மாதவனருளேலாமெறனுறுசிகண்டியெய்த
நீதிசேர்கங்கைமைந்தனிராயுதனாகிநிற்ப
வேதமில்விசயன்வில்லாவிமைப்பின்முனெண்ணில்கோடி
யாதவனவினைமானுமாசுகமழுந்தவெய்தான். (௭௮)

மாகவானருளுமைந்தன்வாளிதன்னுரங்கைகாலோ
டாகமுட்டுளையேயாகவாவிதன்னுடலையோவி
யேகுமுன்றடுத்துத்துய்யவிரவிபோய்மகரம்பற்றப்
போகுதியென்றுள்வைத்துவீடுமன்புவியிற்சார்ந்தான். (எகூ)

ஆதியைக்கருத்துள்வைத்தேயாசுகவணையின்மீதிந்
பூதலமிசையிற்சார்ந்தபகீரதிபுதல்வன்பாதத்
தேதமிலவரோடுஞ்சுயோதனனிரங்கிவீழத்
தீதகல்கங்கையன்றான்றேறியேபகரலுற்றான். (அ௦)

விதியினையாவராலும்வெல்லலாம்வகைவேறில்லை
மதியிலார்போலநீவிர்வாடுவதிழுக்கென்றோதி
யெதுகுலநாதன்றன்னையிறைஞ்சியுன்னடியேனுக்குன்
பதமருளென்றுகையாற்றொழுதனன்பவங்கடந்தான். (அக)

உரககேதனனைநோக்கிப்பிதாமகனுனிப்பானென்றன்
சிரமிகத்தாள்கையாலேசிறந்ததோரணையுந்தந்து
பருகநீர்தருதியென்னப்பஞ்சின்மெல்லணையுந்துய்ய
விரைசெறியமுமியநகைத்திவைவிளம்பலுற்றான். (அஉ)

படுகளத்தியல்பிலாதபஞ்சின்மெல்லணையோடின்னீர்
மிடலுடையரசர்தல்விழுமியதன்றென்றோதி
வடிவுடைவிசையன்றன்னைவழங்கெனவாளிமூன்று
தொடையினைநெகிழ்க்கக்கங்கைசுதன்சென்னிசுமந்ததன்றே. (அ௩)

சிரசினையெடுக்கமூன்றுசிலீமுகம்விடுத்தபார்த்தன்
றரையினையுருவவேயோர்சாயகம்விடலுமந்தப்
புரையினுளயத்தின்றூரைபொங்கிடக்கங்கைமைந்தன்
பருகவவ்வழியினீரையடைத்தனன்பகழியொன்றால். (அச)

சாயகவணையினீருந்தந்திடுவோனைநோக்கித்
தூயளாங்கங்கைமாதின்சுதன்மகிழ்ந்தினிமைகூறந்
தீய்மையில்சகாதேவன்றான்சிலையுறுசரங்களாலே
யேயெனுமுன்னங்கூடமிலங்கிடவமைத்தானன்றே. (அரு)

கன்னன்வந்திறைஞ்சலோடுங்கங்கைதன்மைந்தன்சொல்வா
னிந்நிலமதனில்மிக்கவதிரதனீயேயாகுய்
பின்னைதன்மனுளன்செய்யும்பேர்க்கொணுமாயத்தாலே
யுன்னையத்திரதனென்றிங்கோதினேனென்றுசொல்வான். (அசு)

பன்னகத்துவசன்றன்னைப்பகீரதிமைந்தனோக்கிக்
கன்னனையுன்றன்சேனைபதியெனப்பட்டங்கட்டி
யுன்னியகருமஞ்செய்திபோதியென்றுரைத்தலோடு
மின்னலார்மனத்தன்பாடிவீட்டினிலெய்தினானல். (அஎ)

திருமனையனுசரோடுந்தழுவியுன்றடக்கைதன்னாற்
பரகதியடையும்வண்ணம்பயந்திலமளித்தியென்றே
யுரைசெய்தங்கவனையேவியுலகளாந்தவனைநோக்கிக்
கருவினிற்புகாமலென்னைக்காத்தருண்முதல்வாவென்றான். (அஅ)

வீடுமனுரையைக்கேளாவெய்யவன்மகரமுற்றுற்
பீடுடைக்கதியையீவனென்றரிபேசவென்று
நீடியகடலின்மூழ்கநெடுந்தவமொய்தலோடுந்
தோடுடைக்கங்கைமைந்தன்றொல்வழிப்புராணங்கேட்டான். (அகூ)

வாரியினலரிகீழ்பால்வயங்கிடப்பதினோராநாட்
பாரினெண்டுரோணன்சேனாபதியெனவிலங்கித்தோன்றப்
பேர்மாமுரசுமார்ப்பப்பெருங்கடற்சேனைசூழ
வீரியவரசரெல்லாம்வெஞ்சமர்விளைத்தாரன்றே. (கூ0)

ஆசறவிலங்குகின்றவபிமனத்திரத்தினாலே
மாசுணத்துவசன்மைந்தன்வயங்குதேரழியவோட்டி
யேசுறுமவனைப்பற்றியிருகரம்பிணித்தலோடு
மாசின்மத்திரத்தர்கோமான்வடவைபோன்முனிந்துவந்தான். (கூக)

வடிவுடையபிமன்மேலேவந்தமத்திரத்தர்கோனைக்
கடுவிடமெனவேசீறிக்காலின்மாமதலையெய்தி
மிடலுடைவயிரத்தண்டால்விலங்கன்மேலிடிவீழ்ந்தென்ன
முடிமணிசிதறிவீழமோதியங்கார்த்தானன்றே. (கூஉ)

காலின்மாமதலையெற்றுங்கதையின்மத்திரத்தர்கோமான்
கோலமார்முடியின்மிக்ககொழுமணிசிதறிவீழ
ஞாலமேல்வானினோங்குநகம்விழுந்தெனவேசாய்ந்து
சீலமார்குணத்தான்பின்னர்த்தெளிவுறப்பாறினனால். (கூங)

மாயவன்மருகனென்றோடெதிர்ந்தமத்திரத்தர்கோனை
யேயெனுமுன்னம்யானேசெயிக்குமுன்னெதிர்ந்துவென்றாய்
போயதென்விறலின்றென்றுவீமற்குப்புகலும்வேலை
தூய்மையில்சுயோதனன்றன்சுதனிலனோடினனால். (கூச)

கரமுறுபாசத்தோடுமிலக்கணன்கலங்கியோட
விரைவினிலிவுளித்தாமண்மேவித்தன்றேரிலேற்றச்
சுரர்பதிசுதன்வில்லாலேசுடுகணைசொரிதலோடு
மரசர்கள்வெருவியோடவருக்கனார்கலியினாழ்ந்தான். (கூரு)

கடலிடையலரிவீழக்கட்செவியுயர்த்தகோமான்
படியினில்வயங்குகின்றபாடிவீடதனின்மேவி
மிடலுடையபிமனெய்திலக்கணன்றனைவீக்க
விடையினிற்றடுக்கிலீரோயிற்றநும்வீரமென்றான். (கூசா)

இந்திரன்சுதன்றன்மைந்தனிலக்கணன்றனைவீக்கு
நிந்தனையொழியநாளைத்தருமனைநீங்கள்பற்றித்
தந்திடவென்றியாமென்றரவுயர்வேந்தன்சாற்ற
வந்தணனதனைக்கேளாவிம்மொழியறையலுற்றான். (கூஎ)

வெறிமலர்த்துளவனோடும்விசயனைச்சமரபூமி
பிறியவேயறையைக்கூவிப்பெயர்க்கும்வீரியர்களாரோ
மறனறுதருமன்றன்னைப்பற்றுவனென்னும்வாய்மை
யறைதலுமந்தன்மைந்தனரசர்வல்லீரோவென்றான். (கூஅ)

வேறு.

துரியோதனனிவைகூறிடத்துவராபதியாள்வோ
னருள்வீரருந்திரிகர்த்தருமமுதாசனர்க்கிறையோன்
றருகுரனையாமேயறைகூவித்தனிசெய்தே
பொருவோமிதுசரதம்மெனச்சபதம்பலபுகன்றார். (௯௯)

அரிமைந்தருந்திரிகர்த்தருஞ்சபதம்பலவறையப்
பெரிதின்பமொடரவக்கொடிப்பெரியோனுளமகிழாத்
தரளம்முயர்சசிபோலொளிர்தருதாவடநல்க
விருள்விஞ்சிடத்தந்தம்மிடத்தெய்தித்துயின்றனரால். (௧௦௦)

இனைவேலையின்மார்த்தாண்டனங்கெழவீரறுதினத்திற்
றிருமாலருள்புதல்வோருடன்றிரிகர்த்தருமேகிப்
பொரவாவிசையாவென்றறைகூவப்புயலெனவே
யரிகோல்கொளுமிரதத்தருச்சுனன்போயினனவர்மேல். (௧௦௧)

அரிதன்னுடன்விசயன்பொரவறைகூவுமன்னவர்பால்
வினைவின்னுறவனிலன்மகன்விறல்விஞ்சியநகுலன்
றருமன்னொடுசாதேவன்வெம்பரிதந்திகணிறைய
வரிவெஞ்சிலைவளைத்தாசுகமழைபோலுறப்பொழிந்தார். (௧௦௨)

கறைதங்கியகிரிவன்னெனக்கன்னன்கணைபொழிய
மறைதங்கியநாவன்மழைபோல்வாளிகள்சொரிய
வெறிதங்கியதொடைமார்பினன்வீமன்முதனிருபர்
நெறிதங்கியதருமன்முனர்நில்லாதிரிந்தனரால். (௧௦௩)

அரிவந்திடவெருவுங்கரியினமாமெனவரசர்
தனையின்கணினிடைந்தோடிடத்தருமன்னகைசெய்யா
வரிவெஞ்சிலைச்சிறுநாணொலிவானெண்டிசைமடுப்பச்
சொரியுங்கனனிகராமெனச்சுடர்வாளிகள்சொரிந்தான். (௧௦௪)

சுரர்தம்பதியளவாயுயர்முரசக்கொடிதுலங்கத்
தருமன்னெழிற்றேர்மேலொளிர்தபனன்னெனத்திரிந்தே
வினைவின்கணைசொரிந்தார்த்திடவிறன்மன்னர்கண்மடிந்தார்
கரியற்றனபரியற்றனகவந்தங்கடிதாட. (௧௦௫)

மின்னிப்பொழிமழையாமெனத்தருமன்விடுகணையாற்
பொன்னிற்பொலியிரதஞ்சிலைகவசம்பொடியாகக்
கன்னன்பரித்தாமாவுடனிருகண்ணிலிமைந்தன்
வெந்நிட்டனர்மறையோன்விசையோடேநிலனோட. (௧௦௬)

அரவத்துவசன்வேதியனருக்கன்மகன்முதலா
நிருபத்திரளிடைந்தோடிடநெறியிற்பகதத்தன்
வனையொத்தடர்கரிசுப்பிரதீபத்தினில்வந்தே
யெரியொத்திடுசுடர்வாளிகளெங்கும்பொழிந்தார்த்தான். (௧௦௭)

மதமுற்றிடுகரிசுப்பிரதீபம்வனையெனமண்
புதைவுற்றிடநடந்தேவிழிபொறியுற்றிடவடர
மிதிபட்டிடனெரிந்தார்பலர்விபுலைக்கணின்மிடைந்தே
வுதைபட்டிடவுருண்டார்பலருரங்கால்கரமொடிந்தே. (௧௦௮)

கூற்றம்மெனக்கொலைசெய்திடுங்கொடிதாகியவிபத்தை
யேற்றின்னுறுமரன்போன்முனிந்திடும்பாசுரன்மருகன்
காற்றெருத்திடுவிசையாம்பதினோராயிரங்கரியாய்ச்
சீற்றம்முறப்பலகோடுகளுறக்குத்தினன்றிறலால். (௧0௯)

பொய்யானைகளாய்மாருதிபுதல்வன்னுறக்குத்த
மெய்யூறியகுருதிப்புனல்விழவுஞ்சலியாதோர்
கையாற்கொலைசெய்யுங்கரிமீதிற்பகதத்த
னையானனனெனவேமுனிந்தழல்வாளிகள்பொழிந்தான். (௧௧0)

நரகன்சுதன்கணையாலடர்நாகத்தொளிர்மருப்பா
லரியுற்றிடுமுலர்காடெனவறத்தின்மகனனிகந்
தனையின்மடிந்திடும்வேலையினெதிர்த்தோர்களைத்தடிந்தே
விரைவின்னுயர்காண்டீபமன்விமலன்றொடும்வந்தான். (௧௧௧)

சுரர்தம்பதிசுதனெய்திடச்சுடுதீயெனமுனியா
நரகன்சுதன்விடுநாரணன்படையெண்டிசைநடுங்க
வருவெம்மையையறிந்தேயரிமார்பின்னிடையேற்பத்
தரளம்மொளிர்வடமாயுரமீதிற்றயங்கியதே. (௧௧௨)

நரகன்சுதன்விடுவெம்படைநாராயணன்மார்பிற்
றரளம்மொளிர்வடமாயிடத்தவத்தோர்மலர்சொரிந்தார்
பொரும்வெஞ்சிலைவளைத்திந்திரன்புதல்வன்கணைவிடவே
கரிபட்டிடப்பகதத்தமன்மடிந்தான்கனவரைபோல். (௧௧௩)

வேறு.

இந்திரன்சுதனம்பாலேயெதிரிலாப்பகதத்தன்றான்
றந்தியினுடனேமாளத்தபனன்போய்மறைதலோடுஞ்
சிந்தையிற்றுயரமெய்திச்சுயோதனனிருக்கைசேர
வந்தணன்றன்னைநோக்கியங்கர்கோனறையலுற்றான். (௧௧௪)

இன்றுநீதருமன்றன்னைப்பிணிப்பனென்றியம்புஞ்சொற்கள்
குன்றிடநெஞ்சிற்பீதிகொண்டிவண்பெயர்ந்ததன்மை
நன்றெனநகைத்தலோடுநான்மறையுணருநாவோ
னென்றியசினத்தனாகியிரவிசேய்க்குரைப்பதானான். (௧௧௫)

இருநிலமிசையின்வானினெண்டிசையதனின்விஞ்சுந்
தருமன்வில்விறலுக்கொத்தாருளரெனிற்சாற்றுவாய்நீ
செருவிடையவன்றன்முன்னர்ச்சிறிதுபோதாற்றுகில்லா
யுரைவலேனென்றுசொன்னாலுறும்பயனில்லையென்றான். (௧௧௬)

இருபிறப்பாளனிவ்வாறுரைத்துத்தன்னிருக்கைசேர
வரவுயர்வேந்தன்மன்னரனைவர்க்கும்விடையையீந்து
தெரிமலர்ச்சேக்கைமீதிற்றுயின்றனன்சிறப்பான்மிக்க
தருமன்றன்பாடிவீட்டிற்றானையோடமர்ந்தானன்றே. (௧௧௭)

பருதிநீள்பரவைமீதின்வயங்கிடப்பதின்மூன்றாநாள்
விருதுறவறைகூவும்போர்வேந்தர்மேல்விசயனேகச்
சுருதிநூல்வல்லோனெய்தித்தொலைவிலாவனிகஞ்சூழ
வருதுனியகலவாழிப்பேரணிவகுத்தானன்றே. (௧௧௮)

சமீரணன்சிறுவன்றனனைசசாத்தகிப்பெயரினானைக்
கமையிலாச்சுயோதனன்றன்கனிட்டர்காலிங்கரோடு
மமர்பொரவருதிரொன்றேயடர்ந்தறைகூவலோடு
முமையவள்கொழுநன்போலவுருத்தவர்சென்றுரன்றே. (௧௧௯)

ஆழியின்யூபந்தன்னைவருத்தவந்தணர்தங்கோமான்
ஊழியினெழுந்துதோன்றுமுருத்திரமூர்த்தியொத்துப்
பாழிகொள்சிலையினாலேபல்லவமென்மேற்றூவி
வேழமாமடிந்துவீழவேந்தரைவதைத்தான்மன்னோ. (௧௨௦)

கறையடியிவுளிவீரர்கணக்கிலர்மடிந்துவீழப்
பிறைமுகவாளிதூவிப்பினாகன்போலத்தோன்று
மறையவனுடனே தாக்கிவரிசிலையறப்பாஞ்சாலன்
சிறுவன்றேரழியவோடித்தருமனைச்சேர்ந்தான்மாதோ. (௧௨௧)

தரையினிற்பாறிவந்ததுரோபதன்றனையன்றன்னை
வெருவலையென்றுகூறிவிழுமியதருமனாங்கே
வரிதிருமருகனானவபிமனைநோக்கிநீயே
பொருதுதிநேமியூபப்பொறியினையழித்திீண்டென்றான். (௧௨௨)

வீமன்றன்முன்னோன்கூறவவனடியிறைஞ்சிமிக்கக்
காமனுநாணுமெய்யிற்கவினுறுமபிமன்றேர்மேற்
சோமனைநிகர்க்குங்கொற்றக்கவிகைவான்றுலங்குவேதன்
மாமனைப்போலத்தோன்றிமாற்றலர்வெருவப்போனான். (௧௨௩)

சக்கரயூபம்பற்றிப்பொருகின்றதானையெல்லா
மக்கணமடிந்துவீழவிரதர்வெந்நிட்டோடத்
திக்கெலாமறையவொப்பிலிந்திரன்சிறுவன்செம்ம
லுக்கிரக்கணைகள்கோடிபொழிந்தனனுதிரமோட. (௧௨௪)

வேதியனங்கபூமன்விறலுடைமகதன்பூரி
தீதகலிவுளித்தாமாசெயித்திரதன்காந்தாரன்
பூதலத்திரதமாவிற்பொடிபடத்திசைகடோறும்
பீதிகொண்டோடவெய்யபிறைமுகப்பகழிபெய்தான். (௧௨௫)

மாலின்மாமருகன்வாளிபொழிந்தவன்மலையும்போழ்தின்
காலின்மாமதலைவெய்யசெருநரைக்கதையான்மோதிக்
கோலமார்தருமன்முன்னிற்குறுகியாண்டிறைஞ்சியந்தோ
பாலனைக்காலன்போன்றபகைஞர்முன்விடுத்தாயென்றான். (௧௨௬)

தருமனேடிவையையோதிச்சமீரணன்சிறுவன்றன்பால்
விரைவினெனலரைமோதிச்செலவிடவரவுயர்த்தோ
னுரையினாற்சிந்துநாடனொருநொடியிடுவமுன்ன
ரரனருள்கொன்றைமாலையகத்தினேறிந்தானம்மா. (௧௨௭)

சிந்துநாடாளுமன்னன்றிரிபுராந்தகன்றான்முன்னாட்
டந்திடுங்கொன்றைமாலைதன்னைமுன்னெறிதலோடும்
வந்தனைசெய்துவீமன்மைந்தனிங்கிறந்தானென்றே
கந்தனார்தந்தைமாலைகடக்கலானிரங்கும்வேலை. (௧௨௮)

வினைவினிற்பொருதுவென்றுமீண்டவாளபிமன்றுய்ய
வரனருள்கொன்றைமாலைதன்னினலனிலன்மைந்தன்
வருகிலாதிரங்குகின்றவாறெலாமுணர்ந்துநக்கன்
றெரியலையிகழ்தல்செய்யான்செருநர்மேற்றேரைவிட்டான். (௩௨௯)

வேறு.

சூரர்பத்திசெய்யரிமைத்துனனருளுஞ்சுதன்வில்லா
னிருபத்திரண்மடிந்தேவிடநெடுவாளிகள்பொழியக்
குருமற்றவன்றருபுத்திரன்கொடைமிக்கிடுகென்ன
னிருபத்தொருதரந்தேர்சிலையிறவோடினரிடைந்தே. (௩௩௦)

துரியோதனனருளுஞ்சுதனுடனேபலகுமரர்
பரிதேர்நிறையிபமெண்ணிலவரப்பற்குனன்மைந்தன்
சரமாரியிற்பொரும்வீரரைத்துணித்துத்தழலம்பால்
வரைபோல்விழவரவத்துவசன்மைந்தனைவதைத்தான். (௩௩௧)

தரைமீதினிற்றுரியோதனன்றனயன்மடிந்திடலும்
வரைபோல்விழுந்தரற்றக்கடிதெடுத்தேதமனர்தேற்றிக்
கரிதேர்பரிநிறையக்கடுங்கணைமாரிகள்பொழிந்து
பொருதாருயர்விசையன்றருபுதல்வன்றனைவளைத்தே. (௩௩௨)

கிருபன்விறற்கன்னன்பரித்தாமாகிரிநிகராய்ப்
பொருமத்திரன்மறையோனிவர்புத்தேளிர்களஞ்ச
வினைவிற்கணைபொழிந்தார்த்தவர்விற்றேர்கொடிதுணியத்
தருமன்சுதன்றனயன்மிகுசரந்தூவிடவிரிந்தார். (௩௩௩)

பின்னுஞ்சினமுறமன்னர்கள்பெருந்தேர்மிசையெய்தித்
துன்னுஞ்சரஞ்சொரிந்தாரபிமன்றேர்சிலைதுணியக்
கன்னன்கணைவிடுத்தார்த்திடக்காமன்சுதனருள்சேய்
மின்னுஞ்சுடர்வாளாற்பொருவிறல்வீரரைவதைத்தான். (௩௩௪)

அரியாமெனச்சுடர்வாளினிலயந்தோலினைத்துணித்துப்
பொருவீரியன்மேற்பொன்மலர்புத்தேளிர்கள்பொழிந்தார்
வினைவோடிரதத்தேவருமறையோன்விசிகத்தாற்
சுரர்போற்றிடுமாயோன்மருகன்கையினைத்துணித்தான். (௩௩௫)

கையற்றிடக்கலங்காதுயரபிமன்களத்திடையோர்
வையந்தனிலுருள்பண்டியைச்சுழற்றுவலித்தெரிய
மெய்யொன்றியவரியாழியைநிகர்த்தேவரவெருவி
யுய்யும்படியினியில்லையென்றுடைந்தோடினர்நிருபர். (௩௩௬)

வெருவித்திசைதொறுமன்னவரிரிந்தோடிடவிமலன்
கரம்வைத்திடுதிகிரிப்படையெனவேககனத்தி
னுருமொத்தொலியுறவான்வருமுயர்பண்டியைமறையோ
னிருபத்திரளனவோரொடுநெடுவாளியிற்றுணித்தான். (௩௩௭)

கரத்தால்விடுமுயர்சில்லிமண்டுகளாய்விழக்கண்டு
சிரித்தேயெழிலபிமன்கதைகொண்டேவரச்சீவன்பால்
வரத்தாற்பெறுமணித்தண்டினைமறனுர்செயித்திரத
னுரத்தால்விடவிசையன்மகன்சிரமோவியதுருண்டே. (௩௩௮)

## வேறு.

சிந்துவுக்கிறைவன்றண்டாற்சீருறுவிசயன்பெற்ற
மைந்தனெண்சிரமண்வீழமடிதலும்வாயுசெம்ம
லந்தமார்தருமனோடுமரற்றிடவருக்கன்வானி
னிந்துவிஞ்சிடவேவீழயாவருமிருக்கைசேர்ந்தார். (௧௩௯)

விறலுறவரைகூவிக்கொண்டேகியவீரர்தம்மைப்
பிறைமுகப்பகழியாலேவதைத்திடப்பீதிகொண்டு
திறனழிந்தோடலோடுந்தேரின்மேல்விசையன்மீள
விறையவனபிமன்மாண்டானென்பதுதெரிந்தானன்றே. (௧௪௦)

விறலுறுவிசையன்மைந்தன்வீழ்ந்தமைகேட்கிலாவி
பிறியவேமாள்வனென்பதறிந்தரிசுரர்பிரானுக்
கறைதலுமாயமானமகன்றனையனவிலிட்டே
மறையவனாகிவீழவருமுனர்ப்பார்த்தன்கண்டான். (௧௪௧)

இந்திரன்சிறுவனெய்தியெரியினில்விழுவான்றன்னை
மைந்தன்றன்னுடனேமாளமறைபவவடாதென்றோத
வந்தணனுனக்குமெய்தித்தடுப்பனென்றகன்றுபோக
விந்தைதன்மணாளனோடுமேவினன்பாடிவீட்டின். (௧௪௨)

பல்லியமுழக்கமின்றிப்பண்ணியாழொலியுமின்றிச்
சில்லுளையிவுளிகைமாத்தெருவிடைத்திரிதலின்றி
வல்லியரரற்றுமோதைமலியவேபார்த்தன்கேளா
வொல்லையினடைந்தான்முன்னோர்க்கிடரென்கொலுற்றதென்றே. (௧௪௩)

தேரினின்றிழிந்துகோயிற்சென்றிடும்விசையன்றன்னை
யாரியன்றழுவியந்தோயபிமன்விண்ணடைந்தானென்னப்
பாரினிற்புரண்டுவிம்மிப்பதைத்திரங்கிடுவான்றன்னோ
டேருறுதருமன்பின்னோருடனெய்தியிரங்கினானால். (௧௪௪)

சுரர்பதிசிறுவனென்றன்சுதனுடன்மாளவேயீண்
டெரியினையிடுதியென்னவிளையவன்வளர்த்ததீயில்
விரைவினில்விழுவான்றன்னாலனவிடைவிழாதோனெய்தி
கிருபனீயொழிதியென்றுநிகழ்த்திடத்தவிர்ந்தானன்றே. (௧௪௫)

அரற்றிடுதருமன்றன்னையபிமன்றானிறந்ததன்மை
யுரைத்தியென்றுபார்த்தனியம்பிடவுன்னைவேறே
பிரித்தெனைப்பிணிக்கவிட்டசக்கரபயூகம்பேதித்
துருத்திரனென்னச்சென்றானென்சொலாலுன்றன்மைந்தன். (௧௪௬)

அந்தகனெனவேசென்றவபிமனந்தகன்றன்செம்மன்
மைந்தனைக்கொன்றுமீளவருதலும்வாயுமைந்தன்
முந்தியேசெலாமல்மிக்கமுக்கணான்மாலைபோட்ட
சிந்துமன்றண்டாலுந்தன்சிறுவனைவதைத்தானென்றான். (௧௪௭)

என்றவனுரைக்கநாளையிரவிபோய்வீழுமுன்னஞ்
சென்றுயர்சிந்துமன்னன்சிரத்தினைத்துணித்திலேனேல்
வென்றிசெய்வில்லினோடும்வெங்கனலிடையின்வீழ்ந்து
பொன்றுவனென்றேயெண்ணில்சபதங்கள்புகன்றானன்றே. (௧௪௮)

இந்திரன்சிறுவன்சிந்துக்கிறைவனைவதைத்திடேனேற்
செந்தழலிடையின்வீழ்வனென்றுயர்சபதஞ்செப்பக்
கந்தனுர்தாதைதன்பாற்கணையுடன்பொய்கைவேண்ட
முந்துவங்கயிலைக்கென்றுமொழிந்தனன்முராரிமாதோ. (கசசு)

அரிகலுழன்மேலேறவருச்சுனன்றன்னையங்கை
விரலிடைத்தாங்கிப்புள்ளின்வேந்தன்றுன்செல்லமாயோன்
சுரர்பதிசுதனைநோக்கித்தூயமாவடிசினீதான்
விரைவினிலருந்துகென்னவிசையன்றுன்விளம்பலுற்றுன். (கருO)

சிவனையர்ச்சித்தலாதுசிறந்திவன்னந்தன்னைச்
சுவையுறவருந்தேனென்னச்சுந்தரன்முதனுட்டன்னி
லவனிவனுவனுமானவாதியானென்றுன்முன்னே
யுவமையிலுருவங்காட்டவுணர்கிலையென்றுசொல்வான். (கருக)

உன்னியதெய்வந்தன்னையுணர்வுறுமந்திரத்தா
லென்னிருகழலினர்ச்சித்தின்னமுதருந்திநீயே
பின்னர்த்தானிணையிலாதபிரானெனன்பநறிதியென்றே
சொன்னமைத்துனனைநோக்கித்தொழுதிவைசெய்தானன்றே. (கருஉ)

ஏமலிவாகனமாய்க்கோரபயிரவர்நடிக்கநண்ணும்
விமலனஞ்செழுத்தையுள்ளத்துள்கியேவிடமேபோல்வந்
தமலனைச்சாடிமாமன்சிதையவேமிதித்தோன்றுளிற்
கமலமுங்கமலமுங்கொண்டருச்சித்தான்காமன்மைந்தன். (கருங)

அரிபதத்தரனையர்ச்சித்தவனனமருந்தமாயோன்
கருடன்மேற்கயிலைக்கெய்தக்கந்தனற்றுதைகண்டே
பரிவுறத்தழுவிக்கொள்ளச்சுரர்கடம்பொற்பீடத்தி
லிருவருமிருந்தார்நீலவரைவெள்ளிமலையுமேல. (கருச)

வடிவுடைவிசையன்மங்கைபங்கனைவணங்கிவானம்
படியளந்தவன்றன்பாதத்தருச்சனைபடியச்சூட்டுங்
கடிகமழ்கமலப்பூவுந்தும்பையுங்கந்தன்றுதை
முடியினிற்கண்டுசோதிமுராரியென்றையந்தீர்ந்தான். (கருரு)

அரியினையரன்றுநோக்கியெய்தியதருள்வாயென்னச்
சுரர்பதிசுதனென்னுைத்துணித்திடவில்லுந்தூணி
சரமுடன்பொய்கைதானுந்தந்தருளென்னலோடுந்
திரிபுரமெரித்ததேவன்சிரித்திவைசெப்பலுற்றுன். (கருசு)

அரவுயர்துவசன்பின்னோனரிவைபாஞ்சாலியாடை
யுரியவேயுளதாய்த்தோன்றவுதவியமுகுந்தாவின்று
சரம்வில்லுத்தூணிபொய்கைதந்திடவறிகிலாயென்
றுரைசெய்யுன்மாயந்தன்னையுணர்வதற்கெளிதோவென்றுன். (கருஎ)

அரனிவைமொழிந்துதூயமடுவினிலரசாமூழ்கு
விரைவினிலென்றலோடும்விசயனீர்படிந்தங்கேற
வுரகமொன்றெழுந்துவாயாலுமிழ்வோர்மறையோன்றோன்றிச்
சரம்வில்லுத்தூணிபொய்கைதருமமந்திரந்தான்சொன்னுன். (கருஅ)

அரவின்வாய்மறையோனெய்தியறைந்தமந்திரந்தான்கேட்டு
வரிசிலைப்பார்த்தனீலகண்டனைவணங்கிநிற்ப
வுரகபூடணனையோவியுவணன்மேல்விசையனோடுந்
திருவமர்மார்பன்றன்மனிருப்பிடஞ்சேரும்வேலை. (௧௫௯)

தருமனுசுகன்சேய்பெற்றதனையனையழைத்துநீபோ
யரவுயர்வேந்தன்றன்பாலபிமனைக்கொன்றான்றன்னை
யிரவிபோய்வீழ்முன்னானைவதைத்திலனாகிற்றீயிற்
சுரர்பதிசுதன்றான்மாள்வனெனன்பதுசொலிவாவென்றான். (௧௬௦)

விறலுடைத்தருமன்கூறக்கடோற்கசனிறைவினெய்தி
மறனுறுசுயோதனன்றன்மலரடிவணங்கிநின்று
திறலுடையபிமன்றன்னைச்செற்றிடுஞ்சிந்துநாட்டுக்
கிறைவனைப்பார்த்தன்கொல்லவிடுஞ்சபதங்கேளென்றான். (௧௬௧)

மைந்தனைவதைத்தசிந்துமன்னனைநாளைவெய்யோன்
சிந்துவில்வீழுமுன்னஞ்செற்றிலனாகிற்பார்த்தன்
வெந்தழலிடையின்வீழ்வனென்றனன்வீமன்முன்னோன்
இந்தநன்மொழியைநீபோயியம்பிவாவென்றானென்றான். (௧௬௨)

வித்தகவீமன்மைந்தன்விளம்பியவுரையைக்கேளா
வத்தினபுரியின்மன்னோடங்கர்கோனறைவானுன்றன்
மைத்துனன்றன்னையானேகாப்பன்வாள்விசையன்வானிற்
புத்திரனோடுகூடப்போதுவனெரியினென்றான். (௧௬௩)

அங்கர்கோனுரையைக்கேளாக்கடோற்கசனறையலுற்றான்
சிங்கவில்விசையன்முன்னர்ச்செறுத்தெதிர்பொருவாய்நீயோ
யிங்கிவையிமைப்பின்முன்னமெந்தைதானருளப்பெற்றா
னுங்குவன்யானேயென்றுநுவன்றுறநகைத்தானன்றே. (௧௬௪)

விருதுறக்கடோற்கசன்றான்விளம்பிடவந்தன்மைந்தன்
நிருதவுன்னுசாரத்தானெறியலகூறலென்னக்
குருகுலத்தரசநின்னைப்போலவேயரக்கர்கோதி
லொருகுலத்துதித்தார்தேவியாடையையுரியாரொன்றான். (௧௬௫)

நஞ்சினையனத்திலிட்டுநெற்கயல்யத்தினுள்ளே
விஞ்சியவசியைநட்டும்வீடமாளிகைத்தீவைத்தும்
வஞ்சகச்சூதையாடிவளநகர்வாங்கிக்கொள்ளார்
அஞ்சலிலரக்கரொன்னவறைந்தவனேகிநானல். (௧௬௬)

மாருதிமைந்தன்போனபின்னரின்மன்னர்மன்னன்
வீரியவரசர்நீவிர்விசையனைவதைக்கவேண்டாம்
பாரினில்வனேதீயின்விழுந்திடப்பகுந்துகொண்டு
சேரிலாச்சிந்துநாட்டுநிருபனைக்காமினென்றான். (௧௬௭)

அரவுயர்வேந்தன்கூறவவனியினரசரொல்லா
மிரவிபோய்மறையுங்காறுமியாங்களேகாப்பமென்றார்
துருமுகனனதுன்மருடணனுமனுசன்றூய
வொருபகலளவுங்காப்பனுரககேதனனேயென்றான். (௧௬௮)

நிருபர்களிவைகளெல்லாநிகழ்த்திடவிராசராசன்
றளமாவடங்களாடைதமனியக்கலன்களெல்லா
மரசர்கள்பெறவேநல்கியங்கர்கோனுடனுந்துய்ய
விரைசெறியமளிமீதின்விளங்கியே துயின்றனன்றே. (௧௬௯)

எறுழ்வலிக்கடோர்க்கசன்றனேகிநற்றருமன்முன்னி
னறனிலிக்கிவைகளெல்லாமறைந்திடவிகழ்ந்தானென்று
பறைதலும்விசயனேடும்பரமன்வந்தரன்றனீய்ந்த
தறைதலுமறன்சேய்சிந்தையையம்போய்த் துயின்றனன்றே. (௧௭௦)

சலதியினிரவிதோன்றச்சதுர்த்தசித்தினத்திற்றூய
மலருறையயனேராமறையவன்யூபஞ்செய்து
நிலமிசையிருபத்தஞ்சாம்யோசனைநீளங்கைமா
விலகியவிவுளிவீரரிரதங்கணிறையவைத்தான். (௧௭௧)

அவனியினிருபத்தஞ்சாம்யோசனைக்கப்பாலாகப்
பவமுறுசிந்துமன்னைப்படுகுழியதனின்வைத்துச்
சிவனெனும்விறல்கொண்மன்னர்திசைதொறும்வளைத்துக்காப்பத்
தவமலிமறையோனின்றான்சங்குதுந்துமிகளார்ப்ப. (௧௭௨)

அறனருள்மைந்தன்பேரியழுங்கலார்கலியையேய
விறனுடையரசர்சூழவெஞ்சமர்விளைக்கும்வேலை
யுறியுறுததியையுண்ணுமுத்தமன்வலவனுக
மறுவிலாப்பார்த்தன்றுய்யவையமேல்வயங்கிவந்தான். (௧௭௩)

செருவிடையெதிர்ந்தபார்த்தன்சிலையினுணெறிதலோடு
மொருபகலளவுங்காப்பன்யானெனவுரைத்துநின்ற
துருமுகனுனதுன்மருடணன்றன்றுவசத்தேர்விட்
டரசர்கணைகைசெய்தார்ப்பவவனியினேடினுனல். (௧௭௪)

உரககேதனன்றன்பின்னேனுடைதலும்பார்த்தன்வில்லாற்
கரிபரியரசர்மாளக்கணைகளான்மாரிபெய்ய
வரிசிலைவளையவாங்கிவாளிகள்சொரிந்துமாற்றிச்
சரியிலமறையோனைந்நாழிகைதடுத்தானன்றே. (௧௭௫)

நாழிகையைந்துசெல்லநடந்தயோசனையைந்தாக
வாழியினமர்வோன்றேரையந்தணன்காணுவண்ணம்
ஊழியின்கால்போலோட்டவுறுத்தவன்றுடர்தலுந்தான்
பாழிசால்விசயனின்சொற்பகர்ந்திடமீண்டானன்றே. (௧௭௬)

வாரிதியரசன்மைந்தன்பொழிந்திடும்வாளியாலே
வீரனொண்விசயன்றுய்யமேனியிற்குருதிவீழக்
கோரவெங்கணையால்வெய்யோன்கொடிகடேரழிக்கத்தண்டா
லாரியன்சிரத்தின்மோதியவனியினவிந்தானன்றே. (௧௭௭)

தந்தையாம்வருணன்றுய்யசோதிமேற்றழும்புசெய்யின்
மைந்தநீமடிவாயென்றுவழங்கியவுரையாற்றண்டின்
முந்தியொண்முராரிமீதுமோதியேசதாயுவீய
விந்திரன்சிறுவன்சென்றனெதிர்ந்தவர்தம்மைநூறி. (௧௭௮)

சதசிரவாகுவெய்தித்தழலுறும்வாளிபெய்ய
மிகமுனிந்தவனைவீட்டிவிசையன்மாகன்னன்மீதி
னுகவிறுதியிற்பெய்மாரியொத்தநல்வாளிதூவிப்
பகலவன்குமரன்றேரையழித்திடப்பாறினுறல். (௧௭௯)

அதிரதர்மடிந்துவீழவயங்கரிநிறைகண்மாள
மதிதவழ்வேணியான்போல்முனிந்துவாள்விசையன்வாளி
கதுமெனச்சொரிந்தேயேகக்கதிரவனுச்சியெய்த
வெதுகுலவிறைவன்றூண்டியிவுளிகளிளைத்தவன்றே. (௧௮௦)

பரிகளினிளைப்புத்தீரப்பயத்தினையூட்டப்பார்த்தா
வுரகபூடணனுற்பெற்றமந்திரமுள்குவாயென்
றரியுரைத்திடலுந்துய்யோனந்தமந்திரத்தையுன்ன
விருநிலத்தெழிலார்பொய்கையிமைப்பின்முன்னெய்திற்றன்றே. (௧௮௧)

கடிகமழ்கமலப்பூவாற்கவினுறுபொய்கைதன்னிற்
குடமெடுத்தாடுங்கோமான்குரகதங்களைநீரூட்ட
வடவைபோல்வளைந்துமன்னர்வாளிகள்பொழியப்பார்த்தன்
படியின்மேற்காலாளாகிப்பகழியாலறுத்துவீழ்த்தான். (௧௮௨)

பரியினையயத்தையூட்டிப்பன்மணித்தேரிற்பூட்டி
யரியொளிதிகழவெய்தவருச்சுனனிரதமேறப்
புரவலர்திசைகடோறும்பொருதொழின்மறந்துபாற
விருநிலத்தெதிரிலாமலிரண்டுயோசனைதான்சென்றான். (௧௮௩)

விரைவினின்விசையனேகும்வேலையிலந்தன்மைந்தன்
குருவினைவணங்கியையகொண்டல்வாகனன்றன்செம்மல்
அரசர்கள்மடியநூறியரியெனவிரைவிற்செல்வான்
ஒருநொடியிடுமுன்சிந்துபதியுயிருண்பனென்றான். (௧௮௪)

நவையுறுமனத்தனாயசுயோதனனவிலலோடும்
பவமறுமறையோனீதான்பருவரலொழிதியென்று
தவமுறுபலத்தாலெந்தைதந்திடப்பெற்றேனீதென்
றுவமையில்கவசமீயவுவந்தவன்புனைந்துமீண்டான். (௧௮௫)

பூசுரனளித்ததுய்யகவசமேற்புனைந்துகொண்டு
மாசுணமுயர்த்தகோமான்வாசவன்மைந்தன்மீதி
னாசுகமாரிதூவியார்த்திடநகைதானெய்தக்
கேசவன்றன்னைநோக்கிக்கிரீடியங்குரைக்கலுற்றான். (௧௮௬)

என்முனினமரிலென்றுமியோசனைக்கெதிர்நிலாத
பன்னகத்துவசனெய்திப்பகழிதானெய்யுந்தன்மை
அன்னவெந்நுற்றான்றுதாயறையெனவரியாசான்பாற்
பொன்னெடுங்கவசம்பெற்றுப்போர்பொரத்துணிந்தானென்றான். (௧௮௭)

யாதவனருளலோடுமெழிலுறுவிசையனந்தன்
காதலன்கவசமீதின்கனலுறுகணையொன்றேவ
வேதியன்குமரன்றுய்யபகழியால்விலக்கலோடும்
பூதலத்தரசரொண்ணில்பகழிகள்பொழிந்துசூழ்ந்தார். (௧௮௮)

சிலமுறநிருபர்பாய்மாத்தந்திதேர்நிறையச்சூழ்ந்து
வலனுறுமிமையோரஞ்சவாளிகள்பொழியப்பார்த்த
னிலைகுலைந்தவரைத்தாங்குநெறியிலாதயரமாயோ
னுலகொடெண்டிசையுமஞ்சவூதினான்றவளச்சங்கம். (௧௮௯)

அண்டம்விண்டனகொல்லென்றேயமரர்கள்வெருவியோட
வெண்டிசைக்கரிகளஞ்சவெதிருமொன்னலர்களெல்லா
மண்டனிலயர்ந்துபாறவளையிணையுலகமெல்லாம்
உண்டவனுகாந்தகாலத்துருமெனவூதினானால். (௧௯௦)

அரிவளையூதமன்னரவனியின்வெருவியோட
நரகன்மெய்நுழைத்தவெய்யகணையினைநல்கவாங்கி
யுரககேதனன்றன்மெய்யிலுற்றிடுகவசம்பாரின்
விரைவினிற்பொடியாய்வீழவிசயனெப்தார்த்தானன்றே. (௧௯௧)

கவசநீறுறலும்பாரிற்சுயோதனன்கலங்கியோட
வவன்மேலுயருங்கோமானுடன்றுருபர்மதலைதேர்மேற்
சிவனெனமுனிந்தேயேகச்சிறந்திடுந்தருமராசன்
அவனியையிடந்தானூதும்வளையினார்ப்பரவங்கேட்டான். (௧௯௨)

பார்த்தனுக்கிடருறாமற்பாஞ்சசன்னியத்தைவேழங்
காத்தவன்முழக்கானென்றுக்கலங்கியேதருமன்மூன்று
நேத்திரனிடைத்தீய்த்தானிகரில்சங்கூதுந்தன்மை
சாத்தகியறிந்துவாவென்றேவினன்றயையான்மிக்கான். (௧௯௩)

வினையகறருமன்கூறவிளங்கியவிரதமீதிற்
சினியருள்புதல்வனெய்திச்செறுநர்கண்மடியநூறிக்
கனமெனக்கணைகடுவிக்கன்னனைத்துரத்திப்போரின்
முனையுமன்னவர்களெல்லாமுறிந்திடச்சென்றானன்றே. (௧௯௪)

பின்னருந்தருமராசன்பெருந்துணியுறவேவீமன்
றன்னைநீமாயோன்றுய்யசங்கினையூதுந்தன்மை
யின்னதென்றறிந்துவாவென்றேவிடவிரதமீதின்
மன்னவர்மடியத்தண்டால்மலைந்தவன்சென்றான்மன்னோ. (௧௯௫)

வாரியைக்கிழித்தங்கோடுமரக்கலமென்னமண்ணி
னேருறுமரசரெல்லாமிரிந்திடநெடுந்தேரோட்டி
வீரியக்குருவையத்தின்விண்ணுறவெழுந்துமீண்டு
பாரினிலுருண்டுவீழப்பற்றியேயெறிந்துபோனான். (௧௯௬)

அரவுயர்வேந்தன்பின்னோராறைந்துநவப்பேர்தம்மைத்
தரையினிற்செற்றுவீழ்த்துத்தபனன்சேயுடனேதாக்கி
யிரவிசேய்முரியப்பின்னுஞ்சுயோதனனிளையோர்நால்வர்
விரைவினினுறுபோர்செய்யவவரையும்வீட்டியார்த்தான். (௧௯௭)

அலையுறுகடலேபோலவார்த்தவாசுகன்றன்சேயைச்
சலமுறக்கன்னன்வெய்யசரத்திற்றேரழித்துத்தன்கைச்
சிலையவன்கழுத்திற்பூட்டச்சினத்துடன்வயிரத்தண்டா
லலரிதன்சிறுவன்பாரிலயர்ந்திடவடித்துப்போனான். (௧௯௮)

மூத்தவனேவவந்தமுடங்குனைநிகராம்வீரன்
சாத்தகியுடனுங்கூடித்தமனியத்தேரினேறி
வேத்திருந்தரசரோடவிளைவினினெய்திப்போர்செய்
பார்த்தனைத்தழுவிமாயோன்பதந்தனிற்பணிந்தானன்றே. (௧௯௯)

தினியுறுவாயுமைந்தன்சுடர்மணித்தண்டிற்கைம்மா
வினமடிந்திடவேமோதவிந்திரன்சிறுவன்வில்லாற்
கணமெனக்கணைகள்சிந்தக்காவலர்மடியும்வேலை
சினியருள்புதல்வன்பூரிசிராவுடன்செருச்செய்தானால். (௨௦௦)

ஆர்த்திருவோருந்தேர்களழிந்திடவாளிதூவிப்
பார்த்தவர்வெருவிப்பாரினிழிந்துவாள்கரத்திற்பற்றிப்
போர்த்தொழில்புரியப்பூரிசிராச்சினம்பொங்கத்தாக்கிச்
சாத்தகியுரத்தினேறித்தலையினைத்துணிக்கும்வேலை. (௨௦௧)

சீதரன்கண்டுபார்த்தாசினியருள்சுதனைக்காவென்
றோதியேவிருவர்போரினொருவன்வெங்கணைதானேவல்
நீதியோவென்னப்பொங்கிநேமியைவாங்கவானோர்
நாதனற்குமரன்பூரிசிராக்கரநறுக்கிவீழ்த்தான். (௨௦௨)

கரம்விழக்கலக்கமெய்துங்காவலன்றன்னைத்தள்ளித்
தரையினிற்சினிதன்மைந்தன்றன்கையினுறும்வாடன்னாற்
சிரம்விழத்துணிசெய்தார்த்தான்றேருறும்விசையன்வில்லால்.
அரசர்கண்மடிந்துவீழவாசுகமாரிபெய்தான். (௨௦௩)

நாழிகையிரண்டின்வெய்யோன்மறையப்பின்குடக்கினண்ண
லூழியினரன்போற்சீறியும்பர்கோன்மதலைவில்லால்
வேழமாவனந்தம்வீழவிறன்மன்னர்மடியப்பாரி
னாழிபோலுதிரமோடவாசுகம்பொழிந்தானன்றே. (௨௦௪)

அரவுயர்வேந்தன்சிந்துபனையலரிநீளும்
பரவையின்மறையுங்காறுங்காத்திரோற்பார்த்தன்வெய்ய
வெரியினிலிறப்பானென்றேயிருநிலத்தரசர்க்கெல்லா
முரைசெயத்திரண்டுவாளிபொழிந்தனரும்பரஞ்ச. (௨௦௫)

செருவிடையரசரெல்லாந்திரண்டிடச்சிந்துமன்னை
யிரவிபோய்வீழுமுன்னமெழிலுறுவிசயன்கொல்ல
வரிதெனவரிவெய்யோனையாழியான்மறைக்கமுன்செய்
பெருவினைவனையப்பற்றும்பெற்றிபோலடர்ந்தகங்குல். ௨௦௬)

இரவியத்தமனமாச்சென்றெழுகின்றவுவகையோடு
மரவுயர்வேந்தன்றன்னோடணிகங்களார்த்தலோடும்
விளைவினினெய்தச்சிந்துமன்னவன்விசையன்றன்னைப்
பரிபவம்பேசிநக்கான்பராபரன்முறுவல்செய்தான். ௨௦௭)

தூயவனொருவன்றன்னைச்சூழ்ந்திடும்வினையப்போழ்தே
மாய்வனபோலமாயனாழியைவாங்கவெய்யோன்
மீயுயர்விசும்பிற்றோன்றவிசயனோர்சரத்தினாலே
தீயவச்சிந்துமன்னைச்சிரத்தினைத்துணித்தானன்றே. (௨௦௮)

அந்தமன்மருகன்கம்பாரடையுமுன்னறைவான்மாயோன்
சிந்துமன்சிரத்தைவீழ்த்தான்சிதையவேயிவனைத்தந்த
தந்தைதான்றவஞ்செய்கின்றானவன்கையிற்றலைபோய்வீழ
வுந்தெனவீழாவண்ணமுயர்த்தினன்விசையனம்பால். (௨௦௯)

வாயுவின்கணையாற்சிந்துமன்னவன்றலையைப்பார்த்
தனேயெனுமுன்னர்த்தூயசமந்தபஞ்சகத்தினெய்துந்
தூய்மையிறவத்தோன்கையினிடச்சுதன்சிரங்கீழ்வீழ்த்துத்
தீயவன்சிதைந்துவீழ்ந்தான்செய்தவம்பழுதாகாமல். (௨௰)

மறைந்திலங்கலரிகண்டான்மைத்துனன்சிரத்தைக்காணான்
இறந்தனன்றங்கைகொண்கனென்றந்தன்மைந்தனேங்க
வறந்தவறாததன்மனனிகங்கண்மகிழ்ந்தேயார்ப்பத்
துறந்தவரரிபத்தர்க்குத்துன்பம்வந்தடராதென்றார். (௨௧௧)

பரவையினிரவிவீழப்பாம்புயர்பதாகைவேந்தன்
இரவினிற்பொருவனென்றேயெழிலுறுதீபமேற்றத்
திரையுறுமுனிவர்மீதிற்செங்கமலங்களெல்லா
நிரையுறப்பூத்தபோலத்திசைதொறுநிறைந்ததன்றே. (௨௧௨)

கங்குல்வந்துறவேவெய்யகடோர்க்கசன்மைந்தன்வாளி
யெங்கணும்விடுத்துவீரரிபமயமெல்லாமாள
மங்குலினுருமேபோலவுரப்பியேவருகின்றானைச்
சிங்கலிவிவுளித்தாமாசெற்றனன்பகழியொன்றால். (௨௧௩)

மைந்தன்றான்மடியவீமன்மகன்மறையவன்சேய்மீதி
னிந்துவேணியனுமஞ்சவெதிர்ந்துநற்பகழிதூவ
வந்தணன்சிறுவன்றேர்மேலயர்ந்திடவார்த்துச்சென்றே
வந்தடரலாயுதன்றான்மடிந்திடவாளிபெய்தான். (௨௧௪)

நிசிசரன்றன்னைச்செற்றகடோர்க்கசனிகரிலாத
வசுவரியாகிக்காற்றாய்மழையதாயிடிமின்னாகிக்
கசரததுரகவீரர்கணக்கிலார்தம்மைக்கையாற்
பிசையும்வள்ளுகிரானூன்றிப்பிளக்குந்தேய்த்துழக்குமன்றே. (௨௧௫)

கடகரியிவுளிவீரரனேகரைக்கடோர்க்கசன்றான்
வடவனலெனவேயெண்ணில்வடிவமாய்வதைக்நோக்கி
விடவரவுயர்த்தோன்சொல்லால்வெய்யவன்சுதன்வேலேவப்
படியினில்வீமன்மைந்தன்பருப்பதம்போலமாண்டான். (௨௧௬)

வரையெனக்கடோர்க்கசன்றான்மடியவைவோரும்வீழ்ந்து
தரணியினரற்றமாயோன்றடுத்திவ்வேற்கன்னன்பார்த்தன்
உரமிசைவிடாமலின்றீண்டிவனெடுமொழிந்ததன்றே
யரசர்நீரிரங்கலென்றேயறைந்திடத்தேறினார். (௨௧௭)

கறைமிடற்றரனைப்போலக்கனன்றுயர்தேரினெய்தி
மறையவன்வாளிதன்னால்விராடனைவதைத்துப்பின்னர்ப்
பிறையெனவரிவிற்கோலிப்பிறங்கியவாளிதூவி
விறலுடைப்பாஞ்சாலன்றன்சிரத்தினைத்துணித்துவீழ்த்தான். (௨௧௮)

விருதவொண்விராடனோடுந் துரோபதன்மடிந்துவீழப்
பருதிநீள்பரவைமீதின்வயங்கிடப்பதினைந்தாநா
ளிருதிறத்தரசரொல்லாமெதிர்ந்துயர்வாளிபெய்தே
பொருதனரிவுளிவீரர்புகரிபமடிந்துவீழ. (உ௧௯)

இறுதியிற்பொழியுமேகமெனவில்லால்வாளிபெய்து
கறையடியிவுளிவீரர்மடிந்திடக்கவந்தமாட
மறையவன்மறலியஞ்சவாசுகியுமிழவாரி
யுறையுமாவிடமுண்டான்போலுருத்தமர்செய்யும்வேலை. (உஉ0)

ஆசுகன்மதலைதண்டாலமரிடைமாளவன்னூர்
பூசுரன்சிறுவன்பேரைப்பூண்டதோர்கரியைச்செற்றே
யேசகலரிமுனெய்தநீகொன்றவிபத்தின்பேரை
மாசகன்மறையோன்முன்னர்த்தந்திடவருதியென்றான். (உஉ௧)

அரியிவைகூறவீமனந்தணன்முன்னரெய்தி
விரைவினிலிவுளித்தாமாவதமென்றுமீடலோடும்
வரிசிலைமறையோன்வாயுமைந்தன்சொற்சடமாமென்று
குருதிகள்பெருகவீரர்குழாங்களைக்கொன்றுவீழ்த்தான். (உஉஉ)

வரிசிலைமறையோன்வீமன்வாய்மையைப்பொய்யாயெண்ண
வரியறன்மைந்தன்றன்னையந்தணன்முன்னரெய்தித்
தரணியினிவுளித்தாமாவதமென்றுசாற்றுகென்றே
யுரைசெயச்செவியைப்பொத்தியுளங்குலைந்திவைகள்சொன்னான். (உஉ௩)

தரணியினிமித்தமாகச்சற்குருவிறக்கப்பொய்யை
யுரைசெய்தாற்பழிவந்தெய்திவுலகமுள்ளளவுமோவா
வெரியுறுநிகோதந்தன்னிலெய்துவனென்றுதன்மன்
வெருவியேயுரைத்தலோடும்விமலனுண்டுரைக்கலுற்றான். (உஉ௪)

ஒருபொயினனந்தம்பேர்களுயிருய்யினறன்றானெய்த
வருநரகடையாரொன்றேயரிசொலத்தருமனேகிக்
குருவின்முன்னிவுளித்தாமாவதமென்றுகூறக்கேட்டு
வரிசிலைவிழவேயாவிவானுறமறையோனின்றான். (உஉ௫)

சிலைநிலன்விழவேநின்றதுரோணனைத்திட்டத்துய்மன்
சலமுறக்கணையொன்றாலேதலையினைத்துணித்தலோடு
மலைவிழுந்தனபோற்பாரின்மடிந்திடமன்னரொல்லா
நிலைகுலைந்தோடினார்கணீதிகொன்றவர்கள்போல. (உஉ௬)

அறனுறுதுரோணன்மாளவவனியினரசரொல்லா
நிறையுறுங்கனிகண்மல்குநிவர்மரம்விழவேயோடும்
பறவையின்குழாங்களென்னத்திசைதொறும்பாறலோடு
மறுவிலாவிவுளித்தாமாவந்துவீழ்ந்தரற்றினானால். (உஉ௭)

தந்தைதன்மீதின்வீழ்ந்தேயிரங்கியதவத்தோன்றன்னை
யந்தமன்மைந்தன்றேற்றியணைத்திடவிறுதிகாலத்
திந்துவேணியன்போன்மிக்கமுனிவொடுமிவுளித்தாமா
வுந்தினனுலகமெல்லாமுடையவன்படையையம்மா. (உஉ௮)

செருவிடையிவுளித்தாமாச்சீதரன்படைவிட்டார்ப்ப
வரிகரிமிசையினேறியறன்சுதன்சேனையானோர்
பரிபவமீதெனாதேபடையெலாமொழிமினென்னக்
கரிபரியிரதமோவக்கரத்தினாயுதங்கணீத்தார். (௨௨௯)

வசுவரிச்சகாத்தன்மைந்தனொழியமற்றுள்ளோர்வெயி
னிசையுறவூதுவோன்றனியம்பவாயுதங்கணீக்கச்
சசிபதிவிபுதரஞ்சச்சக்கரன்படைவான்மீதின்
விசைபுறவழல்கள்சிந்தவீமன்மேலெதிர்ந்ததன்றே. (௨௩௦)

வாயுவின்மதலைமீதேயரிபடைவருதல்கண்டே
தூயமாதருமனோடுந்துவரையாள்வோனாண்டெய்தி
நேயமோடனிலன்மைந்தன்றனைநிராயுதனாய்ச்செய்ய
மாயவன்படைதீமாறிவானுறப்போயிற்றன்றே. (௨௩௧)

அரிபடைபழுதாய்ப்போகவந்தணன்சிறுவன்சீறிப்
பரவையின்விடமுண்டான்றன்படையினையெடுத்தலோடுஞ்
சுரர்முனிமுதலாமெண்ணிறூயமாதவர்களெய்தி
யிருபிறப்பாளர்க்கெய்தாமுனிவினையொழித்தியென்றார். (௨௩௨)

தூயமாதவர்களெல்லாந்துரோணன்றன்சுதனைநோக்கி
மாயவனிற்கநீதான்வழங்குமாப்படைகளெல்லா
மோயுமென்றுரைத்தேயோவாவுவரியினலரிவீழ
வேயெனுமுன்னமன்னர்பாடிவீடெய்தினானால். (௨௩௩)

தூயமார்த்தாண்டனெய்தித்துலங்கச்சோடசநாட்டன்னிற்
றீயவச்சுயோதனன்வான்றினகரன்சேயைச்சேனை
நாயகனாகச்செய்துநானிலத்தரசர்சூழ
மீயுயர்தேரினேறிவெஞ்சமர்விளைக்கவந்தான். (௨௩௪)

நிருபர்கள்பொதுளிச்சூழநிகரிலாவணிகமார்ப்ப
முரசுயர்வேந்தனெய்திமுனிவர்வானவர்கனோக்க
வரவுயர்வேந்தன்முன்னரயங்கரிமடிந்துவீழப்
பொருதனன்கவந்தமாடப்புணரியிற்குருதியோட. (௨௩௫)

தருமன்வெஞ்சினத்தினோடுசுயோதனன்றடந்தேர்பாரின்
விரைவினிற்றுகளாய்வீழவிசிகங்கள்விடுத்தலோடுஞ்
செருவொழிந்தோடுவோனைச்சிறந்திடுங்கதையாலெற்ற
வரவுயர்துவசவேந்தனவனியினயர்ந்துவீழ்ந்தான். (௨௩௬)

அவனியினயர்ந்துவீழ்ந்தவந்தமன்சிறுவன்றன்னைப்
பவமகல்பருதிமைந்தன்பற்றித்தன்றேர்மேலேற்றிச்
சிவனெனமுனிந்துவெய்யசிலீமுகமாறிபெய்யக்
கவனமாவயவர்மாளக்கவந்தங்கணடித்ததன்றே. (௨௩௭)

சரியிலாநகுலன்பின்னோன்றன்னுடன்றாக்கலோடும்
விரைவினிரதநூறிவிளங்குமத்திரைதான்பெற்ற
விருவர்கந்தரத்திற்றுய்யசிலையினையிறுகப்பூட்டிப்
பரிபவஞ்செய்தேயோட்டிப்பருதிதன்மைந்தனார்த்தான். (௨௩௮)

செருவினிலரசர்முன்னர்மத்திராசிறுவர்தம்மை
வரிசிலை தன்னைப்பூட்டியோட்டவாள்விசையின்சீறி
விரைவினில்வில்லுந்தேருமழித்திடவெருவிக்கன்னன்
றனையினிலோடவெய்யோன்மறையத்தம்மிருக்கைசார்ந்தார். (உ௩௯)

பரவையிற்பதங்கனெய்தியிலங்கிடப்பதினேழாநா
ளிருதிறத்தரசர்கூடியெதிர்த்தமர்செய்யும்வேலை
யரவுயர் துவசன்றன்னையலரிதன்மைந்தனோக்கி
யிருகையாற்றொழுதுநின்றேயினியனகூறலுற்றான். (உ௪௦)

சூதபுத்திரனென்னைச்சுடர்மணிமகுடஞ்சூட்டிக்
கோதிலாவங்கநாடுகொடுத்தென்னோடருந்தித்துய்ய
பூதலந்தனிலென்னுணைபொருந்திடத் துணைவனாக்கித்
தீதறச்செய்தநன்றிக்கின்றியான்றீர்வனென்றான். (உ௪௧)

வித்தகவரசகேட்டிவிளங்குமென்னிரதமீதின்
மத்திரவரசனெய்திவலவனாயூர்வானாகி
லத்திரமழையைப்பெய்தேயருச்சுனன்றன்னைக்கொல்வ
னித்தலமிசையினென்றங்கென்றின்மாமதலைசொன்னான். (உ௪உ)

அலரிதன்மைந்தன்கூறவரவுயர் துவசன்சிந்தை
நலனுறமகிழ்வினோடுமத்திரன்றன்னைநண்ணித்
தலைமிசையிருகைகூப்பித்தபனன்சேயிரதமீதின்
வலவனாயூர்தியாகின்மடிவன்வாள்விசையனென்றான். (உ௪௩)

நீதியிலரசன்கூறநிகரின்மத்திரன்றான்சீறிச்
சூதபுத்திரனுக்கென்னைத்துலங்குதேரூர்தியென்றே
யோதினைநீயலால்வேறொருவனிங்ஙுரைத்தானைச்
சேதநான்செய்வனென்றுசெருக்களமொருவிப்போனான். (உ௪௪)

மத்திரன்முனிந்துபோகவாளரவுயர்த்தோன்பின்சென்
றத்திரத்திறலினாலேயரசநின்னொப்பாரில்லை
யுத்தமத்திருமாலேலவிரதநீயூர்தியென்றன்
வித்தகபொறுத்தியென்னமகிழ்ந்தவன்விளம்பலுற்றான். (உ௪௫)

நீதிசேர்முகுந்தனோடுநேரெனவென்னைமன்னா
வோதியசெயலாற்பொற்றேரூர்குவனென்றுகூறி
யாதவன்குமரன்வையமமர்ந்துமத்திரனைநோக்கிப்
பூதலமுழுதும்பெற்றான்போலவேமகிழ்ந்தான்மன்னன். (உ௪௬)

இரவிசேயிரதமூருமத்திரன்றன்னையென்றன்
வரிசிலைத்திறலைக்காணமகபதிசிறுவன்மீதின்
விரைவினிற்பொற்றேர்தன்னைவிடுதியென்றுரைத்தலோடு
நிருபவொண்ணகுலன்மாமனகைத்திவைநிகழ்த்தலுற்றான். (உ௪௭)

சிவனொடுபொருதுமூன்றுகோடிதானவரைச்செற்றுப்
புவனமெண்டிசையும்வென்றபொற்புடைவிசையன்முன்னர்
அவனியிற்றனிநீசென்றேயமர்பொரக்கருமனன்றென்
றுவமையிலரசன்கூறமுனிந்தங்கனுரைப்பதானான். (உ௪அ)

மந்திரவரசயானேமுனிந்தமர்மலைந்துவில்லா
லத்திரம்பொழியநில்லாதருச்சுனன்மாளுமாறு
முத்தமத்திருமாலாழித்துவரையினேடுமாறும்
வித்தககாண்டியென்றுவிளம்பிடவவனுஞ்சொல்வான். (௨௪௯)

சித்திரசேனனுன்னைச்செயித்தரவுயர்த்தோன்றன்னை
வித்தகவிரதமீதின்வீக்கியேயேகும்வேலை
யத்திரமதனில்வானையடைத்தவன்றன்னைவென்ற
வுத்தமவிசயற்கொப்பாயல்லையென்றுரைக்கலுற்றான். (௨௫௦)

அரியெதிர்நரிநேராகவடையுமாறுக்குநீதான்
சுரர்பதிசுதன்றன்னோடுந்தனிப்பொரத்துணிந்ததென்ன
விரவிசேயவனைக்கொல்வனென்றுவாளுருவலோடு
முரனுறுகட்கம்பற்றிமத்திரனுருத்தானன்றே. (௨௫௧)

இருவரும்வாட்கையேந்தியெதிர்தலுமந்தன்மைந்தன்
விரைவினிற்றடுத்துப்பின்னர்விற்கொண்மத்திரனைநோக்கித்
திரிபுறவெரிக்கத்தேரைச்சிவனுக்குப்பிரமனூர்ந்த
சரிதையையறையக்கோபந்தணிந்தங்கணிரதத்துற்றான். (௨௫௨)

மத்திரனிரதமூரமகிழ்ந்திடுமிரவிமைந்த
னத்திரமாரிதூவியடர்த்தலுந்தருமராசன்
வித்தகநிருபர்பாய்மாவிளங்கியகரிதேர்சூழ
வெத்திசையோருமஞ்சவிருஞ்சமர்விளைத்தானன்றே. (௨௫௩)

நிகரிலாத்தருமராசனெடியசாயகங்கடன்னாற்
சகுனிவெஞ்சிலையைநூறித்தந்தியினுயிரைச்செற்றுச்
சிகியெழுங்கணையினாலேதேரழித்துரத்தினெய்யப்
பகலவன்குமரன்பாறப்பணிலம்வாய்முழக்கியார்த்தான். (௨௫௪)

இரவிதன்சிறுவன்வேறோரிரதமீதேறிமேகஞ்
சொரிவபோற்கணைகடூவித்துரகமுஞ்சூதன்வீயத்
தருமன்றன்கவசம்பொற்றேர்தனுவொடுந்துகளாய்வீழ
விரைவினிற்பாறலோடுந்துடர்ந்தனன்வெய்யோன்மைந்தன். (௨௫௫)

அறனருள்சிறுவன்பாறத்தொடர்ந்தவாதவன்றன்மைந்தன்
அறனெறிபொறையுமேவன்மறுதுஞ்செய்யனுசர்தாமு
முறுதுணையாகவாழ்வாய்வறிஞர்போற்செருவினோடா
திறைவனுமணியினுள்ளேயிருத்தியென்றுரைத்துநக்கான். (௨௫௬)

வெந்திறற்கன்னனிவ்வாறுரைத்தவண்மீடலோடு
மந்தமார்தருமன்றுய்யவலரிதன்மைந்தனம்பால்
வந்திடுகுருதிமெய்யின்வழிந்திடக்களத்தையோவிச்
சிந்தைநைந்திருக்கைதன்னுட்டயிலத்துட்சேர்ந்தானன்றே. (௨௫௭)

தூயனுந்தருமன்பாறத்தொடர்ந்திடுங்கன்னன்மீதின்
வாயுவின்மதலையெய்திவரிசிலைவளையவாங்கி
யேயெனுமுன்னம்வாளிவிடுத்திடவிரத்தவெள்ளம்
பாயவேமயங்கிவீழ்ந்தான்பருதிதன்செம்மன்மாதோ. (௨௫௮)

இரவிதன்மைந்தன்றேறியிலங்கியவிரதமேறி
யரிவைபங்காளன்போலமுனிந்தடுகணைகடுவே
முரனுறுமனிலன்மைந்தன்றேர்சிலைமுரிந்தோடப்
புரவலர்வெருவிக்காலாற்புவியிடைப்பாறினாரால். (௨௫௯)

ஏசகலிரவிமைந்தனிமையவரஞ்சவெண்ணி
லாசுகமடர்ந்துதூவியருச்சுனன்மீதினெய்ய
வாசவன்குமரன்கையால்வடிக்கணைதொடாமனின்றே
கேசவவிவன்முன்னாற்றேனென்றிவைகிளத்தினானால். (௨௬௦)

இரவிதன்மைந்தன்முன்னரியான்செருச்செய்வதில்லை
விரைவினிலிரதந்தன்னைமீளநீவிடுதியென்றே
யுரைசெயநகைத்துமாயனும்பர்கோன்மதலையோடுந்
தருமன்முன்னெய்தநோக்கியவனிவைசாற்றலுற்றான். (௨௬௧)

சரமுறுநோவினாலேதயிலமார்தொட்டிதன்னுள்
மருவியதருமன்வந்துமகபதிமகனைநோக்கிச்
செருவினிலிரவிசேயைச்செற்றுவந்தனைகொலென்றே
வுரைசெயவிலையென்றாதவுளந்தவன்விளம்பலுற்றான். (௨௬௨)

கன்னனைவதைசெய்யாமற்கன்னல்போல்வில்லையேந்தி
மன்னவர்நகைக்கவிங்ஙன்வருகலைபோதியென்ன
வென்விலையெள்குவாரைத்தெறுவதென்சபதமென்று
பன்னகமென்னவேசீறிப்பார்த்தன்வெஞ்சரந்தொட்டானால். (௨௬௩)

தருமன்மேல்வாளியேவுமுன்னரிற்றடுத்துமாயோன்
குரவரைவதைசெய்தானீகொடியவெந்நிரையஞ்சேர்வை
யரசவென்றுரைப்பப்பார்த்தனாவியைத்துறப்பனென்ன
விரைகமழ்துளபத்தாரோன்விசையனுக்கிவைசொல்வானால். (௨௬௪)

குரவரையெள்கித்தன்னையுயர்ச்சியாய்க்கூறினானே
தரையினிற்சவநேராவனென்றிடத்தருமன்றன்னை
விரைவினிற்பொய்ச்சூதாடிவிறலுடைப்பாஞ்சாலன்றன்
தெரிவையைத்தோற்றேயெய்தாப்பழிவரச்செய்தாயென்றான். (௨௬௫)

அத்தினபுரத்தையாளுமரவுயர்வேந்தன்றன்னைச்
சித்திரசேனன்வீக்கிச்சென்றருஞ்சிறையினுள்ளே
வைத்திடுமுனரினென்னால்வனத்திடைமீட்டுவிட்டே
யித்தனையரசர்மாளவியற்றினையென்றுசொல்வான். (௨௬௬)

புந்தியில்வினையாலென்றன்புதல்வனைப்போரிலேவி
யந்தகபுரத்தினுய்த்தாயமரினென்விறலிற்கங்கை
மைந்தனைநரகன்சேயைவருணன்றன்மகனைத்தீய
சிந்துவுக்கிறைவன்றன்னைச்செற்றனனீயென்செய்தாய். (௨௬௭)

என்றிவைமுதலாயுள்ளவெள்கலைப்பார்த்தன்கூறக்
குன்றலிறருமனோக்கிவிசயநீகூறுமாற்ற
மென்றனாலடைந்ததாமென்றியான்வனத்துறுவேனென்று
சென்றமுன்னவன்றன்பாதத்திறைஞ்சினன்றேவர்கோன்சேய். (௨௬௮)

தருமன்றன்றாளில்வீழ்ந்தாண்டிரங்கியதனஞ்செயன்றான்
பெரியவசிறியேன்கூறும்பிழையினைப்பொருத்தியென்றே
யுரைசெயமாயன்வேண்டவுதிட்டிரன்முனிவையோவிப்
பரிவினொண்ணனுசன்றன்னையணைத்திடப்பார்த்தன்சொல்வான். (௨௬௯)

செருவினிவிமைப்பின்முன்னஞ்சென்றுயர்கன்னன்றன்னை
விளாவினின்வதைத்துமீள்வன்விறலுடைத்தருமவென்றே
வுரைசெய்துமுராரியோடுமுயர்ந்திடுமிரதத்தேறி
யரியெனச்சமரபூமியணுகியேசமர்செய்வேலை. (௨௭௦)

மகதராசன்சேய்தன்னைவயமுறுஞ்சோழன்செற்றா
னிகழ்விலாவிவுளித்தாமாவியல்புறுதென்னன்றன்னை
மிகமுனிந்தானையோடும்வீட்டினன்வீமனெய்தித்
தகைமையில்சுயோதனன்றன்னனுசனைத்தாக்கினானால். (௨௭௧)

உரகேதனன்றன்பின்னோரொன்பதுபேரைவீட்டி
விரிகுழலணங்கினுடையுரிந்தவெய்யவனைப்பற்றிக்
கரம்விரற்றுணித்துமார்பைப்பிளந்துகந்தரத்தைநீக்கிக்
குருதியைப்பருகுமுன்மாறடுக்கக்கொப்பளித்தேயார்த்தான். (௨௭௨)

செருவிடையரசனொல்லாஞ்சினத்தமர்செய்துமாள
வரவுயர்வேந்தன்றன்பாலந்தணன்சிறுவனேகிக்
குருவின்மாமதலையான்றான்கூறியதிகழ்ந்திடாதே
தருமனுக்குறும்பாரீய்ந்துன்றரணியையாடியென்றான். (௨௭௩)

அந்தணன்சிறுவன்கூறவரவுயர்துவசனென்றன்
மைந்தர்களனுசர்சுற்றம்வானதிபுதல்வனாசான்
சிந்துமன்பூரிபூரிசிராப்பகதத்தன்சேர
வந்தகபுரத்தரானாரார்க்கரசாள்வனென்றான். (௨௭௪)

வரும்விதிவருவதல்லாலியாவையுந்தடுக்கவற்றோ
செருவிடைத்தாழலாமோவென்றுதானிசையச்செப்பி
யரவுயர்துவசன்சீறியனுசனைச்செற்றான்மீதி
னெரிசினத்துடனேவெய்யகணைசொரிந்தெய்தினானால். (௨௭௫)

நகுலன்றேர்சிலையைநூறிநகமெனவெதிர்ந்துவந்த
பகலவன்குமரன்சேயைப்பகழியாற்றுணித்துவீழ்த்து
மிகமுனிந்தெய்துகின்றவிசையன்மேல்வெய்யோன்மைந்தன்
சிகியுறுகணைகளெங்குஞ்சிதறியேயடைந்தானன்றே. (௨௭௬)

வேறு.

ஆதவனருட்புதல்வன்வெஞ்சிலையினிற்பொழியுமாசுகமெலாந்
தீதில்விசையன்கணையினூறியுயர்கன்னன்வருதேருருளையின்
போதின்முகையொப்பவொருவாளியைவிசைத்துவிடவேபுவியிடை
யேதமகலும்மிரதமேழுதகுவிற்கிடையிடைந்ததுமனோ. (௨௭௭)

ஏழுதகுவிற்கிடையிடைந்தவிரதத்தினுறுமென்றருள்சுத
னூழிதனின்விஞ்சுமரனொத்துவிசையன்னவிர்கொள்போருருளையிற்
பாழியமர்கைச்சிலையினாலொளிர்கொள்பங்கயமுகக்கணைவிடா
வாழியரியூரிரதமெழுசிலையினீள்கிடையிடைந்தனவரோ. (௨௭௮)

வீழுசிலையின்கிடையிலங்குமிரதம்பிடையவெய்தகனனை
வேழம்வதைசெய்தவிறையங்குவிசுழற்றிவிசையன்றொடைறைவா
னேழுலகமும்முருளவெய்தநிகரொன்றெனுடனையுஞ்சுமைகொளு
மாழியுறுதேரினிடைவாளிவிடுமெங்கன்விறலென்றனன்மனோ. (௨௭௯)

அரியிவைமொழிந்திடுமுனங்கர்பதியாசுகனருட்படைவிடச்
சுரர்பதிசுதன்சிலையினப்படைகொடேயவை துணித்துவிடலு
மிரவிசுதனென்றருளும்வெம்படைதொடுக்கவிமையோர்கள்பதிசேய்
தரிசிலையின்வெங்கனலவன்படைதொடுத்ததனைமாற்றினனரோ. (௨௮௦)

ஆதவனருட்சுதனயப்படைதொடுக்கவமரர்க்கிறைமக
னேதமகலும்வருணனற்படையினாலவையறுக்கவிரவி
காதலன்முனிந்தியமன்வெம்படைகடாவவிசையன்கடிதினி
ஞேதரியவிந்திரனெடும்படையினூறிவளைபூதினன்மனோ. (௨௮௧)

மேலவனருட்சுதன்முனிந்தயனெடும்படைவிடுக்கவிசைய
னுலுமுகன்வெம்படைதொடுத்தவையறுக்கநலன்மேவிரவிசேய்
ஆலநுகரையனருள்வெம்படைதுரந்திடவருச்சுனன்விலாற்
காலனையுதைத்தவிறைதன்படைகொடேயவைகளைந்தனனரோ. (௨௮௨)

கோபமுறவானலரிபெற்றருள்குமாரனுயர்கோளரவினைத்
தூபமொடுதீபமுறவேவிசையன்வன்றலைதுணித்திடெனநீள்
சாபமுறவேவியிடுபோதினவைதப்புமுரன்மீவிடுகெனப்
பாபமகன்மத்திரன்பகர்ந்திடவுமன்னமொழிமாற்றிவிடவே. (௨௮௩)

தூய்மையுறுமென்றருள்சுதன்சிலையினால்விடவெழுந்தவரவம்
வாயினுமிழும்விடம்வளர்ந்துவடவாவனல்கள்போலவளையத்
தீயுலகொண்டிசையுமுற்றிடமுராரியொடுசேர்விசையனு
மாய்வொனவண்டரொடுமன்னவர்நடுங்கவெதிர்வந்ததுமனோ. (௨௮௪)

விடவரவமண்டர்கணடுங்கியிடமேவுதிறனோக்கியரிதன்
னடியினிரதம்பதினிரண்டுவிரலாழமணமுழுத்தவவிரால்
வடிவுடையபற்குனமன்மாமகுடம்வவ்விவடவாவனலெனக்
கடிதுசெலுமுன்னவன்முடித்துவிசையன்ககபதிக்கணைவிட. (௨௮௫)

வேறு.

இரவிசேய்விடுத்தநாகமிருதுணியாகிவீழப்
பரசுடையிராமனிட்டசாபத்தாற்பரிதிசேய்க்குக்
கருதியசரங்கடானுங்கையுதவாமற்போக
விரதசில்விகள்பார்வீழமத்திரனேகினுனல். (௨௮௬)

வலவனுய்வயங்குகின்றமத்திரவரசனேக
நிலனுறுமுருளைதன்னைநிலத்துறவைத்துத்தானே
நலமுறவிரதமூர்ந்துநற்கணைதூவியார்ப்ப
மலர்சொரிந்திரவிசேயைச்சூரனென்றுரைத்தார்வானோர். (௨௮௭)

அரவிருதுணியாய்வீழவாசுகமுதவாதாகத்
தரையிற்றேருருளைவீழத்தனிநின்றதபனன்சேய்மே
லருவிபோற்குருதிவீழவருச்சனன்கணைபெய்தார்ப்ப
வரையெனநிலத்துவீழ்ந்தான்விதரணகுணத்துமன்னன். (௨௮௮)

தரையினின்வரைபோல்வீழ்ந்ததபனன்சேயாவிபோமுன்
மருவமர்துளபமாயோன்மறையவனாகிவந்தே
யிருநிலத்திலகுமன்னனெழிலரிச்சந்திரன்றான்
சரியிலனினக்கென்றேயுன்றருமத்தைத்தருதியென்றான். (உஅகூ)

அருமறையவன்றான்கூறவங்கர்கோன்மகிழ்ந்துநோக்கிப்
பரிவுடனுரத்திற்றைத்தபகழியைவாங்கவெய்துங்
குருதிநீர்கரத்தால்வாங்கிக்கொடுத்தனன்றருமமென்னக்
கருடவாகனனுமேற்றான்கமலனோடிமையோர்போற்ற. (உகூ0)

சங்குசக்கரம்வாள்சார்ங்கந்தண்டமர்கரங்களோங்க
மங்குலிற்பங்கயங்கள்மலர்ந்ததோர்காட்சிகாட்டச்
செங்கண்மாயவன்றான்றோன்றத்தினகரன்புதல்வனாய
வங்கர்கோனெழுந்தானாடிப்பாடினனடியின்வீழ்ந்தே. (உகூக)

எரியினிற்புனலிற்கானினிலங்கியபிறங்கறன்னின்
மருவியேயநேகங்காலம்வருந்தினோர்க்ககப்படாதாய்
செருவிடைவிழுந்தென்னாவியானிடைச்சேருமுன்னங்
கருமுகிலெனவேநின்றகண்ணனேபோற்றியென்றான். (உகூஉ)

பரிவுடன்றுதிசெய்வோனைப்பரமனீவரம்வேண்டென்ன
விருநிதிமறையோர்க்கீய்ந்தேனிளமையென்றேவிக்கீய்ந்தே
னரசனுக்குயிரையீய்ந்தேனந்தகாலத்தினுன்னைக்
கருமுகிலெனவேகண்டேன்கடுவினைகாணேனென்றான். (உகூங)

தரைகணீருறவேயிவ்வாறுரைத்திடுந்தபனன்சேயை
யரிமகிழ்ந்துன்றன்சிந்தைக்கன்புறும்வரங்கேளென்ன
விருநிலத்திரப்போர்க்கெல்லாமீயவுமிலனானென்றே
யொருவரைக்கேளாவண்ணஞ்செனனந்தோறுதவுகென்றான். (உகூச)

இரவிசேயிவ்வாறோதவிறைவனவ்வரந்தந்தேனென்
றருளவேயலரிசேயென்னன்னைதான்களத்தினெய்திப்
பரிவுடன்முலைப்பாலீய்ந்தபின்னரொன்னாவிபாற
வரமருளென்னமாயோனளித்தவண்மறைந்தானன்றே. (உகூரு)

அரிவரமருளியேகவன்புடன்றொழுதேயேத்து
மிரவிசேய்முன்னினெய்தியிரங்கியகுந்திதேவி
யரசர்கணிறைந்துகாணமுலையிற்பாலருளியேகத்
தருமனோடனுசரொல்லாமிரங்கினர்தமையனென்றே. (உகூசு)

அரவுயர்வேந்தனெய்தியரற்றலுமங்கபூபன்
பருவரலொழிதியென்றுபகர்ந்தவன்றன்னையேவி
யரியினைமனத்துள்வைத்தேயாவியைவிடுதலோடு
மிரவிபோய்மறையவெல்லாவரசருமிருக்கைசேர்ந்தார். (உகூஎ)

அத்தியினலரிசேரவமரினிற்பதினெட்டாநாண்
மத்திரவரசன்சேனாபதியென்றுவயங்கவந்தன்
புத்திரனரசரோடும்போதலுந்தருமராசன்
வித்தகவனுசரோடுமேவிவெஞ்சமர்செய்தானால். (உகூஅ)

மத்திரைக்கிளையமைந்தனமறமிகுசகுனிதன்னை
யத்திரமதனால்வீட்டியார்த்தனன்வீமன்போரிற்
சித்திரகாயமென்னச்சென்றந்தன்சிறுவர்தம்முட்
குத்திரமனத்துமுன்னோனொழியப்பின்னவரைக்கொன்றான். (௨௯௯)

மூரசுறுதுவசனெய்திமுகிலெனக்கணைகடூவி
யரசர்கண்மடிந்துவீழவவனியிற்குருதிவெள்ளங்
கரைசெறிநதிபோலோடக்கவின்கொண்மத்திரத்தார்கோன்றன்
சிரசினைத்துணித்துவீழ்த்தான்சுயோதனன்றிடுக்கமெய்த. (௩௦௦)

அந்தமன்சிறுவனெல்லாவரசருமடிந்துவீழச்
சிந்தைநைந்திரதந்தன்னைச்செருக்களத்திருத்திக்கானின்
முந்தியோர்மடுவின்மூழ்கிமுகிலினையூர்திசொன்ன
மந்திரமனத்துள்வைத்தான்மடிந்தவருய்யும்வண்ணம். (௩௦௧)

விரைமலர்ப்பொய்கைதன்னின்வியாளகேதனன்றான்மூழ்கச்
சரியிலாவிவுளித்தாமாசமருறும்புடவிதன்னி
னுரககேதனனைக்காணாதுளைந்தந்தமடுவினெய்தி
யரசநீயெழுதியின்றேயைவரைக்கொல்வேனென்றான். (௩௦௨)

அந்தணன்சிறுவன்பின்னுமரசகேள்கயத்தின்மூழ்கி
மந்திரம்நினைந்தால்மாண்டார்வருவதுமெய்மையன்று
குந்திமைந்தரையானின்றேகொல்வனென்றுரைத்துவாயின்
வந்தனசபதமெல்லாமொழிந்தனன்வண்மைமிக்கோன். (௩௦௩)

அந்தணன்சிறுவன்சொல்லையவமதித்தரவுயர்த்தோன்
மந்திரமொருமைச்சிந்தையாகிவாவியினுள்வைக
விந்தைநற்கயத்துண்மன்னனில்லையென்றிவுளித்தாமா
சந்தனுச்சுதன்சேய்சேரும்பதியினைச்சாரும்வேலை. (௩௦௪)

பாரினொன்னலரையெல்லாம்வதைத்துயர்பவனன்மைந்தன்
போரினிற்கண்ணில்வேந்தன்புத்திரன்றன்னைக்காணான்
ஆரியனுடனேகூறுமளவினிற்கிராதர்சொல்லால்
நீருறுபொய்கைதன்னிருப்பர்களுடனேசேர்ந்தான். (௩௦௫)

மந்திரமுள்கல்செய்யக்கயமுறுமடுவின்மூழ்கு
மந்தமன்சிறுவன்மன்னையாசுகன்மதலையெண்ணி
னிந்தைகளுரைத்துக்கையானிகரிலாக்கதையையேந்திக்
கந்தக்கல்லாரவாவிகலக்குவேனென்றுபுக்கான். (௩௦௬)

ஆசுகன்மதலையிவ்வாறறைந்துநீர்கலக்கவெய்த
மாசுறுமனத்தனுன்னுமந்திரமறந்துதண்டோ
டேசகல்கயத்துணின்றுமெழுந்துநற்கரையினேறிப்
பூசலைவிரும்பியாரோபொருகுவரொன்னோடென்றான். (௩௦௭)

துனியுறவறைந்துநின்றசுயோதனன்றன்னைநோக்கி
யினநிரைகாத்தசோதியம்புவானரசவுன்ற
னனுசர்களடையச்செற்றவாசுகன்மதலையோடே
சினமுறப்பொருதியென்றேசெப்பிடவிசைந்தானன்றே. (௩௦௮)

திருமணிவ்வேலைதன்னிற்சுயோதனன்றன்னைநோக்கி
யிருவர்செய்வினையினாலெவ்வரசருமிறந்துபோனார்
செருவினையொருவிப்பின்னோர்சேவிக்கவாழ்தியென்றே
யுரைசெயமறுக்கலோடுஞ்சமந்தபஞ்சகத்தையுற்றார். (௩௱௯)

மத்திரன்மடியநீரின்மந்திரமறந்துமீண்ட
வத்தினபுரக்கோன்மண்ணிலடியினாற்செல்லக்குந்தி
புத்திரருடனேமாயோன்பொலிவுறுமிரதமீதி
னுத்தமத்தவத்தோர்வைகுஞ்சமந்தபஞ்சகத்தையுற்றான். (௩௱௰)

எதுகுலத்திறையவன்றனனுசர்களிலங்குமத்திப்
பதியுறுமன்னனோடுஞ்சமந்தபஞ்சகஞ்சேர்வேலை
நதியினுளயத்தையாடிநற்பதியெல்லாஞ்சேர்ந்து
மதிவணன்விதுரனோடும்வந்தமைசாற்றலுற்றாம். (௩௱௧௧)

## பாரதப்படலம் முற்றிற்று.

---

ஆக படலம் ௩௯ க்கு திருவிருத்தம் ௩௱0௩.

---

ஸ்ரீ கண்ணபிரான் றண்டாமரைத்தாடுணை.

---

ஸ்ரீ

விஷ்ணுமயம்.

### ௧௧௮ - வது - பலபத்திரராமன்

# தீர்த்தயாத்திரைப்படலம்.

---

பகிரதிசுதன்மேற்றிகிரியைவிடுத்துப்பகதத்தனெறிபடையேற்று
நிகரிலாச்சதாயுவிடுகதைவிலக்கிநேமிகொண்டிரவியைமறைத்தே
யிகல்புரிகன்னன்றொடுபணிபழுதாயேகவேயிரதத்தட்டழுத்தி
மகபதிசிறுவற்குதவிசெய்திருமாலடியிணைவணங்குவாய்மனனே. (௧)

குருகுலத்தரசரிருதிறத்தவருங்கொடியவெஞ்சமர்விளைத்திடவே
பரிநலகரிகள்புரவலர்மடிதல்பார்க்கிலேனென்றுபால்வண்ணன்
வரிசிலைகடிதின்முறித்திடும்விதுரன்றன்னொடுமாநதியாடத்
தனையினிற்கிரியினகரியினடரும்பழுவங்கடன்னையுங்கடந்தான். (௨)

தூயதாஞ்சரசுவதிவிந்துசாரஞ்சுதரிசனம்விசாலந்தான்
றீய்மையில்பிரமதீர்த்தமோடுயர்ந்தசக்கரயமுனைசீர்கங்கை.
நேயமோடிவையாநதிகளிற்படிந்துநெறியுறுநைமிசாரணியத்
தாயுமாமறைசேரருந்தவரடியிற்பணிந்திடவாசிகளறைந்தார். (௩)

வேதமொண்வியாசனடியனுய்விளங்கும்புராணங்கண்முனிவர்கட்கோதி
யாதனமிசையினெழுந்திராதமர்ந்தசூதனையலாயுதன்முனிந்து
மாதவர்வெருவத்தருப்பையாயுதமாயெறிந்துமற்றவன்றனையுதைக்கப்
போதனத்தவர்கள்வருந்தலாலவன்றன்புதல்வன்சாத்திரஞ்சொலப் படைத்
[தான்.

நயிமிசாரணியத்தருந்தவரொல்லாநடுங்கவேவற்கலாவசுர
னியமனும்வெருவவிந்துவானிறையுந்திதியினின்வேள்வியிற்சுனையோ
டயமுறுதசைசீபிரசரங்குருதிநிறைத்துவந்தயிலொடுமெதிர்ப்ப
வியல்புறுமிராமனவன்றனையலத்தால்வதைத்திடவிமையவர்துதித்தார்.

மாதவர்மகிழவற்கலாசுரனைவதைத்தவனொருவியேயேகி
நீதிமெய்யிலங்குங்கவுசிகமடைந்துநிகரிலாச்சனையுவிற்படிந்தே
தீதினையகற்றிச்சிறந்திடும்பிரயாகைக்குவந்தெய்திப்பார்திகழும்
போதனெண்புலகனடியினிற்படிந்துமுனிவர்கடுதித்திடப்போனன். (சு)

சந்திரவுருவன்றரணியின்வயங்குங்கோமதைதகண்டகைதவர்கண்
முந்திடுஞ்சோணநதியிவைதன்னின்வீதிந்தவண்முனிவர்களேத்த
விந்திரவரையினிலங்கியவிராமனிணையடியிறைஞ்சியேபோற்றி
விந்தமார்கோதாவிரிபம்பைவீமாநதியினின்விரும்பியாடினனல். (எ)

தீவினையகற்றும்பருப்பதச்சிவனைவணங்கியேதிராவிடநாட்டில்
வேயொடுகதலிசண்பகம்பூகம்விழுமியவழைபுன்னையாரந்
தூயநற்கோங்கோடிவையெலாந்துலங்கச்சுனையுணீர்சிலம்பியேயோட
சேயமோடரிகள்கனியெலாமுதிர்க்குநிகரில்வேங்கடமலையடைந்தான். (அ)

அருவினையகற்றவயங்குமாகாயகங்கைநீராடியேயனந்தம்
பருவரலொழிக்கும்பாபநாசத்திற்படிந்துயர்குமரதாரையிற்போய்ப்
பொருமியேபெருகும்பயத்தினுண்மூழ்கிப்பொழிலினிற்கிஞ்சுகங்கொஞ்சக்
குருகினமிலங்கக்குயிலினங்கூவவயங்குகோணேரியிற்குடைந்தான். (கூ)

தினகரரனேகர்வயங்கியதெனவேசிறந்திடுமணிகளானகைசெய்
கனககோபுரங்களியங்குமண்டபங்கள்கவினுறுகமலஞ்சேர்முகில்போ
லனகனற்புதன்மாலசஞ்சலனலர்மேன்மங்கைநாயகனழகாருஞ்
சனகிதன்கொழுநனுயர்ந்தவேங்கடவன்றுளிணைவணங்கியேகினனல். (க0)

மங்குலார்சிகரம்வயங்குமாகாஞ்சிநகரினிலுமையெனுமடவாள்
அங்கையிற்றழுவக்குழைந்தவன்றன்னைவணங்கியத்திகிரியின்மேவிப்
பங்கயன்மகிழவேள்வியின்வனசமலர்ந்தொளிர்பயோதரமேயச்
சங்குசக்கரங்கைவயங்கியவரதன்றுளினிவிறைஞ்சியேகினனல். (கக)

அரிமலர்ப்பொழிலின்மிழற்றுமஞ்சுகங்களனமயில்குயிலினமடையத்
திரையுறச்சிலம்பிபெருகுகாவேரிசிறந்திருமருங்கினும்வயங்க
விரவிதன்குலவிக்குவாகுவின்றவத்தினிருநிலத்தெய்தியேயரவிற்
கருமுகிலெனவேவிழித்துறங்கரங்கன்கழலிணைவணங்கியேகினனல். (கஉ)

விரைவினிலிடபவரையினின்மேவிவிளங்கியமாலிருஞ்சோலை
யரியினைவணங்கிமதுரையினடைந்தேயரன்றனையிறைஞ்சிச்சென்றப்பால்
வருணனங்குறவேதருப்பையிற்றவஞ்செய்வரிசிலையிராமனைவணங்கி
யிருவினையகற்றியிலங்குசேதுவினையெய்திநீர்படிந்தனனலத்தோன். (க௩)

சேதுவின்மறையோர்க்கயுதகோதானஞ்சிறந்திடவளித்துவந்தேகித்
தீதறவிளங்குந்தண்பொருனையினைச்சேர்ந்தந்நதியினீராடி
யேதமின்மலையப்பருப்பதத்தெய்தியிலங்கியகுலாசலவிடத்தி
ஞேதையார்கடலையொருகையால்வாங்கியுண்டமாமுனிவனைக்கண்டான். ( )

தீதறவயங்குந்திராவிடமுனியையிறைஞ்சிடச்சிறந்தவளுசி
யோதவாண்டகன்றுகன்னியர்குமரியுற்றதினுவகையிற்படிந்தே
யாதியாயனந்தசயனத்திற்றுயில்கொளரியினைவணங்கியேயப்பாற்
பாதவமெழிலியுறவளர்ந்தோங்கும்பார்க்குனவரையினைச்சேர்ந்தான். (கடு)

கோதில்கேரளதேசத்தினையொருவிக்கோகனங்குறுகியேயோவிச்
சூதமேநிறைந்துவயங்குசூர்ப்பகராத்தெய்திநீர்த்துறைதொறுமுழக்கு
மேதியோடதிர்ந்துவராலெதிர்பாயவிளங்கியநிருவிந்தைமேவித்
தாதவிழ்மலரால்மலிந்திடும்பொழில்சூழ்தண்டகவனத்திடைச்சார்ந்தான். ( )

தூயமாநதியுந்துலங்கியபதியுஞ்சொல்லுதற்கரியபன்றூடு
நேயமார்விதுரன்றன்னெடுமெய்நிகரிலாவலாயுதவிராம
ஞயுநான்மறையோரமர்ந்துவாழ்பிரபாசத்தயமூழ்கியேவரால்கள்
பாயவேவயங்குஞ்சமந்தபஞ்சகத்திற்பரிவுடனெய்தினனன்றே. (கஎ)

## பலபத்திரராமன் தீர்த்தயாத்திரைப் படலம் முற்றிற்று.

---

ஆகப்படலம் ௬௦-க்குக் கூடிய திருவிருத்தம் ௩௰௨௨.

---

ஸ்ரீ கண்ணபிரான் புண்டரீகப்பொன்னடி துணை.

ஸ்ரீ

விஷ்ணுமயம்.

## ௧௧௬ - வது துரியோதனன்.

# வதைப் படலம்.

---

தூயதண்மலிவிற்றீயவன்பதித்தகழுவினிலரியெனத்தோன்றிச்
சாயினைப்பிளந்துதலைகடைமாறிச்சராசந்தன்சமரிடையிட்டுக்
காயுமாத்தாமாவரிபடைதொடுக்கக்கதைபறித்தெறிந்துகாந்தாரி
சேயிறக்கவாணிற்றட்டியேவீமற்குதவிசெய்தேவனைத்துதிப்பாம். (க)

இருநிலத்திலங்குநதிகளிற்படிந்தேயிராமனும்விதுரனுமெய்த
வரவுயர்துவசன்றருமனேடனுசரனைவருமடிமிசையிறைஞ்ச
மருவமர்துளவோன்மதிவணன்றன்னைவணங்கலும்வரிசிலைமுரித்தோன்
பரிவுடனயனம்புனல்கொளப்படியையளந்தவன்றனைப்பணிந்தனனால். (உ)

எதுகுலத்திறைதன்முன்னவனுடனேயியம்புவானிருதிரத்தரச
ருததிபோன்மலைந்தேயொன்பதிற்றிரட்டிநாளினிலிவர்களேயொழிய
வதிரதர்முதலாயனைவருமடிந்தாரரவுயர் துவசன்வெஞ்சினத்தான்
மதிகுலத்துதித்தவாயுவின்மகனோடமர்செயவந்தனனென்றான். (௩)

சதுமுகன்பிதாவிம்மொழியெலாமறையத்தாலகேதனனுடன்விதுரன்
விதிவழியெவர்க்கும்விலக்கரிதென்றுவிளம்பியேவியாளகேதனனை
யெதிரமரொழிந்துதருமனுக்குரியவியல்புறுநாடளித்தத்திப்
பதியினையாளென்றுரைத்திடமறுத்துப்பவனன்சேயுடன்பொரமூண்டான்

வேறு.

இருவருங்கதைகரமிலங்கிடவெரியுறுங்கதமுறவெழுந்
தரியிரண்டமர்பொருதபண்பெனவவனியின்கணினிடம்வலம்
வருவர்சாரிகைமாறிமீளுவர்வடவைபோலெதிர்நோக்கியே
யுருமுபோலடியறையவோடுவெருவரிபோலவதிர்ப்பரால். (௫)

மிகமுனிந்துயர்வரையின்மீதிடிவிழுவபோலவடிப்பரா
னகுவரார்பர்கள்கதைசுழற்றுவர்நயனம்வாரியின்வடவைபோற்
சிகையுறக்கடிதெதிர்வர்நோக்குவர்சேர்வர்வாலிசுக்கிரிவர்போற்
பகையுறக்கடிதடர்வரொட்டுவெறிவர்பற்றுவர்கதையரோ. (௬)

அரவுயர்த்தவனடுசினத்துடனுலமுண்டவனென்னவே
யுரன்மிகுத்தடர்வீமன்மார்பிடையுருமுபோலவடித்தனன்
விரைவினப்பொழுதரியின்மைத்துனன்வியாளகேதனனுரமிசை
வரையினிற்கனலிடிவிழுந்தெனவயிரவண்கதைமோதினான். (௭)

எண்ணில்சாரிகையிடம்வலத்தினுமிருகரக்கதைசுழலவே
மண்ணின்மீதுமுனிந்துதாக்குமடங்கல்போலெதிர்வேலையின்
விண்ணுளோர்களுமஞ்சவீமனுரத்தினுஞ்சிரமீதினுங்
கண்ணின்மன்னருள்சேய்சினத்தொடுகெடிதடித்தனனுரனொடே. (௮)

அந்தன்மைமந்தனடிக்கவேயுயராசுகன்மகன்றிக்குறுந்
தந்திபோலமுனிந்துவந்தெதிர்தண்டுகையிடைசுழலவே
மந்தரத்திடிவிழுவபோலவன்மார்பின்மீதுறவெங்கனல்
சிந்தவந்தகனுமெனப்புடைத்தார்த்தனன்றிசையொலியுற. (௯)

அனிலன்மைந்தனடிக்கவுந்தளராதுகண்ணிலியருள்சுதன்
முனிவொடும்படிமிசையின்முந்திமுராரிமைத்துனன்விலாவின்மேன்
மனமெரிந்துயர்வரையின்மேலொருமலைவிழுந்திடவந்துறுந்
தொனியுறக்கதைகொடுபுடைப்பவிழுந்தனன்பவனன்சுதன். (௧0)

வாயுசேயவனடிவிழுந்திடமண்ணின்மீதின்விழுந்தெழுந்
தேயெனும்முனமெய்தியேயுயர்தண்டுகொண்டெரிசினமுடன்
சேயமென்னவடர்ந்துதீயவன்முடியுறுஞ்சிரமிசையனல்
பாயவேபுடைத்தார்த்தனன்படவரவுயர்த்தவனஞ்சவே. (௧௧)

ஆர்த்துமோதியவாசுகன்மகனனவீரனைமுனிவொடும்
பார்த்துமற்றவன்விலாவின்மேற்படவரவுயர்த்தவன்மோதலும்
வேர்த்தமெய்யொடும்வீமன்வீழ்தலும்வெருவிநால்வரும்விமலனுந்
தீர்த்தன்வாண்முகம்நோக்கியேதுணியுறலுமாலிவைசெப்புவான். (௧௨)

பாரின்மிக்கதுரோபதன்னருள்பாவைகண்ணிவிமைந்தனை
ஊருவின்கதையுற்றுமாளுதியென்றுகூறியவுரையினு
லேரின்விஞ்சியதருமனீகுறிசெய்தியென்றலுமிசைகிலா
னுரியன்றுடைமீதுதட்டலுமங்கண்வீமனறிந்தனன். (௧௩)

ஏரின்வீறுதுரோபதன்மகளிட்டசாபமறிந்தவண்
பாரின்மீதுதெளிந்தவீமனெழுந்துபாரியகதையினால்
வாரிபோலவதிர்த்துவானவர்வெருவவந்தமன்மகனிடை
ஊருமீதுபுடைத்தலும்படிமிசையுருண்டனனுலைவொடே. (௧௪)

வேறு.

வீரனொண்வீமனெய்திவிசையினால்மோதுந்தண்டா
லூருவினுளைந்துவீழவுரககேதனன்றான்பின்னும்
பாரிடைச்சமர்செய்வான்போலெழுமுனர்ப்பவனன்மைந்தன்
போரினம்பொருதியோவென்றுதைத்தனன்மகுடம்போக. (௧௫)

கோலமன்னவர்களெல்லாந்தொழுங்குருகுலத்தார்கோவாம்
ஞாலமேல்வணங்காதான்றன்னன்மகுடந்தான்வீழக்
காலின்மாமதலைகாலாலுதைத்தலுங்கனன்றுபொங்கிப்
பால்வண்ணனெதிர்த்தலோடுந்தடுத்துயர்பரமன்சொல்வான். (௧௬)

அடிசிலில்விடத்தையிட்டுமெய்த்தினுட்கழுவைநட்டும்
படியுறுமரக்காமில்லிற்பவனன்றன்சகாவைவைத்துங்
கொடியவெஞ்சூதினாடுகொண்டுகொன்றுரத்திமாதி
னுடைதுகிலுரிந்துஞ்செய்ததுள்கிலைபோலுமென்றான். (௧௭)

அன்றியுமவனிப்பாரமகற்றுதற்கியாந்தாம்வந்தோம்
வென்றிசெய்யிவருஞ்சின்னாடனில்மண்ணின்வீய்வர்நீதான்
கன்றியகருமமேதென்றுரைத்துக்காசினியின்மீது
பொன்றிடுவான்றன்முன்னர்வரவவன்புகலலுற்றான். (௧௮)

ஆரியனீதானாதியென்றெண்ணாவென்றனெஞ்சிற்
பூரியமதியைத்தந்துபோரில்யாவரையும்வீட்டிப்
பாரினிற்பாரநீக்கியென்னையும்பவனன்சேயா
லூருவினடிக்கச்சுட்டிவதைத்தனையுரவோயென்றான். (௧௯)

என்னைநீபொறியாய்வைத்தேயியற்றியாவரையுஞ்செற்றா
யுன்னிலென்பேரிற்பாவமொழிப்பதுன்பரமேயன்றோ
பின்னைதன்மணாளாவென்றுபேசியேதருமாவென்ற
னன்னையைப்பிதாவைக்காவென்றறைந்துநீபோதியென்றான். (௨௦)

எதுகுலமன்னன்றன்னையிறைஞ்சியேயேகென்றோதி
மதிவணன்றன்னைக்கையாற்றொழுதியான்வைதசொல்லை
விதுரநீபொறுத்தியென்றுவிளம்பவின்முறித்தோனோடுஞ்
சதுமறைமுனிவர்பாலிற்றாலகேதனனுஞ்சென்றான். (௨௧)

திருவமர்மார்பனைவர்தம்மொடுஞ்சேனையோடு
மரவுயர்வேந்தன்வைகுமிருக்கையினணுகியாங்கே
வரிசிலைத்துரோபதன்றன்மகளுடைமைந்தரோடும்
புரவலரடையவைத்துப்பூதத்தைக்காவென்றானல். (௨௨)

பதியினைப்பூதங்காக்கப்பணித்தரியனுசனோடு
மதிகுலத்தைவரோடும்வாட்கணுளோடுமேகிச்
சதுர்மறைமுனிவர்வைகாச்சிரமத்தைச்சாரும்வேலை
யுததியினலரிவீழவுலகெலாமிருண்டதன்றே. (௨௩)

அரவுயர்துவசன்றன்னையந்தன்சேரிருக்கைநாடி
வரிசிலைமறையோன்மைந்தன்காண்கிலான்மனமுள்வாடிச்
செருவினிலரசன்மாண்டசெய்கையைக்கேட்டாண்டெய்தி
யுரககேதனன்றன்முன்னரிரங்கியீதுரைத்தானன்றே. (௨௪)

மாயவன்விரகிற்சேனுபதியெனையாக்காய்மன்னு
நீயினியருளிலைவர்நெடுந்தலைகொணர்வனென்னத்
தீயவன்சேறியென்றுசெப்பிடச்செல்லும்வேலைத்
தூயனுங்கிருபனெய்தித்தடுத்திவைசொல்லலுற்றான். (௨௫)

குந்திதன்மைந்தர்தம்மையின்றுநீகொல்லினந்தன்
மைந்தனீண்டுயிர்வந்துய்ந்தேமண்ணிணையாள்வானல்லன்
நந்திகோடிறுத்தானன்பர்தம்மைநீவதைக்கலாற்று
யிந்தவல்லிருளிற்சேறல்பவமுறுமென்றுசொன்னான். (௨௬)

கொடுமையிற்கிருபனிங்ஙன்கூறிடவிவுளித்தாமா
படியிற்பாதவத்தின்மேலேயிருந்திடப்பகையாங்கூகை
கடிதினிற்காகந்தன்னைவதைத்துறுங்கங்குறன்னி
லடல்பொரவிதியாமென்றேயணிகத்தோடெய்தினுனல். (௨௭)

நீதகலிவுளித்தாமன்சேனையோடெதிர்த்தலோடும்
பூதம்வந்தணிகமெல்லாம்புடைத்துறவதைத்துக்கையான்
மோதியேபரித்தாமாவைமுடித்தலைமுரிக்கவுன்னி
வேதியன்கொலைக்காகாதென்றுரைத்தடித்தோட்டிவிட்ட. (௨௮)

செருவிடைப்பூதந்தன்னைச்சேறியென்றடித்தேயோட்ட
வரிசிலையிவுளித்தாமன்மனத்திடைவெந்தீமூள
வரியினைவளைத்துத்துய்யவரன்வரத்தவஞ்செய்காலை
யெருதினினிறைவனெய்தியென்னுனக்கீவதென்றான். (௨௯)

அரனிவைமொழியக்கேட்டேயந்தணன்சிறுவன்சொல்வான்
செருவிடையைவர்தம்மைச்செற்றிடும்படைதாவென்ன
வெருதினிலிறைவனின்றிவ்விரவினிலெதிர்ந்தார்தங்கள்
சிரமறுத்திடுதியென்றுசிறந்திடுவாளையீய்ந்தான். (௩௦)

வரத்தினுற்பெற்றவாளையேந்தியேமறையோன்மைந்த
னுரத்துடனுறவேபூதமுற்றெதிர்ந்தடரும்வேலை
கரத்தினற்படையினுலேகந்தரந்துணித்தேயெய்திப்
புரத்தினிலணிகமெல்லாம்பொருக்கெனவதைத்துவீழ்த்தான். (௩௧)

உரககேதனனுமன்னனுறங்குமெல்லணையின்மீதின்
வரிசிலைத்துட்டத்துய்மன்மகிழ்வொடுதுயிலநோக்கி
யெரிசினவிவுளித்தாமாவெழில்விவினுரியாலே
சிரமறுத்தவனைவீட்டிச்சிகண்டியையவதைத்தான்மாதோ. (௩௨)

உயர்மறையோன்சேய்வாளாலுத்தமோசாவினோடுஞ்
செயலுறவணங்குதாரமனுவையும்வதைத்துச்சென்றே
முயலகன்வெரிநின்றான்போல்முனிந்தனிகத்தைவீட்டி
யியல்புறும்வளவன்றன்னையிமைப்பின்முன்வதைத்துவீழ்த்தான். (௩௩)

இலங்குபாஞ்சாலிபெற்றசுதர்குந்திமைந்தொன்றே
யிலங்கியவாளாலெற்றியவர்சிரங்கையினேந்தி
வலங்கொளுமிவுளித்தாமாவன்னியங்ககரின்வைத்துக்
கலன்கண்மெய்யிலங்கச்சென்றான்காலெனக்காலினாலே. (௩௪)

விளைவினினிவுளித்தாமாமேவியேபடியின்வீழ்ந்த
வுரககேதனன்றன்முன்னருற்றுயர்குந்திமைந்தர்
சிரமிவைகாண்டியென்றுசெப்பிடவரசனோக்கி
யரிவைபாஞ்சாலிமைந்தர்தலையிவையந்தோவென்றான். (௩௫)

மன்மதன்றந்தைதன்னைமாணிடனாகவெண்ணுந்
துன்மதியானவென்னாற்றொலைவிலாவரசர்மாய்ந்தார்
உன்மதியாலேயென்றன்குலத்தினுக்குரித்தாய்நின்ற
நன்மதியினரைக்கொன்றிப்பழியென்மேனட்டாயென்றான். (௩௬)

சிறுவரைச்செற்றென்மீதிற்பழிவரச்செருச்செய்தோங்கு
மறையவன்குமரநீயுன்னிருக்கையைமன்னுகென்ன
வறிவறவென்செய்தோமென்றருந்துயர்மனத்தனாகிக்
குறைவிலாப்பரத்துவாசனிருப்பிடங்குறுகிச்சேர்ந்தான். (௩௭)

அந்தணன்சிறுவன்போனபின்னரினந்தன்செம்மல்
குந்திதன்மைந்தர்பெற்றகுமரர்களிறந்தாரொன்று
சிந்தைநைந்தழன்றுவாதபித்தசேத்துமங்களொத்தே
யந்தகபுரத்தினாவியடைந்திடமாண்டானன்றே. (௩௮)

## துரியோதனன் வதைப்படலம் முற்றிற்று.

---

ஆகப்படலம் ௪௧ - க்குக்கூடிய திருவிருத்தம் ௩௫௬0.

ஸ்ரீகண்ணபிரான் றுணைத்தா டுணை.



ஸ்ரீ

விஷ்ணுமயம்.

கஉ௦ - வது பரிட்சித்து

# ஜெனனப் படலம்.

விரகினினிரவிற்றுரோப்தன்சுதரோடைவர்தஞ்சிறுவரைவீட்டிக்
குரகதத்தாமாவிசயன்மேற்கோலெய்தபாண்டவமென்றுகூறியசொற்
பரிகரித்தபிமன்பாரிதன்னுதரக்கருவினைப்படியினிற்கிடத்திக்
கருகியகருநற்குமரனையெழவேமிதித்தமால்கழலிணைதொழுவாம். (க)

திருமகள்கொழுநன்மைத்துனருடனேசிறந்தபாஞ்சாலியுமெய்த
வருமறைமுனிவராச்சிரமத்தினடைந்தவண்டியின்றெழும்வேலை
யிரவிவந்துதயமாகவேகடிதினெய்திய தூதுவரிரவின்
விரைவின்வந்திவுளித்தாமன்யாவரையும்வீட்டினனென்றுரைபகர்ந்தார். (உ)

அந்தணன்சிறுவன்கங்குலினடரவனைவருமாண்டனரென்னச்
சிந்தைநைந்திரங்கிக்குந்திதன்மைந்தர்சிறந்தபாஞ்சாலியோடரற்றி
யிந்திரைகொழுநன்றன்னுடனிமைப்பினிரதமீதேறியேயெய்தி
மைந்தர்கள்வளவன்றுருபதன்சிறுவர்மடிந்திடுங்கொடுமைகண்டினைந்தார். (௩)

அடியெனுமிடையாடுரோபதையரற்றித்துனியுறப்பவளவாய்துடிப்ப
வடிவுடைச்சுதரையென்றன்முன்னவரைவல்லிருளிடையினில்வந்து
கொடுமைசெய்தடர்ந்துகொன்றிடுமிவுளித்தாமன்றன்சென்னியைக்குவ்விற்
பொடியுறமிதியேனெனிலனன்முழுகிப்பொன்றுவனென்றுரைபுகன்றாள். (௪)

அரிவைபாஞ்சாலிமுனிவுடனிவ்வாறறைந்திடவருச்சுனன்வெகுண்டு
திருமகள்கொழுநன்றேரினைக்கடவச்சென்றுயர்பரத்துவாசன்றன்
பரிவுடனமருமாச்சிரமத்தினெய்தவுமுனிவர்கள்பலரும்
விரைவினினெய்திருவர்க்குமாசிவிளம்பிடமாயவனறைவான். (௫)

தரையினிற்குருக்கேத்திரந்தனிற்பதினெண்ணுளுயர்சமருறப்பொருதே
யரவுயர்துவசன்வீமனுன்மடியவந்தணன்சிறுவன்வந்தெய்தி
விரைவினிற்குந்திமைந்தர்களருளும்வீரரோடரசரைவதைக்க
வரிவைபாஞ்சாலிமுனிவுடனறைந்தவுரையெலாமொழிந்தனனமலன். (௬)

முனிவர்களிவுளித்தாமனைநோக்கிமுனிவினாலறனிலாக்கொடிய
வினைவீசெய்தாயெனக்கடுவிடம்போலிரதமீதேறியேயெதிரச்
சினமுடன்விசயனடுகணைசொரியவிலக்கிமாமறையவன்சிறுவன்
கினைவதன்முனரினபாண்டவமென்றேநிகழ்த்திநான்முகன்படைவிடுத்தான்.

மறையவன்சிறுவன்மலரயன்படையைவிடுத்தலுமகபதியருளுஞ்
சிறுவனுன்முகன்றன்படையினைவிடுப்பத்தேவர்கடிசைதொறுமிரிய
விறுதியினெழுந்தகனலெனவிரண்டுபடையும்வந்தெதிர்ந்திடவிமையோ
ருறியினிற்றதியுண்ணிறைவநீயுலகமுயவருள்செய்கெனவுரைத்தார். (௮)

எத்திசையினும்போயனல்பரந்திடவேயிருவருஞ்சமரொழிந்திடுமென்
றத்தியிற்றுயில்வோனயன்படையுபசங்காரவத்திரத்தினலகற்று
வித்தகவிசையவெனவருச்சுனன்ருன்விடுத்திடுமெண்கணன்படையை
மெய்த்தவர்மகிழவொருகணையதனால்விலக்கினன்வெம்மைதீர்ந்திடவே. (௯)

மைத்துனன்விடுத்தவயன்படைவெம்மைமாறியேமீடலுமாயோ
னத்திரத்தாமாநீவிடுபடையையகற்றுதியெனவவன்பிரமன்
மெய்த்தவப்படையைவிலக்குதற்குபசங்காரநானறிகிலனென னு
முத்தனைவயிற்றிற்கருவிதற்கிலக்கென்றேதியேநகைக்தனன்முராரி. (௰)

பின்னரும்விசயனமரினைத்தொடங்கிப்பெருங்கதமுறப்பரித்தாமா
வெந்நுறப்பகழியுரத்தினிற்கடவிவில்லிறவிரதத்தையழித்தே
பன்னகப்பகழிதனைவிடுத்தவன்றன்புயத்தினைப்பிணித்துப்பார்மிசையின்
இன்னலுற்றவன்ருனடந்திடவிரதத்தேறினன்மாயவன்மகிழ. (௧௧)

விரைவினிற்றருமன்முன்னரிற்குறுகவிசயமுன்னிழிகெனவிளம்பி
யரிபினரிழியவயத்தொடும்பொற்றேரொரிந்திடவருச்சுனன்வியந்தி
துனையெனவுரவோர்விடுந்தெய்வப்பகழியுறுமனலென்கரத்தாழி
யிரதமேற்கடவாதின்றுகைக்கொள்ளநிலத்துறவெரிந்ததென்றனனால். (௧௨)

அரியிவையருளவருச்சுனன்பணிந்தேயமரினுன்கரப்படைகாப்ப
மருவலர்தமையான்வதைதத்தலாலென்விறலினுலோவிடவற்றே
விருவினைகளைந்துன்பதத்தினினியாங்களிடரறவெய்துதற்கருள்வாய்
தனையினில்வயங்குமரசர்போலெளிதாய்நின்றருடலைவனேயென்ருன். (௧௩)

வடிவுடைவிசயன்மொழிந்திடமகிழ்ந்தமாதவன்மறையவன்சுதனை
யடுதியென்றறன்சேய்தனக்குரைத்திடலுமாசுகன்சிறுவனுண்டெழுந்து
கடுவிடமெனவேவதைத்திடவரலுங்கற்புடைத்துரோபதைகருணை
மிடையவேதடுத்தாசாரியன்மதலையிவனெனவிளம்பலுற்றனளால். (௧௪)

என்னிளஞ்சிறுவருடன்சகோதரனைவதைத்திடுமிவன்றனைச்செற்ரு
லன்னவருயிர்வந்தெழுவரோவிவன்றனன்னையுமென்றனைப்போல
வின்னலுற்றிரங்கில்வருவதென்னிவனைவிடுத்திடுமெனவுதிட்டிரனு
மன்னதேநலனென்றறைந்திடவிசயனவனுரத்தறைந்துபோகென்ருன். (௧௫)

பாலகர்தமைவெங்காலனைப்போலப்படுத்திடும்பாவிநீகுருவாஞ்
சீலமாமறையோன்புதல்வனுகையினுற்செற்றிடாதகற்றினமேகென்
ருலமாமிடற்றோனுடன்பொருமரசன்விடுத்திடவவன்விறலழிந்து
தாலமேற்செல்லத்துரோபதிமுகுந்தன்ருளில்வீழ்ந்தேத்திடும்வேலை. (௧௬)

குண்டலமிலங்கமதிமுகம்வயங்கக்குஞ்சியின்மணிமுடியொளிரத்
தண்டுகைதயங்கச்சதுர்ப்புயந்திகழத்தாமரைத்தாள்களுந்துலங்க
முண்டகன்கணையாலபிமனற்பாரியுதரத்திற்கருவெரிமுடுகா
தண்டர்நாயகனேரங்குட்டவுருவாயவனுறத்திரிந்துகாத்தனனால். (௧௭)

சுத்தநான்மறையோன்சுதன்விடுங்கமலன்படையொருநொடியின்முன்றுலங்கு
முத்தனைவயிற்றின்கருவினைநலத்தினிடுதெனுமொளிர்கலத்தமைத்து
வித்தகவரிமுன்விராடர்கோன்றனையள்மேவியொண்கணவனுமடிந்தா
ணித்தலமிசையென்கருப்பமும்விழுந்ததெரியினினிறப்பன்யானென்ருள். (௧௮)

கருநிலன்விழவேயுத்தரையரற்றக்கண்டவர்கண்ணினீர்கலுழ
வரிமலர்ப்பாதத்திடைவிழுந்திரங்கவச்சுதனவர்களையணைத்து
வெருவன்மின்றலாயின்விழுந்தவிக்கருப்பமெல்லியர்மேன்மனம்வையாப்
பெரியவர்கழலான்மதித்திடிற்பிறங்குங்குமரனுப்பிறக்குமென்றறைந்தான். (௧௯)

இந்நிலைகொழுநனியம்பிடத்தருமனிந்திரியத்தினையடக்குஞ்
சிந்தையவெவனொன்றியம்பிடமாயோனினைந்திடச்சேர்ந்தமாதவனைச்
சுந்தரமிகுத்தவரிவையவெனினும்விரும்பிடாத்தூயரிக்கருப்ப
மைந்தனுமெழவேகழலினுன்மிதிமினென்றுமாதவன்விளம்பினனால். (௨௦)

அரியிவையறையவருந்தவத்தவர்களணங்கனார்மேன்மனம்வையா
திருநிலமிசையிந்திரியத்தையடக்கவெங்களாலரிதெனவியம்ப
வருதுனியுறுத்தக்கலங்கிடுமைவர்தம்மைநீர்வருந்தன்மினென்னுத்
திருமகள்கொழுநனவர்கடாமகிழமுனிவர்முன்செப்பலுற்றனனால். (௨௧)

சுந்தரமிகுத்தவரிவையர்பலர்தோடேய்ந்தனனெனினுமுலப்பின்
மைந்தர்கடமையேதந்தனனெனினுமாதர்மேன்மனம்வையாதுயர்ந்த
சிந்தையன்யானிந்திரியத்தையடக்கித்திருந்தியபிரமசாரியும்யா
னிந்தநன்மொழிமெய்யென்பதிங்குணர்வீரொன்றுமால்கருவினைமிதித்தான் (௨௨)

கருமுகின்மிசையேவனசமாமலர்கண்மலர்ந்ததோர்காட்சியைக்காட்டு
முருவினன்சிறந்தநானங்குங்குமங்கத்தூரிமெய்கமழவேயுயர்ந்த
விரவியைநிகர்த்தமுடிசிரமிலங்கவிருநிலன்கலனுறுங்கருவைத்
திருவடியதனின்மிதித்தலும்வயங்குங்குமரனுண்டெழுந்தனன்றிகழ். (௨௩)

அரிதிருவடியின்மிதித்திடுங்கருப்பமழகியகுமரனுமெழவே
சுரர்கடுந்துமிகண்முழங்கவொண்மலர்கள்சொரிந்தனர்முனிவர்கள்போற்றத்
தருமனோடனுசர்துரோபதியுடனேதாளினிலிறைஞ்சியேயேத்தப்
பரமன்வாளபிமன்புதல்வனுக்கிசையப்பரிச்சித்துநாமத்தைப்பணித்தான். (௨௪)

அத்தியிற்றுயில்வோனடியினிற்செனித்தகுமரனையபிமன்வந்தமைபோற்
சுத்தனுந்தருமனனுசரோடெரத்துத்தழுவிடத்துரோபதியணைத்தா
ளுத்தரைமுலைப்பாலொழுகிடவுலப்பிலுவகைதன்னெஞ்சினிலுறவே
சித்தசனெனவங்கிலங்கியசுதனைச்சேர்த்தணைத்துச்சியைமோந்தாள். (௨௫)

உத்தரைவயிற்றின்விழுந்திடுகருப்பமுருவநற்குமரனுமெழவே
சுத்தமாதவர்கடுதித்திடமிதித்தசோதிதன்றாளினிலிறைஞ்சி
அத்தினபுரியாளரசரிற்சிறந்தபாண்டுவின்மனைவியாமணங்கு
பத்தியினிருகண்புனலுறவுரோமம்பொடிப்பவேபகரலுற்றனளால். (௨௬)

அன்னையாகியதேவகிமுனளிடத்தினன்பினிற்றெசமடங்காகி
யென்னுடைச்சுதர்மேற்கருணைவைத்தரவத்துவசனுலிறந்திடாவண்ணம்
ஒன்னலர்பதித்தகழுவினிலளியாயுயர்ந்தனைவிடவனமுதவ
மன்னவேயெதியாயிரந்துஞ்சினைத்தான்மாற்றியேயருள்புரிந்தனையால். (௨௭)

அவையினிலரற்றுந்துரோபதைமருங்கினம்பரமருவணங்காத்தாய்
சிவனெனமுனிவாயெழுந்துருவாசன்சபித்திடாதெய்தியேசிறந்த
சுவையுறுகனியோடனங்கடந்தன்னிற்றுலங்கிடவருந்துவித்தனையாற்
றவனுகர்கனிகொம்பிடையமர்ந்திடவேசார்ந்தைதவருயிரினைத்தந்தாய். (௨௮)

நாளமாமுனிவன்கனவிடைவருக்கக்காலனும்வெருவவந்தனற்கண்
ழூளுமாபூதங்கரத்திறுலைவர்முடிந்திடாவகைசெய்தங்கறனு
னீளுமாவனத்திற்கிருபைசெய்தனையானெறியுறுசிந்துமன்மடியக்
கோளுலாங்ககனத்திரவிநற்பிரபைகுன்றிடநேமியான்மறைத்தாய். (௨௯)

இரவிதன்புதல்வன்விடுத்திடுமரவத்திறந்திடாவண்ணநீயிரதந்
தனையினிளழுந்தப்பதத்தினுலுறுத்திச்சதமகன்றனையனைக்காத்தா
யரவுயர்துவசன்மடிந்திடக்குறங்கினடித்துவீமன்னுயிர்தந்தாய்
குருமகன்விடுத்தபடையினல்விதுவின்குலமறுதருள்புரிந்தனையால். (௩௦)

கரியதாய்விழுந்தகருப்பநற்குமரனுகநின்கழலினுன்மிதித்தாய்
சருகுகாலுணவாய்த்தவஞ்செய்வோர்சிந்தைக்ககப்படாத்தத்துவமூர்த்தி
மருகனீயெனவேமதித்திடுமெனைநீவணங்கிடவாசிகள்பகர்ந்தேன்
கரியுரிபுனைந்தோன்கபாலமன்றொழித்தகபடநாடகநமவென்றாள். (௩௧)

ஆயரில்லுறியிற்கடைநவநீதமருந்தவேய்சோதைதன்கரத்தாற்
றூயபொற்றூசுமருங்கிடைதுலங்கத்தொடர்ந்துனைப்பிடித்தடித்திழுத்து
நேயமோடுரலிற்பிணித்திடநயனநீர்ததும்பிடமையுங்கரையத்
தாய்முனர்த்தேம்பியழுததேனுலகம்படைத்தளித்தழித்தருடலைவா. (௩௨)

அரியரிநமவேயச்சுதாநந்தகோவிந்தநமநமவடியேன்
மருகனேநமவேமலர்மகட்கினியகொழுநனேமாதவநமவே
சுரர்பதிசுதன்றேர்ச்சூதனேநமவேமற்றவன்றோழனேநமவே
யருவினையகல்வெனக்குநின்பதத்தையருளுவாய்நமநமவென்றாள். (௩௩)

குந்திவந்திறைஞ்சித்துதித்திடமலராள்கொழுநனுந்திருவுளமுவந்து
முந்தியமுறுவலொடுமுகமலர்ந்தேதமுடியுடைத்தருமனேடைவர்
மைந்தராயெழவேநலனுறுமவணீமற்றுனக்கரியதேதெனவே
யிந்தநல்லுரையாலவளுளமுருகியினிதுறப்பகர்ந்தனனம்மா. (௩௪)

பரமனற்பாண்டுமைந்தர்களுடனும்பவமறுதுரோபதையெய்தி
யரவுயர்துவசன்மடிந்திடுமெவணினடைந்திடவவனன்னையந்தன்
சரியிலாப்பானுமதிமுதலானதேவியர்சார்தலுந்தருமன்
பெரியவத்தாதையடியினினிறைஞ்சியிரங்கினன்பெருந்துனியுறவே. (௩௫)

அந்தன்வெந்துயராலனுசன்றன்மகனேடரற்றியபின்னர்க்காந்தாரி
குந்திதன்சுதனையணைத்திரங்குதலுங்கோதிலாத்துரோபதனருண்மின்
அந்தகபுரத்தினுயிருறமடிந்தவரவுயர்துவசன்றன்முனரிற்
சிந்தையினுவந்துவிரித்திடுங்குழலைச்சிறந்திடமுடித்துநின்றனளால். (௩௬)

விரித்திடுங்குழலைமுடித்தபாஞ்சாலிவிமலனைமகிழ்வுடனிறைஞ்சிக்
கருத்தினிற்பதமேயிருத்துவார்வினையைக்களைந்துநற்கதியருண்முதல்வா
துருத்தனுயவையுட்சுயோதனனனுசனுரிந்திடுந்துகில்வளர்ந்திடவே
யுரைத்தியான்மொழியுஞ்சபதத்தைமுடித்தவுலப்பிலாய்போற்றியென்றனளால்.

பரிவுடன்முராரிதனைத்துதிசெய்துதுரோபதிபணிந்தவண்மகிழ
வரவுயர்துவசனெடுங்கனவிடையேயளப்பிலாமனைவியர்மடியச்
செருவினிலிறந்தாரனைவர்க்குமுரித்தாந்தேவியருடனனலுறவே
சரவணமிசையின்வயங்கியகங்கைதனையன்பாலைவருஞ்சார்ந்தார். (௩௮)

சரசயனத்தின்வயங்கியகங்கைதனையன்மாதவன்றனைநோக்கிப்
பரமனின்மனைவியாநிலமடந்தைபரித்திடும்பாரநீயொழித்துன்
றிருவுளநினைவின்படியெலாமுடித்தாய்சீதராதேவநாயகனே
அரிகரியடியேனந்தகாலத்தினனுகிளுயென்றிவையறைவான். (௩௯)

அரவுயர்துவசன்முனரியான்றிருமாலாழியையெடுத்திடவமரிற்
பொருகுவனெனுஞ்சொற்பழுதுறுவண்ணம்பொற்கலையவிழவுத்தரிகந்
தரையினின்விழநற்றரளமாவடங்களலைந்திடத்திகிரிகைதயங்க
வருகவினயனமகல்கிலாமனதுமறக்கிலாதெனத்தொழுதனனுல். (௪௦)

சுரர்பதிசுதனென்னுடனமர்பொரவேதுலங்குதேர்த்தட்டினின்வயங்கப்
பரியினைப்பிணித்துநுகத்தினைப்பூட்டிப்பாசமுட்கோல்கரமிலங்கக்
கரியொடுதுரகநரர்மிடைந்திடவேகளத்தெழுதூளிமெய்நிறையத்
திருமுகம்வெயர்ப்பவிரதமூரொழிலென்னெஞ்சிடைத்திருத்தியதென்றான். (௪௧)

திருமகள்கொழுநமசெகமடந்தைமகிணனுந்தேவனேநமவுன்
னிருபதம்நினைப்பாருலப்பிலாப்பவங்களிறப்பிறப்பகற்றுவாய்நமவே
அரிகரிநமவேயெனவுரைத்திருகணமலன்றனமுகெலாநோக்கிச்
சுரர்நதிபுதல்வன்றனுவினைத்துறந்துதுலங்குமாதவன்பதத்துற்றான். (௪௨)

கருமுகிலெனவேயரியினைக்கண்ணுற்கண்டுயிர்துறந்தவீடுமனைச்
சுரருயர்விமானமேற்றியேமலர்கள்சொரிந்திடத்துந்துமிமுழங்க
விரவிமண்டலத்தினடுவுறுநெறியினிருமருங்கினும்விளக்கெடுப்பப்
பரதநற்பதியிற்பத்தர்களௌதிரோவரப்பரனடியினிற்சேர்ந்தான். (௪௩)

சந்தனுமன்சேய்மடிந்திடக்குந்திதனையர்கள்கண்புடைத்திரங்கி
மந்திரவிதியாலழலிடைவளர்த்திமடிந்தமந்தாகினிமகனோ
டந்தமன்மைந்தரனைவர்க்குங்கிளைக்குமறன்சுதன்றவுமியனுரையாற்
றந்திடுநூலிற்கங்கையினுதகக்கிரிகையைத்தாழ்வின்றிமுடித்தான். (௪௪)

தவுமியனடத்துஞ்சடங்கினினுதகக்கிரிகையைமுடித்திடுந்தருமன்
பவமறுமனுசர்புடைவரவயங்குந்துரோபதைமகிழ்ந்திடப்படிமே
லுவகையிலிரதத்தத்திமாநகரினுற்றுயர்மடங்கலாதனத்திற்
புவியினையளந்தோனிருகையால்வாங்கிப்பொன்முடிகவிக்கவீற்றிருந்தான். (௪௫)

தவமுயர்தருமனனுசரோடிறைஞ்சத்தரணியையாளெனவிருத்தி
நவையுறுசினிதன்சுதனுடன்றேர்மேனுரதாதியர்புடைசூழ
வவனியின்சுமையையகற்றியமுராரியமரர்கண்மலர்பொழிந்தேத்தத்
துவரையையடைந்தேதந்தையைப்பணிந்துதூயமாதாவினைத்தொழுதான். (௪௬)

முன்னவனிருதாட்பணிந்தெழுமுராரியடிமிசைமுண்டகமடந்தை
மின்னெனவயங்குஞ்சத்தியவாமைமுதலியதேவியர்மிடையப்
பின்னைதன்னுடனேவணங்கிடச்சுதர்கள்பெரிதுவந்திறைஞ்சிடமுராரி
கன்னலொண்மொழியார்மனைவியர்களிப்பக்கவினுறவீற்றிருந்தனனுல். (௪௭)

## பரிட்சித்து செனனப்படலம் முற்றிற்று.

---

ஆகப் படலம் ௪௨ - க்குக் கூடிய திருவிருத்தம் ௩௬௦எ.

ஸ்ரீகண்ணபிரான் செந்தாமரைத்தாடுணை.

ஸ்ரீ

விஷ்ணுமயம்.

கஉக - வது.

# குசேலப்படலம்.

---

மனைவியேவலால்வறுமையில்வந்தநற்குசேலன்
வினையெலாமறமெய்தழீஇமெல்லணையிருத்திப்
புனையுமாடையிற்றருப்பணம்பொதித்தவன்மனைக்கே
யினியமாச்செல்வமளித்தருளிறையையேத்துவம்யாம். (க)

நெறியையுற்றிடுங்குசேலனாமறையவனிலத்தின்
வறுமையெய்திடவிருத்தனாய்மருவுவான்மனையி
னுறையுங்கற்புடையருந்ததியொத்தமாமடந்தை
யறம்வளர்த்தவணல்குரவளக்கரினாழ்ந்தாள். (உ)

இழுக்கில்செய்கையளிருண்டமேகத்துறுமின்போன்
மெழுக்கினிற்பெரிதுரிந்துபொன்சிறிதுறவிளங்கு
மழுக்கில்கந்தரத்தமர்ந்திடுமங்கலநாணாள்
புழுக்கிலாதுமாசுணும்பழவாடையைப்புனைவாள். (ங)

கரங்களிற்பிறர்மனைதொறுநெற்குத்தகாவிற்
குரங்கினிற்சகனம்மதிற்கொப்புளங்காய்ப்பத்
திரங்குதொக்கினையடுத்தென்புதோன்றிடத்தேயு
மருங்குபோலவேமெய்யெலாமெலிந்திடுமடந்தை. (ச)

புற்றினுற்றிடுமரவின்வாயுறுமெலிபோல
வுற்றநல்குரவிற்சிந்தையொடுங்கியேயுலர்வா
ணித்தலும்பிறர்மனைதொறுமேவியேநெற்குத்
துற்றகூலியின்றவிட்டுக்கொழுநனுக்கிடுவாள். (ரு)

வறுமையாகியவளக்கரினழுந்தியமடந்தை
யறிவுவிஞ்சியகொழுநனையன்பினானோக்கி
யுறியுறுந்தயிருண்டவன்சகாவெனமுன்னாண்
மறைகளோதினவண்மைநீமறந்தனையென்றாள் (சா)

தவர்களெண்ணுஞ்சாந்தீபனிசதுமறையருளத்
துவரைமன்னனுந்தோழனாயோதினாயன்றே
யவனியின்னவனரசனாய்ச்செல்வத்தையடையப்
பவமுறும்மிலம்பாடெமக்குற்றதென்பகர்தி. (எ)

குருந்தினாய்ச்சியர்கலைகொடுவயங்குகோனுடனே
திருந்துநான்மறையோதியேசகாவெனச்சிறந்தாய்
வருந்தவேண்டுவதில்லைநீமாதவனிடத்திற்
பொருந்தினாலுன்றன்வறுமையைப்போக்குவனென்றாள். (அ)

மனைவியீதெலாமறைந்திடமறைவழிகுசேலன்
வினையகன்றிடத்துவரையின்வேந்தனுக்கியானிங்
கினியதாகவேயென்கொடுசெல்வனென்றியம்ப
நனிதவத்தவடருப்பணநல்கியேயென்றான். (௯)

அரிவைநல்கியதருப்பணந்தனைத்தையலனேகந்
தெரியவேபலமாலைபோனுன்றசீலையிலே
பரிவுடன்முடிந்தேயொருகோலினைப்பற்றித்
தரையினூன்றியேதவறியகால்கொடுநடந்தான். (க௦)

நார்யால்வளைதனுவெனநரைதருமேனி
பாரின்மூப்புறவளைந்துமுன்னூலுரம்பற்று
வீரைந்தோடுதொண்ணூறுறும்பருவம்தெய்தக்
கீரையின்சிறுவிதையெனக்கண்முகங்கிடந்த. (கக)

தோலுமார்புறுநூலுமெய்பிணங்கிடத்தூய
நாலுமாமறைகுளறிடுநாவினனடந்தே
ஞாலமேற்பலநாளொளிர்நகர்தொறும்வைகி
வேலைசூழ்துவராபதிமேவினன்குசேலன். (க௨)

துவரையெய்தியேதொல்வினையுதறுவான்போல
நவையருங்குணன்மூப்பினுன்மெய்யெலாநடுங்க
வவையினெய்திடவவனியையிடந்தவன்கண்டே
யுவகைவிஞ்சிடவெதிர்த்துரமுறத்தழுவினனால். (க௩)

மாதவன்வியந்தென்னுயிர்த்தோழன்வந்தனனென்
றாதரத்துடனணைத்துத்தன்கோயிலிற்கொடுபோ
யேதமற்றபொன்னுதனத்திடையினிருத்தித்
தீதொரீஇமகிழ்ந்திடுதலுந்தேவியர்பணிந்தார். (க௪)

வேடனைத்தருமின்னனுள்வீசனம்விசிறச்
சூடகங்கையிற்றுலங்கநற்சத்தியவாமை
யாடகத்துறுங்கவரியைக்கரத்தினுலசைப்பப்
பீடைக்குசேலத்தவன்பெரிதுவந்தனனால். (க௫)

சகிதனுகியகுசேலனைச்சக்கரனோக்கி
நிகரினுன்மறையிருவருநிகழ்த்திடுநாளின்
றகைமையுற்றசாந்தீபனிமனைக்குநாங்காட்டம்
பகலிடைத்தரவேகினம்பழுவத்தினன்று. (க௬)

தரையின்விஞ்சியபழுவத்திற்றளர்ந்திருவோருஞ்
சிரமிடைந்திடவிறகினைச்சுமந்தியாஞ்செல்ல
விரவியுங்கடன்மறைந்திடவிடித்துவான்பொழிய
வெருவிநின்றதுமறிதியோவென்றுணைவிளம்பும். (க௭)

வெருவியாமொருமரத்திடைநிற்கவெவ்வரவம்
வருதல்கண்டவணஞ்சிவான்மழைதனினோடித்
தரையினூர்புகுமுன்னஞ்சாந்தீபனியெய்தி
யிரவினம்பயந்தவிர்த்தமையறிதியோவென்றான். (க௮)

மனையினம்மொடுசென்றசாந்தீபனிமனையாள்
நனையுமாடையைநீக்கிநற்றுகிலினைக்கொடுத்தே
யினியவன்னமாண்டிருவர்க்குமளித்தமையெல்லா
நினைதியோவென்றுபின்னருநிகழ்த்தலுற்றனனால். (௧௯)

சரியிலென்னுயிர்ச்சகாயவுன்றேவிசற்குணத்தாள்
பரிவினாலெனக்கினியதுதந்ததென்பகரொன்
றுரைசெய்மாயன்முன்னான்மறையோன்வெள்கவவன்ற
னரையினாடையிற்றருப்பணங்கண்டரியவிழ்த்தான். (௨௦)

பாவமற்றவனாடையினவிழ்த்திடும்பரம
னாவலிற்றருப்பணத்தினின்மூவிரலள்ளித்
தேவர்தம்பதிமுதலியர்திடுக்கமுற்றிடவே
நாவிலிட்டிரதம்முறநலனொடுநுகர்ந்தான் (௨௧)

பின்னருங்கரவிரலிடையள்ளலும்பிடியா
வன்னமென்னடையுருப்பிணிமாயனோடறைவாண்
முன்னநீநுகர்தருப்பணமுடிவிலாதளித்த
தின்னநீநுகர்ந்தாலிரணத்தனாமென்றாள். (௨௨)

விரைவிலிந்திரைகரம்பிடித்தகற்றிடவிமலன்
பரிவொடுங்குசேலன்றனைநோக்கியுன்பாரி
சரியிலுத்தமிதனியளாய்த்தளர்ந்துநித்தலுமுன்
வரவுநோக்கியேவாடுமுன்னேகெனவறைந்தான். (௨௩)

வடிவுடைத்திருமணாளன்மற்றவன்றனைத்தழுவிக்
கடிதுசெல்கெனக்கடுவினைதருமருநிதியை
நெடியவன்கொடாதேகெனநிகழ்த்தினனென்றே
முடிவிலாநலனுறமுந்தியேகினன்மறையோன். (௨௪)

மறையவன்கடிதேகித்தான்வைகுமூர்தன்னி
னுறையுமுன்னரினுலகமேழுண்டவனருளா
னிறையுஞ்செல்வமுநித்திலமனைகளுந்தோன்றி
மறுவிலாமனையாண்மலராளுருவானாள். (௨௫)

பழுவமெங்கணுநாடுகளாகியேபழனங்
கழையுஞ்செந்நெலும்பூகமுங்கவினுறநிறைய
வழைவருக்கைமாமாதவிசெண்பகம்பொழிலா
ரொழிவின்றேமொநதியினாடவொங்குநிறைந்தார். (௨௬)

மறையினானுயர்குசேலமண்டலமெனத்தோன்றி
நிறையுமாநிரையெண்ணிலநெடும்பொற்றேர்கரிமா
வறையும்பேரியோடளப்பிலாவீரர்கண்மிடைந்தே
யிறைவன்றன்னையாண்டெதிர்கொளவடைந்தனவொங்கும். (௨௭)

மறையவன்னெதிர்மாமணித்தேர்நிறைமன்னர்
நிறையுமாகரிநெருக்கமுநோக்கியேவெருவி
யிறைவன்யாரெனநினையுமுனிரதமுன்கொணர்ந்தே
குறைவின்மாதவவேறெனக்கரங்கள்கூப்பினரால். (௨௮)

விரைவிலவ்விரதத்திடையேறவேவிளங்கு
மரிவைமார்கள்பல்லாண்டுகளறைந்திடக்கவிகை
சரியிலாநலசாமரைதயங்கிடத்தரள
நிரைகொடாவடங்கலன்மெயினிறைந்திடக்கண்டான். (௨௯)

கரிகண்மாமணிகனகப்பொற்றேரிதேதெனவே
நரைகண்மல்கிடநடுங்குந்தன்மேனியைநோக்கி
யுருவமாரனும்வெள்கிடும்வாமமேயோங்க
வரியளித்திடவந்தமையாமெனவறிந்தான். (௩௦)

மாதவன்னருடன்னினுல்வந்ததாமெனவே
வேதியன்றெளிந்தறிந்திடவேந்தர்கைகூப்ப
மோதுபேரிகைசங்கொடுதுந்துமிமுழங்க
வேதமற்றமாநகரிடையெய்தினனன்றே. (௩௧)
சூத்துநற்பொனுற்றுலங்கியகோபுரவணிக
ணித்திலங்களாணிறைந்திடுமாளிகைநிரைகள்
சித்திரங்களார்மண்டபஞ்சிறந்தவேதிகைகீள்
பத்திசெய்திடும்வீதிகள்பலபலகண்டான். (௩௨)
அரசர்கைதொழவந்தணராசிகள்கூற
முரசுசங்குகாகளஞ்சினமெங்கணுமுழங்க
வரிசையாகியதீவிகைமாதராரேந்த
நிரைசெய்மாமணிக்கோயிலினிகரிலானடைந்தான். (௩௩)

ஞாலமேன்மதனுமெனக்குசேலனுநண்ணக்
காலினூபுரஞ்சிலம்பிடக்கலன்மெயினிலங்கக்
கோலமாமலர்வைகியகொம்பெனவயங்கிச்
சீலமாகியதேவிவந்தடியினிற்பணிந்தாள். (௩௪)

இலங்குதேவிவந்தடிதொழத்தூயநற்குசேல
னிலங்குமாசனத்தெழிலுறுமனைவியோடிருந்து
நலன்கொளின்னமுதருந்தியேநானமெய்பூசி
யலங்கல்சூடியேயமளியினின்பமுற்றமர்ந்தான். (௩௫)
மனைவிதன்னொடுமாரனுமிரதியும்போல
வினைகள்வென்றிடுகுசேலன்வீற்றிருந்திடத்தேவி
துனிகொணல்குரவொழிந்தெய்தத்துலங்கியசெல்வங்
கனவுதான்கொலோசுவர்க்கமோகழறெனச்சொல்வான். (௩௬)

அருப்பநுண்ணிடையணங்கனையன்றநீயளித்த
தருப்பணந்தனைச்சங்கொடுசக்கரந்தரித்தோன்
விருப்பமுற்றெழவிழுங்கிடும்பலத்தினுன்மேவுந்
திருப்பொலிந்திடுஞ்செல்வமீதுணரெனவுரைத்தான். (௩௭)

தூயனாகியகொழுநனீதறைந்திடத்துலங்கும்
வேய்கொடோளினாள்வியந்துதன்கணவன்றனுடனே
நேயமாகியேநிறைந்திடும்பெருஞ்செல்வத்திறைஞ்சி
யாயர்பாடியினமர்ந்தவன்றனைத்துதித்தமர்ந்தார். (௩௮)

## குசேலப்படலம் முற்றிற்று.

ஆகப்படலம் ௬௩-க்கு திருவிருத்தம் ௩௬௪.

ஸ்ரீ

விஷ்ணுமயம்.

கஉஉ-வது

# மிதுலைப்படலம்.

இரவிதன்குலத்திற்பிறந்துதாடகையைமடித்தெதிர்சுவாகுவையெற்றிச்
சரியிலாச்சனகன்மகடனைமணந்துசரத்தினுல்விராதனைவீட்டிக்
கரன்முதன்மூவர்கவந்தனிந்திரன்சேய்கந்தெசனிவர்களைவதைத்துத்
திருவுடனயோத்திநகரிடைமீளுந்தெசரதராமனைத்துதிப்பாம். (க)

சீதைதருமொழியனிமியின்மாகுலத்திற்றேன்றியமதிகுலதிலக
னதியினுள்வயங்கும்பகீரதிபோலநலமுறுமரசரிலிலங்கு
மிதுலையில்வெகுலாசுவனெனுமன்னன்வேதமெய்ப்பொருளினையுணர்ந்தே
யெதுகுலமுதல்வனிறைவனென்றறிந்தாண்டிராப்பகலவன்புகழறைவான்.

வேறு.

நயனநீர்மல்கநிற்குநாரணநமவென்றேதும்
புயல்வணுபோற்றியென்னும்பொன்மதிட்டுவரைநோக்கி
யியல்புறக்கரங்கள்கூப்பியென்புடனுருகநையு
மயலொன்றுமறியாணுடியரியரியரியென்பானுல். (உ)

பருதிபோலொளிருமன்னன்பரமனைத்துதித்துநாளும்
விரதனுயமருகின்றமிதுலையின்மறையோன்மைந்தன்
சுருதிதேவன்னேரில்லாச்சோதிமாமுராரியென்று
கருதியேகளைகணுமக்கண்ணனைமறவாநாவோன். (ந)

சதுமறைச்சுருதிதேவன்சனகன்மன்குலத்தில்வந்த
மதியுறுமரசனேடுமாயனைத்துதிக்குநாளின்
றதிகளவாடுமையன்றன்பதமவர்க்குநல்க
மிதுலையினெய்துவானுய்விழுமியவிரதத்துற்றேன். (ச)

மாதவர்நிறைந்துசூழமன்னவர்மருங்குசுற்ற
யாதவன்வந்தானென்றேயெழிலுறுசின்னமூத
மீதுயரமரரோத்திவிளங்கியமலர்கவேச்
சீதரன்சேனையார்ப்பத்தேர்மிசைச்சென்றேன்மாதோ. (ரு)

தூயவனிரதத்தேறித்துலங்கியகுருநாட்டிற்சென்
றேயெனுமுன்னர்த்துய்யவிடங்கர்நாடதனையோவித்
தீய்மையில்விராடனுடுஞ்சிறந்திடுங்குந்திநாடு
மாயவனெருவிக்கோதில்கேகயநாட்டின்வந்தான். (சு)

கேகயமொருவித்தூயகௌசலநாடுகிட்டிக்
கோகிலநிறைந்துகூவக்கொழுமுகிலணவுங்காவும்
பூகமுங்கழையுஞ்செந்நெற்பொலிவுறுமிதுலைதன்னி
னுகமேனகர்போற்றநடித்தவனெய்தினுனல். (எ)

அத்திரிவாமதேவனருணிகண்ணுவனால்வேதம்
வைத்திரோவனுதிவயங்கியமரீசிகற்க
னுத்தமவீணையேந்துமுயர்முனி முதல்வராய
வித்தகத்தவர்களெல்லாம்விமலனோடடைந்தாரன்றே. (௯)

இரதமீதமலனெண்ணின்முனிவர்களிலங்கிச்சூழச்
சுருதிதேவன்றன்பாலுந்தூயமாமிதுலைதன்னிற்
பருதிபோலொளிருமன்னன்பாலுமீருருவமாகித்
துரிதமாம்வினைகள்வீழச்சுரர்மழைபொழியச்சென்றான். (௧௦)

அரசர்கோன்மிதுலைவேந்தனகத்தினுமறையோன்முன்னு
மிருவகையாகவெண்ணின்முனிவரோடேககாலத்
தொருமுதலிருவராகியுன்னுமுன்னடைதலோடும்
புரவலன்மகிழ்ந்துவந்துபுயல்வண்ணனடியின்வீழ்ந்தான். (௧௧)

மிதுலைமன்விமலன்றாளினிறைஞ்சியேவிழுமிதான
புதுமணித்தவிசின்மீதினிருத்திப்பொற்பாதந்தன்னைக்
கதுமெனவிளக்கிநீராச்சிரமிசைத்தெளித்துட்கொண்டு
சதுமறைமுனிவர்க்கெல்லாந்தமனியப்பீடமிட்டான். (௧௨)

அறுசுவையடிசின்மாயனுடனருந்தவர்களெல்லா
நிறைவுறவருந்தலோடுநிகரிலாக்கலவைதுய்ய
நறுமலரளித்துநின்றுநடித்தனனுவமையில்லா
விறையவனென்னிலெய்திலங்கினனென்றுமன்றே. (௧௩)

என்புளமுருகக்கண்ணீர்நிலத்துறவெழுந்தேயாடு
மன்பனைமகிழ்வினோக்கியரசநிற்கழிவிலாத
வென்பதமளித்தேனென்னச்சரண்மிசையிறைஞ்சித்துள்ளித்
துன்பமோவியமன்னுடித்துதிசெய்துதொழுதுநின்றான். (௧௪)

## வேறு.

மிதுலைமன்மனையில்விருந்தனமருந்திவிமலனீண்டிருக்கவேவேறா
ெராதுகுலவிறைவனாகிய தானுயிந்தமாமுனிவருமாகிச்
சதுமறைநெறிசேர்சுருதிதேவன்முன்சார்தலுமவனெழுந்தாடித்
துதிசெய்துபிறிந்ததன்னுடையில்விற்றூயவன்றன்னொடுஞ்சென்றான். (௧௫)

அரிவரப்பிறிந்தமனையினிற்கொடுசென்றன்புடனுதனமாகப்
பிரிமணையிடவேமிகமகிழ்ந்தருளிப்பின்னைதன்னயகனிருப்ப
விருவினையகற்றுமுனிவர்சட்கெல்லாமிலங்கியதருப்பையைக்கிள்ளித்
தரையிடையிட்டேயமர்தியொன்றுரைப்பத்தவர்வியந்தினிதுடனிருந்தார். (௧௬)

கதலியின்பழத்தைநுகர்மினென்றளித்துக்கமண்டலத்தயத்தைமுன்வைக்க
வெதுகுலவிறைவன்முனிவர்களுடனேயினிதுடனுகர்ந்துநீர்பருகச்
சதுமறையறைவோன்றளசியினிதழைத்தந்திடச்சென்னியிற்சூட்டி
விதியினையருள்வோன்சுருதிதேவனுக்கென்வீட்டினைத்தந்தனனென்றான். (௧௭)

ஏககாலத்திற்சுருதிதேவனுக்குமெழிலுறுமிதுலைவேந்தனுக்கு
நாகணையமர்வோனிருவர்தம்மனையினன்னணித்தன்பதங்கொடுத்திருத்திப்
பூகமார்புரியினிருவகையாகமுனிவருந்தானுமாய்ப்புறப்பட்
டேகையங்குறவேயொருவகைவுருவாயேகவானும்பர்கடுதித்தார். (௧௮)

இருவகையாகிமுனிவர்கணிருபரிலங்கியதேவுயர்தானு
யரசர்கோனில்லினந்தணன்மனையினடைந்தந்தநகரினையொருவி
யொருவகையானவடிவமாய்க்கலந்தேயுவரிசூழ்துவரையிற்சேரு
மருவலர்துளவோன்மாயையில்வல்லானென்றுவானோர்மலர்பொழிந்தார். (௧௯)

சுருதிதேவனுக்குமிதுலைவேந்தனுக்குந்தூயதன்பதத்தினையளித்துப்
பருதிமண்டலத்திலுறைந்திடும்பரமன்பரவைசூழ்துவரையினெய்தி
விரதமாதவர்க்கும்விடைகொடுத்தருளிவிதர்ப்பர்கோன்மகளுடன்மேவிச்
சரதமார்புராணந்தவருளமகிழ்ந்துசாற்றிடவினிதிருந்தனனால். (௨0)

மிதுலைப்படலம் முற்றிற்று.

---

ஆகப்படலம். ௪௪-க்குக் கூடிய திருவிருத்தம் ௩௯௯௯.

---

ஸ்ரீ கண்ணபிரான் புண்டரீகப் போற்றுணை.

ஸ்ரீ

விஷ்ணுமயம்.

௧௨௩ - வது

# வைதீகப் படலம்.

---

ஒருதனித்தேரின்விசையன்வைதிகனோடுறவெலாவுலகமுங்கடந்தாண்
டிருவரைநிறுத்திவிரசையுங்கடந்தேயொழில்கொள்பேரொளியிடத்தெய்தித்
தரையினிற்றூன்செய்விரகெலாநடித்துமறையவன்றனையரைக்கொணர்ந்து
விரைவினிற்கடிகையேழகல்வதன்முன்னளித்தருள்விமலனைத்தொழுவாம். (௧)

துவரையின்வயங்குந்தூயமாதவர்கோன்றுலங்கியவேள்வியைவளர்ப்பா
னுவமையிலிணையாமுகிற்நிரிகழுத்திறெளிர்பொன்னங்கலப்பையினுகத்தை
யவனியினிலங்கப்பூட்டியேவயிரக்கொழுமடுத்ததினிலந்திருத்தி
நவமணியிலங்கவமைத்தசாலையின்கணண்ணினனுருப்பிணியுடனே. (௨)

மாயவன்றுவராபதியினில்வயங்குமகத்தினைவளர்த்திடமகிழ்ந்து
தீய்மையிலரசர்திரளொடுமிபமாச்சிறந்ததிண்டேர்களுமிடைய
நேயமோடிரதமிசையினிற்றருமனெறியுறுமனுசரோடெய்தத்
தூயமாதவர்கண்மகிழ்வொடுந்துவரைச்சோதிசெய்மகத்தினுக்கடைந்தார். (௩)

ஆடகன்றன்னைவதைத்திடுமமலனருந்தவர்தங்களினன்பாற்
சோடசவிருத்துக்களையுறவரித்துமகத்தினைத்தொடங்கும்வேலையின்வாய்
வாடியோர்மறையோனிரங்கிடவவன்றன்மனைவிதான்பெறப்பெறவிலங்கும்
பீடுடைச்சிறுவர்மூவர்களுடலோடந்தரமாயையாய்ப்பெயர்ந்தார். (௪)

சதுமறையறைவோன்றனையர்கண்மூவர்பெயர்ந்திடத்தளர்பவன்மனையா
ளுதரமார்கருப்பநிறைந்திடமறையோனுலகளந்தவனுடனுரைப்பான்
கதுமெனச்சிறுவர்மறைந்தபோலிந்தக்கருப்பமார்மதலைபோகிடுமுன்
பதனமாய்க்காவாயெனிலுயிர்துறப்பனென்றிடப்பார்த்தனீதறைவான். (௫)

மறையறைபவவுன்மனைவிதான்மதலைபெறுந்தறுவாயிடைவந்தே
யறைகுதிவிளைவிற்காப்பனென்றியம்பவந்தணனேகித்தன்னில்லாள்
பெறவிடருறும்போதுரைத்திடவிசையன்பிஞ்ஞகன்பகழியாற்காப்பச்
சிறுவனாய்ச்செனித்தானிலத்திடைவிழுமுனுடலொடுஞ்சேணிடைப்பெயர்ந்தான்.

மறையவன்சிறுவன்பெயர்ந்திடவிரங்கிமகபதிமைந்தனைநோக்கி
விறலுடையவன்போற்காப்பனென்றுரைத்துவிற்கரத்தேந்திநின்று
யறிவிலியெனவங்கிகட்சிகளுரைத்தவந்தணன்மகத்தினின்முன்னர்
முறையிடவொருவன்மதலையர்தம்மைத்தருவனென்றறிமொழிந்தான். (௭)

சுருதிநாயகனம்மறையவனருளுஞ்சுதர்களைக்கொணர்வனென்றுரைத்து
விரதமாதவனைவேள்விமுன்னிருப்பிரொனுமொழிவிளம்பியேவயங்கு
மிரதமீதமர்ந்துவிசையன்வைதிகனோடேழுலகியாவையுமொருவப்
பருதிதான்கடவாதுயர்ந்திடுகிரிப்பருவரைதன்னையுங்கடந்தான். (௮)

மாயவன்விளைவினுலகெலாங்கடந்துவையமேகாதெனநோக்கி
நேயமோடடைந்தவிசையன்வைதிகனையிரதமீதவனுறநிறுவி
மீயுயர்முகட்டினண்டத்தைக்கழிந்துவிரசைமாநதியெதிருறவே
யேயெனுமளவிற்பெயர்ந்துபேரொளியினெய்தினன்கருமுகிலெனவே. (௯)

அமானவரிலங்குமலங்கன்மார்புறவேபிப்பிலத்தடியினில்வயங்கி
யமானையோர்கணையால்வதைத்தவனடியராகிமண்விட்டுவிண்ணொருவிச்
சமானமில்விரசைகடந்துவந்தோர்கள்சதுப்புயஞ்சங்குசக்கரமு
முமாபதியிடரைத்தவிர்த்தவன்போலுமுருக்கொளத்தழீஇக்கொள்வகண்டான்.

பூருவத்திசையின்வாயிற்காவலர்சண்டப்பிரசண்டரும்பொலியச்
சீருறவியமதிசையினின்வரைபோற்பத்திராசுபத்திரர்திகழ
நேரின்மெய்ச்செயரும்விசையருங்குடக்குத்திசையினிற்கதைகொடுநிற்க
வேருருந்தாதாவுடன்விதாதாவுத்தரதிசையிலங்கிடக்கண்டான். (௧௧)

குமுதனற்குமுதாக்கிடன்சுடற்கதைகைக்கொடுபுண்டரீகன்வாமனன்சீர்
சமனின்மெய்சங்கருடணனற்றவஞ்செய்சறுவநேத்திரனெறிபொருந்துஞ்
சுமுகன்மாதவர்களெண்ணுசுப்பிரதிட்டிதனொடுமிவரொண்மர்துலங்கிக்
கமையுறநாலுவாயிற்காப்பவர்க்குத்தாதராய்த்திரிதரல்கண்டான். (௧௨)

உரகபூடணங்கள்வயங்கிடக்கனகபூதரமொத்துமெய்யொளிர
விருகரங்குவித்தஞ்சிறைவிரித்துயரக்ககபதியிலங்கிடக்கண்டே
தரளமாவடங்களலைந்திடக்கிரீடந்தயங்கிடப்பசும்பொனார்மணிக்கோ
லொருகையினுறவெத்திசைதொறுஞ்சேனாபதிதிரிந்துவந்திடக்கண்டான். (௧௩)

விமலையேருறுமுற்கருடணிஞானைவிழுமியகிரியைமெய்யோகை
சமனிலாவமலைபிருகுவியெழில்கொள்சத்தியம்வயங்குமீசானை
சுமைகொள்பூங்குழலார்துவரிதழ்வாயார்துடியெனுமிடையினாரிலங்குங்
கமலைநேரிவர்களெண்மர்வெங்கவரிகவினுறக்கரங்களாலசைப்ப. (௧௪)

ஆயிரமலிந்தகோடியாதவர்களவிரொனவொளிகொள்வைகுந்தத்
தாயிரம்பணங்கள்விளங்கிடவனந்தன்கவித்திடவவனுடன்மிசையி
னாயிரமுடிகளொடுமுடியாகப்புயங்களாயிரம்புயகாலா
யாயிரம்பதமீரடியெனவிருந்தவாயிரம்பெயரனைக்கண்டான். (௧௫)

மழைமுகிலளகமதிநிகர்வதனம்வளைநிகர்கந்தரமுயர்ந்த
கழைநிகர்வயங்குந்தோளிணைகமலமுகைநிகர்பயோதரமிடைநூ
லெழிலுறக்கலன்களிலங்குமாமடவாரொண்மர்களிருமருங்கிருப்ப
வழகினுக்கழகாயமர்ந்தவச்சுதனையன்புடன்யாதவன்கண்டான். (கசா)

அந்தமுமுடியுமளப்பரிதாயவசஞ்சலவாதிதன்னடிமேற்
றந்தியைவதைத்தவிறைதனைத்தானேதொழுதலுந்தத்துவமூர்த்தி
யந்தணன்சிறுவர்தமையுனக்களிப்பனவணியற்றசவவதார
மிந்துவின்வதனத்தெண்மர்தேவியர்கண்மகிழ்ந்திடக்காட்டுதியென்றான். (கஎ)

மாவிவைமொழியமகிழ்ந்துதேவகி... மைந்தன்மாமலருளோன்மறையி
னூலினைப்பறித்துமதுகையோடிடவனொடிப்பினுண்வேலையெய்தியதுங்
கோலமார்கமலன்குலைந்துமெய்யயரக்குறைவிலாவுவரியினிலங்குஞ்
சேல்வடிவொடுமொண்டெழுந்தவன்றன்னைவதைத்ததுஞ்சிறந்திடநடித்தான். ()

வாசுகியுடலைப்பிணித்துவாரியின்கண்வரைசுழன்றிடச்சுரரிசிப்பக்
காசினிமுதுகுநெளித்திடக்கமடவுருவமாய்த்தாங்கியுங்கடைந்து
மீசன்வெவ்விடத்தையருந்திடவமுதையிமையவர்க்கரிவையாயழித்து
மாசிலாத்துளவந்திருமணியுரத்தினழகுறவணிந்ததுநடித்தான். (கசு)

கொடியவாடகன்றன்பின்னவனகன்றருவ்வினைத்தாவெனவடர்ப்ப
வடவரைநிவரும்வராகமாயெழுந்துமற்றவன்றனைவதைத்ததுவுங்
கடலிடையமிழும்புடவியையெயிற்றாலிடந்ததுங்காசினிமானைத்
துடையிடையிருத்திமறுவறுபுராணமொழிந்ததுஞ்சுந்தரனடித்தான். (உ0)

உரனுறுமறையோனிரணியநமவென்றேதெனச்சிறுவனுட்குலைந்தே
யரியரியரியென்றறைந்திடுமவன்றானரவிஞலெரியிஞற்கரியாற்
பரவையான்மடியாதிலங்கிடவவுணன்பரனிலனென்றுதூணறைய
வரையினைப்பொருவுமடங்கலாயவன்றனுரத்தினைவகிர்ந்ததுநடித்தான். (உக)

காசிபன்றனையனுகியொண்குறளாம்வடிவனாய்க்கடிதினினெய்தி
யேசகலவுணன்றன்னைமூவடிமண்ணீகெனவவனளித்ததுவு
மாசிலாப்பதத்தாலவனியோரடியுமண்டமோரடியுமாயளப்ப
வாசமாமலரோன்விளக்கியகானீர்கங்கையாய்வருவதுநடித்தான். (உஉ)

ஏருறவயங்குமிரேணுகமடந்தைகொழுநனையிருஞ்சுடர்வாளாற்
பாரினின்வதைத்தவரசனையிரங்கைதுணித்ததும்படியினின்மூவேழ்
நேரிலாநிருபர்குலத்தினைவதைத்துநிறைந்திடுங்குருதியின்மூழ்கிச்
சீருறும்பிதாவுக்கெழிலுடனுதகக்கிரிகைசெய்திறலனுய்நடித்தான். (உங)

இரவிதன்குலத்தினிராமனாய்நிருதிதனையனோடிறக்கவீட்டியதும்
பரிவொடுஞ்சனகிதனைமணந்ததுவும்பழுவத்துவிராதனைச்செற்றுக்
கரனுடனனுசருழையெனவருவோன்கவந்தனிந்திரன்சுதன்மாள
வரையொடுமரனையெடுத்தவன்கிளையோடவனையும்வதைத்ததுநடித்தான். (உச)

தேவகியுதரக்கருப்பமாயேழுதிங்கடானமர்ந்துமாயையினாற்
பாவமின்மடந்தையுரோகணிவயிற்றிற்பாய்ந்தவள்பயந்திடுஞ்சுதனாய்ச்
சேவலோனெனவேசினத்தலப்படையாற்றீயவர்திரளினைமடித்து
நாவலோர்புகழத்திசைதொறுநதிநீராடியவிராமனாய்நடித்தான். (உரு)

மதுரையிற்பிறந்துநந்தன்மாமனையில்வளர்ந்துபேய்த்தாயினைவதைத்துக்
கதமுறுசகடன்காலியன்கன்றுபெகனகனுயிர்களைந்ததுவுந்
ததியிழுதுடனேகளவினிலருந்தத்தாம்புரலுறவனைபிணிப்ப
விதமுறவிரண்டாமருதிறத்தவழ்ந்தவித்தகச்செயலையுநடித்தான். (௨௬)

விரைவினிலயன்வந்தொளித்திடுசிறுவர்விதமுறுபலவிளங்கன்றுந்,
தனையினிலுளவாய்நிறைத்ததுமழையாற்றளர்ந்திடுமாயர்தந்திரளை
வரையினைக்கரத்தாலெடுத்தவர்மடியாவகையுறக்காத்ததுமடுவி
லரவினற்சிரமேற்சிலம்புகள்சிலம்பவழகுறநடித்ததுநடித்தான். (௨௭)

கருந்தடவிழியார்துகிலெலாம்விரைவிற்கரத்தினால்வாரியேபாறிக்
குருந்தின்மேல்வயங்கநகைத்திடுமெழகுங்குழலினையூதியேமடவார்
வருந்திடக்கரந்துந்தோன்றியும்வசந்தமாடியுங்குரவைகைகோத்தும்
பொருந்திடப்படியினிலங்கியநிருத்தப்பொற்புமங்கெழிலுறநடித்தான். (௨௮)

மதுரையினடைந்துவரிசிலைமுரித்துமதமுறுங்கரிவதைத்ததுவு
மதிரதர்மடியமுரிவிலாலடித்தங்கடர்ந்திடுமெல்லரைச்செற்றுங்
கதமுறவுயர்ந்தவஞ்சகக்கஞ்சன்மடிந்திடக்கருமுகிற்போலப்
பதமவனுரத்திலிலங்கிடமிதித்துநின்றதும்பரமன்முன்னடித்தான். (௨௯)

செருவினிலரசர்திரளிரிந்தோடச்சிலீமுகமழையினைப்பெய்து
விரைவினிவிரதமிசையுருப்பிணியோடேகியேவிளங்கியதுவரா
புரியிடைமணந்துமீரொணாயிரத்தினூற்றுடனெழுவர்தோள்புணர்ந்தும்
நரகனைவதைத்தும்பவுண்டரன்சிரத்தைத்துணித்ததும்நலனுறநடித்தான். (௩0)

அரனருள்வரத்தாலுயர்ந்திடும்வாணனாயிரங்கரந்துணித்ததுவும்
வகையெனவயங்குஞ்சேதிபமறவோன்சாலுவன்றந்தவக்கிரமன்
செருவினிலுருளச்சிரந்துணித்ததுவுஞ்சீரிலாச்சுயோதனன்றன்பாற்
றருமனேவியதூதாகியேயைந்தூரிரந்திடுஞ்சதிரையுநடித்தான். (௩௧)

அரவுயர்துவசனுடனெழிற்றருமனமர்பொரவியற்றிவீடுமன்மேற்
கரமுறுதிகிரிவயங்கிடவெடுத்துக்கனவளைமுழக்கிநேமியினு
விரவியைமறைத்தேயரவுவவ்விடமாவிரதத்தட்டவணியினழுத்தி
யுரககேதனன்றான்மடிந்திடக்கரத்தாலூருவினடித்ததுநடித்தான். (௩௨)

இந்திரன்சிறுவனுடனமர்பொருதேயெதிரிலாவயன்படைவாங்கி
யந்தணன்சிறுவனபாண்டவமெனவேவிடுத்திடவபிமனற்றேவி
சிந்தையிற்கலங்கவிழுந்திடுகருப்பஞ்சிறந்திடுவடிவுடையவனா
மைந்தனாயெழவங்கழகியகழலால்வயங்கிடமிதித்ததுநடித்தான். (௩௩)

சிறுவனையிழந்துமறையவனிரங்கிச்சிறந்திடும்யாகசாலையின்வாய்
முறையிடக்கடிதினேகிவானண்டமுடிவினிலிரதமேற்றேவர்க்
கிறைசுதனுடனும்வயங்கும்வைதிகனையிருத்தியேயெழில்கொள்வைகுந்தத்
துறையுமாதவன்றன்முன்னரிற்றான்வந்துற்றதுமுவப்புறநடித்தான். (௩௪)

பின்னருமுன்னர்வரும்பரியுருவாய்ப்பிறங்கியயாதவனடிப்ப
மின்னெனவயங்குமனைவியருடன்றான்விமலனுண்மிகமகிழ்ந்தருளி
யின்னலின்மறையோன்சுதரிவரொன்றங்கீதலுமிறையினையிறைஞ்சி
யன்னவரொடுமாலுலகிடையிழிந்தேயந்தணன்சிறுவரையளித்தான். (௩௫)

காமனைப்பயந்தகருமுகில்வடிவன்கவினுறுமுருப்பிணியுடனற்
கோமதிநதியினடைந்தொளிதிகழவவபிருதங்குடைந்தாடி
மாமலரிமையோர்பொழிந்திடவிலங்குமணிவியோடிரதமீவயங்கிப்
பூமனன்புராரிபுரந்தரன்போற்றப்பொலிவுறுவணங்களிற்சென்றான். (௩௬)

துந்துமிமுரசந்துடிகைசங்கிடக்கைத்தூயகாகளஞ்சினமுழங்கத்
தந்திதேர்துரகநிறைந்திடவரசர்தானையோடெங்கணுமார்ப்பச்
சுந்தரன்பவளக்கொடியுடன்றுலங்குந்துய்யநீலக்கிரிபோல
விந்திரையுடனேரிரதமேல்வயங்கியெழிலுறுங்கோயிலிற்சேர்ந்தான். (௩௭)

தந்தைதாய்முன்னோனவர்கடம்மடியிற்றாழ்ந்தெழுஞ்சக்கரத்திருமா
லிந்திரையுடனேவயங்குமீரொண்ணாயிரத்துநூற்றெண்மராயிலங்கும்
கந்தமாரளகத்தியர்தொழுதேற்றவரிவையர்கானங்கள்பாட
நந்தொளிர்கரத்தார்பணவதாளங்கண்முழங்கிடநடிக்கவேமகிழ்ந்தான். (௩௮)

அருந்தவர்துதிப்பமறையவராசியறைந்திடவரசர்கள்போற்றக்
கருந்தடவிழியார்சோபனமுரைப்பக்கவரிகளிசைத்திடநீலப்
பெருந்தடவரையிற்றிகழ்கதிரொளிபோற்பிறங்கியமுடியொளிவயங்க
வரந்தருமுதல்வன்மலர்மகளுடனும்வானவர்வாழ்த்தவீற்றிருந்தான். (௩௯)

## வைதிகப்படலம் முற்றிற்று.

ஆகப்படலம் ௪௫ - க்குக்கூடிய திருவிருத்தம் ௩௭௫.

ஸ்ரீகண்ணபிரான் புண்ணியத்தாடுணை

ஸ்ரீ

விஷ்ணுமயம்.

௧௦௪ - வது

# உபதேசப்படலம்.

அணுவெனச்சிறுத்துமேருவாயுயர்ந்துமாறெணபெண்ணவியலனாய்ப்
பிணியுறவடர்ந்துமருந்ததாய்த்தவிர்த்தும்பின்னுகனயனுந்தானாயு
மணிபுலவருணமிலங்கிடக்கோர்த்துச்சிதறுமாறெனவயங்கண்டந்
தணியவேபடைத்துந்துடைத்துமாமாயமிழைக்குமாலடியர்தாள்பணிவாம். (௧)

மருளில்வைதீகன்மைந்தரானவரைவைகுந்தத்தெய்தியேகொணர்ந்து
மருமறைநெறியான்மகத்தினைமுடித்துமவபிருதங்குடைந்தாடித்
தெரிவையர்பதினாறாயிரத்தொருநூற்றெண்மருஞ்சிறந்தருகிருப்பப்
பரவைசூழ்துவரைப்பதியினில்விமலன்பவமறவீற்றிருந்தனனால். (௨)

அவனியின்பாரமகன்றிடவரசரசுரராக்கதர்களைவதைத்துந்
தவமுறுதருமனனுசரானிருபர்குலமறச்சாரதியாகி
யிவுளிபூணிரதம்விசையனுக்கூர்ந்தவியாதவனெதுகுலத்துதித்தோர்
துவரையினிறைந்தவிவர்களைவதைக்குஞ்சூட்சியையுன்னினன்மாதோ. (௩)

ஏதுகுலத் துதித்தோரனைவருமிமையோராகியசெயலினுலியானே
கதுமெனவதைத்தேனெனிலிவரழியாக்கதியினையடைந்துயர்காமன்
பதியெலாம்வெளியாமிவர்களைத்தெறுக்கும்பகைஞரும்படிமிசையிலையால்
விதிநிகர்முனிவர்விளம்புசாபத்தால்வீட்டுவேனெனநினைந்தனனால். (௪)

ஏதுகுலத்தரசர்குலமடிந்திடமாலியற்றியெண்டவர்களைநினைப்ப
விதிநிகர்வசிட்டன்கவுசிகன்பிருகுவிழுமியகாசிபனினையில்
சதுர்மறையுணருங்கண்ணுவன்வாமதேவனத்திரிதுருவாச
னெதிரிலங்கிராவோடொளிகொள்புண்டரீகவாச்சிரமத்தெய்தும்வேலை. (௫)

அரிகுலக்குமரரொழில்கொள்சாம்பனையோர்கருப்பமாரரிவையாய்வகுத்து
விரைவினினவணினடைந்துமாதவர்முன்விளம்புவாரிந்தமெல்லியருன்
றனையினிற்பெறுவதிலங்கியவாணோதையலோசாற்றுமென்றுரைப்ப
விருடிகண்முனிந்துங்குலத்தினையறுக்குமயத்தடியாமெனவிசைத்தார். (௬)

மாதவர்முனிந்தீதுரைத்திடச்சாம்பன்வயிற்றினேரயத்தடியெழலும்
பீதியுற்றவர்கடுவரையினடைந்துபிறங்கியவுக்கிரசேனற்
கோதிடவவனவ்விருப்புலக்கையினையராவிட்ப்பொடியொடுநுதியைச்
சீதரன்றனக்குநிகழ்த்தியேவலைகொள்சிந்துவினழுவத்துள்விடுத்தார். (௭)

உததியின்விடுத்தவயப்பொடியெவையுமுயர்ந்தவாட்கோரையேயாகி
விதமுறக்கரையினிலங்கிடவராவமிகுநுதிதனைவிழுங்கியமீன்
சதுமுகனிழைத்தநெறியினேர்கிராதன்றடக்கையினகப்படவவனுங்
கதுமெனவஃதின்வயிற்றினைப்பிளந்துகண்டனன்சிற்றிரும்பதனை. (௮)

கண்டுடுஞ்சிறியவயத்தினைக்கிராதன்கணைநுனிக்குப்பியாயமைத்து
மண்டனில்வனத்திற்றிரிந்தனனிப்பால்மறுவிலாதுயர்வசுதேவ
னெண்டவர்பணியுமியாழ்முனிதுவரைக்கெய்தியாண்டநேகநாளிருப்ப
முண்டகத்தயனைநிகர்தவத்தவனையிறைஞ்சியேமொழியலுற்றனனால். (௯)

முன்னமோர்சாபவினையினாலினையின்முனிவநீயொருநகரதனின்
மன்னியேபினரோர்தினமவணிராமல்வழிக்கொள்வாயெனச்சொல்வரிவணி
னின்னலிலியாழ்கையிலங்குவாயடைந்துமநேகநாளிருந்தனையானீ
துன்னவுந்தெரியவரியதாலிதனையோதெனமாதவனுரைப்பான். (௧௦)

உத்தமகுணத்தாலுயருமுத்தானபாதன்மாமரபிடையுதித்தோன்
வித்தகமலிதெக்கண்சிருட்டியினைவிரும்பித்தான்மகிழ்வொடும்பயந்த
புத்திரர்தமையானவணியிற்றுணியாரவாவினைப்பொருந்திடாவண்ணந்
தத்துவமறிவித்திடவவருணர்ந்துசாந்தராய்க்கதியினையடைந்தார். (௧௧)

அவனியிற்சிருட்டியினைத்திடப்பயந்ததனையர்போய்ப்பரகதியடைய
வுவமையிலரசனுளைந்துபின்னருந்தானுதவியசிறுவர்கடனையும்
பவமறவுயரும்பதத்தினிணடையப்பழுதிலாஞானத்தையருளித்
தவர்மகிழ்ந்திடநான்றெக்கணமனற்குந்தத்துவமுணர்த்திடச்சென்றேன். (௧௨)

வினையறவுயரும்பதத்தினின்மேவவிளங்கியதத்துவங்கேளென்
றினியவாசகனுயியம்பிடமுனிந்துதெக்கணனிவ்வுலகத்தின்
மனிதர்களுள்வாஞ்சிருட்டியைவிரும்பிமகிழ்வொடுந்தவத்திறைற்பயந்த
தனையர்களரசாணலனைநீதவிர்த்தாயென்றுபின்சாற்றலுற்றனனால். (௧௩)

நிருபராயுலகாண்டுலப்பிலாச்சிறுவர்நிறைந்திடப்பயந்துவாழ்பவரைத்
தனையிடையுருமறக்கதிக்குறவிடுத்தாயாதலிற்சார்ந்திடுகரி
ஞெருதினமலாதுமறுதினமிருந்தாலுன்வயிறுடைகுதியென்றவ்
வரசர்கோன்முனிவாலறைந்தசாபத்தாலவனிவானெங்கணுந்திரிவேன். (௧௫)

சரியிலாநிருபனறைந்தசாபத்தாற்றளர்ந்தியான்சார்ந்திடுகரி
ஞெருதினமிருந்துமறுதினமிராமலுழலுவேனுலகெலாமளந்த
வரிதிருப்பதியினடைகுவோர்தமவெஞ்சாபமோடருவினையெவையு
மிரவிகாணிமம்போலொருவிடுமதனலிவணிருந்தனனெனவறைந்தான். (௧௬)

சுத்தவிவ்வவனிச்சுமடெலாமகலச்சூரசேனன்னருள்மனவுன்
புத்திரனுகியவதரித்தருள்வோன்புவனமோடயன்றனைப்படைத்த
வத்தன்வாழ்பதியீதாதலின்வினையாஞ்சாபமோவிடவிவணமர்ந்தேன்
வித்தகவெனமாதவன்விளம்பிடலும்விழுமியவரசனீதறைவான். (௧௬)

உத்தமமிகுதேவகியெனுமின்னுளுதவியவிவன்றனையயன்ற
னத்தனென்றுணராவறிவிலேனவன்முனமர்ந்திடும்பதியினிடையாத்
தத்துவப்பொருளையுரையெனமுனிவன்சரியிலாமிதுலையினிமிக்கு
வித்தகவிடபன்மதலையர்மொழிந்தவேதநூல்கேளெனப்பகர்வான். (௧௭)

மிதுலையினிமியாமரசனேர்மகத்தைவிளைத்திடுமிடந்தனினிடபன்
சுதர்கவியவியன்திரிக்கனுெண்ணசமன்றாயனும்பிப்பிலாயனன்வெங்
கதமகல்கறைபாகனனவிர்புத்தன்கவினுறுதிரமிளன்றாய
மதியுறுநிவகோத்திரனிவர்நவப்பேர்திகம்பரராகிவந்தனரால். (௧௮)

இடபனற்சிறுவர்யோகிகளாகியிலங்கியவன்னியர்நவப்பே
ரடைதலுநிமிமன்னிறைஞ்சியாதனமிட்டருக்கியங்கொடுத்தபின்னறைவான்
படியினிற்பிறவாதுயர்கதியடையப்பரமமெஞ்ஞானத்தையெனக்கு
விடையவனெனவேவிளங்கியதவத்தீர்விளம்புவீரெனவவரறைவார். (௧௯)

வேதசாத்திரத்தால்விளங்கியமகத்தைவிளைத்திடின்மந்திரவுலோப
நீதியாங்கிரியாலோபமாதானலோபமீதுறிற்கெடுநிறையப்
பூதலமிசையினியற்றுவாருளரேல்நிலையிலாச்சுவர்க்கத்திற்புகுவா
ராதலினழியாப்பதம்பெறமுயல்வாரரிசரணடைவரொன்றறைவார். (௨௦)

மனதுடன்வாக்குச்சரீரமிந்திரியமறுவிலாப்புத்தியாங்காரந்
தனைநிகரிலாதவரியிடத்திவைகள்சம்மதமாகிடப்பற்றித்
தினமுமொப்பிலாதவவன்றனைத்திருவாராதனஞ்செய்தவனியற்றும்
புனிதமாக்கதைகேட்டியருவோரவன்றன்பதத்தினிற்பொருந்துவரன்றே. (௨௧)

இதரதேவதைமேல்மனத்தினையுறுத்தாதெழிலுறுமச்சுதனியற்றுங்
கதையினைக்கேட்டுநகையுறவழுதுகளிப்புடனடித்துலகெங்கு
முதிதியைக்கடந்தோனுளனெனத்துதிக்கும்பரமபாகவதர்களுறுமப்
பதிபவுத்திரமாமவர்களைப்பணிவார்பரகதியடையரொன்றறைவார். (௨௨)

உலகினையெல்லாம்படைத்தளித்ததற்பின்னொடுக்குவதும்மவன்மாயை
சலவிபியெனவங்கழிந்திடும்பிறப்பைத்தரித்தவிந்திரியங்களெல்லா
நிலன்விசும்பதனினிலையில்காமத்தைநினைத்துழல்வதுமவன்மாயை
நலனுறுமவரிம்மாயையையொருவநற்குருத்தனையடைந்துய்வார். (௨௩)

வேதபாரகனுப்பொறையுடையவனுய்விழுமியமறைகள்சாத்திரங்க
ளோதிநற்பரனையறிபவனுகியுண்மையையுணர்த்துமாசான்றன்
பாதமேற்பணிந்தங்கவன்மகிழ்ந்திடத்தான்பணியினைச்செய்பவன்ருனே
தீதறவுபதேசஞ்செயும்பொருளைத்திடமதாய்மனத்துறப்பற்றி. (௨௪)

அரியடியவரிற்பெரியவர்தமைச்சென்றிறைஞ்சிடவறனுறச்சமனுய்த்
துணையினின்வயங்குமவர்சகாவாகத்தளர்ந்தபேர்தமக்கருள்புரிந்தாண்
டுணைசெயும்வருணத்தருமத்தைநடத்தியொழிவுறநிந்தைபண்ணுமற்
சுரருறைந்திடுஞ்சொர்க்கத்தினைவிரும்பாதிலங்குவார்சோதியையடைவார். (௨௫)

சீருறுகிரேதாயுகந்தனில்நாலுவருணமுமிலைசெயுமகமும்
பாரினிவிலையவ்வுகந்தனின்வயங்கும்பரன்சுவேதத்துருவாகி
யேருறுங்கரனுலிலங்கிடமுந்நூறிகழநற்றுளவிருலிணைத்த
தார்வயங்கிடவேமரவுரியுடுத்துச்சடைசிரமுறத்திகழ்குவனுல். (௨௬)

மாதவர்நிறைந்துவயங்கியதிரேதாயுகந்தனின்வருணநான்குளதாம்
வேதநூல்நெறியினியாகமுமலியுமவ்வுகந்தனினுறும்விமலச்
சோதிசிந்துரத்தினுருவமாயமர்வன்துவாபரயுகத்தினிலிலங்கு
மாதிசாமளனுய்வயங்குவனெருங்குமருச்சனைவயங்கிடுமென்றே. (௨௭)

கலியுகமதனிற்கிருட்டினனுகிக்கவினுறுசோதிசங்கீத
நலனிறைற்பிரிதியாயமர்ந்திடுவனுலகெலாந்தனியறநண்ணப்
பொலனுறப்பெருகுந்தண்பொருநையங்காவேரிநற்பயந்தனிற்பொருந்துந்
தலமிசைச்சனிப்பார்பரமபாகவதரொன்றுபின்சாற்றலுற்றனனுல். (௨௮)

சரியிலாதிலங்கும்பரமபாகவதர்சனித்திடுங்கலியுகந்தன்னைச்
சுரரொடுமுனிவர்விரும்புவரொனுஞ்சொற்றூயயோகியர்நிமிமன்னுக்
குரைசெய்தங்கவன்ருனிறைஞ்சிடவகன்ருரதுதனுலுத்தமவரச
திருமகள்கணவனடியிணைத்துதித்துச்சேருதிகதியெனப்பகர்ந்தான். (௨௯)

சுரர்முனியிவைகளுரைத்தகன்றிடலுஞ்சூரசேனன்சுதனுன
நிருபனும்பரனைத்துதித்தமர்நாளினிகரிலாத்துவரைமாநகரி
னரனயன்முனிவரமரர்கள்வலாரியடைந்தரியடியிணைவணங்கிப்
பரமனீயவனிப்பாரமோவிடவந்தனையெனப்பங்கயன்பகர்வான். (௩௦)

விரசைமாநதியைக்கடந்துபேரொளியாம்விழுமியவைகுந்தத்துறைவாய்
பரவைநுண்மணலினதிகமாய்ப்பல்கிப்பரந்திடுமெண்டமுன்னுரோம
நிரைதொறுமமரத்திகழுவாயவனிச்சுமட்டினைநீக்கினையிவணின்
வருடநூற்றிருபத்தஞ்சுறவமர்ந்துவயங்கினுயென்றுபின்னறைவான். (௩௧)

உததிசூழவனிச்சுமையினையெல்லாமொழித்தனைமுனிவர்சாபத்தா
லெதுகுலமுடியுமிறைவவைகுந்தத்தெய்துவாயென்றயனியம்பத்
ததியனைந்திடுவோன்றமனியப்பொருப்பார்தனையினிற்பாரசேடத்தைக்
கதுமெனவகற்றிவருவனென்றவர்க்குவிடைகொடுத்தமர்ந்திடுங்காலை. (௩௨)

துவரையம்பதியிற்குறைக்கொளியிரத்தவருடம்வெள்ளிடியெலாந்தூவத்
திவமதினுடுக்கள்விழுந்திடத்தூளியெழுந்திடச்செகதலநடுங்க
நவையுறவிகலன்முறையிடத்தூமகேதுவானண்ணிடக்கூகை
கவலையுற்றிடக்கூவெனப்பர்வேடங்கதிரவன்றனைவளைத்தனவால். (௩௩)

புருடர்கட்கிடக்கண்டுடித்திடவலக்கண்பொலன்கொணமங்கையற்கவண்டுடிப்ப
விடருமித்துன்னிமித்தங்கள்பலவாயெய்தலுமுத்தவனிகரில்
கருடவாகனனையிறைஞ்சியிங்கரிற்கவினுறுமரசர்கள்மடியு
மருடனைக்கொடுத்துப்பரமநீயுயரும்வைகுந்தத்தடைதிகொலென்றான். (௩௪

உத்தவனிவைகள்மொழிந்திடநகைத்தேயுலோகநாயகனிவையுரைப்பா
னத்தியிற்றுவரைப்பதியெழுநாளினமிழ்ந்திடநிறைந்திடுமரசர்
வித்தகத்தவர்களறைந்தசாபத்தால்வீடுவர்நீயிவணிராமற்
சுத்தமாதவர்வாழ்வதரிகாச்சிரமத்தடைகுதிபோவெனச்சொன்னான். (௩௫)

பின்னைதன்மகிணனுகியேவயங்கும்பிரானிவைகூறவுத்தவன்றான்
உன்னைவிட்டடியேனொருவிலேனெனவாண்டிலகிடந்துண்டவன்மொழிவா
னென்னையிவ்வுலகமெங்கணுமுளனென்றேறத்திநீள்வதரிகாச்சிரம
மன்னியவ்விடத்தினமர்ந்துபின்கதியின்வருகுதியெனவவனறைவான். (௩௬)

ஏதமிலியமமெத்தனைநியமமெத்தனைசற்குணமேது
நீதியாய்வயங்குந்தவமெதுசவுசமெதுநிகரில்பொறையேது
பாதகமகற்றுந்தவமெதுதியாகமெதுதனமெதுபலமேது
வேதமார்வேள்வியெதுமறைநெறியார்விழுமியதெக்கணையேது. (௩௭)

தயிரியமெதுநற்சவுரியமேதுசத்தியமேதுண்மையேதா
மியல்புறுமிலாபமெதுவித்தையேதுநலனுறுவிபவங்களேது
மயர்வறவயங்குந்திருவெதுவண்மைவளர்வியதானங்களேது
துயருறுமிலச்சையெதுசுக்மேதுதுரிதமாய்வருதுக்கமேது. (௩௮)

உறவெதுசுவர்க்கமெதுநரகெய்தாதுயர்ந்திடுமேனையெதுநெறிசே
ரறிவெதுவழியில்லாதனவெதுநல்லறிவிலானெவனெவன்மூர்க்கன்
வறியவனெவன்சம்பன்னனார்வயங்கும்பண்டிதனெவன்மருளகற்று
மியல்புறுமீசனெவனெவனீசனியம்பெனவரியருள்செய்வான். (௩௯)

சத்தியம்பரர்சொற்றுறத்தலின்னுவைத்தவிருதல்பிறர்மனையடையாச்
சுத்தமெய்ம்மறையைப்பகர்தல்நிலைமைதுலங்கிடும்பொறுமைதுன்பங்க
ளொத்தனைவரினும்வெருவுதலொழிதல்சஞ்சலம்விடயமற்றிருத்தல்
குத்திரம்விடம்விலக்குதலவச்சொற்குறைப்பதீதியமம்பன்னிரண்டே. (௪௦)

தவஞ்செபமோமஞ்சவுசநற்சிரத்தைதானமாசாரியர்சேவை
பவந்தனையொருவுந்தீர்த்தயாத்திரையொண்பரமனுமுராரிதன்பத்தி
யவந்தனையகற்றும்பரவுபகாரமதிஞையுளமகிழ்ந்திருத்தல்
கவந்தனைக்களைந்தோனருச்சனையிவையாந்துவாதசங்கலக்கமினியமம். (௪௧)

பரமனுமெனதுபதத்தினிற்கருத்தைப்பற்றுவித்தமர்தல்சற்குணமாஞ்
சரிரவிந்திரியமொடுக்குதறவமாஞ்சவுசமேகருமத்தையொழித்த
லிருநிலத்திடுக்கண்சமிப்பதுபொறையாமிருடருகாமத்தையொழித்த
லரியமாதவமாந்தியாகமில்வாழ்க்கையகற்றல்சந்நியாசமேயாகும். (௪௨)

தருமமேதனமாந்தயங்கியபிராணயாமமேசரியிலாப்பலமாம்
விரிவுறுமவிதோய்வேள்வியேயாகியவரிவிளம்புதெக்கணைதான்
மருள்கல்குருவாய்மலருஞானோபதேசமேவருதயிரியமாம்
விரகமோடிரதிமொருவுதல்கலனைவெறுத்தலேசவுரியமாகும். (௪௩)

ஆற்றுமசமமேயவமில்சத்தியமாமறையுநல்வசனமேயுண்மை
தோற்றுறுமிலாபமுராரியாமெனேயே துதித்திடும்பத்தியாம்வித்தை
சாற்றிடிற்பரமாத்துமாவினையறிதல்சரியிலாவிபவமாவனதா
னேற்றமாகியவைகுந்தத்தினிலங்குமீசுரனிணையடிசேர்தல். (௪௪)

ஆசையற்றிடுதல்திருவெனலாகுமளித்திடுதானமேதென்னிற்
றேசுறுநிலத்திற்பலபிராணியையுந்தெண்டியாதொழிதலாமிலச்சை
மாசுறுகருமந்தனின்மனமொழித்தல்மறுவிலாச்சுகமின்பதுன்பம்
பாசமற்றிடவேகடக்குகைதுக்கம்பவமுறுகாமநத்திடுதல். (௪௫)

உறவுசற்குருவாஞ்சுவர்க்கமாவதுதானுயர்ந்தசாத்திககுணமலிதல்
மறலிதன்னுலகினிரையமாவதுதாமதகுணம்வளர்தலெண்மனேயே
யறிவுறுகருத்தார்சரீரநல்வழியாமச்சுதனுமெனேயடைதல்
வெறியுறுநெறியாவதுமனமெங்கும்விரிந்துருத்திரதெய்வத்தமர்தல்

அருளிலாதவனிந்திரியநிக்கிரகஞ்செயுநலனறிவிலாதவனே
மருடருமதிகமூர்க்கனுங்காரம்வளரநான்சமர்த்தனென்றமர்வான்
திருவறும்வறிஞன்சேர்ந்திடும்பொருளிற்சிந்தையிற்பிரீதியில்லவனே
யிருநிதியுறுசம்பன்னன்மானவனேயியல்புறுசற்குணமுடையோன். (௪௭)

சரியில்பண்டிதனில்வாட்கையிற்பாசந்தவிர்ந்துநற்கதியினையடைவோ
னிருநிலமதனினீசனவனேவிடையறப்பற்றுதறவிர்ந்தோன்
மருடருநீசன்சகலபாவத்துமருவுவோனிவையெலாம்ஞான
வுருவமாயமருத்தவவுணர்கெனவேயுலகளந்தவன்பினரறைவான். (௪௮)

இருநிலமதனினியற்றுமில்வாட்கையுததியைக்கடந்திடவிலங்கி
வருதனுவாயாமனிதர்தஞ்சனனமன்னியிவ்வோடத்தைவிடுப்பான்
சரியில்சற்குருவாஞ்சாய்ந்திடாநெறிமேற்றருமனுகூலனும்பவனன்
பரமனுகியயானிவையறிந்துய்யாப்பாவியர்தம்மைத்தாங்கெடுப்பார். (௪௯)

அட்டமாவினின்வாய்துலங்கயமுறவேபிணித்திடுஞ்சூத்திரக்கயிறு
மட்டினையறியாதகிமாய்மெட்டினவமெனமனத்திடையுணர்ந்தே
விட்டுமெட்டிடுநல்விரகினைநச்சிவிடயத்தின்கருத்தினைவிட்டே
யட்டைபோலவைபற்றுவமுனந்திருப்பியென்னிடத்தமைப்பதேயறிவாம். ()

அரியிவையெலவுமறைந்திடக்கேட்டவறிஞருமுத்தவன்பகர்வான்
இருநிலமதனிற்கருமகாண்டத்தையீரிருமறைகளுமொழிய
நரரதுநலனென்றதினுனைப்படியேயியற்றுவதெவையெனநவிலத்
திருமகள்கொழுநனரும்பியமுறுவ்றெரியவேசெப்பலுற்றனனல். (௫௧)

வருபிணியகலுமவுடதநுகராதழுமிளமதலைதன்வாயி
னிரதமுற்றிடநற்குளமிடுவதுபோலீரிருமறைகளுமியம்புங்
கருமகாண்டத்திற்சுவர்க்கமெய்திடவுங்காதலர்தமைப்பயந்திடவும்
இருநிதிவரவுமிவையினையியற்றியிதரதேவதைகளையடைவர். (௫௨)

அருமறையெவையுங்கருமகாண்டத்தையறைந்தபின்னரணுந்தத்திற்
பரமனுகியயானழிந்திடாதுயரும்பதத்திடையமர்ந்தருளுவது
மிருநிலமிசையினிதரதேவதைகளெண்ணிலாநிறப்பனொன்பதுவு
மருளகன்றிடவேமொழியவுமுணராமனிதராசையின்வசமாவர். (௫௩)

இலவலர்மலரைக்காத்திடுஞ்சுகம்போற்கருமகாண்டத்தையிச்சித்துப்
பொலனுறுசுவர்க்கத்தரம்பையர்நகிலிற்போகந்துய்த்திடுகுவமென்றுந்
தலமிசைச்சனிக்கினுயர்குலமதனிற்சார்குவமென்றணியாயப்
பலமுறப்பசுவைவதைத்துக்குத்திரதேவதையெனும்படுகுழிப்படுவர். (௫௪)

ஆதியோனிவையையறையநின்கெதியையடைகுவதெங்ஙனமருளென்
றோதுமுத்தவனுக்கிணையில்மாதவன்றானருளுவானுலகினிலுயர்ந்த
வேதநூற்கருமம்விடிற்பவமுறுமென்பத்தியுற்றிடவவைவிட்டா
லேதம்வந்தடையாக்கதியினையடைவதல்லதுபிறப்பிறப்பிலையால். (௫௫)

எரியினைவிரும்பிவிழுந்தவிட்டிலமும்மலங்கியபிடியினைநத்தித்
தரையினாழ்குழியிற்படியும்வெங்கயமுந்தாமரைமலர்மதுநுகர
விரைவினின்விரசியிரவுறவவைதான்முகிழ்த்திடவிலங்கொளுவரியும்
பருவரலுறுமப்பவத்தினையுறுமற்பாவையர்கலவியைவிடுதி. (௫௬)

வலையினிற்பிணிப்புண்பேட்டுடன்பார்ப்புமடியுமென்றவனுறத்திரிந்து
கொலைஞன்வெங்கரத்திலகப்படுபுறவுங்கொடுமையார்தூண்டிலினிரையை
நலனெனவிழுங்குஞ்சலசரந்தானுமழிவபோனரியர்கலவி
தலமிசைவிரும்பியுழன்றிடாதுயருங்கதியினைச்சார்ந்திடவியற்று. (௫௭)

பாடலைவிரும்பிக்கொலைஞர்கள்கரத்திற்பழுவத்தினகப்படுமுழைபோற்
கேடுறுவகையினிதரதேவதைநூல்வழிபடக்கேட்டிடாதொளிகொள்
பீடுடைப்பரத்தையடைந்திடும்படிநீபிழையில்சாத்திகபுராணத்தி
னீடியபொருளைவிருப்பமாய்க்கேட்டுநெறியுறுமவருடனமர்தி. (௫௮)

பிரசரமிகுத்தங்கிழந்திடுமதிபோற்பிழையுறுதேயுறுந்தனத்தை
யருமறையவர்கைக்கொடுத்திடுகிருமிதனைக்கரத்தமைத்திடுங்குளவி
யுருவினைப்பார்த்தவ்வடிவுறுஞ்செயல்போலுலப்பிலாவரியெனுமென்னைப்
பரிவினுல்மனத்தினிடையெழுந்திடநீபற்றியென்வடிவினையடைதி. (௫௯)

வரைமரமெனவும்பரவுபகாரமியற்றுதிவயங்கியதரைபோற்
றருமமெய்பிறநற்கமையுறுபுவனமெங்கணுஞ்சார்ந்ததின்குணத்தை
மருவியுமொருவும்வாதமாமெனச்சேர்மருளுறுவோர்தமையுளத்தி
னுரையகல்சலம்பொற்றெளிந்தரியாமென்கதையினைநுவன்றுகேட்டுய்தி. (௬௰)

யாவர்கடமக்குமகப்படாக்ககனமெனப்பவத்தடைகிலாதமர்தி
யாவலினுலகத்தனைத்தையுநுகர்ந்தக்கொலைதனக்ககப்படாதுயரும்
பாவகனெனவில்வாட்கையின்விழுந்தும்பவுத்திரனுகவென்னுமம்
நாவினில்மறவாதறைகுதிமலைப்பாம்பெனநணும்போசனம்நுகர்தி. (௬௧)

தரையினிற்சலத்தைச்சகசிரகிரணந்தன்னினுல்வாங்கியேமீள
வருடகாலத்திற்கனந்தனிற்கருப்பம்வளர்ந்திடப்பெய்திடுவிக்கு
மிரவிபோற்றனத்தைநலனுறத்தேடியிலங்கியமறையவர்தமக்கு
விரைவினினளியோடருளுதிபணிபோல்வெளிசெயாதேவனத்துறுதி. (௬௨)

நதியயம்வரவேபெருத்திடாவதுநாணண்ணிலையெனச்சிறுத்திடாவவ்
வுததிபோற்றுக்கசுகங்களையொழிதியிலூகலத்தண்டுலந்தனைக்
கதுமெனக்கரத்துச்சுளகினுற்புடைத்துக்குத்திடுங்கன்னியைப்போல
மதியிலாதவர்தந்தொடர்ச்சியைவிடுத்துமாயனுமெனநினைந்துய்தி. (௬௩)

மழலையோவிலாதமதலையர்தமைத்தாய்வைதிடினும்மிகழ்ந்திடாத
வெழிலெனநிலத்தினளப்பிலாவிடர்வந்தெய்தினுமிறைவனுமென்னை
விளைவுறத்தொழுதுவிரும்புதியிலக்கின்விசிகத்தைவிடுவதுபோல
வழகுறுமெனதுதிருவடிமிசையினமூழ்ந்துறமனத்தினையிடுதி. (௬௪)

கலைவளர்ந்தழியத்தான்குறைவிலாதகவினுறுஞ்சோமனைப்போல
நிலையிலாவாக்கையழிந்திடுஞ்சீவனித்தியமெனவறிந்திடுதி
யிலகியவுலூதைவாயினூலதனுள்வரைந்துபின்விழுங்கிடுமெழில்போ
லுலகெலாம்படைத்தங்களியுடனளித்தேயொழிப்பவன்யானெனவுணர்தி. (௬௫)

ஆயிரம்வராகன்றினந்தொறுமுதவுமழகியவீடனைடைந்திடுமா
னேயுறவிரவிற்றுயிலினைத்துறந்தங்கவன்வருநெறியினைநோக்கித்
தீயவையிவையென்றிகழ்ந்துதன்கருத்துச்சீதரனையவென்கழல்மேற்
பாயவென்பதத்தினமர்ந்தபிங்கலையாங்கணிகைபோற்பற்றெலாம்விடுதி. (௬௬)

ஏதமற்றிடவீங்கினக்குயான்பகர்ந்தவிருபத்தோடைந்தெனுமிவையை
போதகமருளுங்குருவெனவேதன்புந்தியாலோரவதூத
னுதியாமெனவான்றுளிவிரும்பனம்பின்கருமம்போலறிந்துயர்பதத்தின்
மீதுபோயினனுலகந்துணர்ந்தறிவாம்விளக்கினினுய்தியென்றறைவான். (௬௭)

அரியெனுமெனைத்தானறிந்திடாத்தவத்தாலழிவிலாக்கதிதமக்குறுமென்
றிருளுறுமனத்தால்வேதசாத்திரங்களியற்றுவார்மைமையாவினுக்குத்
தரையினிற்பசும்புல்லளிப்பதுஞ்சற்பாத்திரமலார்க்கீய்ந்ததானமுந்தீ
யுரையுறுவிபசாரிக்கிடுமெனமுமழிவபோலிடரினினுழல்வார். (௬௮)

ஆதலிற்காமமனைத்தையும்விடுத்தென்னடியிணையடைகுதியெனமா
லோதவுத்தவன்றனிறைஞ்சியெக்குணங்களுறுவருன்பத்தர்களதனை
யாதிநீபகர்தியெனமொழிந்திடலுமகிலலோகங்களும்படைத்த
நாதனென்னடியாரடைந்திடுநலத்தைநவின்றிடக்கேட்டியென்றுரைப்பான். ()

பொறையுறப்பாரினுவிலாதமர்தல்பொறியினோடிந்திரியங்க
ணெறியுறவடர்த்தல்குசையற்றிருத்தல்நிபத்தியைமொழிகுதல்சுத்த
முறுதலாம்புந்தியடைதல்சத்தியமாயுரைத்தல்காமத்தினையொழித்தல்
அறனுறுதயையோடிலங்கல்பொய்ச்சான்றுதவிருதல்பசியினையகற்றல். (௭௰)

சுகமொடுதுக்கஞ்சமமெனவமர்தல்சோம்பறவிருக்குதல்கெருவ
மகலவங்கடைதலதிகசற்காரமியற்றுதல்பவமகங்காரம்
புகவிலங்கிடுதல்ஞானமெய்பொருந்தல்புகழுறுதிடவிரதங்கள்
மிகவுமேமுனைதல்பரவுபகாரம்விளங்கிடத்தினந்தொறுநடத்தல். (௭௧)

நேயம்விஞ்சிடுதலரிகதைகேட்டல்நிகரில்சாத்திகக்கல்விநிறைத்த
றூயதுற்றிடவேதிரவியத்தாசைதுரத்துதலெங்கணுமுளனு
மாயனுமெனைத்தானறிகுதல்சருவக்கியனெனவயங்குதல்மனத்திற்
றீய்மையற்றிடவேயிறைவனுமென்னைத்தியானமெப்பொழுதினுஞ்செய்தல். (௭௨)

தரையினிலெவரும்பரிவினுலியற்றுஞ்சகலமுமாங்கருமத்தின்
மருவுதலொழிதலிறைவனுகியவென்மலர்ச்சரணரணெனவடைத
லுரைசெய்சற்குணங்களிவைகள்முப்பதுமென்னடியர்கட்குறுமெனவுரைத்துத்
திருமகள்கணவனிகரிலுத்தவற்குப்பின்னருஞ்செப்பலுற்றனனால். (௭௩)

பரனெனுமெனைத்தானறிந்திலராகிப்படியின்மேலியற்றிடுமியோகந்
தருமதானங்கள்மகங்கயம்வாவிதடாகநற்கூவலீதெல்லா
மருளுறச்செயினுமவைகளென்பதத்தினடைந்திடுநலத்தினைக்கொடாது
சுரருலகியங்குஞ்சுவர்க்கமீதெய்தித்துலங்கியேபின்னருஞ்செனிப்பர். (௭௪)

திருமமெய்யுறுமென்னடியரானவர்க்குத்தயங்கியசாதிநாலென்னும்
வருணமும்வேண்டாமிழிகுலனெனினுமவர்கள்வானவர்க்குமேலாகிச்
சரியிலென்பதத்தின்வயங்குவரிதற்குச்சான்றுசாம்புவனுயர்சடாயு
பருதிசேயனுமனிருதரிலிலங்கைப்பதிய வீடணனன்றே. (௭௫)

மருளுறுமசுரர்மரபினிற்பிரகலாதன்மாவலியுயர்வாணன்
கிரிமிசையுயருங்கிராதரிற்குகன்பூதலங்களிற்கிளர்ந்துயிர்வதைக்குங்
கருணையிற்கண்டாகருணன்டாவையர்ற்கவினுறுகோபியர்மகஞ்செய்
தருளுறுமறையோர்மனைவியர்சவரியிவரமரர்க்குமேலானார். (௭௬)

ஆதலினிகரிலரசநீயிதனையறிந்தெலாக்கருமமுமகற்றிச்
சோதியாமெனைத்தான்றுதித்துயர்பதத்திற்றுலங்குவாயெனவவன்றொழுது
வேதசாத்திரத்துப்பொருளெனப்பலரும்விதம்விதமாகவேயுரைப்ப
தேதெனமொழியயாதவர்பெருமானுத்தவர்க்கிவைபகர்ந்தனனால். (௭௭)

மருளகலயனுக்கியான்முனுளறைந்தமறையினையவன்பலர்களுக்கு
முறைசெயவவர்தம்பிரகிருதியினுயர்பொருள்விபரீதமாகத்
தரையினிற்பெருக்கியிராசதத்துடனுந்தாமதஞ்சேர்ந்திடக்கெடுவோர்
பரகெதியடைவோர்சாத்திகந்தன்னால்வேதநற்பயனறிந்துய்வர். (௭௮)

சரியில்சாத்திகநற்குணத்தினையடைந்துசரதமாமறையினினிரம்பு
பொருளினையுணர்ந்தென்னடியரானவரைப்புராரிபங்கயன்பொறியிவர்மேற்
பரிவினில்மிகுத்தபதின்மடங்காகுநலனுறப்பற்றியங்கனைத்துந்
திருமகள்மகிழவவரையென்னிடத்திற்சேர்ப்பனென்றிவைபகர்ந்தனனால். (௭௯)

பரமபாகவதராகுமென்னடியார்பாதமார்தூளியாலியானுந்
திருமகளுடனுமென்வயிற்சேர்ந்துசிறந்திடுமெண்டங்கடனையும்
பிரமனுந்துதிப்பப்பவித்திரமாக்கிக்கொளுவனென்றுயரரிபேசக்
கரமதாற்றொழுதுநிகரிலுத்தவன்றான்றுதிசெய்துகழறலுற்றனனால். (௮௦)

கருதவுமரிதாகியவிறையாகுங்கருமுகில்மேனியாவுனை
விரதமாயமர்ந்துவயங்கிடத்தியானஞ்செயுநலன்விளம்பெனமொழிய
நிருதர்வேரறுத்துச்சுரர்கள்கோனிடரைநீக்கினோனவன்றனைநோக்கிச்
சரதமாயுனக்குத்தெரியயானிவணிற்சாற்றுவன்கேளெனப்பகர்வான். (௮௧)

அருவினையகற்றுந்திருப்பதியதனிலாசனமீதிடையமர்ந்து
சரியிலாதுழலும்பிராணவாயுவைநிக்கிரகஞ்செய்யத்தலைகீழா
யிருதயத்திலங்குங்கமலம்க்கமலநிவந்திதழெட்டதாய்மலர
விரவியப்பொகுட்டினமருவணவண்மீச்சோமன்மற்றவன்றன்மீத்தெரிய. (௮௨)

இருதயகமலப்பொகுட்டின்மீதிரவியவன்றன்மேலிந்துமற்றவன்மேற்
சரியில்பாவகன்றனுப்பணின்றிருக்கைநாலுடன்சங்குசக்கரமுந்
திருமகளுடனேவயங்கிடக்கலன்கடிகழ்ந்திடச்சேர்ந்திடுமியானும்
பரனைநற்றியானமியற்றுவோருயர்ந்தப்பதத்தினையடைவரொன்றறைவான். (௮௩)

## வேறு.

ஓங்கியமூலாதாரமாகியெங்குமொளிரிந்தயகமலத்தினுயருமென்னைப்
பாங்காகத்தியானமதுசெய்வார்தம்மைப்பரகதியினடையவிடாவிகற்பமாயத்
தீங்குசெயுமிருபத்துமூன்றுசித்திதிகழ்வனபோலடர்ந்துவருமவைகளெல்லா
நீங்கிடவங்கியற்றவல்லார்கதியிற்சேர்வரொன்றருளவுத்தவன்முனிகழ்த்தலுற்றான்

அருவினைக ளொருவவுனைத் தியானஞ்செய்ய வதற்கடர வடர்ந்துவருஞ் சித்திதன்னை, விரிவுறவீண்டருளுதியென்றறையத்தூயவிமலனவன்றனைநோக்கி மொழியலுற்றான், சரியில்தவ வணிமையுயர் மகிமைநேரி லகிமைதயங்கியகரிமை, தாழ்வில்லாத, பெருமையுறீசத்துவமொண்வசித்துவஞ்சொற்பிராத்திபிராகாமிய மோடிவையெண்சித்தி. (அரு)

இதுவலாவியோகிகட்குமுயற்சியாலங்கியற்றினவை நூறுமித்துவஞ்சொற்குன்றாப், புதுமையுறுமனோசெபநற்காமரூபம்புகலரியபரகாயப்பிரவேசம்வான், பதியினவர் புகழ்ந்திடுசங்கற்பநேரில்சுவசந்திவிருத்தியாக்கினைபாரும்பர், சிதைவிலாக்கிரீடானுதெரிசனஞ்சீர்சிறந்திடுமெப்பிரதிகதாகதியுமாமே. (அசு)

அன்றியுமேதூரசிரவணத்தினோடூரஞ்சிவைகளதுவல்லாற்கிருத்திமத்தி
னொன்றியதுதிரிகாலக்கினத்துவம்பாருவமையிலாத்துவந்துவநேரிலாதங்கோங்கி
வென்றிபுனையும்பரசயம்வான்மீறிவிளங்கியவக்கினியாதித்தம்பமெங்கு
நின்றுலவும்பிரிதினையில்பரசித்தாதியவிக்கினத்தையிவையைந்தும்நெடியதாமே

சீருறுமட்டமசித்தியுடனேகூடும்யோகிகள்செய்தெசசித்தியிதுவுமன்றி
நேரறுகுத்திரசித்தியஞ்சுஞ்சாரிணிறைந்திமாற்சித்தியிருபத்துமூன்றும்
பாரினிவைசெய்குணங்கள்பகரிலண்டம்படியெல்லாந்திரிந்திடுவரணிமைகற்றோர்,
வாரியுறும்புவியின்மகாமூர்த்தியாகிவாழ்குவரால்மகிமையெனுஞ்சித்திசேர்ந்தார்.

புவனமுதலண்டமெலாமணுவதாகிப் போதுவர்நல்லகிமையெனுஞ்சித்தி கற்றோர், ருவமையிலாவானந்தமாகியங்குமுறைவராற்கரிமையெனுஞ்சித்திசார்ந்தோர், அவனிவிணினுறைபவர்கணினைவையெல்லாமறிவர்களீசத்துவமாஞ்சித்தி சேர்ந்தோர், சுவைகளுறுபதார்த்தம்வருவிப்பார்நேரில் வசித்துவமாஞ்சித்திதனிற்றுலங்குவோரே. (அஎ)

பாரினுறுவோர்மனதிந்திரியங்கூடப் பதினொன்றுமுணர்ந்திடுவர்பிராத்தசித்தி, சேருபவர்செனங்கள்பகர்மொழியுநோக்கின் செயலுமறிவார்பிரகாமியமாஞ்சித்தி, சாருமிவரிவையட்டசித்திசெய்யுஞ்சதிர்பினரும்யோகிகள்செய்சித்திபத்தின், வேர்வுபசிதாகமிலாதமர்வர்நேரி னூறுமித்துவஞ்வசித்திவிளங்குவார்கள். (௯0)

மனதுசெலுமிடமதனிற்றாமும்போவர் வயங்குமனோசெபசித்தியடைந்துளோர்க, ணினையுமுருவினைக்கொண்டிடிகடிதிற்செல்வர் நிறைகாமரூபசித்தியுணர்ந்துளார்கள், தனுவைவிட்டுப்பரருடலிற்புகுவர்நேரிற் பரகாயப்பிரவேசசித்திசார்வர், தினமுமவர்வேண்டியதங்கொருங்குநேருஞ் சிறப்புடையசங்கற்பசித்திசேர்வார். (௯௧)

பாரினிடையிச்சையாய்மரணம்வாயாப் பழுதிலாச்சுவசந்தவிருத்திகற்றோர், தாரணியில்நினைகருமமெவருந்தள்ளார் சரியிலாக்கினையென்னுஞ்சித்திசேர்வர், நேரில்வானவர்மகளிர்மகிணரோடு நிறைத்திடுநற்கலவிதனையினிதாய்க்காண்பர், கோரமுறுயோகத்திற்சித்தியான கிரீடானுதெரிசனத்தின்கொள்கைவல்லார். (௯௨)

அண்டமெலாந் திரிந்திடினுந் தகைவாரில்லை யப்பிரதி கெதாகெதியைய டைந்துளோரை, மண்டனினும்வான்மிசையினுறைவோர்சொல்வி னோசைசெ விதனினேற்பர்மருளுற்றேங்கு, மெண்டவர்கள்வியப்புறவேவயங்குகின்ற தூர சிரவணசித்தியயற்றினார்க, டெண்டிரைகொளுததியுறுந்துவரைவாழு முத்தவ விச்சித்திபத்துமென்றுசெப்பும். (௯௩)

ரூத்திரமாகிய சித்தியைந்தின்மிக்க குவலயத்திற்கழிகாலநிகழ்காலம்மெ ன், றத்தியிடைபெழுந்துவிழவருகாலங்க ளறிந்திடுவர்திரிகாலக்கினத்துவத்தை, மெத்திடுவார்வெம்மைதுக்கஞ்சீதளத்தின் மெலியாதுபொறுப்பர்த்துவந்துவத் தின், சித்திதனையுணர்ந்திடுவாரொவருந்தோற்கச் செய்வர்பரர்செயமாகுஞ்சித்திவ ல்லார். (௯௪)

நிரையினெரித் தம்பமுயர் வாயுத் தம்பந் தனையுணரோவாக்கினியாதித்தம் பத்தை, விரைவினிற்சாதித்துவலாரிபிறர்கனெஞ்சைப்பிணித்துத்தம்வசமாக்கும் பெற்றிசெய்வர், சரியிலாதேயுயரும்பரிசித்தாதி யவிக்கினத்தையெனுஞ்சித்தித ன்னைச்சார்வார், மருளொழியுமுத்தவரூத்திரமாஞ்சித்தி யிவையைந்துமெனத்தி ருமாலறைவான்மாதோ. (௯௫)

## வேறு.

பாரினின்வயங்குவிதயபங்கயத்திற்பாவகனுப்பணியிலங்கு
நேரிலாவெனைத்தானினைந்துயர்தியானநிறைந்திடச்செய்துநீயதற்குச்
சோர்விலாதெழுமிச்சித்திகளாயவிருபத்துமூன்றையுந்துறந்து
சீருறவழியாக்கதியினையடைதிசிறந்திடுமெரசவென்றறைவான். (௯௬)

கயவரையடைவோருயர்கதியடையாரொன்பதுகாண்டிநீவானி
ணியல்புறுமடவார்தனிலெழிலுடைத்தாயிலங்கியவுருப்பசியீதின்
மயலினுவினையில்புருருவாக்கபாலமெடுத்துமானமுமிலாதுழன்று
துயருறுமவன்முன்காமயாகத்தைத்தொடங்கியங்கவளொடுஞ்சேர்ந்தான்.

துன்னியவினையாற்காமநோயடையச்சோதியையறிந்திடாதவனை
மன்னிவான்மிசையின்றவர்களோடிணங்கிமருளறஞானம்வந்துதவ
விந்நிலமிசையினிழிந்துமாதவத்தையியற்றியென்பதத்தினையடைந்தான்
மன்னவவதனுலறிஞரோடியைந்துமறவரையொருவெனவறைவான். (௯௮)

## வேறு.

நித்தியமுத்தனுகிநிகரிலாப்பரமனுகும்
வித்தகனியானிவ்வண்டத்துயிர்தொறும்பரந்துமேவி
யெத்தனுவினினுஞ்சேருஞ்சீவன்வேறியான்வேறாகிப்
பத்திசெய்யடியாருக்கென்பதத்தினையளிப்பனென்றான். (௯௯)

உயிருமப்பரனும்பேதமுடனுஞ்சீவனுந்தான்பேதம்
பெயர்வுறச்சீவனுக்கும்பிராணனவ்வுயிர்க்கும்பேதம்
அயர்வுறுக்கைக்குமற்றைக்குரம்பைக்கும்பேதமொக்கு
மியல்புறீசர்க்கும்பேதமிவைபஞ்சபேதமையா. (௪௦௦)

சுதந்தரப்பரமனுவேனியான்சீவத்தொகுதியெல்லாம்
விதந்தருகுரம்பையின்கண்ணுறழ்வினையுடனுமேவு
மிதந்தருமீசனேடிவ்வுயிரொலாமேகமென்ப
ததந்திரமிதனைச்சொல்வார்பிரமையினழுந்தியம்மா. (௪௦௧)

யீசனுமுயிருமேகமென்பர்கள்மாலையாலே
மாசறுவிழியர்வெள்ளைவளைமஞ்சணிறமாமென்று
பேசுறுபிரமைபோலப்பிரட்டன்றிமெய்மையாகா
வாசிலென்பதத்தினெய்துஞ்சீவன்வேறியான்வேறாமே. (௧௦௨)

மாயனாகியயான்மாயமியற்றலான்மனதிலென்மே
னேயமின்மாந்தர்சீவன்பரனெனநிகழ்த்துவார்மெய்த்
தூயனாகியவென்பத்தர்துடருமிம்மருளையெல்லாங்
காய்குவருயிர்வேறியான்வேறெனுமறைச்சொற்கள்கண்டே. (௧௦௩)

ஊழ்வினையுறுதலாலேயிழிகுலத்துதித்துநண்ணுங்
கேள்வியுமிலராய்வஞ்சங்கிளர்ந்திடுகொலைஞரேனும்
வேள்விநாயகனுமென்பேர்விளம்பிடும்பத்தராயிற்
றாழ்விலாதுயர்வர்பாவந்தழலிலிந்தனம்போற்றீய. (௧௦௪)

அரியதாமென்பேருண்ணாதருந்தவஞ்செய்வார்போலக்
கரியவாமலகம்வெள்ளைச்சாரைகாணவுடதங்கள்
பரிவொடுமருந்தியோகம்பற்றுவார்பசுமண்பாண்ட
மருவுநீர்போலமாசற்றென்பதத்தடையார்மாதோ. (௧௦௫)

வேறு.

பரனுடைமையாகியசீவன்றனைத்தான்களவுசெய்யப்பாபதன்ம
விருதளையிட்டெழுமதில்சூழியாக்கையெனுமிருஞ்சிறையிலிருத்தியொவ்வாக்
கருமனைவர்புறங்காப்பக்கடக்கவொண்ணாக்காவலனைக்கடியதூய [சேரார்.
குருவைமுன்னிட்டுடையவன்பாற்றிருடுபொருள்கொடுக்கிலென்றுஞ்சிறையிற்

சீவனெனுமாக்கையாம்பவக்கடலிற்குரம்பையெனும்வங்கஞ்சேர்ந்து
காவலினாற்கூட்டுபொருளறியுமைவர்சூழமனக்கால்கொண்டேக
மேவுபரனாகியமீகாமனுடன்றேடுமிருபொருளும்வீட்டுக்
காவதிலாதலினடைவரரிதீவுக்குறினழியாச்செல்வம்வாய்க்கும். (௧௦௭)

சீவனெனும்பிணியாளர்க்கருநாமமருந்தைமனஞ்சேர்த்தாதார்க்கிந்
நோவுகெடுமெவுடதத்தைநுகராமல்விபரிதமாம்பலவுந்தின்று
லாவிவிடுபவன்போலவயலிதரதேவதையையடையுமாகிற்
பாவமுறவெரிநிரயத்தழுந்துவருத்தவமனயான்பகர்தன்மெய்மை. (௧௦௮)

துயிலின்வருகனவெலவுங்கண்டனபோற்சொல்லிடினுமெய்மையாகாச்
செயலெனநாரணனுமென்சீரறியார்மற்றொரிறைதெரிந்தோமென்கை
புயலினெழுந்தடித்தவிர்போற்பொருளாகாதறிவறவேசெனனத்தாழ்வ
ரியல்புறுமென்னடியர்பிறப்பிறப்பொருவவென்பதத்தினிலங்கிவாழ்வர். (௪௦௯)

கழிபிறப்பின்வாசனையின்கலராகிச்சனித்ததனைக்கடந்துவேத
வழியொழுகாதவரொனினுமாலாகுமென்னடியார்வசத்தராகி
னழலுறவேவருணமிலாவாடகமேருவினவிர்மேலானபோன்று
பழவினைகளறப்பரமபாகவதராகியென்றன்பதத்திற்சேர்வர். (௧௧௦)

இருபுயத்திலென்னிருகைத்திகிரிவளைக்குறியெழுதியளிகமீதுக்
குரியதிருமிருத்திகையைநாபிமுதற்கேசாந்தமொளிரச்சாத்திக்
குருவெனவந்தியானறையுமுபதேசக்கொழுகொம்பைப்பற்றுவார்கள்
சுரரிறைஞ்சும்பவுத்திரராய்த்துலங்குவரென்பதத்தினிற்றம்மரபோர்சூழ. (௧௧௧)

## வேறு.

சதுமறைநெறியின்தருமமெய்மலியுஞ்சற்பிராமணர்கடாமெனினும்
விதியினையுதவுமெனையடையாரேற்சுணங்கனிலெரித்தறன்விடுத்த
பதகரைநிகர்ப்பர்சுவாவினுக்கட்டபாபியரெனினுமென்பத்தர்க்
கிதவராயொழுகினவர்களையிமையோர்துதித்திடுமிருபிறப்பாளர். (௧௧௨)

பிரகிருதியினினுறுமகத்துவமதனினெழும்பிறிதிலங்காரஞ்
சரியிலாதவணிற்றயங்கியேயமர்ந்தபஞ்சதன்மாத்திரைதன்னின்
மருவுசத்தத்தினிலங்குமாகாசமற்றதிற்பரிசமின்பவன
னுருவினைத்தருமற்றதனினக்கினிதானுதித்திடுமதுரசங்கொடுக்கும். (௧௧௩)

இரதமீதுதிக்கும்பயமதிற்கெந்தமெழுமதினவனிவந்திலங்குந்
தரையினில்விராயாமதினுறுமடிசிலதின்வயங்கிடுமெழிற்சரீர
மரனுறுமிறுதியுகத்தினிற்றலைகீழாகியேயிவையெலாமடங்கிப்
பிரகிருதியினிலைக்கியமார்சிவன்பிரானெனுமென்னிடத்தமரும். (௧௧௪)

ஆதலிற்குரம்பையழிந்திடச்சீவனணைந்துமென்னிடத்தின்வேறாகும்
நீதியீததனாலிதரதேவதையைநிந்திக்கத்துதித்திடவேண்டாஞ்
சோதியாகியயானருளியதியானந்துலங்கவென்பதமுறுகெனமா
லோதவுத்தவனுன்னடியினிற்பூசைசெயுந்திரனுரையெனமொழிவான். (௧௧௫)

எவைகளுமொடுங்கவழிவிலாதிருக்குமெனைநலனுறுமடியார்கள்
அவனியிற்றிருவாராதனஞ்செய்யுங்கிரமம்யானறைந்திடக்கேட்டி
யுவமையற்றுயரும்வைதிகமிசிரந்தாந்திரிகம்மெனவுணர்ந்தோர்
நவிலுமிம்மூன்றுமறையவரோதிநவையறப்பூசனைசெயலாம். (௧௧௬)

அன்றியுங்காயத்திரிதனக்குரியோர்தாமுமிம்மூன்றையுமறிந்து
மன்றல்சேர்மலராலருச்சனைசெயலாமந்திரமிலாதசூத்திரர்தா
மென்றனையிறைஞ்சியிணையில்பூசனையையியற்றலாந்தாந்திரிகத்தால்
நன்றியைமறவாதிலங்குமுத்தவகேளெனப்பினுநாரணனறைவான். (௧௧௭)

அரியெனுமியான்றானமர்ந்திடுந்தலங்களாறுளவதற்குயருலகிற்
சரியிலாதிலங்கும்பிரதிமையிலுங்குந்தண்டிலஞ்சித்திரமனலோ
னிரவிசாத்திகத்தாலெழிலுறுமறையோரிதயமீதிவைகளாறாகும்
பரிவினாலவைபூசனைசெயுநலனைப்பகர்ந்திடக்கேட்டியென்றறைவான். (௧௧௮)

இரவியாமெனக்குநிகரில்பாயசமுமிழுதுடனிலங்கிடப்படைக்கச்
சரியிலக்கினிக்குமிவையினைக்கொடுத்தேசாத்திகமறையவர்தமக்குப்
பரிவொடுபதார்த்தமறுசுவையடிசிற்பழுதறநுகர்ந்திடவளிக்க
விருதயமிசையினெழுதுதண்டிலத்தினிலங்குவேறனைக்கிவைமனத்திய. (௧௧௯)

பிரதிமையெட்டுவகையுளசிலைபாதவமுயர்பீதகமிலங்க
வரையுமோவியந்தாம்பிரமணற்குவைசீர்வயங்கியவிரத்தினமரைக்கத்
திரள்மலையசமீதெட்டுமென்மூர்த்திதிகழ்ந்திடுந்திரப்பிரதிமையின்
மருவுவேன்றனக்கிங்கெதிர்முகமாகிவடக்குறக்கிழக்குறவமர. (௧௨௦)

சுத்தமுற்றிடநல்லயத்தினிற்படிந்துதோத்திரவடிவமுந்துலங்க
நித்தியகருமமுடித்ததற்பினரினிகரிலாவாதனத்தமர்ந்தே
யத்தியினமொன்மந்திரத்தங்கநியாசமுங்கரநியாசமுமொண்
பத்தியினடத்தியிடையினினென்றும்பவமுறவெழுந்திராதமர. (௧௨௧)

மந்திரமதிற்சீவாத்துமாபரமாத்துமனிடத்தமைந்திடவைத்தே
யந்தமுற்றிடநற்பிராணவாயுவினாலாக்கையையுலர்த்தியக்கினியில்
வெந்திடவெரித்தங்கமுதமந்திரத்தால்விளங்கிடநனைத்தெழிலுருவம்
வந்திடவகுத்தவுடலினிற்சீவன்வயங்கிடமீளவும்விடுக்க. (கஉஉ)

அனந்தரஞ்சுசியாலமர்ந்தங்குற்றளவிலயத்தினிலருச்சனைசெய்து
மனந்தனில்மகிழ்வார்சோடசவுபசாரமுங்கொடுத்திலங்குவத்திரங்கள்
புனைந்துநற்கலன்களணிந்துசந்தனமும்பொருந்திடத்தாமமுஞ்சாத்தி
யனந்தஇகிருதங்குளநல்பாயசமுமழகுறக்களிப்புடன்படைக்க. (கஉ௩)

வெறிகமழ்ந்திடவேவயங்குகற்பூரம்விளங்கடைக்காயிலையமுத
நெறியுறப்படைத்துமகிழ்வொடும்பிரதெக்கணமுறநிலத்திடைவணங்கிப்
பிறவியங்கடலினலைந்திடாதெடுத்துன்னடியினிற்பிணையெனவேண்டி
மறையவர்தமக்குநலபிரசாதமகிழ்வொடுமருந்திடவளிக்க, (கஉ௪)

சரியிலாவரியாமெனச்செவித்ததற்பின்றழ்மிருதயத்தினினியான்முன்
மருவவேவிடுத்துப்பிரதிமைதனையோர்வயங்கியபெட்டியினமைத்துப்
பரிவுடன்பவங்களறப்பிரசாதமருந்தியபின்னரிற்பழிப்பி
றிருவினின்மகிணனானவென்சரிதைதினந்தினங்கேட்பரென்னடியார். (கஉ௫)

தரையினிவ்வகையினெனையருச்சிப்போர்சரியிலாவென்பதந்தன்னின்
மருவுவரெனவேமொழிந்தமாலறைவான்மண்மிசைத்திரமுறவென்னை
யருமறைநெறியாற்பிரதிட்டைநிறைத்தங்கழகியகோபுரமேயிச்
சரியில்மண்டபங்களமைத்துநற்பூகந்தயங்கியகிராமங்களளிப்பார். (கஉ௬)

நிருத்தநாரியர்கள்பணவதாளங்கணிறைந்திடும்பல்லியமெவையு
மருத்தியான்மலியவமைத்துயர்கீதமடைந்திடச்செய்குவர்ஞானக்
கருத்தரானவராய்க்குறைகொளாலயங்கள்கவினுறக்கட்டுவோரவர்க்குத்
திருத்தமாய்ச்செய்யென்றுரைப்பவர்கண்டுமெகிழுவாருயர்கதிசேர்வார். (கஉ௭)

சற்குணத்தினர்முன்னமைத்திடுங்கோயிறனையழிப்பவரதிற்றனங்க
ணற்கிராமங்கள்கவர்ந்துபூசனையைக்குறைத்தவரவர்க்கிவைநவிலுந்
துற்குணரிதனைக்கண்டுகண்களிக்குந்தூர்த்தர்கள்மேல்வருநரகிற்
செக்கிடைமுதகிரணன்வாழ்தினமுமடைந்துபின்கிருமியாய்ச்செனிப்பர்.

ஆதலினறிஞவுனக்கியான்சரதமடைந்திடுந்தத்துவவழியா
லோதினேனிதனைவளர்த்தெனைத்தியானமுவப்பிருற்செய்துபூசித்துச்
சூதகன்றிடுநற்குணத்தினராயிற்சூத்திரனுடனரிவையர்க்கும்
போதகமுணாத்தியுயர்குலவொனினும்புன்மையராயிடிற்றவிர்த்தி. (கஉ௯)

சதுமறைநெறியிற்றவறிலுத்தவநீசனவுபகாரமாயேகி
வதரிகாச்சிரமத்தமர்ந்தெனைநினைந்துமாதவமியற்றியபினொன்
கதியினிலுறுதியெனவவணிறைஞ்சிக்கண்ணினீர்விழவலம்வந்து
விதியினையருள்வோனடியினிற்சிரத்தையுறுத்தியேவிடைகொடுபோனான்.

மரவுரியுடுத்துச்செபவடமெடுத்துவதரிகாச்சிரமத்தின்வைகி
யருளுறுமுனிவர்மகிழ்ந்திடத்தன்பாலடைந்திடுஞ்சற்குணத்தவர்க்கு
மருளகன்றிடவேயிதவுபதேசமகிழ்வொடுமெருளியங்கவனை
யரிபதத்தடைவித்தறிவுறவநேகர்தினமவணிருந்தனனம்மா. (கஙக)

திருமகள்கொழுநனவனியினியற்றுஞ்செயலெலாகினைந்துதன்னிதய
முருகநற்கணினீர்விழவழும்நகைக்குமோடியேநடித்திடும்பாடு
மிருகரங்குவிக்குந்துதித்திடுநிற்குமிருக்குமானந்தம்வந்தெய்தச்
சரியிலுத்தவன்றன்றவத்தினேர்மகிழத்தத்துவமூர்த்தியைச்சார்ந்தான். (கஅஉ)

உபதேசப்படலம் முற்றிற்று.

ஆகப்படலம். சகூ-க்குக் கூடிய திருவிருத்தம் ஙஅஙரு.

• ஸ்ரீ




விஷ்ணுமயம்.

கஉரு - வது

# வைகுண்டப் படலம்.

மூலமென்றழைத்தகயத்தின்முன்கயத்தின்முந்திளவனியையிடக்கக்
கோலமாய்வயங்கியிரணியனறைந்தவெழுவினிற்கோளரியாகி
வேலையினமிழ்ந்திவிழுதலுமதனைவிரைவினிற்கமடமாயெழுந்தே
யாலமாவிடத்தையருந்தினேனிடரையடர்த்தவனடியடைந்துய்வாம். (க)

எதுகுலத்திறையுத்தவன்றனக்கன்பாலிதவுபதேசத்தையருளி
வதரிகாச்சிரமத்தடைகுதியெனவேவிடுத்தபின்வங்கம்வந்துலாவு
முததிசூழ்துவாரைநகரினுற்பாதமுறுதலாலேபிரபாசப்
பதியினிலடைந்திப்பவமறத்தானம்பலகொடுத்திடவென்றுரைத்தான். (உ)

அரியிவைமொழியக்கேட்டிடுமரசனருள்செறியுக்கிரசேனன்
சரியிறேவகிமின்சூரசேனன்சேய்தன்னுடன்றுவரையினமரக்
கரிபரியிரதமடைந்திடப்பிரபாசப்பதியிற்கடிதேகி
மருளறமறையோர்க்கெண்ணிலாத்தானம்வழங்கியேயுபவசித்தனரால். (ங)

விதியினையருள்வோனுடன்பலதானமளித்தவர்விழுமியதாமிப்
பதியினினுபவாசத்தினையியற்றிமறுதினம்பாரணையருந்தி
யெதுகுலத்திறைவனிழைத்தமாயையினாலெலவருமதிமயக்குற்று
மதுவினைப்பருகிக்கெருவிதராகிமதமுறமிகநகைத்தனரால். (ச)

சாத்தகிவதனநோக்கிநற்கிருதவன்மனன்சாலவுநகைக்க
நேத்திரஞ்சிவந்தங்கவனிவனென்னைநீநித்தமுறுவலேதென்ன
வார்த்திடும்பூரிசிராவின்வாளதனாலன்றமர்க்களத்திடைமடிவை
பார்த்தன்மற்றவனைத்துணித்திடப்பிழைத்தாயென்றுபல்விழிவுகள்பகர்ந்தான்.

தீயெனவிழிகள்சிவந்திடக்கிருதவன்மனனிவைகள்செப்பிடலு
மாயவனனுசனவன்றனைநோக்கிமதிப்பிலாநீசுயோதனனு
நாயகன்படவுன்னுடல்கொடுபிழைத்தாய்நாய்நலனுன்னினுமென்னப்
பேயினர்போலுமனைவருமப்பிதற்றிப்பெருஞ்சமர்விளைத்தனரன்றே. (சா)

ஒருவர்கட்கொருவர்விபரிதமாகவிழிவுகள்பலபலவுரைத்தங்
கரிதருகுமரராளப்பிலாதவருமரசருஞ்சிறுவருமடர்த்தே
யெரிசினமுறவெங்கரிபரியிரதமெதிர்ந்திடக்கணைமழைசொரிந்து
குருதிகள்பெருகக்குறைத்தலைநடிப்பக்குன்றுபோற்பிணமுறமடிந்தார். (௭)

வேலையில்முசுண்டியெழுமழுச்சூலமிடிகதையிவையெலாம்விடுத்துக்
காலமாமுகில்போற்கணையெலாம்பொழிந்துகரிபரிக்குலமெலாம்வதைத்தே
யாலமாவிடமேநிகர்த்தெதிரரசரவனியின்மடிந்திடக்குருதி
வேலையின்விழவவ்வுவரிநீரனைத்துமருணமாய்மிடைந்தெதிர்ந்தனவால். (௮)

சிறுவரைத்தாதைவதைத்திடத்தனையர்சிறந்ததந்தையர்களைச்செற்றார்
விறலுறுமனுசர்தமக்குமுன்னவரைவீட்டினர்களிட்டரைச்சேட்டர்
கறைநிறைந்திடவேதடிந்தனர்தலைவர்தமையவர்கீழினர்களேந்தா
ரிறுதியுற்றிடுநாளடைந்திடச்செய்யுங்கருமமுற்றிறந்தனரம்மா. (௯)

பரிகரியிரதங்குழுவறவடித்துப்படியினிற்பூதாதியராகி
வரிசிலைவிசிகமயிலெழுமுசுண்டிமழுவுடன்படையெலாமாளக்
கரமுறப்புடைத்துப்பொருபவர்முனிவர்கழறியசாபத்தாலயத்தைத்
துருவிடும்பொடிவாட்கோரையாய்க்கடலிற்றுலங்கிடவதுபறித்தறைந்தார். (௰)

கோரைவாளெலாரும்பறித்தெதிர்ந்தறையக்குருதிநீர்பெருகிடச்சிரங்கள்
பாரின்மீதுருளமடிந்திடக்கண்டுபங்கயச்செல்விதன்மகிண
னேருறுமிராமனுடன்விலக்கிடவேயிவர்கள்மேலவரெதிர்ந்தடர
நேரிலக்கோரையதனிலவரைநீறுசெய்தனனுரோகணிசேய். (௧௧)

எதுகுலத்தரசரொருவருமிலாமலிறந்திடக்கோரையால்வதைத்துக்
கதுமெனவறிவுநிறையயோகத்தாற்கவினுறுமனந்தனேயாகிச்
சதுமுகன்முனிவர்துதிக்கவைகுந்தந்தனிலவன்சார்ந்திடத்திருவின்
பதிமகிழ்ந்தவனிபாரமோவினதென்றொருபொதிர்பாதவஞ்சேர்ந்தான். (௧௨)

மங்குன்மீதெழுந்தவிளங்கதிரொனமாமணியுறுமவுலியும்வயங்கச்
செங்கையின்வளையுந்திகிரியுந்திகழச்சிறந்தநற்கலன்களுந்தயங்கப்
பங்கயத்திருவுமுரந்தனிலிலங்கப்பசும்பொனிறுடையுமொளிரக்
கங்கையன்றுதித்தபதத்தினூபுரங்கள்கவினுறக்கலவைகள்கமழ. (௧௩)

தாமரைமலர்கண்மலிந்தசீமூதந்தயங்கியபோற்றிருமேனி
காமுறுத்திடவச்சிரமணிக்கடையங்கரமிசைக்கவினுறத்திருமால்
வாமனுருவிற்றெக்கணபாதம்வயங்கிடப்பிப்பிலநிழற்கீழ்
சோமனுண்வதனத்தெழுமிளமுறுவறுலங்கவீற்றிருந்திடும்வேலை. (௧௪)

புகழுடையரிதன்னடியிணையவன்செய்மாயத்தாற்ககமெனப்போந்து
நிகரில்மாதவர்களறைந்தசாபத்தால்நிறைந்தவவ்வுலக்கையையராவ
மிகுமிரும்பதனின்முனையதாயொளிகொள்விசிகத்தைக்கிதாரன்வீட்டிடவுங்
ககனமன்றளந்தகழலினங்குட்டத்தழுந்துறத்தைத்ததக்கணையே. (௧௫)

பறவையென்றுணர்ந்தேயுயர்ந்திடுசிலையாற்பகழியையெய்திடுங்கிராத
னிறைவனென்றறிந்துவணங்கியுன்றனக்கின்றிடர்செயுமேழையேன்றன்னை
மறுவின்மாதவனேவதைத்தியென்றுரைப்பமகிழ்ந்தரிநீதனுவுடனே
யுறுசுவர்க்கத்தென்றுரைத்திடவிமானத்தவனமர்ந்தும்பரினுற்றான். (௧௬)

தரையினிற்பாவமலிந்திடுங்கிராதன்சரீரமோடுயர்சுவர்க்கத்தின்
மருவிடவருள்செய்யரியணிதுளவமணநெறியறிந்துதாருகன்றான்
பரியுறுமிரதமிலங்கிடக்கொணர்ந்துபடிமிசைப்பணியவத்தேரை
விரைவினிற்ககனத்துயர்த்தியங்கதின்மேன்மேவினன்மேனியுந்திகழ. (௧௭)

செயலுறுமுகில்போற்றிகழ்திருமேனியுடனிரதத்தினிற்சேர்ந்த
வியல்புளவரிதன்பிதாவுடனனைக்குமேகினீதாருகவிவணி
னுயரொதுகுலத்துமனர்சினமுறவேயொல்லையின்மடிந்ததும்யானுங்
கயிலையைநிகர்முன்னவனும்வைகுந்தத்தடைந்ததுங்கழறுதியென்றான். (௧௮)

கடலினீர்த்துவரைதனையழிப்பதன்முன்கடிதினினவனுறைந்தவரை
யிடமுறுமதுரைநகரினின்விடுத்தங்கநிருத்தன்மதலையையிலங்கு
முடியினைக்கவித்தியெனவவணடையும்விசையனுக்கிவைமொழியென்று
படியினையளந்தபராபரமூர்த்திபரிவினுற்பகர்ந்தனனம்மா. (௧௯)

தனைநிகரிலாதவிறையிவையருளத்தாருகனிடருறவிறைஞ்சி
யுனையுநான்பிரிந்தீண்டிரோனெனத்திருமாலியானெங்குமுளனெனவுன்னிப்
பினரிநின்பதத்தையடைகுதியிவைபோய்ப்பேசுதியெனவவன்றொழுது
துணியுறுநயனமயநிறைந்திடவேதுவரையினேகினனன்றே. (௨௦)

தாருகன்றனக்குவிடைகொடுத்தருளிச்சங்கொடுசக்கரந்தரித்த
வாரியணிரதமிசையினின்வயங்கியமரர்கண்மலர்மழைபொழிய
நீரணிசடையோன்வலாரியெண்கண்ணனிகரிலாமுனிவர்கடுதிப்பக்
காரிடையொளிர்மின்னெனக்கடிதேகிக்ககனமோடண்டத்தைக்கழிந்தான். ()

முரசுகாகளங்கடிமிலைதுந்துமிகண்முழங்கிடநாதகீதங்கள்
பிரசமென்மொழியார்பகர்ந்திடத்தீபம்பிறங்கிடத்தூபமுநிறைய
விரசைமாநதியைக்கடந்துபேரொளியாய்விளங்கியவைகுந்தத்தெய்திக்
கரைசெயாக்களிப்பிற்பரமபாகவதர்கைதொழவீற்றிருந்தனனால். (௨௨)

அவனியிற்பாரமகற்றியதிருமாலழகியசரீரமோடிலங்கி
யுவமையில்சனந்தன்முதலினோர்துதிப்பவொளிதிகழுயர்பதத்தெய்தத்
துவரையிற்கடிதினடைந்ததாருகன்றன்சூரசேனன்சுதனுகிப்
பவமறுமன்னன்மனைவியோடிரங்கப்பணிந்துநின்றிவைபகர்ந்தனனால். (௨௩)

எதுகுலத்தரசர்மதுவினைப்பருகியெதிர்ந்துபோர்செய்திறந்ததுவுஞ்
சதுமுகன்றாதையலாயுதனுடனுந்தயங்கியேயுயரும்வைகுந்தப்
பதியமர்ந்ததுவும்பகர்ந்திடக்கேட்டுப்பருவரலுறுவசுதேவன்
கதுமெனமனைவியுடன்விழுந்தரற்றிக்கவினிறும்பதியையோவினரால். (௨௪)

திருமகள்கொழுநனருளியமொழியைச்சிறந்திடுந்தாருகனுரைப்பச்
சுரர்பதிமதலையிரங்கிமெய்யுளைந்துதுயருறுமுக்கிரசேன
னிருபனெண்ணிலாதவரிவையர்குழுஉக்கணிகரிலாவநிருத்தன்மகனுஞ்
சரியில்வச்சிரனிங்கிவருடனொருவச்சாகரநகர்பரவியதால். (௨௫)

உததிநீர்துவரைதனையழித்திடலுமுக்கிரசேனமன்முதலோர்
மதுவினைப்பருகிக்கதமுறப்பொருதுமாண்டவர்தங்கள்பாலெய்தக்
கதுமெனவிறந்தோர்மனைவியர்பலருங்கனலிடையவரொடுமெரிந்தார்
விதியினையருளும்விமலனைப்பயந்தவேந்தனுமனைவியுமிரங்க. (௨௬)

தீவமுறுவிதர்ப்பன்றவச்சுதையெவருஞ்சரியிலாவுருப்பிணிமடந்தை
யுவமையில்பதினாறாயிரத்தொருநூற்றேழெனுந்தோகையருடனே
யவனியன்றளந்தவரிதனைநினைந்தங்கனலிடைவிழவொருவடிவாய்க்
கவினுறுகரனாலிலங்கவைகுந்தத்தடைந்துமாலுரத்தினிற்கலந்தார். (௨௭)

அனந்தனுய்வயங்கும்பதத்திடையடைந்தவலாயுதனடியிணையன்பால்
மனந்தனுணினைந்தங்கிரேவதிமுதலாமனைவியரெரியிடைவிழுந்தே
சனந்தனுஞ்சனகாதிபரும்வாழ்பதியிற்சார்ந்தனருக்கிரசேனன்
கனந்தனைநிகர்த்தவரியினைநினைந்தாண்டியெருமியோகத்தினிற்கழிந்தான். (௨௮)

அரியினைநினைந்தங்குயருமியோகத்தாலவனடியடைந்திடமறித்த
தருமமெய்யுறநீடரணியையாண்டசரியிலாவுக்கிரசேன
நிருபனோடவன்றன்மனைவியர்பலருநிறைந்தெரிகனலிடைவிழுந்து
சுரருலகத்தினடைந்தனர்சுவர்க்கத்தமர்ந்தவர்தோத்திரஞ்செய்ய. (௨௯)

சுரர்முனியறைந்ததியானயோகத்தாற்றுலங்கியசூரசேனன்சேய்
மருளகன்றிடுதேவகியுரோகணியோடியாக்கைமண்மிசையிறந்திடத்தந்
திருமகனெனவேவயங்கியவரிதன்பதத்தினிற்சேர்ந்திடவிசைய
னெரியிடையவரையிடுதலுமடிந்தோன்மனைவியரவரொடுமெரிந்தார். (௩௦)

நந்தனுமசோதையெனுந்தவத்தவளுநற்சுதனாகித்தம்மில்லின்
வந்துபேயுயிரைநகில்கொள்பாலுடனும்வாங்கிவெங்குவலயாபீடத்
தந்தியைக்களைந்துமருளுறுகஞ்சன்றனைவதைத்துயர்ந்தசக்கரனைச்
சிந்தைசெய்தியோகமுறவுடற்றனையினிறந்திடக்கதியினைச்சேர்ந்தார். (௩௧)

பாரினின்மடிந்தோர்தனக்குயர்விசயன்பயந்திலநெறியினாலளித்துத்
தாருகனுடனேயரியமர்ந்திருந்தசரியில்பிப்பிலத்தடியெய்தி
யாரியனவன்வீற்றிருந்திடுங்குறிகண்டளப்பிலாவிடரொடுநயன
நீர்சொரிந்திடவாண்பிறைஞ்சியவிசையனுளைந்துளைந்திவைநிகழ்த்தினனால். (௩௨)

மடுவுறுவசியின்வாயுசேய்மடியாதரியெனவயங்கியுந்தீயோ
னிடுவிடவனத்தையாம்பொசித்திறவாதெதியெனவிரந்ததுநுகர்ந்துங்
கொடியனுமகதன்மடிந்திடவுகிராற்கோரையைக்கீறியங்கெறிந்துந்
துடியிடையுடையதுரோபதிமருங்கிற்றுயில்வளர்ந்திடும்படிகாத்தாய். (௩௩)

கொடியமாமுனிவன்விடுத்திடுபூதங்குறுகியேயெமைவதையாமல்
விடசலம்வகுத்துவிலக்கிடநடுவன்றனையவன்வினைவினின்விடுத்தா
யிடருறுமெமக்காயிழிவெனநினையாதிணையிலாத்தூதுவனாகி
யடலரவுயர்த்தோனிடத்தினிற்சென்றைந்தூரினையன்றுவேண்டினையால். (௩௪)

ஆதியாயனந்தவண்டமுன்னிடத்தினமைக்குநீயடையலரவியச்
சூதனுயெனக்கன்றிரதமூர்ந்துயருஞ்சுரர்நதிசுதன்றன்மேன்முனிந்தே
யாதவனிகராந்திகிரியையெடுத்தாயறனிலாப்பகதத்தன்விடுக்கத்
தீதுறவடரும்படையினைத்தடுத்துச்சதாயுவின்சிரசினைச்சிதைத்தாய். (௩௫)

நிகரில்காண்டீபத்துடனியானன்றுநெருப்பிடைவிழுந்திடாவண்ணந்
திகிரியினிரவிதனைமறைத்தறனில்செயித்திரதனைச்சிதைப்பித்தாய்
பகலவன்குமரன்பணியினான்மடியாதிரதநல்லுருளையைப்படிக்கீழ்ப்
புகவெழிலடியாலழுத்தியங்கவனைப்போரினில்வதைத்திடச்செய்தாய். (௩௬)

பாரினினின்றசுயோதனன்மடியப்பவனன்சேயுய்ந்திடும்படிநின்
னுருவிற்கரத்தையடித்துலகெல்லாமுதவினைகுரககதத்தாமா
வேரியங்கமலன்படைதொடுத்தெதிர்ந்தங்கபாண்டவமென்றுவிட்டிடயாந்
தாரணிமிசையினிறந்திடாதொளித்துக்களைகணாயிடரினைத்தவிர்த்தாய். (௩௭)

அத்திரக்குருவின்மகன்விடவெழுந்தவயன்படையவனியிற்கிடத்து
முத்தரையுதரக்கருப்பநற்குமரனாகவேயொளிகொளுன்பதத்தால்
மெய்த்தவர்மகிழமிதித்துநீயெங்கண்மரபினைவிளக்கியசோதி
யத்தவுன்னடியோமுனைப்பிறிந்திவணினடையலமென்றரற்றினனால். (௩௮)

அவனியிற்பரமன்மிதித்திடுமடியின்குறிதொறுமார்வமுற்றிறைஞ்சித்
துவரையிலமர்ந்தவிருத்தநாரியர்கடுலங்கியதாதியருடனு
முவமையில்விசயன்மதுரையிற்புகுதவொல்லையினேகலுங்கிராதர்
பவமுறவடர்ந்தவரிவையர்திரளைப்பற்றியேவரையினிற்சேர்ந்தார். (௩௯)

வசையுறக்கிராதரரிவையர்திரளைவவ்விடமறுவில்காண்டீபம்
விசையனுக்கவணின்வளைத்தெயும்வல்லனஃகிடவவன்மெலிந்தநிருத்தன்
சுசியுறப்பயந்தசுதனொடுமேகித்துலங்கியமதுரையினெய்திச்
சசிதரணிடரைத்தவிர்த்திடும்பரமன்றாளிணைநினைந்திரங்கினனால். (௪௦)

எதுகுலமரபின்வயங்கநிருத்தன்பயந்திடவிலங்கும்வச்சிரனை
மதிலுயர்ந்திடவேவயங்கியவடமாமதுரையாண்மன்னவனாக்கி
விதிநிகர்மறையோர்நிகரிலாச்சுருதிவிளம்பிடமவுலியைச்சூட்டி
யுததியிலனந்தன்மிசையமரரிதன்னுளத்துறவமர்ந்தனன்விசையன். (௪௧)

## வைகுண்டப்படலம் முற்றிற்று.

ஆகப்படலம் ௪௭ - க்குக்கூடிய திருவிருத்தம் ௩௲௭௬.

ஸ்ரீ

விஷ்ணுமயம்.

௧௨௬ - வது

# மார்க்கண்டப் படலம்.

மாசிலயோத்திமதுராபுரிமாயா
காசியுயர்காஞ்சிகவின்சேரவந்திநக
ரேசில்கடற்றுவரையோடிவ்வெழுநகரி
னாசகலமுத்தியருளச்சுதன்பாதம்பணிவாம். (௧)

வேறு.

அவனியின்பாரமகற்றியேயரிதற்சோதியையடைந்தனனென்றே
தவர்வியப்புறநற்சுகமுனியுரைப்பத்தனஞ்செயனருள்சுதன்குமரன்
பவழுறவுரோமம்பொடிப்பவானந்தப்பயமிருவிழியினிற்பொழியச்
செவியிடையமுதமடுத்தெனக்கேட்டுமகிழ்வுடன்செப்பலுற்றனனால். (௨)

அண்டமெண்ணிலாதவுதரத்தினடக்குமற்புதன்மாயனென்றறைந்தாய்
யெண்டவவவன்றன்வயிற்றிடைப்புகுந்தேயுணர்ந்தவராரெனவிசைப்ப
முண்டகநிகராமுனிவன்மார்க்கண்டன்முகுந்தன்றனகட்டிடையெய்திக்
கண்டனன்புவனமெவைகளுமதனைக்கழறுவன்கேளெனவறைவான். (௩)

மாணவனுகியிலங்குமார்க்கண்டமுனிபொருந்தியமுஞ்சிவயங்க
வேணியைத்தரித்துச்சீரையைப்புனைந்துவிழுமியசெவவடந்திகழப்
பாணியிற்குசைநற்கமண்டலஞ்சேரப்பழுதகலுழையுரியொளிர
வாணியாயுயரச்சுதனவனடையவருந்தவம்புரிந்தனனம்மா. (ச)

...சைமிசையினிலங்கியவிமவானெனும்வரையெழில்கொளவதனுக்
குத்தரதீரந்தனிலயமிகுத்தபுட்பகத்திரைநதியோங்குஞ்
சித்திரச்சாலையெனப்பெயர்படைத்துச்சிறந்திடுமாச்சிரமத்தின்
அத்தியிற்றுயில்வோன்வரத்தவம்புரிந்தானறுமனுவந்தரங்கழிய. (ரு)

அரியமாதவமார்க்கண்டனுமளப்பில்காலங்களகன்றிடச்செய்வான்
சுரர்பதிவிடுக்கவருமதன்வசந்தன்றாயகெந்தருவர்களரம்பை
யுருவசிமுதலோரடைந்துதஞ்செயல்கள்விரித்திடவுயர்தவன்விழிக்க
வெருவியங்கவன்றன்றவத்திறற்பாறிமெய்சுடவலாரிபாலடைந்தார். (சு)

அரிதிருப்பெயரையொருமைநெஞ்சிடையினழுத்தியவறிஞன்மார்க்கண்டன்
சுரர்பதிநடுங்கத்தவஞ்செயும்வேலைதுலங்குமெய்சுவேதமாமரனுங்
கருமுகிலெனவேதிகழுநாரணனுங்கவினுறுமாணவராகி
யிருவருமவன்முன்னிலங்கிநின்றிடலுமிறைஞ்சியேநடித்தனன்றுதித்து. (எ)

இதயமீதமரிந்திரியமுநீயேயெனிலெனக்குடைமையுண்டாயிங்
குதவினலன்றேதுதிப்பனுனையென்றிறைஞ்சியவுத்தமன்றன்னைத்
திதிதருசுதரைவதைத்தருளியநற்சீதரன்கேள்வரமெனவே
சதுமுகனமரும்பதமழிந்திடுநாட்டயாளுவாய்க்காத்திநீயென்றான். (அ)

உயருமார்க்கண்டமுனியிவைபகரவுலகெலாமளந்தருள்பரமன்
அயனகரழியப்பிரளயங்கோக்குமவணிநீயயத்தினிலையுந்
துயரொழித்திடுவெமெனுமொழியருளித்தூயனுநரனொடுமேக
நியமமொன்றிடவச்சோதியைமனத்துணிறைத்தவனமர்ந்திடுதினத்தில். (கூ)

பிரமகற்பந்தானிறைந்திடவடையுமிறுதிகாலந்தனிற்பிறையைத்
தரியரனுதலின்விழியழலெரிப்பச்சண்டவாசுகனறைந்திடவே
கரிகரனிகராந்தாரைகள்மலியக்கடிதெழுமேகங்கள்பொழிய
வருபிரளயந்தானண்டமேல்விரியவளைந்ததெங்கணுமலையுறவே. (கO)

விரைசெறிகமலனகரழிந்திடவேமேவியபிரளயத்தெழுந்த
திரையறைந்திடலுமிதந்துமங்கமிழ்ந்திச்செலத்தினினீரைந்துகோடி
வருடமேலிலக்கமொன்றுறுமாண்டுமறுவில்மார்க்கண்டனுமளப்பில்
பருவரலுறுவோனவணிருயரும்பூதவப்பாதவங்கண்டான். (கக)

வரையெனவுயருந்திரையுறுமயத்தினடுவிருேர்வடமரங்கண்டு
பரவுவெள்ளத்தினமிழ்ந்தெழுந்தலைந்துபருவரலுற்றிடுமுனிவன்
விரைவினின்விதியாலலைந்துநற்கோளிமிசையினிலேறியோரிலைமேற்
கருமுகிலெனநற்கலன்களுமிலங்கக்கவினுறுகுழவியைக்கண்டான். (கஉ)

சுருள்குழலிலங்கச்சுட்டிமுண்டகத்திற்றுலங்கிடத்தோள்வளைதிகழ
விருவிழியொளிரவளைகரந்தயங்கவிரணியநாண்மருங்குறவே
யுரன்மிசைக்கலன்கள்வயங்கிடச்சிலம்பினவிருறவொருதிருவடியிற்
பெருவிரல்வாயினுற்விருகையினுற்பிடித்தமர்குழவியைக்கண்டான். (கங)

வாசமெய்யுறநல்லிழைகள்கந்தரத்தின்வயங்கிடுங்குழவிகண்டிவனே
யீசனென்றளப்பில்மகிழ்வொடுமெவனையெய்திடச்செலுமுனிதனைத்தன்
னாசிவாயுவினால்வாங்கிடமசகநிகர்த்தவனண்ணத்துட்புகுதும்
பூசுரனிறையின்வயிற்றிடையீரேழ்புவனமுமடைந்திடக்கண்டான். (௧௪)

இரவிசந்திரனேழ்கடல்வரையயனொடீசனிந்திரனெணின்முனிவர்
சுரரிராக்கதர்களசுரர்கள்மனிதர்துலங்கியதெய்வநாரியர்க
ளரவினமுதலாயமர்ந்திடும்பதினாலுலகமுமான்றிடநோக்கிச்
சரியின்மாதவன்றானமருமாச்சிரமங்கண்டவண்சார்ந்தமர்ந்தனனால். (௧௫)

அரிதிருவயிற்றிற்பிரமகற்பந்தானிறைந்திடப்பிரளயமடைய
விரைவினின்முனியையுயர்ந்தபூதவத்தின்விளங்கியகுழவிதானுமிழத்
திரையிடைவிழுந்தநிகரிலாத்தவன்றான்றியங்கியவடமரந்தனையுங்
கருமுகினிறமாஞ்சிசுவையும்வளைந்தபிரளயந்தனையுங்கண்டிலனால். (௧௬)

வடமொடுகுழவிபிரளயந்தனையுங்காண்கிலாமார்க்கண்டன்வியந்து
படியளந்திடந்துநுகர்ந்துமிழ்ந்திலங்கும்பரமனைத்துதித்துநின்றேத்திக்
கடிதினில்முனந்தானமர்ந்தவாச்சிரமங்கவினுறச்சேர்ந்தனனென்றே
யடைவுடனபிமன்குமரனுக்குரைத்தானருள்செறிசுகமுனியம்மா. (௧௭)

மார்க்கண்டப்படலம் முற்றிற்று.

ஆகப்படலம் ௪௮ - க்கு திருவிருத்தம் ௩௮௯௩.

ஸ்ரீ கண்ணபிரான் புண்ணியத்தாடுணை

ஸ்ரீ

விஷ்ணுமயம்.

௧௨௭ - வது

## விருகாசுரப் படலம்.

ஒருமுதலாகியிருசுடராகியுயர்ந்தமும்மூர்த்தியுமாகி
யருமறைநாலாயைந்துபூதமுமாயாறுசாத்திரங்களாயேழு
பரவையாயெட்டுப்பருப்பதமாகிப்பவமிலாநவக்கிரகத்தின்
சொருபமாய்நிலத்திற்றெசவவதாரமாகியசோதியைத்தொழுவாம். (௧)

அலையுறவெழுந்தபிரளயமதனிலலைந்தமார்க்கண்டயன்றனையோ
ரிலகியவடத்தினிலையின்மேற்சிசுவாய்விழுங்கியங்கெழுந்திடவுமிழ்ந்த
மலர்மகள்கொழுநன்செயலினையறையுஞ்சுகமுனியடியிணைவணங்கி
நலனுறுமபின்றருமெழிற்புதல்வனயனநீர்பொழியவேநவில்வான். (௨)

அரணிருசரணையடைந்தவன்பெயரையறைந்திடுமாந்தர்கள்பலருஞ்
சரியிலாவிபவஞ்சார்வதுமேதுசக்கரந்தரித்தவன்பத்த
ரிருநிதியறவேவறிஞராய்த்திரிவதேதிவையுபயமுந்தெரிய
மருளகன்முனிவபகரெனவபிமன்மதலைகேட்டிடச்சுகன்மொழிவான். (௩)

எருதினிலுறுவோனற்பசந்துட்டனிருநிலத்திற்றவஞ்செய்வோர்
துரிதர்களெனினுமவர்முனமெய்தித்தொலேவிலாச்செல்வமீந்திடுவன்
வரும்விபவத்தாற்கெறுவியராகிமறுவுறுபவங்கள்வந்தடைய
நிரயமுற்றதனீந்தியுஞ்சனனவுவரியைநீந்திடாதுழல்வார். (ச)

திருமகள்கொழுநன்கயவர்கள்கருத்திற்சேர்கிலனுலப்பிலாவருட
மிருநிலமிசையின்மருளொழிந்திடவேதவஞ்செய்வார்முன்னரினெய்திப்
பரகதியருள்வன்பவமுறுவிபவம்பத்தருக்களிக்கிலானவரும்
வருநிதியகலவறுமையாய்நயனுஞ்சனத்திஞர்சனனத்தின்மயங்கார். (ரு)

ஆதலினரசவரிகயவருக்கேயரியவனிவீணயிலாவிடையின்
மீதுறுமரன்முன்விருகனுமசுரன்விளம்பியவரத்திீனயருளிப்
பூதலமிசையின்வெருவியெண்டிக்குப்புணரிசூழ்தீவெலாந்திரிந்தே
மாதவன்செயலாலவன்மடிந்திடவேவயங்கினன்கேளெனமொழிவான். (சு)

வேறு.

அறிவிலாவிருகாசுரனுரண, நிறையுநாரதனைக்கண்டுநேரிலா
விறைவர்மூவரில்யாவர்சின்னுளினி, லுறுகர்மாதவஞ்செய்யினென்றோதினன்.

கோரனும்விருகாசுரன்கூறவே, சீரினுயர்நாரதன்செப்புவான்
நாரணன்னுனக்கெட்டலனுன்முகன், வாரலன்னரன்வந்திடுவானென்றான். (அ)

தூயனுமுனியிவ்வுரைசொல்லவே, தீயனும்விருகாசுரன்தீயமும்
பாயும்வெம்புலியும்படர்கானகத், தேயெனும்முனரிற்கடிதேகினன். (கூ)

அஞ்செழுத்தையழுத்தியநெஞ்சினன், விஞ்சுதீயினின்மெய்யின்றசையினைச்
சஞ்சலம்மறத்தானரிந்தோமஞ்செய், தஞ்சலின்றியருந்தவஞ்செய்தனன். (கO)

எரியினிற்றசையாவுமரிந்திடு, மருளனேழுதினந்தனில்வாமத்தி
னரிவையுற்றவன்வந்திலனென்றுதன், சிரமறுத்தனல்சேர்த்திடவெண்ணினன்.

கடியவன்கதிர்வாளினிற்கந்தரந், திடமுடன்னரிந்தேதகனல்சேர்த்துமுன்
னிடபவாகனனெண்ணரும்பூதங்கண், மிடையவெய்திவிலக்கினனுமரோ.

சிரமறுத்தனல்சேர்க்குமுன்னேதடுத், தரனெருத்தினமர்ந்துமுன்றோற்றலும்
பரிவுடன்னசுரன்பணிந்தாடியே, புரமெரித்தபுனிதவென்றேத்தினன். (கஉ)

அரகராவெனவாடியவன்பனைச், சுரர்கடுன்னித்துலங்கிடத்தோன்றிய
வுரகபூடணனேக்கியுவந்தியான், றருவனெவ்வரஞ்சாற்றுகென்றோதினன்.

அரனுரைத்திடவாடுமவுணர்கோன், பரிவுடன்பணிந்தேபகர்வானெந்தன்
கரமமைத்திடயாவர்கம்மாயினுந், தரையினிற்பொடியாம்வரந்தாவென்றான்.

கடியனிவ்வுரைகூறவுன்கையுறின், படியில்வானிற்படிந்தமர்வார்சிரம்
பொடிபடும்வரமீந்தனன்போவென, விடபமீதினினிதுறைந்தானரோ. (கச)

அரனுரைக்கவவுணன்றன்கையினை, வரமளித்தருள்மங்கைபங்காளன்றன்
சிரமமைத்தவன்செப்புசொற்சோதனை, யுரமதித்திடுவேனெனவுன்னினன்.

கடியவன்வரச்சோதனைகாணவே, விடையின்மேவும்விமலன்றன்கம்மிசை
நெடியதன்கரம்வைத்திடநீட்டுமுன், படியினேடினனுற்பரமேசுரன். (கஅ)

பூதலந்தனிலேடும்புராரியை, வாதைசெய்யவரங்கொண்டதீயவன்
தீதின்மாதவர்சிந்தைகலங்கியே, பீதியுற்றிடப்பின்றொடர்ந்தானரோ. (கக)

படியினேழ்கடலோடெழுபாரினு, மிடையுமால்வரைமீதும்விண்மீதினுங்
கடிதிஞேடியவீசுரன்கம்மிசை, * விடமன்றன்கரம்வைத்திடமேயினுன்.

தேவர்தம்பதிதிக்கினுள்ளோர்நரர், பூவின்வாழும்புனிதனுறையிட
மேவுமீசன்வெருவிடவேவிடந், தூவனற்கண்ணசுரன்ருெடர்ந்தனன். (உ௧)

மலருளோன்முனிவோர்திரள்வானவர், கலன்விந்தடருங்கருமம்மரும்
பலனறிந்திலர்நின்றுபதைத்தனர், மெலிவுடன்னரனேடினன்விண்ணைவ...ய.

நெறியழித்திடுநீசவவுணர்கோன், றிறன்மிகுத்துத்தொடர்ந்துபின்செல்லவே
கறைமிடற்றரன்செய்வகைகாண்கிலான், மறுவில்காரணவைகுந்தமெய்தினுன்.

சிரமிசைக்கரன்சேர்த்திடத்தீயவன், வரமெலிந்திடுமெங்கைபங்காளனு
மரனரந்தையொருவிடவச்சுதன், றிருவுளந்தனிற்சிந்தைசெய்தானரோ. (உ௪)

அரியரன்னரந்தைக்கடனீந்தநற், பிரமசாரிப்பெருந்தவனுகியே
சிரமிசைச்சிகைநாலத்திகழ்முநூ, லுரமிசைஇயுழைத்தோலுடனேங்கவே.(உ௫)

தூயமுஞ்சிகௌபீனந்துலங்கவே, வாய்நன்மறைநாவினடையவே
பேயினம்முறும்பித்தன்பினேகிடுந், தீயனுமவுணேசன்முன்சென்றனன். (உ௬)

நீலகண்டனைப்பின்ருெடர்ந்தேநிறை, யாலமென்னவடரவுணேசனைச்
சீலமன்னுமைசெப்பித்தடுத்தகன், ஞாலமீதினினின்றுநவிலுவான். (உ௭)

அரியயோகியர்தம்மினறிவுளீர், சிரமிசைச்சடையெங்குஞ்செறிந்துளீர்
சரிரம்வெண்பொடியாலொளிதாங்குவீர், கரமுறுஞ்செபத்தின்வடக்காட்சியீர்.

தூரமாநெறியெய்தித்துலங்குவீர், பாரகாரியநெஞ்சிற்பதித்துளீர்
வாரும்மெய்யினைப்பாரும்வருத்தங்க, ளுரவிங்கிருமென்றுபின்செப்புவான். (உ௯)

தென்றன்மேவச்செறிவெறிப்போதுக, டின்றுகாவிதிற்ருேய்புனலுட்சென்று
நின்றுநீர்விளைநீர்பருகும்மெயி, ஞென்றுவெம்மையொழியவென்ருேதுவான்.

மாயனிங்கிவைகூறமருளுறுந், தீயனெஞ்சினுவகைசெறிந்திடத்
தூயவாவிவணோர்கருமஞ்சொல்வே, ணீயறிந்தருளென்றுநிகழ்த்துவான். (௩௧)

அரனென்கையுநினர்சிரமாயினு, மெரியுமென்றசொற்சோதனைசெய்யவென்
கரமவன்சிரம்வைக்கக்கருதியே, விரைவினெய்தினனென்றுவிளம்பினுன். ()

தீயவன்னிவைசெப்பமுறுவல்செய்,மாயவன்னரன்றக்கன்மகந்தனிற்
றூயதேவியிறக்கத்துயரொடே, பேய்கள்சூழப்பித்தாகினனென்றனன். (௩௩)

தேவியானவடெக்கன்மகந்தனி, ஞவிநீக்கவருந்துயரெய்தியே [வான்.
சேவினேறித்திரிந்துழல்வோன்சொன்மெய், மேவுமோவெனப்பின்னும்விளம்பு

அரனறைந்தசொல்லேபழுதாயிடி, னிருவரும்மவனெவ்விடத்தெய்தினுங்
கரமுறப்பற்றிக்கட்டிவெமுன்கையிற், சிரமமைத்திவண்சோதனைசெய்யென்ருன்.

அரியறைந்தசொற்கேட்டவவுணர்கோன், பிரமையுற்றுப்பிறங்குகரத்தைத்தன்
சிரமமைக்கக்கபாலஞ்சிதைந்தக, றரையனிற்பொடிசாரமடிந்தனன். (௩௬)

தலையிற்றன்கரம்வைக்கத்தகர்ந்திடுங்,கலனிறக்கவுளங்களித்தெய்திய
மலருளோன்முனிவோர்திரள்வானவர், பலருமாதவன்ருளிற்பணிந்தனர். (௩௭)

* விருகாசுரன்.

அந்தரத்தினிற்றுந்துமியார்த்திட, நந்தொலித்திடநாரியராடியே
கந்தரத்தர்கடுந்துயர்நீக்கிய, சுந்தராவெனப்பொன்மலர்தூவினர். (௩௮)

சிரசிற்றன்கரஞ்சார்த்திடவெய்திய, மருளன்மாளமகிழுமுமாபதி
யரிபதத்திடையன்பினிறைஞ்சியே, சுருதியாற்பலதோத்திரஞ்செய்தனன். ()

யானளித்தவரத்தினிலென்னையே, யானிசெய்யவடரவுணன்சிர
மீனமாயெரியும்வகைசெய்திடும், மானவாதிருமார்பநமாவென்றான். (௪0)

அரன்மகிழ்ந்துதுதித்திடவேயரி, திருவுளம்முவந்தேயிவைசெப்புவான்
மருளனானவசுரனுக்கிவ்வர, மருடலேயவமென்றறைவானரோ. (௪௧)

அற்பசந்துட்டனாயினுநீயவத், துற்குணத்தவர்முன்னரிற்றேன்றலை
நற்குணத்தவர்நாயகவேகேளு, முற்குணத்துமுராரிமொழிந்தனன். (௪௨)

கயிலையாளியுயர்கமலாசனன், புயலையூர்திபுத்தேளிர்முனிவர்கள்
இயல்புறும்மிவர்தங்களையேகேளு, வுயருமாதவன்றன்பதத்துற்றனன். (௪௩)

ஆதலாலரனற்பசந்துட்டனாய்ப், பூதலந்தனினீயும்பொருட்செல்வ
மேதமெய்தவளித்திடுமெம்பிரான், பாதம்பற்றினர்பாவத்தைப்பற்றிலர். (௪௪)

செல்வம்பாவத்தைச்சேர்த்திடஞானம்போ, யல்லலெய்தவரிவையர்தோளிணை
புல்லுவார்கள்வறிஞர்புலன்பொறி, வெல்வர்மன்னவவென்றனன்மெய்ச்சுகன். ()

விருகாசுரப்படலம் முற்றிற்று.



ஆகப் படலம் ௪௫ - க்குக் கூடிய திருவிருத்தம் ௩௫௩௮.

ஸ்ரீகண்ணபிரான் செந்தாமரைத்தாடுணை.

ஸ்ரீ

விஷ்ணுமயம்.

௧௨௮ - வது

# பிருகுப்படலம்.

அரசனுயறுதிங்கள்ரிசேயிடத்தமர்செவ்வாயன்றுய்ய
விரசைமாநதியுடையோனன்புதன்மேல்வைத்தநலவீமற்காகக்
கரைசெய்வாவியாழத்திற்கழுமீதினளியானேன்வெள்ளிமானும்
வரிசைவளையச்சனியஞ்சவிசையனுக்காமுழக்கினனைவணக்கஞ்செய்வாம்.

வேறு.

சுகமுனியடியினிறைஞ்சிவாளபிமன்சுதனிவைபகருவான்றுய்ய
நிகரிலாமுராரிபுராரிதன்றுணியைநீக்கியதெல்லவுமறைந்தாய்
ககபதிதுவசனிறையெனவுணராதிதரதேவதைகழல்பணிந்தும்
மகிழ்வுறுமனிதருறுமருளதனைப்புகலெனமாதவன்மொழிவான். (௨)

அரிதனையறியிலவனியிற்செனங்கள்செனனமுமரணமுமகலப்
பரகதியடைந்தாலுலகிலையெனவப்பரமனாகியதனையொளிப்பச்
சுரரொடுமுனிவர்மிகமதிகலங்கித்துலங்கியவிறையெவனென்றே
பிருகுவைவிடுத்தசரிதைகேளெனவேபிறங்கியமுனியிவையுரைப்பான்.

பவமறுசரசுவதிநதிக்கரையிற்பழுதகன்றிடப்புலன்செயித்துத்
தவமுயல்முனிவரிறையவனெவனென்றுணர்கிலார்தம்மிற்சம்மதித்தே
யுவமையற்றுயர்சாத்திகவிராசததாமதமெனுமுக்குணமுறுவோர்
சிவனொடுதிருமாலயனிவர்களிற்சாத்திககுணனிறையெனத்தெளிந்தார்.

மூக்குணமதனின்முதற்குணனெவனோமூவர்தங்கருமஞ்சோதிக்கத்
தக்கவனெவனென்றியம்பிடும்வேலைசரியிலாப்பிருகுமாமுனிவன்
நக்கனாரணனான்முகனிவர்களிற்சாத்திககுணநலவிறைதெரியப்
புக்கவர்பதியினமர்ந்தவர்செயலைப்புகலுவனென்றுபோயினனால். (ரு)

• வேறு.

தந்தையாகுஞ்சதுமுகன்பாலினில், வந்துவந்தனைசெய்கிலனாய்மன்னச்
சிந்தையிற்கடுங்கோபந்திரண்டிவன், மைந்தனாகையினீச்சினமாய்த்தனன்.

அயனிராசதமொக்குமறிஞனாற், கயிலையங்கிரியிற்கடிதெய்தியே
சயிலவில்லிதன்மெய்யைத்தழீஇக்கொள, முயலகன்பகைஞன்முனிந்தானரோ.

காலகாலன்றன்காவினிறைஞ்சிடச், சீலமில்லவனோவெனத்தீண்டுவன்
கோலமில்லவனைக்கொல்வனென்றுதன், சூலமேந்தித்துரத்தினனுமரோ.

மூயலகன்வெரிநுற்றவன்முத்தலை, யயிலையேந்தியடர்ந்திடனோக்கியே
தையுறும்மிமவான்றருதையலாள், மயர்வறத்தடுத்தேகதமாய்த்தனள். (கூ)

காமனைக்கடிகாளகண்டனுறுந், தாமதக்குணநோக்குந்தவத்தினோன்
றீமைவேரறச்சேடனின்மீதமர், மாமன்வாழும்பயோததிமன்னினான். (க0)

வித்தகப்பணிமீதின்விளங்கிய, வுத்தமன்றனுரத்தினுதைத்தனு
மத்தனற்சுதன்மேல்விழவன்புளம், வைத்தபோலமனமகிழ்ந்தானரோ. (கக)

உரத்தின்மீதினுதைத்தவன்பாதத்தை,யருத்தியான்மலரின்னருச்சித்தயஞ்
சிரத்தின்மீதிற்றெளித்தெனக்கெய்தியே, பொருத்தினாய்முற்குணப்புனிதாவெ
[ன்றான்.

இனியவின்சொலியம்புமுராரியை, முனிவையோவுமுனிவனிறைஞ்சியே
வனகமுற்குணவச்சுதவற்புதா, கனகனந்தகவென்றுகழறுவான். (கங)

வேலையின்னமுதம்மருந்தாதுவெவ், வாலமேநுகரற்பர்களென்னவுன்
கோலநன்கறியார்குத்திரத்தெய்வம், ஞாலமீதடைவார்நரகெய்துவார். (கச)

திருவினாயகசிற்குணசீதர, மருளகற்றிடுமாதவவாமன
கரியவாகருணாகரகாகுத்த, புருடவுத்தமபோற்றியென்றானரோ. (கரு)

ஆதியேநமவச்சுதனேபரஞ், சோதியேநமதூயசுரநதி
பாதனேநமபங்கயமங்கைதன், நாதனேநமவென்றுநவின்றனன். (கசா)

நயனமானந்தநாரமலிந்தட, வயனையாவரியேயச்சுதானந்த
சயனவென்றவன்றாளினிறைஞ்சியே, யியல்புறும்முனிவோரவையெய்தினான்.

இறையையோர்ந்துதவஞ்செயவெண்ணிய, மறுவின்மாதவர்தம்மைவணங்கியே
கறைமிடற்றரனுங்கமலாசனத், துறையுமெண்கணனுஞ்செய்ததோதினான். (கஅ)

அயனிராசதமும்மரன்றாமதச், செயலுமோதிச்சிறந்திடுசாத்திக
மருவுமாமகிணன்னிறையென்பது, பிருகுமாமுனிபேசினனுமரோ. (ககூ)

பிருகுமாமுனிபேசுநல்வாய்மையை, மருளகற்றிடுமாதவர்கேட்டுள
முருகியொப்பறுமுத்தமனாகிய, பரமனேயிறையென்றுறப்பற்றினார். (௨௦)

திவாதெசாக்கரத்தோடுறு துன்பநோய், யவாவகற்றுமட்டாக்கரநெஞ்சினிற்
றிவாவிராவுறச்சேரப்பதத்தினிற், குவானடக்கியகோன்பதஞ்சேர்ந்தனர். (௨௧)

அரியுயர்ந்தவிறையென்பதாமெனா, முறைபகர்ந்திடலோகத்தனைவரு
மருளகன்றிடமால்விரதஞ்செய்தே, நிரயசென்மக்கடவினைநீந்தினார். (௨௨)

நரரடங்களினமின்னாதனை, மருளடங்கமனத்திடைவைத்தனுஞ்
சுரரடங்கத்துதிக்கவியமனா, ருரமடங்கக்கதியினையுற்றனர். (௨௩)

நரையில்வாழ்நரர்சக்கரன்றன்பதி, மருவச்சாதகர்வாடியங்கோடவே
பிரவிகாதலனேங்கியிவையெலா, முறைசெய்தானயற்குள்ளநடுங்கவே. (௨௪)

நடுவென்கூறுஞ்சொனான்முகன்கேட்டுநல், விடையினேறியவித்தகனேடுமே
புடவியின்பயமார்புணரிக்கணி, னிடரறுக்கும்பரனையிறைஞ்சினான். (௨௫)

முனிவர்நீயிறையென்றுமொழிந்திட, வனைவரும்முனைப்பற்றியளப்பிலாச்
சனனமாயசலதியையோவியே, யனகவுன்பதத்தேயடைவாரென்றான். (௨௬)

இரவிமைந்தன்பதமிழந்தேங்கினான், றரையின்வாழுஞ்சனங்களுமற்றிடுந்
திருவினாயகநீசெய்தவண்டமும், விரைவிற்பாழுறுமென்றுவிளம்பினான். (௨௭)

மைந்தனாமலரயன்கூறலு, மிந்துசேகரவீசனைநோக்கியே
யெந்தலோகமுமோகனநூலெழ, வந்தமாயறையென்றரிகூறுவான். (௨௮)

உரைசெய்மோகனநூலினுக்கொக்கவே, தரையினீயுறயான்றவஞ்செய்குவ
னரரருமனடுவெனுமின்புற, நிரயம்வீறிடநீநவிலென்றனன். (௨௯)

உவமையில்லரியோதப்புராரியுங், கவுதமன்முதலாய்க்கடுஞ்சொல்லுறுந்
தவர்கடம்முடன்றுமதநூலினை, யவனிதன்னின்மலியவறைந்தனன். (௩௦)

ஆதலின்னரன்றுமதநூலினாற், சீதரன்னிறையென்பதுந்தேர்கிலாப்
பூதலந்தனில்யாவரும்போகமே, யாதரித்ததற்காந்தெய்வம்பேணுவார். (௩௧)

செக்கிலாட்டுந்திலந்தனினொள்ளுக், கக்குபிண்டியிற்காண்குதல்போலவே
மிக்கமோகனநூலினைவிட்டரி, பக்கமாகுவர்பாரிடையற்பமே. (௩௨)

நாகமேனடித்தானடிநண்ணலார், தோகைமாதர்கள்சுந்தரநோக்கியே
மோகபோகமுயன்றுபலதெய்வ, மோகைகூர்வனொன்றேசுகனோதினான். (௩௩)

பிருகுப் படலம் முற்றிற்று.

---

ஆகப்படலம். ௫௦-க்குக் கூடிய திருவிருத்தம் ௩௯௭௧.

**ஸ்ரீ கண்ணபிரான் புண்டரீகப் பொற்றுணை.**



ஸ்ரீ

விஷ்ணுமயம்.

௧௨௯ - வது பரிட்சித்து

# மோட்சப் படலம்.

திகிரியினாற்செருநர்களைச்செற்றுமுரலரியதனிற்
றிகிரிகொடுசேதுகட்டியிகலரக்கன்றனைச்செயித்துத்
திகிரியொருகரத்தேந்தித்திரளாவாயரைக்காத்துத்
திகிரியெழுபண்ணுறவூதியதேவன்பதம்பணிவாம். (௧)

வேறு.

மோகனநூலையரன்வகுத்திடுஞ்சொன்மொழிந்திடுமுனிவனையிறைஞ்சி
மாகவான்புதல்வன்சுதனருள்குமரன்மலர்மகணாயகன்புவியிற்
சாகரமருவுந்துவரையினெய்தித்தருமமில்கயவரைவதைத்தே
யோகமாமுனிவரறைந்தசாபத்தாலொழிந்ததென்பகரொணவுரைப்பான். (௨)

முனிவர்சாபத்தாலெதுகுலமுடியமுராரியுமேகினனென்றாற்
றனைநிகரிலாதவிறைவனென்றவனைச்சாற்றுமாறெங்ஙனென்றுரைப்ப
வினையறுமுனிவனவன்றனைநோக்கிவிளம்புவானென்பிலாக்கிருமி
யனவினைநுகரினவன்றனைச்சாபமடையுமென்றிவையறைந்தனனால். (௩)

திருமகள்கொழுநனடியவர்தமையுந்தீயவெஞ்சாபமும்பவமு
மருவிடாதொருவுமனுநெறிகேட்டிவானினுமண்ணினுமிருப்பற்
றொருதினமிருந்தான்மறுதினமிராமனுற்றசாபத்தினாலுழலுஞ்
சுரர்முனிதுவரைப்பதியிலவ்வினையாந்துனியறவநேகநாளமர்ந்தான். (௪)

அயனருள்படையைக்குரகதத்தாமனபாண்டவமென்றுவிட்டிடவே
தயையுடைத்தருமன்குலத்தினையுந்தான்றடிந்ததென்றுரைப்பர்களுளரோ
கயவனும்மறையோன்றனைக்கொலுங்கண்டாகருணனுங்கடுவினையகல
வுயர்பதத்துற்றானெனிலிறைதனைவெஞ்சாபமும்பவங்களுமுறுமோ. (௫)

இருளகன்முனிவரறைந்தசாபத்தாலெதுகுலமுடிந்ததென்றியம்பி
மருளகன்றிடநல்விதவுபதேசமருளியேவங்கம்வந்துலாவும்
பரவைசூழ்துவரைப்பதியினையகன்றுபழுதகல்வதரியினெய்திச்
சரியிலுத்தவவங்கிருத்தியென்றுரைத்தோன்றானுநிற்றகைபவருளரோ. (௬)

ஆதலிலரசவவனடியவரையடைந்திடாச்சாபமும்பவமும்
வேதநாயகனும்விமலனுக்குறுமோவெனமுனிவிளம்பிடமகிழ்ந்து
பூதலமிசையின்மணிதனாயெழுந்தபுனிதன்றன்குரம்பையினோடு
மேதமற்றிலங்கும்பதியினிலெய்தலாகுமோவெனவவனறைவான். (௭

மருளுறுமவர்போன்மொழிந்திடுமரசமாதவன்றனையெயுங்கிராதன்
சரிரமோடியருஞ்சுவர்க்கமெய்திடவேசாற்றினோன்றானுறுகிலனோ
விரதமோடெழுந்தபுரவிகள்வயங்குங்கதியிடையிலங்கவேயருள்செ
யரிதிருமேனியுடன்பதியடைவதரிதுகொலென்றுபின்னறைவான். (௮)

அவனியிற்பாரமகற்றிடவிரும்பியரசர்தங்குலத்திடையெழுந்து
பவமறவடருநிருதர்தானவர்கள்பழுதுறுநிருபரைவதைத்தே
யுவமையிறருமணிஜெருராற்கிளையோடுரகசேதனன்மடிந்திடவுந்
தவர்கள்சாபத்தாலெதுகுலமறவுமியற்றிருனென்றுசாற்றினுல். (கூ)

சுகமுனியிவையையுரைத்திடவிறைஞ்சித்துலங்கியவபிமனற்சுதன்ருன்
அகமகிழ்ந்தயநீவிளம்புபாகவதப்பொருளெனும்விழுமியவமுதைப்
பகலவனவிராலகன்றிடுமிருள்போற்பவமறச்செவியினுற்பருகி
நிகரிலாவரியென்னிருவிழிகளிப்பநிறைந்தெங்குமிலங்கினனென்ருன். (கo)

அரிதிருவுருவமகிலம்வானெங்குமவிருறநிறைந்தனவெனவே
சரியிலாநிருபனுரைத்திடக்கேட்டுத்தத்துவஞானத்தைவிரித்துப்
பரிவினலருளிக்கதியுறுகெனவேபகர்ந்திடுசுகமுனியடியி
னரசர்கோன்வணங்கவருந்தவருடனுமவனகன்றிடவிவணிருந்தான். (கக)

உரைசெயும்பிராணவபானசமானவுதானவியானனென்றறையுஞ்
சரிரமுற்றிடுங்காலைந்தையுமடக்கித்தவமொனுஞ்சுகனருளியோக
மருவுமெட்டெழுத்தைமனத்திடையழுத்திமருளுறுமியாக்கைமண்ணிறப்ப
வரியுயர்பதத்தைப்பரமபாகவதமெதிர்கொளவபிமன்சேயடைந்தான். (கஉ)

திருவினுயகன்றன்பதத்திடைவயங்கச்சேர்ந்திடுமுத்தனைசிறுவன்
றனையிடையிறப்பவரற்றியசனமேசயன்மறையறைநெறிதன்னு
லெரியிடையிடவேயவன்றனுக்கையினையெடுத்துவந்தீமத்திற்சேர்க்க
விரைவினினுயர்தெக்ககனடைந்திறந்தோன்மேனியைவிழியினுலெரித்தான்.

கதுமெனவடர்தெக்ககனிருவிழியாற்கவினுறுமபிமனன்றனக்குச்
சுதனெனவுயருங்குரம்பைவெந்திடவேசூழ்ந்திடுமெழவினுலெரித்துப்
பதிதனினுறுவோர்வெருவிடவகன்றபினர்ச்செனமேசெயன்பழுதில்
சதுமறைநெறியாலிறந்ததாதைக்குச்சலந்திலம்விடுத்தனன்மாதோ. (கச)

## பரிட்சித்துமோட்சப்படலம் முற்றிற்று.

ஆகப்படலம் ருக - க்குக்கூடிய திருவிருத்தம் ஙகூஅ௫.

ஸ்ரீ கண்ணபிரான் கமலசரணந்துணை.

ஸ்ரீ

விஷ்ணுமயம்.

கங௦ - வது

# செனமேசெயப்படலம்.

அரியுருவாயாடகன்றனகன்மார்பம்வகிர்ந்துயர்ந்த
வரியுரத்தினுசுகம்விட்டரவுயர்த்தோனவேசியில்
அரியெனவேயைவருயிர்காத்திடவேயமர்ந்துபண
வரியணையிற்றுயில்கொளரியம்புயத்தாளிணைபணிவாம். (க)

## வேறு.

இறந்திடுந்தாதைக்கியல்பினாற்பிண்டமளித்தவனெண்ணின்மாதான
மறந்தவராதமறையவர்க்கருளியருமறைநெறியெலாந்தழைப்பத்
துறந்தவர்மகிழக்கலியினைத்துரத்தித்துலங்குசெங்கோலினையோச்சிச்
சிறந்திடுஞ்சிங்காதனத்தின்மேற்செனமேசெயன்வயங்கியதினந்தன்னின். (௨)

தனுவிலங்கியதோரொயினன்மன்னவையிற்சார்ந்துமன்னவன்றனையிறைஞ்சி
வனமதினுரைத்தற்கரியதோர்கருமங்கண்டனன்யானெனமறுவி
றினகரனெனவேவயங்கியவரசன்செப்புதியவையெனப்பகர
வினையுறுமிருகங்களைக்கொலைசெய்யும்வேடனீதறையலுற்றனனால். (௩)

நிகரிலாக்கடற்றினகன்றுயர்வடத்தின்மிசையினினேறியாணிறையுங்
ககமகப்படவேகணியவைவிரித்துக்கவட்டின்மீதமரும்வேலையிலே
புகலுதற்கரியவடிவுடையவனோர்பூசுரனெறியுறவருவோன்
பகலவன்வெயிலால்வதனம்வேர்த்திடவேபழுவத்தினானிழலடைந்தான். (௪)

வடநிழலமர்ந்தமறையவன்பாலின்வயங்கியதெக்ககன்மறைநூ
லறையுமந்தணனாமுருவினைக்கொண்டேயடைந்துநீயெய்தியகருமங்
கடிமலரயனைநிகர்த்திடும்பெரியோய்கழறெனவபிமனற்சுதனை
விடமுமிழரவங்கடித்திடினதனைமீட்கவந்தனனெனமொழிந்தான். (௫)

தூயமாமறையோனிவையுரைத்திடலுந்துலங்கியதெக்ககன்கடிக்கி
னீயவன்விடத்தைத்தடுத்திடவலையோநிகழ்த்தெனமற்றவனகைத்தே
யாயிரம்பணமாரனந்தனுஞ்சினத்திற்கடித்திடினடருவனெனவே
தீயுறுவிழிகள்சிவந்துதன்னுருக்கொண்டுயர்ந்தவன்செப்பலுற்றனனால். (௬)

அறிவிலந்தணயான்றெக்ககனென்றன்விடத்தினையகற்றுதியோவென்
றெறுழ்வலிக்கலுழன்வெருவிடவெயிற்றாலிலங்குமவ்வடத்தினைக்கவ்வக்
கறைமிடற்றரனாலெரிந்திடும்புரம்போற்கடிதினிற்கோளிநீறாக
நெறியுறுமறையோன்செலத்தினைத்தெளிக்கநிறைந்தவப்பூதவந்தழைத்த. (௭)

திரிபுரமெனவேயெரிந்திடுங்கோளிசெலமுறத்தழைத்துநின்றிடலு
மருமறையவனையிறைஞ்சிநான்முகனுமுனக்குநேரலனெனவறைந்து
சரியிலாங்கிரன்மகன்சொலைப்பழுதாக்கலையெனநலனுரைசாற்றி
யிரவிபோலொளிருமணிகளீன்றுதவியேகெனவவனுமீண்டனனால். (௮)

அந்தணனுடனேவிடங்கொடெக்ககன்றானறைந்திடுமொழியெலாங்கேட்டு
வெந்தவவ்வடத்தோடியானுநீறாகிமீளவுமதினுடலுறவே
வந்தனன்றனாலுயிர்தரவந்தமறையவன்மீண்டிடவியற்றி
யுந்தையைவதைத்தானெனுமுனஞ்செனமேசெயன்கனன்றிவையுரைத்தனனால்.

தவன்மொழியினிற்றான்கடிக்குவதன்றித்தன்விடமீட்கவந்தவனுக்
குவமையின்மணிகளுமிழ்ந்தவைகரத்திலுதவியாங்கவன்றனைப்போக்கிப்
பவமுறவடர்ந்தென்பிதாவினையெரித்தபழுதுறுதெக்ககனுடனீள்
புவிமுழுதுளமாசுணவினமடையப்பொன்றிடவியற்றுவனென்றான். (௰)

அருமறைமுனிவர்தமையவண்வரித்தாண்டரசர்கோன்சர்ப்பயாகத்தைத்
தரையினினியற்றியவிசினாகுதிகடயங்கிடச்செய்திடநடுங்கி
விரைவினிற்கீழேழுலகினிற்புவியுண்மிடைந்திடுமெவ்விடமலியு
மரவினமிடையவடைந்துமாமகத்தின்குண்டத்தினனலிடையெரிந்த. (௧௧)

சிட்டனுமரசன்வளர்த்திடுமகத்திற்சினமுறுமரவினமடையத்
துட்டரானவர்கள்கிளையொடுமடியுமியல்புபோற்சுடிகையோடெரிய
வட்டமாநாகமிசையினாகுதிகளடர்த்தவைமேனிகள்வெதும்பச்
சுட்டிசித்திடலும்விதலையுற்றரற்றிச்சுரர்பதிக்கபயமிட்டனவால். (௧௨)

அரவினவிறையாமட்டமாநாகமபயமிட்டரற்றிடக்கேட்டுச்
சுரர்பதியுமையான்காப்பனீரஞ்சலெனவுமாகுதிகள்சுட்டிடலும்
வெருவியிந்திரனோடாதனந்தனையும்விலங்கொணாவகைசுற்றிக்கிடப்ப
வருமறைமுனிவரஃதெலாமுணர்ந்தாண்டரசனுக்குரைத்தனரம்மா. (௧௩)

எந்தைதன்னுடலையெரித்ததெக்ககனோடனைவருமெரியின்வீழாமல்
முந்தியேதடுத்தசுரர்பதியுடனும்வரும்படிமுடுகுவீரெனலும்
இந்திரன்முதலாமரவுகளெல்லாமெழுந்திவணடையவென்றிகழ்வில்
மந்திரநவின்றுமுனிவராகுதிகள்வழங்கினர்வானவர்நடுங்க. (௧௪)

சிட்டராமுனிவர்வழங்குமாகுதிள்சென்றிமையோர்கடம்பதியைக்
கிட்டியங்கவனோடெரிகொளாதனத்தைக்கிளட்பிவெவ்விடத்தினையுமிழு
மட்டமாநாகமரற்றிடவெடுத்தேயந்தரத்தனலிடைவீழும்
விட்டில்களெனவம்மகத்துயரழலைச்சேர்ந்திடவிடுத்திடும்வேலை. (௧௫)

சதுமுகனவையின்முனமொருதினத்திற்சார்ந்ததெக்ககன்றனைநோக்கி
யுததியிற்றுயிலும்பரனருள்குமரனுனக்குமுன்கிளைஞர்கட்குஞ்
சதிருறுசனமேசயனெனுமரசன்சற்பயாகத்தினைவிளைப்பக்
கதுமெனவந்தவ்வனலிடைமடியுங்காலமுற்றிடுமெனப்பகர்வான். (௧௬)

அரசனங்கியற்றுஞ்சர்ப்பயாகத்தினனலிடைமடிந்திடாவகையீண்
டுரைசெய்வனதனைக்கேட்டியென்றயன்றான்மொழிகுவானுவமையின்முனிவன்
தருமமெய்நெறியினுயர்சரற்காருதாரம்வேட்டவடனையணைக்கின்
மருளறுமெனவேதவிர்ந்துயர்விரத்திவரத்தவஞ்செய்திடும்வேலை. (௧௭)

பிறிதிணையிலாமலுயர்சரற்காருமரபினிற்பிதுக்களெல்லவரும்
பொறையுறத்தவத்துப்பவுத்திரனாகும்புண்ணியன்வைகுகானகத்தின்
மறுவிலாவவன்றான்மனைவியைவேட்டுமைந்தனைப்பயந்திடாவிடராற்
குறைவுறவகல்பாழ்ங்கூவலினருகிற்கொடியினைப்பற்றிநின்றனரால். (௧௮)

பாவமற்றிடவேயுயர்சரற்காருபழுவத்திற்றிரிகுவானகலுங்
கூவலினருகிற்கொடியினைப்பற்றிக்குலைந்தழுபவர்களைநோக்கி
யாவர்நீரெனலும்யாங்கடாம்பிதுக்களெம்மரபினிற்சரற்காரு
பாவையைவேட்டங்கறனுறுசுதனைப்பயந்திடாதரற்றுவமென்றார். (௧௯)

இனனுறவவர்தானியம்பிடத்தவத்தோனியான்சரற்காருவென்றுரைப்ப
வினையறுபிதுக்களியாமுயும்படிநீவிழுமியவரிவையைவேட்டுத்
தனயனையளித்தியெனவவர்வேண்டத்தன்பெயராகியேவயங்கும்
வனிதையானழைத்தவிடத்தினிற்குறுகின்வதுவைசெய்குவனெனவகன்றான்.

ஆதலிற்றவத்தோன்பெயருறுமணங்குன்புத்திரியவளிணையில்லா
மாதவனழைத்தவிடத்தினிற்குறுகின்வதுவைசெய்குவனவன்றன்னு
லேதமற்றிலங்கப்பயந்திடுஞ்சுதனிவ்வினையினைக்களைவனென்றயனங்
கோதலுமகிழ்ந்தெக்கன்மகளுடனுமுவமையின்முனியிடத்தகன்றான். (௨௰)

சரியிலாத்தவத்தோனுணர்ந்திடாவகையாற்றக்ககன்மகடனைச்சுமந்து
பரவுகானகத்திற்றிரிந்திடுதினத்திற்பழுதகல்பிதுக்கள்வேண்டுகையா
லொருவருமிலாதவனத்திடையடைந்தங்குயர்தவத்தினன்சரற்காரு
தெரிவைநீவருதியெனக்கரம்பிடிப்பச்சேர்ந்தவள்வணங்கிநின்றனளால். (௨௨)

சரியிலாவணங்கென்பெயர்சரற்காருசார்ந்தனனென்றிறைஞ்சிடலு
மருமறைமுனிவனவடனைமணந்தங்கருளியவத்திகன்றன்னைப்
பருவரலுறுதெக்ககனினைத்திடநற்பங்கயன்றனைநிகரவன்றான்
விரைவினிற்செனமேசெயன்முனமெய்திவிழுமியவாசிகளறைந்தான். (௨௩)

சுருதிநாவினனுய்த்துலங்குமத்திகமுனிறாயனுயுயர்மனைநோக்கித்
தருதியான்வேண்டும்வரமெனவரசன்சதுமுகன்றனைநிகர்த்திடுவோ
யுரைசெய்நீயவையையுதவுவனெனலுமுவமையிலட்டமாநாகஞ்
சுரர்பதியுடனிவ்வெரியிடையுறுவாதருளுதிசுந்தரவென்றான். (௨௪)

சரியில்மாதவத்தோனிவையுரைத்திடலுந்தக்ககனுடன்விசும்பெழுந்த
வரவுகளமரர்க்கிறையிவர்மகத்தினழலிடையிறந்திடாதருளப்
பரிவினால்நிருபன்றனக்குநல்லுரைகள்பகர்ந்தவன்பழுவத்தினேக
வருமறைமுனிவர்நடத்திடுமகத்தையொழித்துயரரசன்வீற்றிருந்தான். (௨௫)

சுரர்பதியெனவேதுலங்கியசெனமேசெயனெனுந்தூயவன்முனரி
னருமறைபுகலும்பராசரன்குமரனடைந்திடவவனடியிறைஞ்சித்
திருவினையகன்றானவனியிற்பாரந்தீர்ப்பதற்கெய்தியதறிந்துங்
குருகுலத்தவர்செய்யமர்விலக்காதகொடுவினையுனக்குறுமென்றான். (௨௬)

மதிகுலவரசனிவைமொழிந்திடலுமறுவிலாவியாதனீதறைவான்
விதிவழியெவர்க்கும்விலக்கரிததனால்வேந்தவுன்றனக்குமிவ்விடத்தி
னதமமுற்றிடவேவரும்பிரமகத்தியகற்றுதியெனமொழிந்தகல
விதனமுற்றரசனியற்கையைத்தவிர்ந்துவெருவிமன்வேள்விசெய்தனனால். (௨௭)

அருமறைமுனிவர்மருங்குறமகத்தைநடத்திடுமரசர்கோனனலோன்
மருவுமந்திரத்தைச்செவித்தவனவணின்வரித்தவந்தணர்தனிலொருவன்
இருவிழிகுவித்துத்துயிலுறுமவன்றானெழுந்திடத்தானெறிதருப்பை
விரைவினினுரத்தினழலுறுமயிலாய்விழுந்திடமரித்தனன்மாதோ. (௨௮)

துயிலுறந்திடவேயெறிந்திடுந்தருப்பைதுலங்கியவயிலதாயுருவ
வுயர்மறையறைவோன்மரித்திடனோக்கியுளந்தமன்விதிவழியதனைக்
கயிலையிலுறுமவ்விடையவனெனினுங்கடந்திடவரிதியானறியா
தியல்புறுமுனியையிகழ்ந்தனனென்றிவ்வினையெதிற்றீருமென்றிசைத்தான். ()

நிருபர்கோன்விதியாலடைபிரமத்திநீங்குமாறேதெனவுளைந்து
பருவரலுறும்வேலையினுயர்வியாசன்வருதலுமவன்றனைப்பணிந்தே
யருள்செறியயனைநிகர்த்திடுதவயானறிவறப்பகர்ந்தசொற்பொறுத்தி
யிருபிறப்பாளன்வதையொழிந்திடுமாறியம்பெனமுனிவனீதறைவான். (௩௦)

அரசவுன்குலத்தோர்சரிதையாகியபாரதத்தினையடைவுடன்கேட்கிற்
றுரிதமாயிவணினடர்பிரமகத்திதொலையுமென்றறைந்திடநிருபன்
சரியிலாக்கதையைமொழிந்தருளெனவேசாற்றிடவயங்கியவியாசன்
பரிவுடன்வைசம்பாயனைப்பகரென்றுரைத்துயர்பழுவத்தினடைந்தான். (௩௧)

உவமையில்வியாசனிவையெலாமருளியுயர்ந்திடும்பழுவத்தை யடையத்
தவர்களெண்வைசம்பாயனையரசனிறைஞ்சியிச்சரிதைசாற்றெனலும்
பவமகற்றியபாரதத்தினையாதிபருவமேமுதல்மகாவிந்தம்
புவியையாடருமனனுசரோடடைந்ததிறுதியாய்முனிபுகன்றனனால். (௩௨)

பழுதகல்வைசம்பாயனமுனிவன்பாரதமறைந்திடவிதுவின்
வழிவருநிருபன்மகிழ்வுடன்கேட்டுமறுளுறவடர்பிரமகத்தி
யழியவேதுதித்துப்பரமனிப்பாரிலமர்ந்திடுநிதசவதாரம்
விழுமியசரிதையியல்பினைவிரித்துக்கூறெனமாதவன்விளம்பும். (௩௩)

விரைபுரைமலரோன்முதலதாமெவர்க்கும்வெளிப்படாமூர்த்தியாய்விளங்கும்
பரமனோர்கயத்தின்கராவினாலலைந்தபகடுயர்மூலமென்றழைக்கு
முரைமுனரவணினுதவியவிடங்கர்தனைத்துணித்துயர்ந்திடுங்கதியி
னிருளறுகரிதன்னுருவமாயிலங்கவிடுத்தனனிமையவர்போற்ற. (௩௪)

வேறு.

ஆலமெனும்வாளவுணராலயன்மெலிந்து
கோலமுறுவேதமுமிழந்துகுலைவெய்த
வேலையினெழுந்துமதுகைடவரும்வீடச்
சேலெனவடைந்தருள்செய்தான்முனிவரோர்ந்து. (௩௫)

மாமலையைவாருதியுளேநிறுவிவானோர்
காமருறுவாசுகிபிணித்திருகரத்தாற்
றூமிசையவாங்கியிடுநாட்டரணிதாழா
தாமையெனமேவுமிறையாயமுதளித்தான். (௩௬)

வானவரிடர்க்கடல்கடந்துமகிழ்வெய்த
வீனமுறுபொற்கணவனென்புகளொடிந்தே
யூனுமுயிருங்குலையவெஞ்சமர்செய்தோங்கும்
ஏனமெனவையகமிடந்தருளினனால். (௩௭)

ஆயுமறைநன்மதலையண்டமுதல்யாவு
மாயனுளனென்னமதியாதெழுவின்மோதுந்
தீயவனுரம்பிளவுசெய்துநனிசீறி
மீயுயர்மடங்கலெனமேவியருள்செய்தான். (௩௮)

ஏமமலிவாளவுணனீயுமடிமூன்றின்
நேமையறவோரடிகொடேசெகமளந்து
பூமனுலகோரடிபொலிந்திடவுயர்ந்த
வாமனனுருக்கொடுவெயங்கியிடர்தீர்த்தான். (௩௯)

அரசரிருபத்தொருகாலறவறைந்து
கரையிலுவரிப்பெருமைபோலவிசைகாட்டுந்
திரைசெய்குருதிப்புனலின்மூழ்கியுயர்தேவன்
பரசுபொலிபாணியெனவேபடியின்வந்தான். (௪௦)

மன்னனசன்மைந்தன்மகனாகிமலர்மேவு
மின்னினைமணந்தருளிமீளநகர்மேவி
யன்னவளொடுங்கொடியகான்வயினடைந்தே
யின்னல்செயிராவணனைவீட்டினனிலங்க. (௪௧)

வேறு.

திருவனுக்குயர்ந்தபதத்தினைக்கொடுத்துச்சோதிவேனன்புயத்தெழுந்த
பிருதுவாயவனிவிளைதரவியற்றிப்பிறங்கலையொதுக்கியேசமனுய்த்
தரையினைத்திருத்தியிடவனுய்ச்சனித்துச்சதுமறைநெறியனுட்டித்தே
யரிதினவிரதமுருக்குமாங்கதற்குமம்பரீடற்குவீடளித்தான். (௩௨)

வேறு.

பூவினிலுறைவோன்றந்தைபூமிபாரந்தானீக்கத்
தேவகிவயிற்றிற்றோன்றச்சிறந்திடுவசுதேவன்றான்
பாவியாங்கஞ்சன்முன்னுட்படுவசரீரிசொல்லால்
ஆவியைச்செகுப்பனென்னுவாயர்கோன்மனையினெய்தி. (௩௩)

இந்திரைகொழுநன்றன்னையிரோகைபோனிலத்தின்வைத்து
நந்தொளிர்கரத்தசோதைநள்ளிருளதனிற்பெற்ற
வந்தரிதன்னைக்கையாலேந்தியேயரசன்மீண்டு
சிந்தையினிடருற்றெய்தித்தேவகிகையினீய்ந்தான். (௩௪)

தூயவந்தரியாமங்கையழுதிடத்தூங்குகின்ற
வாயிலாருங்கைபெற்றாள்மகவெனவுரைத்தலோடுந்
தீயவனணுகிப்பாரினடிக்குமுன்னுரத்திற்சீறி
மாயையாமங்கைகாலாலுதைத்துவானேகிச்சொல்வாள். (௩௫)

கஞ்சவுன்னுயிரைக்கொல்லக்கடலினிற்றுயிலையோவி
யஞ்சனவண்ணன்மண்ணினவதரித்தனனென்றேவான்
விஞ்சுமம்பிகைதான்கூறிமறைதலும்வெருண்டுசீறி
வஞ்சகனியற்றுமாயமன்னகேளென்றுசொல்வான். (௩௬)

வேறு.

அந்தமிகுநந்தன்விழைவெய்தவருமாயன்
வந்துறனிபாறயிர்நெய்வாரியெனவீசிச்
சிந்தைகளிகூறவெழில்சேரும்வடிவாய
மைந்தனெழில்கண்டுயரசோதைமகிழ்நாளில். (௩௭)

ஆயர்பதிமேவியவசோதைமெலிவெய்த
மாயமுயல்கஞ்சன்விடுவஞ்சனையில்வந்த
பேயின்முலையுண்டுயிர்பிரித்தருள்செய்தானுற்
றூய்மையுறுமாதவர்துதிக்கவருசோதி. (௩௮)

மகுடமணிமின்னவுயர்கஞ்சன்விடுமாயச்
சகடுருவமானநிருதன்னுடல்தகர்ந்தே
துகடரவுதைத்துமகிழ்சோதிசெயும்வீரப்
புகழ்தரணிவிஞ்சியசெயற்புகலலாமோ. (௩௯)

காலெனவளைந்துககனத்துறவிடுத்தே
யாலமெனவானுயருவானவணரற்றி
நீலவரைபோலுடலிலத்துறவுதைத்தான்
பாலனெனமெய்யொளிகொள்சோதிபரமேட்டி. (௪௦)

மிடைந்துமணியாரமவிர்மேனியுறுசாயை
படிந்தவர்பளிங்குநிழல்பற்றுவமெனத்தா
னடைந்துகையின்வந்ததிலையென்றுநலசோதை
யுடன்றுடரும்விம்மியழுதோமிறைமன்னே. (௪௧)

குக்குடமெயானகொடியோன்குருதிவாயிற்
கக்கவுயிர்தெறற்கினுறுகாலனிடையொல்லே
புக்கிடவெடுத்தொருகையாற்றலேபுடைத்து
விக்கிரமம்விஞ்சநகைசெய்தனன்விளங்க. (ருஉ)

சதங்கைமணிநூபுரமிழற்றவருதாள்கள்
விதம்பெறநடித்தருளியன்னையிடும்வெண்ணெய்
இதம்பெறநுகர்ந்திரதவாயினெழுநன்னீர்
ததும்பவொளிர்சோதிபினர்செய்ததருளென்றான். (ருங)

கண்ணனெனவேயுரைசெய்தோழர்களிடேற
நண்ணிமனேதோறுமுறிதாவிநலமிக்க
மண்ணினுடன்விண்ணினேயுமுண்டவயிறுற
வெண்ணெயைநுகர்ந்தருளினன்விமலன்மன்னே. (ருச)

முத்தினவிர்சுட்டிபிறழ்நெற்றியினின்முந்தி
மத்தினணியுந்தயிர்நெய்வாரியெனவோட
வொத்தியுயர்தாழியையுடைத்தனைதன்முன்ன
ரொத்தினகைசெய்தனனிலங்கியுறுமெம்மான். (ருரு)

வேறு.

குதிதாண்டியோடிமனேமேவுகொண்டறிருமேனிகண்டுகுளிராத்
ததிபாண்டனெய்தியெதிரோதகைக்துதருமுத்தியின்றுதருவா
யுதவாதிருக்கினுனேநானசோதைகரமீதினுய்ப்பனெனவன்
றிதமோடுதாழியெழுநாலகங்களுயர்வீடளித்திலகினன். (ருசு)

வேறு.

பருதியொளிபோலுறுசிலம்பினெலிபம்பச்
சுருதிமொழிதேடரியதாளிணைதுலங்க
மருதுகளிரண்டுமிறவேதவழும்வண்மை
கருதுபவர்நற்கதிகலந்துறுதவத்தோர். (ருஎ)

கருமையுறுமேனிதரளத்தினவிர்காட்ட
மருவியுயர்கிண்கிணிமருங்கிடைதயங்க
வுரனுருளவேமுறுவலோடுதவழ்சோதி
யரவணையின்மீதுதுயிலாதியவனய்யா. (ருஅ)

பெற்றநிறைவீதியுறுபேதையர்கள்கையிற்
பொற்றளிரையொத்தொளிகொள்பூண்வளேகள்பார்மே
விற்றுகவுடைத்தவரியற்றுசிறுசோறுஞ்
சிற்றிலுமழித்துநகைசெய்தனனிலங்க. (ருகூ)

வேறு.

சென்றேவதைத்துவருவாயெனுஞ்சொல்கினமிக்ககஞ்சன்மொழியக்
கன்றாகிவந்துதிரிவான்மடிந்துவிழவேகரத்தினிவரிக்
குன்றாதுயர்ந்தவிளவோடுமெண்ணில்கனிவீழவீசுகுழக
னன்றானமூலமெனவந்தவாதியாராவிலேக்குளமர்வான். (சுo)

கொள்ளாதவஞ்சமவைசெய்தகஞ்சன்விடவங்கடர்ந்தகொடியோன்
றுள்ளாவிளங்கன்றுடனேதொடர்ந்துவிளேயாடுசோதிதனேவா
யுள்ளேவிழுங்கவனலாகமீளவுமிழ்போதின்மாயவுருவாம்
புள்வாய்பிளந்துவதைசெய்தசோதிபுவனங்களண்டமமர்வான். (சுக)

பொற்பாயவாவினிறைதுன்னுமாயர்புதல்வோரநேகர்புகுத
வெற்பானமேனியுயர்வானளாவவிரிவாய்விழுங்கிவருஞ்
சற்பாசுரன்றனுடல்விண்டுபோகவவன்வாய்பிளந்தசதுரன்
கற்பாவையாகியெழவேமிதித்தகடல்வண்ணனானபரமன். (௬௨)

யமுனாநதிக்குண்மணலேகுவால்செய்திடமானசோலைதனிலே
தமரானவாயர்தனையோரநேகர்சமையோதனங்கள்கறிகாய்
சமனாகவங்கைதனிலேயமைத்ததயிரோடருந்துநனியை
யிமையோர்துதிக்கவவர்வாய்திணித்துவிளையாடினனெமிறைவன். (௬௩)

இனிதாகிவேலையிடையேதுயின்றவிறைபாரின்ஞானமிலனே
னெனவேநினைந்தவயனுயர்கன்றினிரையோடுமேகவெழில்கொள்
மனைதோறுமேவிநிறையாவைநத்திவருகன்றுமைந்தர்திரளோ
ரனைவோருமாகியொருகாலமாகவமர்வோனுமாதிமுதலே. (௬௪)

பலவாகியேகவுருவாயெழுந்தவுயிர்தோறுநின்றபரமன்
நிலையாண்மைகண்டவயனுயர்கன்றினிரையோடிழிந்துநெடியோய்
சிலையாழிதண்டுவளைவாடயங்குதிருமார்பவின்றுசிறியேன்
றொலையாதிழைத்தபிழைநீபொறுத்தியெனநின்றசோதியவனே. (௬௫)

வேறு.

ஈனநண்ணுமிராவணனேவலாற், கானினண்ணுங்கடியமாரீசனு
மானையன்றுவதைத்திடுவான்முனோன், றேனுகன்றனைச்செற்றனன்சேர்ந்தரோ.

வேறு.

திரைவீசுபாணிநிறையாறுதன்னுட்டிரளாகமாதர்துதிசெய்
துரவோயளித்திவுயிரொன்றுகூறவுயர்வானமீதினுறைவோர்
தருவேயலர்ந்தமலர்தூவமாழையுறுதண்டைதாளினொளிர
வரவானகாளிபடமேனடித்தவவனுழிமேவுமிறைவன். (௬௭)

அனலாயெழுந்துநலிபோதினுயரவர்மாதர்கண்டுவெருவப்
புனல்மேவுகொண்டலெனுமேனியண்ணல்விழிநீர்புதைக்கவெரிபோ
மெனலோடுமாவிதடுமாறவோடியிருகண்கள்மூடவெதிரக்
கனலேநுகர்ந்தகரியோனிலங்குகமலாசனப்பெண்மகிணன். (௬௮)

வேறு.

பொலன்கழற்றெறித்தேவென்றபொற்புயத்
திலங்குநாஞ்சிலிறையைக்கொண்டேகியவ்
பெலம்பன்மாண்டிடமோதுவித்தான்பின்னை
கலன்கள்மன்னுங்குயங்கலந்தானரோ. (௬௯)

நாரமூழ்கியநாரதன்மன்னனைப்
பாரையாண்டுசிறுவருண்டாய்ப்பகை
வீரராவிகல்வெந்நிடக்காட்டினு
னரியன்கழற்பூட்டியனுகுமுன். (௭0)

வேறு.

இரைந்தேகுநாரமெதிரோடிமண்டயமுனாநதிக்குளியல்பாய்க்
கரைந்தேகுசந்தினுடனேடுதுற்றகழிநீர்நிறைந்துகடல்போல்
விரிந்தேயெழுந்தபுனலாடுமாதர்மிகநாணவாடைகொடுநீள்
குருந்தேறிநின்றுநகைசெய்தசோதிமலர்மேவுமங்கைகொழுநன். (௭௧)

கமைசேருமாதர்திரணக்கினத்தர்கனகக்கலிங்கமுநவென்
றிமையோர்துதிக்குமிறையோடுகூறவிருகைகொடேதொழுமெனந்
தமநாணொழிந்துதொழுமாதருக்குநனிகூறைதந்தருளினு
னுமைமாதுநாதர்கையினேர்கபாலமொழிவித்தவாதிமுதல்வன். (௭௨)

இடைமாதரொந்தமரபேயழித்தவிவணைப்பிணிப்பமெணநீள்
படியார்குருந்தின்மிசையேறிநின்றபரமன்கைபற்றியிழியுந்
துடிபோல்மருங்கின்மடமாதரார்கள்தொழுமெம்மைமாயவெனவே
முடிமாதர்பாதவிணைதோறும்வைத்துநகைசெய்தனன்முடிவிலோன். (௭௩)

வேறு.

நந்தநந்தனுக்கன்னங்கொடேநடந், தந்தணாளர்கடேவியராங்கெய்த
வந்துகொண்கன்றடுக்கவொர்மாதராள், சிந்தைமாலடிசேரக்கதிபுக்காள். (௭௪)

வேறு.

ஆவுக்கிரங்குமவுரியுமன்னமமலன்னருந்தியுறவே
கோவத்திறேடுமகவான்விடுக்கவருகொண்டல்மொண்டுபொழியக்
கூவிக்குலைந்துதிரளாயர்கன்றிறொடுகோவுமுய்யவருளிக்
கோவர்த்தனத்தண்வரைகொண்டுமாரிநடைசெய்தனன்கலைகொள்வான்.

அருணன்னெழுந்துவருமுன்னர்நந்தன்யமுனைக்குள்மூழ்குமளவில்
முரணுந்துமாழியரசன்முனிந்துதன்மாளிகைக்கண்முடுகக்
கிரணங்கொளாழிவளைகைகொடேநல்கெருடன்றன்மீதுநெறிபோய்
வருணன்பணிந்துதருதாதையோடுநகர்வந்தனன்மறுவிலான். (௭௫)

ஆயோர்கள்மாதரனைவோருமாகியளவற்றமாலினணைய
வேயாதுபாயுமுழைசித்திரகாயமுரகங்கள்கோவொடுறவே
காயாவின்மிக்கவிறேடலர்ந்தகமலங்கொள்மேனிதிகழ
வேயூதிறெணெண்மலர்தூவிவானினிமையோர்கள்மேவிமகிழ. (௭௭)

வேறு.

நந்தன்மைந்தன்குழலிசைநண்ணவே, முந்துமோரளிமொய்குழல்மாதினை
வந்தங்கன்னைதடுத்திடமாய்ந்துயிர், சிந்தையந்தியளாய்க்கதிசேர்ந்தனள். (௭௮)

தூயமாதர்துருவல்புரிந்துற, மாயமாகிமறைந்தொருமாதின்மே
னேயமாகுவர்போல்நெறிவிட்டகன், றேயமோறுபினும்மவர்முன்னின்றான். (௭௯)

கடமடுத்தவெண்கோட்டுக்களிற்றிறை, யுடனெடுத்திமையோர்மலருந்திடக்
குடமெடுத்துநடித்தனன்கோபர்முன், கடலிடைத்துயில்கொள்ளுங்கரியவன். ()

அரவினன்மணிநீலமொடாரமும், விரவுநல்லணிமார்பில்விளங்கிட
மருவுமாதர்மகிழ்ந்துகைபற்றநற், குரவைகோத்தனன்கோவிந்தன்றானரோ. ()

எண்டவத்தினரொங்கணுந்துள்ளவே, யண்டர்மாதர்களானந்தமாயுற
வண்டுதுன்னியமாலையலைந்தெழச், செண்டுகைகொண்டுதேவனிலங்கினன். (௮௨)

ஒசிந்தநுண்ணிடைமேலிற்கலிங்கமுற், றசைந்துமென்னடையாயர்தம்மாதரார்
இசைந்துநற்பனிநீர்படிந்தேற்றநல், வசந்தமாடினன்மாயவன்றானரோ. (௮௩)

வேறு.

வனமேவுவார்க்குமகிழோதனங்களணியாடைமாலைபலவு
மினமாயெழுந்துபொதுவோர்கள்கூடியிடும்வேலைநந்தன்வெருவ
முனிவோடுவாயினிடையேவிழுங்குமுடுகிக்கனன்றவரவின்
றுனியானசாபமதுதீரமெய்யினடிவைத்தனன்றுணையிலான். (௮௪)

அப்பிற்பிறங்குமலையென்னமேருவரையென்னவாலவிடமே
யொப்பென்னமுந்துமிடபங்களேழுமடியக்கரத்தினுதறித்
தப்பின்றிமெய்கொடருமங்கணீதியுயர்கும்பகன்றனையளா
நப்பின்னைதன்னையிமையோர்துதிப்பநலமாய்மணந்தனனரோ. (அரு)

## வேறு.

தூவியன்னங்கடுன்னியசோலைவா, யாவொடாயரரந்தையுற்றேயெழப்
பாவகாரியக்கஞ்சன்பணித்திடு, மாவின்வாய்பிளந்தானுயர்மாயவன். (அசா)

உக்கிரத்துறுகஞ்சனுரையினு, லககுரூரமன்னுயர்கடம்பதி
புக்கவோதுபதேசம்புகன்றனன், சக்கரக்கைத்தயாபரனுனமால். (அஎ)

மருதுருட்டியதாளினன்மாநதி, பொருமுநீரக்குரூரமன்போயதிற்
சிரமமிழ்ந்துறலூழ்கிடத்தேவன்வாழ், பரமநற்பதங்காட்டினன்பண்புற. (அஅ)

சதுரன்றமரைக்கண்ணினன்சாமள, வெதிரிலாமெய்யனேழுலகாள்பவன்
மதவுவாறமலர்மலர்மினுஞ்ஞ்சீர்பெறு, மதுரைமாநகரெய்திவயங்கினன். (அகூ)

தூசின்மையகல்விப்பவன்றுற்குண, வாசகத்தினின்மற்றவனிற்றிங்கு
ஞசமாகவதைத்துநல்லாடையை, யீசன்சுற்றிமற்றோர்கட்குமீய்ந்தனன். (கூ0)

ஆலமாகியகஞ்சனணிநகர், பாவிஞர்வண்ணனேடெய்தியேபல
மாலைசாத்தினன்வைகுந்தமேறிட, நீலமேனிநெடியவனீய்ந்தனன். (கூக)

இகழ்ந்துபோசனையிக்குவில்லோனெனப், புகழ்ந்துமாதவன்றளினைபோற்றியே
மகிழ்ந்துகூலியுதவியமாமணச், சுகந்தமெய்யிணணிந்தனன்சுந்தரன். (கூஉ)

ஊனிவர்ந்தவுருவமில்கூனியைத், தானிவர்ந்ததடக்கைளாகவே
கூனிவர்ந்தெழில்கொள்ளத்தழுவினுன், வானிவர்ந்தளந்தேயருள்மாயவன். ()

சாபமெய்தியதாதையைச்செற்றவன், சாபமெய்திமுறித்தனன்றழ்விலாக்
கோபர்நாதன்முதற்குணனிந்திர, கோபநேரதரத்திருக்கொண்கனே. (கூச)

போதகந்தெரியாதபுரவலன், போதகந்தனைப்பொன்றப்புடைத்தனன் [ளான்
போதகந்தொறும்வெண்ணெயுண்டேபொலம், போதகந்திகழ்பொற்கொடிமார்பு

சாணூரக்கடுமுட்டிகர்தம்முயிர், சேணொருக்கிவதைத்தனன்செம்பொனர்
தூணொருக்கியெழுந்தவுணன்சுடர்ப், பூணொருக்குராங்கீண்டருள்புண்ணியன். ()

## வேறு.

மதுரையெய்திவரைவில்லிறுத்துமகமேருவேயிவர்செய்மும்மதத்
தெதிர்மலைந்தகரிதபாடிபடப்படியினெதிருமல்லரிருவருமுருண்
டுதிரவேதலைகளுடல்சிதைந்ததிரமோடவென்புதுகளுறவெழுந்
ததிரதாதிமுதலோர்மடிந்துவிழவையன்வெஞ்சமர்விளைத்தனன். (கூஎ)

தங்கமன்னியபசும்பொனலவிர்கோடரளமாளிகையின்மீதுயர்
சிங்கம்விஞ்சவுயராதனத்தின்மிசையேறியெண்டிசைகணோரவே
யிங்குவந்தகணனெங்குமாகியுளனேதுமாயமிவையெனவயர்ந்
தங்கநொந்துயிர்கரைந்தகஞ்சன்மனமஞ்சமாயனவனெய்தினன். (கூஅ)

கண்ணடங்கவிடமே துடிக்கமதுராபுரிக்குளமர்காவலன்
விண்ணிடங்கொளநிவர்ந்தமாடமிசைமேவியேயுடல்வெதும்பியே
யுண்ணடுங்கவமர்கஞ்சனாரவையினேரிமைப்பின்முனமுற்றனன்
மண்ணிடந்துபினுமுண்டுமிழ்ந்தளவுகொண்டுநின்றருளுமாயவன். (௯௯)

வந்தநீலவணிவண்ணமாதவனைவஞ்சனீவருகையேதென
வெந்தையோடனதுதாயையுஞ்சிறையிருத்துமாதுலனுநீயெனச்
சிந்தைவேவவிருகண்கனற்கொளுவதிரும்வாளொடுசெறுத்தெழ
முந்தியேமுடிபிடித்துமற்றவனைமோதினானுயருமாதியோன். (௧௦௦)

கழலவாரமணிகழலநீள்விழிகள்கழலவாகுபுரிகழலவாள்
சுழலவேகுழைகள்சுழலவாகுமுடி சுழலமாமுடிசுழற்றியே
கழுகுகூளியொடுமுடுவல்சூழ்வெழுகுருதிவாயொழுகுகலனுயி
ரழியமார்பினிடையழகுகொண்டமுகில்போலவச்சுதன்மிதித்தனன். (௧௦௧)

சிந்துமாமனுடல்பொடியதாகவவன்மார்பினின்றதிருமார்பனை
யந்தமாமுனிவரயனொடிந்திரனுமந்தரத்துமலர்சொரியவே
தந்தையானவசுதேவனும்மனைவிதன்னொடும்மதலைதன்வயின்
வந்துமார்புறவணைக்கவன்னைமுலையுண்டனன்னுயருமாதவன். (௧௦௨)

கஞ்சனன்னைமகிழ்தாதைமற்றவர்கிளைக்குளாமவர்களிப்புற
மஞ்சனென்னவவண்வந்தமாயவனைமார்புறத்தழுவிமன்னவர்
செஞ்சொலின்னிதமுரைப்பவெஞ்செயிரகற்றுபோசனருள்சேயதாம்
வஞ்சமில்லவனைமுடிமிலைச்சியருள்செய்தனன்னுயருமாதவன். (௧௦௩)

வளமலிந்துவசுதேவனுந்தனதுமார்புறத்தழுவிமைந்தனாங்
களவின்வெண்ணெய்நுகர்கண்ணனுக்கவிர்கொள்கமலமாமலரின்முனிநிக
ரளவிலந்தணர்கள்வாசுதேவனெனநாமமோதியனருன்வளர்த்
துளமகிழ்ந்தெழின்முநூலணிந்திடவுவந்தனன்னெவருமொப்பிலான். (௧௦௪)

மதுரைமேவிமகிழ்மாயவன்முனம்வளர்ந்தவாயர்பதிதனைமறந்
துதவுநான்மறைகள்பலபுராணமுபதேசமீய்ந்தருளுமுயர்தவர்க்
கிதமதாகவுயர்குருவினுக்குமுபகாரமாகவெறிகடலின்வீழ்
மதலையோர்கடமைமுன்கொணர்ந்தருளினானுவப்பொடுயர்மாதவன். (௧௦௫)

கஞ்சனன்மனையில்மன்னுதேவியர்கடந்தையாகியுயர்காவலன்
விஞ்சுமாமவுலிமகதராசனுடனேவிளைந்ததுவிளம்பிட
வஞ்சமாமருகனார்மடிந்ததனினெஞ்சுநொந்தெழுமறத்தினா
னிஞ்சிசூழ்துவரையின்கண்வந்திடவெதிர்ந்தனன்னெதிரிலாதவன். (௧௦௬)

இரண்டுபத்தினொடுமூன்றினைக்குரோணியனிகமோடெதிருமகதனார்
திரண்டநற்பரிகடேர்களானைகள்சிதைந்துபோகவுயிரோபிழைத்
தரண்டுபத்தொடெழுபோருமிப்படியலைந்துபாறிடவளக்கர்போற்
புரண்டுசெங்குருதியோடவேயமரின்வென்றனன்புனிதமாயவன். (௧௦௭)

மகதராசனுடையக்கனன்றுமதியாதகாலையவன்வந்துதா
னகுதியோவெனையுமாதவாவெனமொழிந்துநஞ்செனமுடுக்குமத்
தகுதியாலுவரியிறையளித்தநகர்தன்னின்மாதர்சதுரங்கமும்
புகுதவேதனியெதிர்ந்தனன்கமலமங்கைமார்பிடைபொருந்தினான். (௧௦௮)

வந்தகாலையவன்மாரதங்கள்கரிமாவும்வீரருமடிந்திடச்
சிந்தியேயவன்முனோடிமால்வரைமுழைக்குட்சேரநகைசெய்தவ
னெந்தவாண்மையடலிடையர்தங்கள்குலமெய்தினாயெதிர்நிலாயெனா
வந்தமாமலையினூடுதேடுமவன்முன்னிலாதவணடங்கினான். (௧௦௯)

வானுளோர்கள்முசுகுந்தனின்னைமதியாதெழுப்புமவனாருயி
ராணியாகுமெனவறையமால்வடிவினந்தமாபிலனுளமர்துயில்
வானையேகடிதினண்ணிமாமுனிவினோடுகாலையவன்வஞ்சகன்
றானராவெனவழன்றுமோதிமடிவெய்தவேநகைசெய்தானரோ. (௧௧௦)

துயிலகன்றமுசுகுந்தன்முன்னர்வளை தூயவாழிகதைசுடர்வில்வா
ளியலமைந்தகரனாலுமிந்திரையிலங்குமார்பமும்வயங்கிடச்
செயிரகன்றொளிர்கவுத்துவம்மணிசிறப்பமாமவுலிதிகழ்வுற
வயினதேயனடிபரவவேயொளிகொள்மாயவன்னணுகினின்றனன். (௧௧௧)

வணங்கியாடுமுசுகுந்தனுக்கினியவாய்மைகூறிவரம்யானுனக்
கிணைந்ததேதருவனென்னலும்மிறைவவீடளித்தனமெனாதுநீ
சுணங்கனானவடியேனைவன்பிறவிதுய்க்கவெண்ணுவதடாதெனப்
பிணங்குமாதவனையன்பினோடுமுயர்பிரமர்தாதையிவைபேசினான். (௧௧௨)

வதரிகாச்சிரமமெய்தியந்தணர்கள்செனனமாயடைதிவந்துநா
ணிதமதானவுயர்பதமுமீகுவனிருத்தியென்றுரையியம்பவே
முதிருஞானமுடனெடியவாவரிமுராரிநீலமுகின்மேனிய
வெதிரில்சீதரவெனாமொழிந்துமுசுகுந்தனும்மவணினெய்தினான். (௧௧௩)

கண்ணனோடவிறலுடையகாலையவன்முடுகுமாறதுகருத்தெனா
நண்ணியேமகதராசன்மாநிலநடுங்கவந்தவன்முனாகியே
வண்ணமேகவரிவரையினேறுதலும்வன்னியிட்டனனம்மலையின்வா
ழெண்ணிலார்புளினார்மடியமாநகைகொடேகினானிறைவனேதிரற. (௧௧௪)

ஏகுநாரணன்முராரிமால்பரமனீசன்மாதவனியாதவன்
மாகவானுறையுநகரின்வண்மைபெறவருணர்தந்ததுவராபதி
சாகரத்தினிவர்பன்னிரண்டகலநீளயோசனைகொடரணியிற்
போகபூமியைநிகர்த்தநற்பதிபொருந்தினானமரர்புகழவே. (௧௧௫)

மாமணித்திரடயங்குகோபுரம்வயங்கவேதிகைகள்மண்டபம்
வீமணத்தகுழலார்களெண்ணிலர்கள்மேவுமாளிகைகள்வில்விட
நாமணத்தமறையந்தணாளர்கணலங்கொண்மாமுனிவர்நணுகமெய்ச்
சாமளத்தரியுறைந்தபொற்றுவரைசாருவார்விபுதர்மகிழ்வுடன். (௧௧௬)

தும்பிவெம்பரிகடேர்கடுன்னவவிர்தோமரங்மள்கதைசுரிகைவா
ளம்புறைந்தசிலையாயுதத்தினர்களாழிபோனிறையவந்தரத்
தும்பருந்துமலர்மலியவேதிமலையுறுமிமும்முரசொலித்திடச்
செம்பொனாருமணிமாடவீதிகள்சிறந்தபொற்றுவரைமாநகர். (௧௧௭)

அந்தநன்னகரடைந்துதூவியுறுமன்னமன்னவுயர்தேவகி
தந்தைசென்னியினுயர்ந்தபொன்முடிதயங்கநான்மறைதழைத்திட
விந்தைமல்கிடவையானனன்முனிவர்விபுதர்பூமழைவிடுக்கநற்
குந்திமைந்தருயவந்தவெந்தையரவிந்தைகொண்கனினிதுற்றனன். (௧௧௮)

இரேவதன்மகளொடெய்தியிங்கிவடனுயகன்னெனவணியம்பெனச்
சரோருகன்னெதுகுலத்துளானெனவிழிந்துநற்றுவரைசாரவே
யராவுருத்தவிருவோனிரேவதிகழுத்தினிட்டலமிசித்தவன்
விராவிடக்கடியலங்கல்சூடுமணமேவியங்கினிதிருந்தனன். (ககசு)

வேறு.

இரேவதியுடனேதாலகேதனனின்பமெய்தச்
சராசந்தனுருக்குமன்போர்ச்சாலுவன்சேதிராச
னராமுனேர்கருப்பைபோலப்பாறிடவமரின்வென்று
முராரிசீர்விதர்ப்பன்பெற்றமுண்டகமின்னைவேட்டான். (கஉ0)

அன்றியுமெண்கின்வேந்தன்பயந்திடுமென்னமன்னள்
மன்றலரளகபாரச்சத்தியவாமைவானி
னென்றருள்புதல்விவிந்தைபத்திரையெதிரொன்னுரை
வென்றிடுகேவுசலன்றன்மகளொடுவேட்டானன்றே. (கஉக)

வேறு.

சரியில்வான்வயங்குஞ்சலசரமதனைத்தனுவுமிழ்சரத்தினலறுத்து
மருவமரளகவிலக்கிணையென்னுமடந்தையைப்புணர்ந்தபின்னரகன்
சிரசினைத்துணித்தங்கவனிடுஞ்சிறையிற்றீர்ந்திடுமரசர்கள்பயந்த
தெரிவையர்பதினறுயிரத்தொருநூற்றுவரையும்வதுவைசெய்தனனல். (கஉஉ)

உரனுறுநரகன்கவர்ந்திடுகவிகையொளிகொளுங்குண்டலமுதலாய்ச்
சுரர்பதிநகரினடைந்தவன்கரத்திற்றுலங்கிடக்கொடுத்திருந்ததற்பின்
மருவுறவயங்கும்பாரிசாதத்தைவண்மையாற்கனுழன்மேல்வைத்துச்
சரியிலாதிலங்குஞ்சத்தியவாமைமுன்றிலிற்றயங்கிடப்பதித்தான். (கஉங)

சரியிலந்தணனைவதைத்துமுன்படைத்துச்சார்ந்தகண்டாகருணன்முன்
விளைவினினனுசனுடன்கதியடையவருளிமாவிடையவன்வரத்தா
லரியுருத்தரிக்கும்பவுண்டரன்சிரமுமறவருகாசிமன்றலையு
முருளவேதுணித்துச்சுதக்கணன்விடுத்தகிருத்தியையவனெடுமுதிர்த்தான். (கஉச)

அரிவையர்திலகவுருப்பிணிமுதலோரளித்திடுஞ்சுதரொலாம்வயங்க
நிருகன்வெஞ்சாபமகற்றியேவாணன்புயங்களைநேமியாற்றுணித்து
வரைநிகர்மகதன்வலனறச்சாயைவகிர்ந்துவீமன்றனல்வதைப்பித்
தரனருள்வரத்தாலுயர்ந்தெதிர்ந்தடர்ந்தவங்கிசடிபிகரைச்செற்றன். (கஉரு)

தருமன்வேள்வியினிலக்கிரபூசைதடுத்திடுஞ்சேதிபராசன்
சிரசினைத்துணித்துச்சாலுவன்றலையைச்சினத்துடனறுத்திடும்வேலை
யரவுயர்துவசனனுசனங்குரியவழைத்திடுந்துரோபதிமருங்கின்
மருவியவாடைவளர்ந்திடவருளித்தந்தவக்கிரனையும்வதைத்தான். (கஉசு)

அரவுயர்துவசனியற்றுவஞ்சனையாலரசினையிழந்துமாவனத்தின்
மருவுபாண்டவர்தம்மிடரினையொழித்துமற்றவருரையினூற்கண்ணில்
புரவலன்சுதன்பாற்போந்துநாடிரந்துவலவனுய்ப்புரந்தரன்சுதனுக்
கிரதமூர்ந்தவன்முன்களித்திடக்கீதையியம்பியுமுருவுகாட்டினனல். (கஉஎ)

திரௌபதைசுதன்மேற்றிகிரியையெடுத்துத்தீயனும்பகதத்தன்விடுக்க
வருபடையதனையுரத்தினித்திலத்தின்வடமதாய்வயங்கிடவேற்றுச்
சரியிலாச்சுதாயுதலைசிதைந்திடவேவவன்கதைதன்னெழிற்சிரத்தி
னுருமெனவுறவங்கியற்றிவெண்சங்கமூதினனென்னலர்மடிய. (கஉஅ)

சூரர்பதிசுதனங்கியின்விழுந்திடாமற்சுடர்விடுதிகிரியையேவி
யிரவியைமறைத்துச்செயித்திரதன்றன்றலையறும்படியவணியற்றிப்
பருதிதன்குமரன்றொடுத்திடுமுரகம்பழுதுறப்படியிடைத்தாழ
விரதசில்லியினையழுத்தியங்கவன்றுணிறந்திடும்வகையெலாமிழைத்தான்.

உரககேதனனைச்சமீரணன்புதல்வன்வதைக்கத்தன்னூருவிற்புடைத்துக்
குரகதத்தாமாவபாண்டவமெனவேகூறியசொற்பழுதாகத்
தரையினிற்படியுங்கருவினுன்றந்தைசனித்திடமிதித்துயர்குசேலன்
றருதருப்பணத்தைநுகர்ந்தவன்றனக்குச்சரையறவிபவமுங்கொடுத்தான்.

சதுமறைநெறியாலிணையில்வைதீகன்றனையனைவைகுந்தத்தெய்திக்
கதுமெனக்கொணர்ந்துமுனிவர்சாபத்தாற்கடலிடையெழுந்தகோரையினு
லெதுகுலமடியும்வகையினையியற்றியெதிர்றன்மீதெயுங்கிராதன்
சதமகனகரிற்சரீரமோடெய்திவயங்கிடச்சாற்றினன்மன்னே. (௧௩௧)

தாருகன்கொணர்ந்தவிரதமேல்வயங்கித்தன்சரீரத்துடனெய்தி
வேரியங்கமலன்முதலினோர்துதிப்பவிரசைமாநதியினையொருவிப்
பேரொளியாகியுயரும்வைகுந்தப்பதியினெம்பிரானமர்ந்தனனென்
றூர்வமோடுரைப்பவரசனுண்மகிழ்ந்தங்கிறைஞ்சிடமுனிவனுமகன்றான். (௧௩௨)

பாரதமுதலாயரிகதையெவையும்பகர்ந்திடுமுனிவனேகியபின்
மாரதர்வணங்கவுலகினையாண்டுமகம்பலசெய்துமாதானம்
வாரிதன்கரத்தினுறநுகர்முனிநேர்மறையவர்க்கருளிநல்விசையன்
சாரதியானவிறைவனைமறவாதெழிற்சனமேசயனமர்ந்தான். (௧௩௩)

அரிதிருக்கதையாமமிழ்தினைச்செவியிற்பருகிநல்லானந்தமுறநீ
டரையினிற்செங்கோலோச்சிநற்சனமேசயன்றவர்மகிழ்ந்திடவாண்டு
சுரர்துதித்திடவவ்வரசினைத்துறந்துதுலங்கியமுனிவர்கள்வியப்ப
மிருகமார்வனத்தினடைந்துசெய்தவத்தால்விமலன்றன்கதியினையடைந்தான்.

## சனமேசயப்படலமுற்றிற்று.

ஆகப்படலம் ௫௨ - க்குக்கூடிய திருவிருத்தம் ௪௧௧௯.

ஸ்ரீகண்ணபிரான்றிருவடிபுண்ணியத்தாலே

---

ஸ்ரீ

விஷ்ணுமயம்.

௧௩௧-வது

# கற்கிப் படலம்.

ஆழிகொடுத்தம்புயமின்னிருந்தனளென்றறிந்திரையும்
ஆழிகடந்திலங்கைநகரரசனுயிர்களைந்துபினர்
ஆழியினாலரியினவிரகற்றியகிபழுதறவே
ஆழிநிலத்தழுத்திவிஜயற்கருண்மாலடிபணிவாம். (௧)

### வே று.

உவமையில்செனமேசெயனோங்கியே, யவனியாண்டபினரரசாளுவர்
பவமில்சூதபகர்ந்திடுநீயெனாச், சவுனகன்சொலவேவவன்சாற்றுவான். (௨)

அரந்தையற்றுலகாள்செனமேசெயன், புரந்தபூமிபுரஞ்செயனென்பவன்
றிருந்தவாண்டுதிகழ்பவன்மந்திரி, மருந்தைநேர்வராகச்சுவனாமரோ. (௩)

தூய்வராகச்சுவன்றருசுனுவாந், தீயனாஞ்சுனகன்னறஞ்சேர்கிலான்
சாய்விலாதபுரஞ்செயன்றன்சிர, மேயெனும்முன்னறுக்கியெறிந்தனன். (௪)

விருத்தனைபுரஞ்செயவேந்தனைத், துருத்தனாய்வதைசெய்சுனகன்சுதன்
பிரத்தியோதனனாகும்பெயரினோ, னருத்தியாயரசாண்டனனாமரோ. (௫)

### வே று.

அறனிலாப்பிரத்தியோதனன்சுதனாமவமுறுவிசாகயூபன்றன்
மறனுறுமவன்சேய்நந்திவத்தனமன்வருடமுந்நூற்றுமுப்பதின்மேற்
பறையுமெண்வருடம்படியினையாண்டானவன்மகனேசிசுநாபன்
றிறலுறுமவன்றன்செம்மலேகாகபருணனாய்த்திகழ்வுறுவோனே. (௬)

கவினுறுகாகவருணன்கான்முளையேகாட்சியார்மேகவன்னன்ற
னவையகலவன்சேய்கேத்திரகணன்மற்றவன்சுதனவில்விதிச்சார
னவமறுமவன்றனருளியபுதல்வனசாதசத்துருவவன்செம்மல்
பவமறுபீதனவன்பயந்திடுவோன்பழுதிலாவஞ்சயனாமே. (௭)

அஞ்சயன்புதல்வன்நந்திவத்தனனாமவன்சுதன்மகாநந்தியானோன்
விஞ்சியவிவர்கள்வருடமுந்நூறொடறுபதும்விபுலையைப்புரந்தார்
வஞ்சமில்லவன்றன்மனைவிசூத்திரிதான்பயந்திடவயங்கியசிறுவன்
நஞ்சினைநிகராய்வளர்ந்திடும்பதுமாபதியெனுநாமத்தையுடையான். (௮)

அந்தமில்பதுமாபதியருள்புதல்வனயுதயானையின்பலமுடைய
நந்தனும்பெயரோனிமமுதற்சேதுபரியந்தநலனுறுநிருபர்
மைந்தரோடவனாவதைத்தந்தவரசர்மரபினைவேறொடுமறுத்தே
யந்தகனெனவேவருடநானூற்றொடொருபத்தேழுறநிலனாண்டான். (௯)

அருளறுசெனமேசெயன்றவஞ்செய்யவடவியினடைந்தபின்முதலாய்
வருடமாயிரத்தோடொருசதத்தறுபத்தஞ்சினின்மறித்தனனந்தன்
றுரிதனாமவன்சேய்சுமாலிவற்சரன்றொண்ணூறுடன்றெசமுறவாண்டான்
நரகமாரவன்றன்பயந்திடவுயர்ந்தோனமன்சுதனவன்சுதனலவன். (௧0)

நிலவுறுபுலகினலனெலாமறவேநலிந்தவன்மறித்திடவவன்றன்
குலமறவுயருமவுலியர்மரபின்குவவுத்தோட்சந்திரகுப்த
னிலனெலாம்புரந்தானவன்சுதன்வாரிசிராவணன்பயந்திடநிவரும்
பொலனுறுமசோகவருத்தனனவன்றன்புதல்வனாய்வயங்கினன்சுயேசா. (௧௧)

சரியிலாச்சுயேசாபுதல்வன்சங்கதன்மற்றவன்சுதன்சாலிசூகனே
யிருநிலமதனினவன்பயந்திடவேயிலங்கினன்சததனுவாமன்
றருமமாரவன்றன்றனயனும்பிரகத்திரத்தனீங்கிவர்தரையாண்டார்
வருடநூற்றுடனெண்ணான்குறமருவார்திறையிடுமொழையேவிளங்க. (௧௨)

அருளறுபிரகத்திரத்தன்றன்புதல்வனக்கினிமித்திரனவன்சேய்
துரிதமுற்றிடுசெச்சேட்டன்மற்றவன்றன்சுதன்வரமித்திரனாகும்
பரிவுடனவன்றான்பயந்தவனிகரில்பத்திரகனனவன்சிறுவன்
சரியிலாவளிந்தனவன்பெறுகுமரன்சற்குணசோடனாகாமன். (௧௩)

சோடனற்புதல் வன் றுலங்கியதேவபூமீங்கிவர்சுகமுறவே
யாடகந்திரளவவனியைப்புரந்தவருடமோர் நூறதாமவன்றன்
வீடமற்றவன்றன்மரபுமற்றிடவேவிளங்கியகாணவாயனர்கள்
மோடுறநிலனுண்டனர்கள்வற்சரமுந் நூற்றுடன் முப்பதினஞ்சே. (கச)

காணவாயனரிற்காண்டுவைவதைத் துச்கடியசொல்விடணனுந்தெலுங்கன்
பாணியாரயிலாறறிசையினைவென் றுபடியினையாண்டவன்பிராதா
வேணியார்சிவன்போல்விளங்குகிட்டினன்றன் மேதினிமுற்றவும்புரந்தான்
றுணுவாமவன்சேய்சரியில்சீசாதகருணநாமந்தனைத்தரித்தோன். (கரு)

சரியில்சீசாதகருணன்றன்புதல்வனறுமமார்பூவரவரசன்
மருளகலவன்சேய்மறுவிலாலம்போதரனவன்மகனசிபலனும்
விளைசெறியலங்கலவன்சுதன்மேகச்சுவாகிமற்றவனருள்ருள்விடலை
யருளினுலயருமண்டமானவன்றனருளியசுதனருட்டகனே. (கசு)

அருட்டகனருள்சேயாலையனவன்றனருளியசிறுவனுந்தலகன்
பிரட்டகலவன்றனருளியமதலைபிறங்கியபுரீடதன்கலரை
யுருட்டியவயிலையுடையமற்றவன்றனுதவுவோனற்சுதரிசனன்
புரட்டியொன்னலரைவதைக்குமற்றவன்றன்புதல்வனுஞ்சகோரநாமத்தான். ()

அருள்செறிசகோரனருளியசிறுவனவட்டமன்னவன்புதல்வன்றன்
விளைசெறிதொடையல்விளங்கியவிவச்சுவாதியாமவன்றருவிடலை
மருளகன் றிடுநற்கோமதியவன்சேய்மறுவிலாதுயர்சதக்கந்தன்
சரியிலாவவுன்றன்றனையனும்விசயனவன்சுதன்சந்திரபீசன். (கஅ)

இருநிலத்திலங்குஞ்சந்திரபீசனருள்சுதன்சுலோபதியிவன்றன்
மரபுளோர்தலையாள்வருடநானூற்றுடைம்பதாறன்றிடமரித்தான்
சரியிலாவவன்றன்குலமிறந்திடவவ்வீரர்தந்தலைமுறையேழும்
பரிகரிநரர்கண்மிடைந்திடவகன்றபடியினையாண்டனரன்றே. (ககூ)

மற்றவர்மடிந்தபினரிற்சேற்றவர்கடெசதலைமுறைமண்ணையாண்டே
யிற்றிடத்தருமமிறுத்தகண்ணுவர்களெண்ணிருதலைமுறைபுரந்தே
யற்றிடயவனர்தலைமுறையிருநான்கவனியைக்காத்திறந்திடவே
யுற்றபப்பரர்கள்புதுத்தெசராள்வருலகினையறநெறிகெடவே. (உ0)

அருளில்பப்பரர்களிறந்தபின்சகுண்டரறுவரோடெழுவருமாள்வர்
தருமமில்லவர்களிறந்தபின்றசமாஞ்சனர்சமானாலமாளுவர்கள்
மருளராமிவராயிரத்துத்தொண்ணூற்றினென்பதுவருடமாண்டிறப்பர்
முரணுறுமவுனர்வருடமுந்நூறுமுடுகியாளுவர்பதினொருவர். (உக)

மவுனர்கள்மடியச்சிலகலைப்பெயரோன்மண்ணினையாளமற்றவன்சேய்
பவமுறுபூதநந்திதன்செம்மல்பழுதுறுதவங்கிரனவன்றன்
அவமுறப்பயந்தசுதன்பசுநந்தனவன்மகனும்பிரவீன
னவையுறுமிவர்கள்மடிந்திடவாள்வார்நலனில்வாலிகர்பதின்மூவர். (உஉ)

வாலிகர்மடியவயங்குபுட்டியமித்திரன்மன்னனுகுவனவன்சேய்
சீலமிறெசமித்திரனுலகாண்டுகெழியவேயாந்தகர்செறிந்து
ஞாலமாளுவர்களதன்பினர்த்தெலுங்கரெழுவர்நற்பாரையாளுவர்க
ளாலமேநிகராயடர்ந்திடுவேசார்பதியராயவரரசாள்வார். (உந)

அருளில்வேசாரபதியராண்டதன்பினறனிலாநயிடர்களாள்வர்
தனையினினவர்தங்குலமிறந்திடவேதாருறுவிச்சுவமூர்த்தி
யரசனுகுவன்மற்றவன்சுதன்பவரோவருணன்மற்றவன்பெறும்புதல்வ
னிருநிலத்திலங்கும்புளிந்தன்மற்றவன்சேயெதுவெனும்பெயரினையுடையான். ()

ஏதுமனன்சுதனுசுகனவன்பயந்தோனெதிரிலாவீரியவான்று
னுதநிருமூலகாண்டிறந்தவன்மரபுகழிந்தபினுலப்பிலாச்சவர
ரதன்மமாயரசாளுவரவர்குலத்தோடகன்றிடவந்தரர்புரப்பர்
மதியிலாவவர்கள்மரித்தபின்மருளாரவந்தியர்மண்ணையாளுவரோ. (உரு)

அறனிலாதுயருமவந்தியர்மரபுகழிந்திடவாளுவர்வீரர்
மறனுறுமவர்கள்மடியச்சூத்திரர்தம்மரபினோராண்டிறந்திடவே
திறனுறற்புதர்கள்செகமெல்லாமாள்வாரவர்குலந்தேய்ந்ததற்பினரிற்
றறுகணரொழுவர்தனையையாண்டிறப்பத்தருமமின்மிலேச்சராளுவர்கள். (உசு)

தருமமில்மிலேச்சர்மரபினோரநேகர்தனையினையாளுவர்தம்மிற்
றுரிதம்வந்துறவேயமரிடையனேகர்மடிந்திடச்சூத்திரர்முதலாய்
வருணமற்றுயருஞ்சங்கரசாதிமறுவிலாவனுமிகராள்வ
ரறுமறைபுராணசாத்திரமெவையுமருளறநெறியகன்றிடவே. (உஎ)

வருணமுமிலாமல்மறைநெறிப்படியேமணஞ்செயுங்கருமமுமகல
வரிவையர்பலரையணந்திடவதுவுமறனெனச்சம்மதமாகிப்
பருவமோரொட்டிற்சிசுவைமங்கையர்கள்பயந்திடப்படியிடைநரர்க்குப்
புருடவாயுசுஞ்சொல்வருடமுப்பதுமாந்தும்பைபோற்குறுகும்பூமரங்கள். ()

தருமமெய்பொறைசற்குணமருளீகைதவந்தெய்வம்பேணுதலெல்லாம்
இருநிலத்தகலக்கதம்வதைமுயற்சியிகட்சிபொய்வஞ்சனையதன்மம்
மருளிவைமலியமலர்மகள்வாணியகன்றிடமதியிலாக்கயவர்
திரளுவரியினுமதிகமாய்ப்புவிமான்றிடுக்கிடமிடைகுவரன்றே. (உகூ)

அம்புவியிடரையகற்றிடவருள்செய்தவந்தேசத்தினின்வயங்குஞ்
சம்பளகிராமத்துயர்பிராமணரிற்சற்குணவிண்டியசித்துக்
கின்பமார்சுதனுயெழுந்துற்கியின்மேலிலங்கத்தன்கையுறும்வாளா
லும்பர்கள்மகிழவுவரிசூழுலகினுறுகலர்திரள்களைவதைப்பன். (௩0)

பரிகுரமதனற்பரவைசூழுலகிற்பவமுறுகயவர்களெல்லாந்
தரையினிற்றுகளாய்விழுந்திடத்தன்கைதயங்கியகட்கத்திற்றரிக்குந்
திருவினையகன்மெய்ப்பரிமளமதனற்சேடித்தமனிதர்களெல்லாந்
தருமமோங்கிடவேகவியுகமொருவச்சற்குணமாகுவரன்றே. (௩க)

சரியிலாக்கிரோதாயுகம்வரவதற்குச்சற்குணநரர்களாய்நிறைய
விரவிதன்குலத்துக்குயர்மனன்மருவுமிரவிநன்மரபினுக்கிசைய
மருளகன்றிடசெந்தனுப்பிராதாவாய்வயங்குதேவாலியென்பவனும்
புரவலனுயவ்வுகத்தினுக்கமர்வோன்முராரியைப்போற்றிசெய்குவனால். (௩௨)

சரரொடுவேலாரிவிடையனெண்கண்ணன்றுறந்தவர்துதித்துநின்றுடி
விரைசெறிதருவின்மலர்மழிந்திடுவேர்விசும்புறுமுருப்பசிமுதலா
மரிவையர்நடிப்பவுனைசினமறையவந்தரதுந்துமிமுழங்கப்
பரிவெகின்வயங்குமுராரிதன்பரமபதத்திடைவயங்குவனன்றே. (௩௩)

அனந்தனற்சனற்குமரர்க்கருள்செயவவர்கள்சாங்கியாயனற்கறையச்
சினந்தவிரவனற்பராசருக்குரைப்பச்சிறந்திடுமெயித்திரேயற்குக்
கனந்தருதவஞ்சேர்சத்திதன்குமரன்கழறிடவவன்விதுரனுக்கு
மனந்தனின்ஞானமுறப்பகர்ந்திடவேமருளறவோங்குபாகவதம். (௬௪)

நிகரில்வாளபிமன்சுதனெழுதினத்தினிகழ்ப்பதந்தனினுறவே
சுகமுனியருளத்துலங்குபாகவதப்பொருளதாஞ்சுதைநலனெய்தப்
பகர்கதையிதுவென்றுரைத்திடுஞ்சூதன்றனையெங்கள்பவமுன்றன்சொல்லாற்
றகரநற்பதஞ்சேர்ந்துயர்ந்தனமெனவேசவுனகனெடுந்தவருரைத்தார். (௬௫)

வேறு.

ஆசகல்சுகனங்கோதவபிமனற்றயன்கேட்டு
மாசகல்வாசுதேவன்சரிதையைவரைந்துசீராய்ப்
பேசுவோர்கற்போர்கேட்போர்பெருநலச்செல்வமெய்தி
கேசவனடியராகிக்கிளர்பதத்தணுகுவாரே. (௬௬)

## கற்கிப் படலம் முற்றிற்று.

ஆ படலம் ௫௬ - க்குக்கூடிய திருவிருத்தம் - ௪௧௫௫.

ஸ்ரீகண்ணபிரான் திருவடித்தாமரைகளே துணை.

ஸ்ரீ

விஷ்ணுமயம்.

௧௩௨ - வது

# வைநதேயப் படலம்.

அத்தினபுரியையவராளவேவலவனுகி
யத்தியையணிந்தோன்கையிற்கடினையயகற்றிப்பாலா
ரத்தியினமர்ந்துவெய்யகராவினுலலைந்துகூவு
மத்தியினிடர்தீர்த்தாண்டவத்தனையடைநெஞ்சே. (௧)

நத்தொடுதிகிரியேந்துநாரணன்வயங்கிவாழு
முத்தரம்விளையும்பூமிநைமிசாரணியத்தோங்குஞ்
சத்திரயாகமீராறுண்டுறமறைகள்சாற்றுஞ்
சுத்தமெய்த்தவர்கள்சூதன்மகன்றனைநோக்கிச்சொல்வார். (௨)

விரதமாதவரின்மிக்கவியாதன்றனருளினலே
சரதநான்மறையின்சொல்லைச்சார்ந்திடுபுராணமெல்லாங்
கரதலாமலகமென்னக்கழறிடுமெறிஞமாயோன்
பரிவினுவதனுற்சொல்லுஞ்சரிதையைப்பகர்தியென்றார். (௩)

பாரிடைமனிசருய்யப்பங்கயன்மகிழ்ச்சிகூரச்
சீருடைவயினதேயன்செப்பிடச்சிறந்தசொல்லாங்
காருடபுராணந்தன்னைக்கடியவெவ்வினைகளெல்லாம்
வேரொடுமடியவையவிளம்பெனச்சூதன்சொல்வான். (௪)

சரியில்மாதவத்தீர்நேரில்சாத்திகபுராணமாக
வருமறையுருவமானககபதியருளிச்செய்த
பரமநற்சரிதந்தன்னைப்பகரெனப்பணித்தீர்யான்செய்
அரியமாதவத்தின்செய்கையாமெனப்பேசலுற்றான். (ரு)

துனியினையொருவித்துய்யசோதியையுளத்தின்வைத்துத்
தினகரனெனவேபாரிற்சிறந்தசெங்கோலையோச்சிக்
கனகமாதானஞ்செய்தேகனவினுருதிகள்பெய்து
சனகர்கோனியற்றும்வேள்விதனிற்சுகன்றந்தைவந்தான். (சு)

சிரத்தையார்சனகராசன்செய்திடும்வேள்விநோக்க
விரத்தியார்வியாதனெய்திவியந்துளமகிழ்ந்துஞானக்
கருத்தனும்வாசமிக்ககமலமாமங்கைசேரு
முரத்தனுமொருத்தன்றன்னையுளத்தமைத்திருக்கும்வேலை. (எ)

சவுனகன்வாமதேவன்சதானிகன்கும்பயோனி
கவுதமன்வசிட்டன்வீணைமுனிகவுசிகன்சாபாலி
யவமிலத்திரிவான்மீகியங்கிராநாகதந்தன்
பவமில்சாண்டிலியன்மார்க்கண்டயனுடபலரும்வந்தார். (அ)

அத்திரிமுதலாயுள்ளவருந்தவரெல்லாமெய்தி
யுத்தமவரியைநெஞ்சினுறுத்தியேயோகஞ்செய்யுஞ்
சத்தியவதிதன்மைந்தன்றாள்மிசையிறைஞ்சலோடும்
பத்திசெய்திருத்திரென்றேயினியசொற்பகர்ந்தானன்றே. (கூ)

முனிவருக்கினியசொல்லைமொழிந்திடுசுகநற்றந்தை
யனைவருமேககாலத்தடைந்ததேனதுவுமன்றி
மனதினோர்கருமமுன்னிவந்ததிங்கறையுமென்றே
துனியகல்வியாதன்கூறவிருடிகள்சொல்லலுற்றார். (க0)

சதுமறைக்கடலைநீந்தித்தத்துவஞானங்கண்டே
சுதைசுரர்க்களித்தோன்றன்னைச்சோதியென்றறியும்வண்ண
மிதவுபதேசஞ்செய்தாயெமக்கின்பமுறவேபுள்ளின்
பதியுரைசரிதைதன்னைப்பறையெனப்பகர்ந்தானன்றே. (கக)

மாதவரிவைகள்கூறமறைநகரைகண்டவள்ள
லோதுவான்றக்கன்வேள்விதனிலுயர்முனிவரெல்லாம்
போதகத்திடர்தீர்த்தோனைப்புயத்தினிற்பரிப்போனெய்த
வாதரவுடனேசாமகீதங்களறையும்வேலை. (கஉ)

வேறு.

எழொடேழுறுமுலகமெங்கணுமிருசிறைவிரித்தறையமுந்தியே
யூழியின்னடிகாவின்மும்மடியுந்தவும்பர்களுந்துமாமலர்
சூழவெண்டிசைவாசம்விஞ்சிடவேதுலங்கியதும்புராதியர்
யாழ்களோதிடவீணைகந்தருவோரிசைத்திடமிசைகடுன்றஞ்சவே. (கங)

சாமகோடமெண்டிசைபரந்திடவேதயங்கியதபன்மேருவின்
வாமமல்கிடவைகுமாறெனமணிவயங்கியமகுடமாண்புற
வேமரூபமிலங்கவக்கிரதுண்டநல்லொளியெங்குமுந்திட
மீனும்வனமாலைமுத்தினமாலைமரமணியொளிகள்விஞ்சவே. (கச)

வரையெனத்திரள்பீதவண்புயமீதுமாறிருவுருவினனகுறு
தெரியவிந்துவின்வகிர்நிகர்த்திடுதந்தநல்லவிர்திக்கினுற்றிட
வுரமதினுபவீதம்வாசுகியாகவோங்கிருபதுமருமுய
ரிரவியின்னவிர்பரவுகுண்டலமாகியேகுழைதனினிலங்கவே. (கரு)

பொலனுறுஞ்சிரமீதுசங்கனிலங்கவொண்குளிகன்புயந்தனின்
வலயமாகவனந்தன்வாமநற்கடசமாகிவயங்கநேரிலா
நலனுறுங்கடிசூத்திரம்மெனவோங்குதக்ககனண்ணமாழையின்
கலனெனக்கடிவிடமிடைந்தகார்க்கோடகன்கவினோடுமோர்புற. (கசு)

வருணமல்கியவுதரபந்தனமணிகளெங்கும்வயங்கவொப்பிலா
வருணவம்பரமீதுகாஞ்சியின்வயிரமாரவினங்களாரவே
தருணமல்கியதாளினூபுரதாசுவானிடிபோன்முழங்கிட
விருணவிந்திடுகதிரவன்னெனவயினதேயனங்கெய்தினனரோ. (கள)

ஊகம்வானரமெண்குமுற்றவுமுருளவேத்தயரதமன்மைந்தன்மேற்
றோகைபாகர்தம்வரையெடுத்தவன்சுதன்முனிந்துவில்வளையவிட்டிடும்
நாகபாசமன்றேடநண்ணினோனரர்தனந்தரையாக்நாரியர்
போகபாசம்விட்டகலமற்றவர்புனிதராகவேபுவியிலெய்தினன். (கஅ)

சுரர்தருத்தருமலர்சொரிந்திடத்தும்புராதியர்பாடியாடவே
அருமறைத்தவருளமகிழ்ந்துசென்றடியிறைஞ்சிடவச்சுதன்றன்
தூரமிகுத்திடுபுயதடத்தினிலொளிரவேபரித்தருளுமுத்தமன்
சரியிறக்கனல்வேள்வியின்மறைதங்குமுத்தரவேதிசார்ந்தனன். (கக)

வேறு.

மெய்த்தவர்சூழத்தக்கன்செய்திடும்வேள்வியின்கண்
ணுத்தரவேதிமுன்னருதயமாங்கதிரவன்போல்
வித்தகவிகங்கராசன்விண்ணவர்நடிப்பவெய்தச்
சுத்தமாதவர்பணிந்துதொழுதிவைதுதிக்கலுற்றார். (உ0)

இருதயமிருக்கேயாகவிருஞ்சிறைசாமமாகப்
பிரணவஞ்சிரமேயாகப்பிறங்கியநான்குதோளுஞ்
சரியிலாவேதமாகத்தருப்பையேயுரோமமாக
விருவிழியிலங்குகாயத்திரியதாமுருவாவென்றார். (உக)

உதரம்வேதாந்தமாகயூபமேயெயிறதாக
வதரநாத்திரிவேதங்களாகவங்குலிகளெல்லாஞ்
சதுமறைவிபியதாகச்சாமகானங்கணேரில்
மதியெனநாலாம்வேதமருங்கினம்பரமாய்ச்சேர்ப்பாய் (உஉ)

சர்ப்பமேயணியதாகத்தயங்கியவிறைக்காதார
வற்புதவனந்தசத்தியமர்புயகாசிபன்றன்
புத்திரவட்டதிக்கிற்புயங்கபூடணசாத்தீக
வுத்தமவிகங்கராசபோற்றியென்றுரைத்தாரன்றே. (உங)

அருந்தவர்மகிழ்ந்துபோற்றியடியினிலிறைஞ்சநோக்கித்
திருந்திடமறையையோதுங்காசிபமுனிவன்செம்மல்
கரந்தவேணியனேயொப்பீர்கழறிடுமுமக்கியானேர்
வரந்தருவேனிங்கென்னமாதவர்விளம்பலுற்றார். (உச)

யாருநேரொப்பிலாதவச்சுதன்சரிதைதன்னைப்
பாரினுமுய்யும்வண்ணம்பகரெனவிகங்கராசன்
காருடபுராணந்தன்னைக்கழறியேவிசும்பினேக
வேருறுபிரமன்றக்கன்மகந்தனிலெய்தினானால், (௨௫)

ஆயனவணெய்தலோடுமருந்தவரிறைஞ்சித்துய்ய
வயினதேயன்றானிந்தமகந்தனினெய்திமாயோன்
செயலுறுசரிதைதன்னைச்செப்பியேயேகினானென்
றுயருமெண்கணானுக்கந்தக்காதையையுரைத்தானன்றே. (௨௬)

பவமறவிகங்கராசன்பகர்ந்தகாருடபுராணந்
தவர்விளம்பிடவேகேட்டுச்சதுமுகன்மகிழ்ந்திக்காதை
யுவமையில்வேதாந்தத்தினுபனிடப்பொருளாய்ப்புள்ளின்
றுவசனற்பதியையீக்குமென்றுபின்சொல்லலுற்றான். (௨௭)

சிவனுறுசாபந்தன்னைத்தீர்த்தசீதரனுக்கென்றுந்
துவசவாகனங்களாகித்துலங்கியவிகங்கராச
னுவமையில்நால்வேதத்தினுருவமாயொப்பிலாமா
தவன்வடிவாகுமென்னத்தவரிவைசாற்றலுற்றார். (௨௮)

ஈசற்குமீசனாகுமெம்பிரான்சத்தியாக
மாசகனால்வேதத்தின்வடிவமாம்புள்ளின்வேந்தன்
காசிபன்சிறுவனானகாரணங்கழறுகென்ன
வாசமாமலரோனந்தமாதவர்க்குரைக்கலுற்றான். (௨௯)

அரிதனையதனின்வெய்யகயவனையரிக்கவேண்டு
முருவனாயெழுந்தவாபோலுவணனுங்காசிபன்றன்
பெருமகனாகிவந்துபிறந்தனனவன்றான்செய்த
சரிதைநான்மறையின்ஞானசாரமென்றுரைத்துப்போனான். (௩௦)

மலரயன்மகிழத்தக்கன்மகந்தனின்வயினதேயன்
நலனுறநவின்றகாதைநாகதந்தன்றான்கேட்ப
விலகியமுனிவர்க்கொப்பில்வியாதனேரியம்புசொல்லிற்
றொலைவிலாப்பொருளைக்கேண்மினென்றுரைசெய்தான்சூதன். (௩௧)

அருவமாயுருவமாகியளப்பிலாவண்டந்தன்னைச்
சரிரரோமத்திற்றாங்குந்தலைவன்றன்மாயையாலே
வருமொருபகுதியின்கண்மானுறவதினாங்காரந்
தெரியவேயதனிற்பையத்திரளுமுக்குணங்கடாமே. (௩௨)

அந்தமுக்குணத்திற்றாமதத்திலாகாயம்விஞ்சி
வந்திடவதனில்வாயுவயங்கியேயழலோன்றன்னைத்
தந்திடவதனினீரஞ்சனித்திடவதனிற்பூமி
முந்திடப்பொறிகளைந்துமுளைத்திடத்தசமாயிற்றே. (௩௩)

இருமையாமிராசதத்தின்ஞானவிந்திரியமோரைந்துங்
கருமவிந்தியமோரைந்துங்கருதிடுமனமுந்தோன்றச்
சரியில்சாத்திகமிதற்குத்தந்திடுந்தசமாமன்றே
யுரைசெயவுமனேயுற்றங்குறுமதிதெய்வந்தன்னை. (௩௪)

பூதமும்பொறிகளைந்தும்புகலுமிந்தியங்கள்பத்து
மோதிடுமனமுமாயமுயர்தருபகுதிதானு
மேதுவில்மானுங்காரஞ்சீவனோடிருபத்தஞ்சாய்
வாதுசெய்தத்துவத்தால்மாலண்டம்படைப்பன்மாதோ. (௫௫)

புயலெனவயங்குமேனிப்புனிதன்றன்கொப்பூழோங்கிச்
செயலுறுகமலந்தன்னிற்றிகழ்ந்திடுமண்டத்தோடு
மயனையங்குதவவேதானவனண்டர்நகர்களெண்ணில்
வியனுறுதிரியக்கோடுதாவரம்விரித்தானன்றே. (௫௬)

வடவரைநடுவதாகவயங்கியவேழுதீவுங்
கடலதினிடையேதோன்றக்காசினியதனைமுற்றுந்
திடமுறநேமியோங்கல்சிறந்திடவண்டப்பித்தி
மிடையப்பஞ்சாசற்கோடியெனநிலன்விரிந்ததன்றே. (௫௭)

வேறு.

மானசோத்திரத்தின்வரையினினிரவிவையமோடிடவதினச்சின்
மேனுனிசுவணப்பொருப்பினுச்சியின்மேல்விளங்கிடவாயுபாசத்தாற்
றனதுபிணித்துத்துலங்கியதுருவன்சதிரினாற்சோதிசக்கரத்தை
வானவர்மகிழக்கரத்தினாற்றிருப்பவடவரைசுற்றவோர்தினமாம். (௫௮)

பரமன்றனவிராயிலங்கியசிஞ்சுமாரப்பிரசாபதிபைம்பொன்
கிரிமிசைச்சிரங்கீழாகவேயுயரக்கிளர்ந்திடுமிரவியேமுதலாஞ்
சுரருடுவினங்கள்முனிவர்களெழுவர்துருவனோடனைவருந்துலங்கச்
சரியிருதாவிதாதாவென்றேவரிருவருந்தயங்குவரன்றே. (௫௯)

அதலமொள்விதலசுதலமொப்பிலாததராதலமகாதலமகன்ற
விதமுறுவிரசாதலமிகப்புகழால்விளங்குபாதாலமோடேழு
சுதைதருகடலார்புவிபுவலோகஞ்சுவர்க்கலோகம்மகாலோக
மிதமுறுசனலோகந்தவலோகஞ்சத்தியவுலகமோடேழே. (௬௦)

செயலுறிவ்வகையாற்சதுர்த்தசபுவனஞ்சிறந்திடுமண்டமாயிரமாழ்
புயமுடையனந்தகுருபோலேகசிரத்தினிற்பொருந்திடப்பரிப்பன்
வியனுறுமண்டந்தனைவயங்கனல்கால்விசும்பெலாந்தசதசமடங்காய்
மயர்வறவளைக்குமிரும்பகுதியிலிவ்வண்டம்போலநந்தம்வைகிடுமால். (௬௧)

பிரகிருதியினிவ்வனந்தவண்டங்கள்பிறங்கிடவரியதற்குரனாய்
மருவுவனதனுக்கப்புறம்விரசைமாநதிவயங்கிடுமீப்போ
யிரவிகள்பல்லேலொழுந்தனரெனவேயிலங்கியவைகுண்டமதனிற்
றிருவுடன்றிகிரிவலம்புரிதிகழச்சீதரன்சிறந்துவீற்றிருக்கும். (௬௨)

அரிபரனெனவேதெளிந்திடவறைந்துமண்டத்தின்செயலெலாமொழிந்த
சரியிலாவியாதன்றனையடியிறைஞ்சிச்சதிருநாகதந்தன்றான்
மறைமலரயனைநிகர்த்திடுமுனியேமாநதிப்பெருமையுமதனிற்
பரவியேபடிவார்கதிபெறுவனவும்பகரெனத்தவன்பறைந்திடுவான். (௬௩)

சதுமறைதனிலுமுயர்ந்திடுமட்டாக்கரந்தாஞ்சகலதேவதைக்கும்
விதிதருபுருடோத்தமவிறையதிகம்விபுலையிற்பலப்பலபெயராம்
நதியினுட்பாகீரதிநலன்விருந்தாவனத்தினினந்தகோபன்றன்
சுதன்விளையாட்டின்யமுனைமாநதியின்றுறைகளுன்னதமெனச்சொல்வான். ()

மாதவன்விளையாட்டெவிளங்கியமாயமுனையிற்காளிந்திமடுநற்
பாதவமடர்கோவர்த்தனகிரிகோகிருதங்கோபாலம்புண்டரிகம்
மாதவர்துதிகோதனப்பிரியங்கோமதிபுராணம்வற்சபாலம்
போதிலங்கியவித்துறையினிற்படிவார்பவமறப்புனிதராயுயர்வார். (௪௫)

சதிரின்னதிகள்பலவினுமதிகமிணையிலாக்கற்புடையாடன்
பதியினைநெடுநாட்பிரிந்தவன்வரவேபணைக்கையாற்றழுவுபான்மையைப்போற்
சதுமுகன்பிதாவாமரங்கநாதன்வாழ்தமணியவிமானத்தைச்சூழ்ந்து
கதுமெனவுபயபக்கமும்வளைகாவேரியாம்புண்ணியநதியே. (௪௬)

முத்தியைக்கருதிமுனிவர்களிமையோர்முராரிவாழ்சீரங்கநகரிற்
பத்தியுற்றுயர்தாபரங்களாய்ச்சனித்துப்பரனைநெஞ்சழுத்துவரென்றே
வித்தகவியாதன்மொழிந்திடக்கேட்டுவிழுமியநாகதந்தன்றன்
சத்தியவதிதன்குமரனையன்பாலிறைஞ்சியேசாற்றலுற்றனனால். (௪௭)

அரிதிருவரங்கனாகியேவிமானத்தமர்ந்துகாவேரியினுப்பண்
வருசெயலதனைவிரித்துரையென்னவயினதேயன்றவர்க்கருள்செய்
சரியிலிச்சரிதைதனையுயர்ந்திடுநாரதற்கரன்சாற்றியபொருளை
யருமறையுணருநாகதந்தாநீகேளெனவறையலுற்றனனால். (௪௮)

சூரர்முனியுமையாள்கணவனைத்தொழுதுதூயவைகுண்டத்தினினமரும்
பரன்வசுந்தரையிற்பரவுகாவேரிநாப்பணின்பணபணியணைமே
விரவியினனிமீவயங்கியவிமானத்திலங்கியசெயலினையருளென்
றுரைசெயவுரகபூடணன்மகிழ்ந்தேயுயர்தவகேளெனமொழிவான். (௪௯)

ஆதியம்பரமனருளினுபியினினண்டமீரேழ்பொழிலுடனே
வேதனுற்பவமாய்வெருவிநாற்றிசையும்விளிக்கவேயானனநாலாய்த்
தீதறவியற்றுஞ்செயலறியாமற்றிகைத்திடவவன்முனந்துலங்கு
மோதிமவுருவாயுலகளந்தவன்றானுந்தயமாயிவையுரைத்தனனால். (௫0)

அரியெனும்பரமனானுனையென்னுபியினிலம்பெருக்கிடவளித்தேன்
பிரமனென்றுனக்குப்பெயரினையறைந்தேனென்றலும்பிதாமகன்றொழுது
கருணையங்கடனீவிதித்திடுமெனையான்காணவுமுபாயமேதெனவே
விரிவுறுசிருட்டிவரப்பிரணவத்தைவிளம்பெனப்பறந்துபோயினனால். (௫௧)

அரியனவுருவாய்ப்பிரணவம்விளம்பென்றறைந்தவன்பறந்துபோய்மறையப்
பிரமனுண்மகிழ்ந்தப்பிரணவந்தனையுள்ளமைவுறப்பேணியவ்விடத்தி
னுரைசெயற்கரியவுலப்பிலாக்காலமொழிந்துமாதவஞ்செயச்சிருட்டி
வரவிமையவர்கணரர்பசுப்பறவைவரைகடாவரமெலாம்வகுத்தான். (௫௨)

பரவையேழுடனேசதுர்த்தசபுவனமனைத்தையும்படைத்திடும்பிரமன்
மருவிராசதத்தாலிறைவனானெனத்தன்மனத்தினாங்காரம்வந்துதிப்ப
வரியயன்மதமதகற்றிடவிநோதமியற்றுவானெனெண்ணிடவமல
னிருசெவியினுமார்மலமதின்மதுகையிடவரங்கெழுந்தனரன்றே. (௫௩)

அரியிருசெவியினெழுந்திடுமதுகையிடவர்களண்டம்விண்டிடவே [ப்
யுருமெனவதிர்த்தார்த்தொருநொடியிடுமுன்னுகாந்தவெவ்வடவைபோலுருத்து
பிரமனையடர்த்துமறைகளைப்பறித்துப்பெயர்ந்துநீளாழியிற்புகுத
வெருவிநெஞ்சுலைந்துமனத்தினாங்காரம்பழுதுறவிதியலைந்தனனால். (௫௪

மனதிறுங்காரமடிந்திடப்பிரமன்வறிஞனாய்ஞானம்வந்துறவே
யனவுருவமைந்தவரிதனையளித்தபிதாவென்பதறிந்தவனாகிக்
கனவனமுடையோனுதரநாபியினிற் கமலநாளந்தனிலிறங்கி
யினலுறவதின்முள்ளூடற்றசையறுப்பவிழிந்திறங்கினன்பலகாலும். (௫௫)

எண்ணருங்காலமிழிந்துமுள்ளறுக்கவிறங்கியகமலத்தினடியைக்
கண்ணிணையிருநாலுறவிழித்திடவுங்காண்கிலனாய்மதிகலங்கி
யுண்ணடுக்குறவேமீளவுநளினத்துச்சியினேறிமூர்ச்சித்து
நண்ணியென்னிடரைக்களைபவராரென்றிழிந்தயன்பரப்பினினவிந்தான். (௫௬)

களைகணாயெமைக்காத்திடுமெவரெவரென்றரற்றியேக்கந்தனிலழுந்தி
யுளையுமெண்கணன்முன்சலசரவுருவாயுனக்கியான்பிதாவென்றுமுராரி
கிளர்சினமதுகையிடவரைவதைத்துக்கிரீடகேயூரங்களொளிர
வளமலிந்திடவேயுயரயக்கிரீவனாகியேமறையவற்களைந்தான். (௫௭)

கூரியிலாவயனுக்கிருக்குடனெவ்வையுவுஞ்சாற்றியவயக்கிரீவன்றன்
கருடவாகனனாய்ச்சுதன்முனந்தோன்றிக்கழறுவானெனனுடையுரையின்
வருசதுமறையையுணருமந்தணர்கள்பரிக்கலாமற்றிவையறியா
திருநிலத்துழலும்பிராமணர்மாபாதகரெனப்பின்னருமிசைப்பான். (௫௮)

அருமறையறிந்துமதினுறும்பொருளையறிகிலாவந்தணன்வனத்தின்
மிருகமொத்திடுவன்வேதநான்கினையும்விளம்பிடுங்கருத்திலானெனினும்
பரவையுட்டுலங்கும்பரமனாகியவென்பத்திமைபுத்தியினுள்ளா
னிருநிலவிசும்பினுறுபவற்கதிகனென்றருள்செய்தவன்மறைந்தான். (௫௯)

சுத்தசாத்திகனாமிறையிவையுரைத்துமறைந்திடத்தொழுதிடுங்கஞ்சன்
சத்தியவுலகத்தமர்ந்தவனெவையுந்தன்பதத்தோடிறுமென்த்தன்
புத்தியினுணர்ந்துதுவாதசாக்கரத்துப்புனிதனைக்கருத்தமைத்துப்பா
லத்தியினனாகியுலப்பிலாக்காலமருந்தவஞ்செய்தனனம்மா. (௬0)

அரிவரவநேகயுகங்கழிந்திடவேயருந்தவஞ்செயுமயனன்று
பரவையுட்பரமன்கமடமாமுருவாயிலங்கிடநோக்கியேபணிந்து
சரியிலாவிறைவனென்றுளங்களிப்பத்தற்சுருபந்தனைக்காட்டென்
றுரைசெயவிமலனவன்றனைநோக்கியுளமளியுறவிவைமொழிவான். (௬௧)

இருநிலமதனிற்கயவரையரிக்கயானெழுந்திடப்பலவகையா
முருவமாங்கெவரும்வெளியுறக்காண்பரொளிகொள்வைகுண்டத்தினமருஞ்
சரியிலாவெனதுதற்சுருபத்தைச்சதுமுகநின்னுடனரனுஞ்
சுரருயர்வலாரியிவர்களுங்காண்டற்கரியதென்றேயிவைசொல்வான். (௬௨)

சலசரநோக்கச்சரியிலாக்கமடந்தியானிக்கச்சகுந்தமெய்ப்பரிசம்
நலனுறவிவற்றின்சிசுக்கடான்வளருநன்குபோனனமீன
யிலகியிங்குயர்ந்தகமடமாய்வயங்கியானுனையளியினாற்காத்தேன்
மலர்மிசையவிர்கொள்பிதாமகவெனவேமாதவன்பின்னருமொழிவான். (௬௩)

சீலமார்புருடோத்தமனெனும்யானீசிறந்திடவெனதுதற்சுருபக்
கோலமார்விமானமுடன்வெளியுறவேகோகனகந்தனினமர்வாய்
மூலமந்திரம்வேதத்தினுக்கதிகமோட்சகாரணமென்றன்மனக்கே
சாலவுமுவப்பாமட்டவக்கரத்தாற்றவமுயல்வாயெனவகன்றான். (௬௪)

கூருமவுருவமுராரியிவ்வசனங்கூறியேமறைதலும்பிரமன்
நாரணற்குவப்பாமட்டவக்கரத்தைநலனுறக்கருத்திடையிருத்திப்
பாரினிற்பரவும்பயோததிமருங்கிற்பவமறவைம்பொறியடக்கிச்
சீருறுதேவவருடமாயிரமுங்கழன்றிடத்தவஞ்செயுமேல்லை. (சரு)

விரசைமானதியின்மீயுயர்பரமபதத்தினும்விமானமேல்விளங்கச்
சிரசின்மேன்மகுடந்திகழமார்பகத்திற்றிருவுபவீதமுஞ்சிறப்ப
விரைசெயுங்கமலத்தடியினூபுரங்கள்விளங்குறப்பீதகவுடையான்
பரிசமார்மருங்குவயங்கவேயனந்தனணையதாப்பணங்கொடுகவிப்ப. (சசு)

கனமிசைநளினக்காடுபூத்தென்னக்கண்கைவாயுந்திகாலிலகத்
தினகரனொளிபோற்றிகழ்மணிவலயஞ்சிறந்தவாமக்கரம்நீட்டிக்
கனகமார்முடியார்சிரசினையெனவேகவினுறுவலக்கரமமைத்தே
யனகனாரணன்மாலச்சுதனனந்தசாயையாமரங்கன்றுஞ்சினனால். (சஎ)

சூரர்மலர்பொழியத்துந்துமிமுழங்கச்சுனந்தனந்தனனுயர்சனந்தல்
சரியிலொண்சனகனியாழுறுமுனிவன்சசிபதியுமாபதியென்போ
ரிருமருங்குறச்சாமரைதினகரனுமிந்துவும்வீசிடச்சேடன்
றரளவெண்கவிகைகவித்திடத்தூபங்கமழத்தீவிகைகளுந்தயங்க. (சஅ)

பிரணவவுருவாய்விளங்கியவிமானம்பிறங்கவந்தரிகரிமுகனு
மருவிடச்சிகரந்தனினுயர்பரமர்வயங்கிடமகுடத்தின்மறைக
ளுருவமாயொளிரப்பதந்தனின்வேள்வியுருவினீட்டியங்கொளிரக்
கருடனற்சிரசிற்கோடுறவரங்கள்கண்விழித்துறங்கிவந்தனனால், (சக)

எண்ணரும்பிரமனிறைஞ்சிநற்றிருவாராதனஞ்செயவரங்கேசன்
கண்ணிணைகளிப்பவிமானமேல்வரலுங்கமலனானந்தநீர்விழியில்
நண்ணவேநடித்துச்சதுமறைப்பொருளாநவினற்றுதித்திசைபாடி
மண்ணணங்கொளிர்கொள்நளினமின்வருடுமெலரடிவணங்கியீதறைவான். (எ0)

சிரசுநற்சவர்க்கஞ்சோத்திரந்திக்குத்தினகரன்சந்திரனயன
மிருதயங்காமன்நாபியாகாயமிலங்கியபாதமேபூமி
வருணன்மேட்டிரம்பூமகள்வசுந்தரைமின்மனைவியர்மறைகளுன்வாக்குப்
பரவுவெங்குரோதமுருத்திரனகப்பள்ளிகொள்பரந்தாமமென்றுன். (எக)

அயனிவைதுதிப்பவழகியமணவாளப்பெருமாளுடனழகார்
புயலெனவிமானந்தனினரவணைகொள்புனிதன்புத்திரன்றனைநோக்கி
யயமுதாசனன்பாவகன்விசும்புடனுங்காரமானகனிரும்பகுதி
யியல்புறுமிவையேயிலங்கிடுமேழாவரணமாயமர்வனென்றிசைப்பான். (எஉ)

சரியிலாப்பரமபதத்தினின்வயங்குந்தத்துவமூர்த்தியும்யானே
யிருவினையகலவருச்சியவவதாரத்தினுக்கியான்பிரதானம்
பரவையுட்டிரைபோற்றிலதயிலம்போற்பரவுவண்ணங்களனைத்துந்
திருவவதாரமனந்தகற்பங்கடொறுஞ்சனித்திடுவனென்றிசைப்பான். (எங)

இரவிமண்டலத்தும்பயோததியிடத்துமிந்திரற்குபேந்திரனாயு
மருவுமென்செயலாலேதிரிதாமாவென்றெனக்குப்பெயர்வகுத்தேதன்
றனையினினரங்கம்வேங்கடமுட்டஞ்சாலக்கிராமம்புட்கரம்வான்
சுரர்துதிவதரிநைமிசவனஞ்சிங்காத்திரியிவையெட்டுஞ்சுவயம். (எச)

இரவிமண்டலத்தும்பயோததியிடத்துமிந்திரற்குபேந்திரனாயு
மருவுமென்செயலாலேதிரிதாமாவென்றெனக்குப்பெயர்வகுத்தேன்
றரையினரங்கம்வேங்கடமுட்டஞ்சாளக்கிராமம்புட்கரம்வான்
சுரர்துதிவதரிநைமிசவனஞ்சிங்காத்திரியிவையெட்டுஞ்சுவயம். (எரு)

உவமையிலயநீமகஞ்செயமருவியவுத்தரவேதியினாப்பண்
டவர்வியப்புறவேவரதனாயெழுவன்றருமதேவதைபணிந்திடவே
பவமறவிடப்பருப்பதத்தழகார்பரமனாயிலங்குவனனந்த
னவையறப்பதிட்டைசெயவவண்பதுமனாபனாய்வயங்குவனானே. (எசு)

நிலமகடவத்தாற்றிருக்கணபுரத்தினெடியவனாகிவீற்றிருப்பன்
நலனுறுமறைகள்பதிட்டையேசெயநாராயணபுரந்தனினமர்வன்
வலனுறுவலாரியுடனுதாசனனும்வணங்கிடவருணமால்வரையி
னிலகுவன்சிபிமன்னிறைஞ்சிடநந்திபுரவிண்ணகரந்தனிலெழுவன். (எஎ)

வருணன்வந்தனையாற்றிருக்கணமங்கைநகரிடைவயங்குவன்மரீசி
யரனெனவெனதுசரணடைந்திடவேயமருவன்மந்தரதலத்தின்
விரணமத்துயர்காவேரிசெய்தவத்தால்விளங்குவன்சேறையம்பதியின்
றருணமார்திருவோடிலங்குவன்நறையூர்தனிற்சதாகதிபணிந்திடவே. (எஅ)

ஈரரொடுமேவுணர்தொழுதலாற்குடந்தைத்தூநகர்த்துலங்குவன்கயிலை
யரனெடுந்தவத்தாற்குசலமால்வரையினமருவனகத்தியன்பணியச்
சரியிலாதுயருந்தாம்பிரபரணிநதியுறுந்தலத்தினிற்சார்வன்
பரவைசென்றிறைஞ்சிப்பதிட்டைசெயக்கும்பத்துவாரந்தன்னினெழுவன். ()

இந்திரத்துய்மனிறைஞ்சிடத்திருமெய்யந்தனினிலங்குவனிணையி
லந்தரம்பணியவிடமொநதிதீரந்தனினமருவனனலோன்
வந்தனைசெயவேநாகையினமர்வன்பதஞ்சலிசெய்யுமாதவத்தா
லிந்துவேணியன்கூத்தாடுஞ்சித்திரகூடந்தனிலிலங்குவனன்றே. (அ0)

விச்சுவகருமாச்செய்யுமாதவத்தால்விளங்குவன்விண்ணகரத்தி
னச்சுதனெனுமன்னெனையிறைஞ்சிடவேயமருவன்கொங்குதேயத்திற்
பச்சிலையுறுபாதவநிறைபாண்டுசெயிலமாதலந்தனிறபடியி
னிச்சயமாகிவயங்குவன்சாளக்கிராமமாய்மனைதொறுநிறைந்தே. (அக)

இறைவனாகியயானிலங்கியவிமானந்தனக்கிரண்டியோசனையெலவு
மறுவிலாமோட்சத்தலமதாமியான்முன்மருவியகோயிலுமிலாது
நெறியையீசாளக்கிராமநற்சிலையும்நீங்கியதேசஞ்சண்டாள
ருறைபுலைச்சேரிதனைநிகர்த்திடுமென்றுயரரிபின்னருமுரைப்பான். (அஉ)

சிகரமண்டபங்கள்சிறந்திடும்விமானச்சீரங்கப்பதியிடைசேரும்
விகலமர்சண்டாளர்திரியக்குமுதலாய்வீடுபெற்றுய்குவர்மறையால்
மகமெணிற்கோடிசெய்தவப்பலமாதானநற்பலமிவையெல்லாம்
நிகரில்காவேரிபடிவர்நற்பலத்திற்சகசரத்தொன்றுநேர்நிலாது. (அங)

பரமனாமெனையாராதனஞ்செய்யுங்கிரிகையைப்பகர்ந்திடிலியமஞ்
சரியிலாநியமமுறவிழுமியதாந்துவாதசாக்கரங்கொடுசெலத்தால்
விரைபுரைமலராலருக்கியமளித்துவிளங்குசோடசவுபசாரம்
பரிவுடனியற்றிப்பவத்தினையழிக்கும்பத்தொன்பதியிடையமர்வார். (அச)

இருநிலமதனிற்பாஞ்சராத்திரிபூசனையெனக்கிட்டவென்னடியார்
கிரிகையினத்தோடுயர்ந்தமந்திரலோபம்பவக்கீழ்மைகளெவையு
மருவினுமொனினுமவமறவொருக்கால்வைக்கும்வெள்ளாவிமாசறுக்கச்
சரியிலாதிலங்கும்பரமெனவவற்கோர்சனனங்காட்டிப்பதந்தருவன். (அரு)

பரமனுமெனக்குமுவப்பதாம்பாஞ்சராத்திரநூலையென்பதியாஞ்
சரியிலாதிலங்கும்விமானரங்கத்தைத்தவர்மகிழ்துவாதசாக்கரத்தைப்
பரவுமென்னடியாரிழிஞரேயெனினுமவர்களைப்பழித்தவர்மறையோர்
மரபமைந்திடினும்புலையரேயவர்நாத்துணித்திடின்மறைகள்சம்மதமாம். (அசு)

இவையெலாமருள்செய்தெண்ணருபிரமரிறைஞ்சிடுமென்றனையுன்றன்
பவமறத்திருவாராதனஞ்செய்யென்றினிதுறப்பகர்ந்தரங்கேசன்
மவுனனுயிலங்கமலரயன்மகிழ்வால்வணங்கியொண்மணியுறுவிமானந்
தவர்துதித்திடத்தன்சிரத்தின்மீப்பரித்துச்சத்தியவுலகத்திற்சார்ந்தான். (அஎ)

வேதநன்மொழியால்விழுமிதாயுயரவிசுவகர்மாவிதித்திடவே
யேதமற்றிலங்கேழாவரணத்துழிரவிநீடுலாந்தனினிலங்கும்
மாதம்வான்மதிதேய்வுறுதுவாதசியின்வயங்கியவுரோகணிமருவ
வாதியாய்விமானத்தமரரியிணையில்சத்தியவுலகத்தினமர்ந்தான். (அஅ)

அத்தநாட்டுவசாரோகணமாகியழகியவோணமேமுதிவாய்
வித்தகவிமானத்தமரரங்கேசன்வீதியெங்கணுமெழுந்தருளிச்
சுத்தமாதவர்கடுதித்திடப்பிரமன்றுலங்குவானதிப்பயந்தன்னால்
நித்தியத்திருவாராதனநடத்தநெறியுறவமர்தினமதனின். (அகூ)

இரவிதன்சுதனுயிலங்கியவைவச்சுதமனுநீதியிம்பரிற்முன்
மருவவேயுலகாள்நலனெலாமுணர்ந்துமலரயன்றன்பதியதனின்
விரைவினிற்கொணர்ந்துவிழுமியோய்விமானத்தமலனைப்பணியெனவிளம்ப
விருகணுங்களிப்பவரியிணைவணங்கியிணையிலானயோத்தியையடைந்தான். (கூ0)

இரவிதன்சுதனுகியமனுநிகரின்மைந்தனுமிக்குவாகுடனே
யரிமணிவிமானத்தயனுறுபதியினமர்ந்திடுமழகெலாமறையப்
பரிவுடனவனுமியானுமவ்விமானப்பரமனையிறைஞ்சவேயருளென்
றுரைசெயவவனையிருகணுநோக்கியுயருமார்த்தாண்டன்சேயுரைப்பான். (கூக)

கமலன்வாழ்பதியைக்காண்குவதரிதுகண்டதுண்டாயினும்விமானத்
தமலனையிறைஞ்சவருந்தவர்தமக்குமரிதெனமனுவிளம்பிடவே
யிமகரனெனவேயழிவுறவயங்குமிக்குவாகுத்துயரெய்திக்
கமையுறுவசிட்டன்கழலிணைப்பணிந்துகரங்குவித்திவைவிளம்பினனால். (கூஉ)

அயனுறும்பதியையடைகுவதரிதேயாயினுமவன்மர்விமானத்
துயரரியிணையாணிம்பரின்வணங்குமுபாயமேதருளெனவுரைப்பத்
தயையுடைவசிட்டனவன்றனைநோக்கிச்சரியிலாவிராமன்வித்தாரச்
செயல்சதகோடிவிரிவதாமதினோர்காதைகேளென்றுசெப்புவனால். (கூங)

இயல்புறுமிராமன்சரிதையிற்பரமபதந்தனிலிலங்கியமுராரி
செயலுறுநிலத்திற்பரவுகாவேரிவளைந்திடச்சிறந்திடும்விமானத்
துயர்வுறவயங்கியயனிராவரவேயவன்பதியுற்றண்டமொழியின்
புயனிகரெனுமெய்ப்புனிதன்வைகுந்தம்புகுதுவனென்றுசாற்றிடுமோல். (கூச)

ஆதலினயன்வாழ்பதியினின்விமானத்தமரரங்கேசனன்னிலத்திற்
றீதறவருவனயன்வரந்தவஞ்செய்திறனுனக்கன்றிவேறிலையா
லீதுநிச்சயமேயெனுமொழியியம்பியியல்புறுவசிட்டமாமுனிவன்
வேதன்மந்திரத்தையிதவுபதேசமாகவேவிளம்பினனன்றே. (௯௫)

பாவமில்வதிட்டனிவைபகர்ந்திடவேபழுதகல்மனுப்பயந்தெடுத்த
காவலன்விமானத்திலங்கரங்கேசன்கடிதினினெய்திடக்கவினார்
தேவியுந்தானும்வனத்திடையெய்தித்திசைமுகன்மந்திரத்தியானம்
நாவிடையமரச்சுரரொடும்வலாரிநடுங்கிடக்கடுந்தவஞ்செய்தான். (௯௬)

தீமைவேரறவேவிமானத்தினிலங்குஞ்சீதரன்வரமனுப்பயந்த
கோமனத்தெழுமைம்பொறியையுமடக்கிக்குறைவரவருந்தவஞ்செயவே
காமனுண்ணடுங்கியுருப்பசியரம்பைகவினுறுதிலோத்தமைகாமன்
சோமநல்வசந்தனிவரைமுற்பவம்போற்சூழுமென்றேவினன்மாதோ. (௯௭)

சுரரிறைவிடுக்கவுருப்பசிமுதலாய்த்துலங்குமங்கையர்சருளகத்
தரியினமுரலப்பரிபுரமரற்றவம்பரமருங்கிடையசையக்
கரவளையொலிப்பத்தரளமாவடங்கள்கலசநேர்தனமிசைப்புரள
விருவிழிகுழையையிடறிடவனம்போலடர்ந்துவந்தெங்கணும்வளைத்தார். (௯௮)

வரையமர்முனிவர்மதிமயங்கிடவேமங்கையரால்மதன்சிலையால்
விரைபுரைமலரின்சிலீமுகந்தொடுக்கமெல்லெனவசந்தனும்வரவே
சரியிலாமனுவின்றனையன்வந்தெதிரேதையையுடனிருத்திரென்றுரைத்து
விரகவேதனையினழுந்திலான்பலமூலங்கொணர்ந்தருந்துமினென்றான். (௯௯)

மாதவம்பெருகமனன்விரகத்தின்வலையினையறுத்துநீரிருமென்
றாதரவுடனேயருக்கியமளித்துப்பலன்கிழங்கருந்துமென்றறையப்
பீதியுண்மகிழ்வுஞ்சமித்தலும்பிறங்காச்சரியமும்பிறந்திடக்காம
னோதிமநடையாருடன்மனுத்தனையன்றனைப்பணிந்திவையுரைத்தனனால். ()

அரனெனைமுனிவாற்செயித்தனனினையிலரசவுஞ்சாந்தியினாலே
விரகமுமொருவியெமையெலாம்வென்றாயென்றவர்வெள்கியேயேகிச்
சுரரிறைதனக்கிச்செயலெலாம்விரிப்பத்துயரமுங்குரோதமும்விளைப்ப
வரைநிகரயிராவதத்தின்மீதிலங்கிவச்சிராயுதங்கொடுவந்தான். (௧௦௧)

இருநிலமதனிலிமையவர்நடுங்கத்தவஞ்செயுமிக்குவாகுவின்மேல்
அரனெனமுனிவோடிலங்குவச்சிரத்தையமரர்கள்நாயகன்கடாவச்
சரியிலாவரசன்றிகிரியைநினைக்கச்சக்கராயுதம்வரவெருவிக்
கரியுடன்விழுந்துகடிதினிற்பாரிக்கமலனோடிவையெலாமறைந்தான். (௧௦௨)

இரவிதன்புதல்வன்சிறுவன்மாதவத்தையிந்திரனியம்பிடக்கேட்டே
மறைமலருறுவோன்விமானமீதிலங்குமாலினையருச்சனைசெய்ய
வரியமாதவஞ்செய்மனன்செயலறிந்தேயருந்துயரெய்திமூர்ச்சிக்க
விரைவினிலிறைவிண்ணுறுமசரீரியாகியேயிவைவிளம்பினனால். (௧௦௩)

திசைமுகவெனையின்றிரவினிற்றிருவாராதனைசெய்தனையதனா
லசைவிலாவயோத்திநகரினிற்சதுரயுகமிருந்ததற்பினரலரி
னிசையுறுமணிசேர்ந்திலங்குகாவேரித்தலத்திடைமருவியிவ்விடத்தி
னிசியுறுமிரவாம்போதுவந்தடைவனீயெனைமனனுக்கீயென்றான். (௧௦௪)

அரியிவையருளவயன்றுயரொருவியம்பொனின்விமானமீதமரும்
பரமனைக்கருடன்சிரசினில்வயங்கப்பறித்திடத்தவஞ்செயுமனன்முன்
விரைவினினடைந்துபணிமிசையிலங்கும்விமலனையருச்சியென்றுரைசெய்
திருகையின்விமானத்தொளிருமாதவனையிக்குவாகுக்கரத்தீய்ந்தான். (கoரு)

அரியுடன்விமானமளித்தயன்மறையவரசனுண்மகிழ்ந்தெழுந்தாடி
விரைவினிற்றனதுசிரமிசைவிமானம்விளங்கவானரிவையர்நடிப்ப
மருமலர்மாரிபொழிந்திடப்பேரிவாரியின்மும்மடிமுழங்கச்
சரயுமாநதிசேரயோத்திமாநகரிற்றவரெலாம்வியப்புறச்சார்ந்தான். (கoசு)

சரையுதண்டமிசைநதியிருமருங்குஞ்சார்ந்திடச்சரியில்சீரங்கப்
புரியமைத்தருளுஞ்சிகரகோபுரங்கள்பொருந்தவேழாவரணத்து
ளரவணைமிசையினகல்விமானத்தினச்சுதன்வயங்கிடவிறைஞ்சித்
தெரிவையர்நிருத்தகீதமுந்திகழச்சிறந்தவாராதனைசெய்தான். (கoஎ)

மீனமாதத்திற்சனியுரோகணியின்விளங்குகம்பத்தினிற்றுவசந்
தானுறத்திருநாள்நடத்தியேமனுவின்றனையன்முன்மகிழ்ந்திடவவன்றன்
குனுவின்வழியிற்றுலங்கியவசமன்சுதன்றசரதனெனுமரசன்
வானவர்மகிழவயங்குபுத்திரயாகந்தனைவளர்த்தனன்மாதோ. (கoஅ)

தயரதன்நடத்துமகந்தனிற்சோழகுலம்வருதருமவன்மாத்தா
ணியல்புறவடைந்தேயிணையிலாவிமானத்திலங்கியபரமனையிறைஞ்சிச்
செயலுறுமனன்முன்மருவுதேசத்தின்றிருவரங்கேசனூர்வரவே
மயர்வறத்தவஞ்செய்குவனெனுமதியோன்மருவுபுட்கரணியின்வந்தான். (கoகூ)

இமகரனுறுபுட்கரணியின்மருவுமெதிரிலாமுனிவரையிறைஞ்சிக்
கமையுடையரசன்கழறுவானயோத்திகவினுறவிளங்கரங்கேச
னமரர்கடுதிப்பவிவணின்வந்தடையவருந்தவம்புரிகுவனெனவே
சமனில்மாதவர்களவன்றனைநோக்கிச்சாற்றுவதுளதெனமொழிவார். (ககo)

சுரர்பயமுறவேமுனிவரைத்துரத்துந்துன்மதிவியாக்கிராசுரன்முன்
னருளாநீவனத்திடையடையவவன்றனைக்கருடவாகனனுய்
வருமிறைதிகிரிப்படைகொடுவதைத்துமறுவிலாத்தாற்பியன்வைகுஞ்
சரியிலாச்சிரமத்திலங்கவேயவன்முன்பணிந்தனம்யாஞ்செய்மாதவத்தால். (ககக)

முத்தியையளிக்குமுதல்வனைத்தொழுதுமுகுந்தவுன்றனையருச்சித்துப்
பத்திசெய்தடியோங்கதிபெறமதிதோய்பயமுறுபுட்கரணியின்க
ணத்தநீயமரவருளுவாயெனவேயரிதிருவாய்மலர்ந்தருளிச்
சுத்தமாதவர்நும்மிடத்தியான்வருநாட்சொல்குவன்கேண்மினென்றறைவான். ()

இரவிதன்மரபினிராகவனாகியெழுமியாணிராவணன்சிரங்கள்
கரமொடுதுணித்துவதைத்துமற்றவன்றன்கனிட்டனுக்குயர்ந்திடும்விமான
மருவிடுமெனையேயளித்திடவவன்முன்மறுவிலாதுமதிடம்வைக்கச்
சரியில்காவேரிவனையவத்தலத்தில்சார்குவனென்றரிமறைந்தான். (ககங)

ஆதலினரசவரியிவணடையவருந்தவஞ்செய்குவாயலையம்
மாதவனருளாலவன்விமானத்தின்வருவனீசிகரகோபுரங்கள்
போதனுமகிழவமைக்குதியெனவேபுகலலும்புரவலன்மகிழ்ந்து
வீதிமண்டபங்கோபுரமதிலேழாவரணமும்விதித்தமர்நாளின். (ககச)

சுரரிடர்கெடவேதசரதவரசன்சுதனெனவரியிராகவனுய்ச்
சரியிலாமிதுலைச்சனகியைமணந்துதபோதனர்வைகுகானேகி
யரியுடனிலங்கையிராவணன்கிளையோடவன்றனைவதைத்துமீண்டயோத்திப்
புரியிடைமகுடம்புனைந்தரசாண்டேயுயர்ந்ததன்பதத்திற்போநாளின். (௧௧௫)

சரயுமாய்தியினமர்நரரரிகளெவைக்ளுஞ்சத்தியவுலகம்
மருவவேகருடவாகனனுகிவயங்குவோன்வீடணன்றன்னை
விரைமலரதனுலருச்சிநீயென்றுவிமானமேல்விமலனையளிப்பக்
கரைசெயற்கரியகளிப்பினுலவன்ருன்கனகமார்விமானங்கைக்கொண்டான். ()

அரனெடுகயிலைமலையினையேந்துவீடணன்முன்னவன்றனினு
முரனுறவுமையாள்பதியுரைந்திடுமிவ்வண்டம்போலுலப்பிலாவண்டஞ்
சரிரரோமத்தினுணிதொறுந்தாங்குஞ்சக்கரன்மருவியவிமானஞ்
சிரசின்மீதொளிரச்சுரர்மலர்பொழியத்தென்றிசைவீடணனடைந்தான். (௧௧௭)

தருமலர்மாரிபொழிந்திடப்பேரிசாகரந்தன்னினுமுழங்கப்
பரனமர்விமானங்கொடுநெறிவருவோன்பருதிவாணுப்பணிநிலங்க
விரைவினின்மதிபுட்கரணிசேர்தலத்தினிலங்கியவிமானத்தையிருத்தி
யருமறைமொழியாலுயர்ந்தமாத்தியானமருக்கியமளித்திடும்வேலை. (௧௧௮)

இரவிதன்னவிர்போல்வயங்கியவிமானத்திணையிலாப்பரமன்வந்திலங்க
வருமறைமுனிவர்தருமவன்மாவோடகமகிழ்ந்தாடியேவணங்கிச்
சரிரரோமங்கள்சிலிர்ப்பவானந்தவருவிநீர்நயனங்கடரவே
பரவைசூழிலங்கைப்பதியமரரக்கர்பிரான்றனைப்பணிந்தனர்மாதோ. (௧௧௯)

மறையறைமுனிவர்தருமவன்மாவோடிறைஞ்சிடமகிழ்ந்தவீடணன்ருன்
வெறியுறுமலரால்விமானமீதொளிரும்விமலனையருச்சனைசெய்ய
நிறைதவமதனுற்சரியில்காவேரிநிவந்திடுமலையிருமருங்கு
முறவயம்படிவார்பவங்களையகற்றியுயர்கதிபெறப்பெருகியதால். (௧௨௦)

அலைகொள்காவேரிநதியிருமருங்குமடைந்திடநோக்கியவரக்க
னலனுறுமரசனுடன்றவர்தமக்குநவிலுவான்மீனமாதத்தி
னிலகுரோகணியினிறைக்குயர்திருநாளிலிலங்கையினடத்திடச்செல்வேன்
மலருறுமயனைநிகருமாதவத்தீரெனவவர்வணங்கியீதறைவார். (௧௨௧)

பரமபாகவதநினதருளாலேபவமகன்றுயர்கதிபெறவே
திருமகள்கொழுநனுவப்பதாந்துவசாரோகணஞ்சிறந்திடுந்திருநாட்
சரியிலித்தலத்தின்மறைபொருளுலவுஞ்சாத்திரநூல்கொடுநடத்தி
யருளெனமகிழ்வோடிலங்கையாள்பெருமானங்குரார்ப்பணஞ்செய்தானறிஞால்.

வனசமாமலரின்மடந்தைதன்மணன்வயங்கிடமீனமாதத்திற்
சனியுரோகணியிற்றயங்கியதுவசாரோகணஞ்சிறந்திடத்தவத்தோர்
இனமனமகிழவிரதவுற்சவமுமிலங்கிடயாவையுமுடித்தே
யனகன்வாழ்விமானங்கொடுநிகரிலாதவிலங்கையினடைந்திடநினைந்தான். ()

விரைவினினிலங்கைநகர்தனின்மேவும்வீடணன்விமானத்தைப்பரிவா
லிருகரத்தெடுக்கவசைகிலதாகியிருமைசேர்நிலத்தின்வேரோட்ட
வரைநிகர்புயங்கீழ்மடுத்தெடுத்திடவும்வருகிலதாகிமண்வீழ்ந்து
ழுருவிமூர்ச்சித்துத்தெளிந்தரற்றுதலும்விமலன்வாய்மலர்ந்திவையுரைப்பான்.

அருளுறநிகரிலரியமாதவஞ்செய்யஞ்ஞுளும்வீடணகேட்டி
நிருதர்வாழ்பதியினமர்கிலேனிவணினிறைந்தபூங்காவினினீழற்
றருமவன்மாவொடிணையிலாமுனிவரிறைஞ்சயான்சார்ந்திடவதற்குப்
பரவுகாவேரியரியமாதவஞ்செய்துயர்ந்தமைபகர்வனென்றறைவான். (கஉரு)

விந்தமால்வரையின்மருங்கினினுயரும்விலங்கல்மேல்மேதினிநதிகள்
சுந்தரமிகுத்தவரிவையராகித்துலங்கியேயமர்ந்திடுநாளிற்
கெந்தருவரில்விச்சுவாவசுப்பெயரோன்கிளரொளிப்பதுமநாபனைத்தான்
வந்தனைசெயத்தெற்கடைகுவோனிவரைவணங்கியேயேகினன்மாதோ. (கஉசா)

தெரிவையராகியிலங்கிடுநதிகளனைவருஞ்சிறந்தகந்தருவன்
றனையினிற்பணியுமலனெனக்குனக்கென்றுரைத்தவர்தமில்விரோதங்கள்
பெருகவேயமரப்பதுமநாபனைத்தானிறைஞ்சுவிச்சுவாவசுப்பெயரோன்
வருபவனிவரைவணங்கமற்றவனைநோக்கியம்மாதர்களறைவார். (கஉஎ)

இயல்பினுவிவணிற்பணிந்தகந்தருவவியாவரையிறைஞ்சினையெனவே
மயினிகர்மடவீரும்முனினதிதிக்கியான்வணங்கினனென்றங்கொருவ
வுயர்பவளியாளியானெனவுரைபதறியினைத்தவர்தாமெலாமொழியக்
கயலுறுகங்கைகாவிரியிருவர்கடுஞ்சினத்தொடும்விரோதித்தார். (கஉஅ)

சுரர்நதியதிகினவவடனினுந்துலங்குகாவேரியானெனவவ்
விருவரும்விரோதித்தயன்பதத்திறைஞ்சியெய்தியவாறெலாமியம்ப
மரைமலருறுவோன்மால்திருவடியின்வயங்கினன்கங்கையாதலினுற்
பெரியவளெனவேபிறங்குகாவேரிபெருந்துயரோடும்வெள்கினளால். (கஉகூ)

சுரர்நதிக்கதிகமாகவேயுன்னித்தூயநான்முகன்வரத்தவஞ்செய்
திசையுறவருகாவேரிமின்முனரிற்றிசைமுகன்றோன்றிவாணதிக்குச்
சரியுறவரம்யான்றருகுவனவளிற்பெரியளாந்தரமுனக்கரிதென்
றுரைசெயச்சேணைப்பதியினினென்னறன்முன்னரினுறத்தவஞ்செய்தாள். ()

தரையினினநேகயுகங்கழிந்திடவேதவஞ்செய்காவேரிதன்முனரிற்
பரமனுகியயான்கருடவாகனனுய்ப்பணிலமுந்திகிரியுமேந்தித்
திருவரத்துறவேயெழுந்துநின்னுப்பண்சிறந்திடுவிமானமீதியான்றான்
மருவுமந்நாளிற்சுரர்நதிக்கதிகமாகுதியெனவரங்கொடுத்தேன். (கஙக)

ஆதலிற்றிருக்காவேரிதன்னுப்பணமர்வன்நீயேகுதியெனலும்
மாதுயருடனும்வருந்திவீடணன்றான்மாயவுன்னடியிணையொருவே
னேதமற்றிடவேயிவணின்வைகுவனென்றியம்பிடவிறைவனீயிருக்கிற்
றீதுறநிருதரடர்வரேகெனவேசிந்தைநொந்தவனிவைசெப்பும். (கஙஉ)

ஆயுசும்விபவமனைத்தையுமிராமனஸ்ரீத்தனன்முத்தியையருள்வாய்
நீயெனவிமானத்தொடுமுனையெனக்குக்கொடுத்தனனிகரிலாவிறைவ
நீயனுநிருதசெனனமுமகலச்சிறந்தவுன்பாதத்தினுறவே
தூயமாகியமஞ்செயுமவையெவையுமறையெனச்சுந்தரன்மொழிவான். (கஙங)

நித்தியகருமமெவையுமென்பிரீதியாகவேநியமமுநடத்திப்
பத்தியுற்றிடவேநிலனையாள்வதுவும்பழுதிலனுயினையெனுநற்
புத்தியையடைந்துமனதினுங்காரம்போக்கியேபொறைமிகுத்தவனுய்ச்
சுத்தனுமெனையுன்னுள்ளத்தினமைத்துத்தொழுகுதியென்றுபின்சொல்வான். ()

அறிஞனுமுனைநானளியினல்நோக்கியரவின்மேற்றென்றிசைமுகமா
யுறுகுவன்கமலனவாந்திரவயந்தானுலாவுபோதுன்னுடனியானு
மறுவிலாவிமானத்துடனயனகரில்வைகிமற்றவன்பதமழியி
னிறைவுறுபரமபதத்தினேகுவநீயஞ்சலேலெனநிகழ்த்தினனால். (க௬௫)

அரியிவையருளிமவுனனாய்வயங்கவறிஞன்மாவிணையடியிறைஞ்சி
யிருவிழியயமாநதியெனப்புரளவரங்கன்வாழ்நகரியையொருவி
வருதுயருடன்றென்றிசைதனிற்போவோன்குடதிசையடிக்கடிதிரும்பிச்
சிரசினால்வணங்கியிலங்கைமாநகரிற்சேர்ந்தரிதாள்சிந்தித்திருந்தான். (க௬௬)

தூயரறவரியைக்கருத்திடையிருத்தித்தூயவீடணனகன்றிடவே
செயலுறுவிமானத்தரவணையமருந்திருவரங்கேசனையன்பா
லியல்புறுமுனிவர்தருமவன்மாவோடிறைஞ்சியாராதனைசெய்து
மயர்வறவமர்ந்தாரென்றுமைமகிணன்மறுவில்நாரதமுனிக்குரைத்தான். (க௬௭)

நந்தனற்றந்தையிவைகழறிடலுங்களிப்புறுநாரதமுனிவன்
விந்தைசேர்திருமால்விமானமீதமருஞ்செயலெலாம்விரித்துரைபுனித
விந்துபுட்கரணிப்பெருமையுமதுசூழ்ந்திலங்கியதீர்த்தமுந்தெரிய
வந்தகாந்தகனேயருளெனமொழியவரனியாழ்த்தவற்கிவையறைவான். (க௬௮)

காசிபமுனிவன்கழறுசாபத்தாற்கவினுறுதேசசுசீங்க
மாசகன்றிடமாதவன்றனக்குரித்தாமறுவிலட்டாக்கரமதனால்
ஏசறவுயர்வவிரெலாமலியவிந்துநீராடியதலந்தா
னாசறுபதஞ்சூழ்ந்தவன்பெயரதனாற்சோமபுட்கரணியாயினதால். (க௬௯)

இரவியின்வளாகம்வயங்குபுன்னைகமதுதனைநோக்கினோரிலங்க
வருபவமொருவுந்திருவுறும்பரிசமகிழ்வொடாலிங்கனஞ்செய்யிற்
சரியில்மெய்ஞ்ஞானந்தருநிழலமர்ந்துசக்கரன்பெயரையுள்கிடிற்றன்
அருமறைவேள்விப்பலமதாம்பிண்டமளித்திடினனேகமச்சயமாம். (க௭௦)

மீதவன்சந்திரனாய்முனிவியாதனுமாய்த்தீர்த்தகாவலர்கடாங்குமுதன்
பாவமில்காலன்வயங்குபுட்கரன்சொற்பழுதிலாப்புக்கராக்கனுமாய்த்
தீவமேநிகராகியவதிதெய்வந்திகழ்பரவாசுதேவனுமாம்
பூவலர்மதிபுட்கரத்தினீராடித்திலமளித்தாற்பவம்போமால். (க௭௧)

சரியில்வாமனனையிகழபசாரந்தவிர்ந்திடத்தவஞ்செய்பார்க்கவன்றன்
மருவியநிலத்தின்வலவதீர்த்தத்துக்குறுதெய்வமிருடிமற்றவனே
துரிதமங்கறுங்காவலன்குமுதன்றூயவனுமதிதெய்வ
முரைசெயிற்சீனிவாசனவ்வயத்தினுறும்வர்பிராமணக்கொலைபோம். (க௭௨)

மோகனநூலைவகுத்திடும்பவங்கண்முரிந்திடவரனெனுமியான்றன்
னாகர்கள்வியப்பத்தவஞ்செயுஞ்சம்புதீர்த்தத்துக்குறுந்தெய்வம்நானே
யோகைகூரிருடியவிற்புக்குத்தீர்த்தக்காவலனுயர்ந்திடுஞ்சுனந்தன்
சாகரத்தமரச்சுதனதிதெய்வஞ்சார்ந்தயமூழ்குவோர்மருட்போம். (க௭௩)

அகலிகைகுசத்திலணைந்திடும்பவங்களகன்றிடவமரர்கட்கிறைவன்
புகலுதற்கரியதவஞ்செயும்வசந்ததீர்த்தத்துக்குறுதெய்வம்பொலனார்
மகபதியிருடிகவுதமன்றீர்த்தகாவலனனந்தன்மாதெய்வம்
மகியுயரனந்தனினையம்படியிற்பிறர்மனையுறும்பவமகலும். (க௭௪)

குகனயில்பெறவேதவஞ்செயும்பலாசுதீர்த்தத்துக்குறுதெய்வங்குமர
ணிகரிலாவிருடியவிற்புக்குத்தீர்த்தகாவலனெடியபத்திரன்றன்
ககபதிபுபத்தினிலங்குகோவிந்தன்கழறிடினதிகதேவதைதா
ணிகழ்விலித்தீர்த்தம்படிந்துகோதானமீய்குவார்மகாபவமறுமால். (௧௪௫)

காார்த்திகையாறுங்கனவிலையணைந்துகந்தனைப்பெறும்பவந்துலைய
நாத்தனிற்பரனைநினைத்துமாதவஞ்செய்நாகதீர்த்தந்தனிலமையுந்
தீர்த்தகாவலன்சுபத்திர்முனிமரீசிபூாவகனுகனற்றெய்வம்
பூத்திருப்பதியேயதிதெய்வந்துப்பும்புனல்படிந்திடுகுவார்பவம்போம். (௧௪௬)

வகுளதீர்த்தத்துக்குறுதெய்வம்வலாரிமகபதிபுரோகிதனிருடி
சிகரனேர்சண்டகோபனுந்தூயதீர்த்தகாவலனதிதெய்வம்
நிகரில்மாதவனன்னீரினிற்படிந்துநெறியுறவம்பரமளிப்பார்
பகர்வதற்கரியவரிவையர்வதைகோவதைமுதற்பவமெலாம்பாறும். (௧௪௭)

சனகன்வேள்வியினைநடத்தியகதம்பதீர்த்தத்திற்சார்வுறுந்தெய்வம்
வனசமாமலரோனிருடியேசனகன்வயினதேயன்னயங்காப்போன்
கனகனந்தகவுத்தமனதிதெய்வங்களங்கமிலாதவத்தோயந்
தனினுறப்படிந்தேயனமளித்திடுவோர்தான்செயும்பவமெலாந்தகரும். (௧௪௮)

ஆம்பிரதீர்த்தந்தனக்குயரிருடிவசிட்டன்வானவரியோன்றெய்வஞ்
சோம்பினைத்துரத்துந்தீர்த்தகாவலன்மெய்துலங்குசேனுபதிநிகரில்
பாம்பினிடித்தவிருடிகேசனன்மாதெய்வமப்பயந்தனிற்படிவார்
தாம்பிதாமாதாத்துரோகமிற்றிடவேசரியில்பூதானங்கள்கொடுப்பார். (௧௪௯)

இந்துபுட்கரணிமுதல்நவதீர்த்தமிலங்கிடப்படிகுவார்பிரமன்
சந்திரனலரியிராமன்வீடணன்முக்கணன்றவனுரதனிவரைப்
புந்தியினமைத்துத்தருப்பணங்கொடுத்துப்புயங்கமீதமர்ந்திடும்விமானச்
சுந்தரன்பிரீதியாகவேதானங்கொடுத்தவர்சூழ்வர்நற்கதியின். (௧௫௦)

தூயவெண்டிரத்துறைவயங்கிடவேதுலங்கியசோமபுட்கரணி
நேயமாய்ப்படியப்பரிசிக்கப்பானநிறைத்திடச்சிரசின்மேற்றெளிக்க
வாயினாற்புகழச்செவியினாற்கேட்கமனத்தினாலுன்னிடக்காணத்
தீயவெந்நரகினுறும்பவமனைத்துஞ்சிதறவேநரர்கதிபெறுவர். (௧௫௧)

வீமனுக்குறுமேகாதசியதனின்விழுமியதாநவதீர்த்த
மாமனைநினைத்துப்படிந்தவர்பத்துத்தலைமுறைவயங்குவர்நிகதியிற்
றீமைவேறவத்துவாதசிதனினிவ்வொன்பதுதீர்த்தத்தின்முழுகிப்
பூமனன்பிதாவைவணங்குவோர்மூவேழ்தலைமுறைபொலிவர்மால்பதத்தின். ()

சோமபுட்கரணித்தலத்திடைப்பிண்டந்துலங்கிடப்பிதுர்க்களுக்களிக்கிற்
றீமைவேறவேசெயுங்கயாச்சிராத்தத்தஞ்சமனதாஞ்சிறந்தகோக்கிராசந்
தூய்மணத்துடனீந்திடினெழுமூன்றுதலைமுறையவரொடுந்துலங்க
வாமையாய்வரைதாங்கச்சுதன்பதத்தினமரர்கள்வியப்புறவமர்வர். (௧௫௩)

நதியினுட்கங்கைமுராரிதன்பத்தர்தனில்ரனுகியநான்சொற்
சதுமறையதனிற்பிரணவந்தெய்வந்தனிலரியதிகமாஞ்செயல்போல்
விதிதுதிசெயவேவிளங்குகாவேரிநாப்பணின்விமானமீதமரப்
பதியுறுமரங்கநிகர்நகர்பதினாலுலகத்துமிலையெனப்பகர்வார். (௧௫௪)

அரவினினிலங்குந்திருவரங்கேசரமர்ந்திடும்பதியிடையடைவா
தனையினின்மரணுந்தம்பிராச்சித்தந்தன்னையிச்சித்திடவேண்டார்
நரரிதமுறவேதிருவரங்கப்பேர்நவின்றிடினுங்கதிபெறுவர்
பரவைசூழெழுதீவினுமிருப்பவருநினைக்கினும்பவமகன்றுயர்வர். (௧௫௫)

தூயரறச்சனனமறவிறப்பிறவான்சுவர்க்கமுநிரையமுமொருவப்
புயலெனவிமானத்தரவணைமிசையின்பொலனுறுமரங்கநற்பெயரை
யியல்புறத்துதித்துக்களித்துநின்றுடியிறைஞ்சிடவறிகிலாமூர்க்கக்
கயவர்கள்நுகருமனந்தனையிலக்கிக்கடியநாய்க்கிடுவதுநலனே. (௧௫௬)

சதுமறையுணர்ந்தபரமபாகவதர்சற்பிராமணருறுமனையின்
நதியினினுயர்காவேரியினயத்தைநலனுறக்கும்பத்தினமைத்து
மதியுறுஞானத்துடனொருதரந்தான்வழங்கினராயினுமவர்தாம்
விதமுறுதசதானப்பலந்தனினும்விழுமிதாம்பலனுறவுயர்வார். (௧௫௭)

இந்துபுட்கரணியயத்தினிற்படிந்தேகாதசிதனின்மிகவருந்தி
விந்தைநாயகனையிறைஞ்சிநற்கானம்விளம்புவார்பரமபாகவதர்
அந்தகன்றிட்டிக்ககப்படார்நிரையமகலமெய்ஞ்ஞானத்தையடைவர்
சிந்தையினரங்கமெனநினைப்பவருந்திகழுவர்முற்பவந்தீய. (௧௫௮)

தூயசீரரங்கயாத்திரைவிரும்பித்துயர்கெடநெறிவருபவர்க்கு
நேயமோடன்னமளித்திடுமவருநீரினைக்கொடுத்திராவைகப்
பாயருள்பவரும்பானுமண்டலத்தைப்பேதித்துப்பழவினையொருவ
வாயிரநாமத்தயனமர்பதத்தினடைகுவர்தமர்கடற்சூழ. (௧௫௯)

ஏகராத்திரிசேர்ந்தரங்கன்வாழ்பதியினிருந்தவர்பவமெலாமிறுமால்
நாகர்தம்பதவியழியுமென்றுன்னிநாரணனமர்பதிபெறவே
சீகரமெறிகாவேரிசூழ்ந்திலங்குந்திருநகர்தனினுறுநரராய்ச்
சாகரமணைசெய்பரமனைவணங்கிச்சனித்திடுந்தவத்தைநத்துவரால். (௧௬௦)

ஓதுதற்கரியவொளிகொள்வைகுந்தத்துயரிறையெளியவன்போலப்
பூதலத்திலங்குஞ்சோமபுட்கரணித்தலத்தினின்விமானத்திற்பொருந்தி
மாதவர்வணங்கவயங்கினனெனவேமகிழ்ந்தாரதற்குரைத்த
தீதெனவியாதனறைந்துபின்னவணினியம்புவதுணர்கெனவிசைப்பான். (௧௬௧)

பிறிதிணையிலாதபராசரமுனிவன்பிருத்தியன்சத்தியன்சுபோத
னெறியுறவயங்கும்பகீரதிமருங்கினெடுந்தவஞ்செய்திடத்தேவர்க்
கிறையவன்விடுப்பவருமரம்பையராலியற்றிடுமருந்தவங்குலைய
வுறுதுயருடனவ்விடத்தினையகன்றேயொப்பில்சீரரங்கமெய்தினரால். (௧௬௨)

இருவருமதிபுட்கரணியிற்படிந்தேயிலங்கியவிமானத்தினுயரும்
பரமனைவணங்கித்துதித்துநின்றுடிப்பழவினைப்பாறவுமினையர்
அருவிகள்பரவவகன்றகாவேரியாற்றிடையருந்தவஞ்செய்ய
விரைவின்வந்தவணின்விழுமிதாந்தியானுருடராயிருந்திடுமேல்வை. (௧௬௩)

சூடகமால்வரையினிறைந்திடுங்கொண்மூப்பொழிந்திடக்குதித்துவந்துயர்கற்
கடகமாதத்திற்கடலெனவதிர்த்துக்கரைமருங்குறப்பருப்பதங்க
ளடியுடன்விழவேயறைந்துசிற்றாரினகமரமுகடுறவாரிப்
படிகிழிந்திடவேயபங்கொள்காவேரிபரந்ததுதரங்கம்வான்முவ. (௧௬௪)

நகவனையசோகமலருறுதூளிநலனுறுங்குங்குமமாரம்
நிகரறுபோதினுறுமணியளகநிறைந்திடுதாமரைவதனந்
திகழ்வுறத்தோன்றுமணற்குவையுரத்திற்குறிப்பதாகியநகில்சிறந்த
துகிர்வனக்குமுதமதரமாய்வயங்குந்தோகைபோற்காவிரியடைந்த. (௧௬௫)

நிறைமகரந்தமதுவினைநுகர்ந்துநிகரில்சைவலமெனும்பச்சை
யுறுகலையகற்றியுவப்பொடுவிடனையணைத்திடுமொண்கொடியேபோல்
வெறியுறுமலரால்மரத்தினைத்திரைக்கைவிளங்கவாலிங்கனஞ்செய்து
பறவைகள்கலவிதன்னிலெண்குரல்கள்பரப்பவேபொன்னியும்பரந்த. (௧௬௬)

வேறு.

சேலெலாநயனமாகச்சிற்சலசரங்களெல்லா
மேலுறுபுளகரோமமாகவேவிளங்குபூவால்
மாலினைப்பூசைசெய்துமறையறைந்தறைவபோலக்
கோலமார்போதினோடுங்குரைத்தசீர்ப்பொன்னியெய்தி. (௧௬௭)

நத்தினம்பரவவோங்குந்தரங்கமெம்மருங்குநண்ணி
நித்திலமெழுவபோலநிறைந்துசீகரங்கள்வீசச்
சத்தியன்சுபோதன்வைகுந்தலத்தினுற்றவர்தம்பக்கம்
வைத்திடுகமண்டலங்கொண்டேகியேவருங்காவேரி. (௧௬௮)

செல்லெனவதிர்த்துப்போதுசிதறிடப்பொழிலைவீழ்த்தே
யல்லலிறவத்தோர்வைத்தகமண்டலமகற்றியப்பா
லெல்லையில்முனிவனுற்காவேரியையிலங்குகையால்
ஒல்லையினமைத்துட்கொள்ளச்சத்தியனும்போழ்தத்து. (௧௬௯)

அரவினின்விமானத்தோங்குமச்சுதன்விசும்பின்மீது
வருவழியாகிமறுவில்மாதவத்தோய்கேட்டி
சுரர்நதிக்கதிகமாகித்துலங்குகாவேரிதன்னைப்
பருகுதறவிர்தியீதுநலனெனப்பகர்ந்தானன்றே. (௧௭௦)

வானசரீரியிச்சொல்வழங்கிடச்சத்தியென்பா
னுகர்நதியொப்பில்லாவயமெனநவிலுநீயுன்
மேனியென்முனரிற்காணவிளங்குவையாகியின்னீர்
பானம்யானொழிவனோவென்றிவைநனிபகர்ந்தானம்ம (௧௭௧)

தேவர்வியப்புறவேயிச்சொற்சாற்றியசத்தியன்முன்
னுவணவாகனனேயாகியுரத்தலர்மலர்மானோங்கக்
கவினுறுதிகிரிசங்குகதைவில்வாள்கரத்திலங்கப்
புவியிடையமரர்பொற்பூப்பொழிந்திடப்பரமன்வந்தான். (௧௭௨)

சுரர்மலர்பொழியத்தோன்றுஞ்சோதியையிறைஞ்சியாடி
யிருவிழிதழைப்பநோக்கியேத்துசத்தியனையன்பாற்
பரமன்மாமுத்தியீவனியாணிந்தப்பதியினீதான்
அரியமாதவஞ்செய்தென்னையடைதியென்றகன்றனம்மா. (௧௭௩)

முத்தியையளிக்குமையன்மொழிந்தவண்மறைதலோடுஞ்
சத்தியன்மகிழ்வினற்காவேரியின்மருங்குசார்ந்து
சுத்தசாத்திகத்தைநல்குந்துவாதசாக்கரத்தையுள்ளி
மெய்த்தவஞ்செய்துமாயோன்வீடுபெற்றுயர்ந்தானன்றே. (௧௭௪)

முத்திசத்தியன்றான்பெற்றசெயலெலாமொழிந்துநேரில்
சத்தியவதிதன்மைந்தன்சரியிலாச்சனற்குமாரச்
சுத்தமாதவத்தோனிந்துதோயும்புட்கரணிதன்னிற்
சித்தசன்றந்தையெய்தச்செய்தவங்கேளென்றோதும். (௧௭௫)

சதுமுகன்றந்தையெய்தச்சனற்குமாரன்றானெய்தி
மதியுறுபுட்கரத்தின்வாயுவேயுணவதாக
வெதியருண்மகிழவேபஞ்சாக்கினிநாப்பணெய்தி
யதிதிசேயும்பரோடுமெஞ்சிடத்தவஞ்செய்தானால். (௧௭௬)

உலாசலின்பிறப்பிறப்பங்கொழிந்திடச்சனற்குமார
னாசுகனுணவதாகவருந்தவஞ்செயும்போழ்தத்து
வாசவன்வசந்தன்காமன்வானமங்கையரோடெய்தி
வீசியதவஞ்செய்பஞ்சாக்கினியின்மெய்வெந்துநொந்தார். (௧௭௭)

அறிவுறுசனற்குமாரனைம்பொறியகத்தடக்கி
நெறியுறத்தவஞ்செய்பஞ்சாக்கினியின்முனிற்காலாற்றான்
வெறியுறுதருமன்பாறிவிதியினுக்கறையவன்றான்
பொறியுறுமுரத்தினானுக்கிவையெலாம்புகன்றான்மாதோ. (௧௭௮)

இந்திரன்பதவியோடேயென்பதமழியும்வண்ணஞ்
சிந்தையினுன்னைவைத்துச்சிகிசகியுணவேயாகச்
சந்திரப்பொய்கைதன்னிற்றவஞ்செய்தான்சனற்குமாரன்
சுந்தரவுணர்தியென்றுவயன்பகர்ந்திடமால்சொல்லும். (௧௭௯)

வேறு.

அனைவரும்வெருவவருந்தவஞ்செய்யுமறிஞனாஞ்சனற்குமாரன்றன்
நினைவினுக்கினிதாமுருவமாயவன்முனிற்பனென்றயன்றனக்கருளித்
தனைநிகரிலாதவிறைவிமானத்திற்சருப்பமெல்லணையினையகன்றே
வினையெலாமகலவயங்கொள்சந்திரபுட்கரணியின்மேயினன்மாதோ. (௧௮௦)

தோத்திரம்பாடிவயங்கிடக்கடிசூத்திரமெழின்மருங்கிடைதுலங்க
நேத்திரங்கருணைநிறைந்திடச்சிரசின்சிகைவெரிநீண்டிடக்குழையின்
காத்திரமணிக்குண்டலமலைந்திடவேகரவிரற்பவித்திரமொளிர
நாத்திரமறைநூலெழமுந்நூலுரத்தினிலங்கவேநாரணன்வந்தான். (௧௮௧)

ககபதிசேனாபதியகிபதிவாள்கதைவளைதிகிரிவில்லிவைகள்
நிகரிலாவேதமொழிபிருத்தியராய்நிறைந்திருமருங்கினுமேவ
மகபதியிமையோர்மலரயன்மகிழமறையினைவிளக்கவேயறைந்து
சிகியுறத்தவஞ்செய்சனற்குமாரன்முன்சேர்ந்தனன்றினகரனெனவே. (௧௮௨)

பிருத்தியர்சூழமறையறைபவனாய்ப்பெயர்ந்திடுமுபாத்தியானவனைத்
திருத்தமாதவனாய்த்திகழ்சனற்குமாரன்வணங்கியேசெம்பொனாசனத்தி
னிருத்தியாச்சரியமெழவிருவிழிகளிலங்கிடநோக்கிமெய்ஞ்ஞானக்
கருத்தினாலிவன்றன்செயலினைச்சிறிதுங்கருதவுமரியதாய்மொழிவான். (௧௮௩)

மறையறைபவனாய்ப்பிருத்தியர்சூழவருமுனையுருவினின்மதனென்
றறையலாமிருக்குமுதற்பகர்செயலாலயனெனமொழியலாமவிராற்
கறையடியிடனாக்களைந்தமாலென்றுகழறலாமிவர்களிலெவனென்
றறிகிலேனுனைநானண்டமூன்றினுக்குமற்புதவென்றிவையறைவான். (௧௮௪)

நீயமர்நகரமெதுகுலமேதுநிகரிலாக்கோத்திரமெதுநற்
றாயெவடந்தையெவனுனக்குவந்ததலைவனார்நீமறைதரவே
நேயமாயவைசொல்பிருத்தியரிவரார்நிகழ்த்துகென்றிறைஞ்சியேயியம்ப
மாயவன்முறுவல்வரும்படியவன்றான்மகிழ்ச்சிகூர்ந்திடவிவைபகர்வான். (கஅரு)

உறையவோர்நகருமில்லையானெங்குமுளன்குலங்கோத்திரமில்லையாற்
சிறுவனென்றெனையேபயந்திடுமன்னையும்பிதாவுமேதெரிகிலேன்சிறந்த
விறைவனையெனக்கெவ்விடத்தினுங்காணேனென்னுடன்வருமிவரெவரொன்
றறிகிலேனிவருநெறியிடையடைந்தாரறிஞகேளிவையெனவறைவான். (கஅசு)

அரியமாதவரினதிகமாயமர்நீயானறைபொருளினையறியென்
றுரைசெய்வான்கருமமெதுநலமொழிதானெதுவிழியெதுநலனென்றாய்
வருவனவெதுசொல்லெதுவெதாதாரமெதுவெதுவயங்குறுதாரந்
தரணியிற்சனனமெதுவிறவாமலிருப்பதேதெனுமுரைசாற்ற. (கஅஎ)

சதுமறையெவையுமறையுபாத்தியனும்புருடனீங்கிவையெலாஞ்சாற்ற
விதியினைநிகர்க்குஞ்சனற்குமாரன்றான்விளம்புவானுசையாமகன்ற
வுததியிற்றாபத்திரயமாமலையின்விடையமாஞ்சுழியிடையுழன்று
விதனமோகங்களெனுமகங்காரக்காமமோடடர்க்கவேமெலிந்தேன். (கஅஅ)

பல்பிறப்பாகியநேகயோனியினுமுழன்றவென்சிந்தையிற்படியுந்
தொல்வினைப்பவத்தாலதுவிதுவென்னுமையமாந்துளிர்கொள்மாதவத்தை
நல்லமாமறையைநவிலுநின்வாக்காந்தறிகையால்நறுக்கிடவிவணீ
சொல்லும்வேதாந்தப்பொருளினையியம்பென்றுரைத்திடச்சோதியுற்றறையும்.

கருமமேதருமம்வசனஞ்சத்தியநற்கண்விசும்பலரியொன்றரியே
னுரைசெயும்லெகுவேசாந்தியாதாரமுயர்ந்தெங்குமுறையிறைசெயலே
சரியிலாவனுதாரம்பரப்பிரமஞ்சதனமுஞ்சலனமுமிலாது
பரணியற்றுவதேயெனவிவைமொழியச்சனற்குமாரனிவைபகர்வான். (ககூ0)

இரவியாவதுவுந்தருமமாவதுவுமியாதெனவுபாத்திபீதறைவான்
சரியில்மெய்ஞ்ஞானந்தபனனேயாகுந்தருமமாவனமறைப்படியே
பரவுகாமியங்கள்பிணியறவுலகப்பற்றறச்சுத்தனுயமர்ந்து
திருமகள்கொண்கன்பிரிதியாயாகஞ்சிறந்திடநடத்திடுந்திறமே. (ககூக)

சீவனில்லாதவுடற்சவமியாதுஞ்சேட்டிக்குமுயற்சியில்லதுபோல்
வீவிலாப்பரமனமர்கிலாவண்டம்விளங்குதலிலாதுபாழாகும்
பாவகனிரவிசமீரணன்முதலாமெவர்களும்பரணியற்றிடவே
காவியெவ்விடத்துந்தயங்குவானெவையும்படைத்தளித்தழிப்பவன்றானே.

இவ்வையெலாமுரைத்துச்சனற்குமாரன்றான்மகிழ்ந்திடவியம்புவானெங்கும்
உவமையில்பரனையறிந்திடவறிந்தேருணர்ந்திடுமுபாயம்வேதாந்தம்
கிவருநற்பொருளைப்பற்றிமெய்ஞ்ஞானநிறைந்திடக்காண்டியேற்பரம
னுவகையோடுன்னுள்வயங்குவனெனவேபிருத்தியரோடவண்மறைந்தான்.

கருத்தினிற்றிமிரமொருவமெய்ஞ்ஞானக்கதிரினைக்காட்டியவறிஞன்
பிருத்தியருடனேமறைதலுமருவிபெருகிடுநயனனுயழியா
வொருத்தனுமிவனென்றவனமர்தலத்தையுற்றடியிறைஞ்சிடுமெவன்றன்
வருத்தமற்றிடவெண்கணன்வரமனத்தின்மகிழ்வுறவணங்கியீதறைவான். (ககூச)

வேதம்வல்லவனுய்ப்பிருத்தியர்சூழவிளங்கியென்முன்னரேயடைந்து
பாதகமொருவச்சரியில்மெய்ஞ்ஞானம்பகர்ந்தவனியாவனென்றறியே
னேதவன்செயலேயெனவுரைத்திடவேயொப்பிலாவரங்கத்தின்விமான
னுதனீவணங்கவடைந்தவனுணர்கென்றிணையிலாநான்முகனவில்வான். (கக௬)

வளைகதைதிகிரிவாடனுச்சேடன்வயினதேயன்மறைஞானங்
கிளர்வுறுசேனைக்கதிபதிமுதலோராமெண்மர்பிருத்தியராக
வளிசிறந்திடவுன்முனரடைந்தவனேயைம்முகனியானுந்தானறியாத்
துளவணிமார்பன்றிருமகள்விரும்புஞ்சோதியாமென்றிவைசொல்வான். (கக௭)

மறையுறுவகையாஞ்சாத்திரமெவையும்வல்லவனுயினும்பரனை
யறியுமெய்ஞ்ஞானமிலாதவன்முறகத்தடிபமெத்தெனவாவன்
நெறியுறுமவனுயீனசாதியரினீசனுயிடினுமால்பத்தி
யுறுமவன்பதினுலகினுள்ளவர்க்குமுயர்ந்தவனுணர்தியென்றுரைப்பான்.

சருகினையயின்றுவளையினினுலப்பில்வருடநற்றவஞ்செய்வார்பலமு
மிரவினுமமிலங்குபுட்கரணிதன்னிருநாவினினுளத்தின்
மருவவேகடிகையளையுறுமளவுமகிழ்விஞேடமருவார்நலத்தை
யுளைசெயிவற்றின்சாசரத்தொருகூறுறுமெனவுரைத்தயனகன்ருன். (கக௮)

அயனிவைமொழித்தங்ககலவேயிணையில்சனற்குமாரன்பரனருளு
மியல்புசார்ஞானமிலங்குதத்துவத்தையிருதயத்திருத்தியேமதிதோ
யயமுறுதலத்தினெஞ்சுகின்மலமாயருந்தவஞ்செய்துவைகுந்தத்
துயர்பரன்சரணையடைந்தனனெனவேயுரைத்துமாமுனிபினர்மொழிவான்.

வேறு.

கோலமயிடம்முழுவைகோளரிகுரங்கந்
தோலறுகுவல்லியமுலப்பிலவைசூழத்
தாலம்வெதிர்தள்ளியுயர்சாலமிவைமல்கு
நீலிவனமென்பததில்யாருநெறிசெல்லார். (உ00)

அந்தவனம்வைகுமதிபாவியருளில்லான்
சந்ததமெய்ஞ்ஞானமிசையேமனதுசாரு
மந்தகனெனச்சிரமுறித்தவர்சொரம்மெல்லாஞ்
சிந்தைமகிழ்வோடுகொடுவெந்துபசிதீர்ப்பான். (உ0க)

நெறியறுகுணத்தனெறியின்கணின்வதைத்த
மறையவர்களெண்ணிலர்கள்மாதர்களநேகர்
முறைமையிலனிவ்வழிமுயன்றுபொருளீட்டி
சிறுவரொடிலாள்மகிழவேதிகழுஞான்று. (உ0உ)

வேறு.

கவுதமியமுனைகங்கைகண்டகைவேணிநீய
பவமகன்றிடவேபாறும்பம்பையேமுதலவானு
நவையறுநதியிற்றேயம்படிந்துநான்மறையையோதுந்
தவர்மகிழ்மறையோனீலிவனந்தனிற்சார்ந்தானன்றே. (உ0௩)

சாத்திரமறையோனீலிவனத்திடைசாரக்கண்டே
காத்திரக்காயத்தோடுங்கயவனுங்கள்வனெய்தி
நேத்திரஞ்சிவப்பக்கையாலவன்றனைநெருக்கத்தூயோன்
வேர்த்துமெய்நடுங்கியேநாக்குழறிடவிளம்பலுற்ருன். (உ0௪)

மாசுறவிளையுநைந்தகலைமருங்கிற்கண்டாயோர்
காசுமென்கையினில்லைக்கடுஞ்சினத்துடனேயென்னை
நாசஞ்செய்ததனாலென்றன்லனுனக்கெய்துமென்ன
நீசனவ்வுரையைக்கேட்டுநகையுறநிகழ்த்தலுற்றான். (௨௦௫)

நெடியவனாகியுன்றன்குரம்பையைவளர்த்தநீதா
னுடைமையில்லாமல்வந்ததென்னெவனுறைவதாகக்
கடிதினிவ்வணின்வந்தாய்கழறெனமொழியத்தூயோ
னுடறமாறநெஞ்சமுளைந்திவையுரைப்பதானான். (௨௦௬)

உத்தரதிசையிற்கங்கையமுனைகண்டகையொப்பில்லா
நத்தினம்பரவுகோதாவிரியியல்வேணிநாரம்
மெத்தியபம்பையீதிற்றோய்ந்துயர்விமானத்தோங்கும்
அத்தனைச்சூழ்காவேரிபடிந்திடவடைந்தேனென்றான். (௨௦௭)

தூயவன்கழறலோடுந்துன்மதிக்கயவன்சொல்வான்
பாயயமலியுமிந்தநதியினிற்படியினெய்து
சாய்விலாநலனேதந்தவியல்பெலாஞ்சாற்றுகென்ன
வாயுமாமறையோனெஞ்சமஞ்சியேயறையலுற்றான். (௨௦௮)

கறவையான்வதைகணுரிவதைநெஞ்சிற்களங்கமில்லா
மறையவர்வதைமற்றுள்ளபவமெலாம்வளர்தலின்றி
யிறவிந்தநதியிற்றோய்வாரிலங்குவர்கதியினென்றே
நெறியுறுமறைவலாளன்நிகழ்த்திடக்கேட்டானன்றே. (௨௦௯)

நவையறுமறையோன்மெய்யைப்பரிசித்தநலத்தினாலுங்
கவினுறுவிமானத்தோங்குங்கருமுகிலென்றமாற்றன்
செவியினையுறுத்தலாலுந்தீயவன்செய்தவெண்ணில்
பவமறவவன்றன்றாளிற்பணிந்திவைபகரலுற்றான். (௨௧௦)

ஆருநேரொப்பிலாதவந்தணவடியேனிந்தப்
பாரினிற்றொலைவிலாதமறையவர்பசுவின்கூட்ட
நாரியரநேகரோடும்வதைத்தயானரகெய்தாமற்
சீருறுகதியிற்சேரவருளெனச்செப்பினானால். (௨௧௧)

கயவனெஞ்சிரக்கத்தோடின்னலன்றனைக்கழறலோடுஞ்
செயலுறுமறையோன்சிந்தைத்துயரறத்தெளிந்துநோக்கிக்
கயலுறுந்திருக்காவேரிபடிந்திடிற்கடினமான
வியமகோரத்திற்புக்காதெய்துவைகதியினென்றான். (௨௧௨)

தரையினிற்செய்தபாவஞ்சகலமுமிணையிலாத
அரியினைச்சூழ்காவேரியடைந்திடனகலுமென்றங்
குரைசெயுமறையோன்றன்னையுவப்பொடுசென்னிமீதி
னிருகரங்குவித்தேயையவேகுதியென்றானன்றே. (௨௧௩)

வதைசெயக்கரத்தாற்பற்றுமறவனெஞ்சிரக்கமெய்தி
யிதமொழிமிக்கபேசியேகனைத்தொழவத்தூயோன்
கதுமென்கடந்துபின்னர்க்கடுகியேபாறிநேரில்
சதுமுகன்றந்தைவாழுமரங்கமாநகரைச்சார்ந்தான். (௨௧௪)

மறையவனேகலோடுமற்றவன்வாய்மையாலே
யறிவுறமனைவிமைந்தனொனும்பரிவகற்றிச்சீயங்
கறையடியுழுவையெண்குகலந்தடர்கானமோவி
வெறிமலர்ச்சோலைசூழ்காவேரியின்மேவும்போழ்தின். (௨௧௫)

வரையெனத்திரண்டதோளார்வலனுறுமயிலையேந்தி
யுருமெனவதிர்த்துச்சூழ்ந்தவுக்கிரக்காலதூதர்
திரையுறவருகாவேரிநதியிடைச்சேர்வான்றன்னை
யெரியெழவிழித்துப்பாசம்பிணித்தடித்திழுக்குமேல்வை. (௨௧௬)

கடியசாதகர்கள்பற்றக்கலக்கமுற்றரற்றுகின்ற
கொடியன்வாயோசைகேளாக்கேசரன்குமுதனென்போர்
படிவிசும்பளந்தோன்பாதம்பணிந்தமர்சேனைநாதன்
அடியவர்நொடியிற்காலதூதரையடர்த்தாரன்றே. (௨௧௭)

கதையினுங்கரத்தினாலும்புடைத்தடித்துயர்கால்வீசு
முதையுறக்குருதிசோரவோடுசாதகர்கடம்மைக்
கதுமெனக்குமுதன்சென்றுகலங்கலீர்நின்மினிந்த
நதியிடைவருவோன்றன்னைநலிவதென்னெவர்நீரென்றான். (௨௧௮)

அரிநகர்க்காவலாளரடைந்திவைமொழிதலோடுங்
குருதிவாயொழுகவோடுங்கொடியசாதகர்கணின்றே
இரவிதன்சிறுவன்றூதரியாங்களிவ்வுலகத்துள்ள
நரர்தமைப்பற்றியெங்கணாதன்முன்விடுவமென்றார். (௨௧௯)

தூயவர்தம்மைப்பற்றத்துணைவர்போலனுகிநேரில்
வீயுறுபொழில்கள்சூழும்விழுமியநெறியினுய்ப்பம்
தீயவர்தம்மைப்பற்றிச்செறுநர்போற்கோரமாகி
காயெரியாய்முட்டைக்குமயனத்தினார்ப்பங்கட்டி. (௨௨௦)

தரையினிற்சீவரெல்லாந்தருமனுமெங்கள்கோமான்
மருவுலோகத்தினெய்திமற்றவர்கருமத்தாலே
நிரையமுஞ்சுவர்க்கந்தானுநிறைந்திடவமர்வரியாங்கள்
வெருவவேபுடைக்குநீரார்விளம்புகென்றறைந்தாரன்றே. (௨௨௧)

சாதகரிவைகள்கூறச்சரியிலாச்சேனைநாதன்
பாதவூழியங்கள்செய்வோமியாமிந்தப்பதியினெய்தத்
தீதறவருவோன்றன்னைச்சினமுறப்பற்றக்கண்டே
மோதினம்நும்மையென்றுமொழிந்திடவவர்கள்சொல்வார். (௨௨௨)

துட்டருக்கதிகனானசோரனந்தணரையட்ட
கட்டனுமிவனைப்பற்றிக்கடியவெந்நிரயந்தன்னில்
விட்டிடப்பிடித்தவெம்மைப்புடைப்பதென்விளம்புகென்னச்
சிட்டனுஞ்சேனைநாதனடியவர்செப்பலுற்றார். (௨௨௩)

எல்லையில்வதைகள்செய்தேயிழிவினையடைந்தோனோனு
மல்விமாமலர்மாநாதனமரரங்கத்தைச்சூழச்
செல்லுறுபொழில்சேரோகயோசனைநிலத்தைச்சேரின்
ஒல்லையிற்பவங்களோடவுயர்குவனென்றாரன்றே. (௨௨௪)

மாதவனடியார் துதிகழ்த்திடமறலிதூதர்
தீதரனகரைச்சேர்வார்தீவினைதீருமாகிற்
பாதவங்கொடிபுற்பூண்டுபெவங்களாலன்றேவிந்தப்
பூதலத்தெழுவதென்றுபுகன்றிடக்குமுதன்சொல்வான். (௨௨௫)

அரவணைமிசையினையனமுதுசெய்பதார்த்தமாக
விரைபுரைதெரியலாகவிளங்குகாவணங்களாக
நிரைகளுக்குணவதாகநிரைமரங்கொடிபுல்லாகிச்
சுரர்தமக்கிச்சையாலேதோன்றுவவொன்றுசொல்வான். (௨௨௬)

இந்துபுட்கரணிதீர்த்தத்திலங்கியநகரைச்சூழ
வந்தமார்நிலத்தினேகயோசனையளவதாகி
இந்திரன்முதலினோர்களியமனுமதியிலாது
வந்திடவரிதுசெல்மினென்னமற்றவர்கள்சென்றார். (௨௨௭)

சந்திரப்பொய்கைகாக்குந்தலைவர்கடண்டானோச்சி
யுந்திடக்குருதிவாயினிடைக்ககவிரைவினோடி
யந்தகன்முன்னர்ச்சென்றோரரற்றியேவணங்கலோடுஞ்
சிந்தையிற்கனன்றுவானாரிரவிசேய்சீறினனால். (௨௨௮)

சீறியவிரவிமைந்தன்றிருவரங்கத்தைச்சூழும்
மாறில்காவேரிதன்னுள்வருபவன்றன்னைப்பற்ற
வூறியகதத்தாற்சேனைபதியடியார்களுற்றே
நூறினனரசனென்பதறிந்தனன்ஞானநோக்கால். (௨௨௯)

அரவணைமிசையினேரில்விமானத்தினமர்ந்துதோன்றுந்
திருவரங்கேசன்றன்னைத்தியானத்தாலிருகைகூப்பி
யிருகணீர்கலுழநாவாற்றுதித்திடுமிரவிமைந்தன்
குருதிவாயொழுகநின்றதூதர்க்குக்கூறலுற்றான். (௨௩௦)

சுரையினைப்பருகிநேரில்சுருதிவல்லாரைச்செற்றுப்
பரிலைவிரும்பும்பஞ்சபாதகரானோரேனுந்
திருமகள்கணவன்வாழுந்திருப்பதிதன்னைச்சேரி
லிரவிகாணிமம்போற்பாவமிறக்கதியெய்துவாரால். (௨௩௧)

ஆதலாலற்பமாகவெண்ணினீரறிவிலாமல்
மாதவன்கரைச்சேரவருபவன்றன்னைப்பற்றி
யோதுதற்கரியமாலினடியவருதையால்நொந்து
பீதியுற்றடைந்தீர்கேண்மினென்றிவைபேசலுற்றான். (௨௩௨)

அரிதிருநகரிற்செல்லாதொழிமினீரடைந்தீராகில்
மருவுமென்பதத்துக்காணியெய்திடுமோவினன்பர்
பரவியுமுடலினன்புபரிபடப்புடைப்பரீது
திரமெனப்பரிதிமைந்தன்றூதர்க்குச்செப்பினனால். (௨௩௩)

மறலிதன்றூதர்பாறவதைசெய்தமறுங்களெல்லாம்
இறமெயினடுக்கந்தீரவிணையிலாப்பொன்னிதன்னி
னாறுபவன்றன்னையஞ்சலென்றுரைசெய்தேசேனை
யிறையவனடியார்நேரிலரங்கத்தினெய்தினாரால். (௨௩௪)

சாதகர்பிணித்தபாசந் துணித்திடத்தயங்கினனைத்
தீதகல்குமுதனோடுங்கேசரனெய்திச்சேனை
நாதன்முன்விடுப்பவன்றான்வணங்கனுநகைசெய்தேதன்
றூதர்களுடனேவைகித்திரிகுதியென்றுசொன்னான். (உ௬௫)

சேனைநாதன்றான்செப்பத்தினம்பவஞ்செய்தேநீவி
கானிடையமருங்கள்வன்கடியவெவ்வினைகடீர
வானவர்மகிழுமாவினடியனாயினனென்றோதி
யானனமிலங்கப்பின்னும்வியாதனீதறையலுற்றான். (உ௬௪)

வேறு.

காவிரியமர்தேசத்தினைப்புரக்குங்காவலன்சோழுகனென்போன்
சேவலோனெனவேசினமுளான்றானச்சிநேகம்வைத்திடானுயிரதனிற்
பாவமார்மனத்தோர்மந்திரிகரத்தாற்பழுதிலாவந்தணன்மடியக்
கோவெனவரற்றியிருபிறப்பாளர்குபிதராயரசனுக்குரைத்தார். (உ௬௭)

மன்னனின்கொடியமந்திரிகரத்தால்மடிந்தனன்சற்பிராமணனிவ்
வின்னல்பாறிடவேயிவன்றனையடுதியடாதிவனெஞ்சொலைமறுத்தாற்
றுன்னிடும்பவங்களெனவுரைத்திடவுந்துன்மதியவன்றன்மேற்பரிவால்
மன்னவனவரைசினத்தடர்ந்திடலுமருளடைந்தகன்றனர்மறையோர். (உ௬௮)

முறைமையிலரசன்மறையவரறைந்தமொழியினைமறுத்தலுமறனூர்
மறைநெறியகலத்திருமகள்விலகவருடம்பன்னிரண்டுறவானி
னுறுகனநிறைந்துமுலோபியர்கரத்துநிதியெனவுலகினிற்பொழிதல்
லறவுயிரனைத்துமலைந்திடத்திருக்காவேரிநீர்புரவுமற்றனவால். உ௬௯

பாதவங்கொடிபுற்பாசடைபடியின்பாவகனெரித்தபோற்கருகப்
பூதலம்வெடிப்பப்பறவைகள்மிருகம்பொருப்பொடுபொடியதாயுதிர
மாதவர்திகைப்பவகன்றகாவேரிவருபுனலூற்றுநீரறவே
யாதவனுகாந்தத்தரனுதல்விழிபோற்றிசைதொறுமனலினைவிரித்தான். (உசo)

கனமறக்கனலைக்கதிரவன்பரப்பக்காசினியுயிரொலாமடிய
வினனுறவுயிரோடிருந்தவர்திருக்காவேரியையிறைஞ்சியேயிரங்கப்
புனிதராயரங்கப்பதியினைக்காக்கும்புகழுடைக்கேசரன்குமுதன்
இனமொடுமடைந்துவருந்தனீரொனவேயியம்பிமற்றீதுசெய்தனரால். (உசக)

கனமீதெழுந்துகனமெலாங்கரத்தாற்பிசைந்துவெங்கதைகொடுபுடைப்ப
செகமெலாம்புனல்கள்புரளவேதிருக்காவேரியிற்சலங்கொழித்திடலு
மகியெனச்சினங்கொள்கவினிற்சோழுகனுலடைந்திடும்பிரமகத்தியினாற்
சிகியெனவெழுந்தவரிவையாமலகைசெலமெலாம்பருகியதன்றே. (உசஉ)

பிரமகத்தியினாற்பிறந்திடும்பெண்பேய்பெருகுகாவேரியினயத்தைப்
பருகலுங்குமுதன்கேசரனிவர்கள்பரவிவெங்கதையினாற்புடைப்ப
வெருவியவ்வலகைநொடிப்பினிற்பாரில்விழுந்திடவவனியிற்சனங்கள்
அருவினையறத்தான்வயங்கினவொனவேமொழிந்துபின்வியாதனீதறைவான்.

அத்தியின்வயங்குமமரர்கட்கிறைவன்சகாவெனவமருங்கெந்தருவன்
சித்திரசேனன்றமரொடும்விசும்பிற்செலவவன்சாயைதென்னரங்கத்
துத்தமவிமானத்துறுதலுங்குமுதனொருகரத்தவன்றனைப்பற்றிக்
குத்திவானெறியப்பிலக்கத்தீவினிற்றன்வலனெலாங்குறைந்திடவிழுந்தான்.

## வே று.

[illegible]காடெறிந்திடுவிசையாலுப்பி
னத்தியைக்கடந்துநீண்டபிலக்கத்தீவலறிவீழ்ந்த
சித்திரசேனன்மேவும்பதமிறத்திகைத்தவன்றன்
மித்திரர்விபுதர்கோனுக்கிவையெலாம்விளம்பினரால். (உ௪௫)

வலனுறுசகாவாயோங்குஞ்சித்திரசேனன்வாரி
யலையெனவலைந்துவிண்ணின்பதமறவலறிவீழ்ந்த
நலனிலாவுரையைக்கேட்டுநாட்டமாயிரமும்வெந்தீ
யுலவவேசீறியேவாலும்பல்மீதேறினானால். (உ௪௬)

கயிலையங்கிரிமேற்றோன்றுங்கனமெனக்கவரிவீச
முயலகன்வெரிநின்றான்போல்முனிந்துவெண்களிற்றிலேறிச்
சயிலபிச்சங்கள்வீழத்தடிந்தவச்சிராயுதந்தன்
கயினுறுவலாரிதோன்றக்கடலெனவிபுதர்சூழ்ந்தார். (உ௪௭)

விடையர்கெந்தருவர்சித்தர்சாரணர்துவட்டாவெய்யோன்
கடலடுங்கியமன்வாயுகனலவனிருதிபொன்மன்
மிடையுமாகரிதேராழியிலங்குயர்ககமீதேறி
வடவனலெனவேசீறிவலாரியோடெழுந்தாரன்றே. (உ௪௮)

இருகரைபுரளவீசுமலைகொள்காவேரியெய்த
வரவணைமிசையிற்றோன்றுமரங்கன்வாழ்புரியைச்சூழ்ந்தே
யுருமுறுகனங்களோங்கியுதிரமாவருடம்பெய்ய
வரியெரிசொரியவெண்ணிலாசுகந்தூவியார்த்தார். (உ௪௯)

வாசவனேவலாலேவரையெலாமலையச்சண்ட
வாசுகனறையுலோடுமரங்கமாநகரைக்காக்குந்
தேசுறுகுமுதனுட்டந்தீயுறவுயிர்ப்பின்காலை
வீசவாண்டெதிருங்காற்றைவிழுங்கியதிமைப்பினம்மா. (உ௫௦)

கடையுகவாயுமானக்கதித்தறைகாலைநாசி
நடுவெழுபவனந்தன்னாலழுத்திருநாட்டம்வெந்தீ
முடுகவேயெதிர்ந்துநிற்குங்குமுதனைமுனிந்துநோக்கி
விடையர்கெந்தருவர்சித்தர்விபுதர்களடர்ந்தெய்தார்த்தார். (உ௫௧)

வேலயில்குந்தம்பிண்டிபாலங்கடண்டுவீசி
யாலமாவிடமேபோலவடுகணைசொரிந்தங்கார்த்துக்
காலிகாலியமன்பொன்மன்கதிரவர்சூழக்கண்டே
கோலமார்குமுதன்மால்பூதத்தொடுங்குபிதனானான். (உ௫௨)

எரியெரிவிடுவேகாலுங்காலறவென்றென்றுந்தா
னரியுறநடுவெனானடுவுறவமரரீச
னிரியவேகுமுதன்றண்டாலெற்றிடவெதிர்ந்தவெள்ளம்
பரவைபோல்முடுகியட்டதிசையினும்பரந்ததம்மா. (உ௫௩)

அரிவரமுடுகிப்பாறுநரியெனவமரரோடக்
கரமுறுகதையினாலேகலக்கியகுமுதன்மீதி
னெரியுறுநயனனாகியிந்திரன்குலிசந்தன்னை
விரைவினின்வாங்கிவிட்டுவிண்டுளங்கிடவேயார்த்தான். (உ௫௪)

அட்டமாதிசைகளெல்லாமழலுறவமரர்கோமான்
விட்டவச்சிராயுதத்தைவிபுதர்கள்நடுங்கவார்த்துக்
கிட்டியகுமுதன்கையாற்பற்றியேகிளர்ந்தங்கோடை
கட்டியகரிமருப்பிற்புடைத்தனன்கலங்கியோட. (௨௫௫)

கரிவெரிநுற்றகோமான்றன்வெரிக்குமுதன்காணப்
பரிபவஞ்சும்மையாகப்பயமொடுபாறலோடும்
விரைவின்மற்றிவன்றான்கூடிவெருவலையென்றுகூறிச்
சரியிலாக்குலிசந்தன்னையீந்திடத்தளர்ந்துபோனான். (௨௫௬)

பரிபவமுதுகைப்பற்றிப்பயமுனேநெறியைக்காட்ட
வெருவியவமரரோடும்விபுதர்கோனகரினெய்தச்
சிரசினைவளைத்துநாணுந்திடுக்கமுமலிகின்றான்முன்
பிரமன்பிஞ்சகனோடெய்தப்பணிந்தவன்பேசலுற்றான். (௨௫௭)

என்னுயிர்த்துணைவனானசித்திரசேனனேரார்
பொன்னிசூழரங்கந்தன்னிற்பொலிவுறுவிமானச்சாயை
மன்னவேவருகின்றானைவன்கையாற்குமுதன்வீச
வன்னவன்பிலக்கத்தீவினரற்றியேவிழுந்தானன்றே. (௨௫௮)

தளர்ந்தவன்விழுந்ததன்மைமற்றவன்றமர்கள்சாற்றக்
கிளர்ந்தியானமரரோடுமரங்கமாநகரைக்கிட்டி
வளைந்திடக்குமுதன்கையால்வலனெலாமல்கியானு
முளைந்திவணுற்றேனென்றேயுரைத்தவன்வெள்கிநின்றான். (௨௭௯)

இவையினையுரைத்துவெள்குமிந்திரன்றன்னைநோக்கி
யவமுறுமிராசதந்தானடர்ந்திடவதனைவெல்லத்
தவமுனரனேககாலந்தளருவன்முன்னர்ச்சார்ந்தா
னுவமையில்விமானத்தோங்கியொளிகொளுமரங்கத்தெம்மான். (௨௮௦)

பிரணவவிமானத்தோடும்பிறங்கியவரங்கத்தெம்மா
னிருசரணருச்சித்தேயாணிக்குவாகுத்தான்வேண்டக்
கருணையங்கடலையீயக்களித்தவனயோத்தியென்னுந்
தரணியிற்பூசைசெய்தான்றவம்பலகாலஞ்செய்தே. (௨௬௧)

சரயுமாநதியினோங்குமரங்கமாநகரிற்சாரு
மரவணைப்பெருமான்றன்னையரக்கர்வேரறுத்தசோதி
பரிவின்வீடணனுக்கீயவவன்பரன்றனைக்கம்வைத்து
வருமவன்சோமன்பொய்கைத்தலத்திடைவைகினானால். (௨௬௨)

இந்துபுட்கரணிதன்னினிலங்கியமுனிவரெல்லாம்
வந்தனைசெய்கையாலும்வரங்கொள்காவேரிசெய்த
முந்தியதவத்தினாலுமுகுந்தனங்குற்றதன்மை
சிந்தையினினையாதேநீசெருச்செயச்சினத்துச்சென்றாய். (௨௬௩)

ஒருவனாய்விமானத்தோங்குமொப்பிலாவரங்கத்தம்மான்
சரிரரோமங்கடோறுஞ்சகத்திரவண்டம்யாவும்
பரவிடவவன்றான்வாழும்பதியினைக்காக்கும்வீரர்
பெருமையையுணராதேநீசெருச்செய்துபிழைக்கச்செய்தாய். (௨௬௪)

மாயவனகரைக்காக்கும்வலனுடைப்புயங்களோங்குர்
தூயவர்சினத்தாலண்டந்துடைத்திடுமாற்றல்சான்றோர்
ஆயவருன்றனேடுமனைவனைநிமிடமன்னத்
தீயெனவடுவெரும்மேலளியினுற்றெறு துவிட்டார். (௨௬௫)

## வேறு.

ஆதலினமரர்க்கிறைவராசததாமதகுணமடைந்திடுகையினாற்
பேதமையுறவேயிறைவனையறியுஞ்ஞானநீபிறிந்தினையெனவே
யோதுதல்பழுதாலுமையவள்கொழுநன்றன்னுடனியானுமொப்பிலாத
மாதவன்மயக்கத்தின்மருளுறுவமெனுமுறைவழங்கினன்மாதோ. (௨௬௬)

அயனிவைமொழியவமரர்கோன்வணங்கியச்சுதன்பதியென்பதறியா
தியல்பறச்செருச்செய்திட்விடருழன்றேனென்சகாவானகந்தருவன்
துயரொழிந்தவன்றன்பதத்தினிற்றுலங்குமுபாயநீசொல்லுதியெனவே
தயையுடைப்பிரமனவன்றனைநோக்கிச்சாற்றுவன்கேளெனவறைவான். (௨௬௭)

குருபிதாமாதாசேட்டனிங்கிவர்கள்கோலமார்சாயையைக்கடக்கிற்
றரணியினிவர்தாமிருந்தவாதனத்திற்சார்ந்திடினிரயமெய்துவர்கள்
ஒரியடியவர்கள்சாயையைத்தாவின்பிராச்சித்தமில்லையாங்கவர்கள்
நமியாய்ப்பிறப்பர்முடவராய்க்கரங்காலழுகுவரதன்மமுங்கிளைக்க. (௨௬௮)

வினரங்கனமர்ந்திடும்விமானச்சாயையைக்கடக்குமக்கிரமம்
யுவபதமுமிழந்துயர்வலனுமற்றுநிர்மூடனாய்மனத்திற்
டுகெந்தருவன்செயதன்மம்பிறிந்துதான்றுலங்கிடவேண்டின்
ரசரணமருச்சனைசெயவேவகுத்தியென்றுரைத்தயன்போனான். (௨௬௯)

வையுரைத்துச்சத்தியவுலகமடைந்திடவமரர்கோன்சகாவாய்த்
ாள்சித்திரசேனன்மருங்கமர்ந்துதூயனாகியவரங்கேச
றவமரும்விமானசாயையைநீயெள்கியபாவமிங்கிறவே
ணவரியின்பெயரினைமறவாதருச்சனைசெய்யென்றுபோனான். (௨௭௦)

வணிவையைமொழிந்துபோயினபின்மலர்மகண்மகிணனைமனத்தே
சறவழுத்தியருமறையறியுமந்தணர்தம்முடனேகி
மாசகன்றிடவேசுத்தமாநதிகடொறும்படிந்தேமறுவிலாத
காசிபன்றனைக்கண்டிறைஞ்சிடவவனுங்கருணையோடிவைகழறினனால். (௨௭௧)

நீயரியமரும்விமானசாயையினையிகழ்ந்திடுநிடேதமிங்கிறவே
மாயனைமனத்தினழுத்தியேசிரத்தால்வணங்கிநைவேத்தியம்பொசித்துத்
தூயபுட்பத்தாலருச்சனைசெய்துதுலங்கிடக்கானஞ்செய்யிற்
றீயவையெலவும்வீயவுன்பதத்திற்சேருவையென்றறைந்தனனால். (௨௭௨)

அரியுனதிடத்துமெனதிடத்தினுமமர்ந்தண்டகோடிசீவனினும்
பரவுவனவனையருச்சியென்றுரைப்பப்பணிந்திந்தமுனிவனையொருவி
விரைவினிற்சந்திரபுட்கரணியினெய்திவிழுமியநீரிடைப்படிந்து
கருமுகிலெனவேயரவணைமிசையிற்கண்டுயிலரங்கனைத்தொழுதான். (௨௭௩)

நயனம்வாயுரங்கொப்பூழ்கரம்பாதநளினமாமலரொனமேனி
புயலெனவயங்கவரவணைத்துயில்கொள்புனிதனைக்கண்டுளங்களித்தே
யியல்புறுஞ்சச்சமிடபங்காந்தாரமிலங்குமத்தியமம்பஞ்சமநற்
பெயர்கொடேவதம்வண்ணிடாதமிவ்வகையேழ்கானமும்பிறங்கப்பாடினனால்.

கமிருகங்கணரர்கள்வானுறைவோர்மயங்கிடக்கற்புற்பாதவங்கள்
சகலமுமுருகவேழ்வகைப்பண்ணிற்சத்தகானஞ்செயமகிழ்ந்தே
புகரிபவிடலைக்கனைந்தவன்கருணைபொழியக்கந்தருவனைநோக்கி
நிகரிலையுனக்குன்பதமளித்தனனீயேகெனநிகழ்த்தினன்மாதோ. (௨௭௫)

சித்தசன்பிதாவீதருளியேகெனவேசித்திரசேனனுங்களித்தே
யத்தனைவணங்கியுரோமமெய்பொடிப்பவாடியேயலங்கிருதனுமாய்
நித்திலவிமானத்தமர்ந்துதன்பதத்தினின்மலசித்தனுயடைந்து
மித்திரனுமிந்திரனுடன்மகிழ்ந்தானென்றுபின்வியாதனீதறைவான். (௨௭௬)

தீர்த்தயாத்திரையைவிரும்பியேபரத்துவாசமாமுனிசிறப்புறநீர்
கோத்தகாவேரிநதியிடைப்படிந்துகொழுமலர்நாகமங்கொங்கம்
வாய்த்திடுமணங்கொளிந்துபுட்கரணிசலத்திடையமிழ்ந்திவாளரவின்
றீர்த்தனைவணங்கிமுனிவர்களுடனேதிகழும்வான்மீகியைப்பணிந்தான். (௨௭௭)

தவமலிபரத்துவாசமாமுனிவன்சரியில்வான்மீகியைநோக்கி
யுவமையிலரங்கன்பதியிற்சந்திரபுட்கரணியோடொப்பிலாத்தீர்த்தம்
பவநரர்க்ககற்றிப்பரகதியளிக்கும்பண்பினைப்பகருதியெனவே
கவுசலைகுமரன்சரிதையையருளுந்தவனிவைகழறலுற்றனனால். (௨௭௮)

ஏதமற்றிடுமெச்சுவத்ததீர்த்தத்திலெண்ணிலாவிருடிகளமர்வர்
மாதவியெனப்பேர்படைத்திடுந்தவத்தாள்மலர்மகள்மகிணன்பேரனைத்தும்
ஓதியோதனங்காய்கனியிவைபொசியாவுத்தமிகுரோதமில்கமையாள்
சீதமாயெழுமச்சலத்தினுளுலப்பில்காலநற்றவஞ்செயுநாளின். (௨௭௯)

சாதகரந்தத்தவஞ்செயுநிலத்தோர்தையலைப்பின்னுறப்பிணித்தே
யேதமுற்றவடான்நடந்திடும்பதங்களெரியயமுள்ளிடையழுந்தத்
தீதுறுமுவேல்கடித்திடவறுத்தவாலுகம்வாயிடைத்திணிக்கப்
பீதியுற்றெனைக்காப்பவரிலையந்தோவெனவரற்றொலிபிறந்தனவால். (௨௮௦)

வெஞ்சினப்புலிவாயகப்படுங்குரங்கமெனமெலிந்தரற்றிடும்வேலை
யஞ்சலீயெனவேயுளைத்துமாதவிதானுதவன்சிறுவன்றாதுவரை
யின்சொனுமில்லீரொவர்கணீரொனவேயியம்பிடயாங்கடென்றிசைக்கு
விஞ்சியமறலிவிடுக்குமேவலர்களென்றிவைவிளம்பலுற்றனரால். (௨௮௧)

இட்டராயென்றுநலனுறுமவருக்கிழிவுசெயதன்மருக்கியாங்க
டெட்டராயடைவமிவளிருநிலத்திற்றொலைவிலாப்பவஞ்செயுமூர்க்கை
சிட்டரைநலியும்பதகியானவளைக்குரூரராய்ச்சேர்ந்திருகரத்தைக்
கட்டியேகதறவடித்தனமெனவேகழறமாதவியிவையுரைப்பாள். (௨௮௨)

தொலைவிலாப்பவத்தைநிலத்திடைச்செய்துதுயருறுமங்கையாமிவடாம்
நலனுற[illegible]ான்றூன்செய்திடுந்தவத்தோர்நாட்பலன்கொடுத்தனனெனவே
கலகமிங்கியற்றுங்காலதூதுவருமிட்டராய்க்கட்டியபாசம்
அலரிகாணிமம்போலகல்வேயெரியுமயமுளுங்குளிர்ந்தனவம்மா. (௨௮௩)

நெறியெலாம்பொழிலாய்த்தென்றல்வீசிடவேநிகரில்ாவுருபியுமாகி
மறலிமுன்னரிற்போயடைதலும்வன்றூன்மனச்சினமொருவியேநோக்கி
யறனறநிலத்தினனேகபாவங்கள்செனனந்தோறூன்றிடச்செய்தும்
பொறைகொள்மாதவியைக்காணநீநலனைச்செய்ததுகேளெனப்புகல்வான்.

நீயிவணடைந்ததந்தமாயீருயுற்றசென்மந்தனினிலத்திற்
றூயநல்லழகுதுலங்குவேசியுமாய்ச்சொன்னவாபரணங்கடிகழ
வாயில்நின்றிடுநீபரமபாகவதர்க்கல்லிடையிடம்வழங்குகையால்
நோயகற்றியமாதவிதனைக்கண்டுநொறுக்கினைபவமெனநுவல்வான். (௨௮௫)

மாதவியுனக்கோர்நாட்டவமளிக்கமரணமுஞ்சனனமுமொருவச்
சோதிசெய்பிரமனுலகிலிவ்வண்டமுடியுநாளளவுநீதுலங்கி
யாதியாம்பரமபதத்திடையடைவாயெனவறைந்திடவவளகன்றே
யேதமற்றொளிர்பொன்விமானத்தினமர்ந்தேசத்தியவுலகத்தெய்தினளால்.

பூதலத்திறந்துமறலிதூதுவராற்புகலொணுநிரப்பந்தத்தடைந்தே
யேதமுற்றரற்றுமங்கைநற்கதியினேறவோர்நாட்டவங்கொடுத்த
மாதவிமுனிவர்மகிழ்ந்திடமலரோன்வகுத்தவிவ்வண்டத்தைபொருவிச்
சோதிசெய்பரமன்பதத்திலுற்றனளாலென்றுவான்மீகிபின்சொல்வான்.

கண்டுமாமுனிவனிகரில்காவேரியயத்தினிற்படிந்தொளிர்கனத்தின்
முண்டகமலர்ந்ததெனவரவணையிற்றுயில்கொளுமுகுந்தனைப்பணிந்து
வண்டடர்பொழிலின்மரகதவுருவாமொருவனுமதிவதனத்தின்
கெண்டையங்கணியுமுலாவிடவைவர்கிளர்ந்துசேவித்திடக்கண்டான். (௨௮௮)

மரகதமலையும்பவளநற்கொம்பும்வயங்கியபான்மையைமானு
மரிவைதன்னுடனேயுலாவியபுருடனரவணைதுயில்பவன்ருனே
தெரிகிலேனிவனையெனநினைத்திடமற்றவனுநீயுள்கியசெப்பென்
றுரைசெயவுரோமம்புளகமுற்றிடவேகண்டுமாமுனியிவையோதும். (௨௮௯)

அற்புதமானவணங்கினுடனேயையெலாம்விளங்கிடுநீதான்
சற்பமெல்லணையிற்றுயில்பவன்ருனேசாற்றுதியெனவவன்யானே
கற்பகமெனவேதடக்கைகளொளிரக்கண்விழித்துறங்குவோன்கமலப்
பொற்பினளிவள்பஞ்சாயுதர்வர்களறிதியென்றேபுகன்றனனல். (௨௯௦)

இவையிவையுரைத்துமலர்மகளுடனேயிலங்கியமலரொலாங்கொடி
தவமலியக்காவேரியிற்புகுந்துசலவிளையாட்டினைவிளைத்தே
யுவமையற்றுயர்ச்சுவத்ததீர்த்தத்தினுலாவிப்பஞ்சாயுதருடனே
குவிமுலையணங்குந்தானுமவ்விடத்திற்குலாவியேமறைந்தனன்மாதோ. (௨௯௧)

கனகநற்கொழுந்துகவினுறுகாயாமலருடன்கலந்ததெனவு
மனகன்மாமலராளுடன்றிரிந்தவணின்மறைந்திடவயர்ந்திடுமுனிவன்
றினகரனவிரைக்காண்கிலாநளினச்செய்கைபோலியாக்கையுமெலிந்து
நனிதுணியுறவேயநேகவாயிரசம்வற்சரமரற்றினனைந்தே. (௨௯௨)

சித்தமெய்ந்நடுங்கியுழலுமாமுனிக்கண்புரியசரீரியாய்ச்செப்பு
முத்தமமிகுமச்சுவத்ததீர்த்தந்தானிதிற்படிந்துயர்ந்தகோதானஞ்
சுத்தவோதனதானந்திலதானஞ்செயிற்பவமெல்லவுந்தொலையுங்
குத்திரமடரும்பிரமகத்தியும்போமென்றுதான்பின்னருங்கூறும். (௨௯௩)

ஒருதினமுபவாசஞ்செயிற்பவம்போமொப்பிலாப்புத்திரனைப்பெறலா
மிருபதோருரைந்துறுதிவசத்தினனமருந்தாதிருந்தரியை
வினாயுறுமலரினருச்சனைசெய்தாலியுமிவ்விரதத்தைவிளைத்துப்
பரகதியடைதிசுருதிசமிதமாமொழியெனப்பகர்ந்தனன்மாதோ. (௨௯௪)

அரியசரீரியாகியிவ்வுரையையறைந்திடக்கண்டுமொமுனிவ
னிருகையாற்றொழுதச்சுவத்ததீர்த்தத்திற்படிந்திந்தவிரதத்தைவிளைத்துப்
பரிவுடன்முராரிபதமருச்சித்துப்பழுதொரீஇமுனிவர்கள்வியப்ப
வருவினையகலவரிபதத்தடைந்தானென்றுவான்மீகிபின்னறைவான். (௨௯௫)

காசியாளரசன்சிறுவனுஞ்சுகீர்த்திசதுரங்கத்துடன்கவினழிய
வாசுறுவியாதியடைந்திடச்செய்வதறிகிலான்றீர்த்தயாத்திரையா
யோசனைபலவுமிகந்துவேதியர்வாழ்திராவிடதேசத்தையுற்று
மாசறுவருளதீர்த்தத்தினெய்திவணங்கினன்காசிபமுனியை. (௨௯௬)

பரிவுடன்வணங்குமரசனைநோக்கிப்பழுதகல்காசிபமுனிவன்
நிருபநீயாரொன்றுரைத்திடவவனுநிகரிலாக்காசிபன்சுதன்யான்
கரிபரிபதாதிமுதலதாமெனையுங்கடியநோயடர்ந்திடச்செயலற்
றறணுறவுனதுசரணடைந்தனனுய்வகையருளெனவுரைப்பான். (௨௯௭)

அரியைநீயாராதனைபுசையின்வியாதியகன்றிடுமெனவவனறைவான்
விரியும்நான்மறைக்கும்விளங்கிலாவிறையைவிடயமிந்திரியத்தைவிழுங்கப்
பரவியபவத்துளமிழ்ந்திடுமியான்முன்பற்றுவதெங்ஙனம்பகரொன்
றுரைசெயுமனையளியுடனேக்கியொப்பிலாமுனியிவைமொழிவான். (௨௯௮)

அருமறைதனக்குமியோகியர்தமக்குமகப்படாவிறைவனுகிலுந்தன்
சரணடைந்தவரையளியுடன்காக்கத்தயாபரசொரூபனேயாகி
யிருநிலமிசையிற்றிருவவதாரஞ்செய்தனனஃதுமேயன்றிப்
பரவுமாயிரம்பேர்தனினுந்தன்னுமம்பத்தவச்சலனெனத்தரித்தான். (௨௯௯)

ஆதலினரசவருச்சியவவதாரத்தினிற்சுவயமாமவனை
நீதியொன்றிடவேயருச்சனைசெய்யென்றுரைத்திடநிருபனுண்மகிழ்ந்து
மாதவன்பதத்தின்மலரயங்கொடுபூசனைசெய்யமற்றவனுடனும்
வேதனைநிகர்க்குமுனிவனுஞ்சம்புதீர்த்தத்தில்விரைவினினடைந்தான். (௩௦௦)

காசிபமுனிவனரசனைநோக்கிக்கழறுவான்விருத்திராசுரனை
வாசவன்வதைக்கவெழுந்ததோர்பிரமகத்திமற்றவன்றனையடர
வாசுறுமவன்முன்பகீரதிசரசுவதியகல்யமுனையிற்படிந்து
மாசகன்றிடாதிச்சம்புதீர்த்தத்தினமிழ்ந்திடப்பவமெலாமாய்ந்த. (௩௦௧)

சம்புதீர்த்தத்திற்பவமெலாமகலத்தயங்கினன்புரந்தரனென்றே
நம்பனைநிகர்க்குமுனிநவின்றிடவேநன்றெனவரசர்கோன்மகிழ்ந்து
தும்பிமாபதாதிதமருடன்முனுந்துலங்குமத்தீர்த்தத்திற்படிந்தே
யும்பர்கள்வியப்பவடருநோய்பவத்தோடறவுயர்ந்தேவிளங்கினனால். (௩௦௨)

பவமொடுவியாதியறப்பருதியைப்போலிலங்கியபடியையானிருபன்
உவமையில்முனியோடாம்பிரதீர்த்தத்துற்றவன்படிந்துசோமனைப்போற்
புவியிடைவயங்கவந்தமாதலத்திற்பொலனுறுமிருடிகளெல்லாந்
தவமலிந்திடுகாசிபன்றனையிறைஞ்சிப்பார்க்கவன்சாற்றலுற்றனனால். (௩௦௩)

அயனிகர்முனிவவிந்தமாதலத்தினற்புதங்கேளெனவறைவான்
றயையுடையவனும்புட்கரமறையோன்றரணியிற்றுலங்குமாநதியிற்
பயமுறவாடிப்பழுதிலாப்பிரமதீர்த்தத்திற்படிந்திடவிரும்பி
யுயர்வறவுறுங்கானெறியிடைக்காலினுரமுறவெய்தும்வேலையின்வாய். (௩௦௪)

விழிகனலுறவேவியாக்கிரமுகமாய்விரிவுறும்வாயையாவென்றே
வெழுநிகர்புயத்தோடிடியெனவுரப்பியெழுந்தொறுப்பசாசுவந்தெதிர்த்துப்
பழுதகல்மறையோன்றனைப்பிடித்திடவேபயத்தினையகற்றிவேதியன்றான்
விழுமியமனத்தின்முகுந்தனையமைத்துவிடுகெனவலக்கைகைவிட்ட. (௱0௫)

இருகையும்விடுத்தபசாசினைநோக்கியிருபிறப்பாளனீதறைவான்
றறையின்மாநதிகளெங்கணும்படிந்துசகலபாவங்களுமொழித்து
வருமெனைவதைத்தால்நிரயம்வந்தெதிருமென்றுநின்மனத்திடைநினையாய்
துரிதமாயெழும்வேதாளமாகையிறுலெனவந்தவலகைதான்சொல்லும். (௱0௬)

என்னையிக்குரூரமாகவேசிருட்டியியற்றியவிறையினுக்கல்லா
லுன்னையான்வதைக்கும்பவமெனக்குறுதென்றுரைத்திடமறையவன்மொழிவா
றன்னைநேரிலாதபராபரனைசாட்சிபூதமாய்ப்பாபதன்மத்தின் [ன்
மன்னிடான்சீவன்றனக்குறுஞ்செய்தகன்மத்தின்வருக்கமென்றனனால். (௱0௭)

மறையவனிவையையுரைத்திடவலகைமற்றவன்றன்னையேநோக்கி
யிறையவனியற்றவிலாதுசீவன்றானேதையுஞ்சிட்டிக்கவறியா
முறைமையாற்பரனேகன்மமங்கியற்றியதிற்பலமுந்தியேபொசிப்பன்
மறைகளுமெங்குமுளன்பரமேட்டியெனமொழிந்தனவெனவகுத்த. (௱0௮)

அலகையீதுரைப்பவந்தணனுரைப்பானச்சுதனனந்தரூபனுமாய்
உலகினைப்படைத்-துவளர்த்தபின்றுடைத்தேயொருவனும்மறைக்குமெட்டாமற
பலவுமாயெழுந்தசீவனுக்குயர்ந்தபரனுமாய்ப்பாபதன்மத்தி
னிலையினுக்கென்றுமகப்படானவன்றனிழைகனமாயையினாலே. (௱0௯)

இறைவனிற்குணனேகன்மமங்கியற்றியதிற்பலன்சீவனுக்கிடுவன்
குறைவிலானேயனதீதனுயிருப்பனிவையைநான்மறைகளுங்கூறு
மறனுறுகுரூரவடிவமாயெழுந்துமருளுறுமலகையாகையினாற்
பறைகுவாய்வேதப்பதிவில்லாப்பொருளையெனவந்தக்கூளிதான்பகரும். (௱௧0)

இருபிறப்பாளனாகியும்பிரமஞானத்தின்போதமொன்றில்லாய்
குருவுபதேசமுனக்கிலையிறையவன்குவலையமெங்கணுநிறைந்தே
பரவுவன்கன்மப்பலனையும்பொசிப்பன்பாபதன்மங்களைச்சீவன்
மருவிடாதெனவேயலகையங்குரைப்பமறையவனகைத்திவையுரைப்பான். ()

தன்மயமாகியுலகெலாம்படைத்ததயாபரன்சகலசீவனிலும்
நின்மலனாகியமர்ந்துகன்மத்தைநிறைத்திடுசீவனுக்குற்ற
புன்மையிற்பொருந்தான்சீவன்வேறாகித்தானும்வேறாகியேபொலிவான்
கொன்மலிகுணத்தனவனெனமறையோன்கூறியேபின்னருமொழிவான். (௱௧௨)

மருளுறுமலகையானவுன்னுடனேமறைப்பொருள்கூறினுங்கேளா
யிருவருமெய்தியிலங்குமாம்பிரமதீர்த்தத்தினிருடிகள்முனரி
னுரைசெய்வந்தோற்றாலுன்னையான்வதைப்பன்நீவெலினென்னையுண்குதியென்
றருளுறுமறையோன்மொழிந்திடவலகைநன்றெனவவனொடும்போன. (௱௧௩)

இருவரும்பொருந்தியெழில்கொளாழ்பிரமதீர்த்தத்தின்முனிவரையிறைஞ்சி
வருநெறியதனில்விரோதமாம்பொருளைவகுத்துரைத்திடவவர்கேட்டே
யருளுறுமறையோனறைந்திடும்வசனமாமென்பர்சிலர்சிலரலகை
யுரைசெய்தமொழியேநன்றெனவவர்க்கங்கூற்றனவகிரகசியங்கள். (௱௧௪)

இருவகையாகிமுனிவர்களெல்லாம்விரோதமாயியம்பிடும்வேலை
கருமுகிலெனவுங்கவின்கொளிந்திரநீலக்கிரியென்னவுங்காயா
விரைமலரெனவுமைவணுகிவிழியதரங்கரம்பாத
மரைமலரெனவேமகரகுண்டலங்களலையவோர்புருடன்வந்தனனால். (௬௧௫)

கனகநற்கொம்பின்கனம்பிறைசாபங்கணைகுமிழாம்பலனிகம்பொன்
வனவளைகாம்புவரைகொடக்கதலிவனப்புடனமர்ந்திடுநள்ளி
சினைவராற்றராசுகூருமம்நளினஞ்சிறந்திடக்கலன்கள்மெய்திகழச்
சனகிபோன்ஞெருத்திவிரைமகழ்ந்திடவேசதங்கைநூபுரங்கொஞ்சவந்தாள்.

எதிர்பிறிதிலாதவிராகவக்குரிசிலிலங்குசீதரங்கனியுடனும்
பதம்வயங்கிடவேநடந்திடுமெழில்போற்பனசமார்பொழிலிடையடைந்தே
விதமலர்பறித்துவிரோதமாய்மொழியுமுனிவர்முன்மேவிடவவர்கள்
கதுமெனவெழுந்திங்கிவர்களற்புதராமென்றுகண்களித்தெதிர்கொண்டார். (௬௧௭)

தவர்மகிழ்ந்தளித்ததருப்பையாதனத்திற்றையலுந்தானுமாண்டமர்ந்தே
யுவமையிலவர்நீரும்முனின்விரோதவசனத்தையுரைத்திடுமெனவே
பவமறுமறையோன்மொழிந்ததுமலகைபகர்ந்திடும்பொருளையுங்கூறி
யிவையிஞலிவணிற்குரோதம்வந்தெழுந்ததெனவரிநகைத்திவையியம்பும். (௬௧௮)

இறையவன்யானேயுலகெலாம்படைத்தேயழித்தளித்திடுபவன்யானே
திறலுறுமனந்தகோடிசீவனையுஞ்சிருட்டிக்கும்பழம்பொருள்யானே
நிறைகொள்கன்மத்தின்பலத்தினைச்சீவன்புசித்திடவதனைநீங்குவன்யான்
மறையைவல்லவர்க்குமிராசதாமதத்தான்மருளுறவிடுப்பவன்யானே. (௬௧௯)

அண்டகோடிகட்குமனந்தசீவனுக்குமகமதாப்புறமதாயமர்ந்து
முண்டிலையெனவேதிரிகுவன்சீவனுள்ளிருந்தகப்படேன்யான்
முண்டகன்புராரியிவருமென்மாயைகடக்கிலர்முத்தியைக்கொடுப்பன்
ஞெண்டரானவருக்கருமென்பதத்தைத்தொழுதிடத்துலங்குவன்யானே.

சீவனேபரனென்றுரைக்குவதவச்சொலென்பர்தாஞ்செய்தகன்மத்தால்
மேவிடும்பவமுமெனையணுகாமற்சீவன்மேலடைவ்தும்விரித்தே
யோவுதலிலாமன்மொழிந்தனனுமக்கென்றுரைத்துப்புட்கரமறையவனும்
பாவமாரலகையானவன்ருனும்பரகதியுறவருள்செய்தான். (௬௨௧)

அலகையானவனுமந்தணன்ருனுங்கதிபெறவருளியவைய
னிலகியபதத்தினிறைஞ்சியேமுனிவரோத்திடத்தேவியுந்தானும்
நிலமிசையமர்வான்போலவணின்றேநிமிடமாத்திரையின்முன்மறைந்தான்
நலனுறத்தவஞ்செய்காசிபவெனவேநவின்றனன்பாற்கவன்மாதோ. (௬௨௨)

## வைநதேயப் படலம் முற்றிற்று.

## ஸ்ரீ மஹா பாக்வத புராணம்.

### முற்றிற்று.

ஆகப் படலம் ௬௪-க்குக் கூடிய திருவிருத்தம் ௪௪௭௭.

ஸ்ரீ கண்ணபிரான் புண்டரீகப் பொற்கழல்துணை.